# தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை



பேராசிரியர் :

வித்துவான் ந. சுப்பு ரெட்டியார், எம்.ஏ., பி.எஸ்சி., எல்.டி.,

தமிழ்த்துறைத் தலைவர்,

திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி.




பழனியப்பா பிரதர்ஸ்

சென்னை - 14 திருச்சி - 2 சேலம் - 1

கோயமுத்தூர் - 1 மதுரை - 1

## அன்புப் படையல்

ஆங்கிலக் கலைஞன்; சீர்த்துணை வேந்தன்.
　　அன்பெனும் தேன்பொதி யுளத்தன்;
வேங்கடே சுவரன் பல்கலைக் கழக
　　விளக்கினை மேதகத் தூண்டிப்
பாங்குறு கலைமான் முகத்தொளி கண்டோன்;
　　பண்புறு **கோவிந்த ராசன்**
ஓங்குநற் புகழோன் திருவடி மலரில்
　　ஒளிமணம் பெறுகஇந் நூலே.

36/2

டாக்டர் மு. வரதராசனார், எம். ஏ., எம்.ஓ.எல்., பிஎச்.டி.
(Professor of Tamil, University of Madras)

மனமுவந்தளித்த

## அணிந்துரை

தொல்காப்பியம் தமிழ் மொழியின் பண்பாட்டையும் தமிழிலக்கியத் தொன்மையையும் நாகரிகச் சிறப்பையும் விளக்கும் பழம்பெரு நூல் ஆகும். பொதுவாக, இலக்கண நூல்களை விரும்புவார் அருகிவரும் இக்காலத்திலும், தொல்காப்பியத்தைப் பலர் நாடும் காரணம் என்ன ? அப்பெருநூல் இலக்கண நூலே ஆயினும், எழுத்திற்கும் சொல்லிற்கும் மட்டும் இலக்கணம் உரைப்பதோடு நில்லாமல், தமிழர் வாழ்க்கையை ஒட்டி அமைந்த இலக்கியத்திற்கும் இலக்கணம் கூறும் நூலாக இருத்தலே காரணம் ஆகும். அதனால்தான், தொல்காப்பியப் பொருளதிகாரம் இலக்கிய வரலாற்று அறிஞர்க்கும் திறனாய்வாளர்க்கும் ஒருங்கே பயன் நல்குவதாக உள்ளது.

இத்தகைய சிறப்புடைய நூற்பகுதியைத் திறம்பட ஆராய்ந்து **"தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை"** என்னும் இந் நூல் வடிவில் விளக்கியுள்ளார், தமிழ்ப் பேராசிரியர், திரு. ந. சுப்பு ரெட்டியார். அவர் அறிவியல் துறையிலும் பட்டம் பெற்ற அறிஞர்; அவ்வளவில் நில்லாமல், தொடர்ந்து உளவியல் முதலாய துறைகளில் நூல் பல கற்றுத் தேர்ந்து, தமிழில் நூல் பல இயற்றியுதவியவர். ஆதலின், தொல்காப்பியப் பொருளதிகாரத்தை ஆயுங்காலத்திலும் அவர்க்கு உளவியல், உயிரியல் முதலாய அறிவியல் துறைகள் மிகப் பயன்பட்டுள்ளன என்பதை இந்நூலில் காணலாம். தொல்காப்பியர் கூறும் அகப்பொருள் புறப்பொருள் பற்றிய இலக்கணங்களை வெவ்வேறு புதிய தலைப்புகளில் இவர் விளக்கம் பெறச் செய்துள்ளார். "தமிழர்கள் காதலை மிகமிகத் தூய்மையானதாக வைத்துப் போற்றினர்" என்பதைப் பலவிடங்களிலும் தெளிவித்துள்ளார். பழங்கால அகப்புற மரபுகளை ஆங்காங்கே பொருத்தமுற விளக்கியுள்ளார். உள்ளுறை உவமம், இறைச்சிப் பொருள், மெய்ப்பாடுகள்பற்றிய விளக்கங்கள் நன்கு அமைந்துள்ளன. வடநூற் கருத்துக்களும் ஒப்பு

நோக்கப் பெற்றுள்ளன. தொல்காப்பியரின் செய்யுளியல் இலக்கியத் திறனாய்வு முறை கொண்டு ஆராயப் பெற்றுள்ளது. வெட்சி முதலாய அகத்திணைகட்கும் குறிஞ்சி முதலாய புறத் திணைகட்கும் உள்ள இயைபுகளைப் பற்றிய விளக்கங்கள் முழுதும் உடன்படக்கூடியனவாக இல்லை என்பது தவிர, ஏனைய விளக்கங்கள் முறையுடன் அமைந்து நூலுக்கு அணி செய்கின்றன. நூலாசிரியரின் இத்தகைய சீரிய முயற்சியைத் தமிழகம் வரவேற்றுப் போற்றும் என நம்புகிறேன்.

**11-10-63.** **— மு. வரதராசன்**

A. SRINIVASA RAGHAVAN,
*Principal,*
V. O. Chidambaram College.

*"Bharathi Aham'*
Tuticorin - 3.
2—11—63

# FOREWORD

*'Tolkappiam'* is one of the earliest Tamil works that have come down to us. Its claims to distinction are many. It is a book of grammar dealing with phonetics, dialectal variations and the mechanics of early Tamil. It is a book of rhetoric discussing figures of speech, prosody and style. It attempts in addition to reach out to the truth behind aesthetic enjoyment and to enunciate why and how poetry moves us. It is something more ; it is a grammar of ancient Tamil life, analysing in detail the idealised presentation of life that the poets of the time have given us.

*Tolkappiam* distinguishes between what is factual (உலகியல் வழக்கு) and what is idealised (நாடக வழக்கு) and says that the way of the poet is generally a blend of the two (பாடல் சான்ற புல னெறி வழக்கம்). So, his analysis of the poetry of his time, while sketching for us the archetypes of life, invites our attention to the actual in the process of becoming the ideal. It is this aspect of '*Tolkappiam*' that is discussed at length in this book. Prof. N. Subbu Reddiar has rendered carefully and thoroughly Tolkappiar's account of Tamil life as pictured in poetry. He tries to clarify how Tolkappiar's distinction between 'aham' (அகம்) and 'puram' (புறம்) can be reconciled with the idea, now almost axiomatic, that all literature, chiefly poetry, is subjective. Referring to the various commentators on '*Tolkappiam*', Prof. Reddiar throws light on some of the baffling 'sutras' of Tolkappiar on symbolism and suggestion in poetry and

points out how rewarding it would be if a careful collation could be made of Tolkappiar's work with Sanskrit works like Ananda Vardhana's '*Dhvanya Loka*' and later Tamil works on rhetoric like '*Maraṅ Alankaram*'. Prof. Reddiar's discussion of 'meippadu' (மெய்ப்பாடு) and 'Cuvai' (சுவை) in chapter 21 is carefully related by him to what ancient Sanskrit and Tamil thinkers on aesthetics say. The numerous subdivisions of 'meippadu' (மெய்ப்பாடு) under 'aham' in 'Tolkappiam' are minute and reveal acute observation and considerable knowledge of psychology, though some of them may not be accepted as fundamental. Prof. Reddiar's thoroughness is shown by his devoting two chapters to discussing them. Chapter 26 speaks of prosody as Tolkappiar presents it and the next chapter discusses Tolkappiar's analysis of forms of verse. From Chapter 28 onwards, there is a general survey of Tolkappiar's thought, how it makes allowance for changes inevitable in literary growth, how it reconciles convention and revolt in the literary world, and how, making allowance for the idealisation inherent in poetry, it presents a fairly comprehensive and accurate picture of ancient Tamil society and life. These chapters illustrate how learned writing can be stimulating even while, for the sake of precision and truth, it avoids mere sentiment and fancy.

This work on '*Tolkappiam*' covers almost all aspects of that ancient classic. Its discussions are full, its analysis of *Tolkappiam* and its commentators keen and learned and its judgments, on the whole, marked by restraint and balance. Prof. Reddiar has given us a patiently-evolved and carefully-worded thesis on a recondite theme, one that will prove helpful to all earnest students of old Tamil literature.

*—A. Srinivasa Raghavan*

உயர்திரு. பு. ரா. புருடோத்தம நாயுடு அவர்கள்,
(Reader in Tamil, University of Madras)

உளங்கனிந்து அளித்த

# முன்னுரை

இலக்கியங்கள் தாம் தோன்றியுள்ள காலத்து மக்களது சமுதாய வாழ்வினையும் சூழ்நிலையினையும் எடுத்துக் காட்டும் இயல்பின என்பதை ஆய்வாளர்கள் நன்கு அறிவர். பழந் தமிழரின் வரலாற்றைக் காண்பதற்கு இலக்கியங்களையே சான்றுகளாகக் கொள்ள வேண்டும். ஒரு பழைமையின் உண்மையைக் கண்டறிவதற்கு அகச்சான்று, புறச்சான்று என இருவகைச் சான்றுகள் உள்ளன. புறச்சான்றைவிட அகச் சான்றே சிறந்தது; உண்மை உறைப்பினை உடையது. பண்டைத் தமிழர்களின் வாழ்க்கை முறை, பண்பாடு, நாகரிகம் ஆகிய வற்றை நன்கு அறிவதற்குக் கருவி நூல்களாக இருப்பன சங்க இலக்கியங்கள், தொல்காப்பியம் என்ற ஒப்புயர்வற்ற இலக்கணம் ஆகியவை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை. இவற்றை அடிப்படையாகக்கொண்டு பல ஆய்வு நூல்கள் தோன்றியுள்ளன. எனினும், பழந்தமிழ்ப் பண்பாட்டைப் பளிங் கென எடுத்துக்காட்டும் தொல்காப்பியத்தைத் தமிழ் மக்கள் இன்னும் நன்கு தெரிந்துகொள்ளவில்லை. தமிழை முறையாகக் கற்றவர்கள் மட்டிலும் அதனை அறிந்துகொண்டால் போதாது; தமிழ் மக்கள் அனைவருமே அறிந்துகொள்வது மிகவும் இன்றி யமையாதது.

இந்த நோக்கத்தை அடிப்படையாகக்கொண்டு என் அரிய நண்பர் பேராசிரியர் **ந. சுப்பு ரெட்டியார்,** ஓயாது உழைத்து, **‘தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை’** என்ற இந்தப் பெரிய நூலை ஆக்கித் தந்துள்ளார். இதில் தமிழ் மக்களின் அறிவுக் கருவூலமாக நின்று நிலவும் தொல்காப்பியப் பொருளதிகாரத்

தின் ஒன்பது இயல்களும் 33 கட்டுரைகளாகப் பாகுபடுத்தப் பெற்று விளக்கம் பெறுகின்றன. இறுதியிலுள்ள 34 - ஆவது கட்டுரை, நூலிலுள்ள கட்டுரைகளின் கருத்துக்களைத் தொகுத்துக் கூறுகின்றது ; அக்கட்டுரையின் தலைப்பே நூலின் பெயராகவும் அமைந்துள்ளது. அவ்வியல்களில் அடங்கியுள்ள கருத்துக்கள் எவர் மனத்தையும் எளிதில் பிணிக்கும் வண்ணம் எளிய முறையில் புதிய தலைப்புக்களில் புதுக்கோலம் பூண்டுத் திகழ்கின்றன. தமிழ் இலக்கிய மரபுகளை நன்கு அறிந்து கொண்டு தமிழ் இலக்கியங்களைச்—சிறப்பாகச் சங்க இலக்கியங்களைச் சுவைக்க விரும்புவார்க்கு இக்கட்டுரைகள் பெருந் துணை புரியும் என்பதற்கு ஐயம் இல்லை. தொல்காப்பியப் பொருளதிகாரம் பயில்வார்க்கு இந்நூல் ஒரு வழித்துணை விளக்கம் போலவும் அமையும்.

என் நண்பர் **திரு. ரெட்டியார்** பலகலைகளையும் முறையாகக் கற்றவராதலாலும், இருபது யாண்டுகளுக்கு மேல் மாணுக்கர் கட்குப் பாடம் பயிற்றிய அனுபவத்தை யுடையவராதலாலும், ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பல்லாண்டுகள் பணிபுரிந்த அனுபவத்தினராதலாலும் பயிற்றும் முறைகளின் நாடியை அறிந்தவர். உளவியல் நுட்பங்களைத் தெரிந்தவர். எனவே, தொல்காப்பியத்தின் பல நுட்பமான கருத்துக்கள் எவரும் புரிந்துகொள்ளும் வண்ணம் இவரது நூலில் தெளிவும் விளக்கமும் பெறுகின்றன. இவை படிப்போர் மனத்தில் பசுமரத்தாணி யெனப் பதியும்பாங்கில் அமைந்துள்ளன. அகப்பொருள் இலக்கியங்களைத் தெளிவாகப் புரிந்துகொள்ளத் துணையாக வுள்ள முப்பொருள் பாகுபாடு, ஐந்திணை நெறி, பெருந்திணை, கைக்கிளை, ஐந்திணை உலக மாந்தர், அறத்தொடு நிற்றல், நாடக வழக்கு, உலக வழக்கு முதலியவை பற்றிய கருத்துக்களை இவற்றிற்கு எடுத்துக்காட்டுகளாகக் குறிப்பிடலாம். சங்க இலக்கியங்களின் தனிச் சிறப்பாகவுள்ள உள்ளுறை உவமம், இறைச்சிப் பொருள் இவரது கட்டுரைகளில் நல்ல விளக்கம் பெறுகின்றன. பாட்டிற்கு உயிர்நாடியாகவுள்ள மெய்ப்பாடு பற்றிய விளக்கம் நன்முறையில் அமைந்துள்ளது. மெய்ப்பாடு களை வடமொழிவாணர் கூறும் ரசம், பாவம் என்ற கருத்துக் களுடனும் உளவியலார் கூறும் கருத்துக்களுடனும் ஒப்பிட்டு

விளக்கியுள்ளமை சிறப்பாக உள்ளது. அங்ஙனமே, செய்யு ளியலிற் கூறப்பெற்றுள்ள செய்யுளின் பல உறுப்புக்கள் தெளிவாக விளக்கப்பெற்றுள்ளன. மரபியலில் பேராசிரியர் குறிப்பிட்டுள்ள மன உணர்வு — பொறியுணர்வு உளவியல் அடிப்படையில் தெளிவாக விளக்கம் பெற்றுள்ளன.

பொதுவாக, நூலின் போக்கு விளக்கமுறும் முறையிலும் ஆராய்ச்சிப் பாங்கிலும் அமைந்துள்ளது. நண்பர் திரு. ரெட்டி யாரின் தொண்டுள்ளத்தில் முளைத்தெழுந்த இந்நூல் பல தமிழ் மக்கள் உள்ளத்திற்கு நல்ல விருந்தாக அமையும் என்பதற்கு ஐயம் இல்லை. நீலமேனி நெடியோன் அருளால் இவர் இன்னோ ரன்ன பல நூல்களைப் பல துறைகளிலும் எழுதித் தமிழன்னைக்கு அணி செய்தல் வேண்டும். இதற்குச் 'செடியாய வல்வினைகள் தீர்க்கும்' திருவேங்கடவன் இவருக்கு உடல் நலமும் மனவளமும் அருள்வானாக என அவன் அடிகளை நினைந்து வாழ்த்துகின்றேன்.

**19-10-63.** — **பு. ரா. புருடோத்தம நாயுடு**

# நூல் முகம்

அடியேன் மேவி அமர்கின்ற
அமுதே! இமையோர் அதிபதியே!
கொடியா அடுபுள் உடையானே!
கோலக் கனிவாய்ப் பெருமானே!
செடியார் வினைகள் தீர்மருந்தே!
திருவேங் கடத்தெம் பெருமானே!
நொடியார் பொழுதும் உன்பாதம்
காண நோலாது ஆற்றேனே.[1]

— நம்மாழ்வார்

மேனாட்டு வரலாற்றைப் படித்தோர் **'ரிநேசான்ஸ்'** (Renaissance) என்ற ஒரு திட்டமான காலவரையறையை நன்கு அறிவர். நடுக்காலத்திற்குப் பின் — ஆனால், நவீன காலத்திற்குமுன் — உள்ள ஒரு காலப் பகுதியே இக்காலவரையறையில் அடங்கும். அஃதாவது, பதினான்காவது நூற்றாண்டின் நடுப்பகுதியிலிருந்து பதினேழாவது நூற்றாண்டின் நடுப் பகுதிவரை— மூன்று நூற்றாண்டுகள் — அடங்கிய காலப் பகுதியாகும் இது. இக்காலப் பகுதியில்தான் மேனாட்டில் இலக்கியம், பண்பாடு, சமூகம், அரசியல் முதலிய துறைகளில்

1. நாலாயிரம் – 3882

ஒரு பெரிய திருப்பம் ஏற்பட்டது; அத்துறைகள் யாவும் வானுற ஓங்கி வளர்ந்தன. ஒரு புதிய யுகம் தோன்றியது போன்ற மாறுதல் எம்மருங்கும் காணப்பெற்றது. இதைத் தான் மேனாட்டு அறிஞர்கள் 'ரினேசான்ஸ்' என்று கூறுவர். இந்த ஃபிரெஞ்சுச் சொல்லின் பொருள் **'மறு பிறப்பு'** (re-birth) என்பது. தமிழில் நாம் இதனை **'மறுமலர்ச்சி'** என்று வழங்கலாம்.

மேனாட்டில் இம்மறுமலர்ச்சி ஏற்படுதற்கு முன்னிருந்த சூழ்நிலையைச் சிறிது நோக்குவோம். நடுக்காலத்தில் சில நூற்றாண்டுகளாக ஐரோப்பியர் வாழ்வு இருள் அடைந்து கிடந்தது. சமயவாதிகளின் கருத்து வேறுபாடுகளும் வாதப் போர்களும் மக்களைக் கொடுமையாய் ஆண்டுவந்தன. எல்லா வற்றையும் மக்கள், சமயக் கோட்பாடுகளை அளவுகோலாகக் கொண்டுதான் அளந்தனர். சமய சாத்திரங்கட்கு விரிவுரை களும், விரிவுரைகட்கு மேலும் விரிவுரைகளும், மறுப்புக்களும் மறுப்புக்களுக்கு மேலும் மறுப்புக்களும் எழுதுவதிலேயே அறிஞர்கள் காலத்தைக் கழித்தனர். அவர்களது அறிவும் கல்வியும் இவற்றின் பொருட்டே பயன்பட்டன. சமய நூல் களும் சமயக் குருமார்களும் கூறியவையே உண்மை என்றும், இவ்வுண்மைக்கு மாருக, புறம்பாக, ஓர் உண்மையும் இருக்க முடியாதென்றும் கருதினர். அறிவினைப் பயன்படுத்திப் புதிய உண்மைகளைக் கண்டறிய முயலவும் இல்லை; புதிய உண்மைகளைக் கண்டறிவதும், அவற்றை மக்கட்கு வெளி யிடுவதும் பாவச் செயல் என்றே கருதினர்; அங்ஙனம் நம்ப வும் செய்தனர். அக்காலத்தில் கற்றவர்கள் கூர்த்த மதி யினராக இருந்தும், அம்மதியினைத் தக்கவாறு பயன்படுத் தாமல், சிறு மகார் பொம்மைகளை வைத்து விளையாடுவது போல் விளையாடினர். இவ்வுலகினை இயக்கிவரும் பௌதிக விதிகளைப்பற்றி இவர்கள் ஒருசிறிதும் அறியார். ஆயினும், தெய்வத்தின் இயல்பு என்ன? தேவ தூதர்கள் எவ்வளவு விரைவாகச் செல்வர் ? எவற்றின்மீது இவர்ந்து செல்வர்? என்பன போன்ற கற்பனைக் கருத்துக்களில் அதி நுட்பமாக வாதப்போர் புரிந்து வந்தனர். புதிய அறிவுத் துறைகளில்

நுழைந்து உண்மைகளை ஆராயவேண்டும் என்ற அவா இருந்தும், சமயக் கோட்பாடுகளின் கட்டுப்பாட்டினால்—அவற்றின் பிணிப்பினின்று வெளியேற முடியாமல் திண்டாடினர். கருத்துப்பொருள் வாதத்திலே அழுந்திக் கிடந்த இவர்களால் காட்சிப் பொருள் ஆராய்ச்சிக்குள் நுழைய முடியவில்லை.

இங்கிலையில் ஞானக்கதிரவன் மெதுவாகத் தோன்றத் தொடங்கினன். கி. பி. 1453-ஆம் யாண்டில் உரோமானியத் தலைநகராக வேண்டிய 'காண்ஸ்டாண்டி நோபில்' துருக்கியரால் கைப்பற்றப்பெற்றது. இந்த யாண்டிலிருந்து மறுமலர்ச்சியின் தாக்குதல்கள் ஐரோப்பியரின் அறிவுலகத்தை மோதின. சில அறிவியல் நூல்களும் புதிய அறிவுச் செல்வங்களும் அறபு நாட்டவர் மூலம் சிறிது சிறிதாக இவர்கட்குக் கிடைத்தன. இவற்ருல் இயற்கை யுலகைக் காண வேண்டும் என்ற அவா இவர்களிடம் எழுந்தது; அதற்கேற்றவாறு ஆராய்ச்சிக் கண்ணும் திறக்கப்பெற்றது. இப்பொழுது கிரேக்க இலக்கியங்கள் வெளிவரத் தொடங்கின. அச்சுப்பொறியின் கண்டு பிடிப்பால் இந்த இலக்கியங்களும் மற்றைய நூல்களும் மக்களிடையே பல்கிப் பெருகின. சமயத் தளையில் அகப்படாத புதிய அறிவும் புதிய நோக்கங்களும் முகிழ்த்தன. கிரேக்கக் கவிஞர்களின் கற்பனையில் அமைந்த புதிய உலகமும் இவர்கள் கண்முன் தென்பட்டது. கிரேக்க மெய்ப்பொருளியல் அறிஞர்களின் புதிய உலகமும் இவர்கட்கு எதிர்ப்பட்டது. பல நகர்களில் பல்கலைக் கழகங்கள் அமைக்கப்பெற்றன. இளைஞர்கள் புதிய பார்வையில் கல்வியைப் பெறப் பெற அறிவுலகத்தை மூடியிருந்த இருட்படலம் கலையத் தொடங்கியது. மனிதனிடம் விழிப்பு ஏற்பட்டது; அவன் தன்னையுணர்ந்தான்; தன்னைச் சூழ்ந்துள்ள இயற்கை யுலகினையும் கண்டுகொண்டான்; அறிவியல் ஆராய்ச்சியில் நாட்டங்கொண்டான். சோதனை மூலம் காணும் உண்மையே உண்மையென்றும், சமய நூல் ஆராய்ச்சியால் காணும் முடிவு உண்மையல்லவென்றும் உணர்ந்தான்; வெறும் தருக்க வாதத்தால் யாதொரு பயனும் விளைவதில்லை என்பதையும் தெளிந்தான். இங்கிலையில் சில மாலுமிகள் துணிந்து தம் உயிரையும் பொருட்படுத்தாது

நீண்டகாலம் கப்பல் யாத்திரை செய்து புதுநிலப் பகுதிகளைக் கண்டுபிடித்தனர். இதனால் புதிய உணர்ச்சிகள் மக்கள் இதயத்தில் மலர்ந்தன. விடுப்பூக்கம் (instinct of curiosity) மிக வன்மையுடன் செயற்படத்தொடங்கியது. புதிய கைத் தொழில்கள் தோன்றி வளர்ந்தன. இதனால் மக்களிடையே செல்வமும் பெருகியது; வாழ்க்கை நிலை பல்லாற்றானும் உயர்ந்தது. பழைய இலக்கியங்கள் புதிய கண்கொண்டு ஆராயப்பெற்றன; திறந்தெரிந்து ஆராயப்பெற்றன. கலை, இலக்கியம், சிற்பம், சமயம் முதலிய துறைகளிலும் புத் துணர்ச்சி தோன்றி வளர்ந்தது. இங்ஙனம் ஒரு புது யுகமே தோன்றிவிட்டது. இந்நிலையே மேனாட்டில் தோன்றிய மறு மலர்ச்சியாகும். நீண்ட காலமாக வெளியிற் புலப்படாமல் அமைதியாய்ப் பரவி சமுதாயத்தை உள்ளூர இயக்கி வரும் பல்வேறு ஆற்றல்கள் சிற்சில காரணங்களால் திடீரென்று மிக வேகத்துடன் எழுந்து முழுவன்மையுடன் சிலர் வாயிலாக வெளிப்பட்டுச் சமுதாயம் முழுவதும் அதிர்ந்து எதிரொலிக்கச் செய்து முன்னேற்றப்பாதையில் விரைந்து பாயும் நிலைமையில் 'மறுமலர்ச்சி' என்பதை ஈண்டு நாம் தெளிவாக உணர்தல் வேண்டும்.

## 2

மேலே குறிப்பிட்டவாறு பதினைன்காவது நூற்றாண்டின் நடுப்பகுதிக்கு முன்னால் ஐரோப்பாவில் நிலவிய இருள் நிலைமையைப் போன்றதொரு நிலை சற்றேறக்குறைய நூறு யாண்டு கட்கு முன்னர்த் தமிழ் நாட்டிலும் நிலவியது என்று சொல்லலாம். இங்கு சமயப் பூசல்களும் வாதப் போர்களும் எம்மருங்கும் காட்சியளித்தன. சைவ-வைணவப் பூசல்கள், வைதிக—கிறித்தவப் போர்கள் எங்கும் நிகழ்ந்தவண்ணமிருந்தன. அத்வைத சண்டமாருதங்கள், தருக்க குடாரங்கள், ஆபாச நிரசனங்கள், அருட்பா-மருட்பாப் போர்கள் மக்களது அறிவினைச் சூறையாடி வந்தன. **சிவஞான முனிவர், அரசன்**

**சண்முகனார், ஆறுமுக நாவலர்** போன்ற பேரறிஞர்களும் இவ்வித விநோத விளையாட்டுக்களில் பங்கு கொண்டனர்; வயிரக் குப்பாயங்கள் அமைத்தனர்; கண்டன கண்டனங்கள் இயற்றினர்; இலக்கணச் சூறாவளிகள் போன்ற பல சூறாவளிகள் எழுந்தன. தமிழ்நாடெங்கும் வாதீப சிங்கங்களும், பரசமய கோளரிகளும், தருக்கப் புலிகளுமாக நிரம்பியவண்ண மிருந்தனர். இறைவனது இயல்பு, உயிர்களின் இயல்பு, ஐந்து பூதங்களின் இயல்பு ஆகியவை துருவித்துருவி ஆராயப் பெற்றன. முத்தியின் இயல்பு நீரும் உப்பும் கலந்தது போன்றதா, அல்லது நீரும் பாலும் கலந்தது போன்றதா என்பதுபற்றிப் பெரும் போர்கள் விளைந்தன. எங்குப் பார்த்தாலும் சொல்மாரிகள் நடைபெற்றவண்ணமிருந்தன. அறிவுபற்றிய அனைத்திலும் சமயம் கொடுங்கோலாட்சி புரிந்து வந்தது என்று சொல்லுவது மிகையன்று. வடமொழித் தருக்க சாத்திரங்களும் மெய்ப்பொருள் நூல்களும் இந்தக் கொடுங்கோலாட்சிக்குத் துணை புரிந்தன; எரிகின்ற நெருப்பில் எண்ணெயை ஊற்றியது போன்ற நிலையை உண்டாக்கின. அறிவு விளக்கத்தை நாடிச் சென்றவர்கள் இருட்படலத்தினுள் சிக்கிக்கொண்டு தத்தளித்தனர்; குளிக்கப் போய்ச் சேற்றை வாரிப் பூசிக்கொண்டது போன்ற நிலையை மக்கள் அடைந்தனர்.

> 'ஆறு கோடி மாயா சக்திகள்
> வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின;
> ஆத்த மானார் அயலவர் கூடி
> நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்;
> விரத மேபர மாகவே தியரும்
> சரத மாகவே சாத்திரங் காட்டினர்;
> சமய வாதிகள் தத்தம் மதங்களே
> அமைவ தாக அரற்றி மலைந்தனர்;
> மிண்டிய மாயா வாதம் என்னும்
> சண்ட மாருதம் சுழித்தடித் தார்த்து
> உலோகா யதமெனும் ஒண்திறல் பாம்பின்
> கலாபே தத்த கடுவிடம் எய்தி
> அதிற்பெரு மாயை எனைப்பல சூழவும்'[2]

---

2. திருவாச..போற்றித்'-வரி (44-57)

என்று **மணிவாசகப்பெருமான்** காட்டிய சூழ்நிலையைப் போன்ற ஒரு நிலை இங்குக் காணப்பெற்றது. வீணான வாதப் போர்களில் மக்கள் காலங் கழித்தனர்; எம்மருங்கும் குதர்க்க மயம்; விதண்டா வாதங்கள்!

பதினேழாம் நூற்றாண்டில் திகழ்ந்த **தாயுமான அடிகள்** (கி. பி. 1608-1664) இந்தத் தருக்கப் பூசல்களையும் பிற செயல்களையும்,

கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்;
கற்றும்அறி வில்லாதஎன்
கன்மத்தை என்சொல்வேன் மதியைஎன் சொல்லுவேன்;
கைவல்ய ஞான நீதி

நல்லோர் உரைக்கிலோ கர்மமுக் கியமென்று
நாட்டுவேன்; கர்மம் ஒருவன்
நாட்டினாலோபழைய ஞானமுக் கியமென்று
நவிலுவேன்; வடமொ ழியிலே

வல்லான் ஒருத்தன் வரவும்திரா விடத்திலே
வந்ததா விவகரிப் பேன்;
வல்லதமி ழறிஞர்வரின் அங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிது புகல்வேன்;

வெல்லாமல் எவரையும் மருட்டிவிட வகைவந்த
வித்தையென் முத்தி தருமோ?
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே. 3

என்ற பாடல் மூலம் தெளிவாக எடுத்துரைப்பது ஈண்டு கருதத் தக்கது.

இந்த நிலையில் ஐரோப்பியர் நம் நாட்டிற்கு வந்தனர். பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்தியா முழுவதும் ஆங்கிலேய ஆட்சியைப் பெற்றது. **மெக்காலே பிரபு** ஆழ்ந்து சிந்தித்துச் செய்த பரிந்துரையின் பேரில் ஆங்கில அரசினர் இந்தியருக்கு மேனாட்டுக் கல்வியை அளிக்கவேண்டுமென்று தீர்மானித்தனர். இதனால் இந்தியாவின் குன்றிப்போன நாகரிகமும், உயிரற்ற ஆசாரப் பழக்கவழக்கங்களும் நவீன நாகரிகத்தால் மறைமுகமாகத் தாக்கப்பெற்றன. ஆங்கிலேயரின் ஆட்சி முற்றிலும்

3. தாயுமானவர் பாடல் - சித்தர்கணம்-10.

நிறுவப் பெறுவதற்கு முன்பே கிறித்தவ சமயம் இந்தியாவில்—முக்கியமாகத் தமிழ் நாட்டின் கீழ்க்கரையோரத்திலும் மேற்கரை யோரத்திலும்—பரவத் தொடங்கியது. கிறித்தவப் பாதிரிமார்களின் சமயப் பிரசாரம், அந்தப் பிரசாரத்தின் ஒரு பகுதியாக அவர்கள் அளித்த கல்வி, அரசினரால் நடத்தப் பெற்ற கல்விக்கூடங்கள், ஆங்கில ஆட்சி முறைகள், வாணிகம் முதலியவை நவீன நாகரிகத்தை நம் நாட்டிற்குள் கொண்டுவந்தன. ஆங்கில ஆட்சிக்குத் தேவையான எழுத்தர்களைத் தோற்றுவிப்பதற்கெனக் கல்வி முறை அமைந்தாலும் நவீன நாகரிகத்தைப் பெறவும், அறிவியற்கலைகளை அறியவும், விடுதலையுணர்ச்சியுடன் மேனாடுகளில் மக்கள் ஆட்சி நடைபெற்றுக்கொண்டிருப்பதைப் பார்க்கவும் அக்கல்வி முறை மக்களுக்குத் துணை செய்தது. மேனாட்டு நாகரிகம் நம் நாட்டுச் சமுதாயத்தையும் கலைகளையும் மூடியிருந்த இருட்படலத்தை நீக்க முயன்றது. தொடக்கத்தில் இந்தியர்களில் சிலர் நவீன நாகரிகத்தில் மூழ்கித் தங்கள் பழமையை வெறுத்தாலும், நாளடைவில் நவீன அறிவால் தம்முடைய கலைகளையும் நாகரிகத்தையும் ஆராயத் தொடங்கினர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தேசிய இயக்கம் தோன்றியது. சமுதாய உணர்ச்சியும் ஒற்றுமையுணர்வும் நாட்டுப்பற்றும் நாட்டில் வேகமாகப் பரவின. மக்கள் பண்டைய நாகரிகத்தின் சிறப்பையும் கலைகளின் வளத்தையும் இயக்கத்தின் பெருமையையும் அறிய அறிய, அவர்களிடம் நாட்டன்பும் விடுதலையுணர்ச்சியும் வலுப்பெற்றன. இதன் பயனாகப் பல இந்திய மொழிகளில் புதுக் கவிஞர்கள் தோன்றினர். தமிழகத்தில் **சுப்பிரமணிய பாரதியார்** தலைசிறந்த கவிஞராகத் திகழ்ந்தார்; புதிய பாணியில் மணிமயமான பண்களைக் கொட்டும் பாடல்களைப் பாடிக் குவித்தார். அச்சுப் பொறிகள் நாட்டில் நிறுவப் பெற்றதனால் நெடுங்காலமாக மக்கள் பார்வைக்குக் கிட்டாமல் சுவடிகளில் புதையுண்டு கிடந்த நமது பண்டைய இலக்கியங்கள் அச்சில் வெளிவந்து பலர்க்கும் கிடைத்தன. திரு. **சி. வை. தாமோதரம் பிள்ளை**, திரு. **அனந்தராமய்யர்**, திரு. **பின்னத்தூர் நாராயணசாமி அய்யர்**,

டாக்டர் **உ. வே. சாமிநாதய்யர்** ஆகியோர் பண்டைய இலக்கியங்களை வெளியிட்டனர். இறுதியில் குறிப்பிடப்பெற்ற பெரியார் ஈடும் எடுப்புமற்ற பதிப்பாசிரியராகத் திகழ்ந்தார். திரு. **வி. கனகசபை பிள்ளை,** பேராசிரியர் **பி. சுந்தரம் பிள்ளை,** திரு. **பி. டி. சீனிவாசய்யங்கார்,** திரு. **ரா. இராகவய்யங்கார்,** தவத்திரு. **மறைமலையடிகள்** ஆகியோர் பண்டைத் தமிழ் நாகரிகச் சிறப்பையும் பண்டைய இலக்கிய நயங்களையும் அறிவுறுத்தினர். இவர்களைப் பின்பற்றிப் பல அறிஞர்கள் மறுமலர்ச்சியின் தூதுவர்களாய் அமைந்தனர்.

டாக்டர் **கால்டுவெல்** திராவிட மொழியினம் என்ற ஒரு பிரிவை உலகிற்குணர்த்தி, அக்குழுவினுள் தமிழ், பண்டைப் பெருமையையும் புகழையும் இலக்கியப் பரப்பையும் உடைய பண்பட்ட மொழி என்று காட்டினர். இவர் காட்டிய பாதையில் பலர் மொழியியல் துறையில் தம் கவனத்தைச் செலுத்தி ஆராயத் தொடங்கினர். சமயச் சிறைச்சாலையினின்றும் வெளிப்போந்து, விடுதலை பெற்று, மக்கள் புதிய அறிவுலகத்திற்குள் புகுங்காலம் தோன்றியது. ஆங்கில இலக்கிய அறிவும் மேனாட்டு அறிவியல் அறிவும் நமக்கு இப்புத்துணர்ச்சியை அளித்தன. இங்கிலையில் 1947-இல் நமக்கு விடுதலையும் கிட்டியது; அந்நிய ஆட்சியினின்று விடுபட்டோம். இதற்கு முன்னர் ஏற்பட்ட பல்கலைக் கழகங்களாலும், புதிதாக நிறுவப் பெற்ற பல்கலைக் கழகங்களாலும் மக்கள் கல்வி பெருகிற்று. நம் நாட்டிலும் ஒரு புது யுகம் தோன்றத் தொடங்கியது. இதுவே நமது நாட்டில் தோன்றிய 'மறுமலர்ச்சி'யாகும்.

மக்களின் மனப்பான்மை விரிந்து நவீன ஒளியைப் பெற வேண்டுமென்ற ஓர் உணர்ச்சித் துடிப்பு எம்மருங்கும் காணப் பெறுகின்றது. இந்த உணர்ச்சி, இலக்கியங்களிலும் நிழலிடுகின்றது. பழைய கதைகளும், புராணங்களும், பாட்டுக்களும் சுவையற்றுப் போயின. நவீன உணர்ச்சித் துடிப்புடன் கூடிய கவிதைகளும் புதினங்களும் சிறுகதைகளும் உண்டாகிப் பெருகி வருகின்றன. இன்று இளைஞர்களிடையே சங்க இலக்கியங்களின்மீது ஆராக் காதல் பிறந்துள்ளது. இதற்கு **மறைமலையடிகள்** முக்கிய காரணமாவார். அவரைத் தொடர்ந்து

பணியாற்றிய பலருள் பேராசிரியர் **எஸ். வையாபுரிப் பிள்ளை**, டாக்டர் **ரா. பி. சேதுப்பிள்ளை** ஆகியோரும், இன்று பணியாற்றி வரும் திரு. **கி. வா. ஜகந்நாதன்**, டாக்டர் **மு. வரதராசனுர்** ஆகியோரும் குறிப்பிடத் தக்கவர்கள். திரு. கி. வா. ஜ. அவர்களின் 'சங்க நூற் காட்சிகள்' என்ற தொடரில் வந்த எட்டு நூல்களும், டாக்டர் மு. வ. அவர்களின் குறுந்தொகை, நெடுந்தொகை, நற்றிணை விருந்துகளும் விளக்கங்களும் இளைஞர்களின் சங்க இலக்கியக் காதலுக்குத் தூண்டுகோல்களாக அமைந்தன. சென்ற சில யாண்டுகளில் இதற்கு முத்தாய்ப்பு வைத்தது போல் பல மலிவுப் பதிப்பு நூல்கள் தோன்றி அனைவர் கைக்கும் கிட்டியுள்ளன. இந்த மலிவுப் பதிப்பு நூல்களை உயர்ந்த முறையில், நல்ல அச்சுடன் பிழைகளின்றி, அதிகச் செலவினையும் பொருட்படுத்தாது, அப்பொறுப்பினைத் தானே ஏற்றுக்கொண்டு வெளியிட்ட பெருமை **திரு. எஸ். ராஜம்** (உரிமையாளர், முர்ரே கம்பெனி, சென்னை-1) அவர்களைச் சாரும். அவருடைய சீரிய தமிழ்ப் பணியைத் தமிழ் நாடு என்றும் மறக்காது; நன்றியுடன் போற்றும். இந்நிலையில் பண்டைப் பெருமையையுடைய தொல்காப்பியம் என்ற இலக்கண நூலுக்கும் ஒருசில விளக்க, ஆராய்ச்சி நூல்கள் தோன்றியுள்ளன.

## 3

மேற்குறிப்பிட்ட சூழ்நிலையில் **'தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை'** என்ற நூல் வெளி வருகின்றது. இந்நூலின் கண் 34 கட்டுரைகள் அடங்கியுள்ளன; இறுதிக் கட்டுரை நூலின் பெயராக அமைந்தது. இவற்றுள் பத்துக் கட்டுரைகள் 1953, 1954 யாண்டுகளில் **அமுத சுரபி** என்ற திங்கள் இதழ்களில் வெளி வந்தன. ஏனையவை அதன் பின்னர் வெவ்வேறு சமயங்களில் எழுதப்பெற்றன. திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் பணியேற்றபின் (ஆகஸ்டு-1960) ஒரு சில கட்டுரைகள் எழுதப்பெற்றன. பல சமயங்களில் பல நோக்குடன் எழுதப்பெற்றமையான் இவற்றுள் ஆங்காங்கே

'கூறியது கூறல்' காணப்பெறும்; எனினும், அவை விளக்கம் பற்றி வந்ததாகக் கொள்ளல் பொருந்தும். பல யாண்டுகள் கழிந்து நூல் வடிவமாக வரும் இக்கட்டுரைகள் யாவும் 'தொல் காப்பியம்—பொருளதிகாரம்' பயில்வாருக்கு ஒரு வழித்துணை விளக்கம் போல் அமையும்; ஏனையோருக்கும் தொல்காப்பியத் தைப்பற்றிய கருத்துக்களை எளிதாகப் பெறுவதற்குத் துணை யாக இருக்கும். இந்த நூலைப் பயில்வோர் "கவிதை வாழ்க்கையிலிருந்து மலர்ந்தது; அது வாழ்க்கைக்கே உரியது; வாழ்க்கைக்காகவே அது நிலை பெற்றுள்ளது" என்று கவிதையைப்பற்றி **ஹட்சன்** என்ற மேனாட்டுத் திறனாய்வாளர்[4] கூறிய கருத்து ஒல்காப் பெரும்புகழ் **'தொல் காப்பியம்'** என்ற நூலுக்குப் பெரிதும் பொருந்துவதை நன்கு அறிவர். 'அமுதசுரபி'யில் வெளி வந்த கட்டுரைகளை இந்நூலில் சேர்த்து வெளியிட இசைவுதந்த அந்த இதழாசிரி யருக்கு என் நன்றி உரியது.

பல்லாண்டுகளாகச் சென்னைப் பச்சையப்பன் கல்லூரி யில் தமிழத் துறையில் பெரும்பணியாற்றிக் கடந்த இரண் டாண்டுகளாகச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவராக இருந்து, அத்துறையை அணி செய்யும் டாக்டர் **மு. வரதராசனாரைத்** தமிழ்கூறு நல்லுலகம் நன்கறியும். கடந்த இருபது யாண்டுகளாக அவரை யான் நன்கு அறிவேன். பழைய பரம்பரைத் தமிழ்ப் புலவர்களையும் புதிய பரம்பரைத் தமிழ்ப் புலவர்களையும் இணைத்து நிற்கும் பெரும்புலவர் அவர். பழமைக்குப் பழமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய் நின்று அறிவொளி வீசும் ஆசிரியமணியாவார். உழைப்பினால் உயர்ந் தமைக்குத் தமிழ் நாட்டு இளைஞர்கட்கு எடுத்துக்காட்டாக நின்று நிலவுபவர். இவருடைய எழுத்துக்களில் புலமை மணம் கமழும்; ஆராய்ச்சித் திறன் ஒளிரும்; சிந்தனைச் சுடர் தெறிக்கும். இவருடைய கருத்துக்களில் ஆழ்கடலைப் போன்ற ஆழமும் உண்டு; அதனைப் போல் அவை அகன்றும் காணப் பெறும். இலக்கியம், திறனாய்வு, ஆராய்ச்சி, மொழியியல்,

---

4. Hudson, W. H: An Introduction to the Study of Literature-pp-92.

நாடகம், புதினம், சிறுகதை, கடிதங்கள் போன்ற பல்வேறு வகை இலக்கியங்களை அணி அணியாக வெளியிட்டுத் தமிழன்னையின் மகிழ்ச்சியைப் பொங்கச் செய்தவர்; செய்து வருகின்றவர். தமிழ் ஆராய்ச்சியும் தமிழில் புதிய இலக்கிய வகைகளைப் படைக்கும் ஆற்றலும் நிறைந்த இவரைத் **'தமிழ் நாட்டு பெர்னாட்ஷா'** என்று கூறினும் மிகையன்று. வல்லவர்; நல்லவர்; எவருடனும் இன்முகத்துடன் புன்முறுவல் காட்டி உரையாடும் பண்புடையாளர். 'பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்' என்ற வள்ளுவர் வாக்கிற்கு இலக்காக நிற்கும் உயர் குணச் செம்மல். தமிழ் மூதறிஞர் **திரு. வி. க.** தமிழ் மக்களின் உள்ளத்தில் நான்கு எழுத்துக்களில் நிலையாக வாழ்கின்றார். அவர் காட்டிய பாதையில் செல்லும் இவர் **'மு. வ.'** என்ற இரண்டெழுத்துக்களில் தமிழ் இளைஞர்களின் உள்ளத்தில் நிரந்தரமாக இடம் பெற்றுவிட்டார். இத்தகைய அறிஞர்—பண்புடையாளர்—எனது இந்நூலுக்கு அணிந்துரையருளி ஊக்கியமைக்கு என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியது.

கடந்த பதினெட்டு யாண்டுகட்கு மேலாக பேராசிரியர் **அ. சீனிவாசராகவன்** அவர்களை அறிவேன். துறையூர் உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியராகப் பணியாற்றிய காலத்திலும், அதன் பின்னர் காரைக்குடி அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றிய காலத்திலும், முறையே ஆசிரியர் மாநாடுகளிலும், பல இலக்கியக் கூட்டங்களிலும் கலந்து பழகியுள்ளேன். ஆங்கிலத்திலும் அருந்தமிழிலும் தேனூறும் சொற்களால் இனிக்க இனிக்கப் பேசும் நாவீறு படைத்தவர். ஆங்கிலப் பேராசிரியரான இவர்கள் அருந்தமிழை நன்கு கற்றவர். தமிழ் கூறு நல்லுலகம் எங்கும் உலாப்போந்து தமிழ்ப் பணியாற்றுபவர். சில்லாண்டுகள் **'சிந்தனை'** என்ற திங்கள் இதழின் ஆசிரியராகப் பணியாற்றிய உயர்ந்த சிந்தனையாளர். கம்பன் புகழ் பாடுபவர். பல தமிழ் நூல்களின் ஆசிரியர். தூத்துக்குடியில் கப்பலோட்டிய தமிழன் பெயரால் நிறுவப்பெற்ற கல்லூரியில், அது தோன்றிய நாள் தொட்டு அதன் முதல்வராகவும், பல்லாண்டுகள் சென்னைப் பல்கலைக் கழக ஆட்சிக் குழுவின்

(Syndicate) உறுப்பினராகவும் பணியாற்றுபவர். என்னுடைய உழைப்பையும் வளர்ச்சியையும் நன்கு அறிந்து, என் பணியில் என்னை மேன்மேலும் ஊக்குவிப்பவர். எவருடனும் எளிமையாகவும் உள்ளங்குழைந்தும் பழகும் உயர்ந்த பண்புடையாளர். இத்தகைய பெரியார் இந்நூலுக்கு 'ஆங்கில முன்னுரை' வழங்கி ஆசி கூறியமைக்கு என் உளங்கனிந்த நன்றியும் வணக்கமும் உரியவை.

திருவையாறு அரசர் கல்லூரியில் பல்லாண்டுகளாகத் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி, நூற்றுக்கணக்கான மாணாக்கர்கட்கு உயர்ந்த முறையில் பாடஞ்சொல்லி, அவர்கள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு அவர்களைப் புலவர்களாக்கிய பேராசிரியர். **பு. ரா. புருடோத்தம நாயுடு** அவர்கள் கடந்த பதினைந்து யாண்டுகட்கு மேலாகச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையை அணி செய்பவர்கள். தமிழன்னைக்கு, இவர் செய்துள்ள தொண்டு பொன்னெழுத்துக்களால் பொறிக்கத் தக்கது. இவர்களால் தமிழன்னை பெற்ற செல்வம் ஒப்புயர்வற்றது. இறைவனால் மயர்வற மதிநல மருளப் பெற்ற நம்மாழ்வார் அருளிச்செய்த 'திருவாய்மொழி'க்கு மணிப்பிரவாள நடையிலுள்ள 'ஈடு' என வழங்கும் முப்பத்தாறுயிரப்படியை (நம்பிள்ளை அருளிச்செய்த இது வடக்குத் திருவீதிப் பிள்ளையால் எழுதிவைக்கப்பட்டது) தமிழாக்கிப் பத்துத் தொகுதிகளாகத்[5] தமிழர்கள் கையில் கிட்டும்படி செய்த மேதை; உண்மைத் தமிழ்த் தொண்டர். தமிழ்மொழி உள்ள அளவும் 'ஈட்டின் தமிழாக்கமும்' நின்று நிலவும் என்பதற்கு ஐயமில்லை. இங்ஙனம் திருந்திய உள்ளத்தை மாலடிக் காக்கிச் சேவையைத் தமிழ்மொழிக்காக்கிய பேராசிரியர் நாயுடு அவர்கள் அமைதியான போக்கும் உயர்ந்த நெறியும் உடையவர்கள். 'உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே' என்ற தொல்காப்பியரின் இலக்கணத்திற்கு இலக்கியமாக — எடுத்துக் காட்டாக—அமைந்தவர்கள். இத்தகைய பெரியார் என்மீது என்றும் கொண்டுள்ள கெழுதகை அன்பினால் எனது இந்த நூலுக்கு 'முன்னுரை' அருளி ஆசி கூறியதற்கு என்

5. சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு.

றென்றும் கடமைப்பட்டுள்ளேன்; இவருக்கு என் நன்றியும் வணக்கமும் உரியவை.

இந்நூலை வெளியிடுவதற்கு இசைவு தந்த திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தினருக்கு—சிறப்பாக அதனைத் தொடங்கிய நாள்தொட்டு மிக்க ஈடுபாட்டுடன் கண்ணெனக் காத்து வரும் அதன் துணைவேந்தர் திரு. **எஸ். கோவிந்தராஜுலு நாயுடு** அவர்கட்கு—என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியது

காலத்திற்கேற்ற நூல்களை வெளியிட்டுத் தமிழ் நாட்டில் சிறந்த முறையில் தமிழ்ப்பணியாற்றிவரும் **பழனியப்ப சகோதரர்கள்** இந்தப் பெரிய நூலையும் மனமுவந்து ஏற்று வெளியிட்டமைக்கு அவர்கட்கும், நூலைச் செவ்விய முறையில் அச்சிட்டுக் கற்போர் கரங்களில் கவினுடன் தவழச் செய்த **ஏஷியன் அச்சகத்தாருக்கும்** என் மனமுவந்த நன்றி என்றும் உரியது.

அறிவாலும் ஆற்றலாலும் ஒழுக்கத்தாலும் உயர்ந்த சீலத்தாலும் அத்தனைக்கும் மேலாகச் செயலாற்றும் திறனும் என் உள்ளத்தைக் கவர்ந்தவர்கள்—தமிழ்கூறு உலகிற்கு அறிமுகப்பட்டவர்கள்—உயர்திரு. **எஸ். கோவிந்தராஜுலு நாயுடு** அவர்கள். பல்லாண்டுகளாகச் சென்னைச் சட்டக் கல்லூரியில் பேராசிரியராகவும் முதல்வராகவும் பணியாற்றித் தமிழ்நாடு, ஆந்திரம், கேரளம் ஆகிய மூன்றிலும் உள்ள பல்லாயிரக் கணக்கான மாணக்கர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டவர்கள். ‘இந்தியன் பீனல் கோட்’ என்ற சட்டத்தை இலக்கியம் போல் சுவையாகக் கற்பித்துப் பலரை உயர்ந்த சட்ட நிபுணர்களாக்கியவர்கள். மூன்றாண்டுகள் தமிழ்நாட்டுக் (அப்பொழுது சென்னை, ஆந்திரம், கேரளம் அடங்கிய பகுதி) கல்வித்துறை இயக்குநராகப் பணியாற்றித் தம் சீலத்தாலும் உயர்ந்த பண்பாட்டாலும் பல்லாயிரம் ஆசிரியர்களின் உள்ளங்களைக் கவர்ந்தவர்கள். பல்லாண்டுகள் சென்னைப் பல்கலைக் கழக ஆட்சிக் குழுவின் உறுப்பினராகவும், இடையிடையே துணை வேந்தராகவும் இருந்து பணியாற்றி, அப்பல்கலைக் கழகத் துணைவேந்தர் சர். **ஆ. இலக்குமணசாமி முதலியார்** அவர்கட்கு உறுதுணையாக நின்று பெரும்புகழ் பெற்றவர்கள்.

அன்றியும், சென்னைப் பல்கலைக் கழகத் தெலுங்குப் பாடத் திட்ட ஆய்வுக் குழுவிலும், கீழை நாட்டு மொழிகளின் பாடத் திட்ட ஆய்வுக் குழுவிலும் உறுப்பினராகவும் தலைவராகவும் ஏறக்குறைய முப்பதாண்டுகளாகப் பணியாற்றி, மக்களுக்குக் கண்போல் விளங்கும் மொழிகளின் தரத்தை உயர்த்தி மொழித் துறையை வளமாக்கி வருபவர்கள். கடந்த பல யாண்டு களாகத் "தென்மொழி புத்தகப் பொறுப்பாட்சிக் குழுவிற்கு"த் (Southern Languages BookTrust) தலைவராக இருந்து, தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய நான்கு மொழிகளி லும் பொதுமக்களுக்கெனப் பல நூல்கள் வெளிவரக் காரண மாக இருந்து வருபவர்கள். கடந்த ஒன்பதாண்டுகளாகத் திரு வேங்கடவன் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராக இருந்து கொண்டு அதன் வளர்ச்சியிலும் பெருமையிலும் அதிகக் கவனம் செலுத்திக் கண்காணித்து வருபவர்கள். இத்தகைய கல்வித் துறை 'ஜாம்பவான்' திருவேங்கடவன் பல்கலைக் கழகத்திலும் 'தமிழ்' இடம் பெறச் செய்து, அதன் வளர்ச்சியில் 'கடைக் கண் நோக்கத்தைக்' கொண்டவர்கள். ஒருதலைச் சார்பற்ற உள்ளத்தைக்கொண்ட அவர்கள் ஆசியாலும் 'பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங்கொண்டலின்' திருவருளாலும் தமிழ்த் துறை விரிவடைந்து, பல தமிழறிஞர்கள் ஒருங்கிருந்து பணி யாற்றும் வாய்ப்பு அண்மையில் ஏற்பட வேண்டும். அன்றியும், பல்கலைக் கழகங்களின் ஆலோசனைக் குழு (Inter-University Board)வின் தலைவராக இருந்து பல்கலைக் கழகக் கல்வியின் தரம் குறையாதிருக்கப் பாடுபடுபவர்கள். ஆந்திர மாநில மேல்சட்ட சபையில் உறுப்பினராக இருந்து அரசியலிலும் தம் ஆழ்ந்தகன்ற அனுபவத்தை வழங்குபவர்கள். ஆசிரியர் களின் தோன்றாத் துணையாகவுள்ள இத்தகைய பேரறிஞரின் பால் கொண்டுள்ள பேரன்பிற்கும் பெருமதிப்பிற்கும் அறிகுறி யாக இப்பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறையில் பணியாற் றும் சிறியேன் இந்நூலை அவர்கட்கு அன்புப் படையலாக்கு கின்றேன். இவர்கள் ஆசியால் இந்நூல் தமிழ்கூறு நல்லுலகத் தில் பெருமிதத்துடன் உலவும் என்பது என் திடமான நம்பிக்கை.

எனக்கு இயல்பாகவுள்ள பல வகையான குறைகளால் இந்நூலின் பொருட்புணர்ப்பில் பலவித இடைவெளிகள் ஏற்பட்டிருத்தல் கூடும். அறிஞர்களும் அன்பர்களும் அவற்றைப் பொறுப்பார்களாக. அவர்கள் அத்தகைய இடைவெளிகளேயும் ஏனைய குறைகளேயும் சுட்டியுரைப்பார்களாயின் அவற்றை நிறைவு செய்து அடுத்த பதிப்பில் இணைத்துக் கொள்வேன். இப்புத்தகத்தை எழுதி வெளியிடுவதற்கு யான் மேற்கொண்ட முயற்சியை நிறைவேற்றி வைத்த எல்லாம் வல்ல திருவருளே மனம் மொழி மெய்களால் வாழ்த்தி வணங்குகிறேன்.

வேண்டத் தக்கது அறிவோய் நீ
வேண்ட முழுதுந் தருவோய் நீ
வேண்டும் அயன்மாற்கு அரியோய் நீ
வேண்டி என்னேப் பணிகொண்டாய்
வேண்டி நீயாது அருள்செய்தாய்
யானும் அதுவே வேண்டின் அல்லால்
வேண்டும் பரிசுஒன்று உண்டென்னில்
அதுவும் உன்றன் விருப்பன்றே 6

திருப்பதி
15-2-63

ந. சுப்பு ரெட்டியார்

6. திருவாச. — குழைத்த பத்து - 6

## உள்ளுறை

# தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை

## 1. அறிமுகம்

இன்று தமிழ் மொழிக்கு ஒரு செல்வாக்கு வந்திருக்கின்றது. எங்கும் தமிழ் முழக்கம் கேட்கப்பெறுகின்றது.

சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்
தமிழ்முழக்கம் செழிக்கச் செய்வீர்.[1]

என்ற பாரதியாரின் வீர முழக்கத்தை இன்று ஓரளவு செயலளவில் பல துறைகளிலும் கேட்கின்றோம். இன்று எம்மருங்கும் தமிழ் மணம் வீசத் தொடங்கியிருக்கின்றது தமிழ்ச் சொற்பொழிவுகள், தமிழ்ச் செய்தித்தாள்கள், பருவ இதழ்கள், தமிழில் புதிய புதிய வெளியீடுகள், பல துறைகளிலும் மொழி பெயர்ப்பு நூல்கள், ஒரு சில முதல் நூல்கள் ஆகியவை இன்று தமிழ்த்தாய் பெற்று வரும் புதிய ஏற்றங்கள். இந்தச் சூழ்நிலையிலும் பெரும்பாலான தமிழ் மக்கள் தமிழ் மொழிக்கும் தமிழ் மக்களுக்கும் பெருமையளித்து வரும் தொல்காப்பியத்தைப்பற்றி அறியாத நிலையையும் காண்கின்றோம். இந்த நிலை விரைவில் மாற வேண்டும். தமிழர் வாழ்க்கையின் உயிர்நாடி போல் இலங்கும் தொல்காப்பியம் பொது மக்களிடம் நன்கு பரவ வேண்டும்; அவர்களிடம் அது மிக்க செல்வாக்குப் பெற்றுப் புதிய ஒளியுடன் அவர்களிடையே உலவி, அவர்கள் வாழ்க்கையைச் செம்மையுறச் செய்ய வேண்டும்.

---

1. பாரதியார் கவிதைகள். தமிழ்

**தலை சிறந்த இலக்கணம் :** தமிழ் மொழியின் தலை சிறந்த இலக்கணம் தொல்காப்பியம்; தமிழ் மக்களது பேரறிவின் கருவூலமாக இன்று வரை நின்று நிலவுவது. அஃது ஆசிரியர் தொல்காப்பியரால் இயற்றப்பெற்றது. இன்று நமக்குக் கிடைத்துள்ள எல்லா நூல்களுக்கும் முற்பட்ட முழுத் தமிழ் நூல் அது. அவை எல்லாவற்றிற்கும் தொன்மையினுலும் ஆழ்ந்த பொருளுடைமையினுலும் மேம்பட்டுத் திகழ்வது. பின் வந்த தமிழ் இலக்கண ஆசிரியர்கட்கெல்லாம் ஒரு கலங்கரை விளக்கம் போலிருந்து அவர்கட்கு வழிகாட்டியாக நிற்பது. சங்க காலத்தில் தோன்றிய நூல் என்று இதனை அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். 'இடைச்சங்கத்தார்க்கும் கடைச்சங்கத் தார்க்கும் நூலாயிற்று தொல்காப்பியம்' என்று குறிப்பிடுவர் களவியலுரையாசிரியர். குமரியாறு தமிழ் நாட்டின் தெற்கு எல்லையாகத் திகழ்ந்த காலத்திலேயே இந்நூல் தோன்றி விட்டது. காக்கைப்பாடினியார். 'குமரித் தீம்புனல்' என்று குறிப்பிட்டுள்ளமை இதனை வலியுறுத்தும். இடைச்சங்க காலம் கி. மு. 2000-க்கு முற்பட்டதென்று ஆய்வாளர்கள் துணிந்திருக்கின்றனர். நூலின் தொன்மை மட்டிலும் அதற்குப் பெருமையளிக்கின்றது என்று கருத வேண்டா; அதன் செம்மை யும் நம்மை அதன்பால் ஈர்க்கிறது.

**தமிழ் கூறும் நல்லுலகம் :** அக்காலத்தில் மக்கள் பேசும் மொழியையொட்டி நாடு பிரிவினை செய்யப்பெற்றிருந்தது. தமிழ் மொழியைப் பேசும் மக்கள் வாழும் நாடு **'தமிழ் நாடு'** என வழங்கப்பெற்றது. இதனைத் தொல்காப்பியத்திற்குச் சிறப்புப் பாயிரம் வழங்கிய—அதாவது முன்னுரை தந்த— பனம்பாரனுர் **'தமிழ் கூறும் நல்லுலகம்'** என்று குறிப்பிடு கின்ருர். இந்நாட்டின் எல்லைகளைப் பற்றியும் அவரே கூறி யுள்ளார். வடக்கே திருவேங்கடமலையும், தெற்கே குமரி யாறும், கிழக்கு மேற்கு ஆகிய இரண்டு திக்குகளில் கடலாகவும் அமைந்த எல்லைக்குள் அடங்கிய நிலப்பரப்பே ஆசிரியர் தொல்காப்பியர் காலத்துத் தமிழ்நாடு. ஆனுல், பனம்பாரனுர்[2] கடல் எல்லைகளைக் குறிப்பிடவில்லை. அந்தத்

2. பனம்பாரனுர்...தொல்காப்பியனுரின் ஒரு சாலை மாணுக்கர்.

திசைகளில் மக்கள் வாழும் நாடுகளின்றிக் கடல்களே இருந்தனவாதலின் அவ்வெல்லைகளை வரையறை செய்யாது விட்டனர் போலும்.

'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்
தமிழ்கூறும் நல்லுலகத்து'

என்பது அவருடைய திருவாக்கு. இரண்டாம் முறையாக நிகழ்ந்த கடல் கோளுக்குப் பின் எஞ்சியிருந்த தமிழகத்தின் எல்லையினையே இளங்கோவடிகள்,

'நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்
தமிழ்வரம் பறுத்த தண்புனல் நன்னாட்டு'[3]

என்று குறிக்கின்றார் என்பதை நாம் ஈண்டு நினைவில் இருத்த வேண்டும்.

**நூல் தோன்றக் காரணம் :** தமிழக வரலாற்று ஆசிரியர்கள் மூன்று கடல் கோள்களைக் குறிக்கின்றனர். அவற்றுள் முதலாவது கி. மு 2387-ஆம் ஆண்டிலும், இரண்டாவது கி.மு. 504-ஆம் ஆண்டிலும், மூன்றாவது கி. மு. 306-ஆம் ஆண்டிலும் நிகழ்ந்ததாக அவர் கூறுவர். இம்மூன்றனுள் முதலாவது கடல்கோளே குமரி நாட்டின் பெரும் பகுதியை விழுங்கியது; இதுவே தொல்காப்பியனார் காலத்தில் நிகழ்ந்தது. இதனால் தமிழகத்தின் தென்பாலமைந்த பெருநிலப் பரப்பும், தமிழ் நூல்கள் பலவும் அழிந்துபட்டன. கடல் கோளுக்குப் பின்னர் வாழ்ந்த தமிழ் மக்கள் முத்தமிழ் நூற்பரப்பின் அமைதியை அறியும் ஆற்றலற்றவராயிருந்தனர். வடநாட்டினரால் பேசப்பெறும் ஆரிய மொழியும் தமிழ் நாட்டில் சிறிது சிறிதாகக் கால்கொண்டு ஊன்றி வளர்வதாயிற்று. தமிழ் மொழிக்கும் ஆரிய மொழிக்குமுள்ள இயல்புகளுள் ஒன்று மற்றொன்றனோடு உறழ்ந்து விரவும் வகையில் வடவரும் தென்னகத்தாரும் அளவளாவி உறவு கொண்டனர். முத்தமிழின் ஒன்றன் இயல்புகள் பிறிதொன்றன் இயல்புகளுடன் இயைத்து உரைக்கப்பெற்றன. தமிழ் மொழியின் திறத்தையும் அதன் பொருட்பாகுபாட்டையும் பகுத்துணரும்

3. சிலப்பதிகாரம் : வேனிற்காதை—வரி 1–2.

ஆற்றல் பொது மக்களிடம் வளராதிருந்தது. இந்நிலையில் தமிழ் மொழியின் சிறப்பினை எல்லார்க்கும் விளங்க எடுத்துரைக்கும் இயற்றமிழ் இலக்கண நூலொன்று தோன்றுவது இன்றியமை யாததாக இருந்தது. இச்சூழ்நிலையில் தொல்காப்பியர் மொழிப்பணியே தம் வாழ்க்கைப்பணி என்று கருதி, அதில் இறங்கினர். நாம் இன்று தமிழ்மொழியின் கண் எனப் போற்றும் தொல்காப்பியத்தை ஆக்கித் தந்தார்.

**எது தமிழ் மொழி? :** தமிழ் பேசப்பெறும் நாட்டில் தமிழ் மொழிக்கு வழங்கும் இலக்கணம் தொல்காப்பியம் என்பதை மேலே கண்டோம். தமிழ் மொழி என்பது என்ன? அதன் உருவம் யாது? என்பவற்றை நாம் அறிய வேண்டும். 'இலக் கணம் என்பது இலக்கியத்தின் இயல்பைக் கூறும் ஒரு சட்டம் போல்வது; நூல் உருவத்தில் இருப்பதுதான் இலக்கியம்; மக்கள் பேசுவது இலக்கியம் ஆகாது' என்று கருதுதல் தவறு. ஒரு மொழிக்கு இலக்கணம் கூறப் புகும் ஆசிரியன் வழக்கிலும் செய்யுளிலும் அம்மொழி நடைபெற்று வளரும் திறத்தினை ஆய்ந்துணர்தல் வேண்டும். வழக்காவது— கற்ருர் கல்லாதவர் என்ற வேறுபாடின்றி எல்லா மக்களும் பொருளுணர்ந்து பேசுமாறு எளிய சொற்களாலாகிய மொழி நடை; அஃதாவது, மக்களிடைபே அன்ருட வாழ்வில் நிலவும் மொழி. இவ்வழக்கியல் மொழியில் மக்களிடையே பலமுறையும் பழகி உருவிழந்து மெருகேறிய சொற்கள் இருக்கும்; தொல்காப்பியர் இம்மொழியினைச் **'சேரி மொழி'** என்று குறிப்பர். செய்யுளாவது - மேற்கூறிய வழக்கியல் மொழியினை அடிப்படையாகக் கொண்டு உணர்வினில் வல்ல புலவன் ஒருவன் திருந்திய சொற்களால் சீர் வகை யமையத் தான் கருதிய பொருளைத் திட்பநுட்பம் செறியச் சுவைபெறப் பாடும் சொன்னடையாகும். இதனைத் தொல்காப்பியர் **'செய்யுள் மொழி'** என்பர்.

தொல்காப்பியர் இந்த இருவகை மொழியினையும் நன்கு ஆய்ந்தார்; இரண்டிலும் பயின்று வந்த எழுத்திலக்கணத்தை யும், சொல்லிலக்கணத்தையும், பொருளிலக்கணத்தை யும் ஆய்ந்தார்; நூல் மரபுகள், மொழி மரபுகள், சொற்ருெடர்

மரபுகள் போன்ற குறிப்புக்கள் யாவற்றையும் தொகுத்தார். இக்கருத்துக்கள் யாவற்றையும் முறைப்பட வகுத்துத் தம் நூலில் நிரல்பட அமைத்தார். இச்செய்தியைப் பனம் பாரனர்,

'வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிச்
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணி
புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்'

[சிவணிய - பொருந்திய; முந்து நூல் - முன்னை இலக்கணங்கள்: நாடி – ஆய்ந்து.]

என்று குறிப்பிடுகின்றார். இந்த அடிகளினால் இலக்கணத்தின் உண்மை உருவம் இன்னதென்பது தெளிவாகின்றது. தொல்காப்பியர் ஏற்கெனவே மக்களிடையே வழங்கி வந்த தமிழின் அழகுகளையும் இலக்கியத்தின் தன்மைகளையும் ஒரு சேரத் தொகுத்து முறைப்பட வகுத்தார்; அவ்வளவுதான். அப்படித் தொகுத்தும் வகுத்தும் அமைத்த 'போக்கறு பனுவல்' தான் தொல்காப்பியம். அவர் இலக்கணத்தைப் புதிதாகப் படைக்கவில்லை; அந்நூலிலுள்ள சொல்லமைப்புக்கள்—நூற்பாக்கள்—மாத்திரம் அவருடைய சொந்தச் 'சரக்குகள்'; நூற்பாக்கள் குறிப்பிடும் செய்திகள் யாவும் அவருக்கு முன்பே உலக வழக்கிலும் நூல் வழக்கிலும் இருந்து வந்தவை. இதைச் சில நூற்பாக்களில் காணப்பெறும் 'என்ப', 'என்மனார் புலவர்' என்பன போன்ற தொடர்கள் வலியுறுத்தும்.

**நூல் பாகுபாடு:** தொல்காப்பியம் இயற்றமிழுக்குரிய ஓர் இலக்கண நூல். அஃது எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்ற மூன்று பிரிவுகளையுடையது. ஒவ்வோர் அதிகாரத்திலும் 'இயல்புகள்' என்று பெயர் கொண்ட ஒன்பது சிறு பிரிவுகள் உள்ளன. எழுத்துப்பற்றிய இலக்கணச் செய்திகளை முறைப்படுத்திக் கூறுவது எழுத்ததிகாரம்; இப்பகுதியில் 483 நூற்பாக்கள் உள்ளன. சொல்லதிகாரம் தமிழ் மொழியிலுள்ள பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்ற நான்கு வகைச்

சொற்கள்பற்றியும், அவற்ரோடு இயைபு உள்ள வேற்றுமை போன்ற மொழி மரபுகளைப்பற்றியும் கூறுகின்றது. இப்பகுதி யிலுள்ள மொத்த நூற்பாக்கள் 463. பொருளதிகாரத்தில் 656 நூற்பாக்கள் உள்ளன. அவ்வதிகாரத்தில் மனித வாழ்க்கைக்கு நன்மை பயப்பனவும் உயிர்க்கு உறுதி பயப் பனவும் கூறப்பெற்றுள்ளன. பரந்து கிடக்கும் இந்தப் பொருளைத் தொல்காப்பியர் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்று வகுத்துப் பேசுகின்ருர். உலகிலுள்ள எல்லாப் பொருள்களையும் இந்த மூன்று பிரிவுகளில் அடக்கி விடலாம் என்பதைத் தொல்காப்பியத்தைப் படிப்பதால் அறியலாகும் உண்மை.

**முந்து நூல் :** 'வழக்கும் செய்யுளும்' என்ற தொடரி லேயே தம் காலத்துத் தமிழ் நூல் வழக்கினைக் குறித்த பனம்பாரனர் மீண்டும் ஒருமுறை 'முந்து நூல்' எனக் குறிப் பிட்டது என்னை? குமரி நாட்டினைக் கடல் கொள்ளுவதற்கு முன் அமைந்த செந்தமிழ் நாட்டினையும் ஆண்டு முற்பட்டுத் தோன்றிய தொன்னூல்களையும் குறித்தற்கே மீண்டும் ஒரு முறை 'முந்து நூல்' என்ற தொடரால் குறித்தார் எனக் கோடல் வேண்டும். இங்ஙனம் பொதுவாகக் கூறியதனல் இயல், இசை, நாடகம் என்னும் பல்வேறு துறைகளைத் தழுவி எழுதப்பெற்றுத் தொல்காப்பியனர் காலத்தில் கிடைத்த எல்லா நூல்களையுமே இத்தொடர் குறிப்பதாகக் கொள்ளலாம்.

**அகத்தியரும் தொல்காப்பியரும் :** இந்த இருவரும் ஆசிரி யரும் மாணக்கரும் ஆவர் என்று தொடர்பு படுத்திக் கூறும் பன்னிருபடலப் பாயிரம், புறப்பொருள் வெண்பாமாலைப் பாயிரம் ஆகியவை குறிப்பிடும் செய்திகளை இக்காலத்து ஆய் வாளர்கள் ஒப்புக்கொள்வதில்லை. காரணம், அவை யாவும் தொல்காப்பியனரின் ஒருசாலை மாணக்கராகிய பனம்பார னரின் சிறப்புப் பாயிரத்தில் சொல்லப்பெறவில்லை. அகத்தியர் தென்னடு போந்த வரலாற்றினைப்பற்றிப் பேசப் பெறும் கொள்கைகளில் ஒன்றற்கேனும் தொல்காப்பியத் திலோ அதன் பாயிரத்திலோ சான்று காணப்பெறவில்லை.

அகத்தியனார் பெயரில் வழங்கும் நூற்பாக்களை நோக்குங்கால், அவை தொல்காப்பியனார் காலத்திற்கு மிகப் பிற்பட்ட காலத்தே இயற்றப்பெற்றனவாதல் வேண்டுமென்பது காய்தல் உவத்தலின்றி ஆறிராய்வார்க்குப் புலனாகும். இவற்றை நுணுகி ஆய்ந்த அறிஞர் பலர் இங்ஙனமே துணிந்திருக்கின்றனர். மேலும், இவர்கள் அகத்தியனாருக்குத் தொல்காப்பியர் மாணாக்கருமல்லர் என்றும், அகத்தியம் தொல்காப்பியத்திற்கு முதல் நூலும் அல்ல என்றும், தொல்காப்பியம் முதல் நூலேயென்றும் சான்றுகளுடன் நிறுவியுள்ளனர்.

**பாண்டியனின் மொழித் தொண்டு :** தலைச்சங்கத்து இறுதியிலும் இடைச்சங்கத்துத் தொடக்கத்திலும் இருந்தவன் நிலந்தரு திருவிற் பாண்டியன். இவன் கல்வியாலும் வீரத்தாலும் கொடைத் திறத்தாலும் புகழ்ச் செயலாலும் மேம்பட்டுத் திழ்ந்தவன். இவன் தன்னாட்டில் நேர்ந்த கடல் கோளினால் அழிந்து மறைந்த நூற்செல்வத்தையெல்லாம் தேடித் தொகுக்க முயன்றான். அதற்காகச் சான்றோர் பலரும் ஒன்று கூடும் 'அவையம்' ஒன்றை நிறுவினான். அவ்வவையமே கபாடபுரத்திலிருந்த இடைச்சங்கமாகும். இப்பாண்டியனின் வேண்டுகோளுக்கிணங்கவே தொல்காப்பியனார் தன் இயற்றமிழ் நூலை ஆக்கித் தமிழ் மக்களுக்கு அளித்தருளினார்.

**அரங்கேற்றம்:** அக்காலத்து முறைப்படி எந்த நூலாக இருந்தாலும் அந்நூல் அறிஞர் முன்னிலையில் அரங்கேற்றப் பெறுதல் வேண்டும்.[4] அப்படிச் செய்யாவிட்டால் அந்நூலை அறிஞர் பெருமக்கள் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். நிலந்தரு திருவிற்பாண்டியன் தொல்காப்பியத்தைத் தன் பேரவையிற் குழுமிய புலவர் பெருமக்கள் முன்னிலையில் அரங்கேற்ற எண்ணினான். தன் அவையின் தலைமைப் புலவராய்த் திகழ்ந்த **'அதங்கோட்டாசான்'** என்பவரின் தலைமையில் அரங்கேற்றத்தை நிறைவேற்றினான். அதங்கோட்டாசான் என்

4. இக்காலத்தில் சட்டமன்றத்தில் மசோதா (Bill) சட்டமாக (Act) நிறைவேறும் நிகழ்ச்சி போன்றது அது.

பவர் தமிழ் மொழியினையும் வட மொழியினையும் பழுதற ஓதி யுணர்ந்தவர்; இரு மொழிகளின் பொதுவியல்புகளையும் சிறப்பியல்புகளையும் தெளிய உணர்ந்தவர். இவர் மனத்துக் கண் மாசின்றித் திகழ்ந்த அறவோர். இத்தகைய பெரியோரை அவரது இயற்பெயரால் அழைக்கக் கூசிய அக்காலத்து மக்கள் அவர் பிறந்த 'அதங்கோடு' என்ற ஊர்ப்பெயரைச் சார்த்தி 'அதங்கோட்டாசான்' என வழங்கலாயினர். இப் பெயரே நாளடைவில் பெருவழக்காகப் போயிற்று; இயற் பெயர் இஃதென அறியக்கூடாத நிலையும் ஏற்பட்டது. இத் தகைய பெரியோரைப் பனம்பாரனர், 'அறங்கரை நாவின் நான்மறை முற்றிய அதங்கோட் டாசான்' என்று குறிப்பிடு கின்றார்.

ஒரு நூலின் அரங்கேற்றம் நடைபெறுங்கால் அவையில் குழுமியுள்ள அறிஞர் பெருமக்கள் நூற்பொருளைக் குறித்து பல்வேறு வினக்களை எழுப்புவர். நூலாசிரியன் அவ்வினக்கட் கெல்லாம் பொருந்துமாறு விடை பகர்ந்து தன் துணிபினை நிலை நிறுத்தும் கடமையுடையவனுவான். அங்ஙனமே, தொல் காப்பியரும் அவையில் அறிஞர் உள்ளத்தில் தோன்றிய ஐயங்கட்கெல்லாம் அவையினர் ஏற்றுக்கொள்ளத் தக்கவாறு அமைதி கூறித் தன் நூலை அரங்கேற்றினர். நூல் அரங் கேற்றப்பெற்ற பொழுது அவையினர் விடுத்த வினக்கட் கெல்லாம் குற்றமற விடையிறுத்ததைக் கண்ட அவைப் புலவர்கள் தொல்காப்பியரின் தமிழ்ப்புலமையின் தெளிவினை யறிந்து மகிழ்ந்தனர். அன்றியும், அவருக்கு வாய்த்த ஐந்திர இலக்கணப் பயிற்சியின் நிறைவினையும் அறிவதற்கு அஃது ஒரு வாய்ப்பினையும் தந்தது. இதனை அறிந்த அவையினர் அவரை ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்' எனப் பாராட்டினர். ஐந்திரம் என்பது இந்திரனல் செய்யப்பெற்ற ஒரு வடமொழி வியாகரணம்; இலக்கணம். தொல்காப்பிய னர் காலத்தில் அது பெரு வழக்கிலிருந்தது. இந்த அரங் கேற்றச் செய்தியைப் பனம்பாரனரின் சிறப்புப்பாயிரத்தின் பிற்பகுதி குறிப்பிடுகின்றது.

நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து
அறங்கரை நாவின் நான்மறை முற்றிய
அதங்கோட் டாசாற்[கு] அரில்தபத் தெரிந்து
மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி
மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப் பியனெனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமை யோனே.

[நிலம் தரு—பிற நாட்டைக் கைக்கொள்ளும்; அறம் கரை—நீதியைக் கூறும்; முற்றிய—முற்றும் பயின்ற; அரில் தப—குற்றம் நீங்க; தெரிந்து—காட்டி; மல்குநீர் வரைப்பு—நீரால் சூழப்பெற்ற நாடு; படிமை—தவவேடம்.]

**தொல்காப்பியத்தின் பெருமை :** தொல்காப்பிய அரங்கேற்றம் முடிவுற்றதும் தமிழ்நாடு முழுவதும் தொல்காப்பியத்தின் பெருமை பரவியது. தமிழறிஞர்கள் அந்நூலை விரும்பிக் கற்றனர்; தமிழ் உள்ளங்கள் அதன்பால் ஈர்க்கப்பெற்றன. வரையறையுடன் அமைந்த அந்நூலின் செல்வாக்குப் பெருகியது. இடைச்சங்கப் புலவர்கள் அதனைத் தங்களுக்குரிய இலக்கணமாக ஏற்றுக்கொண்டனர். தொல்காப்பியமே தமிழ் மொழியின் சட்டமாகத் திகழ்ந்தது.

கூறிய குன்றினு முதனூல் கூட்டித்
தோமின் றுணர்தல் தொல்காப் பியன்றன்
ஆணையில் தமிழ்அறிந் தோர்க்குக் கடனே[5]

என்று **பல்காப்பியனார்** என்ற ஒரு பழம் புலவர் கூறுகின்றார். தமிழ் உலகில் இலக்கிய ஆட்சியில் தொல்காப்பியருடைய ஆணையைப் புலவர்கள் அன்புடன் போற்றி ஆதரித்தனர். அவர் செலுத்திய அறிவாணைக்குப் பெரியோர்களும் பணிந்து ஒழுகினர். தொல்காப்பியத்திற்குப் பிறகு தோன்றிய நூல்களெல்லாம் அதற்கு இணையாகா என்ற ஒப்பற்ற பெருமையுடன் அந்நூல் இன்று நம்மிடையே உலவி வருகின்றது.

பிற்காலத்தில் வேற்று நாட்டவர் படையெடுப்புக் காரணமாகத் தமிழகத்தில் நேரிட்ட குழப்பங்களாலும், தமிழ் நாட்டில் பல்லாண்டுகளாகத் தொடர்ந்து வருத்திய வற்கடத்தின் கொடுமையாலும் மக்கள் தமிழ் வளர்ச்சியில் சோர்வுற்ற

5. மரபியல்—நூற்பா 95 (பேராசிரியரின் உரை மேற்கோள்.)

னர். இந்நிலையில் தொல்காப்பியத்தின் பயிற்சியும் நாளடைவில் குன்றியது. அயலாரது கூட்டுறவினால் நூலும் உருத்திரியும் நிலையை அடைந்தது. தமிழ் மக்களது தொன்மை நாகரிகத்திற்கு முரணான கருத்துக்கள் சிலவும் நூலுள் இடை இடையே ஏற்றியுரைக்கப்பெறுவனவாயின. இங்ஙனம் சிறிது உருக்குலைந்த தொல்காப்பியமே இன்று நம்மிடம் வழங்கி வருகின்றது.

**உரையாசிரியர்கள்:** எல்லாச் சிறப்பும் வாய்ந்த இத் தொல்காப்பியத்திற்குப் பல நூற்றாண்டுகள்வரை உரை எழுதப்பெறவில்லை. வழிவழியாகப் பாடம் சொல்லும் ஆசிரியர்கள் தத்தம் மாணாக்கர்கட்குத் தாம்தாம் உணர்ந்த அளவுக்கு உரையமைத்துப் பாடம் சொல்லி வந்தனர். நாளாக நாளாக அவர்கள் தத்தமக்குத் தோன்றியவாறெல்லாம் தத்தம் கருத்திற்கேற்பத் திருத்தி உரை கூறி வந்தனர். எனவே, நாட்டில் பல்வேறு கருத்துடைய ஆசிரியர்கள் பெருகி ஒருவரோடு ஒருவர் வாதம் செய்து வந்தனர். இந்த நிலையில் **இளம்பூரணர்** தொல்காப்பியத்தை முழுதும் நன்கு ஆய்ந்து தன்னுடைய கூரிய மதியால் தெளிவான உரை எழுதினார். மேற்கூறியவாறு நூலின் பொருளமைதி மாறுபட்டு முழுவதும் புலனாகாது மறைந்த இடர் நிலையில்தான் அவர் உரை எழுந்தது. அவர் உரை மூன்று அதிகாரங்களுக்கும் முற்ற முடிய உள்ளது. இந்த அரிய பெரிய நூலுக்கு முதன் முதலாக உரை வகுத்த பெருமையால் இவரை இடுகுறிப் பெயரால் கூறாது **'உரையாசிரியர்'** என்ற சிறப்புப் பெயராலேயே மக்கள் வழங்கி வருவாராயினர்.

இவருக்குப் பின்னர் வடநூற்கடலை நிலை கண்டுணர்ந்த **சேனாவரையர்** தொல்காப்பியச் சொல்லதிகாரத்தை மட்டிலும் நுணுகி ஆய்ந்து, தன் மதி நுட்பத்தால் ஒரு நல்லுரையை எழுதினார். அஃது இன்றுகாறும் நம்மிடையே பீடுடன் உலவி வருகின்றது. **பேராசிரியர்** என்பார் பொருளதிகாரத்திலுள்ள மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல் ஆகிய நான்கு இயல்களுக்குமட்டிலும் உரை வகுத்துள்ளார். இவர் உரையைப் பயிலும் போது இவர் நூல் முழுவதற்கும் உரை

கண்டனர் என்று எண்ணவேண்டியுளது. அவ்வுரை இன்னும் நமக்குக் கிட்டவில்லை. **நச்சினர்க்கினியர்** எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் ஆகிய இரண்டிற்கும் பொருளதிகாரத்தில் அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் ஆகிய ஐந்து இயல்களுக்கும் உரை எழுதியுள்ளார். ஏனைய நான்கு இயல்கட்கும் இவர் உரைகண்டதாகத் தெரியவில்லை. **கல்லாடர்** சொல்லதிகாரத்தில் சில பகுதிகளுக்கு மட்டிலும் உரை வகுத்துள்ளார். அவர் உரை முழுவதும் இன்னும் வெளிவரவில்லை. **தெய்வச்சிலையார்** உரை சொல்லதிகாரத்திற்கு மட்டிலுந்தான் வெளி வந்திருக்கின்றது.

ஆகவே, தொல்காப்பியத்திற்கு இன்னின்னர் இன்னின்ன பகுதிகட்கு உரை வகுத்திருக்கின்றனர் என்பதை அறுதிபிட்டு உரைத்தற்கு அகச்சான்றுகளோ[6] புறச்சான்றுகளோ[7] நமக்குக் கிடைக்கவில்லை. இத்தகைய உரைவளங்கள் நூலாசிரியரின் கருத்தை நன்கு அறிவதற்குத் துணை புரிகின்றன என்றாலும், சில இடங்களில் குழப்பத்தையும் உண்டாக்கி விடுகின்றன. எனினும், இளம்பூரணர் உரை சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் வெற்றியுடன் திகழ்கிறது.

பொருளதிகாரத்து அமைந்துள்ள இயல்களையும் நூற்பாத் தொகையையும்பற்றி இரண்டு வெண்பாக்கள் காணப் பெறுகின்றன.

ஈட்டும் அகத்திணையும் ஏய்ந்த புறத்திணையும்
காட்டும் களவியலும் கற்பியலும்—மீட்டும்
பொருளியல்மெய்ப் பாடுவமம் போற்றிய செய்யுள்
மரபியலும் ஆம் பொருளின் வைப்பு.[8]

பூமலர்மென் கூந்தால்! பொருளியலின் சூத்திரங்கள்
ஆவஅறு நூற்றறுபத் தைந்தாகும்—மூவகையால்
ஆயிரத்தின் மேலும் அறுநூற்றுப் பஃதென்ப
பாயிரத்தொல் காப்பியங்கற் பார்[8].

இவற்றல் பொருளதிகாரத்திலுள்ள இயல்கள் ஒன்பது என்பதும், நூற்பாக்கள் 665 என்பதும், தொல்காப்பிய

6. அகச்சான்று—Internal evidence.
7. புறச்சான்று—External evidence.
8. செந்தமிழ்—தொகுதி 2. பக். 117

முழுமைக்குரிய நூற்பாக்கள் 1610 என்பதும் தெரிகின்றன. இப்போது பொருளதிகார நூற்பாத் தொகை 666 ஆக உள்ளது. இஃது ஒரு நூற்பாவை இரண்டாகக் கொண்டு உரைகாரர் பொருள் கூறியதனால் போந்தது. இந்த ஒன்பது இயல்களில் அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் என்ற நான்கும் அகப்பொருளையும், புறத்திணையியல், புறப்பொருளையும், ஏனையியல்கள் முறையே மெய்ப்பாடு, உவமம், யாப்பு, மரபு ஆகியவற்றையும் விளக்குகின்றன.

# 2. பொருள் உலகம்

**தொ**ல்காப்பியப் பொருளதிகாரம் பண்டைத் தமிழர்களின் பழக்க வழக்கங்களையும் நூல் முறைகளையும் பிற சிறப்புக்களையும் ஆராய்ந்து அறிவதற்கு ஒரு சிறந்த கருவி நூலாக இலங்குகின்றது. உலகில் உள்ள எல்லா மொழிகளிலும் அம்மொழியைத் தாய் மொழியாகக் கொண்டுள்ள மக்கள் நாகரிகத்தைக் காட்டும் பொருள் இலக்கணம் இல்லை. அந்தப் பொருள் இலக்கணத்தைக் கொண்டிருப்பது தமிழ் மொழியின் தனிச் சிறப்பாகும். அந்தப் பொருளதிகாரம் கூறும் பொருள் யாது என்பதைக் காண்போம்.

**பொருள் வகை:** 'பொருள்' என்ற சொல் பல கருத்துக்களைக் குறிக்கும். இவ்வுலகிலுள்ள பூக்களின் மணத்தையும் ஏனைய மணப்பொருள்களையும் மூக்கினால் முகர்கின்றோம். பலவித உண்டிகளையும் பான வகைகளையும் நாக்கினால் சுவைக்கின்றோம். ஏழிசைகளையும் இசைப் பயனையும் செவிகளினால் நுகர்கின்றோம். நாடகக் காட்சிகளையும் படக் -காட்சிகளையும் கண்களினால் காண்கின்றோம்; உருவமுள்ள பொருள்கள் யாவும் நம் கண்ணில் படுகின்றன. எத்தனையோ பொருள்களைத் தொட்டுப் பார்த்து அவற்றின் வன்மை மென்மைகளையும் பிற குணங்களையும் அறிகின்றோம். சுருங்கக் கூறினால் மெய், வாய், கண், செவி, மூக்கு என்ற ஐம்பொறிகட்கும் புலனாகக்கூடியவை யாவற்றையும் பொருள் என்று கூறலாம். இவற்றைப் பருப் பொருள்கள்[1] என்று குறிப்பிடுவர் அறிஞர்கள். காட்சிப் பொருள்கள் என்றும் இவற்றைக் கூறலாம்.

1 பருப்பொருள்கள்: Concrete things

ஐம்பொறிகட்கும் எட்டாத பொருள்களும் இருக்கின்றன. அவற்றை மனத்தினல் மட்டும் உணரலாம். அன்பு, அறம், நட்பு, ஈகை, சினம், பொறுமை போன்ற குணங்களை ஐம்பொறிகளால் அறிய முடியாது. இவற்றை உருவில் பொருள்கள்[2] என்று அறிஞர்கள் குறிப்பிடுவர்; கருத்துப் பொருள்கள் என்றும் இவற்றைக் கூறலாம்.

**குறிக்கோட்பொருள்கள் :** மக்களுக்கு உறுதிபயக்கக்கூடிய குறிக்கோட்பொருளைச் சயம நூலார் அறம், பொருள், இன்பம், விடு என நான்காகப் பகுத்துப் பேசுவர். இவற்றை வட நூலார் தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் ,என்று கூறுவர். தமிழர்களின் தலைசிறந்த நூலாகிய திருக்குறள் முதல் மூன்று பொருள்களையும் விரித்துக் கூறுகின்றது. நான்காவது பொருளாகிய விட்டைக் குறித்துக் கற்பனையாலும் காண முடியாது, மொழியினலும் எடுத்தியம்ப முடியாது என்று திருவள்ளுவர் அவற்றை எடுத்து ஓதவில்லை. தொல்காப்பியனர், திருவள்ளுவர் போன்ற தமிழ்ப் பெரியார்கள் வீடுபேற்றின் நிமித்தம் கூறியிருக்கின்றனரேயன்றி அவ்வீட்டின் தன்மையைக் குறித்து யாதொன்றும் செப்பவில்லை.

**அகமும் புறமும் :** தமிழர்கள் பொருளை அகம் என்றும், புறம் என்றும் பகுத்து, அவ்விரண்டு பிரிவினுள் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கினையும் அடக்குவர், "ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம், அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறு இருந்ததெனக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின், அதனை அகம் என்றார்" என்று நச்சினர்க்கினியர் அகப்பொருளைக் குறித்துப் பேசுவர். புறப்பொருளைக் குறித்து அவர், "இதனை (அகத்தை) ஒழிந்தன, ஒத்த அன்புடையார் தாமேயன்றி எல்லார்க்கும் துய்த்துணரப்படுதலானும், இவை இவ்வாறு இருந்ததெனப் பிறர்க்குக் கூறப்படுதலானும், அவை புறம் எனப்படும்" என்று கூறியிருக்கின்றார். மேற்கூறிய இன்பம்

---

உ. உருவில் பொருள்கள் Abstract ideas

அகப்பொருளிலும் ஏனைய அறம், பொருள், வீடு ஆகிய மூன்றும் புறப்பொருளிலும் அடங்கும்.

**பதி - பசு - பாசம் :** வடமொழியில் தத்துவங்கள் என்று வழங்கும் பொருள்களைத் தமிழர்கள் 'மெய்ப்பொருள்கள்' என்று குறிப்பிடுவர். மெய்ப்பொருள்களை 'முப்பொருள்கள்' என்றும் தொகுத்துப் பேசுவர். அவை கடவுள், உயிர், உலகம் என்று பகுத்துக் கூறப்படும். இந்த வாய்பாடுகள் பிற்காலத்தில் சிறிது மாற்றம் அடைந்துள்ளன. கடவுள் உயிருக்கு உயிராய் உயிர்தோறும் பதிந்து அவற்றை இயக்கும் முதல்வனாதலின் அவனைப் 'பதி' என்று வழங்கினர். உயிர்கள் சிற்றறிவுடையனவாய் ஒரு தலைவனைப் பெற்று இருப்பதால் அவை மனிதன் நடத்தும் மாக்கள் போன்றுள்ளன. அந்த மாக்களுள் சிறந்தவை பசுவாதால், அவை 'பசுக்கள்' என்று கூறப் பெற்றன. உயிர்கள் கடவுளை அறியவொட்டாமல் அவற்றின் அறிவினை மலம், வினை, சடவுலக மூலமாகிய மாயை ஆகிய மூன்றும் மறைக்கின்றன. இவை நீரினை மயக்கும் பாசம் போன்றிருத்தலால், அவற்றைப் பாசம் என்று குறித்தனர். எனவே கடவுள், உயிர், உலகம் என்ற வாய்பாட்டிற்குப் பதிலாகப் பதி, பசு, பாசம் என்ற வாய்பாடு வழக்கில் அமைந்தது. வடநூற்கொள்கைப்படி பதி என்பது தலைவனையும், பசு என்பது மும்மலத்தால் கட்டுண்ட உயிர்களையும், பாசம் என்பது உயிரினைப் பிணித்துள்ள மும்மலத்தையும் உணர்த்தும். இவற்றை இறை, உயிர், தளை என்று தமிழ் மொழியால் உணர்த்தலாம்.

**தொல்காப்பியரின் வரம்பு :** மேற்கூறியவாறும் இன்னும் அறிவு நுட்பங்களுக்கெல்லாம் எட்டியவாறும் இவ்வுலகத்துப் பொருள்களை உறுப்பினாலும், தொழிலினாலும், பண்பினாலும் பாகுபடுத்தி நோக்கினால் அவை எல்லையற்று விரிந்து ஒருவித வரம்பினுள் அடங்காது போய்விடும். இவற்றை ஒரு வரையறைக்குள் அடக்கிப் பேசுகின்றார் தொல்காப்பியர். அவர் உலக வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் பயின்றுவரும் பொருள்களை மூவகையாகப் பிரித்துப் பேசுகின்றார். அவை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்பன.

முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுள் பயின்றவை நாடுங்காலை[3]

[நுவலுங்காலை - சொல்லுங்காலத்து; முறை - முறையை (order of preference.]

என்பது அவர் கூறும் நூற்பா.

**முதற்பொருள் :** முதற்பொருள் நிலம், காலம் என இரு வகைப்படும். இதனை,

முதல் எனப்படுவது நிலம்பொழுது இரண்டின்
இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே.[4]

என்று கூறுகின்றார் தொல்காப்பியர். ஆங்கிலத்தில் இவற்றை முறையே Space என்றும் Time என்றும் குறிப்பிடுவர். இவை இரண்டும் உலகத் தோற்றத்தைப் பற்றிய கருத்துக்களையும் இப்பூமண்டலத்தின் இயக்கத்தையும் விளக்குவதற்கு மிகவும் முக்கியமானவை. இவை இரண்டினையும் தொடர்பு படுத்தி **ஐன்ஸ்டைன்** என்ற உலகப் புகழ்பெற்ற அறிவியல் மேதை **'ஒப்பு நோக்குக் கொள்கை'**[5] என்ற புதிய கொள்கையைக் காட்டியுள்ளார். ஒரு செய்யுளில் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற மூன்று பொருள்களும் வந்தால், அப்பாட்டின் முதற்பொருளைக்கொண்டே திணை கூறப்படும் என்றும், முதற்பொருள் ஒழிய ஏனைய இரண்டு பொருள்கள் வந்தால், அப்பாட்டின் கருப்பொருளைக் கொண்டு திணை குறிக்கப்படும் என்றும் இளம்பூரணர் குறிப்பிடுகின்றார். உரிப்பொருளே பாடலின் உயிர் நாடியாக இருக்கும் என்பதைப் பாடலைப் படிப்பவர்கள் எளிதில் உணர்வர்.

**முதற்பொருள் - நானிலப் பிரிவுகள் :** தமிழர்கள் நிலத்தை நான்கு பிரிவாகப் பிரித்திருக்கின்றனர். அவர்கள் காட்டையும் காடு சார்ந்த இடத்தையும் முல்லை என்று பெயரிட்டு வழங்

3. அகத்திணை நூற்பா 3.
4. அகத்திணை நூற்பா 4.
5. ஒப்பு நோக்குக் கொள்கை. Theory of Relativity

கினர். மலையையும் மலை சார்ந்த இடத்தையும் குறிஞ்சி என்று பெயரிட்டனர். வயலும் வயல் சார்ந்த இடமும் மருதம் என்று வழங்கப்பெற்றன. மணலும் மணல் சார்ந்த இடமும் நெய்தல் என்று குறிப்பிடப்பெற்றன. தொல்காப்பியர் இவற்றை முறையே காடுறை உலகம், மைவரை உலகம், தீம் புனல் உலகம், பெரும் புனல் உலகம் என்று குறிப்பிடுகின்றார். இவற்றைத் தவிர ஐந்தாவது நிலம் ஒன்று உண்டு. அதனைப் பாலை என்று தமிழ் நூல்கள் வழங்கும். தமிழ் நாட்டில் அவ்வகை நிலம் இல்லை. இயற்கை மாறுபாட்டால், பருவ மழை பெய்யாது வளங்குன்றிய காலத்தில், முல்லை நிலமும் குறிஞ்சி நிலமும் தன் இயல்பை இழந்து புதியதோர் தன்மையைப் பெறும். அத்தன்மையையுடைய நிலத்தைத் தமிழர்கள் பாலை என்று வழங்கினர்.

முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து
நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்துப்
பாலை என்பதோர் படிவங் கொள்ளும் 6

என்ற சிலப்பதிகாரப் பகுதியால் இது நன்கு விளங்கும். இந்த முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற பெயர்கள் அந்தந்த நிலப்பகுதிகளில் காணப்பெறும் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற மலர்களின் பெயரால் வழங்கப் பெற்றன என்பதும், நாளடைவில் அவற்றில் நிகழும் ஒழுக்கத்திற்கும் அப்பெயர்களே வழங்கலாயின என்பதும் இளம்பூரணரின் கருத்து. ஆனால், நச்சினார்க்கினியர் முதலில் ஒழுக்கத்திற்கே அப்பெயர்கள் அமைந்தன என்று கூறுகின்றார்.

**முதற்பொருள் - காலம் :** முதற்பொருளின் மற்றொரு பகுதியாகிய காலத்தைப் **பெரும்பொழுது** என்றும், **சிறு பொழுது** என்றும் தமிழ் நூலார் பகுத்துப் பேசுகின்றனர். பெரும்பொழுது என்பது, ஓராண்டினை ஆறு பிரிவாகக் கூறிட்ட பகுதிகள். அவை கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பவை. கார் என்பது, மழை பெய்யும் காலம்; அஃது ஆவணித்திங்களும் புரட்டாசித்

6. சிலப்பதிகாரம் — காடுகாண் காதை. வரி 64-66

திங்களும். கூதிர் என்பது, குளிர் காலம்; அஃது ஐப்பசித் திங்களும் கார்த்திகைத்திங்களும். முன்பனிக் காலமாவது, மார்கழித்திங்களும் தைத்திங்களும். பின் பனியாவது, மாசித் திங்களும் பங்குனித்திங்களும். இளவேனில் என்பது, சித்திரையும் வைகாசியும் சேர்ந்த காலப் பகுதி. ஆனியும் ஆடியும் சேர்ந்த காலப் பகுதி முதுவேனில் என்பது. சிறு பொழுது என்பது, ஒரு நாளினை ஆறு கூறிட்ட பகுதிகள். அவற்றை வைகறை, விடியல், எற்பாடு, நண்பகல், மாலை, யாமம் என்று குறிப்பிட்டிருக்கின்றனர். வைகறை என்பது, இராப்பொழுதின் பிற்கூறு; விடியலாவது, பகற்பொழுதின் முற்கூறு; எற்பாடு[7] என்பது, பகற்பொழுதின் பிற்கூறு; நண்பகலாவது, பகற்பொழுதின் நடுக் கூறு; யாமம் என்பது இராப்பொழுதின் நடுக்கூறு.

இங்ஙனம் ஐந்திணைக்கும் பெரும்பொழுது சிறு பொழுது கள் பகுக்கப்பெற்றது அவ்வந்நிலத்திற்கேற்ப இப் பொழுதுகள் தலைவன் தலைவியர் மாட்டுத் தோன்றும் காமக் குறிப்பைச் சிறப்பித்தல் பற்றியாகும் என்பது உணர்தற் பாலது. இதுபற்றி இளம்பூரணர் இவ்வாறு கூறுகின்றார்: "இவ்வறு வகைப் பருவமும் அறு வகைப் பொழுதும் இவ் வைந்திணைக்கு உரியவாறு என்னையெனின், சிறப்பு நோக்கி என்க. என்னை சிறந்தவாறு எனின், முல்லையாகிய நிலனும், வேனிற்காலத்து வெப்பம் உழந்து மரனும் புதலும் கொடியும் கவினழிந்து கிடந்தன புயல்கள் முழங்கக் கவின்பெறும் ஆதலின், அதற்கு அது சிறந்ததாம். மாலைப்பொழுது இந்நிலத் திற்கு இன்றியமையாத முல்லை மலரும் காலமாதலானும், அந்நிலத்துக் கருப்பொருளாகிய ஆனிரை வருங்காலமாத லானும், ஆண்டுத் தனியிருப்பார்க்கு இவை கண்டுழி வருத்

7. எற்பாடு - எற்பாட்டைப் பிற்பகல் என்று உரைப்பர் நச்சினார்க் கினியர். எல் - சூரியன்; சூரியன் படுகின்ற காலம். சிவஞான முனிவர் எற்பாட்டை "ஞாயிறு உதயமாகும் நாள் வெயிற்காலை" எனக் கூறுவர். (தொல்காப்பிய முதற்சூத்திரவிருத்தி' என்ற நூலினைப் பார்க்க). பாடு - உண்டாதல் என்பது இவர் கொள்ளும் பொருள். இவர்க்குச் சிறு பொழுது ஐந்தென்பதே கொள்கையாம்.

தம் மிகுதலின், அதுவும் சிறந்தது ஆயிற்று. குறிஞ்சிக்குப் பெரும்பான்மையும் களவிற்புணர்ச்சி பொருளாதலின், அப் புணர்ச்சிக்குத் தனியிடம் வேண்டுமன்றே, அது கூதிர் காலத்துப் பகலும் இரவும் நுண்துளி சிதறி இயங்குவார் இலராம் ஆகலான், ஆண்டுத் தனிப்படல் எளிதாகலின், அதற்கு அது சிறந்தது. நடுநாள் யாமமும் அவ்வாறாகலின் அதுவும் சிறந்தது. மருதத்திற்கு நிலன் பழனஞ்சார்ந்த இடமாதலான், ஆண்டு உறைநவார் மேன்மக்களாதலின், அவர் பரத்தையிற்பிரிவுழி அம்மனையகத்து உறைந்தமை பிறர் அறியாமை மறைத்தல் வேண்டி வைகறைக்கண் தம் மனை யகத்துப் பெயரும் வழி, ஆண்டு மனைவி ஊடலுற்றுச் சார் கிலளாமாதலால், அவை (வைகறையும் விடியலும்) அந்நிலத் திற்குச் சிறந்தன. நெய்தற்குப் பெரும்பான்மையும் இரக்கம் பொருளாதலின், தனிமையுற்று இரங்குவார்க்குப் பகற் பொழுதினும் இராப்பொழுது மிகுமாதலின், அப்பொழுது வருதற்கேதுவாகிய எற்பாடு கண்டார் இனி வருவது மாலை யென வருத்தமுறுதலின், அதற்கு அது சிறந்தது என்க. பாலைப்பொருளாவது பிரிவு; அப்பிரிவின்கண் தலைமகற்கு வருத்தமுறுமென்று தலைமகள் கவலுங்கால் நிழலும் நீரும் இல்லாத வழி ஏகினர் எனவும் கவலுமாகலின், அதற்கு அது சிறந்தது என்க''[8] இவ்வாறே நச்சினார்க்கினியரும் ஏற் புடைய காரணங் கூறிச் செல்லலை அப்பொழுதுகளின் உரிமை கூறும் நூற்பாவுரைகளால் அறிந்துகொள்ளலாம்.

**கருப்பொருள் :** முதற்பொருளிலிருந்து தோன்றுவது கருப்பொருள். அஃது இடத்திலும் காலத்திலும் தோன் றும்; தேவர் மக்கள் விலங்கு முதலாயினவற்றையும், உணவு செயல் முதலாயினவற்றையும், பறை யாழ் முதலியனவற்றை யும், இவை போன்றன பிறவற்றையும் கருப்பொருளாகக் கொள்வர். இதனைத் தொல்காப்பியர்,

> 'தெய்வம், உணவே, மாமரம் புள்பறை,
> செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
> அவ்வகை பிறவும் கருவென மொழிப'[9]

என்று கூறுகின்றார்.

---

8. அகத்திணை - நூற்பா 12 - இன் இளம்பூரணர் உரை.
9. அகத்திணை - நூற்பா 20.

**உரிப்பொருள் :** உரிப்பொருளாவது, மக்களுக்கு உரிய பொருள். அதை அகப்பொருள் என்றும், புறப்பொருள் என்றும் தமிழ் இலக்கணம் விரித்துப் பேசும். அகப்பொருள் என்பது, காதல் சம்பந்தமான செய்திகளைக் கூறுவது. போக நுகர்ச்சி செய்தவர்கள் மட்டும் மனத்தால் அறியக்கூடிய தாதலால் அஃது அகம் என்று பெயரிடப்பட்டது. புறப் பொருள் என்பது, மறச்செயல்களையும் அறச்செயல்களையும் இன்னோரன்ன பிறவற்றையும் கூறும் பகுதி. இவை பிறர்க் கும் புலனாக இருத்தலால் புறம் என்று குறியீடு செய்யப் பெற்றது.

**சான்றோர் பாடல்கள் :** இன்பப் பகுதிபற்றி எழுந்த பழைய சான்றோர்களின் பாடல்களில் ஐந்திணை வகையாகிய முதல், கரு, உரி ஆகிய முப்பொருள்களும் சிறப்பாக அமைந் திருத்தல் காணலாம். இவற்றுள் முதற்பொருளினும் கருப் பொருளும், கருப்பொருளினும் உரிப்பொருளும் சிறப்புடை யனவாகும்; அஃதாவது அகப்பொருள்கள் பற்றிய பாடல் களில் உரிப்பொருளாகிய புணர்தல், பிரிதல் முதலிய ஒழுக் கங்கள் இல்லாமற் பாடப்பெறுமாயின் அப்பாடல்கள் பொருட்பயனற்றனவாகக் கருதப்பெறும்; கருப்பொருள்கள் மட்டிலும் பாடல்களில் அமைந்தால், அப்பாடல்கள் அடுத்த படி சிறப்பாகக் கருதப்பெறும். மூன்று வகைப் பொருள் களும் ஒரு பாடலுள் அமைத்துப் பாடப்பெறுமாயின் அது பொருட்சிறப்புடன் விளக்கமுற்றுத் திகழும்.

முல்லை நறுமல ரூதி யிருந்தும்பி
செல்சார் உடையார்க் கினியவாய் - நல்லாய்! மற்
றியாருமில் நெஞ்சினே மாகி யுறைவேமை
யிரு மிருண்மாலை வந்து. 10

என்ற வெண்பாவில் மூன்று வகைப் பொருள்களும் வந்துள் ளன. இது பருவங்கண்டு வருந்திய தலைமகளுக்குத் தோழி கூறுவதாக அமைந்துள்ளது. 'வண்டுகள் முல்லை மலரை ஊதும்படி இருண்டு வரும் மாலைக் காலமானது கணவருடன் உறையும் மகளிர்க்கு இன்பம் தருவதாயினும், அவரைப்

10. ஐந்திணையைம்பது - செய். 6.

பிரிந்து வாழும் நமக்குத் துன்பம் தருவதாக உள்ளது' என்று கூறுகின்றாள் தோழி. இதில் கணவனைப் பிரிந்து தலைவி தனித்துறைதல் கூறுப்பெறுதலால் 'இருத்தல்' என்ற முல்லைத்திணையின் உரிப்பொருளும், 'முல்லைப் பூ' என்ற அதன் கருப்பொருளும், மாலைப்பொழுது' என்ற அதன் முதற்பொருளும் வந்து அகப்பொருள் வழக்கை அழகுபடுத்தியிருப்பதைக் கண்டு மகிழ்க. இங்ஙனமே, நற்றிணை, குறுந்தொகை முதலிய அகப்பாடல்களெல்லாம் ஆராய்ந்து கொள்ளற்பாலன.

ஆனால், மேற்கூறியபடி செய்யுள் வழக்கிலன்றி உலக வழக்கிலாயின், மேற்கூறியபடி அல்லாது தனித்தனியாகவும் வரும் என்று கூறுவர். இப் பாடல்கள் சிலவும் பலவும் வரலாம். ஆனால், உரிப்பொருள் மட்டிலும் கட்டாயம் வருதல் வேண்டும். உரிப்பொருள் இல்லாவிட்டால் இலக்கியமே இல்லை; முக்கியமாக அகத்துறையே இல்லை. உரிப்பொருள் மாத்திரம் வந்துள்ள பல பாக்களைத் தமிழர்களின் தலைசிறந்த இலக்கியமாகிய திருக்குறளில் காணலாம்.

உள்ளினேன் என்றேன்மற் றென்மறந்தீர் என்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள் [11]

என்ற குறளில் மருதத்திணை உரிப்பொருளாகிய 'ஊடலும் ஊடல் நிமித்தமும்' வந்து அழகு செய்துள்ளமையை உணர்ந்து மகிழ்க.

தொல்காப்பியப் பொருளதிகாரம் வெறும் இலக்கியங்களுக்குக் கூறும் இலக்கணம் மட்டும் அல்ல. அது தமிழர்களுடைய வாழ்க்கை முறைக்கும் இலக்கணம் கூறும் ஓர் ஒப்பற்ற சமுதாய நூல்[12] என்று சொல்லலாம். இப்பொருளதிகாரப் பிரிவினையைச் சற்று எண்ணிப் பார்த்தால் தொல்காப்பியருடைய பரந்த பார்வையும் ஆழ்ந்த கருத்தும் எளிதில் புலனாகும்.

**பொருளதிகாரப் பிரிவுகள் :** உயிர்கள் யாவும் இன்பத்தை நாடுதல் கண்கூடு. உணர்ச்சிகளுள் சிறந்தது இன்ப

11. குறள்-1316.
12. சமுதாய நூல்-Sociological treatise.

உணர்ச்சி. அவ்வின்பம் காரணமாகத் தலைவன் தலைவியர்க்குள் ஒத்த அன்பின் வாழ்க்கையைக் குறிஞ்சி முதலாகவுள்ள ஐந்திணைகளுள்ளும், ஒவ்வாத அன்பினைக் கைக்கிளை, பெருந்திணைகளுள்ளும் அமைத்துக் காட்டுகின்றார் தொல்காப்பியர். அவற்றின் இயல்புகளைப் பொருளதிகாரத்தில் முதலாவதாகவுள்ள அகத்திணை இயல் இயம்புகின்றது. ஒற்றுமையை உணர்த்தும் அகப்பொருள் போலவே, வேற்றுமையைக் குறிக்கும் அறச்செயல்களையும் மறச்செயல்களையும் புறம் என்ற பகுதியில் அடக்கிக் கூறுகின்றார் ஆசிரியர். புறப்பொருளை வெட்சி முதலாகிய ஏழு திணைகளில் பகுத்து விரித்துப் பேசுகின்றார். இந்த இயல்புகளையெல்லாம் இரண்டாவதாகவுள்ள புறத்திணை இயல் ஓதுகின்றது. காதல் வாழ்க்கையை அகப்பொருள் நூலார் களவு என்றும், கற்பு என்றும் இரு கூறிட்டுப் பேசுவர். இரண்டிலும் களவே மிகவும் இன்பம் தரும் பகுதி. ஆகவே, மூன்றாவதாகக் களவியலையும் நான்காவதாகக் கற்பியலையும் தன் நூலில் தொல்காப்பியர் அமைத்திருக்கின்றார். மேற்கூறிய அகம் புறம் பற்றிக் கூறாது ஒழிந்த சில செய்திகளையும் இனிச் சொல்லப் போகும் நான்கு இயல்களில் விடப்படும் செய்திகளையும் கூறுவது பொருளியல் தலைமக்களுடைய செயல்களின் அடிப்படைக் கருத்தையும் இப்பகுதி தெரிவிக்கின்றது. எனவே, பொருளியல் ஐந்தாவதாக வைக்கப்பெற்றிருக்கின்றது. அக வாழ்க்கைக்கும் புற வாழ்க்கைக்கும் உயிராகவுள்ளது மெய்ப்பாடு. சிறப்பாக அஃது அக வாழ்க்கைக்குரிய மனத்தத்துவத்தைக் கூறுவதாக இருந்தாலும் பொதுவாக எல்லா மக்களிடையேயும் தோன்றும் உணர்ச்சிகளைப் பற்றியும் இவ்வியல் ஆராய்கிறது. ஆகவே, மெய்ப்பாட்டியலை ஆறாவதாக வைத்துள்ளார் ஆசிரியர். அன்றாட வாழ்க்கையில் வருவதைத்தான் கவிஞர்கள் உவமையாகச் செய்யுட்களில் கலைத்திறனுடன் எடுத்து ஆள்கின்றனர். எனவே, மெய்ப்பாட்டியலுக்கு அடுத்தபடியாக உவம இயல் ஏழாவதாக வைக்கப்பெற்றிருக்கின்றது. வாழ்க்கையைக் கலைத் திறனுடன் வெளிப்படுத்தச் சாதகமாயிருப்பது கவிதை. உரைநடையில் கூறுவதைவிடச் செய்யுளில் கூறும் பொழுது

வாழ்க்கை கலைத்திறனுடன் மிளிர்கின்றது. அத்தகைய செய்யுள் உறுப்புக்களைப்பற்றிக் கூறும் செய்யுளியலை எட்டாவதாக வைத்திருக்கின்றார் ஆசிரியர். மரபாக வழங்கி வரும் சொற்களைக் கையாண்டால்தான் நல்ல கவிதைகள் பிறக்கும் என்றும், அச்சொற்களை அம்மரபினின்றும் வழாதவாறு பாதுகாக்க வேண்டும் என்றும் கருதிய இலக்கண ஆசிரியர், அத்தகைய செய்திகளைக் கூறும் மரபியலை ஒன்பதாவதாக ஈற்றில் வைத்திருக்கின்றார். எனவே, தொல்காப்பியப் பொருளதிகாரம்—வாழ்க்கையைக் கூறும் கருத்துலகம்—அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல் என ஒன்பது பகுதிகளாக உள்ளது என்பதை நாம் அறிதல் வேண்டும்.

# 3. முப்பொருள் பாகுபாடு

**தொ**ல்காப்பியர் உலகிலுள்ள பொருள்களை முதற் பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்று வகைப் படுத்தி இலக்கணம் கூறுகின்ருர் என்பதை மேலே கண்டோம். முப்பொருள்களின் பிரிவுகளையும் பார்த்தோம். இனி, அவ்வாறு பாகுபாடு செய்யப் பெற்றிருப்பதன் அடிப்படைக் கருத்தை ஒரு சிறிது ஆராய்வோம்.

**இடமும் காலமும் :** ஒரு செயல் செவ்வனே நடைபெறு வதற்கு இடமும் காலமும் இன்றியமையாதவை. இவ் வுண்மையை வள்ளுவப்பெருந்தகை,

> ஞாலம் கருதினுங் கைகூடும் காலம்
> கருதி இடத்தாற் செயின் [1]
>
> [ஞாலம்—உலகம்]

என்று கூறியுள்ளார். இடமும் காலமும் இன்றியமையாமை கருதி அவை முதற்பொருள் என்று தொல்காப்பியரால் வழங்கப்பெற்றுள்ளன. நிலம் இல்லாத இடத்து மக்கள் எவ் வாறு வாழ முடியும்? அவர்களுக்கு வேண்டிய வசதிகள் யாவற்றையும் நிலத்திலிருந்துதானே அடைய வேண்டியிருக் கின்றது? மக்களின் பிறப்பையும் இறப்பையும் பிற செயல் களையும் வரையறை செய்யக் கருவியாக இருப்பது காலந் தானே. தவிர காலமாறுபாட்டால்தானே இவ்வுலகம் செவ்வனே இயங்குகின்றது? இயற்கை அன்னை விளை பொருள்களை விளைத்து உயிர்களைக் காப்பாற்றுவதற்கும், பொருளாதார உலகம் சரியாக இயங்குவதற்கும் முறையே

1. குறள்-484.

காலமாறுபாடும் காலக்கடப்பும் பெருந்துணை புரிகின்றன அன்றோ ?

**நிலப் பாகுபாடு:** முதற்பொருளின் ஒரு பகுதியாகிய நிலத்தினை நான்கு பகுதியாகப் பிரித்துக் கூறுவர் தொல்காப்பியர். அந்த நான்கு பகுதிகளும் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற முறையில் கூறப்பெற்றுள்ளன. 'நானிலம்' என்று கூறும் மரபும் இவ்விடத்தில் கருதற்பாலது. மாரி பொய்க்கும் போது வளங்குன்றி முல்லை நிலமும் குறிஞ்சி நிலமும் விளைவின்றி வெறுந்தரைப் பரப்பாகக் காட்சியளிக்கும் போது அவற்றைப் பாலை என்று பெயரிட்டனர் என்பதை முன்னர்க் கண்டோம். தொல்காப்பியரும் நான்கு நிலத்தைப் பற்றியே கூறுகின்றார்.

மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெரும்புனல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே [2]

[மாயோன் - திருமால்; சேயோன் - முருகன்; வேந்தன்- இந்திரன்.]

என்பது தொல்காப்பிய நூற்பா. தமிழ் நாட்டில் ஐந்தாவது நிலமாகிய பாலை நிலம் இல்லாததால் அதைப்பற்றி ஆசிரியர் கூறவில்லை.

**நச்சினார்க்கினியர் கருத்து:** நானிலத்தை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற முறையில் தொல்காப்பியர் குறித்தற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறும் காரணம் அமைதியுடையது என்று கருதலாம்.[3] ஐந்திணை ஒழுக்கமெல்லாம் இல்லறம்பற்றி நிகழ்வது. கணவன் சொற்படி நடந்து கற்பொடு பொருந்தி வீட்டிலிருந்து கொண்டு இல்லறமாகிய நல்லறத்தில் ஒழுகுவது மகளிரின் இயல்பாதலால் முல்லை முதலில் கூறப்பட்டது; முல்லை

2. அகத்திணை—நூற்பா 5.
3. அகத்திணை—நூற்பா 5—இன் உரை.

என்ற சொல்லுக்கே இருத்தல் என்பது பொருளாகவும் வந்து விட்டது. குறிஞ்சி நில ஒழுக்கமாகிய புணர்தலின்றி இல்லறம் நிகழாது என்பது யாவரும் அறிந்த செய்தி. எனவே, முல்லைக்குப் பின் குறிஞ்சியைக் கூறினர் ஆசிரியர். புணர்ச்சிக்குப் பின்னர் ஊடல் நிகழ்தல் இயற்கையாதலால் அவ்வொழுக்கத்திற்குரிய மருதத்திணையை அடுத்து வைத்தார். மருதம் என்ற சொல்லே ஊடியும் கூடியும் போகம் நுகர்தலைக் குறிக்கும். 'மருதம் சான்ற மருதம் தண்பணை' என்ற சிறுபாணாற்றுப்படை யடிக்கு (வரி 186) நச்சினர்க்கினியர் இப்பொருளை வழங்கியிருக்கின்றார். பரத்தையிற்பிரிவு போலப் பிரிவு ஒப்புமை நோக்கி நெய்தலைக் கடைசியில் வைத்துள்ளார். நெய்தற்பறை இரங்கற்பறையாதலின் நெய்தல் இரக்கத்தைக் குறிக்கின்றது.

**காலப் பாகுபாடு :** முதற்பொருளில் இரண்டாவது பகுதி காலம். காலத்தைக் கூறும் போது பெரும்பொழுதை ஆறாகவும் சிறுபொழுதை ஆறாகவும் பிரித்துக் கூறுகின்றார் ஆசிரியர் என்பதை முன்னர்க் கண்டோம். சிறு பொழுதைக் குறித்துக் கருத்து வேறுபாடும் உண்டு. நச்சினர்க்கினியர், இளம்பூரணர் ஆகியோர் மாலை, யாமம், வைகறை, விடியல், நண்பகல், எற்பாடு என்று ஆறாகக் கொண்டிருக்கின்றனர். அவர்கள் கருத்துப்படி ஒவ்வொரு பகுதியும் பப்பத்து நாழிகை கொண்டவை. ஆசிரியர் சிவஞான யோகிகள் வைகுறு விடியல் என்பது ஒரு பொழுது எனவும், எற்பாடு என்பது விடிந்த பின்னுள்ள காலைப்பொழுதைக் குறிக்கும் எனவும் கொண்டுள்ளார். இதுபற்றி அவர் கூறும் தடை விடைகளை அவருடைய 'முதற் சூத்திர விருத்தி' என்னும் நூலில் விரிவாகக் காணலாம். இவர்கள் யாவரும் சொற்களின் அடிப்படையில் வாதத்தைத் தொடங்கி மலைகின்றனர் என்றே கொள்ள வேண்டும்.

**அளவு கருவிக்கு எட்டாத 'காலம்':** காலம் என்பது கற்பனைக்கு எட்டாத ஒரு பொருள். காலத்தைச் சரியாகக் கணக்கிட முடியாதென்பதைப் பண்டையாசிரியரும் கூறியிருக்கின்றனர். காலம்பற்றி அறிவியல் பெரியார் ஐன்ஸ்டைன் கொண்ட

கருத்து இன்றைய அறிவியலறிஞர்களின் மனத்தையே கலக்கி யிருக்கின்றது. ஏனைய பொருள்களை நேரடியாக அளப்பதைப் போலக் காலம் என்பதை நேரடியாக அளக்க முடியாது. காரணம், அஃது அருவப்பொருள்; ஏனையவை உருவப் பொருள்கள். உருவமற்ற சில பொருள்களும் பொறியுணர்வால் உணரக்கூடியவை. திருவள்ளுவர்,

'நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாள துணர்வார்ப் பெறின்'[4]

என்று நாளின் தன்மையைக் கூறியுள்ளார். அவர் கருத்துப் படி நாள் என்பது காலத்தின் ஒரு கூறு அன்று; அது காலத் தின் ஒரு கூறு போலத் தோன்றுவது; அவ்வளவுதான். கதிரவன், பூமி ஆகியவற்றின் இயக்கத்தால் கணக்கிடப்படுவது, நாள். அறிவியலறிஞர்களின் கருத்துப்படி நாள் என்பது பூமி தன்னைத் தானே ஒரு முறை சுற்றிக்கொள்ள எடுத்துக்கொள்ளும் காலம். இவ்வாறு கணக்கிடப்பட்ட காலத்தையே அறிவியல் மேதை ஐன்ஸ்டைன் ஒப்பு நோக்கிக் (relative) கொள்ளப்பட்டதே யன்றிச் சரியான (absolute) அளவு அல்ல என்று கூறுகின்றார். மேற்கண்ட திருக்குறளுக்கு உரை கண்ட பரிமேலழகரும் இதனை ஓரளவு உணர்ந்து, "காலம் என்னும் அருவப்பொருள் உலகியல் நடத்தற்பொருட்டு ஆதித்தன் முதலிய அளவைகளால் கூறுபட்டதாக வழங்கப்படுவதல்லது தானாகக் கூறுபடாமை யின் "நாள் என ஒன்றுபோல் என்றும்" என்று கூறியிருக்கின்றார் என்பதை ஈண்டு நாம் அறிதல் வேண்டும்.

**காலத்தைப்பற்றி ஐன்ஸ்டைன் கருதுவது:** ஐன்ஸ்டைன் காலத்தைப்பற்றிக் கூறும் கருத்து இவ்விடத்தில் சிந்திக்கற் பாலது. கடிகாரம் அல்லது நாள் காட்டியை[5] வைத்துக் கொண்டு நாம் அனுபவத்தால் காலத்தைப்பற்றிக் கருதுகின் றோம்; கணக்கிடுகின்றோம். இந்தச் சாதனங்களைக்கொண்டு கணக்கிடப்பெறும் கால அளவுகள் எல்லா அண்டங்களுக்கும் உரியவை என்று கூறுதல் தவறு. ஏனெனில், ஞாயிற்றை

4. குறள்—334.
5. நாள் காட்டி. Calendar

நடுவாகக் கொண்டு அண்டங்களின் இயக்கத்தைக் கருதும் (Solar system) திட்டத்தைக்கொண்டு கணக்கிடப்பெற்ற அளவைகள் அவை. நாம் ஒரு மணி என்று கணக்கிடும் கால அளவு பூமி தன்னைத்தானே வான வெளியில் 15 பாகை (டிகிரி) சுற்றி நிகழ்ந்த தூரமே. ஆண்டு என்பது பூமி கதிரவனை ஒரு முறை சுற்றிச் சென்ற தூரமே. புதன் கோளில் வசிக்கும் ஒருவர் காலத்தைக் குறித்துக் கட்டாயம் வேறு விதமான கருத்துக்களைக் (Notions) கொண்டிருக்க வேண்டும். ஏனெனில், அது கதிரவனைச் சுற்ற நாம் கொண்டுள்ள நாட்களில் 88 நாட்கள் ஆகின்றன; அதே காலத்தில் அது தன்னைத் தானே கிட்டத்தட்ட ஒரு முறை சுற்றிக்கொள்கின்றது. எனவே, புதன் கோளிலிருப்பவருக்கு நாளும் ஆண்டும் ஒரே கால அளவுதான்! இம்மாதிரி வானத்தில் தொங்கும் எல்லா அண்டங்களிலும் நாம் கொண்டுள்ள காலத்தைப்பற்றிய கருத்துக்கள் பொருளற்றுப்போகின்றன. 'ரிலேட்டிவிட்டி' என்ற ஐன்ஸ்டைனின் கொள்கைப்படி ஒரு காலத்திட்டத்தில் சம்பந்தப்படாத அறுதியிட்ட காலம் என்பது ஒன்று இல்லை; ஒரு காலத்திட்டத்தில் சம்பந்தப்படாத "ஒரே காலம்" (Simultaneity) என்பதும், "இப்பொழுது" ("Now") என்பதும் பொருளற்ற சொற்கள்; இவற்றை ஒரு சான்றால் விளக்குவோம்.

**பொருளற்ற "இப்போது":** சென்னையிலிருக்கும் ஒருவர் நியூயார்க்கிலுள்ள நண்பர் ஒருவருடன் காலை 9-மணிக்கு ஒரு தொலைப் பேசி மூலம்' (telephone) பேசுவதாகக் கொள்வோம். இந்நிகழ்ச்சியை "ஏக காலத்தில்" இருவரும் பேசுகின்றனர் என்றும் கொள்ளலாம். காரணம் என்னவென்றால், அவர்கள் இருவரும் ஒரே அண்டத்தில் வசிக்கின்றனர். அவர்கள் கடிகாரங்களும் ஒரே வான நூலின் அடிப்படையையொட்டி இயங்குமாறு செய்யப்பெற்றிருக்கின்றன. ஆனால், ஒளி மிக்க சுவாதி நட்சத்திரத்தில் (Arcturus) "இப்போது" என்ன நிகழ்கின்றது என்பதை நிச்சயிக்கத் துணியும் போதுதான் ஒரு சிக்கலான சந்தர்ப்பம் எழுகின்றது. சுவாதி நட்சத்திரம் 38 ஒளியாண்டுகளுக்கு அப்பால் உள்ளது. ஒளிக்கதிர்கள்

ஒரு விநாடியில்[6] 1,86,300 மைல்கள் வீதம் செல்கின்றன. இந்த வேகத்தில் ஓர் யாண்டில் செல்லும் தூரத்தை அறிவியலறிஞர்கள் **ஒளியாண்டு** என்று குறிப்பிடுகின்றனர். சுவாதி நட்சத்திரத்திலுள்ள ஒருவருடன் "இப்போது" வானொலி மூலம் நாம் செய்தித் தொடர்பு கொண்டால், நம்முடைய செய்தி அவருக்கு எட்டுவதற்கு 38 யாண்டுகளாகும்; அது போலவே அவருடைய பதில் நம்மை வந்தடைவதற்கு மற்றொரு 38 யாண்டுகளாகும். நாம் சுவாதி நட்சத்திரத்தை நோக்கி அதை "இப்போது" 1962-இல் பார்க்கின்றோம் என்று சொன்னால், நாம் உண்மையில் காண்பது ஆவிதான் (ghost); அது 1924-இல் சுவாதியிலிருந்து கிளம்பிய ஒளிக்கதிர்கள் நம் பார்வை நாடியைத் தொட்டதால் ஏற்படும் உருவம். "இப்போது" சுவாதி நட்சத்திரம் இருக்கின்றதா என்பதை ஆராயத் துணிந்தால் அதை 2000-ஆம் யாண்டுவரை தெரிந்துகொள்ள இயலாது! காலத்தைப்பற்றிய கருத்து எவ்வளவு வியப்பாக இருக்கின்றது பாருங்கள்.

**கருப்பொருள் :** இடத்திலும் காலத்திலும் தோன்றும் பொருள் கருப்பொருள். அது தெய்வம், உணவு, விலங்குகள், பறவைகள், பறை, தொழில், பண், பூ, நீர் போன்றது. இப் பொருள்கள் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு விதமாக இருக்கும். மலை நாட்டில் இருக்கும் பொருள்கள் வேறு; சமவெளிகளில் காணும் பொருள்கள் வேறு. மலைப்பிரதேசங்களில் காணும் விலங்குகளையும் பறவைகளையும் சாதாரணமாகக் கடலையொட்டிய பகுதிகளில் காண்பது அரிது. அப்பகுதிகளிலுள்ள மக்கள் அவற்றை வைத்து வளர்க்கலாமேயன்றி இயற்கையில் அவை அங்குக் காணப்பெறா. ஒவ்வொரு பிரதேசங்களிலும் கடவுள் வழிபாடு மாறுபட்டிருப்பதையும் நாம் காண்கின்றோம். நாகரிகம் அடைந்த மக்களிடம் இம்மாறுபாடுகள் அதிகம் காணப்பெறாவிடினும் சாதாரண மக்களிடையே இன்றும் இவ்வேற்றுமையை நன்கு காணலாம்.

---

6 விநாடி-Second

**உரிப்பொருள் பாகுபாடு :** பண்டையோர் மக்கட்கு உரிய பொருளை உரிப்பொருள் என்று குறிப்பிட்டிருக்கின்றனர். உரிப்பொருள் மக்கள் வாழ்க்கையையொட்டி இருக்கும்; அவர்கள் வாழும் வாழ்க்கை நெறியே—ஒழுக்கமே—உரிப்பொருள் என்று கூறினும் தவருகாது. உரிப்பொருளைத் தமிழர்கள் ஐந்து பகுதியாகப் பிரித்துக் காட்டியிருக்கின்றனர். ஐந்து திணைக்கும் தனித்தனியாக ஐந்து வகை ஒழுக்கத்தை வரையறை செய்திருக்கின்றனர். திணை என்ற சொல்லுக்கே ஒழுக்கம் என்ற பொருள் உண்டு. ஐந்து வகை ஒழுக்கத்தை ஆசிரியர் தொல்காப்பியர்,

புணர்தல் பிரிதல் இருந்தல் இரங்கல்
ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை
தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே[7]

என்ற நூற்பாவால் குறிப்பிடுகின்ருர். இருத்தல் என்பது பிரிவுற்ற தலைமகன் வருந்துணையும் தலைவி, 'தலைவன் வந்து விடுவான்' என்று ஆற்றியிருத்தல்; அதாவது நம்பிக்கையோடு பொறுத்திருத்தல், இரங்கல் என்பது ஆற்ருமை. ஊடல் என்பது தலைவன் தலைவியரிடையே நேரிடும் சிறு பிணக்கு.

**உரிப்பொருள் இன்றியமையாதது :** ஒரு நாடகத்தைப் பற்றிப் பேசும் பொழுது இன்ன இடம் என்றும், இன்ன காலம் என்றும், இன்ன பாத்திரங்கள் என்றும் ஒவ்வொரு காட்சிக்கும் குறிப்பிடுவர் அறிஞர்கள். அவ்வாறே அகப்பொருள் நிகழ்ச்சிகளுக்கு இந்த முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள்கள் உறுப்புக்களாக அமைகின்றன. ஒவ்வொரு திணைக்கும் தனித்தனியே இவை அமைய வேண்டும் என்று ஆசிரியர் தொல்காப்பியர் குறிப்பிடுகின்ருர். உரிப்பொருள் தான் இவற்றுள் உயிர்நாடியாக இருப்பது; காதல் நாடகத்தின் இயக்கம் இதுதான் என்றுகூடத் துணிந்து கூறிவிடலாம். இவற்றின் முழு விவரங்கள் பின்னர் நன்கு விளக்கப்பெறும். உரிப்பொருளாகிய காதல் நிகழ்ச்சியை இன்ன நிலத்தில் இன்ன பொழுதில் இன்ன பொருள்களைச் சூழ்நிலையாக அமைத்துக் கவிஞர்கள் கவிதையை ஆக்கும் பொழுது இம்

7. அகத்திணை-நூற்பா 16

மூவகைப் பொருள்களும் காட்சியளிக்கும். ஒரு பாடலில் இந்தப் பொருள்கள் அனைத்தும் வரவேண்டும் என்ற வரையறை இல்லை. சில வரவுங்கூடும்; சில வராமல் இருத்தலும் கூடும். உரிப்பொருள் மட்டும் கட்டாயம் வருதல் வேண்டும்.

**இலக்கிய மரபுகள்:** மேற்கூறிய நிலையை ஒருவாறு விளக்குவோம். குறிஞ்சியாகிய நிலத்தில் குறிஞ்சித்திணையின் உரிப்பொருளாகிய புணர்ச்சி நிகழ்வதாகச் சொல்லுவது இலக்கிய மரபு; இப்படியே ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய ஒழுக்கங்களை இணைத்துக் கவிதைகளை இயற்றுவர் கவிஞர்கள். உலக வழக்கில் மலைநாட்டில் மட்டும் காதலர்கள் ஒன்றுபடுவர் என்ற வரையறையைப் பார்க்க முடியாது. வேறு இடங்களிலும் இவர்கள் சந்தித்து ஒன்றுபடுவதும் உண்டு. இதையொட்டி இலக்கிய ஆசிரியர்கள் பிற நிலங்களிலும் பிற ஒழுக்கங்கள் நிகழ்ந்ததாகச் சிறுபான்மை கவிதை புனைவர். இது **உலகியல் வழக்கு;** அஃதாவது உலகத்தார் ஒழுகலாற்றோடு ஒத்து வருவது.

இலக்கியத்தின் சுவையை மிகுதிப்படுத்த இலக்கிய ஆசிரியர்கள் தம் கற்பனையால் பல யுக்தி முறைகளைக் கையாளுவது வழக்கம். அந்த முறையில் புணர்தல் என்ற நிகழ்ச்சிக்கு இயற்கை வளமும் தனிமையும் மிக்க மலை நிலம் ஏற்றது; தனிமை குளிர்காலத்தில் நடுயாமத்தில் இயல்பாக அமைவது. எனவே, குறிஞ்சி நிலத்தில் குளிர்காலத்தில் நள்ளிரவில் குறிஞ்சிக் கருப்பொருள்களின் சூழ்நிலையில் குறிஞ்சி உரிப்பொருளாகிய புணர்ச்சி நடைபெறுவதாகச் சொன்னால் கட்டாயம் நாம் அதன் தனிச் சுவையை உணரலாம். அது போலவே, பாலை நிலத்தில் பிரிவு நிகழ்வதாகச் சொன்னால்தான் சுவை மிகுதியாகத் தோன்றும். கோடைக் காலத்தில், எங்கும் வெப்பம் பொறுக்க முடியாத நடுப் பகலில், மரங்களெல்லாம் வேரோடும் வெம்பி நிழலற்றுக் காட்சியளிக்கும் பாலை நிலத்தில், பருக நீரின்றி வாடும் யானையும் உணவின்றி உழலும் புலியும் காணப்பெறும் சூழ்நிலையில், தலைவியை விட்டுத் தலைவன் பிரிந்ததாகக் கவிதை புனைந்தால், அதில் அவலச் சுவை சிறப்பாக அமையும்.

**நாடக வழக்கு :** இவ்வாறு முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகிய மூன்றும் இணைந்து திறனுடன் ஆக்கப் பெற்ற பாடல்கள் சிறந்தவை. இவ்வாறு சுவைபட வருவன எல்லாம் ஒரிடத்து வந்தனவாகத் தொகுத்துக் கூறுவதை **'நாடக வழக்கு'** என்று தொல்காப்பியர் குறிக்கின்றார். இவ்வாறு கூறுவதைக் கவிதைக்குரிய வேலி என்று நினைத்தல் தவறு. இந்த வரையறைகள் கவிதைகளின் கவினை மிகுதிப் படுத்திக் காட்டும் கூறுகளாகும்.

**கடவுள் நம்பிக்கை :** இறைவன் ஒருவன் உண்டு என்ற உண்மை தமிழர்களின் அசைக்க முடியாத நம்பிக்கை. "தானலாது உலகம் இல்லை, சகமலாது அடிமையில்லை"[8] என்று அப்பர் பெருமான் கூறியதற்கேற்ப, தமிழர்கள் இறையின்றி உலகம் இல்லை என்று நம்பினர். இதனால்தான் தொல்காப்பியர் முதற்பொருளாகிய நிலத்தைக் கூறவந்த இடத்திலேயே தமிழர்கள் இன்றியமையாததாகக் கருதிய கருப்பொருளாகிய தெய்வ வழிபாட்டையும் குறிப்பிட்டனர். மேற்கூறிய 'மாயோன்மேய' என்ற நூற்பாவால்[9] இதனை அறியலாம். பின்னர்க் கருப்பொருளைக் கூறும் போது கூடத் தெய்வத்தையே முதலாவதாகக் கூறியுள்ளமை எண்ணி உணர்தற்குறியது.

8. தேவாரம் அடங்கன் முறை-4552.
9. இந்நூல்-பக்கம்-25:

# 4. ஐந்திணை நெறி

**மூவகை இன்பம் :** இன்பத்தை நல்கும் காமத்தை மூன்று பிரிவாகப் பிரித்து இலக்கண ஆசிரியர்கள் வகைப்படுத்தி யிருக்கின்றனர். ஆடவரிலோ மகளிரிலோ யாரேனும் ஒருவர் மாத்திரம் மற்றொருவர்மீது காதல் கொள்வதாகச் சொல்லு வது ஒரு வகை. வலிய இன்பம் நுகர்தல் மற்றொரு வகை. இந்த இரண்டு வகைகளைக் குறித்துப் பின்னர்க் காண்போம். மூன்றாவது வகைதான் அன்புடைக் காமம் என்பது. இஃது எண்வகை மணங்களுள் **'காந்தருவம்'** என்ற மணத்தினை ஒப்பது; கந்தருவர் என்பார் இசையில் வல்லதொரு தேவ சாதியார். கந்தருவ குமரரும் கன்னியரும் தம்முள் எதிர்ப் பட்டு மனமியைந்து கூடுவது காந்தருவமாகும். அங்ஙனமே தலைவனும் தலைவியும் யாதொரு உள்ளக்குறிப்பும் முயற்சியு மின்றி, ஈண்டுச் செய்த நல்வினைப் பயனால் கொடுப்பாரும் அடுப்பாருமின்றி, ஒரு பொழிலகத்து எதிர்ப்பட்டு மன மியைந்து கூடுவதுதான் அன்புடைக் காமம். காம நிகழ்ச்சி யின்கண் ஒத்த அன்பினராய்க் கூடுதல் நல்வினையான் அல்லது வாராது என்பது பண்டையோர் கொள்கை. தொல் காப்பியர் இதனை,

ஒன்றி உயர்ந்த பாலது ஆணை [1]

என்று குறிப்பிடுகின்றார். காந்தருவ மணத்தினைக் களவியல் உரைகாரர் 'யாழோர் கூட்டம்' என்று கூறுவர். குறிஞ்சி பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்று ஐந்து திணையாகப் பிரித்துப் பேசப்படுவதால் இதனை **ஐந்திணை நெறி** என்றும்

1. களவியல் - நூற்பா 2.

குறிப்பிடும் வழக்கம் உண்டு. திணை என்ற சொல் ஒழுக்கத்தினைக் குறிக்கும். இந்த ஐந்து வகை ஒழுக்கங்களும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற மூன்று வகையான பொருள்களையுடையன. இந்த மூன்று பொருள்களைக் குறித்து முன்னர்க் கண்டோம். இவற்றுள் உரிப்பொருள் தான் மிகவும் முக்கியமானது என்றும், காதல் நாடகத்தின் இயக்கம் அதுதான் என்றும் கூறினேம்.

**காதல் நிகழ்ச்சிகள் - துறைகள் :** மேற்கூறிய ஐந்து திணையிலும் நிகழும் நிகழ்ச்சிகளை முறையே புணர்ச்சி, பிரிவு, இருத்தல், ஊடல், இரங்கல் என்றும் குறிப்பிட்டனர் பண்டைய ஆசிரியர்கள். இப்படி ஐந்து பிரிவாகப் பிரித்தாலும், கதை போலத் தொடர்ந்து வரும் காதல் வாழ்க்கையில் பல கட்டங்கள் இருக்கும். ஒவ்வொரு கட்டத்திலும் பல சிறு நிகழ்ச்சிகள் நிகழக்கூடும். அவற்றைத் **'துறை'** என்று கூறுவர் இலக்கண நூலார். அகப்பொருள் பற்றி வரும் பாடல்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு துறையில் அமைந்திருக்கும். கிட்டத்தட்ட நானூறு துறைகள் அல்லது நிகழ்ச்சிகளை அகப்பொருள் நூல்களில் காணலாம். அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு, கலித்தொகை போன்ற எட்டுத் தொகை நூல்களில் இத்தகைய துறைகளமைந்த பாடல்களைக் காணலாம். இந்தச் சங்க நூல்களில் இத்துறைகள் தொடர்ச்சியாக இருப்பதில்லை ; கலந்தே காணப்பெறும். இவற்றை கதை போலத் தொடர்பு படுத்தித் துறைகளைக் கோத்து, ஒவ்வொரு துறைக்கும் ஒவ்வொரு செய்யுளாக அமைத்துப் புலவர்கள் நூல்களைச் செய்திருக்கின்றனர். அந்த நூல்களைக் **'கோவை'** என்று வழங்குவர். அவற்றை **'அகப்பொருட் கோவை'** என்றும் குறிப்பிடும் வழக்கம் உண்டு. மணிவாசகப்பெருமான் அருளிய **'திருக்கோவையார்'** இவ்வகையான நூல். ஒரே துறையில் அமைந்திருக்கும் பல பாடல்கள் அங்குக் காணப்பெறலாம்; அவற்றில் கூறப்பெறும் நிகழ்ச்சிகளும் ஒரே மாதிரியாகவும் அமைந்திருக்கக்கூடும். என்றாலும், ஒவ்வொரு பாடலும் தனிச்சுவையுடன்,

படிக்கப் படிக்க இன்பம் ஊறும் தன்மையுடன் இருப்பதை அறியலாம்.

**பாடல்களின் சுவை:** இவ்வாறு இருப்பதற்குக் காரணம் என்ன? ஒரே கருத்தைப் பலர் பல விதமாகச் சொல்லலாமல்லவா? முதற்பொருள், கருப்பொருள் இவற்றின் வருணனையில் வேறுபாடுகள் இருக்கலாம்; சொல்லுகின்ற முறையிலும் வேறுபாடு இருக்கலாம். கோதுமையும் சருக்கரையும் நெய்யும் கலந்து செய்வதும் அல்வாதான். அத்துடன் குங்குமப் பூ, ஏலக்காய் முதலிய வாசனைச் சரக்குகளையும் சேர்த்துச் செய்வதும் அல்வாதான். இரண்டும் அல்வாவாக இருந்தாலும் வெவ்வேறு சுவையுடனிருக்கின்றனவல்லவா? இதில் செய்கின்றவர்களின் கைத்திறனும் சேர்ந்தால் அதன் சுவையே வேறுதான். 'அறுசுவை உண்டி' என்று உணவு வகைகளை ஆறு சுவைக்குள் அடக்கித்தான் பேசுகின்றோம். ஆனால், நாம் நுகரும் பண்டங்களில் அந்த ஆறு சுவைகளும் எத்தனையோ வடிவங்கள் கொள்வதை நாம் பார்க்கவில்லையா? அதுபோலவே, காதல் நிகழ்ச்சிகளில் நிகழ்ச்சி ஒன்றேயானாலும் முதல், கருப் பொருள்களின் வேறுபாட்டாலும் சொல்லமைப்புக்களின் வேறுபாட்டாலும் கவிஞர்கள் பல வகையான கற்பனைகளைப் படைத்துக் காட்டுகின்றனர். அதனால்தான் அகப்பொருள் சம்பந்தமான பாக்களை ஏராளமாக அவர்கள் பாடித் தள்ளியிருக்கின்றனர். மேலும் பாடிக் குவிப்பதற்கும் அத்துறை விரிந்து கொடுக்கின்றது.

**ஐந்திணை மாந்தர்:** ஐந்திணை ஒழுக்கத்தில் தலைமக்களாக விளங்குபவர்கள் அறிவும் செல்வமும் உடைய நல்ல குலத்தில் பிறந்தவர்கள். இங்கு எக்காரணத்தாலும் இழிந்த மரபினரைக் காண்டல் முடியாது. ஐந்திணை ஒழுக்கமாகிய புணர்தல், பிரிதல், இருத்தல், ஊடல், இரங்கல் என்பன எல்லா நிலத்து மக்களுக்கும் பொதுவான செயல்களே. என்றாலும், மலை நாட்டில் புணர்தல் நிகழ்வதாகக் கூறுவது இலக்கிய மரபு. இவ்வாறே பாலை நிலத்தில் பிரிதல் நிகழ்வதாகவும், காடு சார்ந்த நிலத்தில் இருத்தல் நிகழ்வதாகவும், வயல்

சூழ்ந்த நிலத்தில் ஊடல் நிகழ்வதாகவும், கடற்கரைப் பகுதியில் இரங்கல் நிகழ்வதாகவும் இலக்கணம் வகுக்கப்பெற்றிருக்கின்றது. இக்கமுறையில் கூறினல்தான் சிறப்பு என்பதை எண்ணியே பண்டைய ஆசிரியர் ஒழுக்கத்தின் பெயர்களையே நிலத்திற்கும் கொடுத்தனர். எடுத்துக் காட்டாக, குறிஞ்சி ஒழுக்கம் நிகழும் இடம் குறிஞ்சி நிலம்; இம்மாதிரியே பிற வற்றிற்கும் கூறப்படும். அந்தந்த நிலத்தில் அந்தந்தச் சூழ்நிலைகளில் அந்தந்த ஒழுக்கந்தான் நடைபெற வேண்டும் என்று வரையறை செய்த கருத்துதான் யாது என்பதை ஆராய்வோம்.

**மலைசார்ந்த இடம் :** ஐந்து திணைக்கும் உரிய பொருளைத் தொல்காப்பியர்,

> புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
> ஊடல் அவற்றின் நிமித்தம் என்று இவை
> தேருங் காலைத் திணைக்குறிப் பொருளே.[2]

என்று குறிப்பிட்டிருக்கின்றார். மலையையும் மலை சார்ந்த இடத்தையும் பண்டையோர் புணர்ச்சிக்குரிய இடமாகத் தேர்ந்தெடுத்திருக்கின்றனர். குறிஞ்சி இயற்கை வளம் செறிந்தது. மஞ்சு சூழ் மலையில் ஆசினியும் அசோகும் மலையை அழகு செய்யும்; தேமாவும் தீம்பலவும் மலைக்குத் தெய்விகக் காட்சியை நல்கும். சந்தனமும் சண்பகமும் மலையை மாண்புறுத்தும். கோங்கும் வேங்கையும் மலைக்கு வனப்பூட்டும். மற்றும் பல மரங்கள் விண்ணைத் தழுவி முத்தமிடும். குறிஞ்சி, கோங்கு, மாதவி, மல்லிகை, முல்லை போன்ற மலர்கள் எம்மருங்கும் மலர்ந்து மணம் பரப்பி மனத்தை ஈர்க்கும்.

மலைப்பகுதிகளில் தேமாங்கனி பழுத்துக் கொத்துக் கொத்தாகக் காட்சியளிக்கும்; வருக்கைப்பலா கொம்புகளில் பழுத்துத் தொங்கும்; வாழைப்பழங்கள் குலை குலையாகப் பழுத்துத்தொங்குவதை அங்குக் காணலாம். ஆண் குரங்கு வெடித்த பலாவின் தீஞ்சுளைகளைக் கடித்துக் கடித்துத் தன் பெண் குரங்குகளுக்கு ஊட்டும். பைங்கிளிகளின் தம் செம்

---

2. அகத்திணை-நூற்பா 16.

பவள வாயால் தேமாங்கனிகளைக் கொத்திக் கொத்தித் துணைக்கும் கொடுக்கும். பொன்னிற வண்டுகள் மலரினை ஊதிக் கொடுத்துப் பெண் வண்டைத் தேன் உறிஞ்சத் தூண்டும். ஆண் யானை மூங்கில்களை ஒடித்துப் பெண் யானைக்குக் கவுள் நிறைபக் கொடுக்கும்.

இத்தகைய குறிஞ்சி நிலச்சோலை பசுமை நிறத்தால், தீந்தேனல், நறுமணத்தால், வண்டொலியால், பசுமையான புல் தரையினல், ஐம்புலன்களுக்கும் இன்பம் அளிக்க வல்ல தாக விளங்கும். இச்சோலையை இன்பம் அளிக்க ஏற்ற சூழ்நிலையாகக் கவிஞன் கற்பனை செய்தல் இயற்கைக்கு ஒத்து இருக்கின்றதல்லவா? ஆகவே, பண்டைய ஆசிரியர்கள் இத் தகைய இடத்தைக் காதலர்கள் சந்தித்து இன்பம் அனுபவிக் கும் இடமாகத் தேர்ந்தெடுத்தனர். குறிஞ்சித்திணையைப் பாடுவதில் **கபிலர்** என்ற சங்கப்புலவர் தலைசிறந்து விளங்கின தாக அவர் அகத்திணை பற்றிப் பாடியுள்ள பாடல்களால் அறிகின்றோம்.

**பாலை நிலம் :** காதலால் கூடிக் கலந்த இருவரது பிரிவு ஒழுக்கத்தினைக் குறிப்பது பாலைத்திணை. பிரிந்து செல்லும் இடத்தின் இடர்ப்பாடுகளை அதிகமாகக் காட்டக் காட்டப் பாட்டின் சுவை பன்மடங்கு அதிகமாகும். எனவே, அதற் கேற்ற நிலைக்களத்தை, சூழ்நிலையைக் கவிஞர்கள் தேர்ந் தெடுக்கின்றனர். கோடைக்காலத்தில் எங்கும் வெப்பம் பொறுக்க முடியாத நடுப்பகலில் மரங்களெல்லாம் காய்ந்து கரிந்து நிற்கும் வெஞ்சுரம்; மழையே இல்லாத கொடிய நிலம், குடி நீர என்பது அங்குக் குதிரைக்கொம்பு. பாலை நிலத்தின் கொடுமையை அசதிக் கோவையாசிரியர் மிக நயமாகக் காட்டு கின்றார். சூட்டினல் அவ் வெஞ்சுரம் எவ்வாறு கொதிக்கும் என்பதை,

> “முத்தமிழ் நூல்
> கற்றார் பிரிவும்கல் லாதார் இணக்கமும்
> கைப்பொருளொன்(று)
> அற்றார் இளமையும் போலக் கொதிக்கும்
> அருஞ்சுரமே.”

என்று கூறியிருக்கும் அருமைப்பாட்டைச் சுவைத்து இன

புறுக. இத்தகைய கொடிய பாலை நிலத்தில் கானலை நீர் என்று மயங்கி யானைகள் அதைப் பருக ஆசைப்படும்; கொழுத்திருந்த யானைகள் இளைத்து நிலத்தை உழும் கலப்பை போல் மருப்பு ஊன்றி நிலத்தில் கிடக்கும். கொடிய வேடர் கள் அங்கு இருப்பர். அவர்கள் கட்டமைந்த உடலையுடைய வர்கள்; புலியின் தோற்றத்தையுடையவர்கள்; சுருண்ட மயிரினையுடையவர்கள்; சுற்றுக்கள் பொருந்திய வில்லை யேந்திய கையினையுடையவர்கள்; வழிப்போக்கர்கள் வரும் சமயம் பார்த்துக்கொண்டு வழிமேல் விழியை வைத்துக் காத்திருப்பவர்கள். அவர்களிடம் பொருள் இல்லாவிட்டா லும் அவர்கள் உடல் துடித்துச் சாதலைக் கண்டு மகிழ்ச்சி கொள்பவர்கள். அத்கைய கொடிய காட்டில் தன் ஆருயிர்க் காதலன் பிரிந்து செல்வதை எண்ணித் தலைவி வருந்துவ தாகப் பாடப்பெறும் பாடல்கள் பிரிவுத்துன்பத்தை மிகைப் படுத்திக் காட்டும்; அவற்றில் அவலச் சுவை சிறப்பாக அமையும். இந்தத் திணையை அமைத்துச் சிறந்த பாடல்களைப் பாடும் **பெருங்கடுங்கோ** என்ற புலவர் **"பாலை பாடிய"** பெருங் கடுங்கோ என்று அடைமொழியுடன் கூடிய பெயருடன் விளங்கி வருகின்றார்.

**காடு சார்ந்த இடம் :** ஊருக்குச் சற்றுப் புறத்தே இருப் பது காடும் காடுசார்ந்த இடமும். காடுகளில் கார்காலத்தில் மேகங்கள் கருக்கொண்டு ஒலித்துக் குன்றும் காடும் குளிரப் பெய்யும்; பெரிய கரிய மயில்கள் தோகையை விரித்துக் கொண்டு ஆடும். குருந்த மரத்திலிருந்துகொண்டு கிளிகள் மகளிர் போலக் கூவும். மழை பெய்த கானிலத்தில் வெப்ப மும் அதிகம் இராது; தட்பமும் மிக்கு இருக்காது. நீரும் நிழலும் மலிந்து கிடக்கும். எம்மருங்கும் முல்லை மலர்கள் பூத்துக் குலுங்கி நிற்கும் ; அவற்றில் வண்டுகள் மொய்த்துக் கொண்டு இன்னிசையை உண்டாக்கும். மான் தன் பிணை யுடன் கூடிப் பள்ளங்களில் நிற்கும் நீரைப் பருகி, இன்புற்றுத் திரியும். முல்லை நிலத்து மக்களாகிய ஆயர்கள் காட்டிடத்தே கன்று காலிகளை மேய்த்துக்கொண்டு, மரநிழலில் தங்கி யிருந்து குழல்களில் இனிய பண்களை இசைத்து ஊதுவர்.

மாலை நேரத்தில் கன்றும் கறவையும் கொண்டு ஆயர்கள் வீட்டிற்குத் திரும்புவர். அவற்றின் கழுத்தில் கட்டியுள்ள மணி அசைந்து அவ்வோசையால் மாலைப்பொழுதின் மாண்பினைக் காட்டி மகிழ்விக்கும். இந்த நிலத்திற்குரிய பெரும்பொழுது கார்காலம் ; சிறுபொழுது மாலை நேரம். இங்குப் பெரும்பாலும் மாலை தொடங்கி நள்ளிரவு முற்றும் மழை பெய்வது இயல்பு. இந்தச் சூழ்நிலையில் தலைவி தன் பிரிவை எண்ணி ஆற்ருது வருந்துவாள் என்று தலைவன் கலக்க முற்றுப் பிறகு தேறித் தெளிவதாகவும், தலைவி தன் கூந்தலில் முல்லை மலர்களையும் சூடாது தலைவன் வந்துவிடுவான் என்று ஆற்றியிருப்பதாகவும், வினை முற்றிய தலைவன் இக்காலம் தனித்திருப்பார்க்கு வருத்தத்தைத் தரும் என்று வீட்டிற்கு விரைந்து வருவதாகவும் பொருள் அமைத்துக் கவிதைகளைப் புனைவர் புலவர்கள்.

**வயல் சார்ந்த இடம் :** வயலும் வயல் சார்ந்த இடமும் மருதம். என்றும் வற்ருத நீரையுடைய ஆறு கால்வாய்களாகப் பிரிந்து பாயும் நிலத்தையுடையது இப்பகுதி. நிலம் விளைபொருள்களைக் குன்ருது நல்கும். இங்கு வாழும் உழவர்கட்கு ஓய்வு நேரம் அதிகம் இருக்கும் ; ஓய்வு நேரத்தை அவர்கள் இன்பத்திலும் களியாட்டத்திலும் கழிப்பர். மணிமேகலை ஆசிரியர் "போகம் புரக்கும் உழவர்" என்று இவர்களைக் குறிப்பிடுகின்ருர். இந்தப் பகுதியில் காணப்பெறும் குளங்களில் நீர் நிறைந்து அதில் செவ்வாம்பலும் தாமரையும் அழகு பெறத் தோன்றும். நீரில் சிறு மீன்கள் துள்ளிப் பாயும். கொக்குகள் கூம்பியிருந்து மீன்களைப் பிடித்துச் செல்லும். எருமைக் கடாக்கள் குளத்துள் பாய்ந்து நீந்தித் தம் களைப்பை ஆற்றிக்கொள்ளும். ஆங்குள்ள செங்கழுநீர் இலைகளையும் உணவாகக் கொள்ளும். ஊர்களில் உள்ள வீடுகளின் முற்றங்களில் கன்றுகள் வரிசையாகக் கட்டப்பெற்றிருக்கும். அவை செங்கழுநீர், நெய்தற்பூக்களைத் தின்னும் ; அவை தின்று மீந்தவற்றை உழுது திரும்பி வரும் எருமைகள் தின்னும். வெட்டவெளியில் மணற்பரப்பில் நெற்சூடு வைக்கப் பெற்றிருக்கும். உழைத்த எருமைகள் மருத மரத்து நிழலில்

படுத்து இருக்கும். நெல் அரிபவரின் பறையொலி கேட்டுப் பறவைகள கலைந்து பறந்து செல்லும். இத்தகைய வளமலிந்த மருத நிலத்தில் வாழ்பவர்களிடையே விலைமகளிருடன் இன்பம் நுகரும் வழக்கம் இருக்கும். இதைக் கேட்ட தலை மகள் தன் கணவன் விட்டிற்கு வருங்கால் ஊடல் கொள்வாள்; அவனுடன் பிணங்கிக்கொள்வாள். அவள் பிணக்கைத் தீர்ப் பதற்கு வாயில்களாகச் சிலர் தோன்றுவர். இவ்வாறு சூழ் நிலையை ஏற்படுத்திக்கொண்டு மனக்களிப்பிற்காக நாடக வழக்காகக் கவிஞர்கள் பாடல்களை அமைப்பர். தலைவன் இரவில் யாதாவது ஒருவினையின் பொருட்டுத் தங்கி காலந் தாழ்ந்து வரினும் தலைவி அவன் 'பரத்தை வீடு சென்றான் என்று படைத்து மொழிந்து ஊடுவதாகவும் கவிதைகள் ஆக்கப் பெறும். இப்பகுதிக்குப் பெரும்பொழுது எது என்பதைத் தொல்காப்பியர் குறிப்பிடவில்லை. எனவே, உரையாசிரியர்கள் பெரும்பொழுது ஆறும் இதற்கு உரியவை என்றே குறிப் பிட்டனர். வைகறை, விடியல் என்ற சிறுபொழுதுகள் இரண்டும் இதற்கு உரியவை.

வைகறை விடியல் மருதம் 3

என்பது தொல்காப்பியம். மேற்கூறியவாறு மருதத்திணைக்கு விளக்கம் கூறினர் இளம்பூரணர். மருதத்திணைபற்றிப் பாடுதலால் சிறப்புற்ற பெயருடையோர் இருவர்; ஒருவர் **மருதம் பாடிய இளங்கடுங்கோ**; மற்றொருவர் **மருதனிளநாகனார்.**

**கடல் சார்ந்த இடம் :** நெய்தல் என்பது கடலும் கடல் சார்ந்த இடமும். நெய்தல் நிலத்தில் பல கானற்சோலைகள் இருக்கும். புன்னை, தாழை, ஞாழல், நெய்தல், பனை முதலிய பல மரங்கள் அங்குச் செறிந்து காணப்பெறும். நாரை, அன்றில், கொக்கு, கடற்காகம் முதலிய பறவைகள் அவற்றில் வாழும். நாரை, கொக்கு, கடலிலுள்ள மீனைக்கொத்தி உண் ணும். கடல் அலை உயர்ந்து தாழ்தல், மிகுந்த துயரம் குறைந்தகாலை ஏற்படும் இரக்கத்தினை ஒத்திருத்தலால் அச் சூழ்நிலையைத் தலைவி கண்ணுறும்போது அவளிடம் இரக்க

3. அகத்திணை—நூற்பா 9.

உணர்ச்சியைத் தோற்றுவிக்கும். இதற்குரிய சிறுபொழுது ஏற்பாடு ஆகையால், அந்நேரம் இவ்விரக்க உணர்ச்சியை மிகுதிப்படுத்திக் காட்டும்.

> எற்பாடு,
> நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்.[4]

என்பது தொல்காப்பியம். எற்பாடென்பது பகற்பொழுதின் பிற்கூறு. தொல்காப்பியர் இதற்கும் பெரும்பொழுது குறிப்பிடவில்லை. ஆனால், உரையாசிரியர்கள் பெரும்பொழுது ஆறினையும் இதற்குரியனவாகக் கொண்டுள்ளனர்.

ஐந்திணை என்பது ஐவகையான ஒழுக்கம். இவ்வைந்தும் மக்கள் கடைப்பிடித்து ஒழுகத்தக்கவை. இவ்வைந்து ஒழுக்கங்களையும், அவை இன்ன நிலத்திற்குரியவை என்பதையும்,

> போக்கெல்லாம் பாலை ; புணர்தல் நறுங்குறிஞ்சி
> ஆக்கஞ்சேர் ஊடல் அணிமருதம் ; — நோக்குங்கால்
> இல்லிருத்தல் முல்லை ; இரங்கல் நறுநெய்தல்
> சொல்லிருத்த நூலின் தொகை.

என்ற பழம் பாட்டால் அறியலாம். இவ்வாறு சீரும் சிறப்புடனும் வாழ்ந்த நம் முன்னையோரின் வாழ்க்கை முறை அறிந்து இன்புறற்பாலது. இத்தகைய திண்ணிய அடிப்படையை எவ்வளவோ சூறாவளியும் பெருமழையும் பேரிடியும் தத்தம் முழுவலியும் கொண்டு தாக்கியும்கூடத் தமிழ் நாகரிகம் என்னும் தனிப்பெருங்கட்டடம் இன்னும் அழிந்தொழிந்து சிதையாமல் நின்று நிலவுகின்றது. அது கிடக்க.

**ஐந்திணை நெறியின் தத்துவம் :** உலகியலில் மேற்கூறிய முறைப்படி நிகழ்ச்சிகள் நடைபெறா ; நூல்களில் அவை தெளிவாகக் காணப்பெறுவது போல உலக வழக்கில் காணப்பெறுவதில்லை. என்றாலும், இந்த ஐந்திணைக்குரிய நிகழ்ச்சிகள் இன்றி இவ்வுலகம் இல்லை ; ஆனால், அவை மாறி மாறிக் காணப்பெறும். இவ்வாறு மாறி மாறி வரும் நிகழ்ச்சிகளைக் கூறும் பாடல்கள் உலக வாழ்க்கையையொட்டி ஆக்கப்பெற்றன என்று கொள்ள வேண்டும். இதற்கும் தொல்காப்பியர் இலக்கணம் அமைத்திருக்கின்றார்.

---

4. அகத்திணை - நூற்பா 10.

நிலைமயக் குறுதலும் கடிநிலை இலவே 5

என்பது தொல்காப்பிய நூற்பா. "இஃது இல்லதெனப் படாது, உலகியலேயாம். உலகியலின்றேல், ஆகாயப்பூ நாறிற்றென்றவழி அது சூடக் கருதுவாருமின்றி மயங்கக் கூறினரென்று உலகம் இழித்திடப்படுதலின் இதுவும் இழிந்திடப்படும். இச்செய்யுள் வழக்கினை நாடக வழக்கென மேற்கூறினர். எவ்விடத்தும் எக்காலத்தும் ஒப்ப நிகழும் உலகியல் போலாது, உள்ளோன் தலைவனாக இல்லது புணர்த்தல் முதலாகப் புனைந்துரை வகையாற்கூறும் நாடக இலக்கணம் போல யாதானுமொரோவழி ஒரு சாரார் மாட்டு உலகியலான் நிகழும் ஒழுக்கத்தினை எல்லார்க்கும் பொது வாக்கி இடமும் காலமும் நியமித்துச் செய்யுட்செய்தல் ஒப்புமை நோக்கிச் செய்யப்பட்டதாகலின்"[6] என்று நச்சினார்க்கினியர் கூறியிருப்பதை நாம் உணர்ந்தால் இவ்வைந் திணை நெறி விளங்கும். அன்றியும், 'இல்லது, இனியது, நல்லது' என்று புலவரால் நாட்டப்பட்டதோர் ஒழுக்கம், என்று இறையனார் களவியல் உரைகாரர் கொண்டது போல் கொண்டாலும் தவறுடையதாகாது.

---

5 அகத்திணை — நூற்பா 14.
6. அகத்திணை — நூற்பா 3—இன் உரை.

## 5. ஒருதலை வேட்கையும் ஒப்பில் கூட்டமும்

எழுவகையாகப் பிரிக்கப்பட்ட இன்பப் பகுதிகளில் ஐந்திணை பற்றி மேலே அறிந்தோம். எஞ்சிய இரண்டு பகுதிகளையும் ஈண்டுக் காண்போம். **ஒன்று,** ஒருபாற் காதல். அதை ஒருதலைக் காமம் என்றும், ஒருமருங்கு பற்றிய கேண்மை என்றும் கூறுவர். சூர்ப்பணகை இராமனைக் காதலித்தது இவ்வகையில் அடங்கும். **இரண்டாவது,** ஒவ்வாக் காதல் ; பொருந்தாக் காமம். ஒருதலை வேட்கையைக் **கைக்கிளை** என்றும், ஒவ்வாக் கூட்டத்தைப் **பெருந்திணை** என்றும் தொல்காப்பியர் குறிப்பர். இவை இரண்டும் தூய்மையான அகப்பொருள் ஆகமாட்டா ; இவை அகத்துக்குச் சிறிது புறமாக இருப்பவை. ஆதலின் இவற்றை இலக்கண ஆசிரியர்கள் அகப்புறம் என்று குறிப்பிடுவது வழக்கம். தாமரையின் புற இதழ் போலவும், வாழைப் பழத்தின் தோல் போலவும் இவை அகப்பொருளில் அமைந்திருக்கின்றன என்று கூறுதல் பொருந்தும் ; அவ்வளவுதான்.

### கைக்கிளை—பெயர்க்காரணம்

கைக்கிளை என்பதை ஒரு பக்கத்தில் கிளைப்பதாகிய அன்பு என்று மேலே குறிப்பிட்டோம். கை என்பது பக்கத்தைக் குறிக்கும் ; கிளை என்பது கிளைத்தல், தோன்றுதல். இளம்பூரணர் கை என்பது சிறுமைபற்றி வரும் என்றும், கிளை என்பது உறவு என்ற பொருளில் வரும் என்றும் கூறுகின்றார். "பெருமையில்லாத தலைமக்கள் உறவு" என்பது இதன் பொருள். கைக்குடை, கையேடு, கைவாள், கைத்தடி, கைக்குழந்தை, கைமாற்று, கையடக்கம், கை

வண்டி, கைக்கடிகாரம் என்ற சொற்கள் அவை குறிக்கும் பொருள்களில் சிறியனவற்றை உணர்த்துதல் ஈண்டு சிந்திக்கற்பாலது. கணவனை இழந்து தனிமையாக இருக்கும் மகளிர்க்குச் சமுதாயத்தில் ஒரு மதிப்பு இல்லாததால் அவர்கள் நிலைமை கைம்மை என்ற சொல்லால் குறிக்கப் பெற்றிருக்கின்றது போலும். எனவே, பெருமையில்லாத ஒழுக்கம் கைக்கிளை என்று குறிக்கப்பெற்றது என்க.

**கைக்கிளை வகைகள் :** ஒத்த அன்பில்லாத ஒருத்தியை ஓர் ஆடவன் காதலித்தலும், அதுபோலவே பெண் ஒருத்தி ஓர் ஆடவனை விரும்புதலும், முற்றிலும் அன்பில்லாத இருவர் ஒருவரையொருவர் விரும்புதலும் கைக்கிளையின்பாற்படும். இக்கைக்கிளையைச் சிறப்புடைய கைக்கிளை, சிறப்பில்லாத கைக்கிளை என இருவகையாகத் தொல்காப்பியர் கூறியுள்ளார். முதலில் சிறப்புடைய கைக்கிளை யாது என்பதைப் பார்ப்போம். காம உணர்ச்சி தோன்றாத இளைய பருவத்தளாய ஒருத்திபால் ஒருவன் காதலுறுதல் சிறந்த கைக்கிளை வகைகளுள் ஒன்றாகும் என்று தொல்காப்பியர் குறிக்கின்றார்.

**காமஞ் சாலா இளமை யோள்வயின்**
**ஏமஞ் சாலா இடும்பை எய்தி**
**நன்மையும் தீமையும் என்(று)இரு திறத்தான்**
**தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்**
**சொல்எதிர் பெறாஅன் சொல்லி இன்புறல்**
**புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே[1]**

[சாலா - அமையாத; ஏமம் - மருந்து; இடும்பை - துன்பம்; புல்லி - பொருந்தி.]

என்பது அவர் கூறும் கைக்கிளை. காமக் குறிப்புச் சிறிதுமில்லாத ஒருத்திபால் காதல் கொள்ளுதல் நகைப்புக்கிடமான செய்கை. அதனால்தான் ஆசிரியர் இதனைச் சிறந்த கைக்கிளையாகப் பேசுகின்றார். இவ்வாறு காமஞ்சாலாத மகள்மேற் கொள்ளும் காதலுக்கு மருந்தே இல்லை. எனவே, அவ்வாறு காதல் கொள்ளும் மகன் மருந்தினால் தீரமுடியாத துன்பத்தை அடைவான் என்று குறிப்பிடுகின்றார். அத்துன்பம் காரண

1. அகத்திணை - நூற்பா 53.

மாக அவளைக் குறை கூறுதலும் நகை விளைவிக்கும் செயலா கும். தன் குறையை உணராதவன் பிறரால் துன்பம் அடை யும் போது தன்னைச் சிறிதும் தவறு இல்லாதவனாக மதிப்பது இயற்கை. காதல் இயல்பை அறியாத கன்னிப்பெண் ஒருத்தியிடம் தன் காதல் துன்பத்தை உரைத்தால் அவள் என்ன பதில் கூற முடியும்? தன் நெஞ்சு மாத்திரம் அறியும் படியாக மெதுவாக மனத்திற்குள் ஏதாவது சொல்லிக் கொண்டாலும் பதில் ஒன்றும் கிடைக்காது. ஆனால், தன் துயரத்தைச் சொற்களால் வெளியிட்டால், அஃது ஒருவாறு அவனுக்கு ஆறுதல் அளிக்கக்கூடும். அன்றியும், அவன் உணர்ச்சி அவனுக்கே நகையும் விளைவிக்கச் செய்யலாம். எனவே, "சொல்லி யின்புறுதல்" என்பதைக் கைக்கிளைக் குறிப்பு என்று கூறினார் ஆசிரியர்.

**நச்சினார்க்கினியர் கருத்து :** ஆசிரியர் நச்சினார்க்கினியர் ஐந்திணை ஒழுக்கம் நிகழ்வதற்கு முன் காதலன் காதலியை விருப்பம் கொள்ளல், அவளை இவள் இன்னான் என்று துணி தற்கு முன் ஐயுறுதல், பிறகு இன்னான் என்று துணிதல், பின்னர் அவளுக்குக் குறிப்பு உரைத்தல் என்ற நான்கு துறைகளையும் கைக்கிளைப் பகுதிகளாகக் கூறுகின்றார்.

முன்னைய நான்கும் முன்னதற்கு என்ப.[2]

என்ற நூற்பாவிற்கு உரை கூறும் போது "முன்னைய நான் கும்" என்ற பகுதிக்கு அவர் கூறும் உரை இது. இவையும் சிறப்புடைய கைக்கிளை என்பது அவர் கருத்து. இவை நான்கும் தலைவியின் வேட்கைக் குறிப்பு தலைவன் அறிவதற்கு முன்னே காதல் மிகுதியால் தலைவனால் கூறப்படுவதால் இவை கைக்கிளையாயிற்று என்பதாக அவர் கூறுகின்றார். ஆசிரியர் இளம்பூரணர் இதற்கு வேறு உரை தருகின்றார். அவர் கருத்துப்படி 'முன்னைய நான்கும்' என்பவை: ஏறு மடற்றிறம், இளமை தீராத்திறம், தேறுதல் ஒழிந்த காமத்து மிகாத்திறம், மிக்க காமத்தின் மாறாகாத்திறம் இவை நான்கும் பின்னால் கூறும் பெருந்திணைக் குறிப்பின் எதிர்

2. அகத்திணை — நூற்பா 55.

மறை. எருத மடல் திறம் என்பது தலைவன் தலைவியை வெளிப்பட இரத்தல். இளமை தீராத்திறம் என்பது, நலம் பாராட்டல். தேறுதல் ஒழிந்த காமத்து மிகாத்திறம் என்பது புணரா விரக்கம். மிக்க காமத்தின் மாறுகாத்திறம் என்பது நயப்புறுத்தல்.

**சிறப்பில்லாத கைக்கிளை:** இனி, சிறப்பில்லாத கைக்கிளைப் பகுதிகள் யாவை எனப் பார்ப்போம். தமிழ் நாட்டில் முல்லை நிலத்தில் வசிக்கும் ஆயர்கள் ஏறு தழுவிய ஆண் மகனுக்குத் தமது பெண்ணை மணஞ்செய்து கொடுப்பது வழக்கம். கொல்லும் திறனுடைய காளையொன்றினைத் தன் உடல் வலியாலும் உள்ள உறுதியாலும் தன் வயப்படுத்தித் தழுவவல்ல ஆண்மகன் ஒருவனுக்குத் தமது பெண்ணை மணம் செய்து கொடுத்தல் அவர்கள் மரபு. இது **'சுயம்வரம்'** என்பதனை ஒக்கும். இராமன் சிவன் வில்லை ஒடித்துச் சீதையை மணந்த நிகழ்ச்சியையும், அர்ச்சுனன் வில்லை வளைத்து நாணேற்றி மீன் பொறியை வீழ்த்திப் பாஞ்சாலியை மணந்ததையும் இதன்பாற்படுத்தலாம். இதனை வட நூலார் **'ஆசுரம்'** என்று குறிப்பிடுவர். "ஆசுரமாகிய இவ்வேறுகோடற் கைக்கிளை, காமப்பொருளாகிய புலனெறி வழக்கில் வருங்கால், முல்லை நிலத்து ஆயரும் ஆய்ச்சியரும் காந்தருவமாகிய களவொழுக்கம் ஒழுகி வரையுங்காலத்து அந்நிலத்தியல்பு பற்றி வரைந்துகொள்வர்" என்ற நச்சினார்க்கினியரின் உரைப் பகுதி இதனை வலியுறுத்தும். முல்லைக்கலியின் முதலிரண்டு பாடல்களாலும் இவ்வழக்கம் நன்கு உணரப்பெறும். இக் கைக்கிளை ஆயர்குல முதல்வனாகிய **கண்ணபிரானாலும்** அக்குல மகளாகிய **நப்பின்னை**யின் பொருட்டு நிகழ்த்தப்பெற்றது என்று அறிஞர் கூறுவர்.

இன்றும் ஏறு தழுவுதல் ஒரு விளையாட்டாக ஆண்டு தோறும் பலவிடங்களில் நடைபெற்று வருவதைக் காணலாம். அதற்கும் மகட்கொடைக்கும் இன்று யாதொரு சம்பந்தமும் இல்லை. ஆனால், சில சமயம் உயிர்க்கொடைதான் நடைபெறுகின்றது! எண்வகை மணங்களுடன் வைத்துப் பேசப்

பெறும் ஆசுரம், இராக்கதம், பைசாசம் என்ற மூன்றினையும் கைக்கிளையாகக் கூறுவர் நச்சினார்க்கினியர்.

முன்னைய மூன்றும் கைக்கிளைக் குறிப்பே[3]

என்பது தொல்காப்பியம். இளம்பூரணரும் இக்கருத்தையே கொண்டுள்ளார். இராக்கதம் என்பது காதலிக்கப்பட்ட பெண்ணை வலிந்து தம் வசப்படுத்தி மணந்துகொள்வது. பைசாசம் என்பது மூத்தாளையும், துயின்றாளையும், கள்ளுண்டு மயங்கினாளையும் கூடுதல். ஆசுரத்தை 'அரும்பொருள் வினை நிலை' என்றும், பைசாசத்தைப் 'பேய் நிலை' என்றும் பேசுவர் களவியலுரைகாரர். இவை மூன்றும் சிறந்தவை அல்ல.

கைக்கிளைச் செய்யுட்களைப் பெரும்பாலும், ஆண்பாலார் தாம் பாடுவர். சிறுபான்மை பெண்பாலாரும் தமது ஒருபாற் காதலைப் பாடுதல் காணப்பெறும். ஒருபாற் காமத்தால் வருந்தும் ஒருவன் மடன்மா ஏறுவல் எனக் கூறுவதும் கைக்கிளை என்றே நச்சினார்க்கினியர் கூறிப் போந்தார். பிற்காலத்தார் மடலேறுவல் எனக் கூறுவது பெண்பாற் கைக்கிளைக்கும் உண்டு எனக் கூறியுள்ளனர். கைக்கிளைக்கண் காதலைத் தானே சொல்லிக்கொள்ளுதலின்றிக் காதலி மாட்டுப் பயன்கொள்ளக் கருதுவதில்லை. அங்ஙனம் பயன் கருதிச் சொல்லப்பட்டால், அதனைப் பெருந்திணையில் சேர்க்க வேண்டும். தலைவன் காதலிக்கப்பட்டாளைத் திருமணம் புரியும் பொருட்டு மடன்மாவேறினால் அது பெருந்திணையாகும். பிற திணைக்கு ஏதுவாய காதலுக்குக் கைக்கிளை தோற்றுவாய் செய்வதால் அதனை ஆசிரியர் தன் நூலில் முதலில் வைத்து நூற்பா செய்துள்ளார்.

'கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப'

என்பது அகத்திணையியலின் முதல் நூற்பா.

**கைக்கிளை — பேரின்பக் கருத்து :** அகப்பொருள் துறைகளுக்குப் பேரின்பக் கருத்து உரைக்கப்பெறுங்கால் இக்கைக்கிளைக்கும் விளக்கம் கூறப்பெறுகின்றது. உயிர்கள்

---

௩. களவியல் — நூற்பா 14.

ஆண்டவனை அறியும் பக்குவம் எய்தாத காலத்திலேயே இறைவன் அவர்களை உய்விக்கக் கருதி அருட்செயல்கள் நிகழ்த்துவதாகத் தத்துவ நூல்கள் கூறும். இந்த அருட்செயல் கைக்கிளை போல்வது என்று கூறுவர் அறிஞர்கள்.

### பெருந்திணை - பெயர்க்காரணம்

ஒவ்வாக் காதலைப் பெருந்திணை என்று மேலே குறிப்பிட்டோம். இஃது ஏனைய திணைகளெல்லாவற்றிலும் பெரிதாதலால் ஆசிரியர் தொல்காப்பியர் இதனைப் **'பெருந்திணை'** என்று குறியிடு செய்தார். எவ்வாறு இது பெரிய திணையாகும் என்பதை நோக்குவோம். எண்வகை மணங்களுள் பிரமம், பிராசாபததியம், ஆரிடம், தெய்வம் என்ற நான்கும் பெருந் திணையின்பாற்படும். பிரம்மம் என்பது, நாற்பத்தெட்டு யாண்டு பிரம்மச்சரியம் காத்து நின்றவனுக்குப் பூப்பெய்திய பன்னிரண்டு ஆண்டுடைய பெண்ணை அணிகலன் அணிந்து தானமாக மணம் செய்துகொள்ளக் கொடுப்பது. பிரசாபததியமாவது, மகள் கோடற்குரிய கோத்திரத்தார் மகள் வேண்டிச் சென்றால் பெண்ணின் பெற்றோர் மறுக்காமல் இயைந்து கொடுப்பது. ஆரிடம் என்பது, பொன் கொம்பும் பொன் குளம்பும் உடைய பசு, காளை இவற்றைச் செய்து அவற்றினிடையே பெண்ணை நிறுத்தி நீர்வார்த்துக் கொடுப்பது. தெய்வம் என்பது, வேள்விக்கு ஆசிரியராய் நின்றார் பலருள்ளும் ஒருவர்க்கு வேள்வித்தீ முன்னர்க் காணிக்கையாக ஒரு பெண்ணைக் கொடுப்பது. இவற்றுள் முதல் மூன்றினையும் முறையே **அறநிலை, ஒப்பு, பொருள்கோள்** என்று களவியலுரைகாரர் குறிப்பிடுகின்றார். இவை யாவும் காதல் உணமை, இனமையை ஆராயாது பிறர் கருத்துப்படி நடைபெறும் மண வகைகள். இந்த நான்கு மணங்களும் மேன் மக்களிடையேதான் அதிகமாக நிகழ்ந்துவருகின்றன. உலக வழக்கிலும் இவற்றைத்தான் அதிகமாகக் காண்கின்றோம். எனவே, கைக்கிளையும் முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என்ற ஐந்து திணைகளும் எண்வகை மணங்களுள் நான்கினைப் பெற, பெருந்திணை மட்டும் ஏனைய நான்கு மணங்

களைப் பெற்று நடத்தலால் இது பெருந்திணை என்று கூறப் பெற்றது. முல்லை முதலாகிய ஐந்து திணைகளும் பெருவழக் காகத் திகழவில்லையோ என்று வினு எழுதல் இயற்கை. அதற்கு விடை இல்லை என்பதுதான். ஏனென்று கேட்கலாம். தலைவன் தலைவி இருவருக்கும் ஒரு தன்மைத்தாய் நிகழும் ஒத்த காதல் உலகில் சிறுபான்மைதான் காணப்படுகின்றது; கொடுப்பாரும் அடுப்பாருமின்றி ஊழ் கூட்டுவிக்க இவர்கள் ஒரு சோலையில் சந்தித்துத் தாமாக மணந்துகொள்ளுவதில்லை. பெரும்பான்மையான மணங்கள் பெற்ரேர்களால்தாம் நிச்சயம் செய்யப்பெற்று நடைபெறுகின்றன. எனவே, ஒத்த காமம் அருகியல்லது பெருவழக்கில் நிகழாது என்பது பெறப்படும்.

மேற்கூறிய நான்குவகை மணங்களும் தமிழ் நாட்டிற்கு உரியனவல்லவாதலின், அவற்றைத் தொல்காப்பியனுர் பெருந் திணை என்று குறிக்கவில்லை. உரையாசிரியர்கள்தாம் அவற்றை விதந்து ஓதுகின்றனர். பெருந்திணையைப்பற்றித் தொல்காப்பியர்,

> ஏறிய மடல்திறம் இளமை தீர்திறம்
> தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்
> மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
> செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே[4]
>
> [தேறுதல் - தெளிதல்]

என்று குறிப்பிடுகின்ருர். மடல் ஏறிய திறம், இளமை தீர்ந்த திறம், தெளிதல் இல்லாத காமத்து மிகுதிறம், மிக்க காமத்து மிடல் என்ற நான்கு செயல்களும் பெருந்திணைக்கு உரியவை என்பது ஆசிரியரின் கருத்தாகும்.

**மடலேறுதல்:** மடலேறுதல் தலைவன்பாலுள்ள மிகுந்த காதலை நிறைவேற்றுவதற்கு இடையூறு ஏற்பட்ட காலை நிகழ்வது. மடல் ஏறுதல் என்பது, பனங்கருக்காற் செய்த குதிரைமேலேறுதல். கன்னிப்பெண் ஒருத்தியைக் காதலித்த ஒருவன், அவளைப் பெற இயலாத போது, நாற்சந்தியில் மடலேறுவான். உடம்பெங்கும் நீறு பூசித் தன் கையால்

4. அகத்திணை-நூற்பா 54.

எழுதிய காதலியின் ஓவியத்தைக் கையிலே பிடித்துக்கொண்டு, அதன்கண்ணே தன் கருத்தை நிறுத்தி, தன் உடம்பிற்கு நேரிடும் ஊறுகளைப் பொருட்படுத்தாது மடல் ஏறி நிற்பான். அந்நிலையில் அவனைக் காண்பவர்கள் சோதனை தர முடியுமா என்று கேட்பர். அவன் அதற்கிசைந்து குதிரையை எழுப்பிப் பான். அப்போது பனங்கருக்குப்பட்ட அவன் உடலினின்றும் சுரக்கும் இரத்தம் வெண்ணீராகத் (சுக்கிலம்) தோன்றின் அவன் விரும்பின மாதினை அவனுக்கே மணம் செய்விப்பர். வெண்ணீர் தோன்ருது குருதியே தோன்றினல் 'அவனை அவர் கள் தண்டிப்பர்.* இங்குக் காதலிக்குச் சிறிதும் அவன்மீது விருப்பம் இல்லாது இருக்குமானுல், அது கைக்கிளையாகும். அங்ஙனமின்றி, அவள் உடன் போக்கிற்கு இயலாமை நேரிடும் போதும், காதலின் விழைவு அளவுகடந்து இருக்கும் போதும் மடலேறுதற்குக் காரணமானுல், அது பெருந்திணையாகும். காதல் ஒவ்வாக்காலை நிகழும் வரைபாய்தல் முதலிய தற் கொலைச் செயல்களும் இதனுள் அடங்கும்.

**வேறு பெருந்திணை நிகழ்ச்சிகள் :** செவ்விய வாழ்க்கை நடத்துவதற்குரிய பருவமில்லாதார் கலந்து நடத்தும் வாழ்க்கையும் பொருந்தா இயல்புடையது. இதையே ஆசிரியர் 'இளமை தீர்திறம்' என்று குறிப்பிட்டார். இளம்பூரணர் இது மூவகைப்படும் என்று கூறுகின்ருர்: முதுமைப் பருவம் எய்திய தலைமகன் இளமைப் பருவமுடைய நங்கையை மணத்தலும், அங்ஙனமே முதுமைப்பருவம் எய்திய தலைமகள் இளைஞனைத் திருமணம் புரிந்துகொள்ளலும், இவ்விருவரும் இளமைப் பருவம் நீங்கின பிறகும் அறத்தின்மேல் மனத் தினைச் செலுத்தாது காமத்தின்மேல் கருத்தினைச் செலுத்த லும் ஆகியவையாகும் இவை. இம்மூன்றினையும் இன்று நாம் வாழ்க்கையில் காண்கின்ருேம். பிள்ளைப்பேறு வாய்க்கப் பெருத செல்வரும், முதல் மனைவியை இழந்தோரும் தாம் முதுமை எய்தினும் இரண்டாந்தாரமாக மணம் புரிந்து கொள்வதும், முதுமைப் பருவம் எய்திய ஒருத்தியும் கட்டிளங்

*இஃது உடலியல் உண்மைக்குச் சிறிதும் ஒவ்வாது என்பது உணரத்தக்கது.

காளே ஒருவனும் 'கள்ள நட்பு' கொண்டிருத்தலும், பேரறிஞர் **பெர்னுட் ஷா** போன்றவர்களும் இளமைப் பருவம் நீங்கின பிறகும் திருமணம் புரிந்துகொள்வதும் இன்று நாம் கண்கூடாகக் காஞுறும் நிகழ்ச்சிகளன்ருே? காதல் உணர்ச்சி மிகுதியாகும் போது தெளிவடையாது கலங்கும் தன்மை பெரும்பான்மை மகளிரிடந்தான் காணப்பெறும். இதுவே 'தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்' என்பது. காதலன் அளவு கடந்த வேட்கையால் காதலியை வலிதின் மணந்து கொள்ளக் கருதிய செயல்தான் 'மிக்க காமத்து மிடல்' என்பது. இளம்பூரணர் இதனே "ஐந்திணேக்கண் நிகழும் காமத்தின் மாறுபட்டு வருவது" என்று குறிப்பிடுவர். மேலும் அவர், "அஃதாவது, வற்புறுத்துந் துணேயின்றிச் செலவழுங்குதலும், ஆற்றருமை கூறுதலும், இழிந்திரந்து கூறுதலும், இடையூறு கிளத்தலும், அஞ்சிக் கூறுதலும், மனேவி விடுத்தலிற் பிறள்வயிற் சேறலும், இன்னேரன்ன **ஆண்பாற்கிளவியும்** ; முன்னுறச் செப்பலும், பின்னிலே முயல்தலும், கணவனுள்வழி இரவுத்தலேச் சேரலும், பருவம் மயங்கலும், இன்னேரன்ன **பெண்பாற்கிளவியும்** ; குற்றிசையும், குறுங்கலியும் இன்னேரன்ன பிறவுமாகி ஒத்த அன்பின் மாறுபட்டு வருவன எல்லாம் கொள்ளப்படும்.....மெய்ப்பாட்டியலுள் 'இன்பத்தை வெறுத்தல்' (மெய்ப்பாடு - நூற்பா-22) முதலாக நிகழ்பவை பொருளாக வருங்கிளவியும் இதன் பகுதியாகக் கொள்க" என்று கூறும் உரைப்பகுதி[5] இதனேத் தெளிவாக்கும். இச்செயல் பெரும்பான்மை ஆடவரிடத்துத்தான் காணப்பெறும். நச்சினர்க்கினியர் கருத்துப்படி மேற்கூறிய பெருந்திணேச் செயல்கள் நான்கும் சிறப்புடைய பெருந்திணே ஆகா.

'பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே' [6]

என்ற நூற்பா பகுதிப்படி பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம் ஆகிய நான்குமே சிறப்புடைய பெருந்திணே என்பது அவ்வாசிரியரின் கருத்து. 'ஏறிய மடன்மா'

5. அகத்திணே - நூற்பா 54 இன் உரை
6. களவியல் - நூற்பா 14.

முதலியவற்றைப் 'பெருந்திணைக் குறிப்பே' எனக் கூறி, ஈண்டுப் 'பெருந்திணை பெறுமே' என்றார், அவை சிறப்பில், இவை சிறப்புடைய என்றற்கு'' என்பது அவர் கூறும் உரை.[7]

**பெருந்திணை—பேரின்பக் கருத்து :** இறைவன் திருவடிகளை அடையப்பெறாது அவற்றை நாடி நிற்கும் அடியார்களின் நிலையைப் பெருந்திணையுடன் ஒப்பிடுவர் சமய நூலார். "தீயில் வீழ்கிலேன் திண்வரை யுருள்கிலேன்,"[8] என்ற திருவாசகப் பகுதியை இதற்குச் சான்றாகக் கொள்ளலாம். கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் நிலம், பொழுது இவற்றைத் தொல்காப்பியர் விதந்து ஓதவில்லை. எனவே, இவற்றிற்கு இடமும் காலமும் இல்லை என்று அறிதல் வேண்டும். அஃதாவது, எல்லா நிலமும் எல்லாக் காலமும் இவற்றிற்கு வழங்கும். முறையற்ற காதலுக்கு வரையறையொன்றும் தேவையில்லை என்று ஆசிரியர் தொல்காப்பியனார் கூறாதொழிந்தனர் போலும். அஃது எல்லா நிலத்திலும் எல்லாக் காலத்திலும் நடைபெறக்கூடியது என்று கொள்ளினும் இழுக்கில்லை என்க.

**இருதிணைகளையும் வாழ்க்கையில் காணல் :** கைக்கிளை பெருந்திணைகளில் தலைமக்களாக வருவோர் உயர்குலத்து மக்கள் அல்லர். பெரும்பாலும் இழிந்தோரிடத்தில்தான் அவ்வொழுக்கங்கள் இருப்பதாகக் கவிதைகள் புனையப் பெறும். அறத்தில் வழுவாமலும் பொருளில் வழுவாமலும் இன்பத்தில் வழுவாமலும் நடத்தல் மேன்மக்களால்தான் முடியும். ஆனால், இன்று சமூகத்தில் மேன்மக்களாகக் கருதப்பெறும் மக்களிடம் எத்தனையோ இழிவான செயல்கள் நடைபெறுகின்றன. அவையெல்லாம் இன்றைய சமூக அமைப்பின் 'நாகரிகப் போர்வையால்' மூடப்பெறுகின்றன. இத்தகைய செயல்கள் எந்தக் காலத்திலும் மக்களிடம் காணப்படத்தான் செய்யும். எனவேதான், நாடக வழக்காகப் புனையப்பெறும் இலக்கியங்களில் உலகியல் வழக்கை

7. களவியல் - நூற்பா - 14 இன் உரை.
8. திருவாசகம் - திருச்சதகம் 39.

யொட்டி ஒரு சில கைக்கிளை, பெருந்திணைப் பாடல்கள் பாடப் பெற்றுள்ளன. சங்க இலக்கியங்களிலும் இத்தகைய பாடல்கள் ஒரு சில காணப்படுதல் இக்கருத்துப் பற்றி எழுந்தவையே என்று கொள்ளுதல் அமைதியாகும்.

**இவ்விருதிணைகட்கும் உரியோர்:** நான்கு நிலங்களிலும் வாழும் உயர்ந்தோர் யாவரும் ஐந்திணை நெறியில் அமைந்த அகவொழுக்கத்திற்குரியர் என்று தொல்காப்பியனார் குறித்துள்ளதைப் போலவே கைக்கிளை, பெருந்திணை ஆகியவற்றிற்கும் உரியவர்களைக் குறிப்பிட்டுள்ளார். அடியோரும், வினைவலரும், ஏவல்மரபின் ஏனோரும் ஐந்திணையொழுகலாற்றிற்கு உரியரல்லரென்றும், அவற்றின் புறத்தனவாகிய கைக்கிளை, பெருந்திணைக்கே உரியரென்றும் அவர் கூறுவர். இதனை,

> அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்
> கடிவரை இலபுறத் தென்மனூர் புலவர். 9
>
> ஏவல் மரபின் ஏனோரும் உரியர்
> ஆகிய நிலைமை அவரும் அன்னர் 10

என்று கூறுவர் ஆசிரியர் தொல்காப்பியனார். தாமே பொருளீட்டி வாழ்க்கை நடத்துதற்குரிய வினைத்திறமின்றிப் பிறர்பால் தாழ்ந்து, தம்முணர்வின்றித் தொண்டு செய்தொழுகுவோர் அடியோர். தம் உணர்வு மிகுதியால் தாமே ஒரு தொழிலைச் செய்து முடிக்கவல்லவர் வினைவலர். தாமாக ஒன்றைச் செய்யாது, பிறர் இத்தொழிலை 'இவ்வாறு செய்க!' என ஏவினால் அவர் ஏவிய வண்ணம் செய்யும் இயல்புடையோர் ஏவல்மரபின் ஏனோர். "இவர் அகத்திணைக்கு உரியரல்லரோவெனின், அகத்திணையாவன அறத்தின் வழாமலும், பொருளின் வழாமலும் இன்பத்தின் வழாமலும் இயலல் வேண்டும்; அவையெல்லாம் பிறர்க்குக் குற்றேவல் செய்வார்க்குச் செய்தல் அரிதாகலானும், அவர் நாணும் குறைபாடுடையராகலானும், குறிப்பறியாது வேட்கை வழியே சாரக் கருதுவராகலானும், இன்பம் இனிது நடத்துவார் பிறரேவல் செய்யாதார் என்பதனாலும் இவர் புறப்

9. அகத்திணை - நூற்பா 25. 10. ஷெ-நூற்பா 26.

பொருட்கு உரியவராயினர் என்க'' என்ற இளம்பூரணரின் உரை இதனைத் தெளிவாக்கும். சில சமயம் அகனைந்திணைக் குரிய தலைமக்களும் கைக்கிளைப் பெருந்திணைக்கு உரியவ ராவர். "உரியராயினவாறு அகம் பொருள் இன்பங்கள் வழுவ மகளிரைக் காதலித்தலான் என்றவாறாயிற்று'' என்ற உரை யாசிரியரின் உரைக்குறிப்பு இதனை வலியுறுத்தும்.

மேற்கூறிய நிலையில் வைத்து இன்றைய உலகில் நடை பெறும் இன்ப நிகழ்ச்சிகளை ஆராய்ந்தால் தொல்காப்பியனர் கருத்துப்படி உயர்ந்தோர் யாவர், இழிந்தோர் யாவர் என்பது தெளிவாகப் புலனாகும். இந்த எழுதிணை வழக்குகளையும் அறியும் போது ஒவ்வொருவரும் தத்தம் அக வாழ்க்கையை உயர்ந்த குறிக்கோள் நிலையில் நடத்தத் திருத்தி அமைத்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் கட்டாயம் ஏற்படத்தான் செய்யும்.

மகளிரை அஃறிணைப்பொருளாகிய உடைமை போலக் கருதிப் பிறர்பால் கேட்டுப் பெறுதலும், கொடாராயின் சுற்றத்தார்க்குத் தெரிந்தோ தெரியாமலோ வன்மையினல் கவர்ந்து கூடுதலுமான செயல் முறைகளை மணமெனக் கூறும் வழக்கம் தமிழர்களிடத்தில் இல்லை. ஆகவே, இத்தகைய பொருந்தா மணமுறைகளுக்குத் தமிழ் நூல்களில் சான்று காணல் அரிது. 'அன்பொடு புணர்ந்த ஐந்திணை' என்று ஆசிரியர் தொல்காப்பியர் கூறியுள்ளனராதலின், அதற்கு முன்னும் பின்னும் கூறப்பெற்ற ஒருதலைக் காமமாகிய கைக்கிளையிலும், ஒவ்வாக் காமமாகிய பெருந்திணையிலும் இருவர்பாலும் ஒத்த அன்பினைக் காண்டல் அரிது என்பதை உணர்தல் வேண்டும். இத்தகைய பொருத்தமற்ற கூட்டுறவு கள் எந்நாட்டிலும் எக்காலத்திலும் காணப்பெறுபவையே. பொருந்தாத செயல்களைக் குறிப்பாகச் சுட்டி விலக்கியும், பொருத்தமுடைய நற்செயல்களை வெளிப்படையாக எடுத் துரைத்து விளக்கியும் மக்களை நல்வழிப்படுத்துவதே சிறப் புடைய நூலின் குறிக்கோளாகும். இதனை உளங்கொண்டே ஆசிரியர் தொல்காப்பியனர் தம் நூலில் அன்பின் ஐந் திணையை விரிவாகவும், ஏனைய இரண்டினைக் குறிப்பாகவும் விளக்கியுள்ளார் என்பதை நாம் உய்த்து உணர வேண்டும்.

# 6. ஐந்திணை உலக மாந்தர்

தமிழர்கள் காதலை மிகமிகத் தூய்மையானதாக வைத்துப் போற்றினர். அவர்கள் ஐந்திணை நெறியாகப் படைத்துக் காட்டும் காதல் இவ்வுலக மாந்தர்களிடையே இருக்கிறதா? இருக்க முடியுமா? என்று நாம் ஐயப்படக்கூடியதாக இருக்கின்றது. ஆம்; உண்மைதான். அகவுலகில் புலவர்கள் படைத்துக்காட்டும் நிகழ்ச்சிகள் அத்தனையும் பொய்யும் அல்ல, உண்மையும் அல்ல என்பதுதான் தொல்காப்பியரின் கருத்து; அப்படித்தான் அவர் இலக்கணமும் செய்திருக்கின்றார்.

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்[1]

என்பது அவர் காட்டும் அகப்பொருள். புனைந்துரை வகையாகச் சுவைபட வருவன எல்லாவற்றையும் ஓரிடத்து வந்தனவாகத் தொகுத்துக் கூறுதலை **'நாடக வழக்கு'** என்று கூறுவர். இந்நாடக வழக்கை, "செல்வத்தானும் குலத்தானும் ஒழுக்கத்தானும் அன்பினானும் ஒத்தார் இருவராய்த் தமரின் நீங்கித் தனியிடத்து எதிர்ப்பட்டார் எனவும், அவ்வழிக் கொடுப்போருமின்றி அடுப்போருமின்றி வேட்கை மிகுதியாற் புணர்ந்தார் எனவும், பின்னும் அவர் களவொழுக்கம் நடத்தி இலக்கண வகையான் வரைந்தெய்தினர் எனவும், பிறவும் இந்நிகரனவாகிச் சுவைபட வருவனவெல்லாம் ஒருங்கு வந்ததாகக் கூறுதல்" என்று இளம்பூரணர் உரைப்பர்.[2] இதையே நச்சினார்க்கினியரும் "உலகத்தோடு

1. அகத்திணை - நூற்பா 56.
2. அகத்திணை நூற்பா 56 இன் உரை. (இளம்)

நன்மை பயத்தற்கு நல்லோர்க்குள்ளனவற்றை ஒழிந்தோர் அறிந்தொழுகுதல் அறமெனக் கருதி அந்நல்லோர்க்குள்ளன வற்றிற் சிறிது இல்லனவும் கூறுதலின்றி யாண்டும் எஞ் ஞான்றும் இல்லன கூறுர் என்றற்கன்றே நாடகம் என்னுது வழக்கு என்பாராயிற்று''[3] என்று கூறி யிருப்பதையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். **'உலக வழக்கு'** என்பது, உலகத்தார் ஒழுகிவரும் ஒழுக்கத் துடன் ஒத்துவரும் நிகழ்ச்சிகள். இந்த இரண்டு வகையும் கலந்து வருவதுதான் 'பாடல் சான்ற புலனெறி வழக்கம்;' புலவர்கள் படைத்துக் காட்டும் அகப்பொருள் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகள். இந்த இரண்டும் கலந்து வருவதைச் **'செய்யுள் வழக்கு'** என்று குறிப்பிடுவதும் உண்டு.

**அகப்பொருள் மாந்தர்:** இந்த அகப்பொருள் உலகில், சிறப்பாக ஐந்திணை நெறியில், நாம் காணும் மாந்தர்களைப் பற்றித் தெரிந்துகொள்வது மிகவும் இன்றியமையாதது. "இல்லது, இனியது, நல்லது'' என்று புலவர்களால் நாட்டப் பெற்ற இந்த அகனைந்திணை ஒழுக்கத்தில் ஒழுகுபவர்கள் தலை மகனும் தலைமகளும் ஆவர். இவர்கள் ஒழுக்கம் செவ்வி தாக நடைபெறுவதற்குத் துணையாக நிற்பவர்கள், பல சந் தர்ப்பங்களில் அவ்விருவரும் சந்திக்க வாயில்களாக நின்று உதவுபவர்கள், பதினல்வர் ஆவர். அவர்கள் தோழி, நற்ருய், செவிலி, பாங்கன், பார்ப்பார், பாணன், விறலியர், அறிவர், பரத்தையர், கண்டோர், கூத்தர், இளையர், விருந்தினர், தேர்ப்பாகன் ஆகியோர். தலைவனும் தலைவியும் இலட்சிய வாழ்வு வாழ்வதற்கு இவர்கள் துணைபுரிகின்றனர். இவர் களுள் களவுக் காலத்தில் வாயில்களாக இருப்பவர் யாவர், கற்புக் காலத்தில் அங்ஙனம் இருத்தலுக்கு உரியவர் யாவர் என்றெல்லாம் தொல்காப்பியர் வரையறைப்படுத்திப் பேசு வர். அவற்றைப் பின்னர்க் காண்போம். இவர்கள் ஒவ்வொரு வரைப்பற்றியும் ஓரளவு அறிந்துகொண்டால்தான் கவிஞர் கள் படைத்துக்காட்டும் இலட்சிய வாழ்வு நன்ருக விளங்கும்; அவர்கள் கூறும் அகப்பொருள் உலகத்தில் நன்ருக உலவ

3. அகத்திணை-நூற்பா 53-இன் உரை (நச்.)

முடியும்; ஒவ்வொரு நிகழ்ச்சியின் அடிப்படைக் கருத்துக் களும் தெளிவாகப் புலனாகும்.

**தலைமகன் :** தலைமகன் என்பான் கல்வி, அறிவு, ஒழுக் கங்களால் சிறந்தவன்; வழிவழியே வரும் உயர் குடியில் பிறந்தவன்; பெருஞ்செல்வத்தினன். இவனும் தலைவியும் ஒருயிரும் ஈருடலும் போன்று நட்பினை யுடையவர்கள். இவர் கள் தொடர்பு பிறவிதோறும் தொடர்ந்து வருவதாகக் கூறப் பெறும். இதனைத் தொல்காப்பியர்,

> ஒன்றே வேறே என்றுஇரு பால்வயின்
> ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்.[4]

[பால்-ஊழ்; பாலது ஆணை – ஊழின் நியதி.]

என்று சிறப்பிக்கின்றார். **'மகன்'** என்ற சொல் வெறும் ஆண்மகனை மாத்திரம் குறிக்கும் சொல் அன்று; நல்லூழின் பெருக்கால் எய்தலாகும் எல்லா உயர்வுகளும் ஒருங்கு வாய்க் கப்பெற்ற பெருந்தகையை மட்டிலும் குறிப்பிடும் சொல் அது. இத்துணைச் சிறப்பு வாய்ந்த விழுமிய பெயருடன் 'தலை' என்ற அடைமொழியும் சேர்ந்தால், இத் 'தலைமகன்' என்ற பெயரால் குறிப்பிடப்பெறும் தலைவர்களின் பெருமை களை நாமே எண்ணிப் பார்த்துக்கொள்ள வேண்டியதுதான். இத்தகைய தலைமகனுடைய இலக்கணத்தைத் தொல்காப் பியம்,

> பெருமையும் உரனும் ஆடூஉ மேன.[5]

[ஆடூஉ மேன - தலைவன் கண்ணே உள.]

என்று பேசுகின்றது. பெருமை என்பதற்கு, அறிவு ஆற்றல் புகழ் கொடை ஆராய்ச்சி பழிபாவங்கட்கு அஞ்சுதல் ஆகிய பெருமைக்குரிய குணங்கள் என்றும், உரன் என்பதற்குக் கடைப்பிடியும் நிறையும் கலங்காது துணிதலும் முதலிய வலி மையின் பகுதி என்றும் நச்சினார்க்கினியர் கூறுவர். இடையூறு வந்த காலத்தில் நெஞ்சமிழந்து வெகுள்தலும் இன்பம் வந்தடை யும் போது மகிழ்தலும் போன்ற எளியோரிடம் காணப்பெறும் குணங்களின்றி எப்போதும் ஒரே பெற்றியினராக இருக்கும்

4. களவியல்—நூற்பா 2.
5. களவியல்—நூற்பா 7.

பெருமையினை உடையவர்கள் இவர்கள். களவொழுக்கத்தின் போது இவர்களிடம் இப்பெருமையும் உரனுமாகிய குணங் கள் ஒளிவிட்டுத் திகழ்வதைக் காணலாம்.

அகப்பொருள் நூல்களில் தலைவன் பதினாருட்டைப் பிரா யத்தினனாகக் கூறப்பெறுவான். இறையனார் களவியலுரை யாசிரியர் அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்பவற்றைத் தலைமகனது குணங்களாகக் கூறுவர். **அறிவு** என்பது, எப் பொருளாயினும் அப்பொருட்கண் நின்று அம்மெய்ம்மையை அறிவது. **நிறை** என்பது, காப்பன காத்துக் கடிவன கடிந்து ஒழுகும் ஒழுக்கம். **ஓர்ப்பு** என்பது, ஒரு பொருளை ஆராய்ந்து உணர்தல். **கடைப்பிடி** என்பது கொண்ட பொருள் மறவாமை.[6]

**தலைமகள் :** அகப்பொருள் நூல்களில் காணப்படும் தலைமகளைக் குறித்துத் தொல்காப்பியர் பல இடங்களில் பரக்கக் கூறியிருக்கின்றார். ஓரிடத்தில்,

> "கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்
> மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்
> விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்
> பிறவும்"[7]

என்பவை தலைமகளுடைய குணங்களாகக் குறிப்பிடப்பெற் றுள்ளன. கற்பு என்பது, கணவன் முதலியோர் கற்பித்த நிலையில் திரியாத நல்லொழுக்கம். காமம் என்பது, அன்பு. நற்பால் ஒழுக்கம் என்பது, தன் குலத்திற்கு ஏற்றவாற்றான் ஒழுகும் ஒழுக்கம். மெல் இயற்பொறை என்பது, மெல் என்ற நெஞ்சினராய்ப் பொறுக்கும் பொறை நிறை என்பது, மறைக்கக்கூடிய செயல்களைப் பிறர் அறியாதவாறு மறைக்கக் கூடிய நெஞ்சு. வல்லிதின் விருந்து புறந்தருதல் என்பது, வறு மையையோ செல்வத்தையோ கருதாது இயன்றவரை விருந் தினரைப் பாதுகாத்து அவர்களை மனம் மகிழ்வித்தல். சுற்றம் ஓம்பல் என்பது, தொடர்புள்ள மக்களைப் பாதுகாத்து, அவர் கள் உண்டபின் தான் உண்டல். அகப்பொருள் நூல்களில்

6. இறையனார் களவியல்—நூற்பா 2-இன் உரை.
7. கற்பியல—நூற்பா 11

தலைமகள் பன்னீராட்டைப் பிராயத்தளாய்க் குறிக்கப்பெறு வாள். நாண், மடம், அச்சம், பயிர்ப்பு என்பவற்றை இவளது குணங்களாகக் கூறுவர் களவியலுரையாசிரியர். **நாண்** என்பது, பெண்டிர்க்கு இயல்பாக உள்ளதொரு தன்மை. **மடம்** என்பது, கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை. **அச்சம்** என்பது, பெண்மையில் தான் காணப்படாததோர் பொருள் கண்டவிடத்து அஞ்சுவது. **பயிர்ப்பு** என்பது பயிலாத பொருட்கண் அருவருத்து நிற்கும் நிலைமை.[8] தலைமகள் கற்பு நெறியில் ஒழுகிக் கணவனைப் பிரிந்திருக்கும் காலங்களில் மக்கள், சுற்றம் முதலானவர்களைப் பாதுகாக்கும் கடமையி லிருந்து தவறாள். அன்றியும், களவு நெறியில் ஒழுகும் போது தந்தை, தாயர் முதலியவர்களின் கட்டுப்பாட்டிற்கு அடங்கி நடக்க வேண்டியவள். தலைவன் தரும் பல விதத் துன்பங்களை யும் பொறுத்திருக்கும் குணமுடையவள். அந்நிலையில் தன் துயரைச் சிறிதும் கருதாது தலைவன் துயரையே பெரிதும் கருதிக் கவலும் தலைவியின் பெருமை போற்றத்தக்கது. களவுக்காலத்திலும் சரி, கற்புக்காலத்திலும் சரி, இவள் தலைவனுடைய அருங்குணங்களையெல்லாம் தோழியிடம் சொல்லிப் பாராட்டுவாள். இவளது கரந்த ஒழுக்கத்தினை அறி யாத பெற்றோர், வேறொருவருக்கு இவளைத் திருமணம் புரிய ஏற்பாடுகள் செய்யும் போது, இவள் அவர்களறியாது தலை வனுடன் அவனூர்ச் சென்று, அவனை மணந்துகொள்வாள். இச்செயலை அகப்பொருள் இலக்கணம் **'உடன்போக்கு'** என்று குறிப்பிடும். இவளைப் பற்றி அகப்பொருள் நூல்கள் கூறுவனவற்றையெல்லாம் தொகுத்துக் கூறினால் மிக விரியும்.

**செவிலி :** செவிலி என்பவள் தலைவியை வளர்த்த தாய். தலைவிக்கு உயிர்த்தோழியாக இருப்பவளை ஈன்ற தாய்; நற்றாய்க்குத் — தலைவியைப் பெற்றவளுக்குத் —தோழியாக இருப்பவள். இவ்வாறு இலக்கண நூல்கள் கூறும். இவள் தலைவியிடம் பேரன்பு கொண்டவள். தலைவிக்கு உணவு முத லியன கொடுத்து, அவளைப் பாதுகாத்து, இரவிலும் தன்

8. இறையனார் களவியல் — நூற்பா 2-இன் உரை.

அருகே அவளைத் துயில் கொள்ளச் செய்து காவல் புரிபவள். தலைவியின் களந்த ஒழுக்கத்தைத் தோழியின் மூலம் இவள் அறிவாள். தலைவி தலைவனுடன் உடன் போகும் காலத்து வருந்தி அவளைத் தேடிச் செல்வாள். காட்டில் எதிரில் வரக் கூடிய அந்தணர், கண்டோர் ஆகியவர்களிடம் தன் மகளைப் பற்றி வினவுவாள். நற்றாயுடன் சேர்ந்துகொண்டு தலைவி யின் தோற்ற வேறுபாடுகளின் காரணத்தை அறியக் குறத்தி முதலியோரைக்கொண்டு குறி பார்த்து ஆராய்வாள். இவள் தலைமகளைப் பெற்ற நற்றாயினும் பெரிதும் அன்பும் அந்தரங் கமும் உடையளாதலால், இக்களவு வரலாற்றிற்குச் சிறந்த வளாய்த் தாய் என்றே சிறப்பித்துக் கூறப்பெறுவாள்.

> ஆய்ப்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்
> தாய்எனப் படுவோள் செவிலி யாகும்.[9]

என்பது தொல்காப்பியக் களவியல் நூற்பா.

**தோழி :** தலைவன் தலைவியின் காதல் வாழ்க்கையில் பெரும் பங்கு எடுத்துத் துணை புரிபவள் தோழி. தோழி தலைவியுடன் ஒன்றின நெஞ்சினையுடையவள். தலைவிக்கும் தோழிக்கும் இடையே உள்ள நட்புரிமையைத் தலைவனுக்கும் பாங்கனுக்கும் இடையேயும் காண முடியாது. தலைவியினுடைய செயல்கள் யாவற்றையும் இவள் அறிவாள். இவள் தன் னலம் சிறிதும் இல்லாது, தலைவன் தலைவியரது நலத்தை மட்டிலும் கருதிப் பல வகை இடுக்கண்களுக்கிடையிலும் சாமார்த்தியமாகச் செயலாற்றும் திறனுடையவள். தலை வனைக் கண்டவுடன் மயங்கிவிடும் தலைவி போலாது, பல நாளும் தலைவனுடைய குணங்களை ஆராய்ந்து தேர்ந்து முடிவில் தலைவியிடம் அவனைக் கூட்டுவிப்பாள். எனவே, அகப் பொருள் நூல்களில் காணப்பெறும் இவள் உலகியலறிவு மிக்கவளாகத் திகழ்கின்றாள். தலைவன் தலைவியை விட்டுப் பிரிய நேரிடும் சந்தர்ப்பங்களையெல்லாம் நன்கு ஆராய்ந்து, ஒப்பித் தலைவியும் ஒப்புமாறு வற்புறுத்துவாள். தலைவனை விட்டுப் பிரிந்து வருந்தும் தலைவியைப் பலவாறு சொல்லித்

9. களவியல் — நூற்பா 34.

தேற்றுவாள். சில சமயம், தலைவனிடம் குறை கண்டால் கழறி யுரைத்து அவனைத் திருத்த முயல்வாள். தலைவன் தலைவியரின் கூட்டுறவுகளை நற்றாய், செவிலித்தாயருக்குத் திறம்பட வுரைத்து, அவர்களுடைய உடன்பாட்டைப் பெறுவாள். களவு ஒழுக்கத்திலும் சரி, கற்பொழுக்கத்திலும் சரி, இவளுடைய தொடர்பு இல்லாத இடங்களே இல்லை என்று கூறிவிடாலம்; அவ்வளவு முதன்மை பெற்றவள்.

'தோழி தானே செவிலி மகளே'[10]

என்ற தொல்காப்பிய நூற்பாவின்படி செவிலித்தாயின் மகளாகக் கருதப்பெறும் இவளுடைய சதுரப்பாடமைந்த பேச்சுக்கள், அகப்பொருள் பாடல்களின் சுவையை மிகுதிப்படுத்தும் தன்மையனவாக இருக்கும்.

**நற்றாய் :** அகப்பொருள் இலக்கியங்களில் வரும் நற்றாய் என்பவள் தலைவியைப் பெற்றெடுத்த தாய். இவள் தன் மகளுடைய கரந்த ஒழுக்கத்தைச் செவியுற்றதும், அவ்வொழுக்கத்தின் போக்கையும் தன் மகள் தேர்ந்தெடுத்த தலைவனுடைய பொருத்தத்தையும் தன் தோழியுடன் (செவிலித்தாயுடன்) ஆராய்ந்து வருவாள். தலைவியின் பிற்கால வாழ்க்கையில் மிகவும் கருத்துடைய இவளைத் தலைவி தன் போக்கிற்கு இடையூறாக இருப்பதாக எண்ணி மனம் வருந்துவாள். தன் மகளது களவொழுக்கத்தைச் செவிலியின் மூலம்தான் இவள் அறிவாள். தலைவியின் கரந்த ஒழுக்கத்தின் விளைவால் அவளுடைய உடலில் ஏற்பட்ட மாறுதல்களைக் கண்டு இவளும் செவிலித்தாயும் வெறியாடும் வேலன், கட்டுவிச்சி முதலியவர்களைக் கொண்டு அவ்வேறுபாடுகளின் காரணத்தை ஆராய்வர். இவர்கள் காரணத்தை வெளிப்படையாக அறிந்துகொண்டாலும் தாம் அறிந்துகொண்டுவிட்டதாக வெளிக்காட்டமாட்டார்கள்; தலைவியை வெளிப்படையாகக் கடிந்துகொள்ளவும் மாட்டார்கள். 'கடுஞ்சொல் லன்னை' என்று தம் மகள் தமக்கிட்டுள்ள பெயர்க்குரிய ,செயலைக் காட்ட மாட்டார்கள்.

---

10. களவியல்—நூற்பா 35.

**பாங்கன் :** பாங்கன் என்பவன் தலைவனுக்குத் தோழனாக இருப்பவன். தலைவன் களவு ஒழுக்கத்தில் ஒழுகும் போது அவனுக்கு உற்ற துணைவனாக இருந்துகொண்டு அவன் செயல்களில் உதவி புரிபவன். தலைவியைச் சந்தித்து, அவளுடன் மறைந்து ஒழுங்கும் ஒழுக்கத்தால் அவன் உடலில் காணும் தோற்ற வேறுபாடுகளைக் கண்டு, காரணத்தை வினவியறிந்து, அது முதல் இவனுக்குத் துணைவனாக இருப்பவன். பார்ப்பனப் பாங்கன், வேறு பாங்கன் எனப் பாங்கர் இருவகைப்படுவர் என்பதை அகப் பொருள் நூல்களால் அறியலாம்.

**பரத்தையர் :** அகப்பொருள் நூல்களில் பரத்தையர் என்று கூறப்பெறும் ஒருவகைப் பெண்டிர் உளர். இன்று செல்வர்கள் வாழும் பகுதிகளில் இத்தகையவர் அதிகம் இருப்பது போலவே அன்றும் இருந்திருத்தல் கூடும். இவர்கள் அக்காலத்தில் அறவே இல்லை என்று கூறுவது அவ்வளவு பொருத்தமாகத் தோன்றவில்லை; இல்லாமல் புலவர்கள் படைத்து மொழிந்தனர் என்று நினைத்தலும் அவ்வளவு சரியல்ல. பரத்தையரைப்பற்றி இளம்பூரணர், "ஆடலும் பாடலும் வல்லராகி, அழகும் இளமையும் காட்டி, இன்பமும் பொருளும் வெ.:கி, ஒருவர்மாட்டுந் தாங்காதார்"[11] என்று கூறினும், இவர்களில் சிலர் காதற்பரத்தையர் ஆதலையும், அதன்மேல் காமக்கிழத்தியராக, இற்கிழத்தியராக, ஆதலையும் இலக்கியங்களில் காண்கின்றோம். இத்தகைய பரத்தையர்களைத் தொல்காப்பியர் "**காமக்கிழத்தியர்**" என்ற சொல்லால் குறிக்கின்றார். இவர்களைப்பற்றி இளம்பூரணர் இவ்வாறு குறிப்பிடுகின்றார் : "காமக்கிழத்தியராவார் பின்முறை ஆக்கிய கிழத்தியர். அவர் மூவகைப்படுவர், ஒத்த கிழத்தியரும் இழிந்த கிழத்தியரும் வரைப்பட்டாரும் என. ஒத்த கிழத்தியர்-முந்துற்ற மனையாளன்றிக் காமப்பொருளாகப் பின்னுந் தன் குலத்துள்ளாள் ஒருத்தியை வரைதல். இழிந்தாராவார்—அந்தணர்க்கு அரச குலத்தினும் வணிக குலத்தினும் வேளாண் குலத்தினும் கொடுக்கப்பட்டாரும், அரசர்க்கு

11. கற்பியல்—முதற்பா. 10-இன் உரை

ஏனை இரண்டு குலத்தினும் கொடுக்கப்பட்டாரும் வாணிகர்க்கு வேளாளர் குலத்தில் கொடுக்கப்பட்டாரும். வரையப் பட்டார் — செல்வராயினோர் கணிகைக் குலத்தினுள்ளார்க்கும் இற்கிழமை கொடுத்து வரைந்து கோடல். அவர் கன்னியில் வரையப்பட்டாரும் அதன் பின்பு வரையப்பட்டாரும் என இரு வகையர். அவ்விருவரும் உரிமை பூண்டமையாற் காமக் கிழத்தியர்பாற்பட்டனர்''[12] இப்பரத்தையர்க் கூட்டுறவினால் தலைவன் தலைவியரிடையே சிறு பிணக்கு—ஊடல்—நிகழும். அகப்பொருள் நூல்களில் காணும் பரத்தையர், ஒவ்வொரு தலைவனைப் பற்றி நின்றவர் என்று கொள்ள இடம் உண்டு. இளம்பூரணர், ''காதற்பரத்தையர் கூட்டம் ஒத்த காம மாகியவாறு என்னை எனின், அவரும் பொருளானாதல், அச் சத்தினாலாதல் அன்றி அன்பினாலாதல் கூடுதலின் அதுவும் கந்தருவப் பாற்படும். அவ்வாறின்றி அவரைப் பிறிது நெறி யாற் கூடுமாயின், இவன் (தலைவன்) மாட்டுத் தலைமையின் என்பது உணர்ந்துகொள்க'' என்று கூறியிருப்பதை எண் ணிப் பார்க்க வேண்டும்.

இக்காதற்பரத்தையர் தலைவிமாரோடு எத்தகைய பகையும் கொள்ளாது நெருங்கிப் பழக முயல்வார். இவர் களில் வயதில் மூத்தவராக இருந்தால் தலைவன் தலைவிய ரிடையே நிகழும் பிணக்குகளைத் தீர்த்து வைக்கவும் முன்வரு வர்; தலைவிக்குப் புத்திமதிகள் கூறி, அவளைத் தலைமகனோடு கூட்டி வைத்து மகிழ்வர். இதனை,

> காதற் சோர்விற் கடப்பாட் டாண்மையில்
> தாய்போல் கழறித் தழீஇய மனைவியைக்
> காய்வின்று அவன்வயிற் பொறுத்தற் கண்ணும்[13].

என்ற கற்பியல் நூற்பாப் பகுதியால் அறிந்துகொள்ளலாம்.

**ஏனையோர் : கண்டோர்** என்பார் களவுக்காலத்தில் தன் பெற்றோர் தன் களவினை உணர்ந்து தன்னை வேற்றவர்க்கு மணம் நிச்சயிக்கப் போகும் போதும் தலைவி தலைவனுடன் சென்று, அவன் மனையில் வரைந்துகொள்ளும் நோக்குடன்

12. கற்பியல்—நூற்பா 10—இன் உரை
13. கற்பியல் ௯—உரை

செல்லும் போதும் காட்டு வழியில் சந்திக்கும் மாந்தர். **அறிவர்** என்பார், தலைவன் தலைவியருக்குக் குரவர்களாக இருப்பவர்களும் துறவுள்ளம் படைத்த அறிஞர்களும். **பாணன்** என்பான், தலைவனைப் பரத்தையரிடம் கூட்டி வைப்பதற்குக் கருவியாக இருப்பவன். தலைவியிடம் இவன் தலைவன் பொருட்டுத் தூது வரும் போது, தலைவி இவனை வெறுத்துக் கடிவாள். **பார்ப்பார்** என்பார், பார்ப்பனக் குலத்துப் பிறந்தவர்; தலைவனுக்கு அடிக்கடி அறவுரை கூறுபவர். **விறலியர்** என்பார், ஆடலும் பாடலும் நிகழ்த்தும் ஒருவகைச் சாதிப் பெண்டிர். தலைவனது பரத்தையிற்பிரிவிற்கு இவர்களும் கருவியாக இருப்பர். **கூத்தர்** என்பார், தலைவனுக்கு இன்றியமையாத கூத்து நடத்தும் ஆண்கள். **இளையர்** என்பார், தலைவனை விட்டுப் பிரியாது அவனுடன் இருந்து அவனுக்குக் குற்றேவல் செய்யும் ஏவலர். **விருந்தினர்** என்பார், தலைவனும் தலைவியும் அன்பு செய்து விருந்தோம்பும் மக்கள். **தேர்ப்பாகன்** என்பவன், தலைவனுடைய தேரோட்டி; அவன் தலைவியை விட்டுப் பிரியும் போதும் மீண்டும் தலைவன் தலைவியை நாடி வரும் போது, தேரை நடத்தி வருபவன். குதிரையின் இயல்பை அறிந்து விரைவாக ஓட்டிச் செல்வதில் வல்லவன். இவற்றைத் தவிர, இவர்களைப்பற்றி அகப்பொருள் நூல்களில் அதிகமான செய்திகளை அறிந்துகொள்ள இயலவில்லை.

மேற்கூறப்பெற்ற மாந்தர்களைப்பற்றி ஓரளவு தெரிந்துகொண்டால்தான் அகப்பொருள் பாடல்களை நன்கு சுவைக்க முடியும்; பாடல்களில் கூறப்பெறும் நிகழ்ச்சிகளும் சந்தர்ப்பங்களும் கூற்றுக்களும் நமக்குத் தெளிவாகும். காதலின் தூய்மையையும் சிறப்பையும் போற்றிய கவிஞர்கள் அதனை நித்தியமானதாகவும் கூறியுள்ளனர். அங்ஙனமே, காதல் புரியும் தலைவன் தலைவியையும் நித்தியமானவர்களாகவே படைத்துக் காட்டியுள்ளனர். இலட்சியக் காதலர்களாகிய அவர்களை, இன்று நாம் தவறும் பித்தலாட்டமும் நிறைந்த உலகில் காணும் காதலர்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கக் கூடாது. காதல் என்ற தெய்விக உணர்ச்சியைத்தான்

அவர்கள் **காதலன்** என்றும், **காதலி** என்றும் உருவாக்கிவிட்டார்களோ என்றுகூட நினைக்கவேண்டியிருக்கின்றது. அவர்கள் ஒரு காலத்தில் ஓரிடத்தில் இருக்கக்கூடியவர்கள் அல்லர்; என்றும் எல்லாவிடத்தும் நிரந்தரமாக இருப்பவர்கள்; இருக்க வேண்டியவர்கள். எனவே, அவர்களைப் பெயர் கூறிச் சுட்டுவதுகூடத் தவறு என்று கருதினர் பண்டையோர். தொல்காப்பியனாரும் இதனை,

> மக்கள் நுதலிய அகன்ஐந் திணையும்
> சுட்டி ஒருவர்ப் பெயர்கொளப் பெறுஅர்.[14]

என்று குறிப்பிட்டுள்ளார். இதனால் அகப்பொருள் ஒருவனரயும் சாராது பொதுப்பட வரும் என்பது பெறப்படுகின்றது. ஆதலால்தான், அகப்பொருள் பாடல்களில் சுட்டிப் பெயர் கூறும் பாத்திரங்களை நாம் சந்திப்பதே இல்லை; தூய காதல் நிலவும் எல்லைக்குள் பெயர் சுட்டும் வழக்கமே இல்லை. இது தமிழ் மொழிக்கே சிறப்பாக அமைந்த இலக்கணம்.

14. அகத்திணை-நூற்பா 7

# 7. இன்ப வாழ்வின் இருவேறு நிலைகள்

**களவு-கற்பு :** அகத்துறையில், காதல் இன்பத்தைத் துய்ப்பதில், களவு, கற்பு என்ற இரு வேறு நிலைகள் உள்ளன. அகப்பொருள் பாடல்களைப் பயில்வோர் இந்த இரண்டு நிலைகளையும் காண்பர். காதலனும் காதலியும் தொல்காப்பியர் கூறும் "பால்வரைத் தெய்வம்" என்ற ஊழின் துணையால், முன்பின் அறியாதவர்களாக இருந்தாலும் ஓரிடத்தில் சந்தித்துக் காதல் கொள்ளுகின்றனர்; கலந்து இன்பந் துய்க்கின்றனர். இதனைக் **களவு** என்று அகப்பொருள் இலக்கணம் கூறும். இவ்வாறு களவு முறையில் காதல் புரிபவர்கள் பிறகு, பல்லோரறிய மணந்துகொள்வர். இதனைக் **கற்பு** என்று கூறுவர் அகப்பொருள் நூலார். முதலில் களவு ஒழுக்கத்தில் ஈடுபட்டு, அப்பால் திருமணம் புரிந்துகொண்டு, இல்வாழ்க்கையாகிய கற்பொழுக்கத்தை மேற்கொள்வது 'களவின் வழி வந்த கற்பு' என்று சொல்லப்பெறும். களவு ஒழுக்கமே நிகழாமல் முதலிலேயே திருமணம் செய்துகொண்டு கணவன் மனைவியாக வாழும் நிலையும் அக்காலத்தில் இருந்தது. 'களவின்வழி வாராக் கற்பு' என்று இதனைக் குறிப்பர். இந்த இரண்டு வகைக் கற்பிலும் களவின் வழி வந்த கற்பே சிறப்புடையது என்று பண்டைத்தமிழர்கள் எண்ணினர். அகவாழ்வில் காணும் இந்தக் களவு, கற்பு என்ற இரண்டு கைகோள் வகைகளையும் பற்றி ஓரளவு விரிவாகத் தெரிந்துகொள்வோம். கைகோள் - 'ஒழுக்கங் கோடல்' என்பர் நச்சினார்க்கினியர். ஒழுக்கம் என்பது இதன் கருத்து.

**களவு-விளக்கம் :** களவாவது, "பிணி மூப்புக்களின்றி, எஞ்ஞான்றும் ஒரு தன்மையராய், உருவும் திருவும் பருவமும் குலனுங்குலமும் அன்பும் முதலியவற்றால் ஒப்புமையுடைய ராய தலைமகனும் தலைமளும், பிறர் கொடுப்பவும் அடுப் பவுமின்றி, ஊழ் வகையால் தாமே எதிர்ப்பட்டுக் கூடுவது." தமது மகள் பிறர்க்கு உரியள் என்று இருமுதுகுரவரால் (பெற்றோரால்) கொடை எதிர்தற்குரிய தலைவியை, அவர் கொடுப்பக் கொள்ளாது, இருவரும் கரந்த உள்ளத்தோடு எதிர்ப்பட்டுப் புணர்தலின் களவு எனப் பெயர் பெற்றது. இக்களவு அன்பொடு புணர்ந்ததாதலின் "காமக்கூட்டம்" என்றும் வழங்கப்பெறும். இன்னும் இதனை 'மறைந்த ஒழுக்கம்', 'மறை', 'அருமறை' என்ற சொற்களாலும் தொல்காப்பியர் குறிப்பர்.

களவு என்பதற்குப் பிறர்க்குரிய பொருளை மறையிற் கோடல் என்று பொருள் கூறுவர் இளம்பூரணர். வேதத்தை 'மறைநூல்' என்று சொல்வது போலவே, அறநிலை வழுவாமல் காதலர்கள் கரந்து ஒழுகும் இதனைக் 'களவு' என்று பண்டை யோர் குறித்திருக்கின்றனர் என்பதை அறிதல்வேண்டும். "களவு என்னும் சொற்கேட்டுக் களவு தீதென்பதூஉம், காமம் என்னும் சொற்கேட்டுக் காமம் தீதென்பதூஉம் அன்று ; மற்று அவை நல்ல ஆமாறும் உண்டு"[1] என்று களவியல் உரைகாரர் கூறுவதையும், அதற்கு அவர் கூறும் சான்றுகளையும் இவ்விடத்தில் சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஒரு பெண் தன் உறவினரோடு சண்டையிட்டுக்கொண்டு நஞ்சுண்டு சாவதற்குத் தீர்மானம் செய்து, சமயம் பார்த்து உண்பதற்கு நஞ்சைத் தேடி வைத்திருந்தாள். அருளுடை யான் ஒருவன் அந்த நஞ்சினை எடுத்து மறைத்துவிட்டான். அப்பெண் நஞ்சினைத் தேடும்போது அது கிடைக்கவில்லை. அவளும் அதனை உண்டு சாகாமல் உயிர் தப்பினள். இவ்வாறு அவளை உயிர் தப்புவிக்கச் செய்யப்பட்ட களவு நல்லதாயிற்று. காமம் நல்லது என்பதற்கும் அவர் எடுத் துக் காட்டுத் தருகின்றார். காமம் என்பது ஆசை. ஒருவர்

1. இறையனார் களவியல்—நூற்பா 1-இன் உரை

சுவர்க்கத்தின்கண் சென்று போகந்துய்ப்பல் என்று கூறுவதும், உத்தரகுருவின்கண் சென்று போகந்துய்ப்பல் என்று கூறுவதும், நன்ஞானம் கற்று வீடு பெறுவல் என்று கூறுவதும், தெய்வத்தை வழிபடுவல் என்று கூறுவதும் காமத்தின்பாற்பட்டவையே. இவ்வகைக் காமம் மேன்மக்களால் புகழப்படுகின்றது; மறுமைக்கும் உறுதி பயக்கின்றது. ஆகவே, இது நல்லது. இளம்பூரணரும், "களவு என்னும் சொற்கண்டுழியெல்லாம் அறப்பாற்படாதென்றல் அமையாது. களவாவது, பிறர்க்குரிய பொருளை மறையிற் கோடல். இன்னதன்றி, ஒத்தார்க்கும் மிக்கார்க்கும் பொதுவாகிய கன்னியரைத் தமர் கொடுப்பக் கொள்ளாது, கன்னியர் தம் இச்சையினுல் தமரை மறைத்துப் புணர்ந்து, பின்னும் அறநிலை வழாமல் நிற்றலால் இஃது அறமெனப் படும்" என்று கூறியுள்ளார்.[2]

**களவு தமிழர் முறையே :** களவினை ஆரியரது எண்வகைப் பட்ட மணவகைகளுள் காந்தருவத்தின்பாற்படும் என்பர். காந்தருவமாவது, கந்தர்வ குமரரும் அவர் மகளிரும் தம்முள் எதிர்ப்பட்டு மனமியைந்து கூடுதல் போலத் தலைவனும் தலைவியும் எதிர்ப்பட்டு மனமியைந்து கூடுவது. இதனை,

'அநிரப்பில்பைம் பூணும் ஆடவரும் தம்மில்
எதிர்ப்பட்டுக் கண்டியைதல் என்ப;—கதிர்ப்பொன்யாழ்
முந்திருவர் கண்ட முனிவறு தன்காட்சிக்
கந்திருவர் கண்ட கலப்பு'

என்ற வெண்பாவால் உணரலாம். இங்ஙனம் தமிழ் மக்களது களவுப்புணர்ச்சியைக் காந்தருவமாகத் தொல்காப்பியனுர் கூறினும், தமிழர்க்கு அவ்வொழுக்கம் ஆரிய மக்களிடத்து வந்ததென்பது அவர் கருத்தன்று என்பதை நாம் உணர்தல் வேண்டும். இஃது ஒற்றுமையில் வேற்றுமை காண்டற்கே "தமிழ்கூறு நல்லுலகத்து வழக்கும் செய்யுளுமே" ஓதிய ஆசிரியரால் கூறப்பெற்றதாகும்.

2. களவியல்—அவதாரிகை, 13 செய்யுளியல்—நூற்பா 178

இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
காமக் கூட்டம் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே[3]

என்ற தொல்காப்பியனாரின் நூற்பா மேற்கூறிய கருத்துக்களைத் தெளிவாகப் புலனாக்கும். சிந்தாமணி ஆசிரியரும் இது தமிழ் வழக்கே என்பதைத் தெளிவுபடுத்தியுள்ளார்.

இலைபுறங் கண்ட கன்னி
யின்றமிழ் இயற்கை இன்பம்[4]

தேவர் பண்ணிய நீந்தொடை இன்சுவை
மேவர் தென்றமிழ் மெய்ப்பொருள் ஆதலின்[5]

என்ற அவரது கூற்றுக்களால் இதனை நன்கு அறியலாம்.

ஒருவனும் ஒருத்தியுமாக எதிர்ப்பட்டார் இருவர், புனலொடு புல் சாய்ந்தாற்போலத் தம் தலைமைக் குணங்களை இழந்து, மெய்யுறு புணர்ச்சியிற்கூடி மகிழும் இயல்பே கந்தர்வ மணம் என்பது. இங்ஙனம் கூடினோர் தம் வாழ்நாள் முழுவதும் கூடி வாழ்வர் என்ற கட்டாயம் இல்லை. எதிர்ப்பட்ட அளவில் வேட்கை மிகுதியால் கூடிப் பின் அன்பின்றிப் பிரிந்து மாறும் வரம்பற்ற நிலையும் இவ்வகை மணத்திற்கு உண்டு. இன்று உலகியல் வழக்கில் இத்தகைய நிகழ்ச்சிகளை நாம் காணத்தான் செய்கின்றோம். ஆனால், தமிழர் கூறும் களவொழுக்கமோ, இருவருள்ளத்தும் உள் நின்று சுரந்த அன்பின் பெருக்கினால், 'தான், அவள்' என்ற வேற்றுமையின்றி, இருவரும் ஒருவராயொழுகும் உள்ளப் புணர்ச்சியாகும். இதனை இறையனார் களவியல்,

அதுவே,
தானே அவளே தமியர் காணக்
காமம் புணர்ச்சி இருவயின் ஒத்தல்[6]

என்று குறிப்பிடும். இவ்வுள்ளப் புணர்ச்சி நிகழ்ந்த

3. களவியல்—நூற்பா. 1.
4. சுரமஞ்சரி—9.
5. பதுமை—163.
6. இறையனார் களவியல்—நூற்பா 2.

பின்னர் ஒருவரையொருவர் இன்றியமையாதொழுகும் உயிரோரன்ன செயிர்தீர் நட்பே சாந்துணையும் நிலைபெற்று வளர்வதாகும். உள்ளப்புணர்ச்சி நிகழ்வுற்ற பின்னர், ஒருவரையொருவர் பிரிவின்றியொழுகும் அஃபின் தூண்டுதலால் உலகறிய மணந்து வாழும் கற்பென்னும் திண்மை, தமிழர் ஒழுகலாருகிய களவொழுக்கத்தின் முடிந்த பயனுகும். உலகியலில் நேரிடும் பல வகை இடையூறுகளால், ஒருவரையொருவர் மணந்துகொள்ள இயலாமல், உள்ளப்புணர்ச்சியளவே கூடி வாழ்ந்து, பின்னர் இறந்த காதலரும் தமிழகத்தில் இருந்தனர் என்பதற்குத் தருதமத்தன்—விசாகை என்பாரின் வரலாறே சான்ருகும்.[7] இவர்கள் இருவரும் யாழோர் மணமுறையில் பொருந்தியவர்கள் எனத் தம்மை நோக்கி ஊரார் கூறும் பழிமொழியை விலக்கித் தம் வாழ்நாள் முழுவதும் மெய்யுறு புணர்ச்சியை விரும்பாது, உள்ளப்புணர்ச்சியளவில் நின்று உயிர் துறந்த வரலாறு நாம் ஈண்டு நினைவுகூர்தற்பாலது.

கந்தர்வ வழக்கில் மெய்யுறு புணர்ச்சி முதற்கண் தோன்றும். அதன் பயிற்சியால் உள்ளப்புணர்ச்சி நிலைபெற்றுச் சாகுமளவும் காதலர்கள் கூடி வாழ்தலும் உண்டு; உள்ளப்புணர்ச்சி தோன்ருது, தம் எதிர்ப்பட்டாரைக் கூடி மாறுதலும் உண்டு. சிந்தாமணியில் காணும் சீவகன்-தேசிகப்பாவை கூட்டம் இதற்கு ஒர் எடுத்துக்காட்டாகும்.[8] என்றும் பிரியா நிலையில் நிறை கடவாது அன்பிஞற்கூடும் உள்ளப்புணர்ச்சியே களவொழுக்கத்தின் சிறப்பியல்பாகும். இதுவே தமிழியல் கூறும் களவு மணத்திற்கும், வடநூல் குறிப்பிடும் கந்தர்வ மணத்திற்கும் உள்ள உயிர்நிலையாய வேற்றுமையாகும். இதனல்தான் தொல்காப்பியனர் இதனை ‘அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கிற் காமக் கூட்டம்’ என்று குறிப்பிட்டார்; குறுந்தொகையாசிரியர் ‘அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே’ என உணர்த்திஞர்.[9]

7. மணிமேகலை—சிறை செய்காதை—வரி [82-142]
8. சீவகசிந்தாமணி—பதுமையார் இலம்பகம்.
9 குறுந்தொகை—40

ஆரிய மணமாகிய கந்தருவத்திற்கும் தமிழரின் களவு மணத்திற்கும் உள்ள வேற்றுமையையும், தமிழியல் வழக்க மெனச் சிறப்பித்து உரைக்கப்பெறும் களவொழுக்கத்தின் தூய்மையினையும், ஆரிய அரசன் பிரகத்தனுக்கு அறிவிக்கும் நோக்கத்துடன்தான் கபிலரின் **குறிஞ்சிப்பாட்டும்** எழுந்தது. இது, தலைவியின் வேற்றுமை கண்டு வருந்திய செவிலிக்குப் பாங்கி அறத்தொடு நிற்கும் விகற்பத்தை அற்புதமாகக் கூறுவதாகும். "சமயக் கணக்கர் மதிவழி கூறாது, உலகியல் கூறிப் 'பொருள் இது' என்ற"[10] திருவள்ளுவரின் 'இன்பப் பாலும்' தமிழர் மண முறைப்படி அமைந்துள்ளதை ஊன்றி நோக்குவார்க்கும் புலனாகும்.[11] இவற்றையெல்லாம் நன்குணர்ந்த நச்சினார்க்கினியரும், யாழோர் கூட்டத்திற்கும் தமிழரின் காமக்கூட்டத்திற்கும், "கந்தருவர்க்குக் கற்பின்றி அமையவும் பெறும், ஈண்டுக் கற்பின்றிக் களவே அமையாது" என்று விளக்கியுள்ளார்.[12]

**களவியல் உரையாசிரியரின் கருத்து:** களவியல் உரையாசிரியர், 'களவு' என்னும் பெயர்க்குக் கூறியுள்ள காரணத்தையும் ஈண்டு அறிந்து கொள்ள வேண்டியது இன்றியமையாதது. அவர் கருத்துப்படி, மக்கள் தலையாய மக்கள், இடையாய மக்கள், கடையாய மக்கள் என்று மூவகைப் படுவர். எல்லாச் சமயத்தாரும் பெண் இன்பம் தீது என்று கூறியிருக்கின்றனர். அந்த இன்பம் உண்டானால் சுற்றத் தொடர்ச்சி உண்டாகும்; அத்தொடர்ச்சியால் கொலை, வெகுளி, செருக்குப் போன்ற குற்றங்கள் நிகழக்கூடும். இவற்றை எண்ணிப் பார்த்தே தலையாய மக்கள் பெண் இன்பத்திலிருந்து நீங்குவர். இடையாய மக்கள், பெண்களைப் பற்றி நூல்கள் மூலம் அறிவர். பெண் என்பது, ஓர் எலும்புச் சட்டகம்; நாற்றமுள்ள கூடு; புழுப் பிண்டம். அது பீளை, மலம், குடல், கொழுப்பு, மூத்திரம் முதலியவற்றின் சார்புடையதேயன்றி ஒரு சிறந்த பொருளன்று; அது சிறந்த

10. கல்லாடம்—14 வரி [20-23]. 11. 'காமத்துப்பாலைப் பெரும்பாலும் வடநூல் வழக்குப்பற்றியும், சிறுபான்மை தமிழர் வழக்குப்பற்றியும் வள்ளுவர் கூறினர்' என்ற பரிமேலழகரின் கருத்து ஏற்கத் தக்கதன்று.

12. களவியல்—நூற்பா 1-இன் உரை.

பொருளாயின் பூ, சாந்து, எண்ணெய் முதலிய அணிகலன் களைப் அதற்குப் புனைய வேண்டியதில்லை. இவ்வாறு அவர்கள் உடம்பின் அசுபத்தன்மையை எண்ணிப் பெண்ணின்பத்தி னின்று நீங்குவர். கடையாயினூர், எத்திறத்தானும் அவ்வின் பத்தை விட்டு நீங்கார். காரணம், அனாதி காலந்தொட்டுப் பல பிறப்பிடை ஆணும் பெண்ணுமாகப் பழகிப் போகந்துய்த்து வருவதேயாகும். இவர்களையும் பேரின்பத்துச் செலுத்த வேண்டியது அவசியம். எனவே, இவர்கள் ஆணும் பெண்ணு மாக, இவன் பதினாறாட்டைப் பிராயத்தனாய், இவளும் பன்னீ ராட்டைப் பிராயத்தளாய், ஒத்த பண்பும், ஒத்த நலனும், ஒத்த செல்வமும், ஒத்த கல்வியும் உடையாராட்ப் பிறிதொன்றிற் கும் ஊனமின்றிப் போகம் துய்ப்பர். அப்போது, அவர்க ளிடம் இதைவிடப் பேரின்பம் என்பதொன்றுண்டு என்று கூறினால், "அதை எங்ஙனம் பெறுவது?" என்று வினவுவர். அப்போது அதனைத் தவத்தால் பெறலாம் என்று கூற வேண்டும். உடனே, அவர்கள் தாமும் தவஞ்செய்து பெற வேண்டும் என்று தவஞ் செய்வர். அப்போது வீடுபேற்றின் இன்பத்தை விரித்துரைக்க வேண்டும். அவ்வின்பம் பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு, அவலக்கவலை முதலியவையின்றி உள்ளது என்று கேட்டுத் தவமும் ஞானமும் புரிந்து, அதனைப் பெறுவர். இவ்வாறு அவர்களை வஞ்சித்துக் கொண்டு சென்று நன்னெறிக்கண் செலுத்துவதால் இம்முயற்சிக்குக் **'களவு'** என்று பெயரிடப்பட்டது. "களவியல்" கற்க அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கினையும் பெறலா மென்பது களவியலுரையாசிரியரின் கருத்தாகும்.

**களவின் கட்டங்கள் :** தமிழ் வழக்காகிய இக்களவு என்னும் கைகோள், நான்கு வகைப்படும் என்று இலக் கண ஆசிரியர்கள் கூறியிருக்கின்றனர். தொல்காப்பியர்,

'காமப் புணர்ச்சியும் இடந்தலைப் படலும்
பாங்கொடு தழாஅலுந் தோழியிற் புணர்வுமென்று
ஆங்கநால் வகையினும் அடைந்த சார்வொடு
மறையென மொழிதல் மறையோர் ஆறே'[18]

18. செய்யுளியல் - நூற்பா 178.

என்று கூறுவர். காமப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம் தோழியர் கூட்டம் என்ற நான்கும் காதல் ஒழுக்கத்தில் வரும் நான்கு கட்டங்கள். ஒவ்வொரு கட்டத்திலும் பல நிகழ்ச்சிகள் உண்டு. தனித்தனி நிகழ்ச்சியைத் **துறை** என்று குறிப்பர் இலக்கண நூலார். இந்த நான்கு கட்டங்களைச் சார்ந்து வரும் சிறு கட்டங்களும் உள்ளன. அவற்றையெல் லாம் தொல்காப்பியம் விரிவாகக் கூறுகின்றது.

காமப் புணர்ச்சி என்பதற்குக் களவியலுரைகாரர், தலை மகனும் தலைமகளும், தமியராய் ஒரு பொழிலகத்து எதிர்ப்பட் டுத் தன் உணர்வினரன்றி வேட்கை மிகுதியால் புணர்வது என்று கூறுகின்றார். தலைமகனுடைய சிறந்த குணங்களும் வேட்கை மிகுதியால், புனல் ஓடு வழிப் புல் சாய்ந்தாற்போல அமைந்து கிடக்க, இருவரும் புணர்தல் காமப்புணர்ச்சி என்று அவர் பெற வைக்கின்றார். இதை **இயற்கைப்புணர்ச்சி** என்றும், **தெய்வப்புணர்ச்சி** என்றும், **முன்னுறு புணர்ச்சி** என் றும் இலக்கண ஆசிரியர்கள் குறிப்பர். இவையெல்லாம் காரணப்பெயர்கள். புலவரால் கூறப்பெற்ற இயல்பினால் புணர்ந்தாராதலானும், கந்தருவ வழக்கத்தோடு ஒத்த இயல் பினால் புணர்ந்தாராதலானும் 'இயற்கைப்புணர்ச்சி' எனப்பட் டது. இருவரும் தெய்வத்தன்மையால் புணர்ந்ததாலும், முயற்சி யும் உளப்பாடும் இன்றிப் புணர்ந்ததாலும், 'தெய்வப்புணர்ச்சி' என்று கூறப்பட்டது. இவள் நலம் இவனால் முன்னுற எய்தப்பட்டமையானும், இவன் நலம் இவளால் முன்னுற எய்தப்பட்டமையானும், 'முன்னுறு புணர்ச்சி' என்று குறியீடு செய்யப்பட்டது.

**இடந்தலைப்படுதல் முதலியவை:** இவ்வாறு "பாலதாணை யால்"—ஊழின் வலியால்—சந்தித்துக் காதல் செய்யும் காதலர்கள் அடுத்தடுத்துக் கூடுவர். இயற்கைப்புணர்ச்சி முடிந்த மறுநாள், தலைவன் 'யான் இவளை அடைந்தது விதியி னால்தானே. இன்றும் அவ்விதி கூட்டுவிக்கும்' என்று எண்ணி, முதல் நாள் கூடின இடத்திற்கே சென்று, தலைமகளைச் சந்தித் துக் கூடுவான். இவ்வாறு மறு நாளும் முதல் நாள் சந்தித்த இடத்திற்குச் சென்று, தலைவியைச் சந்தித்தலைத்தான் **இடந்**

**தலைப்படுதல்** என்று இலக்கண நூலார் குறிப்பர். வாழ்க்கையில் இவ்வாறு சந்திப்பு ஏற்படுதல் அவ்வளவு எளிதான நிகழ்ச்சியன்று; பெரும்பாலும் இம்முறை இடையீடுபட்டுத் தான் நிகழும். இவ்வாறு தலைவியினது கூட்டத்தாலோ பிறராலோ இடையீடுபட நேர்ந்தால் தலைவன் தன் வருத்தத்தினைப் பாங்கனுக்கு உணர்த்துவான். அவன் தலைமகள் இருக்கும் இடமறிந்து வந்து கூற, தலைமகன் அவ்விடத்துக்குச் சென்று, அவளைச் சந்திப்பான். இதுதான் **பாங்கற் கூட்டம்.** "பாங்கற்கூட்டம் நிகழின் இடந்தலைப்பாடு நிகழாது. இடந்தலைப்பாடு நிகழின் பாங்கற்கூட்டம் நிகழாது" என்று களவியல் உரைகாரர் கூறுவர். தலைவியை அவ்வளவு எளிதாகச் சந்திக்க முடியாது என்பது அவர் கருத்து.[14] இதுவும் அடிக்கடி நிகழக்கூடியதன்று; நிகழவும் முடியாது. தலைவியுடன் நெருங்கிப் பழகக்கூடிய தோழியின் உதவியிருந்தால்தான் இக்கூட்டம் அடிக்கடி நிகழ முடியும் என்று தலைமகன் எண்ணி, அவளை இரந்து பின்னின்று அவள் வாயிலாகக் கூடுவான். இது **தோழியிற்கூட்டம்** என்று வழங்கப்பெறும். இந்த நான்கு பெரும் பிரிவுகளே, பல விகற்பங்களும் பகுதிகளும் உடையனவாக விரிந்து, ஒரு கதைபோல வந்து முடிகின்றன. இங்ஙனம் முடியும் களவு வரலாற்றில் பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, தலைவன், தலைவி என்ற அறுவருமே கூற்று நிகழ்த்துவதற்கு உரியவர்கள். இவர்களைத் தவிர வேறு எவரும் பேசுவதற்கு உரியவர்களாக விதிக்கப்பெறவில்லை. இந்த நான்கு விதமான கூட்டங்களின் முழு விவரங்களைப்பற்றித் தொல்காப்பியம் கூறுகின்றது. 'திருக்கோவையார்' என்ற நூலைப் படித்தால், களவியலின் பல்வேறு நிகழ்ச்சிகளையும் இலக்கியச் சான்றுகளுடன் அறியலாம்.

**களவின் கால வரையறை:** இக்களவொழுக்கம் இத்துணைக்காலம்தான் நிகழும் என்று வரையறைப்படுத்தியுள்ளனர் இலக்கண நூலார். இரண்டு மாத காலந்தான் இது நிகழும் என்று இலக்கணம் கூறுகின்றது; நாடக வழக்காகக் கூறப்

14 நூற்பா-8 இன் உரை

பெறும் இவ்வொழுக்கத்திற்கு மட்டுந்தான் இவ்வரையறை. உலகத்தில் நடைபெறும் ஒழுக்கத்திற்கு வரையறை இருத்தல் முடியாது. பதினேராண்டும் பத்துத் திங்களும் நிறைந்த தலைமகளைப் பதினைந்து யாண்டும் பத்துத் திங்களும் நிறைவு பெற்ற தலைமகன் சந்தித்துப் புணர்ந்ததாக அவர் கூறுவர். இரண்டு மாதகாலம் களவில் ஒழுக, அவளும் பன்னிரண்டு யாண்டு நிறைவைப் பெறுவாள்; அவனுக்கும் பதினறு யாண்டு முடிவு பெறும். பன்னிரண்டு யாண்டு மக்கட்பேற்றினுக்குரிய காலம் என்றும், பதினறு யாண்டு ஆண்மை நிலை பெறுங் காலம் என்றும் அவர் உரைப்பர். இறையனர் களவியல் இதனை,

> களவினுள் தவிர்ச்சி வரைவின் நீட்டம்
> திங்கள் இரண்டின் அகமென மொழிப.[15]

என்று கூறுவதைக் காண்க. அதன் உரையாசிரியரும், "பதினேராண்டும் பத்துத் திங்களும் புக்க தலைமகளோடும், பதினைந்து யாண்டும் பத்துத் திங்களும் புக்க தலைமகனைப் போலும் புணர்தல் வேண்டிற்றென்பது பெற்றும். அவளும் இரு திங்கள் களவொழுக்கம் ஒழுகப் பன்னீராட்டைப் பிராயத்தாளாம். அது மக்கட்பேற்றுக்குக் காலம்; களவொழுக்கத்திற்குப் பொருந்தாதென விலக்கப்பட்டதாம் ஆசிரியரான் என்பது. இவனும் இரு திங்கள் களவொழுக்கம் ஒழுகப் பதினறாட்டைப் பிராயத்தானும். அஃது ஆண்மை நிலை பெறுங் காலமாகலாற் களவொழுக்கத்திற்கு விலக்கப்பட்டது என்பது" என்று உரைப்பது உளங்கொள்ளத் தக்கது.

**கற்பு இன்னதென்பது:** இனி, கற்பொழுக்கத்தைப்பற்றிக் கூறுவோம். களவின்கண் கூடி இன்புற்ற காதலர்கள், பல்லோர் அறியத் திருமணம் புரிந்துகொண்டுதான் வாழ்க்கை நடத்த வேண்டும் என்பது பண்டைய தமிழர்களின் கொள்கை. களவொழுக்கத்திற்குப்பின் கட்டாயம் கற்பொழுக்கம் நடைபெற வேண்டும் என்பது அவர்கள் எண்ணம்; களவுடன் அவர்கள் சேர்க்கை நின்றுவிடக் கூடாது என்பது அவர்கள் கருத்து. ஆனல், தொல்காப்பியத்தை ஆழ்ந்து பயிலும்

15. இறையனர் களவியல்-நூற்பா 32

போது, ஒரு காலத்தில் ஆண் பெண் சேர்ந்து இல்வாழ்க்கை நடத்துதல் களவொழுக்கம் தொடங்கியே நடைபெற்றது என்று எண்ண வேண்டியிருக்கின்றது. தலைவன் தலைவியரிடையே பொய்ச்சொல்லும், வழுவிய செயலும் ஏற்பட்ட பின்னரே 'சடங்கு' என்னும் கட்டுப்பாட்டைக் குலத்தலைவர்கள் ஏற்படுத்தினர். இதனைத் தொல்காப்பியம்,

'பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப'[16]

என்று கூறுகின்றது. எனவே, தொல்காப்பியர் காலத்திலேயே 'பொய்யும் புனை சுருட்டும்' தோன்றிவிட்டன என்பது பெறப்படுகின்றது. பொய்யாவது, செய்த ஒன்றினைச் செய்திலேன் எனல்; வழுவாவது, சொல்லுதலேயன்றி ஒழுக்கத்து இழுக்கி ஒழுகுதல். கரணம் என்பது வதுவைச் சடங்கு.

**கற்பு-தொல்காப்பியரின் கருத்து :** 'கற்பு' என்பதைப் பற்றித் தொல்காப்பியரும் கூறியுள்ளார்.

கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே.[17]

[ கிழவன்-தலைவன் ; கிழத்தி-தலைவி ]

என்பது தொல்காப்பிய நூற்பா. காதலர்களைப் பெற்ற தந்தை, தாய், தமையர், மாதுலன் ஆகியோர் 'கொடைக்குரி மரபினோர்' என்று இளம்பூரணர் கூறுவர். அவர்கள் இல்லாத சந்தர்ப்பங்களில் சான்றோரையும் தெய்வத்தையும் கொள்வது வழக்கம் என்றும் அவர் குறிப்பிடுகின்றார். கொடுப்பக் கொள்வது கற்பு என்று ஓதினமையால், அது கொடுக்குங்கால் களவு வெளிப்பட்ட வழியும் மெய்யுறு புணர்ச்சியின்றி உள்ளப்புணர்ச்சியான் உரிமை பூண்ட வழியும் கொள்ளப்பெறும் என்பதை அறிதல் வேண்டும். களவுக் காலத்தில் தமரை யறியாது தலைவி தலைவனுடன் சென்று அவன் ஊரில் மணந்துகொள்வதையும் கற்பென்று கொள்ள

16. கற்பியல்—நூற்பா 4
17. ஷ நூற்பா 1

வேண்டும் என்பது தொல்காப்பியரின் கருத்து. இதனை அவர்,

'கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே
புணர்ந்துடன் போகிய காலையான'[18]

என்ற நூற்பாவில் கூறியுள்ளார்.

**கற்பின் கட்டளைகள்:** களவொழுக்கத்திலுள்ளது போலவே கற்பொழுக்கத்திலும் பல கட்டங்கள் உள்ளன. அவற்றைத் தொல்காப்பியர்.

'மறைவெளிப் படுதலும் தமரிற் பெறுதலும்
இவைமுத லாகிய இயனெறி திரியாது
மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்
பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே'[19]

[மறை - களவு; தமர் - உறவினர்; இயல் நெறி - இயற்கை நெறி; மலிவு - மகிழ்தல்].

என்று ஒருவாறு தொகுத்துக் கூறுகின்றார். கரந்து ஒழுகும் ஒழுக்கம் வெளிப்படுதல் தமர் கொடுப்பத் தான் பெறுதல் ஆகிய இரண்டு முதலாகிய இயற்கை நெறியில் தப்பாது மகிழ்தல், புலத்தல், ஊடல், ஊடல் உணர்தல், பிரிதல் ஆகிய கட்டங்கள் கற்பில் உள்ளன என்று கூறுகின்றார் ஆசிரியர். இங்கு **மலிதல்** என்பது, இல்லொழுக்கமும் புணர்ச்சியும் முதலாயவற்றால் மகிழ்தல். **புலவி** என்பது, புணர்ச்சியால் வந்த மகிழ்ச்சி குறைவுபடாமல் காலங் கருதிக்கொண்டு உய்ப்பதோர் உள்ள நிகழ்ச்சி. **ஊடல்** என்பது, உள்ளத்து நிகழ்ந்ததனைக் குறிப்பு மொழியாலன்றிக் கூற்று மொழியால் உரைப்பது. அங்ஙனம் ஊடல் நிகழ்ந்த வழி அதற்கேதுவாகிய பொருளின்மை உணர்வித்தல் **உணர்வு** எனப்படும். இல்லாததனை உண்டோ என ஐயுற்ற மயக்கந்தீர உணர்த்துதலால் உணர்த்துதல் எனவும், அதனை உணர்தலால் உணர்வு எனவும் இது வழங்கப்பெறும். புலவியாயின் குளிர்ப்பக் கூறலும் தளிர்ப்ப முயங்கலும் முதலாயவற்றால் நீங்குதலின் அதற்கு உணர்த்துதல் தேவை இல்லை. இவ்வாறு பேராசிரியர் என்ற உரையாசிரியர் விளக்குவர்.[20] பிரிவு

18. ஷை நூற்பா 2
19. செய்யுளியல் - நூற்பா 179
20. செய்யுளியல் - நூற்பா 187 (பேராசிரியர் உரை)

என்பது இவை நான்கினெடும் வேறுபடுதலின் பிற்கூறினர். இதனை ஊடலொடு வைக்கவே, ஊடலிற்பிறந்த துனியும் பிரிவின்பாற்படும் என்பது கொள்ளப்படும். துனித்தல் என்பது வெறுத்தல்; அது காட்டக் காணது கரந்து மாறும் இயல்பினது. அறுவகைப் பிரிவும் பிரிவு என்பதிலேயே அடங்கும்.

இந்த இரண்டு கைகோள்களிலும் தலைவன், தலைவி, தோழி முதலியோர் பேசக்கூடிய இடங்களையெல்லாம் தொல்காப்பியர் தொகுத்துக் கூறியுள்ளார். அவற்றை யெல்லாம் இங்குக் கூறினல் மிகவும் விரியும். இவர்களுள் களவொழுக்கத்தில் கூற்று நிகழ்த்துதற்குரியோர் யாவர் என்பதையும், கற்பொழுக்கத்தில் கூற்று நிகழ்த்துதற்குரியோர் யாவர் என்பதையும் வரையறை செய்துள்ளார் தொல்காப்பியர். இந்த முறையில் அவர்கள் கூற்றுக்கள் நிகழும்படியாகத்தான் கவிஞர்கள் பாட்டுக்களை இயற்றுவர். இதுவே தொல்காப்பியர் வகுத்த இலக்கிய மரபு.

பார்ப்பான் பாங்கன் தோழி செவிலி
சீர்த்தகு சிறப்பிற் கிழவன் கிழத்தியொடு
அளவியல் மரபின் அறுவகை யோரும்
களவினில் கிளவிக்கு உரியர் என்ப.[21]

என்ற நூற்பாவால் பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, தலைவன், தலைவி என்பவர்கள் சிறப்பாகக் களவினுள் கூற்று நிகழ்த்துவதற்கு உரியவர்கள் என்பது தெரிகின்றது. மேற் கூறிய அறுவருடன் பாணன், கூத்தன், விறலி, பரத்தை, அறிவர், கண்டோர் ஆகிய அறுவரும் சேர்ந்து கற்பினுள் கூற்று நிகழ்த்துவதற்குரியவர் என்பதைத் தொல்காப்பியர்,

பாணன் கூத்தன் விறலி பரத்தை
யாணஞ் சான்ற அறிவர் கண்டோர்
பேணுதகு சிறப்பிற் பார்ப்பான் முதலா
முன்னுறக் கிளந்த அறுவரோடு தொகைஇத்
தொன்னெறி மரபிற் கற்பிற் குரியவர்.[22]

[கிளந்த - சொன்ன; தொகைஇ - கூட்டி]

என்ற நூற்பாவால் உணர்த்துகின்றார்.

21. செய்யுளி— நூற்பா 181.
22. செய்யுளி— நூற்பா 182.

**வாயில்கள் உரைக்கும் முறை :** அகப்பொருள் ஒழுகலாற்றில் உரையாடுதற்குரிய பாணர் கூத்தர் முதலியோர், தாம் தாம் சொல்லத் தகுவனவற்றைத் தவறின்றி வெளிப்படையாகக் கூறுதல் வேண்டும் என்பது தொல்காப்பியரின் விதி.

> வாயிற் கிளவி வெளிப்படக் கிளத்தல்
> தாவின் றுரிய தத்தங் கூற்றே 23

மேற்குறித்த வாயில்கள் அல்லாத தலைமகளும் நற்றாயும் தாம் கூறக் கருதியவற்றை மறைத்துச் சொல்லப்பெறுவர் என்பது ஈண்டு அறியத்தக்கது. உரையாசிரியரும், வாயில்களாவார் குற்றேவல் முறையினராதலானும், வெளிப்படக் கூறுக்கால் பொருள் விளங்காமையானும், பொருள் விளங்காதாயின் இவர்களது கூற்றிற்குப் பயனின்மையானும் அவர்கள் மறைத்துக் கூறாது வெளிப்படவே கூறுதல் வேண்டும் எனவும் விளக்கியுள்ளமை ஈண்டு கருதத்தக்கது.[24]

களவுக்காதல் பற்றிய நிகழ்ச்சிகள் உலகிலுள்ள பல மொழிகளின் இலக்கியங்களிலும் காணப்பெறுகின்றன. ஆனால், தமிழ்க்கவிதைகளில் சில இலக்கண வரம்புடன் அந்நிகழ்ச்சிகள் சித்திரிக்கப்பெறுவதைப் போலும் திணை, துறை முதலிய ஒழுங்குகள் அமைந்திருப்பன போலும் பிற நாட்டு இலக்கியங்களிற் காண முடியாது. இந்த வரையறையுடன் அமைந்த கவிதைகள் உலகில் எம்மொழியிலும் காணப்பெறவில்லை ; தமிழ் மொழியின் தனிச் சிறப்பு இது.

---

23. பொருளியல் — நூற்பா 45.
24. பொருளியல் — ஷெ நூற்பாவின் உரை.

# 8. இயற்கைப்புணர்ச்சி

இவ்வுலகிலுள்ள பொருள்களை உயிர்ப் பொருள்கள், உயிரில் பொருள்கள் என இரு கூறிட்டுப் பேசலாம். உயிர்ப் பொருள்களின் நலத்தின் பொருட்டே உயிரில் பொருள்கள் படைக்கப்பெற்றிருக்கின்றன. தன் துன்பத்தை உணர்ந்து வருந்துவதும், தன் இன்பத்தை உணர்ந்து களிப்பதும் எல்லா உயிர்க்கும் பொதுவான இயல்பு. ஆனால், மக்கள் வாழ்க்கையின் தனிச் சிறப்பு அதில், பகுத்தறிவு விளக்கம் அமைந்திருப்பதும், இன்பத்தை அவாவி நிற்றலுமேயாகும். அறிவு விளங்கப் பெறுவதெல்லாம், அறியாமை வாயிலாக வரும் துன்பங்களை நீக்கி, இன்பத்தை நுகர்தற்பொருட்டே நிகழ்கின்றது என்பது உய்த்துணர்தற்பாலது. இதனையுணர்ந்த தொல்காப்பியனார்,

எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தான்அமர்ந்து வருஉம் மேவற் றாகும்.[1]

என்று கூறியுள்ளார். இங்ஙனமே, பிற்காலத்தார் உறுதிப் பொருள்களை அறம், பொருள், இன்பம் எனப் பாகுபடுத்தோதியது போலாது அவர்,

'இன்பமும் பொருளும் அறனும் என்றாங்(கு)
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்'[2]

என ஓதியவாற்றானும் இதனை நன்கு அறியலாம். இக்கருத்தினை அடிப்படையாகக்கொண்டுதான் "**திருக்குறள்**

1. பொருளியல் — நூற்பா 27 (இளம்).
2. களவியல் — நூற்பா 1 (இளம்).

அல்லது **வாழ்க்கை விளக்கம்** " என்ற நூலின் ஆசிரியர்[3] நூற் பொருளைத் 'திருக்குறளில்' காணப்பெறுவது போல் அறம், பொருள், இன்பம் எனப் பகுத்தோதாது இன்பம், பொருள், அறம் எனப் பகுத்தோதினர் போலும்! இத்தகைய இன் பத்திற்கு அடிப்படையாக உள்ள இல்வாழ்க்கை கணவன் மனைவியரிடையே உள்ள மிக உயர்ந்த பேரன்பின் வழித் தாக நடைபெறுவதாகும் என்பதும், அப்பேரன்புதான் 'காதல்' என்னும் பெயரால் வழங்கப்பெறுகின்றது என்பதும் நாம் அறிவோம். இதனைப் பரிபாடலும்,

> காதற் காமம் காமத்துச் சிறந்தது
> விருப்போ ரொத்து மெய்யுறு புணர்ச்சி[4]

என்று குறிப்பிடுகின்றது. அன்பின் ஐந்திணைக்குரியதாய இக்காதல் உணர்ச்சிதான் இன்பத்திற்கு அடிப்படையாக இருப்பது. இந்த இன்ப வாழ்வின் இருவேறு நிலைகளைத் தான் 'களவு' என்றும், 'கற்பு' என்றும் பண்டையோர் வகைப்படுத்தி, அவற்றிற்கு வரையறையும் வகுத்துள்ளனர் என்பதை முன்னர்க் கண்டோம்.[5] இத்தகைய உணர்ச்சியைச் சிறந்த முறையில் படைத்துக் காட்டும் இன்ப வாழ்வில் முதன் முதலாக நடைபெறுவது இயற்கைப்புணர்ச்சி ; அஃதாவது, தலைவனும் தலைவியும் ஊழ்வலியால் ஒருவரையொருவர் கண்டு காதல் கொள்வது. இதனை இலக்கண நூல்கள் 'எதிர்ப்பாடு' என்றும் குறிப்பிடும். இந்த இயற்கைப் புணர்ச்சியை இலக்கண நூலார் காட்சி, ஐயம், தெளிதல், தேறல் என்று நான்கு வகையாகப் பகுத்துப் பேசுவர். இவ்வாறு கூறும் ஒரு சில மரபுகளை ஈண்டுக் காண்போம்.

**சிறந்த கைக்கிளை:** மூன்று விதமான கைக்கிளைகளை நாம் அறிவோம். **முதலாவது,** காமஞ்சாலா இளமையோளிடம் நிகழ் வது ; அஃதாவது, காமக்குறிப்பிற்குப் பொருந்தாத பேதைப் பருவத்துப் பெண் ஒருத்தியிடம் ஒரு தலைவன் தன் காதற் குறிப்புத்தோன்றக்கூறுவது. **இரண்டாவது,** ஒத்த அன்பினரா

3. டாக்டர் மு. வரதராசனர்: திருக்குறள் அல்லது வாழ்க்கை விளக்கம்.
4. பரிபாடல்—9 வரி (13, 14).
5. அத்தியாயம்—7

கிய ஒருவனும் ஒருத்தியும் ஊழ்வசத்தால் தம்முள் எதிர்ப் பட்டுக் கூடும் இயற்கைப்புணர்ச்சிக்கு முன் தலைவனிடம் பெரும்பான்மை நிகழும் காட்சி, ஐயம், தெளிதல், தேறல் என்ற நான்கு நிலைகளுமாகும். மூன்றாவது, வேதத்தே கூறப்பெற்ற எண்வகை மணங்களுள் கொல்லேறு கோடல், வில்லேற்றுதல் முதலியன செய்துகொள்ளும் ஆசுரமும், தலைமகளாலும் அவள் தமராலும் பெறாது வலிதிற் கொள்ளும் இராக்கதமும், மூத்தோர் களித்தோர் முதலியோ ரிடம் கூடுதலாகிய பைசாசமும் ஆகும். இவற்றுள் செய்யுள் வழக்கிற்குப் பெரிதும் சிறப்புடையது இரண்டாவது வகைக் கைக்கிளையாகும். தமிழரின் களவொழுக்கத்தில் தலைவன் தலைவரிடையே தோன்றும் அன்பின் பெருக்கினால் 'தான், அவள்' என்னும் வேற்றுமையின்றி, இருவரும் ஒருவராயொழு கும் உள்ளப்புணர்ச்சியே சிறப்புடையது என முன்னர்க் குறிப்பிட்டோம். கம்பநாடனும் இதனைப் பொன்னே போல் போற்றியுள்ளான். இராமபிரானும் சீதாப்பிராட்டியும் வில் முறிக்கப்பெறுவதன் முன் ஒருவரையொருவர் கண்டு விழைவு மிகுந்தனர் என்று வான்மீகர் கூறாதிருப்பவும், கம்பன் தமிழ் முறைக்கேற்ப, அவ்விருவர்க்கும் உள்ளப் புணர்ச்சி நிகழ்ந்ததாகச் சந்தர்ப்பங்கொண்டு இக்கைக்கிளை வகையைப் புணர்ந்து கூறுவது ஈண்டு அறியத்தக்கது. அவ் வுள்ளப்புணர்ச்சி இவ்வாறு கூறப்பெறுகின்றது :

எண்ணரு நலத்தினள் இனையள் நின்றுழிக்
கண்ணொடு கண்ணினைக் கவ்வியொன் றையொன்(று)
உண்ணவும் நிலைபெற(து) உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள்.[6]

நோக்கிய நோக்கெனும் நுதிகொள் வேலினை
ஆக்கிய மதுகையான் தோளில் ஆழ்ந்தன;
வீக்கிய கனைகழல் வீரன் செங்கணும்
தாக்கணங்(கு) அனையவள் தனத்தில் தைத்தவே.[6]

பருகிய நோக்கெனும் பாசத் தால்பிணித்(து)
ஒருவரை யொருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்
வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக் கிதயம் எய்தினர்.[6]

மருங்கிலா நங்கையும் வசையில் ஐயனும்
ஒருங்கிய இரண்டுடற்(கு) உயிரொன் ருயினர்
கருங்கடல் பள்ளியில் கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினல் பேசல் வேண்டுமோ?[6]

மேற்கண்ட பாடல்களில் உள்ளப்புணர்ச்சி சித்திரிக்கப் பெற்றிருப்பதைக் கண்டு மகிழ்க. மேலும், இராமனும் சீதையும் வேட்கை நோயால் பலவாறு துன்புறுவதைக் காட்டும் பாடல்களையும் படித்து இன்புறுக.[7]

**சிந்தாமணி ஆசிரியரின் விளக்கம் :** மேற்குறிப்பிட்ட காட்சி முதலிய நான்கு நிலைகளைச் சிந்தாமணி ஆசிரியர் விளக்குவதைக் காண்போம். விடந்தீண்டப்பெற்ற பதுமையின் மயக்கத்தைச் சீவகன் தெளிவித்ததும் ஒருவர் மேல் ஒருவர் காதல் கொள்கின்றனர்; உள்ளப்புணர்ச்சி ஏற்படுகின்றது.[8] இருவரும் வேட்கை நோயால் வெந்துருகுகின்றனர். தமிழ் முறைக்கேற்ப மீட்டும் இவர்களைச் சோலையில் சந்திக்க வைக்கின்ருர் ஆசிரியர்; இருவர் வரவும் ஒருவரொருவர்க்குத் தெரியாமலே நிகழ்வதாகக் காட்டுகின்ருர்.[9] மாதவிப்பந்தர் அருகே ஆயத்தை விட்டு அகன்று, தனியே நின்றுகொண்டிருக்கும் பதுமையைச் சீவகன் காண்கின்ருன். இது **காட்சி.**

கறந்த பாலினுட் காசில் திருமணி
நிறம்கிளர்ந்துதன் நீர்மைகெட் டாங்கவன்
மறைந்த மாதவி மாமை நிழற்றலின்
சிறந்த செல்வனும் சிந்தையின் நோக்கினன்.[10]

[காசு - குற்றம்; திருமணி - அழகிய நீலமணி; கிளர்ந்து - கிளர; கெட்டாங்கு - கெட்டாற்போல; மாமை - மாமை நிறம்; மாதவி - மாதவிப்பூ.]

குறைவின்றி நிறைந்த ஆண் தன்மையும் பெண் தன்மையும் தூண்டுதலினல் ஒப்புயர்வில்லாத் தலைவனும் தலைவியும் ஒருவரையொருவர் கண்டலையே காட்சி என்பர்.

இவ்வாறு ஒத்த அன்புடைய தலைவன் தலைவியர் ஒருவரையொருவர் காண்பது ஊழ்வலியினல் என்பது பண்டை

6. பாலகாண். - மிதிலைக். 35, 36, 37, 38.
7. பாலகாண்ட. - மிதிலைக். 46-60; கைக்கிளை 2 - 10 (எஸ். இராஜம் பதிப்பு).
8. சீவகசிந்தாமணி—1304-1315;
9. சீவகசிந்தாமணி—செய். 1316-1322.
10. சீவகசிந்தாமணி—செய். 1325.

யோர் கருத்து. அன்பு முதலியவற்ருல் தலைவன் மிக்கவனுயினும் குற்றமில்லை[11] இச்செய்தியைத் தொல்காப்பியர்,

ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பால தாணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப
மிக்கோ னாயினும் கடிவரை இன்றே.[12]

என்று கூறுவர். இங்ஙனம் ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்படும் முதற்காட்சிக்கு நல்லூழின் ஆணையே காரணமென்பார் 'உயர்ந்த பாலதாணையின்' என்றும், அவ்வூழின் ஆணைக்குக் காரணமாவது அவ்விருவரும் பண்டைப்பிறப்புக்களிற் பயிலியது கெழீஇய நட்பென்பார் 'ஒன்றியுயர்ந்த பாலதாணை' என்றும், பல பிறவிகளிலும் பழகிய அன்பின் தொடர்ச்சியே ஒருவரையொருவர் இன்றியமையாதவராகக் காணுதற்குரிய காதற்கிழமையை வழங்கியதென்பார் 'ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப' என்றும் ஆசிரியர் கூறியுள்ளதாக அறிதல் வேண்டும். ஒத்த பருவத்தார் ஒருவரையொருவர் கண்டுழியெல்லாம் புணர்ச்சி வேட்கை தோற்ருமையின், 'ஒன்றி யுயர்ந்த பாலதாணையிற் காண்ப' என்ருர் ஆசிரியர். ஈண்டுக் காணுதல் என்றது, தனக்குச் சிறந்தாராகக் கருதுதலை.

இக்காட்சிக்குப் பின், இங்ஙனம் தோன்ருநின்ற மாது, திருமகள் முதலாகிய தெய்வமோ, அன்றி, மக்கள் பிறப்பினவோ என்று மயங்கிக் கூறுவது ஐயமாகும். பதுமையைக் கண்ட சீவகன் ஐயப்பட்டதைத் தேவர்,

வரையின் மங்கைகொல், வாங்கிருந் தூங்குநீர்த்
திரையின் செல்விகொல், தேமலர்ப் பாவைகொல்,
உரையின் சாயல் இயக்கிகொல், யார்கொல்இவ்
விரைசெய் கோலத்து வெள்வளைத் தோழியே.[13]

[வரையின் மங்கை - வரையரமகள்; வாங்கு இரும் தூங்குநீர்த் திரையின் செல்வி - நீரரமகள்; மலர்ப்பாவை - திருமகள்; உரையின் சாயல் - உரைத்தற்கினிய சாயலையுடைய; விரைசெய் கோலம் - மணம் கமழும் கோலம்]

11. "ஆனால் யாதானும் ஒன்றினுயினும் தலைமகள் மிக்காளாயின் கடியப்படும்" என்பர் இளம்பூரணர்.

12. களவியல் - நூற்பா 2 (இளம்).

13. சீவகசிந்தாமணி-1326.

என்று கூறுகின்றூர். இவ்வாறு ஐயம் தோன்றுதற்குத் தொல்காப்பியரும்;

> சிறந்துழி ஐயஞ் சிறந்த தென்ப
> இழிந்துழி இழிவே சுட்ட லான.[14]

என்று விதி கூறுவர். இதற்கு இளம்பூரணர் தரும் விளக்கம் மிக நன்ருக அமைந்துள்ளது. "ஒருவன் ஒருத்தியைக் கண்ணுற்றுழி அவ்விருவகையும் உயர்வுடையராயின் அவ்விடத்து ஐயம் சிறந்தது என்று சொல்லுவர். அவர் இழிபுடையராயின், அவ்விடத்து அவள் இழிபினையே சுட்டியுணர்தலான் என்றவாறு. சிறப்பு என்பது மிகுதி. ஐயமிகுதலாவது, மக்களுள்ளாள் அல்லள் தெய்வமோ என மேலாயினரோடே ஐயுறுதல். சிறந்துழி என்பதற்குத் தலைமகள்தான் சிறந்துழியும் கொள்ளப்படும்; அவளைக் கண்ட இடம் ஐயப்படுவதற்குச் சிறந்துழியும் கொள்ளப்படும். உருவமிகுதியுடையவளாதலின் ஆயத்தாரிடைக் காணினும் தெய்வம் என்று ஐயுறுதல். இதனுற்சொல்லியது, உலகத்துத், தலைமகனும் தலைமகளுமாக நம்மால் வேண்டப்பட்டார் அந்தணர் முதலாய நான்கு வருணத்தினும் ஆயர் வேட்டுவர் குறவர் பரதவர் என்னும் தொடக்கத்தினும் அக்குலத்தாராகிய குறுநில மன்னர்மாட்டும் உளராவரன்றே; அவரெல்லாரினும் செல்வத்தானும் குலத்தானும் வடிவானும் உயர்ந்த தலைமகனும் தலைமகளுமாயினேர்மாட்டே ஐயம் நிகழ்வது. அல்லாதார் மாட்டும் அவ் இழிமரபினையே சுட்டி நிற்குமாதலான் என்றவாறு"[15] என்ற உரைப்பகுதியைப் படித்து உளங்கொள்க. தலைவன் கண்ட தலைவி காமப்பருவம் அடையாதிருப்பின் தலைவன் குறிப்புக்கு எதிர்க்குறிப்பு நிகழாது. அஃது ஒருதலைக் காமமாகிய கைக்கிளைக் குறிப்பின்பாற்படும்.[16] அதனுல் தலைவன் கொண்ட ஐயத்தினுல் யாதொரு பயனும் இல்லை. எனவே, தலைமகள் காமப்பருவத்தாளாயிருந்தால்தான் தலைவியின் குறிப்புக்கு எதிர்க்குறிப்பு

---

14. களவியல் - நூற்பா 3. (இளம்)
15. களவியல் - 3-ஆம் நூற்பாவின் உரை.
16 அகத்திணை - நூற்பா 50 (இளம்)

நிகழ்த்துவாள். தலைவன்மாட்டு நிகழும் ஐயமும் சிறந்து தோன்றும். இதனையே மேற்குறிப்பிட்ட களவியல் நூற்பா (நூற்பா - 3) குறிப்பிடுகின்றது. இங்ஙனம் ஐயப்படுபவன் தலைமகனே என்பது தொல்காப்பியரின் கருத்தாகும். இதனை,

உயர்மொழிக் கிளவி உறழுங் கிளவி
ஐயக் கிளவி ஆடூஉவிற் குரித்தே.[17]

என்று விதியும் கூறுவர். தலைவி தன்னினும் உயர்ந்த தலைவனை நோக்கி: 'இவன் தெய்வமோ? மகனோ?' என்று ஐயுற்றால் அவள் உள்ளத்தில் அச்சம் தோன்றுமேயன்றிக் காமவுணர்வு தோன்றாது என்று இதனை விளக்குவர் இளம்பூரணர்.

மேற்கூறியவாறு தலைமகன் விண்ணவர்க்கன்றி மண்ணவர்க்கேயுரிய குறிகள் சில தலைவியிடம் நிகழ்தல் கண்டு ஐயம் நீங்குதல் '**தெளிதல்**' எனப்பெறும். தெளிதல்— உண்மையுணர்தல். இதனைத் '**துணிவு**' என்றும் வழங்குவர். சீவகன் பதுமையை இன்னாளெனத் தெளிந்ததைத் திருத்தக்க தேவர்,

மாலை வாடின; வாட்கண் இமைத்தன;
காலும் பூமியைத் தோய்ந்தன; காரிகை.
பாலின் தீஞ்சொல் பதுமைஇந் நின்றவள்
சோலை வேய்மருள் சூழ்வளைத் தோழியே.[18]

[காரிகை - அழகு, மருள் - உவம உருபு. வேய் - தோளிற்கு உவமம்.]

என்று கூறுகின்றார். தன்னிடம் தோன்றும் ஐயத்தைக் களையும் கருவிகளாகச் சிலவற்றைக் கூறுவர் தொல்காப்பியர்:

வண்டே இழையே வள்ளி பூவே
கண்ணே அலமரல் இமைப்பே அச்சமென்று
அன்னவை பிறவும் ஆங்கண் நிகழ
நின்றவை களையும் கருவி என்ப[19].

17. பொருளியல் - நூற்பா 42 (இளம்.)
18. சீவக சிந்தாமணி - 1329.
19. களவியல் - நூற்பா 4 (இளம்.)

என்ற நூற்பா அவற்றைக் குறிப்பிடுகின்றது. இதற்கு இளம்பூரணர் தரும் விளக்கம்: "**வண்டாவது,** மயிரின் அணிந்த பூவைச் சூழும் வண்டு. அது பயின்றதன் மேலல்லது செல்லாமையின் அதுவும் மக்களுள்ளாள் என்றறிவ தற்குக் கருவியாயிற்று. **இழை** என்பது, அணிகலன். அது செய்யப்பட்டதெனத் தோன்றுதலானும், தெய்வப் பூண் செய்யா அணியாதலானும் அதுவும் அறிதற்குக் கருவி யாயிற்று. **வள்ளி** என்பது, முலையினும் தோளினும் எழுதிய கொடி. அதுவும் உலகின் உள்ளதாகித் தோன்றுத லின் (அதுவும்) கருவியாயிற்று. **அலமரல்** என்பது, தடு மாறுதல். தெய்வமாயின் நின்ற வழி நிற்கும். அவ்வா றன்றி, நின்றுழி நிற்கின்றிளள் என்று சுழற்சியும் அறிதற்குக் கருவியாயிற்று. **இமைப்பென்பது,** கண்ணிமைத்தல். தெய் வத்திற்குக் கண் இமையாமையின் அதுவும் அறிதற்குக் கருவியாயிற்று. **அச்சமென்பது,** ஆண் மக்களைக் கண்டு அஞ்சுதல். அது தெய்வத்திற்கு இன்மையான் அதுவும் அறி தற்குக் கருவியாயிற்று. **அன்னபிறவும்** என்றதனான், கால் நிலந்தோய்தல், வியர்த்தல், நிழலாடுதல் கொள்க. இவை கருவியாகத் துணியப்படும் என்றவாறு." இவை வானகத் தனவன்றி வையகத்தனவாகக் கொள்ளுதல் கவி மரபாகும்.

இவ்வாறு துணிந்த பிறகு, புணர்ச்சி வேட்கை தூண்டத் தலைவன் தலைவியைக் கூடுவதற்கு ஆயத்தம் செய்வதைத் **'தேறல்'** என்று கூறுவர். தேறல் - உணர்ந்ததில் உறுதி கொள்ளுதல். இதுதான் **இயற்கைப்புணர்ச்சி** என்பது. இதனைச் சிந்தாமணி ஆசிரியர்,

> **தேவர் பண்ணிய தீந்தொடை யின்சுவை**
> **மேவர் தென்றமிழ் மெய்ப்பொரு ளாதலிற்**
> **கோவத் தன்னமென் சீறடிக் கொம்பனுள்**
> **பூவர் சோலை புகுவலென் றெண்ணினுள்** [20]

[தேவர்-கந்தருவர்; தீந்தொடை - இனிய நரம்பையுடைய யாழ்; இன்சுவை - கந்தருவமாகிய இனிய மணம்; மேவர் = மேவரு - பொருந்துதல் வருகின்ற (விகாரம்); கோவத் தன்ன-இந்திர கோபத்தைப் போன்று சிவந்த.]

---

20. சீவக சிந்தா.—1328.

என்று கூறுகின்றார். தலைவியின் கருத்தறியாது அவளை அணுகுவானாயின் அது பெருந்திணையாய் முடியும். ஒத்த அன்பினால் நிகழ்தற்குரிய இக்களவொழுக்கத்திற்குத் தலைமகளது உள்ளக்கருத்தைத் தலைமகன் உணர்ந்துகொள்ளுதலே முதற்கண் வேண்டப்பெறுவதொன்று. இந்நிலையில் ஒருவரோடொருவர் உரையாடுதல் முறையன்று; கண்களே அக்காமக்குறிப்புரையை நிகழ்த்துவதற்குத் துணைபுரிபவை. 'காமஞ் சொல்லா நாட்டம்' இவ்வுலகத்தில் இல்லையாதலானும்[21] பெண்மைக்கே இயல்பாகவுள்ள நாணமும் மடமும் நிலைபெற்ற தலைவியிடம் 'காமத்திணை' குறிப்பினாலும் இடத்தினாலும் அல்லது வேட்கை புலப்பட நிகழாது ஆதலானும்[22] கண்களையே துணையாகக் கோடல் வேண்டும். கண்டவுடன் வேட்கை தோன்றி ஒருவரது உள்ளக்குறிப்பினை மற்றவர் ஏற்றுக்கொண்ட நிலையில்தான் கண்ணினால் வரும் குறிப்பு நிகழும். இதனைத் தொல்காப்பியர்,

> நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்
> கூட்டி உரைக்கும் குறிப்புரை யாகும்.[23]
>
> [நாட்டம்-கண்; அறிவுடம்படுத்தல்-இருவரது அறிவினையும் ஒருப்படுத்தல்; கூட்டி-தமது வேட்கையோடு கூட்டி.]

என்று கூறுவர். இவ்விதிக்குத் திருவள்ளுவனாரின்,

> கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
> என்ன பயனும் இல.[24]

என்ற குறளை ஏற்ற இலக்கியமாகக் கொள்ளலாம். இங்ஙனம், இருவர் குறிப்பும் ஒத்து நிற்றலை **உள்ளப்புணர்ச்சி** என்றும், **வழிநிலைக் காட்சி** என்றும் கூறுவர். இவ்வுள்ளப் புணர்ச்சியே மெய்யுறு புணர்ச்சிக்கு நிமித்தமாகும்.

**மெய்யுறு புணர்ச்சிக்குரிய நிமித்தங்கள்:** தலைமகன் பெருமையும் உரனும் உடையவன். பெருமையாவது, பழியும் பாவமும் அஞ்சுதல். உரன் என்பது, அறிவு. இங்ஙனமே, நிறை

---

21. களவியல்-நூற்பா 18 (இளம்.)
22. களவியல்-நூற்பா 19 (இளம்.)
23. களவியல்-நூற்பா 5 (இளம்.)
24. குறள்-1099

காவலுக்கு இடையூறு நேருமோ என்ற அச்சமும், பெண்ணியல்பாகிய நாணமும், தான் மேற்கொண்ட கொள்கையை நெகிழவிடாமையாகிய மடனும் தலைவியின் சிறப்பியல்புகளாகும். இக்குணங்களுடைய இவ்விருவரும் தம்மைக் காவாது, வேட்கை மீதூர்ந்த நிலையில் தத்தம் பண்புகளை நெகிழவிடாதல் கூடாமையின், தாம் எதிர்ப்பட்ட முதற் காட்சியிலேயே மெய்யுறு புணர்ச்சிக்கு உடன்படாது, உள்ளப் புணர்ச்சியளவே ஒழுகி, மணந்துகொண்ட பின்னரே கூடுதல் முறையாகும் என்பது தொல்காப்பியனரின் கருத்து. மெய்யுறு புணர்ச்சி நிகழ்வதற்கு முன்னரே நடைபெறும் சில நிலைகளை ஆசிரியர் கூறுகின்ருர்:

வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்
ஆக்கஞ் செப்பல் நாணுவரை இறத்தல்
நோக்குவ எல்லாம் அவையே போறல்
மறத்தல் மயக்கம் சாக்காடு என்றிச்
சிறப்புடை மரபினவை களவென மொழிப.[25]

என்பது அவர் கூறும் விதி. **வேட்கை** என்பது, ஒருவரையொருவர் பெறல் வேண்டும் என்னும் உள்ள நிகழ்ச்சி. **ஒருதலை யுள்ளுதலாவது,** இடைவிடாது நினைத்தல். **மெலிதலாவது,** உண்ணுமையால் உண்டாகும் உடல் மெலிவு. **ஆக்கஞ் செப்பலாவது,** யாதானும் ஓர் இடையூறு கேட்ட வழி அதனை ஆக்கமாக நெஞ்சிற்குக் கூறிக்கொள்ளுதல். **நாணுவரை யிறத்தலாவது,** ஆற்றுந்துணையும் நாணி அல்லாத வழி அதன் வரையிறத்தல். **நோக்குவ எல்லாம் அவையே போறலாவது,**[26] பிறர் தம்மை நோக்கிய நோக்கெல்லாம் தம் மனத்துக் கரந்து ஒழுகுகின்றவற்றை அறிந்து நோக்குகின்ருரெனத் திரியக் கோடல். **மறத்தலாவது,** விளையாட்டு முதலியவற்றை மறத்தல். **மயக்கமாவது,** செய்திறன் அறியாது கையற்றுப்

25. களவியல்-நூற்பா 9 (இளம்)

26. 'தன்னுற் காணப்பட்டன எல்லாம் தான் கண்ட உறுப்பு போலுதல்' என்பர் இளம்பூரணர். சூர்ப்பணகை-இராவணன் கண்ட உரு வெளித் தோற்றத்தை இதற்கு எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம். உரு வெளித் தோற்றத்தை உளவியலார் '**புறத்தெறிதல்**' (projection) என்று கூறுவர்.

புள்ளும் மாவும் முதலியவற்றோடு கூறல். **சாக்காடாவது,** மடலேறுதலும் வரை பாய்தலும் போல்வன கூறல். இந்த ஒன்பது நிலைகளும், முன்னர்க் கூறிய காட்சி, ஐயம், துணிவு என்ற மூன்றும் சேர்ந்த இப்பன்னிரண்டும் அன்புற்றோர் இருவர் துணையாகக் கூடுவதற்குரிய நிமித்தங்கள் எனக் கூறுவர் தொல்காப்பியர். இவை நிகழ்ந்த பின்னரே மெய்யுறு புணர்ச்சி நிகழும் என்பது அவர் கருத்து.

மெய்யுறு புணர்ச்சி நிகழ்வதிலும் ஓர் வரையறை உண்டு. தலைவி தன் வேட்கையைத் தலைவனிடம் முன்னதாகச் சொல்லுதல் வழக்கம் இல்லை. எனினும், அவள் வேட்கையை ஆராயின் அது புதுக் கலத்தின்கட் பெய்த நீர் புறத்துப் பொசிந்து காட்டுமாறு போலும் உணர்வினையுடைத்து என்று கூறுவர் தொல்காப்பியர்.

தன்னுறு வேட்கை கிழவன்முற் கிளத்தல்
எண்ணுங் காலைக் கிழத்திக் கில்லைப்
பிறநீர் மாக்களின் அறிய ஆயிடைப்
பெய்ந்நீர் போலும் உணர்விற் றென்ப.[27]

என்பது அவர் கூறும் விதி. மேலும், இக்களவு கூட்டிவைப்பார் பிறரின்றித் தனிமையாகவும் பொலியும். ஆதலின், தலைவன் தலைவி இருவரும், தத்தம் உள்ளக்கருத்தைத் தாமே, புலப்படுத்தும் தூதுவராக நின்று கூடுதலும் உண்டு என்பது பெறப்படும். எனவே, பாங்கற்கூட்டம், தோழியிற் கூட்டம் ஆகியவை யாவர் மாட்டும் நிகழ வேண்டும் என்ற வரையறை இல்லை என்பதை அறிதல் வேண்டும்.

**மெய்யுறு புணர்ச்சிக்கு முன்:** இவ்விடத்தில் இன்னொரு செய்தியும் அறியத் தக்கது. தலைமகளைத் தனிமையில் எதிர்ப்பட்ட தலைமகன், தனதுபெருமையும் அறிவும் நீங்கவேட்கை மீதூர்தலால், மெய்யுறு புணர்ச்சியை விரும்பினானாயினும் தலைமகள் மாட்டு நிற்கும் அச்சமும் நாணும் மடனும் அதற்குத் தடையாக நிற்கும். அவை நீங்குதற்பொருட்டுத் தலைவன் தலைமகளை முன்னிலைப்படுத்திச் சில கூறுதல் உண்டு. தொல்காப்பியர் அவற்றை,

---

27. களவியல்-நூற்பா 28 (இளம்.)

முன்னிலை யாக்கல் சொல்வழிப் படுத்தல்
நன்னயம் உரைத்தல் நகைநனி உரூஅ
அந்நிலை யறிதல் மெலிவுவிளக் குறுத்தல்
தன்னிலை யுரைத்தல் தெளிவகப் படுத்தலென்று
இன்னவை நிகழும் என்மனார் புலவர்.[28]

என்று தொகுத்துக் கூறுவர். இவற்றுள் முன்னிலையாக்கல் என்பது, முன்னிலையாகாத வண்டு நெஞ்சு முதலியவற்றை முன்னிலையாக்கிக் கோடல், சொல்வழிப்படுத்தலாவது, தான் சொல்லுகின்ற சொல்லின் வழி அவள் நிற்குமாறு படுத்துக் கூறுதல். நன்னயம் உரைத்தலாவது, மேற்கூறிய வண்டு முதலியன சொல்லுவனவாக அவற்றிற்குத் தன் கழி பெருங் காதல் கூறுவானாய்த் தன்னயப்பு உணர்த்துதல். நகை நனி உரூஅது அந்நிலை அறிதலாவது, தலைமகன் தன் நன்னயம் உரைத்தலைக் கேட்ட தலைவிக்கு இயல்பாக அகத்து உளவாகும் மகிழ்வால் புறந்தோன்றும் முறுவற் குறிப்பு மிக்குத் தோன்றா; அந்நிலையினைத் தலைவன் அறிதல். மெலிவு விளக்குறுத்தலாவது, தலைவன் அகத் துறும் நோயால் புறத்து நிகழும் தளர்வினைக் குறிப்பான் எடுத்துக் கூறல். தன்னிலையுரைத்தலாவது, தன்னுள்ளத்து வேட்கை மீதூர்தலை நிலைப்படச் சொல்லுதல். தெளிவு அகப்படுத்தலாவது, தலைமகள் உள்ளப்பண்பினைத் தான் அறிந்த தெளிவினைத் தன் மனத்தகத்தே தேர்ந்து வெளிப் படுத்தல். இவை ஏழும் இயற்கைப்புணர்ச்சிக்கு முன்னர் நிகழும் உரையாடல் வகைகளாம் என்பது ஆசிரியர் கருத்து. இவற்றிற்கு உரையாசிரியர்கள் காட்டும் பாடல்கள் இவற் றைத் தெளிவாக விளக்கும்.

இதற்குமேல் இயற்கைப்புணர்ச்சியாகிய மெய்யுறு புணர்ச்சி நிகழத் தொடங்குவதற்கு முன்னும் சில நிகழ்ச்சி கள் நிகழும். அவற்றை ஆசிரியர்,

'மெய்தொட்டுப் பயிறல் பொய்பா ராட்டல்
இடம்பெற்றுத் தழாஅல் இடையூறு கிளத்தல்
நீடுநினைத் திரங்கல் கூடுதல் உறுதல்'[29]

28. களவியல்—10 (இளம்).
29. களவியல்—11 (இளம்).

என்று தொகுத்துக் கூறுவர். மெய் தொட்டுப் பயிறலாவது, தலைவியின் மெய்யைத் தீண்டிப் பழகுதல். நச்சினார்க்கினியர், புலையன் தீம்பால் போல் மனம் கொள்ளுதலும் கொள்ளாமையுமாகித் தலைவி நிற்கின்ற காலத்தே தொட்டான் என்பர். மெய் என்பது ஈண்டுத் தோள். பிற்காலத்தார் இக்கிளவியை 'வண்டோச்சி மருங்கணைதல்' என்பர். அஃதாவது, தலைமகளைச் சார எண்ணிய தலைவன், அவள் குழலை நோக்கி வந்த வண்டையோட்டுவது போல நெருங்கி, ஓட்டுமிடத்துத் தன் கை பட்டது போலத் தொடுதலாகும் இது. பொய் பாராட்டலாவது, அங்ஙனம் தீண்டி நின்றுழித் தலைவியின் குறிப்பறிந்து அவளை ஓதியும் நுதலும் நீவிப் பொய்யாக ஒரு காரணம் படைத்து உரைத்துப் பாராட்டல். இடம் பெற்றுத் தழாஅல் ஆவது, பொய் பாராட்டல் காரணமாகத் தலைவிமாட்டு அணிமையிடம் பெற்றுத் தழுவக் கூறல். இடையூறு கிளத்தலாவது, அவள் பெருநாணினளாதலின் இங்ஙனம் கூறக் கேட்டுக் கூட்டத்திற்கு இடையூறாகக் கண் புதைத்தல், கொம்பர்களிலும் கொடிகளிலும் மறைந்து நிற்றல் போன்றவற்றைத் தலைவி நிகழ்த்தியவற்றைத் தலைவன் கூறுதல். நீடு நினைந்திரங்கலாவது, தலைவியை மெய்யுறுதற்கியலும் காலம் வாய்க்காமையை எண்ணி வருந்துதல். கூடுதலுறுதலாவது, புணர்ச்சி எய்துதல். இங்ஙனம் மெய்யுறு புணர்ச்சி நடைபெறும் என்பது ஆசிரியர் கருத்தாகும்.

**இயற்கைப்புணர்ச்சியின் பின் :** இயற்கைப்புணர்ச்சியின் பின்னர்த் தலைவனது சொல்லின் எல்லையைக் கடத்தல் தலைவிக்கு இல்லை. இனி, தாம் சந்திக்கும் இடத்தைத் தலைவியே சுட்டியுரைத்தல் வேண்டும். காரணம், அவள் செல்லும் இடங்களை அவள்தான் அறிவாள். 'களஞ்சுட்டும் கிளவி கிழவியாகும்'[30] என்று கூறுவர் ஆசிரியர். தோழியால் அறிவிக்கப்பெற்று அந்த இடங்களில் சந்தித்தலும் உண்டு. களவுப்புணர்ச்சி தோழியின் துணையின்றி மூன்று நாட்களுக்குமேல் நிகழ்தல் இல்லை. அம்மூன்று நாளைக்குள்

30. களவியல் - நூற்பா 30.

ளும் தோழியின் துணை விலக்கப்பெறுதல் இல்லை. இதனைத் தொல்காப்பியர்,

> முந்நாள் அல்லது துணையின்று கழியாது
> அந்நாள் அகத்தும் அதுவரை வின்றே [31]

என்று கூறுவர். எனவே, இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப் பாடு, பாங்கற்கூட்டம் என்னும் மூன்று நாள் எல்லையளவும் தலைவன் தோழியின் துணையின்றி அவளறியாது தலைவியைக் கண்டு அளவளாவுதல் கூடும் என்பது பெறப்படும். அம் மூன்று நாட்களுக்கு மேலாயின் தோழியின் துணையின்றித் தலைவியைச் சந்தித்தல் அரிது; அதற்குள்ளேயே தோழியின் உடன்பாட்டைப் பெறுதல் வேண்டும். தன்னிடம் அடிக்கடி வரவிரும்பும் தலைவன், தான் வதியும் சூழ்நிலையை நன்கு அறிய வேண்டுமாதலானும், களவொழுக்கம் புறத்தார் அறி யாது நிலைபெற்று நிகழ்தல் வேண்டுமாதலானும், தன் தோழியை இன்னளெனத் தலைவனுக்கு அறிவித்தல் தலைவியி னுடையது. 'துணை சுட்டுக் கிளவி கிழவியதாகும்' [32] என்பர் ஆசிரியர்.

**தலைவன் பிரிதல் :** மெய்யுறு புணர்ச்சிக்குப் பின்னர்த் தலைவன் தன் அன்பு புலப்பட தலைவியைப் புகழ்ந்து கூறி, 'இனி இவளுடன் காலம் நீட்டிப்பின் ஏதமாம்' என்று கருதி, அவளை விட்டுப் பிரிய நினைப்பான். அவ்வாறு நினைப்பவன், வண்டு, நெஞ்சு முதலியவற்றை முன்னிலையாக்கி, அவற்றிற் குத் தன் கழிபெருங்காதலைக் கூறுவான். எடுத்துக்காட்டாக,

> மணிவண்டு! இம்மாதர் கோதை
> மதுவுண வந்த போழ்துஅங்கு
> இணைவண்டிங் கிறந்து பாடின்
> றிருக்குமே இரங்க லின்றுய்த்
> துணைவண்டு துஞ்சின் நீயும்
> துஞ்சுவை யென்று நின்கண்
> பணிகொண்ட தின்மை யாற்றுன்
> பரிவொடும் இருக்கு மன்றே. [33]

31. களவியல்-நூற்பா 32.
32. களவியல்-நூற்பா 33 (இளம்)
33. சீவக சிந்தா-செய். 1502

என்ற பாட்டை இதற்குக் கொள்ளலாம். கேமசரியை மணந்த சிவகன், இரண்டு திங்கள் அவளுடன் இன்பத்துறையில் எளியனுய் இனிதிருந்து, அவளை விட்டு நீங்கிச் செல்லக் கருதியவன், அவளிடம் வெளிப்படக் கூருது, வண்டிற்குக் கூறுவான் போலத் தன் பிரிவுக்குறிப்பை உணர்த்துவதைப் பாடலில் காண்க. தலைவி பிரிதற்குறிப்பை அறிந்து கவலுவாள். உடனே, தலைவன் 'நின்னெடுபட்ட தொடர்ச்சி எழுமையும் வருகின்றதொன்ருதலின், நின்னைப் பிரியேன்; பிரியின் ஆற்றேன், அன்றி, அறனல்லது செய்தேனுமாவேன்' என்று கூறித் தேற்றுவான். எனினும், தலைவி பிரிவிற்குக் கலங்கி, "கார் மருங்கின் மின்னுப் போலவும், நீர் மருங்கிற் கொடி போலவும், தளிரும் முறியும் ததைந்து, குளிரும் நளிரும் கவினி எழா நின்றதோர் கவின்பெறு காரிகை, கண்ணுடி மண்டிலத்து ஊது ஆவி போலக் காண ஒளி மழுங்கிக் கனல் முன் இட்ட மெழுகுப்பாவை போல மனம் உருகிப் பசந்து காட்டுவாள்."[34] காட்டவே, மற்றும் அவளை வற்புறுத்த எண்ணி, தன் ஊர் மிகவும் அணித்து என்று வற்புறுத்திக் கூறித் தான் அடுத்தடுத்து இவண் போதருதல் எளிது என்பதைக் குறிப்பித்தும் தலைவியை ஆற்றுவித்துப் பிரிவான். தலைவன் பிரிவதை இறையனர் களவியலுரையாசிரியர், தலைவியின், "கருங் குழற் கற்றை மருங்குற இருத்தி, அளகமும் நுதலும் தகைபெற நீவி, ஆகமுந்தோளும் அணிபெறத் தைவந்து, குளிர்ப்பக் கூறித் தளிர்ப்ப முயங்கிப்"[35] பிரிவான் என்று மிக நயம்படக் கூறுவர். அகப்பொருள் நூலார் பிரிதலைப் **பிரிவச்சம்** என்றும், வற்புறுத்தலை **வன்புறை** என்று வழங்குவர்.

மேற்கூறியவாறு தலைவியைத் தேற்றிப் பிரியும் தலைவன், அவளைத் தனியளாக நிறுத்தி நீங்கான். தலைவியை நோக்கி, 'நீ நின் ஆயத்தோடு சேர்ந்துகொள்; யான் இவ்வழியாகச் சென்று வருவல்' என்று கூறி, அவளை விளையாடுந்தோழியரிடத்து உய்த்து அகல்வான். அவ்வாறு அகன்றவன், தன்னை அவள் காணுமல் தான் அவளைக் காண்பதோர் அணிமைக்

34. இறை-களவியல்-நூற்பா 2-இன் உரை பக். (44-45)
35. ஷ-உரை (44-45)

கண், மழைக்கொண்டலுள் மின்னுப் புக்கு ஒளிந்தாற்போல, ஒரு தழைப்பொதும்பரில் மறைந்து நின்று, தலைவியின் ஆயக்கூட்டத்தையும் அவ்விடந்தன்னையும் நோக்கி, 'இவளை யான் எய்தினன் என்பது மாயமோ! இனி இவள் நமக்கு எய்தற்கரிய போலும்' என்று ஆற்றாநின்று, பின் ஒருவாறு ஆற்றி, அவளது அருமையறிந்து வருந்தி, அவ்விடத்தினின் றும் நீங்குவான். இவ்விடத்தில், தலைவியுடன் இணைபிரியாது செல்லும் அவள் காதல் தோழியைத் தலைமகன் குறிப்பால் அறிந்துகொள்ளுதலைப் பின்னூல்கள் கூறும். ஆனால், தொல் காப்பியத்தில் "பெட்டவாயில் பெற்றிரவு வலியுறுப் பினும்" [36] என்று தோழியிற்கூட்டம் நிகழுமிடத்தே வைத் துக் கூறப்பெற்றுள்ளது. இவ்வாறே வேறு சில துறைகள் கிளவிக்கோவைகளில் கூறப்பெறுவனவும் உள. அவை யெல்லாம் இயற்கைப்புணர்ச்சியுள்ளே அடங்கும். இவ் இயற்கைப்புணர்ச்சி தெய்வப்புணர்ச்சி என்றும், முன்னுறு புணர்ச்சி என்றும் உரைக்கப்படும். இறையனார் களவியல் இதனைக் **'காமப்புணர்ச்சி'** என்று கூறும். இதற்கு அதன் உரையாசிரியர் கூறும் விளக்கம் : "இனித் தெய்வப் புணர்ச்சி, முன்னுறு புணர்ச்சி, இயற்கைப்புணர்ச்சி என்பன வற்றுள் ஒன்று சொல்லாது, காமப்புணர்ச்சியென்றே கூறிய காரணம் என்னையெனின், இவற்றுள் ஒன்றே சொல் லும் ஒக்கும்; அல்லது, அவை எல்லாம் அன்பினானே நிகழு மாகலின் காமப்புணர்ச்சியென்றார் என்பது; பல காரணத் தினாய பொருளை ஒரு காரணத்திற் சொல்லுவது சிறப் புடைமை நோக்கி. என்னை ? நிலனும் நீரும் காலமும் வித்தும் என இவற்றினது கூட்டத்தினாய முளையை நெல் முளை என்ப. நெல் முளைக்கு நெல் சிறப்புடைக் காரணம். நிலனும் நீரும் முதலாகவுடையன பொதுக்காரணம், அவை பயற்று முளை முதலாவுடையனவற்றிற்குங் காரணமாகலான். அது போல, ஈண்டும் தெய்வமும் இயற்கையும் முன்னுறவும் பொதுக் காரணம், காமம் சிறப்புக் காரணம், ஆகலான், காமப்

36. களவியல் - நூற். 11 (இளம்)

புணர்ச்சி எனப்பட்டது." [37] திருக்கோவையாரின் உரையாசிரியரும் இங்ஙனமே கூறுவர். [38] இதனை அடுத்து நிகழும் இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், தோழியிற்கூட்டம் முன்னரே ஒருவாறு விளக்கப்பெற்றதை ஈண்டு நினைவு கூர்க.

**பேரின்பக்கருத்து :** மேற்கூறப்பெற்ற காட்சி, ஐயம், தெளிவு, குறிப்பறிதல், கூடல் விருப்பம் என்ற துறைகளுக்குப் பேரின்பக்கருத்து உரைப்பதும் உண்டு. அங்ஙனம் உரைப்பார் காட்சியை :அருட்குருவாய் வரும் இறைவன் திருமேனியைக் காண்டல் என்பர்; காட்சியின் புதுமையால் இறைவன் திருமேனியேயென்று தெளிதல் தெளிவு எனப் படும்; திருமேனியால் பயன் பெறலாம் என்றும், அவனிடத்தில் கருணையுண்டென்றும் அறிதல் குறிப்பறிதலின்பாற்படும்; அருள் பெற விரும்புதல் புணர்ச்சி விருப்பம் என்று கூறுவர் மணிவாசகப்பெருமான் திருப்பெருந்துறையில் இறைவனைக் கண்டு, ஐயுற்றுத் தெளிந்து, அருள் பெற்றமை,

> கருணையின் பெருமை கண்டேன் காண்க
> புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
> சிவனென யானும் தேறினன் காண்க.
> அவனெனை யாட்கொண் டருளினன் காண்க [39].

என்ற பாடற்பகுதியால் விளங்கும்.

இனி, மேற்குறிப்பிட்ட இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம் முதலியவற்றை அடுத்துக் காண்போம்.

---

37. இறை-களவியல்-நூற்பா 2-ன் உரை: பக். (37-38)
38. திருக்கோவையார்-செய். 18-இன் உரை.
39. திருவாசகம் : திருவண்டப்பகுதி - வரி (60 - 63)

# 9. பாங்கற்கூட்ட மரபுகள்

இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த தலைமகன் தலைமகளைத் திருமணம் புரிந்துகொள்ளுதல் சிறப்பு. அஃது இயலாதாயின் அவனும் அவளும் மீண்டும் ஒருவரையொருவர் கூடுதலையே விரும்புவர்; மீண்டும் மீண்டும் அவர்கள் இயற்கைப்புணர்ச்சியைப் போன்ற களவொழுக்கத்திலேயே கண்ணும் கருத்துமாக நிற்பர். உடனே திருமணம் புரிந்துகொள்வோர் கற்பொழுக்கத்தில் நிற்பவர்களாவர். அங்ஙனம் மணம் புரிந்து கொள்ள இயலாதவர்கள் பல்வேறு விதமாகக் களவு முறையிலேயே ஒழுகி வருவர். அங்ஙனம் நிகழும் களவுப்பகுதிகளில் ஒன்று பாங்கற்கூட்டம். இஃது இயற்கைப்புணர்ச்சியை அடுத்து நிகழ்வதாக உள்ளது. பாங்கற்கூட்டமென்பது, தலைமகன் தலைமகளுடன் முதற்கூட்டம் பெற்றுப் பிரிந்த மறு நாள் மீண்டும் அவளைக் காண்டற்கு விழைந்து அதற்குத் துணையாய் நிற்கும்படி தலைமகன் தன் நண்பனை வேண்டி அவனால் கூடும் கூட்டமாகும்.

தலைநாள் புணர்ச்சியால் உள்ளம் கலந்து ஒழுகிய தலைமகனும் தலைமகளும் பிரிந்ததன் பின்னர் மிகவும் உள் உளைந்து வருந்துவர். இவர்களின் உள்ள நிலைமையைத் தொல்காப்பியர்,

> வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்
> ஆக்கம் செப்பல் நாணுவரை இறத்தல்
> நோக்குவ எல்லாம் அவையே போறல்
> மறத்தல் மயக்கம் சாக்காடு என்றுஅச்
> சிறப்புடை மரபினவை களவுஎன மொழிப.

என்று கூறுவர். இதன் பொருளை முன்னர் விளக்கினேம்.[2]

1. களவியல்—9 இளம் 2. இந்நூல் பக்கம் —89, 90

இவற்றுள் காதலர்கட்குத் தோன்றும் இடையூறுகளாவன: பிரிவு முதலாயினவாமாதலின் அப்பிரிவும் அன்பினாலன்றோ நிகழ்ந்தது என்று கூறிக்கொள்ளுதலே ஆக்கம் செப்பல்; தலைவனும் தலைவியும் தன் பாங்கனுக்கும் தோழிக்கும் தங்கள் ஒழுக்கத்தைக் கூறித் துணை செய்யுமாறு வேண்டுதலே நாணத்தைக் கடத்தல்; தலைவன் வேட்டை மேலிட்டுக் காட்டில் திரியாதிருத்தலும், தலைவியும் கிளி, பந்து முதலியன கொண்டு விளையாடுதலைத் தவிர்த்தலும் விளையாட்டு மறத்தல்; தலைவன் 'மலைபாய்வேன்' என்பது முதலாகக் கூறுதலும், தலைவி, இப்பிறப்பையொழித்து மறுபிறப்பிலாயினும் என் கணவனையடைவேன்,' என்று கூறுதலும் சாக்காடு.

**இடந்தலைப்பாடு :** இடம் தலைப்பாடு என்பது, அதே இடத்தில் மறுநாளும் இருவரும் எதிர்ப்படுதல். தலைப்பாடு—தலைப்படுதல்—கூடுதல். தலைவனும் தலைவியும் வினையினால் தலைப்படுதலால், இங்ஙனம் கூடுவது இடந்தலைப்பாடு எனப்படும். இஃது இரண்டொரு நாள் கழித்து நடைபெறினும் மறுநாளே நடப்பதாகக் கூறுதல் புலனெறி வழக்கமாகும். இயற்கைப்புணர்ச்சி நிகழ்ந்து இருவரும் பிரிந்த பின்னர், அப்பிரிவாற்றாது வருந்தி நின்ற தலைமகன் தலைவியை மறுநாளுங்கூட எண்ணி, "யான் இவளை எய்தியது விதியானே; இன்னும் அவ்விதி கைதருமேல் காண்பல்" என்று தன் தோழனுக்குக் கூறாது முன்னை நாளில் அவளைக் கண்ணுற்ற பொழிலில் புகுவான். தலைவியும் பிற்றை ஞான்று தன் ஆய வெள்ளத்தோடும் வந்து, தான் நெருநல் விளையாடின இடத்தைக் குறுகி, "நேற்று நின்னிற் பிரியேன்; பிரியின் ஆற்றேன் என்று சொல்லிச் சென்றவன் அறியாது இவ்வாயத்துள்ளே வருவான் கொல்லோ" என்னும் பெருநாணினாலும், "நம் பிரிவு ஆற்றாமையால் இறந்துபட்டான் கொல்லோ" என்ற அச்சத்தினாலும் மீதூரப்பட்டுத் தன் தன்மையளன்றி நிற்பாள். ஆயங்களும் முன்னை நாளில் பிரிந்தாற்போன்று, "தழை விழை தக்கன தொடுத்தும் என்றும், கண்ணி தண்ணறு நாற்றத்தன செய்தும் என்றும், போது மேதக்கன கொய்தும் என்றும், இவ்வாறு விளையாட்டு

விருப்பினுற் பிரியும்.'' இந்நிலையில் தலைமகன், தலைமகள் தனிமையாக நிற்கும் இடத்தை நோக்கிச் சென்று தலைமகளை எதிர்ப்படுவான். தலைவியும், ''இவன் நம்பால் அன்பிலனோ?'' என்று முன்பு நிகழ்ந்த ஐயம் நீங்கிப் பெரியதொரு மகிழ்ச்சி பெறுவாள். ஆயினும், தன் இயற்கைக் குணங்களாகிய நாண் முதலியன அம்மகிழ்ச்சிக் குறிப்பை வெளிப்படுத்தா வகையில் தடுத்து நிற்கும். உடனே தலைவன், ''இக்களவொழுக்கம் புறத்தார்க்குப் புலனாக, அதனால் இங்ஙனம் வேறுபட்டாளோ?'' என்றும், அன்றி, ''களவு வெளிப்படுதலால் இனி மணம் செய்துகொள்ளின் அல்லது, இக்கூட்டத்திற்கு உடம்படாள் கொல்லோ?'' என்றும் கருதுவான். உடனே 'மெய் தொட்டுப் பயிறல்' என்ற செயலால் அவளை மெய்யுறத் தீண்டிக் குறிப்பறியத் தொடங்குவான். அதன் பின்னர், இயற்கைப்புணர்ச்சியில் கூறியவாறே தலைமகன் தலைமகளைப் புணர்வான். கூட்டம் நிகழ்ந்த பின் பெரிதும் மகிழ்ந்தவனுய்த் தலைவியைப் பிரிதற்கெண்ணி, அவளைத் தேற்றுதற்கு 'எஞ்ஞான்றும் இனிப் பிரியேன்' எனத் தெய்வத்தோடு சார்த்திச் சூளுரைப்பான்; பின்னர், 'இனி இவளைக் கூடுவது அரிதாமோ' என்றிரங்கி, அச்சோலையை விட்டு நீங்குவான்.

தொல்காப்பியர்,

மெய்தொட்டுப் பயிறல் பொய்பா ராட்டல்
இடம்பெற்றுத் தழாஅல் இடையூறு கிளத்தல்
நீடுநினைந் திரங்கல் கூடுத லுறுதல்
சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழித்
தீராத் தேற்றம் உளப்படத் தொகைஇப்
பேராச் சிறப்பின் இருநான்கு கிளவியும் : 3

என்று தலைவன் கூற்ருகக் கூறும் எட்டுக் கிளவிகளையும் நச்சினர்க்கினியர் இடந்தலைப்பாட்டில் அடக்குவர். இளம்பூரணர் முதல் ஆறு கிளவிகளை இயற்கைப்புணர்ச்சிக்குரியவையாகவும், இறுதி இரண்டு கிளவிகளையும் இடந்தலைப்பாட்டிற்குரியவையாகவும் கூறுவர். அன்றியும்,

3. களவியல் —நூற்பா 11. (இளம்)

'பெற்றவழி மகிழ்ச்சியும் பிரிந்தவழிக் கலங்கலும்' [4]

என்ற இரண்டையும் இடந்தலைப்பாட்டில் சேர்த்துக் கூறுவர். முன் கூறிய ஆறு கிளவிகளையும் முன்னர் விளக்கினோம்.[5] ஏனைய நான்கையும் ஈண்டு விளக்குவோம். சொல்லிய நுகர்ச்சி என்பது, இயற்கைப்புணர்ச்சியின் பொழுது பெற்ற இன்பம் திளைத்தல். தீராத் தேற்றம் என்பது, எஞ்ஞான்றும் பிரியாமைக்குக் காரணமாகிய சூளுறுதல். பெற்ற வழி மகிழ்ச்சி என்பது, சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழி அவன் அடையும் மகிழ்ச்சி. பிரிந்த வழிக் கலங்கல் என்பது, தலைமகள் பிரிந்த வழிக் கலக்கமுறுதல். எனவே, இளம் பூரணர் கருத்துப்படி இவை நான்கும் இடந்தலைப்பாட்டிற் குரிய கிளவிகளாயிற்று. இக்கிளவிகளை விளக்குவதற்கு உரையாசிரியர்கள் காட்டியுள்ள பாடல்களையெல்லாம் படித் துணர்ந்தால் அவை நன்கு விளக்கம் எய்தும். நாற்கவிராச நம்பி முதலியோர் 'மெய் தொட்டுப் பயிறல்' முதலியவற்றை இயற்கைப்புணர்ச்சியின் வகைகளாகக் கொண்டு வழங்குவர்.

**இடந்தலைப்பாடு இருவகை :** தலைவன் தானே சென்று கூடுவது, பாங்கனாற்கூடுவது என்று இடந்தலைப்பாடு இருவகைப்படும் என்று கூறுவர் நச்சினார்க்கினியர்.[6] பேராசிரியரும், "துணையின்றி நிகழும் களவு சிறப்புடைத்தாக லானும், 'பாங்கன் கழறும்' (இடித்துரைப்பன்) என்று அஞ்சி அவனை முந்துறத் தலைவன் மறைந்தொழுகுமாதலின்" தன்னாற்கூடும் இடந்தலைப்பாடு நிகழ்ந்த பின்பே பாங்கனைத் துணையாக வேண்டுவன்" என்று கூறினர்.[7] இவ்விடத்தில் ஒன்றினை நாம் எண்ணி யுணர்தல் வேண்டும். இடந்தலைப் படுவார் பெரும்பாலும் பாங்கனை இல்லாதாரும், பாங்கனை உடையராயினும் நாணத்தைக் கடவாமல் அதன்கண் நிற்கும் நிறையுடையாரும், அல்லது அப்பாங்கனிடத்துக் கூறினால் அவன் மறுத்துக் கூறுவானே என்றெண்ணும் அச்சமுடை யாரும், பாங்கனுமிருந்து நாணமுமில்லாரான விடத்தும்

4. களவியல்—நூற். 11 (வரி.7) 5. இந்நூல் : பக்கம்—92
6. களவியல் 1—நூற். 11. (நச்சினார்க்கினியர் உரை)
7. செய்யுளியல்—நூற்பா 186 (பேராசிரியர் உரை)

வினை வழியே நிற்றல் வேண்டுமென்று நினைக்கும் நீரரு மாகவே இருப்பர். இவரல்லாத ஏனையோர் பாங்கற்கூட்டம் பெறுவர்.

இறையனர் களவியலாரும் இவ்விடந்தலைப்பாடு இரு வகைப்படும் என்றே கூறுவர்.

ஆங்ஙனம் புணர்ந்த கிழவோன் தன்வயின்
பாங்க னேரிற் குறிதலைப் பெய்தலும்
பாங்கிலன் தமியோள் இடந்தலைப் படலுமென்று
ஆங்க இரண்டே தலைப்பெயல் மரபே.[3]

[ஆங்ஙனம் புணர்ந்த கிழவோன்—இயற்கைப்புணர்ச்சியின் பின் பிரிந்த தலைமகன்; பாங்கனேரிற் குறிதலைப் பெய்தல்—பாங்கனுல் குறியிடத்துத் தலைப்பெய்தல்; பாங்கிலன் தமியோள்—பாங்கனை யின்றித் தனியவளாக; இடந்தலைப்படல் - இடத்து எதிர்ப்படுதல்]

என்பது அவர் கூறும் நூற்பா. இதன் உரையாசிரியர், "பாங்கற்கூட்டம் நிகழின் இடந்தலைப்பாடு நிகழாது; இடந் தலைப்பாடு நிகழின் பாங்கற்கூட்டம் நிகழாது; என்னை? அத்துணையாகத் தலைவி எளியள் அல்லள் ஆகலான்" என்று கூறுவர். மேலும், அவர் இந்நூற்பாவிற்குத் தடை விடை களால் விளக்கும் முறை நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளு கின்றது. மேற்கூறிய உரைப்பகுதியினைத் தொடர்ந்து அவர் கூறுவது: "அஃதேயெனின், 'பாங்கிலன் தமியோள் இடந்தலைப் படலும் பாங்கனேரிற் குறிதலைப்பெயலும்' என்று எழற் பாற்று இச்சூத்திரம்; என்னை? இடந்தலைப்பாடு தெய்வப் புணர்ச்சியோடு ஒக்கும் ஆகலான். அஃதே, அங்ஙனம் சொன் ஞனேயெனினும் மொழி மாற்றிக் கொள்க என்பது; அது பொருந்தாது. மொழி மாற்றுதல் என்பது, செய்யுள் கிடந்த வாறு செய்யலாகாதவழிச் செய்வது. அவ்வாறு செய்யும் சூத்திரம் இனியதாய்க் கிடப்ப மொழி மாற்றுச் சூத்திரமாகச் செய்தல் வேண்டுமோ என்ருற்குப் பெரும்பான்மையும் பாங் கனுன் ஆம் என்பது சிந்திக்கும்; சிறுபான்மை விதியினுல் ஆம் என்பது சிந்திக்கும். ஆகலான், அவன் சிந்தித்தவாற்ருனே சூத்திரஞ் செய்யப்பட்டது; மொழி மாற்றுச் சூத்திரம் அன்று

8. இறை. களவியல்—நூற். 3.

என்பது. உலகத்தோர் இடுக்கணுற்றால் விதியானே தீரும் என்று இரார். முன்னம் தீர்த்தற்குச் சுற்றத்தாரையும் நட்டாரையும் நினைப்பர்; ஆகலானும் அவ்வாறே சொல்லப்பட்டது. அஃதேயெனின், புறத்து யாரானும் உணர்ந்தார் உளர் என்பது உணர்ந்த ஞான்று இவள் இறந்துபடும் என்னும் கருத்துடையான், பிற்றை ஞான்றே சென்று பாங்கற்கு உணர்த்தற்பாலனே எனின், குற்றம் குணம் என்பது தெருளாது உணர்த்தும் என்னும் ஒருவன். அது பொருந்தாது; அங்ஙனம் தெருளாது உணர்த்தின் பாங்கற்கே உணர்த்தக் கடவனே வழிப்போவார்க்கு உணர்த்த அமையாதோ என்பது. மற்றென்னோ எனின், தான் உணர்ந்தானன்றே இவ்வொழுக்கத்தினை! தான் உணர்ந்ததனோடு ஒக்குமன்றே இவன் உணர்ந்தது! அவனைத் தன்னின் வேறல்லன் என்று கருதினமையான் அமையும்.'' திருக்கோவையார் உரையும் இக்கொள்கையினையே, "பாங்கற்கூட்டம் நிகழ்தாயின் இடந்தலைப்பாடு நிகழும்; இடந்தலைப்பாடு நிகழாதாயின் பாங்கற்கூட்டம் நிகழும்'' என்று கூறுதலையும் காண்க.[9]

**ஐயமும் தெளிவும்:** மேற்கண்டவாறு இறையனார் களவியலில் கூறப்பெற்றிருக்க, ஆசிரியர் தொல்காப்பியனார் 'மெய் தொட்டுப் பயிறல்' என்னும் நூற்பாவில்[10] இடந்தலைப் பாட்டிற்குரியவையாக எட்டுக் கிளவிகளை முதலிற்கூறி, அதன் பின்னர்ப் பாங்கற்கூட்டத்தின் துறைப்பொருள்களைக் கூறுதற்குக் காரணம் யாதோ என்ற வினா எழலாம். இவ்விரு பேராசிரியன்மாரும் இவ்வாறு முற்றும் நேர்முரணாகக் கூறும் பொருள் முறையுண்மையைப் பேராசிரியர் என்னும் உரையாசிரியர் இனிது இணக்கி உண்மைப்பொருள் கிளந்து மயக்கம் தெளிவிக்கின்றார். ஆசிரியர் தொல்காப்பியனார் களவு என்னும் கைகோளை உணர்த்துவதற்கு,

> காமப் புணர்ச்சியும் இடந்தலைப் பாடும்
> பாங்கொடு தழாஅலுந் தோழியிற் புணர்வுமென்(று)
> ஆங்கநால் வகையினும் அடைந்த சார்வொடு
> மறையென மொழிதல் மறையோர் ஆறே.[11]

---

9. திருக்கோவை—49-இன் உரை.
10. களவியல்—நூற் 11. (இளம்).
11. செய்யுளியல்—186 (பேரா).

என்று கூறும் நூற்பாவிற்குப் பொருள் எழுதும் பேராசிரியர், "காமப்புணர்ச்சி நிகழ்ந்தன்றி இடந்தலைப்பாடு நிகழாதெனவும், அவ்விடந்தலைப்பாடு பிறர் பயத்தல் அரிதென்பது அவள் ஆயத்தோடுங் கூட்டிய கூட்டத்தான் அறிந்த தலைமகன் பாங்கனை உணர்த்தி அவனாற் குறை முடித்துக் கோடலும், தன்வயிற் பாங்கன் அவள்வயிற் பாங்கு செய்யானாகலின் அதன் பின்னர்த் தோழியாற் குறை முடித்துக் கோடலுமென இந்நான்கு முறையான் நிகழுங் களவொழுக்கம் என்றவாறு" என்று உரை கூறுவர்.

இதனுள், காமப்புணர்ச்சி நிகழ்ந்தன்றி இடந்தலைப்பாடு நிகழாது என்ற குறிப்பு காணப்பெறுதலை அறிக. ஆனால், இடந்தலைப்பாடு நிகழ்ந்தன்றிப் பாங்கற்கூட்டம் நிகழாது என்றதொரு குறிப்பு காணப்பெறவில்லை. ஆகவே, இடந்தலைப்பாடு நிகழாமலே பாங்கற்கூட்டம் நிகழ்தலும் உண்டு என்பது பெறப்படுகின்றது. மேலும், காமப்புணர்ச்சியை அடுத்து நிகழ்வதென்று கூறப்பெற்ற அவ் இடந்தலைப்பாட்டினைத் தலைவன் தன் பாங்கனைக்கொண்டு குறை முடித்துக் கொள்வான் என்றதொரு குறிப்பும் அதனில் தொனிக்கின்றது. எனவே, பாங்கன் என்பான் அவ் இடந்தலைப்பாட்டிற்கு வாயிலாவான் என்பது தெளிவாகின்றது. பாங்கன் வாயிலாகவே, அவ்வாற்றான் அவன் கூட்டமாகிய பாங்கற்கூட்டமும் அதற்கு வாயிலாக அமைகின்றது என்பதும் உடன் தெளிவாகின்றது. எனவே, பாங்கற்கூட்டம் நிகழ்ந்தாலும் அக்கூட்டம் ஒரு கருவியின் அளவாகவே நிற்ப, ஆண்டும் நிகழ்வது இடந்தலைப்பாடேயாகும் என்பது போதருகின்றது. ஆகவே, இப்பொழுது 'காமப்புணர்ச்சியை அடுத்து இடந்தலைப்பாடு நிகழும்; அது பாங்கன் துணையின்றி விதியே துணையாக நிகழ்ந்தாலும் நிகழும்; அங்ஙனம் நிகழாதாயின், அது விதியின் துணையோடு பாங்கன் துணையும்பற்றி நிகழும்' என்பது பெறப்படுகின்றது.

**இறையனார்-தொல்காப்பியர் கருத்தொற்றுமை:** இந்த இருவருடைய நூற்பாக்களின் பொருள்களில் தினைத்துணையும் முரண்பாடு இல்லையென்பதை மேலே கண்டோம். இவர்கள்

கூற்றுக்களில் கருத்தொற்றுமையையும் காண்போம். தொல்காப்பியர் காமப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், தோழியிற்கூட்டம் என்ற முறையில் களவு நடைபெறும் என்று கூறினர். இடந்தலைப்பாடு விதித்துணைபற்றியே நிகழாதாயினும் பாங்கற்கூட்டத்தால் நிகழ்ந்திடுமென்று கருதி, அதனைக் காமப்புணர்ச்சிக்கு அடுத்து நிகழ்வதாக வைத்தார்; அதன் பின்னர், இன்னும் தன் குறைகளையெல்லாம் முடித்துக்கொள்ளுதற்பொருட்டுத் தோழியைத் துணையாகக் கொள்வான் என்று கொண்டு தோழியிற்கூட்டத்தை அதற்கடுத்து வைத்தார்.

ஆசிரியர் இறையனுர் காமப்புணர்ச்சி புணர்ந்த தலைமகனுக்கு அதனையடுத்து நிகழ வேண்டுவதான இடந்தலைப்பாடு பெரும்பாலும் உலகில் பாங்கன் துணைபற்றியே நிகழ்தலன்றி விதித்துணையேபற்றி நிகழ்தல் அரிதாகிச் சிறுபான்மையாய் முடிதலின், அப் பெரும்பான்மை சிறுபான்மை வேற்றுமை தெரிதற்பொருட்டுப் பாங்கற்கூட்டத்தைக் காமப்புணர்ச்சிக்கு அடுத்ததாக நிறுத்தி, அது நிகழாதாயின் விதித்துணையே பற்றிய இடந்தலைப்பாடேனும் நிகழும் என்றும் கருத்துடன் நூற்பா செய்தார்.

எனவே, காமப்புணர்ச்சியின் பின் இடந்தலைப்பாட்டினை நிறுத்திய தொல்காப்பியர் கருத்துப்படி அக்காமப்புணர்ச்சியை அடுத்து இடந்தலைப்பாடே நிகழ்வதாம் என்பதும், காமப்புணர்ச்சியின் பின் பாங்கற்கூட்டத்தை நிறுத்தி அதன் பின்னர் இடந்தலைப்பாட்டினை எடுத்துக்கூறிய இறையனுர் கருத்துப்படி காமப்புணர்ச்சியை அடுத்து நிகழும் இடந்தலைப்பாடு பெரும்பான்மையும் பாங்கற்கூட்டத்தினுலேயே நிகழ்வதாம் என்பதும் புலப்படுகின்றன. இவற்றைத் தவிர, தினையளவேனும் வேறு விதமான முரண்பாடு புலப்படாதிருத்தலை உய்த்து உணர்க. எனவே, இரு பேராசிரியர்களின் கருத்துக்களும் ஒருமுகமாக அமைந்திருத்தலைக் கண்டு மகிழ்க.

மேலும், இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம் என்ற இரண்டு பகுதிகளுடன் ஏதேனும் ஒன்று மட்டிலுமே தலைவனுக்கு நிகழுமாதலின், இவற்றுள் எது முன்னர் நிகழ்வது.

எது பின்னர் நிகழ்வது என்னும் ஐயப்பாடு எழுவதற்கே இனிச் சிறிதும் இடமே இல்லை என்பதையும் நாம் கருத்தில் இருத்த வேண்டும்.

**பாங்கனொடு கூடுதல்:** மேற்கூறியவாறு இடந்தலைப்பட்டுத் தானே தலைமகளைக் கூடி ஆற்றுவித்து நீங்கிய தலைமகன், 'நின்னிற்பிரியேன்' என்று சூளுறுத்தப்பெற்றுப் பிரிந்தான். 'தன்னைக் காணாத என் நிலைமை நினைந்து ஆற்றாளுங்கொல்லோ' எனவும், 'ஆற்றாளாகி நின்றாள் தனது வேறுபாட்டைப் புறத்தார் அறியாமை மறைக்குமாறு அறியாது வருந்துங் கொல்லோ' எனவும், இவை முதலாயின நினைந்து ஆற்றாது நிற்பன். இந்நிலையில், இயற்கைப்புணர்ச்சியின் இறுதியில் தலைவி தன்னைப் பிரிந்து தோழியரோடு சேர்ந்து அளவளாவிய பொழுது, அவளுக்குச் சிறந்தாளென்று தன்னாலறியப்பெற்ற உயிர்த்தோழி ஏதாவது துணை செய்வாளா என்று நினைத்துப் பார்ப்பான். பிறகு, 'அத்தோழியானவள் அவட்கன்றே சிறந்த துணையாம், நமக்கு அங்ஙனம் ஆகாதன்றே; ஆதலால், நம் தலைவியை மீண்டுங் கூடுதற்கு நமக்குச் சிறந்த துணைவனாயுள்ள நாம் பாங்கனுக்கு இதுகாறும் நிகழ்ந்தவற்றை யெல்லாம் எடுத்துக் கூறினால், பின்பு அவளைச் சென்று எய்தக் குறையில்லை' என்று எண்ணித் தான் எண்ணியவற்றைத் தன் பாங்கனுக்குக் கூற விரும்பி அவனை நினைப்பான். இது திருக்கோவையாருள் 'பாங்கனை நினைதல்' என்னும் துறையாக வைதத்துப் பேசப்பெறும்.

தலைவியை நினைந்து ஆற்றா நிற்கும் தலைவனை எதிர்ப்பட்ட பாங்கன், அவனை அடியிற்கொண்டு முடிகாறும் நோக்கி, 'வளர் ஒளி இளஞாயிற்றின் வனப்புடைய திருவொளி மழுங்கும்படி, எம்பெருமாற்கு இன்று நேர்ந்த வாட்டம் என்னையோ?' என்று உசாவுவான். இதனை,

> பிறைவான் புனற்றில்லைச் சிற்றம்ப லத்துமென் சிந்தையுள்ளும்
> உறைவான் உயர்மதிற் கூடலின் ஆய்ந்தவொண் டீந்தமிழின்
> துறைவாய் நுழைந்தனை யோவன்றி ஏழிசைச் சூழல்புக்கோ
> இறைவா தடவரைத் தோட்கென்கொ லாம்புகுந் தெய்தியதே.[12]

---

12. திருக்கோவை–20

[சிறை - காவலாயுள்ள; வான்புனல் - மிக்க நீர்; கூடல் - மதுரை; தமிழின் துறை - அகமும் புறமுமாகிய பொருட்கூறு; ஏழிசை - குரல் முதலிய ஏழு; சூழல் - ஏழிசையால் இயன்ற பண்ணும் பாடலும் முதலானவை; புகுந்து - மெலியப் புகுந்து.]

என்ற திருக்கோவையாரால் இதனை அறியலாம்.

மேற்கூறியவாறு வினவிய தோழனுக்கு, 'நெருநல் இத்தகைய வனப்புடைய ஒருத்தியைக் கண்டு என்னுள்ளம், பள்ளத்து வழி வெள்ளம் போல ஓடி, இவ்வகைத்தாயிற்று' என்று நடந்த வரலாறெல்லாம் கூறுவான். இவ்வாறு தலைவன் கூறுவதை,

கழைபாடு இரங்கப் பல்லியம் கறங்க,
ஆடுமகள் நடந்த கொடும்புரி நோன்கயிற்று,
அதவத் தீங்கனி அன்ன செம்முகத்
துய்த்தலை மந்தி வன்பறழ் தூங்க,
கழைக்கண் இரும்பொறை ஏறி விசைத்தெழுந்து,
குறக்குறு மாக்கள் தாளம் கொட்டும்அக்
குன்றகத் ததுவே, கொழுமிளைச் சீறூர்;
சீறூ ரோளே, நாறுமயிர்க்கொடிச்சி;
கொடிச்சி கையகத் ததுவே பிறர்
விடுத்தற் காகாது பிணித்தஎன் நெஞ்சே.[13]

[கழை-குழல் வாத்தியம்; இரங்க-ஒலிக்க; பல்லியம்-பல வகை வாத்தியங்கள்; கறங்க - முழங்க; கொடும்புரி - முறுக்குண்ட புரி; அதவத் தீங்கனி - அத்திப்பழம்; துய்த்தலை - பஞ்சு போன்ற தலை (துய்-பஞ்சு); வன்பறழ்-வலிய குட்டி; குறக்குறுமாக்கள்-குறவரின் சிறுவர்கள்; நாறுமயிர்-நறுமணங் கமழும் கூந்தல்; கொடிச்சி-மலை நாட்டுப் பெண்; பிணித்த-பிணிப்புண்ட.]

என்ற நற்றிணைப் பாடலால் அறியலாம். இதில் தலைவன் மலை நாட்டு மங்கையொருத்தியின் கையில் தன் நெஞ்சு சிக்குண்டு இடப்பதாக வருந்திக் கூறுவதைக் காண்க.

இவ்வாறு தலைவன் கூறியதைக் கேட்ட பாங்கன், தன் அன்பனான தலைவனிடம் தீயன கண்டால் அன்பில் தலைப்பிரியாத சொற்களால் இடித்துக் கூறுபவனாதலின், 'இஃது

13. நற்றிணை - 95

இவன் தலைமைப்பாட்டிற்குச் சிறிதும் தகாது' என்று உட்கொண்டு, 'அன்பனே, நின்னுள்ளம் நின்வரைத்தன்றிக் கைமிக்கோடுமே எனின், பின்பு நின்னைத் தெளிவிப்பவர் யாவர்? இப்பெற்றித்தாய நீ, இன்னவிடத்து இன்ன உருக் கண்டு என் உள்ளம் அழியப் போந்தேன் என்றல் நின் கற்பனைக்குப் போதாது' என்று கழறியுரைப்பான். காதற்பாங்கன் இங்ஙனம் கழறவும் கேளாது பின்னும் வேட்கை வயத்தனாய் நிற்கும் தலைவன், 'நண்ப, என்னாற்காணப்பட்ட வடிவை நீ கண்டிலை; கண்டனையாயின் இங்ஙனம் கழறாய்' என்று மறுத்துரைத்து வருந்தாநிற்பான். இதனை,

> பூணிற்பொலி கொங்கை யாவியை ஓவியப்பொற் கொழுந்தை
> காணிற் கழறலை கண்டிலை மென்தோள் கரும்பினையே. 14

என்ற திருக்கோவைப்பகுதியால் அறியலாம். கோவை நூல்கள், பாங்கன் இடித்துரைத்தலைக் **'கழறியுரைத்தல்'** என்றும், தலைவன் மறுத்துக் கூறுவதைக் **'கழற்றெதிர் மறை'** என்றும் துறைப்பெயர்கள் வகுத்துக் கூறும்.

தலைவனது உரையைக் கேட்ட பாங்கன், 'நம் அன்பனுக்குக் கவற்சி பெரிதாயிற்று. இனி, யானும் இவனுடன் கூட வருந்தினால் இவனை ஆற்றுவிப்பார் இல்லையாம்' என்று ஒருவாறு தன்னைத் தேற்றிக்கொண்டு, 'அது கிடக்க; நின்னாற் காணப்பட்ட உரு எவ்விடத்தது? எத்தன்மையது?' என்று இயல், இடம் முதலியவற்றை உசாவுவான். உடனே, தலைவன் கோடையால் தெறப்பட்டு வாடி நின்ற சந்தனமரம் மழை பெற்றுத் தளிர்த்தாற்போலப் பெரியதொரு கழியுவகை மீதூர, அவனை எய்தினாற்போல ஆறுதலடைந்து, 'நண்பனே, இன்ன சோலையில் இன்ன அழகு உடையது காண், யான் கண்ணுற்ற அவ்வின்ப உருவம்' என்று கூறுவான். பாங்கனும், 'நீ கூறியவளை என்னால் ஆவதுண்டேல் கண்டு வருவல்; அத்துணையும் நீ ஆற்றியிரு!' என்று தலைவனுக்குக் கூறிவிட்டுத் தனியனாய் அவ்விடம் நோக்கிச் செல்வான். அங்ஙனம் சென்றவன், முன் போல ஆயவெள்ளம் விளையாட்டு விருப்பால் பிரியத் தனியளாகி நின்ற தலைவியைத் தன்னை

14. திருக்கோவை—23

அவள் காணுமல், தான் அவளைக் காண்பதோர் அணிமைக்கண் மறைந்து நின்று அவளைக் காண்பான். உடனே, 'இச் சோலையே அவனால் காணப்பட்ட இடம்; ஈண்டு நிற்கும் இவள் போலும் எம்மிறைவனை வருத்தியவள்' என்று துணிவான். மேலும், அவன் இத்தகைய பேரெழிலுடையாளைக் கண்டு, பிரிந்து, இங்கு நின்று, அங்கு வந்து யான் கழறவும் ஆற்றி, அத்தனையும் தப்பாமல் சொன்ன அண்ணலே திண்ணியான்' என்று தலைவனை வியந்து நிற்பான். உடனே, அவ்விடத்து நின்று விரைந்து நீங்கித் தலைமகனை அடைந்து, நிகழ்ந்த செய்தியை அவனுக்கு உணர்த்துவான். தலைவனும் அந்த இடம் சென்று, முன்பு இடந்தலைப்பாட்டில் கூடியவாறு போலவே தனியளாய் நின்ற தலைவியை எதிர்ப்பட்டுக் கலந்து மகிழ்வான். இங்ஙனம் மகிழ்ந்து தலைவியைப் பிரிவாற்றுவித்து நீங்குங்கால், 'இனி நீ வருங்கால் நின் காதல் தோழியோடும் வருக' என்று அவளுக்கு உணர்த்தியும், கூட்டத்திற்குத் துணை செய்த காதற்பாங்கனை வாழ்த்தியும், தலைமகளை முன் போல ஆயவெள்ளத்தை அடையச் செய்து பிரிவான்.

மேற்கூறியவற்றிலிருந்து ஒன்றினை நாம் நினைவிலிருத்த வேண்டும்; இடந்தலைப்பாடு என்பது, பாங்கற்கூட்டத்தின்கண் அடங்கியதொரு பகுதியாய் நிகழ்தலால், பாங்கற் கூட்டத்தைக் கூறவே இடந்தலைப்பாடும் நன்கு விளங்கிவிடும். இக்காரணத்தால்தான், இறையனர் அகப்பொருள், திருச் சிற்றம்பலக்கோவையார் முதலான அகப்பொருள் நூல்களில் பாங்கற்கூட்டமே விரிவாகக் கூறப்பெற்றுள்ளது. இங்கு பாங்கன் என்பவன் பார்ப்பனனவான். நச்சினர்க்கினியரும், 'இவன் பெரும்பான்மை பார்ப்பானும்' என்று கூறுவர்.[15] எனவே, சிறுபான்மை மற்றையோரும் பாங்கனுதல் உண்டென்றுகொள்ளுதலால் தவறென்றும் இல்லை. இனி, அடுத்து நிகழும் தோழியிற்கூட்ட நிகழ்ச்சிகளை மேலே காண்போம்.

15. களவியல் - நூற். 11-இன் உரை (நச்)

# 10. தோழியிற்கூட்டத்தில் சில மரபுகள்-(1)

செய்யுள் வழக்காகப் பண்டையோர் குறிப்பிட்ட களவொழுக்கத்தில் பெருவரவிற்றுயுள்ளது தோழியிற்கூட்டமாகும். இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம் என்ற மூன்றற்குப் பின்னர் புலனெறி வழக்காகப் புலவர்களால் கூறப்பெறுவது இது. புலனெறி வழக்கம் என்பது, சுவைபட வருவனவெல்லாம் ஓரிடத்து வந்தனவாகத் தொகுத்துக் கூறும் நாடக வழக்கும், உலகத்தார் ஒழுகலாற்றோடு ஒத்துவரும் உலகியல் வழக்கும் விரவி வருவதாகப் பாடப்பெறும் அகப்பொருள். அகப்பொருள் நாடகத்தைப் பொறுப்புடன் நடத்தும் பெருவிசை போன்ற இவள் செவிலியின் மகளாகக் கூறப்பெறுகின்றாள்; உலகியல் நன்கு அறிந்தவளாகவும் காட்டப்பெறுகின்றாள். இவளைப் பற்றுக்கோடாகக் கொண்டுதான் தலைவன் தலைவியை நிரந்தரமாகச் சந்திக்கும் வாய்ப்புக்களைப் பெறுவான்.

இறையனார் களவியலுரையாசிரியர் தலைவன் இவளுடன் தொடர்பு கொள்வதை இங்ஙனம் காட்டுவர்; "இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த பின்னர்த் தன்னை அவள் காணாமல் தான் அவளைக் காண்பதோர் அணிமைக்கண் நின்றானாக மற்றையாரெல்லாம் தலைமகட்குச் செய்யும் வழிபாடும் இவள் விசேடத்தாற்செய்யும் வழிபாடும், எல்லார்க்கும் தலைமகள் அருளிச்செய்யும் அருளிச்செய்கையும், இவட்கு விசேடத்தாற்செய்யும் அருளிச்செய்கையும் கண்டமையான், 'இவளாம் இவட்குச் சிறந்தாள்; இதுவும் எனக்கோர் சார்பு' என்பதனை உணர்ந்தான். உணர்ந்தமையான், அவளுழையே செல்லும் என்பது. அஃதேயெனின், அவளுழைச் செல்கின்ற

ஆயங்கள் ஐயுருவோ எனின், எங்ஙனம் ஐயுறும்? தழையும் கண்ணியும் கோடற்பொருட்டாக வேறோரிடத்துத் தனியளாய் நின்ற நிலைமைக்கண் செல்லும் என்பது. அவன் இன்னணம் தனியளாய் நிற்பது அறிந்து செல்லுமோ எனின், செல்லான்; விதியே கொண்டு சென்று தலைப்படுவிக்கும் என்பது."[1] எனவே, தோழியிற்கூட்டமும் ஏனைய மூன்று கூட்டங்களைப் போலவே விதியினுல் நடைபெறும் என்றே கொண்டனர் பண்டையோர் என்பது பெறப்படும். இக்கூட்டத்தினைப் பாங்கி மதியுடம்பாடு, மடல் விலக்கல் குறியிடஞ் சேர்தல், வரைவு கடாதல், அறத்தொடு நிற்றல், உடன் போக்கு என்று வகைப்படுத்தி ஆராயலாம்.

**பாங்கி மதியுடம்பாடு :** தோழியின் மூலம் தன் குறையை முற்றுவித்துக்கொள்ளலாம் எனக் கருதும் தலைவன் அவளை மதியுடம்படுத்த பின்னல்லது தன் குறையை முடிக்க வேண்டும் என்று அவளுக்குத் தன் கருத்தைக் கூறுன். மதி என்பது அறிவு; உடம்பாடு என்பது உடம்படச் செய்தல். அஃதாவது, தோழியின் அறிவை ஒருப்படச் செய்தல். மதியுடம்படுதலை இளம்பூரணர் 'புணர்ச்சியுணர்தல்' என்று கூறுவர். தலைவன் தோழியிடம் தன் குறையைத் தெளிவாகக் கூருது கரந்த மொழியால் கூறுவாஞதலாலும், அங்ஙனமே களவொழுக்கத்தால் தலையிடம் தோன்றும் வேறுபாட்டின் காரணமும் அவளுக்குப் புலப்படாததாலும் அந்த இரண்டையும்—இருவர் கருத்தினையும்—தன் மதியுடன் ஒன்றுபடுத்தி உணர்வாள். இவ்வாறு மூவர் மதியினையும் ஒற்றுமைப்படுத்தி உணர்தல்பற்றி இஃது மதியுடம்படுத்தலாயிற்று என்று உரைப்பர் நச்சினர்க்கினியர்.[2] இம்மதியுடம்பாட்டை ஆசிரியர் தொல்காப்பியனுர்,

> குறையுற உணர்தல் முன்னுற உணர்தல்
> இருவரும் உள்வழி அவன்வர வுணர்தலென
> மதியுடம் படுத்தல் ஒருமூ வகைத்தே.[3]

என்று குறிப்பர். எனவே, மதியுடம்பாடு குறையுறவுணர்தல்,

1. இறையனுர் - களவியல்-நூற்-5 இன் (உரை)
2. களவியல்-நூற். 36-இன் உரை. (நச்சி.)
3. களவியல்-நூற். 37 (இளம்.)

முன்னுறவுணர்தல், இருவருமுள்வழி அவன் வரவுணர்தல் என மூவகைத்தாயிற்று. இவை ஒவ்வொன்றையும் ஒரு சிறிது விளக்குவோம்.

**குறையுற உணர்தல் :** தலைவன் தன்பால் வந்து குறையுற்று நிற்க, அவன் உள்ளக்கருத்தினைத் தோழி உணர்தல் 'குறையுற உணர்தல்' ஆகும் அஃதாவது, தலைவியும் தோழியும் ஒருங்கு தலைப்பெய்த செவ்விபார்த்தாயினும், தோழி தனித்துள்ள இடத்தாயினும் புதியவன் போலப் புகுந்து, "இங்கே சில விலங்கு போந்தன உளவோ? இளையர் போந்தனர் உளரோ?" எனவும், "நும் பதியும் பெயரும் யாவை?" எனவும் தலைவன் உசாவ, 'எம்மினுயதோர் குறையுடையவன் இவன்' எனத் தோழி கருதுதல்.

> நறைபரந்த சாந்தம் அறஎறிந்து நாளால்
> உறையெதிர்ந்து வித்தியஊழ் ஏனல்—பிறையெதிர்ந்த
> தாமரைபோல் வாள்முகத்துத் தாழ்குழலீர்! காணீரோ
> ஏமரை போந்தன ஈண்டு.[4]
>
> [நறை - மணம்; சாந்தம் - சந்தன மரம்; உறை - மழை பெய்யும் காலம்; ஊழ் - முதிர்ந்த; ஏனல் - தினை; ஏ - அம்பு; மரை - மான்கள்]

என்ற பாடலில் இச்செய்தியைக் காணலாம். இத்தகைய செய்திகளை,

> 'பெட்ட வாயில்பெற் றிரவுவலி யுறுப்பினும்
> ஊரும் பேரும் கெடுதியும் பிறவும்
> நீரிற் குறிப்பின் நிரம்பக் கூறித்
> தோழியைக் குறையுறும் பகுதியும் தோழி
> குறையவட் சார்த்தி மெய்யுறக் கூறும்'[5]

என்ற நூற்பாவின் பகுதியாலும் அதற்கு உரையாசிரியர்கள் காட்டிய மேற்கோள் செய்யுட்களாலும் அறியலாம்.

**முன்னுறவுணர்தல் :** இதனை இளம்பூரணர் தலைவன் குறையுறுவழித் தலைவி குறிப்புக் கண்டு உணர்தல் என்று பொருள் கூறுவர். 'இருவரது குறிப்பானே மிகவும் உணர்தல்' என்பர் நச்சினார்க்கினியர். முன்னுறவுணர்தல் - முன் உற

4. திணை மாலை - செய். 1.
5. களவியல்-நூற். 11 (இளம்.)

உணர்தல் - முன்னம் மிக உணர்தல். ['முன்' என்பது குறிப்பு] அஃதாவது, முன் கூட்டங்களில் தலைவனைக் கலந்த தலைமகள் தோழியின் முன்னர் வந்த போது அவளது கண் சிவப்பு, நுதல் வேறுபாடு முதலிய மெய் வேறுபாடு கண்டு, 'இவ்வேறுபாடு இங்குப் பலகாலும் வந்து செல்லும் ஆண் மகனோடு கூட்டமுண்மையால் இவட்கு வந்தது போலும்' என உட்கொண்டு, அதனைப் பல்வேறு வகையால் சொல்லாடித் தோழி ஆராய்ந்தறிதலாகும். இவ்வாராய்ச்சியில் தலை மகளிடம் நிகழும் குறிப்பு வேறுபாடுகளால் தோழிக்குத் துணிவு பிறக்கும். அவ்வாராய்ச்சியை இறையனார் களவிய லுரையாசிரியர் இவ்வாறு குறிப்பர்: "எங்ஙனம் உணருமோ எனின், 'எம்பெருமாட்டிக்குப் பண்டைத்தன்மைத்தன்றால் இவ்வேறுபாடு, இஃது எற்றினான் ஆயிற்று, எனக்குச் சொல் லாய்' என்னும்; என, 'நெருநல் நின்னின் நீங்கி மேதக்கதோர் சுனை கண்டு ஆடினேன், நெடுங்காலமும் நின்றாடினேற்கு ஆயிற்று: ஆகாதே, கண் சிவப்பும் நுதல் வேறுபாடும்' என் னும்; 'அஃதேல், சுனையாடினோர்க்கெல்லாம் இக்காரிகை நீர்மை பெறலாமேயெனின், யானும் ஆடிக்காண்கேன்' என்னும்; எனக் கேட்டுத் தலைமகள் தலை சாய்த்து நிலங் கிளையா நிற்பப் புணர்ச்சியுண்டென்று உணர்ந்துகொள்வா ளாவது. அல்லதூஉம், அங்ஙனம் வேறுபட்ட வேறுபாடு கண்டு ஐயுற்று நின்றாள். அந்தி வானகட்டுச் செங்கோட்டு மதர்வைக குழவித் திங்களைக் கண்டு தான் தொழுது, 'நீயும் தொழுது காண்' என்னும்; எனக் கேட்டுத் தலைமகள் தொழாது நிற்கும், கற்பழியும் என்பதனான்; அது கண்டு புணர்ச்சியுண்மை அறிந்துகொள்ளும் என்பது. அஃதன்றி, அவனை வரையணங்காகவும் சொல்லும். இவை **நாண நாட்டம்.** இங்ஙனமே தோழி தலைவியை நோக்கி, 'நம்புனத்து உதிரம் அளைந்த கொம்புடையதோர் களிறு போந்தது' என்றும்; அது கேட்டுப், 'பல்காலும் இவ்விடத்து வந்தியங்குவான் எம்பெரு மானுதலான், அவனைக் களிறு ஒர் ஏதஞ் செய்தது கொல்லோ!' என்று நடுங்குவாளாம். அது கண்டு கூட்ட முண்மை உணரும்." மேலும், அவ்வுரைகாரர் 'முன்னுற

வுணர்தல்' என்பதற்கு 'முன் உறவு உணர்தல் - முன் கூட்ட முண்மை உணர்தல்' எனக் கூறுவர்.'[6]

தொல்காப்பியனாரும் தோழியின் இவ்வாராய்ச்சியை,

'நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்
செய்வினை மறைப்பினும் செலவினும் பயில்வினும்
புணர்ச்சி யெதிர்ப்பா டுள்ளுறுத்து வரூஉம்
உணர்ச்சி ஏழினும் உணர்ந்த பின்றை
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருள் நாட்டத் தானும்'[7]

என்ற நூற்பாவின் பகுதியால் உணர்த்துவர். இதனை உரையாசிரியர் இளம்பூரணர் இவ்வாறு விளக்குவர்: "**நாற்றம்** என்பது, பூவினானும் சாந்தினானும் தலைவன் மாட்டுளதாகிய கலவியால் தலைவி மாட்டுளதாய் நாறுதல். **தோற்றம்** என்பது, புணர்ச்சியான் வரும் பொற்பு. **ஒழுக்கம்** என்பது, ஆயத்தாரோடு வேண்டியவாறு ஒழுகுதலின்றித் தன்னைப் பேணி யொழுகுதல். **உண்டி** என்பது, உண்ணும் அளவிற்குறைதல். **செய்வினை மறைத்தல்** என்பது, பூக்கொய்தலும் புனலாடலும் போலும் வினைகளைத் தோழியை மறைத்துத் தனித்து நிகழ்த்துதல் அன்றியும், தலைவன் செய்த புணர்ச்சியாகிய கருமத்தினைப் புலப்பட விடாது தோழியை மறைத்தலும் என்றுமாம். **செலவினும்** என்பது, எத்திசையினும் சென்று விளையாடுவாள் ஒரு திசையை நோக்கிச் சேறல். **பயில்வினும்** என்பது, ஓரிடத்துப் பயிலுதல். **புணர்ச்சி எதிர்ப்பாடு** என்பது, புணர்வதற்கு முந்துற்ற காலம். **உள்ளுறுத்தல்** என்பது உட்கோடல்." இந்த ஏழினுலும எழும் மன நிகழ்ச்சியை ஒன்றோடொன்று ஒவ்வாத வேறுபட்டனவாகி இரு பொருள் பயக்கும் சொற்களாலே ஆராய்வாள் தோழி என்பது. இதற்கு நச்சினார்க்கினியர் கூறும் உரையும் மிக நயமாக அமைந்துள்ளது.[8]

**இருவரும் உள்வழி அவன் வரவுணர்தல்:** தலைவியும் தோழியும் ஒருங்கிருந்தவழித் தலைவன வருதலால் தலைவன்

6. இறையனார் களவியல்-நூற். 9-இன் உரை.
7. களவியல்-நூற். 24 (இளம்.)
8. களவியல்-நூற். 32-இன் உரை (நச்சி.)

குறிப்பும் தலைவி குறிப்பும் கண்டுணர்தல் அஃதாவது, தலைவியும் தோழியும் தினைப்புனங்காத்து நின்றவிடத்துத் தலைவன் கையுறை கொண்டுவந்து நின்று, 'இத்தழை நுமக்கு உடையாதற்கு ஏற்றது' எனவும், 'இவ்வணி நீவிர் அணிதற்கு உரியது' எனவும் கூறி அவள்பாற் குறை வேண்டுவான் போல நிற்க, தோழி அப்போது நிகழும் அவ்விருவர் மெய்ப்பாடுகளையும் உணர்ந்து அவ்விருவர்க்கும் கூட்டமுண்மை துணிவள்.

'ஏனல் காவல் இவளும் அல்லள்;
மான்வழி வருகுவன் இவனும் அல்லன்;
நாந்தங் கண்ணி யிவளோ டிவனிடைக்
கரந்த வுள்ளமொடு கருதியது பிறிதே;
நம்முன் நாணுநர் போன்று தம்முள்
மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சி போல
உள்ளத் துள்ளே மகிழ்ப;
சொல்லும் ஆடுப கண்ணி னானே'.[9]

என்ற அழகிய பாடலில் தோழியின் உய்த்துணர்வு கூறப் பெறுதலைக் கண்டு மகிழ்க.

மேற்கூறிய மூன்று முறையாலும் முறையே ஆராய்வதற்கு இளம்பூரணர் தரும் விளக்கம் இது: "இம்மூன்றினும் ஒன்று கண்டுழி அவரவர் குறிப்பினாற் புணர்ச்சி யுணரும் என்றவாறு. 'குறையுணர்தல்' முன் வைத்தார், நன்கு புலப்படுதலின், 'முன்னுறவுணர்தல்' அதன்பின் வைத்தார். தலைவி வேறுபாடு கண்டு பண்டையிற் போலாள் என்னும் நிகழ்ச்சியான் முற்றத் துணிவின்மையின். 'இருவருமுள் வழி அவன் வரவுணர்தல்' அதன்பின் வைத்தார். ஆண்டுப் புதுவோன் போலத் தலைவன் வருதலானும் தலைவி கரந்த உள்ளத்தளாய் நிற்குமாதலானும அத்துணைப் புலப்பாடின்மையின். அக்கருத்தினானே மேற்சொல்லப்பெற்ற தோழி கூற்று மூவகையாகப் பொருள் உரைத்ததென்று கொள்க.."[10] இம்மதியுடம்பாட்டின் வகை மூன்றும் இறையனார் களவியலுரையிலும் நம்பியகப் பொருளிலும் வேறுபடவும் கூறப் பெற்றுள்ளன.

9. களவியல் (நச்சி.)—23-ஆம் நூற்பாவின் உரைமேற்கோள்.
10. களவியல்-நூற். 37-இன் உரை (இளம்.)

**மடல் விலக்கு :** மேற்கூறியவாறு தோழி பலவகையானும் நாடி மதியுடம்பட்டதனை அறிந்த பின்பு தலைவன் தோழியை அணுகித் தன் குறையை முடித்துக்கொள்ள முயல்வான். தலைவன் தன்னைப் பலபடியாக வேண்டியும், தோழி எளிதில் இணக்கம் காட்டாமல் மறுத்தும், நகையாடியும், 'இவ்விடத்துக் காவலர் கடுகுவர்; நீவிர் விலகிச் செல்லுதிர்' என்று அவனைத் தம்பால் நெருங்கவொட்டாமலும் விலக்கி நிறுத்துவள். இங்ஙனம் நிறுத்தி அலைக்கும் பகுதி **'சேட்படை'** என்று வழங்கப்பெறும். சேட்படை என்பதற்குத் தூரவிடல், அகற்றல் என்பன பொருள்கள்; மறுத்தல் என்பது கருத்து. தலைவியை அடைதல் எளிதென்று நினைத்த தலைவனது நினைவை, அஃது அத்துணை எளிதன்று என்று தோன்றும்படி தோழி அகற்றுதல். இறையனார் களவியல் இதனை,

''சிறையுறக் கிளந்து சேட்பட நிறுத்தலும்''[11]

என்று குறிப்பிடும். இதனை உரைகாரர், ''சிறை என்பது காப்பு, உற என்பது மிகுதி, கிளத்தல் என்பது சொல்லுதல், சேண் என்பது அகற்றல், பட என்பது நிகழ்தல், நிறுத்தல் என்பது தழீஇக் கோடல் என்றவாறு; காப்பு மிகுதி சொல்லி அகற்றித் தழீஇக் கோடலும் என்றவாறு; ஆற்றாத் தன்மைக்கண் நிறுத்தல் என்னும் சொல் தழீஇக்கொள்ளும் என்பது; எனவே, தலைமகனை ஆற்றுமை செய்வன போன்று வைத்து ஆற்றுவிப்பன சில சொற் சொல்லும் என்பது போந்தது'' என்று விளக்கும் நுட்பத்தினை எண்ணி மகிழ்க. 'நம்பியகப் பொருள்' போன்ற பிற்காலத்து நூல்கள் இச்சேட்படையைப் பல கிளவிகளாக விரித்துப் பேசும். இவ்வாறு அலைக்கும் செயல் நீட்டிக்குமாயின், தலைவன் மனம் நொந்து தோழியை நோக்கி, ''இன்றினாங்கெல்லாம் இக்கருமம் நின்னால் முடியும் எனக் கருதி வந்து உழந்தேன்; இனி நின்னால் முடியாமை உணரப்பட்டது; பட்டமையான், இனி இளிவந்தன செய்தாயினும் முடிப்பல்'' என்று தன் உள்ளக்கிடக்கையை அவளுக்கு உரைப்பான். இளிவந்த காரியமாவது மடலேறுதல், வரைபாய்

11. இறையனார் களவியல்-நூற்பா 12.

தல் முதலியன. மடலேறுதல் என்பது, முற்காலத்தே தாம் விரும்பிய பெண்டிர் பொருட்டுச் செய்துகொள்ளும் தற்கொலை முறை என்பது முன்னரே விளக்கினோம்.[12] மடலேறும் தலைவனிடம் உள்ள படத்தைக் கண்டு 'இன்னவளுக்கும் இவனுக்கும் நட்பு உண்டு' என்பதை அறிந்து அதனை வெளிப்படக் கூறிப் பழிப்பர்; அது கேட்டுத் தமர் மணம் புணர்விப்பர். மடலேறும் தலைவன் நீறு, எருக்கமாலை, ஆவிரம் பூமாலை முதலியவற்றை அணிந்து வருதல் வழக்கமென்று தெரிகின்றது. மடலேற்றைக் குறித்த வேறு பல செய்திகளைத் திவ்வியப்பிரபந்தத்திலுள்ள **பெரிய திருமடல், சிறிய திருமடல்** என்பவற்றின் வியாக்கியானங்களால் உணரலாம். இவ்வாறு தலைவன் மடலேறுதலைப் பற்றிய செய்தி கலித்தொகைப் பாடல்களில் கூறப்பெற்றுள்ளது.[13] தொல்காப்பியரும் இதனை,

> ... ... ..."தோழி
> நீக்கலி னாகிய நிலைமையும் நோக்கி
> மடல்மா கூறும் இடனுமா ருண்டே." [14]

என்று கூறுவர். இதற்கு நச்சினார்க்கினியர், "தோழி இவ்விடத்துக் காவலர் கடியரெனக் கூறிச் சேட்பட நிறுத்தலின் தனக்கு உண்டாக்கிய வருத்தத்தையும் பார்த்து அச்சேட்படையான் மடலேறுவல் எனக் கூறும் இடனும் உண்டு என்றவாறு" என்று பொருள் கூறுவர். 'இடனும்' என்பதிலுள்ள உம்மையால் வரைபாய்தல் எனக்கூறும் இடனும் உண்டு என்று அவர் கருதுவர்.

> மாவென மடலும் ஊர்ப; பூவெனது
> குவிமுகிழ் எருக்கம் கண்ணியும் சூடுப;
> மறுகின் ஆர்க்கவும் படுப;
> பிறிதும் ஆகுப, காமம்காழ்க் கொளினே.[15]
> [மா-குதிரை; மடல்-பனைமடல்; கண்ணி-மாலை; மறுகு-வீதி;
> ஆர்க்க-ஆரவாரிக்க; காழ்க்கொள்ளுதல் - முதிர்தல்.]

என்ற குறுந்தொகைப்பாடலில் மடலேறுதல் செய்தி

---

12. இந்நூல் பக்கம் 49,50. 13. கலி. 138-141 பாடல்கள்.
14. களவியல் - நூற். 11. (இளம்.) 15. குறுந்-17.

வந்துள்ளதைக் காண்க. இதில் 'பிறிதுமாகும்' என்றது வரைபாய்தலே.

மேற்கூறியவாறு 'மடலேறுவேன்' என்று தலைவன் கூறக்கேட்ட தோழி, 'இது பெரிதும் கவர்ச்சிக்கு ஏதுவாம்' என்றஞ்சி, 'நீவிர் மடலேறத் தகாது; நுமக்கு இக்குறை முடித்துத் தருவன்; நும்மால் விரும்பப்பெறுவாள் என் மாட்டுப் பேரருளுடையாள்' என்று கூறித் தலைவனை மடல் விலக்குவள். பின்னர், அவள் தலைவியிடம் சென்று, முன் னிகழ்ந்த இருவர் கூட்டமும் தானறிந்தமையை அவளுக்கு உணர்த்திவிட்டு மேலும் கூறுவாள்: "அன்னாய், பெருந்தகை யான் ஒருவன் தழையும் கண்ணியும் ஏந்தி என்மாட்டுப் பெரிதும் குறையுடையனாய், இப்புனத்துக்கண் அடுத்தடுத்து வாரா நின்றான். யான் அவன் குறை முடியாமையின் மிகவும் வருந்துவானாயினன். அன்னான் ஏந்தி நின்ற கையுறையை நீ ஏற்றுக்கொண்டு அவன் குறை முடித்தற்கு இஃது ஏற்ற இடம்; யான் கூறுவது கொள்ளாயாயின், நினக்கு மிக்க அன்புடையார் மாட்டு உசாவியேனும் இதனை நிறைவேற்றுவா யாக; நீ இதனை மறுப்பின் அவன் மடலேறியேனும் வரைபாய்ந் தேனும் மாய்வதாகத் துணிந்துள்ளான்" என்று கூறிக் குறை நயப்பிப்பாள். அதனைக் கேட்ட தலைவி முதலில் அதற்கு இணங்காதவள் போல் காட்டினும், முடிவில் தான் உடம்பட் டதைக் குறிப்பால் உணர்த்துவள். அந்நிலையில் தோழி மீண்டும் தலைமகனை அடைந்து, நடந்த செய்தி கூறி, "இன்ன குறியிடத்து நீவிர் வருவீராக" என்று இடமுணர்த்திச் செல்ல, தலைவனும் ஆண்டுச் செல்வன். அவன் குறியிடம் வந்ததை யுணர்ந்ததும் தோழி தலைவியைக் குறியிடம் கொண்டு சென்று, "யான் செங்காந்தட்பூ கொய்துகொண்டு வருவேன்; அவ்விடம் அணங்குடைத்தாதலின், நீ வருதல் கூடாது; அத்துணையும் நீ இப்பொழிலகத்து விளையாடிக் கொண்டிரு" என அவளைப் பிரிந்து நீங்குவள். இந்நிலையில் தலைவன் தலைவியை எதிர்ப்பட்டுக் கூடிமகிழ்ந்து பின் பிரிந்து செல்வன். அவ்வமயம் தோழி விரைந்தோடி வந்து, "எம்பெரு மாட்டி, நின் கை போலக் காந்தள் மலர் கொணர்ந்தேன்; தோழி

காலம் நீட்டித்தாள் என்று சீறுது போந்தருள்" என்று ஒன்று மறியாள் போல் கூறி, அவளை அழைத்துச் சென்று ஆய வெள்ளத்துள் உய்ப்பள். இந்நிகழ்ச்சிகளையெல்லாம் தொல் காப்பியர்,

'குறைந்தவட் படரினும் மறைந்துஅவள் அருகத்
தன்னொடும் அவளொடும் முன்னமுன் தலைஇப்
பின்னிலை நிகழும் பல்வேறு மருங்கினும்
நன்னவம் பெற்றுழி நயம்புரி இடத்தினும்,[16]

என்று குறிப்பிடுவர். இப்பகுதிக்குரிய நச்சினர்க்கினியர்[17] இளம்பூரணர்[18] உரைகளால் மேற்குறிப்பிட்ட செய்தி தெளிவாகின்றது.

**குறியிடம் சேர்தல் :** மேற்குறிப்பிட்டவாறு கூடிப்பிரிந்த தலைவன் வேட்கை மீதூர மற்றை நாட்களிலும் வந்து தோழிக்குத் தன் குறிப்புணர்த்தி முன் கூடியது போல் கூடவும் பெறுவான். **குறியிடம்** என்பது, கலவியின்பொருட்டுத் தலைவனும் தலைவியும் சந்திக்கும் இடமாகும். அது **பகற்குறி** என்றும், **இரவுக்குறி** என்றும் இருவகைப்படும். இதனைத் தொல்காப்பியர்,

குறியெனப் படுவ திரவினும் பகலினும்
அறியக் கிளந்த ஆற்ற தென்ப.[19]

என்று கூறுவர். பகற்குறி என்பது, பகலில் சந்திக்கும் இடம்; இரவுக்குறி என்பது, இரவில் சந்திக்கும் இடம். இந்தக் குறி யிடங்கள் தலைவியாலும் தோழியாலும் காட்டப்பெற்று அவ் விடங்களில் பகலிலும் இரவிலும் தலைவன் தலையைச் சார் வான். இத்தகைய குறிகளை அமைத்தற்கும் ஒரு வரை யறையை உணர்த்துவர் தொல்காப்பியர். மனையினுட்புகாது அங்குள்ளோர் கூறும் சொற்கள் கேட்கும் அணிமைக்கண் அமைவது இரவுக்குறி; ஊரின் மதிற்புறமாய்த் தலைமகள்

16. களவியல்-நூற். 24. (நாற்றமும் தோற்றமும்.)
17. நச்சினர்க்கினியம்–பக். (495-499)
18. இளம்பூரணம்-(218-221)
19. களவியல்-நூற். 40 (இளம்.)

அறிந்து சேர்தற்குத் தகுதியுடையதாகிய இடமே பகற் குறி.

இதனைத் தொல்காப்பியர்,

இரவுக் குறியே இல்லகத் துள்ளும்
மனையோர் கிளவி கேட்டும்வழி யதுவே
மனையகம் புகாஅக் காலை யான.[20]

பகர்ப்புணர் களனே புறனென மொழிப
அவளறி வுணர வருவழி யான.[20]

என்று விதிகள் செய்து காட்டுவர்.

**இறையனார் கருத்து :** 'இரவுக்குறியே இல்வரை இகவாது' என்று இரவுக்குறியை உணர்த்தி மேலும் சில கூறுகின்றார்.[21] அவையும் இல்வரைப்பகத்தே நிகழும் என்பது குறிப்பு. அதன் உரையாசிரியரும், "அட்டில், கொட்டகாரம், பண்டகசாலை, கூடகாரம், பள்ளியம்பலம், உரிமையிடம், கூத்தப் பள்ளி என இவற்றுள் நீங்கி, செய்குன்றும் இளமரக்காவும் பூம்பந்தரும் விளையாட்டிடமும் அவற்றைச் சார்ந்தனவற் றுள்ளும் பிறவற்றுள்ளும் ஆக என்றவாறு. எனவே, பகற்குறி யிடம் போல வேறுபட்டது ஆகற்க இரவிற்குறியிடம் என்ற வாறு. அஃதேயெனின், மனையகத்து ஆக அழிவதுண்டோ எனின், குரவர்கள் உறையும் இடமாதலின் தெய்வத்தானம் என்று கருதப்படும். அல்லதூஉம், புகவும் போகவும் அருமை யுடைமையாகலானும் ஆகாது என்பது" என்று விளக்குவர். 'பகற்குறி தானே இகப்பினும் வரையார்' என்று அவ்வாசி ரியர் பகற்குறி கூறியதையும் உரையாசிரியர், "இகத்தல் என்பது ஒன்றின் இறத்தல்.........பலவாதல் என்றவாறு. ஒரு ஞான்று வேங்கைப் பொதும்பினுள் ஆம்; ஒரு ஞான்று கோங்கம் பொதும்பினுள் ஆம், குறிஞ்சி நிலமாயின். ஒரு ஞான்று புன்னையங்கானலுள் ஆம்; ஒரு ஞான்று கைதையங் கானலுள் ஆம், நெய்தல் நிலமாயின்" என்று விளக்குவர். மேற்கூறிய இருவகைக் குறியிடங்களிலும் தலைமகள்

20. களவியல்-நூற்பா 41, 42.
21. இறைய. கள-நூற். 19, 21.

கற்புடைய மகளிர்க்குரிய சிறப்பிற் குன்றாதவாறு தலைவனோடு கூடியொழுகுவாள் என்பர் ஆசிரியர். இது அவர் கூறிய,

ஆங்காங் கொழுகும் ஒழுக்கமும் உண்டே
ஓங்கிய சிறப்பின் ஒருசிறை யான.[22]

என்ற நூற்பாவினால் பெறப்படும்.

மேற்கூறிய இருவகைக் குறிகளுள் இரவுக்குறியில் தலைவன் வருமிடத்துப் பற்பல அடையாளங்கள் தலைவனால் நிகழ்த்தப்பெறும். அவை புனலொலிப்படுத்தல், புள்ளெழுப்புதல் முதலியன. இங்ஙனம் தலைவனால் தன் வரவுணர்த்தற்கு மேற்கொள்ளப்பெறும் குறிகள் வேறு வகையாலும் நிகழ்வதுண்டு. எடுத்துக்காட்டாக, புன்னைக்காய் மூக்கு ஊழ்த்திய தாலும், வளி எறிவதாலும், புள் துளக்குவதாலும் விழுந்து புனலொலிப்படுத்தும். அங்ஙனமே புள் எழுதலும், வெருவுவதாலும், வேற்றுப் புள் வருதலாலும் நிகழ்வதுண்டு. இவற்றைத் தலைவி தலைவன் வருகை குறிப்பனவாகக் கொண்டு, தோழி தலைவியை 'அல்ல குறிப்படுத்தி'த் தவறிப் போதலும் உண்டு. இதனைத் தொல்காப்பியர்,

அல்லகுறிப் படுதலும் அவள்வயின் உரித்தே
அவன்குறி மயங்கிய அமைவொடு வரினே.[23]

என்றும்,

'குறியின் ஒப்புமை மருள்தற் கண்ணும்'[24]

என்றும் குறிப்பிடுவர்.

கோடுமுள் மடற்றாழைக் கூம்பவிழ்ந்த ஒண்பூ,
இடையுள் இழுதொப்பத் தோன்றிப்—புடையெலாம்
தெய்வம் கமழும் தெளிகடல் தண்சேர்ப்பன்
செய்தான் தெளியாக் குறி [25]

[கூம்பு-குவிதல்; இடைஉள் – நடுவேயுள்ள சோறு; இழுது-வெண்ணெய்; புடை–பக்கம்]

என்ற பாடலில் தோழியும் தலைவியும் அல்லகுறிப்பட்டதை

22. களவியல் - நூற்பா 44 (இளம்.)
23. களவியல்-நூற்பா 43 (இளம்.)
24. ஷ நூற்பா - 21 (வரி-24)
25. ஐந்திணை ஐம்பது - செய். 49.

அறிக. அல்ல குறி—தவறுதலான குறி. தலைவியும் தோழியும் அல்ல குறிப்பட்டுப் பெயர்ந்த பின் தலைவன் வழக்கம் போல் வந்து தலைவியைக் காணாது சிறைப்புறத்து மயங்கி நின்றானாக, அதனையறிந்த தோழி தலைவனுக்குக் கேட்கும்படியாக இல்லின் பக்கலிலிருந்து கூறியது இப்பாடல்.

இவ்வாறு அல்ல குறிப்பட்ட மறுநாட்காலையில் தலைவியும் தோழியும் குறியிடம் வந்து நோக்க, தலைவன் குறித்த குறியிடத்தே தான் வந்து சென்றதற்கு அடையாளமாகக் கோட்டினும் கொடியினும் இட்டுவைத்த மோதிரம், மாலை, முத்தம் முதலியவற்றைக் கண்டு மயங்கி அவர் வருந்துவர். தலைவனும் அவரிட்ட குறி பிழைத்தமைக்கு இரங்கிச் செல்வன். இங்ஙனம் இரவுக் குறியில் பலகாலும் தலைவன் வருங்கால் வேறு சில இடையூறுகளாலும் தலைவி குறியிடம் சேர்வதற்கியலாது போவதுண்டு. தாய் துஞ்சாமை, நாய் துஞ்சாமை, ஊர் துஞ்சாமை, காவலர் கடுகுதல், நிலவு வெளிப்படுதல், கூகை குழறல், கோழி குரற்காட்டல் போல்வன மேற்குறிப்பிட்ட இடையூறுகளாகும். இவை யாவும் ஒருங்கே வரும் "இரும்பிழிமாரி"[26] என்ற அகப்பாட்டுப் படித்து மகிழ்வதற்குரியது.

களவுக்காலத்தில் தலைவன் தன் தோழர்களுடன் கலந்து கொள்ளும் விளையாட்டினையும் திருவிழாச் செயல் முறைகளையும் தவிர்க்கமாட்டான். அங்ஙனம் அவன் அவற்றை விலகியொழுகுவானாயின், அவன் வராமைபற்றி அவனைப் பலரும் வினவ, அது காரணமாக அவனது களவொழுக்கம் புறத்தார்க்குப் புலனாகும். எனவே, அவன் அங்ஙனம் நீங்கியொழுகுதல் கூடாது என்பர் ஆசிரியர். இக்களவொழுக்கத்திற்கு முழுத்தமும் (முகூர்த்தமும்) நாளும் துறந்தொழுகும் ஒழுக்கம் தலைவனிடம் இல்லை[27] அங்ஙனமே, தலைவன் வழியருமையும் நெஞ்சழிதலும் அஞ்சுதலும் இடையூறும் ஆகியவை தலைவன்பால் நிகழ்தல் கூடாது என்பர் ஆசிரியர். இதனை,

---

26. அகம் - 122.
27. களவியல்-நூற்பா 45 (இளம்.)

ஆறின தருமையும் அழிவும் அச்சமும்
ஊறும் உளப்பட அதனோ ரற்றே.[28]

என்ற நூற்பாவால் அறியலாம்.

இனி, எஞ்சியுள்ள வரைவுகடாதல், அறத்தொடு நிற்றல், உடன்போக்கு என்ற மூன்று பகுதிகளையும் அடுத்துக் காண்போம்.

28. களவியல் - நூற்பா 46 (இளம்.)

# 11. தோழியிற்கூட்டத்தில் சில மரபுகள்—(2)

**கா**தல் நாடகத்தின் பெருவிசைபோல் இருப்பவள் தோழி என்றும், அவள் உலகியலறிவு மிக்கவள் என்றும் முன்னர்க் கண்டோம். தோழி உரையாடுவதற்குரிய பொருண்மைகளை யெல்லாம் ஆசிரியர் தொல்காப்பியனார் ஓரிடத்தில் தொகுத்துக் கூறியுள்ளார்.[1] இப்பகுதியை நுணுகி ஆராயின், மக்கள் மனநிலையை அவர்தம் தோற்றம் ஒழுக்கம் முதலியவற்றால் உய்த்துணரும் மனப்பயிற்சியும் ஒத்த அன்பினராகிய தலைவனையும் தலைவியையும் உலகியல் கூறித் தீதொரீஇ நன்றின்பால் உய்க்கும் நல்லறிவும், உள்ளக் கருத்தறிதல் அருமையும், தன் அறிவின் திறத்தைப் பிறரறியாது ஒழுகும் அடக்கமும், மறை புலப்படாமல் நிறுத்தும் நல்லுள்ளமும், மாசற்ற அறவுணர்ச்சியும், செய்யத்தகுவன அறிந்து கூறலும் ஆகிய பெண்மைக் குணங்கள் முழுவதும் தோழியினிடத்து ஒருங்கமைத்திருத்தல் புலனாகும். இவ்வாறு பெறுதற்கரிய பெருங்குணங்கள் யாவும்[2] ஒருங்கு

1. களவியல்-நூற்பா 24. (இளம்.)
2. செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்
அறிவும் அருமையும் பெண்பா லான.
[பொருளியல் - நூற்பா 14]

என்று பெண்டிர் இயல்புகளைக் கூறுவர் தொல்காப்பியர். இங்குச் செறிவு என்பது, அடக்கம்; நிறைவு என்பது, மறை புலப்படாமல் நிறுத்தும் உள்ளம். செம்மை என்பது, மனக்கோட்டமின்மை; செப்பு என்பது, களவின்கட்செய்யத்தக்கன கூறல். அறிவு என்பது, நன்மை பயப்பனவும் தீமை பயப்பனவும் அறிவித்தல்; அருமை என்பது, உள்ளக் கருத்தறிதலருமை.

வாய்க்கப்பெற்றவளே தோழியெனப் பாராட்டுதற்குரியவ ளென்பார் 'தாங்கருஞ் சிறப்பின் தோழி' என்று கூறுவர் தொல்காப்பியர். இத்தகைய தோழி, தலைவன்—தலைவியின் களவொழுக்கத்தினை அதிகமாக நீட்டிக்க விரும்பாள். பகற் குறி இரவுக்குறிகளிலும் அவர்கள் அடிக்கடி சந்திக்கும் வாய்ப்புக்களை ஏற்படுத்தவே மாட்டாள். விரைவில் அவர்கள் ஊரார் அறியத் திருமணம் புரிந்துகொண்டு கற்பு நெறியில் வாழ்க்கை நடத்த வேண்டும் என்ற பெருவிருப்பினையுடைய வளாகவே இருப்பாள். எனவே, அதற்கு வேண்டிய திட்டங் களை வகுப்பதில் அவள் அறிவுத்திறம் மிக்கவளாகக் காணப் பெறுகின்றாள்.

**வரைவுகடாதல் :** தலைவன் இருவகைக் குறிகளிலும் பல காலும் வந்தொழுகுங்கால் தோழிக்கும் தலைவனுக்கும் சில உரையாடல்கள் நிகழும். இனியும் இவ்வாறெல்லாம் கள விலேயே வந்து தலைவியைக் கூடும் வழக்கத்தை விடுத்து விரைந்து மணம் செய்துகொள்ள வேண்டும் என்று தலைவனை வேண்டிக்கொள்ளும் முறையில் இவ்வுரையாடல்கள் நடை பெறும். இதுவே '**வரைவுகடாதல்**' என்பது; அஃதாவது, தலைவன் தலைவியை மணந்துகொள்ளுவதைப்பற்றி உசாவுதல். இக்களவு வெளிப்படச் சுற்றத்தார் இற்செறிப் பரோ என்றும், வழியாலும் பொழுதாலும் ஏதம் வருங்கொல் என்றும் தோழி அச்சமுற்று, 'இவ்வாறு களவொழுக்கம் ஒழுகல் நும் குடிப்பிறப்புக்கும் சிறப்புக்கும் பொருந்தாமை யின் இனி நீவிர் இவளை மணந்துகொள்வதே தகுதி' என்று தலைவனை வரைவுகடாவத் தொடங்குவள். முன்பெல்லாம் தலைவன் தோழியைக் குறையிரந்தானாகை, பகற்குறிப் புணர்ச்சி யின் பின் தோழி தலைவனைக் குறையிரப்பாளாயினள். இஃது உலகியல் வழக்கமாகும். இவ்வாறு தோழி தலைவனைப் புணர்ச்சியின் பின் வணங்கி வேண்டிக்கொள்ளு முறையினைத் தொல்காப்பியனாரும்,

'புணர்ந்தபின் அவன்வயின் வணங்கற் கண்ணும்.[8]

8. களவியல் - நூற். 24 (இளம்.) (வரி-16.)

என்று குறிப்பிடுவர். இவ்வரைவுகடாதல் பற்பல ஏதுக்கள் காட்டிக் கடாவப்படுதலின் அது பல'வகையாக விரியும்.

தோழி வரைவுகடாவும் முறை குறிப்பினால் வரைவு கடாவுதல், வெளிப்படையினால் வரைவுகடாவுதல் என்று இருவகைப்படும் எனக் கூறுவர் இறையனார் களவியலுரை யாசிரியர்.[4] **குறிப்பாவது,** தோழி தலைமகனை நோக்கி, "எம் அன்னை தலைமகளது வேறுபாடு கண்டு, இஃது இவட்கு எதனால் வந்தது என்று ஆராய்வாளாயினள்" எனப் பொய் பெய்து கூறுதல் போல்வது. இதனால் தலைவியைத் தம் அன்னை இற்செறிக்கக்கூடும் எனவும், அதற்கு முன்பு வரைந்துகொள்ளுதலே சால்புடைத்து எனவும் குறிப்பாகக் கூறித் தோழி வரைவு கடாவுவாள். **இற்செறிப்பு** என்பது, தலைவனைச் சந்திக்க இடமின்றி பெற்றோர் தலைவியை அவள் வயது முதிர்ச்சி நோக்கி வீட்டினுள் இருத்துகையாகும். இதனை மணிவாசகப்பெருமான்,

*விளை யாட நறவிளை வோர்ந்தெமர் மால்பியற்றும்
வேய்விளை யாடும்வெற் பாவுற்று நோக்கியெம் மெல்லியலைப்
போய்விளை யாடல்என் றாள்அன்னை யம்பலத் தான்புறத்தில்
நிவிளை யாடநின் றேவிளை யாடி திருமலைக்கே [5]

என்று விளக்குவர். தேனீக்கள் பறந்து விளையாடுவதைக் கொண்டே தேனினது விளைவை ஓர்ந்தறியும் எம்முடைய தமரைப் போலவே, எம்முடைய அன்னையும் எம் தலைவியை உற்று நோக்கி (அவள் உடல் வேறுபாட்டினைக் கண்டு), இனி திருமலைக்கண் புறம்போய் விளையாட வேண்டாம் என்றாள்" என்று தோழி தலைவியின் இற்செறிப்பைக் குறிப் பாற் புலப்படுத்துவதைக் காண்க.

இனி, வெளிப்பட வரைவுகடாதல் என்பது என்ன என்பதைக் காண்போம். தோழி தலைவனிடம் அவர்கள் களவொழுக்கம் ஊரரால் அறியப்பெற்று, முதலில் அம்ப லாக முளைத்துப் பின் அலராக வளர்ந்தது என்று கூறி இனி வரைந்துகொள்வதில் காலம் தாழ்த்தல் கூடாது என்று

4. இறை. களவியல்-நூற்பா 18-இன் உரை.
5. திருக்கோவை—133.

வெளிப்படையாகவே கூறுவாள். பரவாத களவை **அம்பல்** என்றும், களவை **அலர்** என்றும் கூறுவர் பேராசிரியர்.[6] அம்பல் என்பது, முகிழ் முகிழ்த்தல் என்றும், அலர் என்பது, சொல் நிகழ்தல் என்றும் உரைப்பர் நச்சினார்க்கினியர்.[7] இறையனார் களவியலுரையாசிரியர், "அம்பல் என்பது, சொல் நிகழாதே முகிழ்முகிழ்த்துச் சொல்லுவதாயிற்று; இன்னதின் கண்ணது என்பது அறியலாகாது என்பது. அலர் என்பது, இன்னானோடு இன்னாளிடை இது போலும் பட்டதென விளங்கச் சொல்லி நிற்பது. அம்பல் என்பது, பெரும் போதாய்ச் சிறிது நிற்க அலரும் என நிற்பது. அலர் என்பது, அப்பெரும் போது தாதும் அல்லியும் வெளிப்பட மலர்ந்தாற்போல நிற்கும் நிலைமையென வேற்றுமை சொல்லப்பட்டதாம்," என்று மேலும் விளக்குவர்.[8] அலரறிவுறுத்தலை,

"அறிந்தோர் 'அறனிலர்' என்றலின்; சிறந்த
இன்னுயிர் கழியினும் நனிஇன் னாதே.
புன்னை அம் கானல் புணர்குறி வாய்த்த
பின்ஈர் ஒதிஎன் தோழிக்(கு) அன்றே!
படுமணி யானைப் பசும்பூட் சோழர்
கொடிநுடங்கு மறுகின் ஆர்க்காட்(டு) ஆங்கண்,
கள்ளுடைத் தடவிப் புள்ஒலித்(து) ஓவாத்
தேர்வழங்கு தெருவின் அன்ன,
கெளவை ஆகின்ற(து) ஐய! நின் அருளே.[9]

[நனி - மிகவும்; பின் ஈர் ஒதி - பின்னிய குளிர்ந்த கூந்தல்; அன்றே-இரக்கச் சொல். மறுகின்-தெருவில். தடவு-சாடி, பானை; புள்-வண்டுகள்; கெளவை - அலர், பழிச்சொல்.]

என்ற நற்றிணைப்பாடலால் அறியலாம். இது மணம் செய்து கொள்ளாது களவுப்புணர்ச்சியே கருதி வந்தொழுகும் தலைமகனைத் தோழி குறியிடத்தில் தொழுது தலைவனால் அருளிப் பாட்டொடு செய்த தலையளிதான் பலரானும் அறியப்

6. திருக்கோ—180-இன் உரை.
7. களவியல்—48-இன் உரை (நச்.)
8. நூற்பா—22-இன் உரை.
9. நற்றிணை—227.

பெற்று அலராயிற்று என்றும், இனி இவள் இறந்துபட்டொழியினும் இப்பழிச்சொல் நீங்குவதொன்றன்று என்றும் வரைவு தோன்றக் கூறுவதை அறிக. இங்ஙனம் வரைவு கடாவும் விகற்பங்களைத் தொல்காப்பியர் கூறும்,

'களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக்
காதல் மிகுதி உளப்படப் பிறவும்
நாடும் ஊரும் இல்லுங் குடியும்
பிறப்புஞ் சிறப்பும் இறப்ப நோக்கி
அவன்வயின் தோன்றிய கிளவியொடு தொகைஇ[10]

என்ற தோழி கூற்றாலும் அதற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரை விரிவாலும் நன்கு அறியலாம். திருக்குறளில் 'அலரறிவுறுத்தல்' என்று அதிகாரத்தும் இந்த வரைவு கடாதலுக்கு நல்ல விளக்கம் காணலாம்.

மேற்கூறியவாறு தோழி கூற்றிலேயே வரைவு கடாதலை அமைத்துக் காட்டிய தொல்காப்பியர் மீட்டும் பொருளியலில்,

பொழுதும் ஆறும் காப்புமெய்ந் நிவற்றின்
வழுவி னாகிய குற்றங் காட்டலும்
தன்னை யழிதலும் அவணா றஞ்சலும்
இரவினும் பகலினும் நீவா என்றலுங்
கிழவோன் தன்னை வாரல் என்றலும்
நன்மையும் தீமையும் பிறிதினைக் கூறலும்
புரைபட வந்த அன்னவை பிறவும்
வரைதல் வேட்கைப் பொருள என்ப.[11]

[தன்னையழிதல்—தான் மனனழிந்து கூறல்; கிழவோன்—தலைமகன்; குறைபட—குற்றம் பயப்ப]

என்று வரைதல் வேட்கைப் பொருளாக வரும் இடங்களைக் காட்டுவர். இளம்பூரணரும் இங்ஙனம் தோழி கூறும் சொற்கள் யாவும் தலைமகளுக்குத் தலைமகன்பால் விருப்பமின்மையாற் கூறப்பட்டன அல்ல. தலைமகனை அவன் விரைவில் மணந்துகொள்ளுதல் வேண்டுமென்னும் வேட்கையினைப் பொருளாகவுடைய சொற்களாகும் என்று விளக்குவர்.

10. களவியல்—நூற். 23 (நச்சி.)
11. பொருளியல்—நூற்பா 15 (இளம்.)

மேலும் அவர், "இவையெல்லாந் தோழி கூற்றினுள் கூறப் பட்டன. ஆயின் ஈண்டோதியதென்னை எனின், அவை வழுப்போலத் தோன்றும் என்பதனைக் கடைப்பிடித்து அன் பிற்கு மாறுகாது ஒரு பயன்பட வந்ததென உணர்த்துதலே ஈண்டு ஓதப்பட்டதென்ப. நன்மையுந்தீமையும் பிறிதி னைக் கூறலும் என்பது நாடும் ஊரும் இல்லும் குடியும் என ஆண்டோகப்பட்டது. இவை வரைதல் வேட்கைப் பொருளா வாமாறும் ஆண்டுக் காட்டப்பட்ட உதாரணத்தான் உணர்க" என்று உரைப்பர்.

தலைவன் களவொழுக்கத்து நீட்டித்தொழுகிய நிலையில் இவ்வாறு குறிப்பாகச் சொல்லாது தெளிப்படையாக மறுத் துரைத்தலும் உண்டு என்பது தொல்காப்பியனாரின் கருத்து மாகும். இதனை அவர்,

வேட்கை மறுத்துக் கிளந்தாங் குரைத்தல்
மரீஇய மருங்கின் உரித்தென மொழிய.[12]

[கிளந்தாங்கு – பட்டாங்கு; மரீஇய மருங்கு - மருவிய பக்கம்; அஃதாவது களவொழுக்கம் நீட்டித்த இடம்]

என்று குறிப்பர். எடுத்துக்காட்டாக,

கொடிச்சி யின்குரல் கிளிசெத் தடுக்கத்துப்
பைங்குரல் ஏனல்படர்தருங் கிளியெனக்
காவலும் கடியுநர் போல்வர்
மாமலை நாட வரைந்தனை கொண்மே.[13]

[செத்து - அறிந்து; பைங்குரல் ஏனல் - பசுமையான கதிரை யுடைய தினை; வரைந்தனை கொண்மோ - வரைந்துகொள் வாயாக.]

என்ற ஐங்குறுநூற்றுப்பாடலில் தலைவன் களவு நீட்டித்த வழித் தோழி பட்டாங்கு கூறி வரைதல் வேட்கையை உணர்த்தியதை அறிக.

அகப்பொருள் விளக்க நூலார் வரைவு கடாதலைப் போய்த்தல், மறுத்தல், கழறல், மெய்த்தல் என்று நான்கு வகையாகப் பாகுபடுத்திப் பேசுவர்.

12. பொருளியல்—நூற்பா 16 (இளம்.)
13. ஐங்குறு.—289.

பொய்த்தல் மறுத்தல் கழறல் மெய்த்தலென் (று)
ஒருநால் வகைத்தே வரைவு கடாதல்.[14]

என்பது அவர் கூறும் நூற்பா. இதில் **பொய்த்தல்** என்பது, தோழியானவள் தலைவியைத் தலைவன் மணந்துகொள்ளும் படி செய்ய எண்ணித் தலைவனிடம் பொய்யாயினவற்றைத் தானே புனைந்து கூறுதல். **மறுத்தல்** என்பது, தலைவன் குறிக்கண் வருதலைத் தோழி குறிப்பாகவும் வெளிப்படையாகவும் மறுத்தல். **கழறல்** என்பது, தோழி தலைவனிடம் அவன் தலைவியை மணந்துகொள்ளாமல் களவின்கண் ஒழுகுதல் அவன் நாடு முதலியவற்றிற்கு ஏற்றது அன்றெனத் தலைவற்குக் கூறுதல். **மெய்த்தல்** என்பது, தோழி தலைவனுக்கு மெய்யாயினவற்றைக் கூறுதல். இவை ஒவ்வொன்றுக்கும் உரியவையாகப் பல கிளவிகளைக் காட்டுவர் அவ்வாசிரியர்.

**அறத்தொடு நிற்றல் :** மேற்கூறியவாறு தலைமகனை வரைந்துகொள்ளுமாறு தோழி பலபடியாக வேண்டியும், அவன் அங்ஙனம் செய்யாது களவொழுக்கத்தையே நோக்க முடையவனாக இருப்பான். இந்நிலையில் தலைவிக்கு ஆற்றாமை கைமிக்கு ஏதம் பலவாக வந்து சேரும். இப்பொழுது அவளுக்குத் தோன்றாத் துணையாக இருக்கும் தோழி, "இனி இக்களவினைத் தமர்க்கு வெளிப்படச் செய்து அவரால் குறித்த தலைவனுக்கே கொடுக்கச் செய்தல் தக்கது" என்று உளங்கொண்டு அவர்கட்குக் களவொழுக்கத்தை மெல்ல வெளிப்படுத்தத் தொடங்குவாள். இங்ஙனம் வெளிப்படுத்தலையே "**அறத்தொடு நிற்றல்**" என்று ஆன்றோர் வழங்குவர். இதற்கு 'அறனழியாமை நிற்றல்' என்பதும், 'கற்பின்றலை நிற்றல்' என்பதும் பொருளாகும். அறன் - கற்பு. இப்பகுதியின் விரிவுகளைப் பின்னர் விளக்குவோம்.[15]

**உடன்போக்கு :** தலைவனும் தலைவியும் பகற்குறியிலும் இரவுக்குறியிலும் பலகாலும் கூட்டம் நிகழ்த்திவருவதனால், அவர்களது மறைவொழுக்கம் வெளிப்பட்டு அலராகும். இதனையறிந்த தலைவன் தோழியின் விருப்பத்திற்கிணங்கச்

---

14. நம்பி அகப்.—நூற்பா 165.
15. "முறையுடைப் பேச்சு" என்ற தலைப்பில் (கட்டுரை—12).

சில காலம் அவ்வலர் அடங்குமாறு கூட்டம் நீங்கி வேறிடத்துக்குச் சென்று உறைவான். அவ்வாறு நீங்கி நிற்றலை அகப்பொருள் நூல்கள் **'ஒருவழித் தணத்தல்'** என்று குறிப்பிடும். அலரறிந்த தலைமகன் இவ்வாறு ஒருவழித் தணந்து நில்லானுனால் அவன் தலைவியைத் தோழியின் துணைக்கொண்டு ஆங்கு நின்றும் பெயர்த்து ஒருவருக்கும் தெரியாமல் நள்ளிரவில் தன் மனையிடத்துக்கு உடன் கூட்டிக்கொண்டு செல்வான். இங்ஙனம் அவன் செல்லலை **'உடன்போக்கு'** என்று வழங்குவர் அகப்பொருள் நூலார். இவ்வுடன்போக்கும் நிகழாவிடின், தோழியினால் அவன் வரைவு முடுக்கப்பெற்றுத் தலைவியைத் திருமணம் செய்துகொள்வான். இதுவே **'வரைந்து கோடல்'** என்பது. எனவே, இரவுக்குறி நிகழ்ந்த பின்னர் 'ஒருவழித் தணத்தல்', 'உடன் போக்கு', 'வரைந்து கோடல்' என்னும் மூன்றனுள் யாதானும் ஒன்று தலைவனுக்கு நிகழும் என்று கொள்ள வேண்டும். பேராசிரியரும் திருக்கோவையார் உரையில், "இவ்வாறு இரவுக்குறி புணர்ந்து, அலர் எழுந்ததென்று விலக்கப்பட்ட பின்னர்த் தெருண்டு வரைதல் தலை. தெருளானாயின், அவ்வலரடங்கச் சில நாள் ஒருவழித்தணந்துறைதல், உடன்கொண்டு போதல், தோழியான் வரைவு முடுக்கப்பட்டு அருங்கலம் விடுத்து வரைந்து கோடல் இம்மூன்றினுளொன்று முறைமை என்ப"[16] என்று கூறியுள்ளதை அறிக.

**உடன்போக்கின் இயல்பு:** செவிலி முதலியோர், 'தங் குலமகள் தனக்குரிய 'காதல் தலைவனைக் கூடிக் கற்புக்கடம் பூண்டாள்' என்று அறத்தொடு நிற்குமுறையில் அதனை உய்த்து உணர்வர்.

> "நந்தையும் தன்னையும் முன்னத்தின் உணர்ப"[17]
>
> [முன்னம்- குறிப்பு]

என்ற தொல்காப்பியக் களவியல் நூற்பா இதனை வலியுறுத்தும். இங்ஙனம் உணர்ந்த பெற்றோர், அந்தத் தலைவனுக்கே அவளை மணம் புரிவிக்க முயல்வாராயின், அது பெரிதும்

16. திருக்கோவை - ஒருவழித் தணத்தல் - என்பதன் உரை.
17. களவியல் - நூற். 47 (இளம்.)

சிறப்பாக அமையும். அங்ஙனமின்றி வேறொருவனுக்குத் தம் மகளை மணம் பேசினாலும், அன்றி, தலைவனைக் காணப்பெறா வண்ணம் அவளை இற்செறிப்புச் செய்தாலும் தலைவிக்கு ஆற்றாமை கைமிக்குத் துயரம் பெருகும். இந்நிலையில் தோழி, 'இனி, இவள் இறந்துபடவும் கூடும்' என்று உணர்ந்து கவன்று, வேறு வழியொன்றும் தோன்றாத நிலையில் இவ்வாறு செய்வாள்: பண்டு தலைவன் வந்து பயின்ற இடத்திற்குத் தோழி சென்று, தலைவனை எதிர்ப்பட்டு அவனைத் தொழுது வலஞ்செய்து, "நும்மால் தலைவிமாட்டுச் செய்யப்பெற்ற தலையளி[18] உண்மையாகவே பலரான் அறியப்பெற்றதுடன், சுற்றத்தாரது சிற்றத்திற்கும் ஏதுவாயிற்று. நீவிர் முன்னரே தலைவியை மணந்துகொள்ள முயலாது, களவொழுக்கத்தே கருத்துக்கொண்டு ஒழுகியதாலன்றோ இந்நிலை ஏற்பட்டது? அல்லதூஉம், ஏதிலரும் வரைந்தெய்தியதற்கு முலைவிலையொடு (பரிசமொடு) புகுந்து பொன்னணியமுந்துற்றார். இனி என் செய்வோம்?" என்று படைத்து மொழிவாள். அந்நிலையில் தலைவன் தன்னால் செய்யற்பாலது யாது என்று வினவுவான். அதற்குத் தோழி, 'நீரே சூழ்ந்து சொல்லுதிர்' என்று மறுமொழி தருவாள். இதைக் கேட்ட தலைமகன், 'அவளை உடன்கொண்டு போவது துணிந்தேனெனினும், நிழலும் நீரும் இல்லாத அழல் வெங்கானம் ஆற்ற இல்லாள் கொல்லோ?' என்று தன் ஐயப்பாட்டைப் புலப்படுத்துவான். அதற்குத் தோழி, 'அன்ன வெங்கானமெனினும் எம்பெருமாட்டிக்கு நும்மொடு வரப் பெரிதும் இனியவாம்' என்று மாற்றம் உரைப்பாள். தலைவனும் 'ஆயின், என் காதலியை உடன்கொண்டு போக வலித்தேன்; நீ இதனை அவட்கு உணர்த்தி ஆவன செய்க' என்று கூறுவான். தோழியும் அங்ஙனமே செய்து வருவதாகத் தலைவனிடம் விடைபெற்றுச் செல்வாள்.

தோழி தலைமகளுழைச் சென்று அவள் குறிப்பறிந்து, 'எம்பெருமாட்டி, நம் பெருமான் நினைத் தம்மொடு தம்மூர்க்குக் கொண்டுசெல்லக் கருதுகின்றனர்; நின் குறிப்பு

18. தலையளி - பேரன்பு.

என்னை ?' என்று உசாவுவள். அது கேட்ட தலைவி தன் நாணழியவரினும் தன் கற்பைக் கைவிடாமை துணிந்து, அவனது உடன்போக்கிற்குத் தான் இசையும் குறிப்பைத் தலைசாய்த்து நிலங்கிளையா நிற்கும் நிலைமையால் வெளிப் படுத்துவாள்.

அளிதோ தானே நாணே; நம்மொடு
நனிநீ டுழந்தன்று மன்னே; இனியே
வான்பூங் கரும்பின் ஓங்குமணற் சிறுசிறைத்
தீம்புனல் நெறிதர வீய்ந்துக் காஅங்குத்
தாங்கும் அளவைத் தாங்கிக்
காமம் நெறிதரக் கைந்நில் லாதே. 19

[அளிது - இரக்கத்தக்கது ; நாண் - நாணம்; உழந்தன்று - வருந்தியது ; வான் - வெள்ளிய; சிறை - கரை; நெறிதர - நெருங்கி அடித்தலால்; வீய்ந்து - அழிந்து; உக்காங்கு - வீழ்ந்தாற் போல்; நெறிதர - நெருக்க; கைநில்லாது - போய்விடும்.]

என்ற குறுந்தொகைப் பாடல் உடன்போக்கு உணர்த்திய தோழிக்குத் தலைவி தான் தலைவனுடன் செல்லுதலால் நாண் அகலும் என்று இரங்கிக் கூறுவதாக வந்துள்ளதைக் காண்க. தொல்காப்பியரும்,

உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்
செயிர்தீர்க் காட்சிக் கற்புச் சிறந்தன்று. 20

என்ற முன்னோர் கருத்தைத் தன் நூற்பாவில் பெய்து வைத்துள்ளார்.

தலைவி உடன்போக்கிற்கு உடன்பட்டதும் தோழி அதற்கு வேண்டுவன புரிந்து முன்பு இரவுக்குறி போல ஒருவரும் அறியாவகை அவளைக் குறியிடத்திற்குக் கொண்டு செல்வாள். சென்றவள் தலைவனை நோக்கி, 'இவள் நும் அடைக்கலப்பொருள் ; அருள்கொண்டு இன்று போல் என்றும் பாதுகாப்பாய்' என்று வேண்டி நீங்குவாள். இதனை அகப்பொருள் இலக்கணம் **'ஓம்படை'** என்று குறிப்பிடும். ஓம்படை என்பது அடைக்கலத்தைக் குறிப்பது.

19. குறுந். – 149.
20. களவியல் - நூற்பா 23 (இளம் )

'ஓம்படைக் கிளவிப் பாங்கின் கண்ணும்'[21]

என்ற களவியல் நூற்பாப் பகுதியும் இதனைப் புலப்படுத்தும். இவ்வாறு தலைவி ஓம்படுத்துரைப்பதை,

அன்னாந் தேந்திய வனமுலை தளரினும்
பொன்னேர் மேனி மணியின் தாழ்ந்த
நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்
நீத்தல் ஒபுமதி பூக்கேழ் ஊர![22]

என்ற நற்றிணைப் பாடலாலும் அறியலாம். இதுவே உடன் போக்கின் இயல்பும் வரலாறுமாகும்.

மேற்கூறியவாறு தலைவி உடன் செல்லத் துணியும் செயல் எவ்வெப்பொழுது நிகழும் என்பதையும் ஆசிரியர் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார்.

ஒருதலை உரிமை வேண்டினும் மகடூஉப்
பிரிதலச்சம் உண்மை யானும்
அம்பலும் அலருங் களவுவெளிப் படுக்குமென்று
அஞ்ச வந்த ஆங்கிரு வகையினும்
நோக்கொடு வந்த இடையூறு பொருளினும்
போக்கும் வரைவும் மனைவிகண் தோன்றும்.[23]

என்ற பொருளியல் நூற்பா இதனைப் புலப்படுத்தும். இடைவிடாது இன்பம் நுகர்தலோடு மனையறம் நிகழ்த்தும் உரிமையை உறுதியாக விரும்புதலானும், வினை செய்தலில் விருப்புடைய ஆண் மக்கள் பிரிவர் எனக் கருதி அஞ்சும் அச்சம் மகளிர்க்கு இயல்பாதலானும், களவொழுக்கத்தைப் புறத்தார்க்கு வெளிப்படுத்துமென்று அஞ்சும்படி தோன்றிய அம்பலும் அலரும் ஆகிய இருவகைக் குறிப்பினாலும், தலைமகனது வரவினை எதிர் நோக்கியிருந்த நிலையில் வந்த அவனுடன் அளவளாவுதற்கு இயலாதபடி இடையூறு நேர்தலானும் உடன் போக்கும் (வரைவும்) தலைவியிடம் தோன்றும் என்பது ஆசிரியரது கருத்தாகும்.

இவ்வாறு ஒருவரும் அறியாவண்ணம் காதல் தலைவனுடன் தலைவி சென்ற செய்தி பிற்றைஞான்று வெளிப்

21. களவியல் - நூற். 24 (வரி-25) (இளம்.)
22. நற்றிணை - 10.
23. பொருளியல் - நூற். 29 (இளம்.)

பட்டதும் சுற்றத்தார், தலைவன் செயற்கு மிகவும் வெகுண்டு அவ்விருவர் செயலையும் தடுத்தற்பொருட்டுத் திரண்டு விரைந்தெழுவர். இங்ஙனம் இவர்கள் வெகுண்டெழு வதற்கு முன்பே, தலைவி மறைந்த செய்தியைக் கேட்டதும் செவிலி மயங்கிக் கவலை மேற்கொண்டு தலைவன் தலைவி சென்ற இடைச்சுரத்தை நோக்கித் தேடிப் போவாள். வழியில் எதிர்ப்படும் முக்கோலந்தணரையும் மற்றவரையும் உசாவி, அவரால் அவ்விருவரும் அகமகிழ்ந்து சென்றுகொண்டிருத் தலையும் அவர்கள் அறநெறியில் நிற்றலையும் அறிவாள். அங்ஙனம் செல்பவள் ஆற்றுமையால் மேற்செல்ல இயலாமல் மீண்டு வருவாள். இந்தச் செய்தி "எறித்தரு கதிர் தாங்கி" [24] என்ற கலிப்பாட்டால் நன்கு அறியப்பெறுகின்றது. சுவை மிக்க அப்பாட்டைப் படித்து இன்புறுக. தலைவியைப் பெற்ற நற்றாயோ செவிலியைப் போல் நெடுந்தூரம் செல்லாளாயி னும், தன்னூர்த் தெரு வரையிலும் தேடுவதற்குரியள் என்று கூறுவர் தொல்காப்பியர்.

இதுஎன் பாவைக் கினியநன் பாவை
இதுவென் பைங்கிளி எடுத்த பைங்கிளி
இதுவென் பூவைக் கினியசொற் பூவையென்று
அலம்வரு நோக்கின் அலம்வரு கடர்நுதல்
காண்தொறும் காண்தொறும் கலங்கி
நீங்கின ளோவென் பூங்க ணோளே. [25]

என்று ஐங்குறுநூற்றுப் பாடல் நற்றாய் சேரியோரை வினவு வதாகக் கூறுவதை அறிக. மேற்கூறப்பெற்ற செய்தி,

ஏமப் பேரூர்ச் சேரியும் சுரத்தும்
தாமே செல்லுந் தாயரும் உளரே. [26]

என்ற நூற்பாவால் அறியப்பெறும். 'தாயார்' எனப் பன்மை கூறித் 'தாமே' யெனப் பிரித்ததனுற் சேரிக்கு நற்றாய் சேறலும், சுரத்திற்குச் செவிலித்தாய் சேறலும் புலனெறி

24. கலி. - 9.
25. ஐங்குறு. - 375.
26. அகத்திணை நூற்.-37 (நச்சி.)

வழக்கிற்குச்[27] சிறந்ததென்றுணர்க'' என்ற நச்சினார்க்கினியரின் உரை விளக்கம் இதனை மேலும் தெளிவாக்கும்.

தலைவன் தலைவியை உடன்கொண்டு செல்லும் பொழுது இடைவெளியில் சுற்றத்தார் திரண்டு வந்து, தலைவனை மேற்செல்லாவண்ணம் தடுத்து நிற்பர். அப்பொழுது தலைவி, அவர்களுடைய செயலுக்கு மனம் ஒவ்வாது தன் காதலனைச் சார்ந்து நிற்பள். அதனைக் கண்ட சுற்றத்தார் தலைவியின் செயல் அறநெறிப்பட்டதாதலின், தாம் அதற்கு யாதொரு இடையூறும் விளைவித்தல் கூடாதென்றும், அங்ஙனம் செய்யினும் தலைவி தலைவனை மணம் முடித்துக்கொள்ளுதல் ஒருதலை என்றும் கருதி, அவர்கள் உடன்போக்கிற்கு உடன்பட்டுத் தம் ஊர் நோக்கி மீள்வர். இதனைத் தொல்காப்பியர்,

'இடைச்சுர மருங்கில் அவள்தமர் எய்திக்
கடைக்கொண்டு பெயர்தலிற் கலங்கஞர் எய்திக்
கற்பொடு புணர்ந்த கௌவை'[28]
[கலங்கு அஞர்—மிக்க துன்பம்]

என்று குறிப்பர். அங்ஙனம் தமர் மீண்டதும் தலைவன் தலைவிக்குத் தம்முடைய ஒழுக்கம் தமக்கு மட்டுமன்றிப் பழமையாக வழங்கும் உலகியல் என்று கூறி, அவளைத் தெருட்டியும், வழி இளைப்புத் தீர அவளை மருட்டியும் உடன்கொண்டு சென்று தன் பதியை அடைவான்; பிறகு வதுவை மணம் புரிந்துகொள்வான். இவ்வாறு களவுப்புணர்ச்சிக்குரிய தலைவியைத் தலைவன் உடன்கொண்டு செல்லுதல் பண்டைய தமிழ் வழக்காக இருந்தது; அஃது உயர்ந்த அறநெறியாகவும் கருதப்பெற்றது.

சுரநனி இனிய வாகுக தில்ல
அறநெறி யிதுவெனத் தெளிந்தவென்
பிறைநுதற் குறுமகள் போகிய சுரனே.[29]

இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின்
சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்
அறந்தலைப் பிரியா ஆறுமற் றதுவே.[30]

---

27. புலனெறி வழக்கம் – புலவரால் பாடுதற்கமைந்த புலவராற்று வழக்கம்.
28. அகத்திணை – நூற்பா 41 (நச்சி.)
29. ஐங்குறு. - 371. 30 கலி. - 9

என்ற சான்றோர் செய்யுட்கள் இக்கருத்தினை வலியுறுத்தும், இவ்வுடன்போக்கினைத் தொல்காப்பியர் "கொண்டுதலைக் கழிதல்"[31] என்றும் வழங்குவர்.

இதுகாறும் அறிந்தவற்றால், தோழியிற்கூட்டம் என்ற பகுதியே ஏனைய பகுதிகளைவிடப் பல பிரிவுகளையுடையதாக முன்னோரால் மொழியப்பெற்றுள்ளது. இவ்வுடன்போக்குடன் களவொழுக்கம் முடிவடையும். தொல்காப்பியரும் "மறை வெளிப்படுதலும்" [32] என, உடன்போக்கிற்குப் பின்னர் நிகழும் மறை வெளிப்பாட்டைக் கற்பு முறையின் தொடக்கமாகக் கூறுவர். திருவள்ளுவரும் 'அலரறிவுறுத்தலுடன்' களவியலை முடித்துக் கற்பியலைத் தொடங்குதல் ஈண்டு சிந்திக்கத்தக்கது. இங்ஙனமாக, இயற்கைப்புணர்ச்சி முதல் தோழியிற்கூட்டம் முடியவுள்ள பொருட்பகுதியே அகத்திணையுள் பெரிதும் சிறந்தது என்பது ஆன்றோர் கருத்து. இதனை, "அகத்திணையின் மிகத்திகழும் இன்பக்கலவி யின்பக்களவு முற்றிற்று" என்று பேராசிரியர் திருக்கோவையாரின் அப்பகுதி யிறுதியில்[33] எழுதியுள்ள உரைப்பகுதியாலும் அறியலாம்.

31. அகத்திணை - நூற். 14 (நச்சி.)
32. செய்யுளி. - நூற். 179 (இளம்.)
33. திருக்கோவை -300

## 12. முறையுடைப் பேச்சு

'அறத்தோடு நிற்றலை' முன்னர்க் குறிப்பிட்டோம். அதனை ஈண்டு விளக்குவோம். சிறந்த நாடகத்தில் வரும் மாந்தர் பேசும் போது ஒரு வரையறைக்குள் நின்றுதான் பேசுவர்; ஒரு கட்டுப்பாட்டினுள் இருந்து பேசுமாறு தான் நாடக ஆசிரியன் அவர்களை இயக்குவான். அது போலவே, நாடக வழக்காகப் புலவன் படைத்து மொழிந்த ஐந்திணை நெறியில் காணும் மாந்தரும் ஓர் எல்லைக் கோட்டினுள் நின்றுகொண்டுதான் பேசுவர்; பேசும் பேச்சுகளையும் அளந்துதான் பேசுவர். தேவையற்ற சொற்களைக் கூறியோ, முறையற்ற சொற்களைச் சிந்தியோ நிகழ்ச்சிகளின் தரத்தைக் குறைப்பதில்லை; ஒழுங்கு தவறிப் பேச வேண்டாதவரிடமும் பேசுவதில்லை. இவ்வுலக விவகாரங்களில், சிறப்பாக அரசியல் ஆட்சி முறையில் இப் வொழுங்கு முறையை நாம் காண்கிறோம். ஆங்கிலத்தில் Proper Channel (முறையோடு செல்லுதல்) என்று சொல்லு கின்றோமே, அதைப் போலவே இந்த முறையில் இன்னின்னார், இன்னின்னாரோடு, இன்னபடிதான் பேச வேண்டும் என்ற முறையையும் அகப்பொருள் உலகைப் படைத்துக் காட்டும் கவிஞன் கூறியிருக்கின்றான். இந்த ஒழுங்கு முறையையும் தொல்காப்பியம் ஆங்காங்கு குறிப்பிடுகின்றது. அதை ஒரு சிறிது ஈண்டு ஆராய்வோம்.

தமிழ் நூல்கள் விரித்துப் பேசும் காதல் தெய்விகக் காதல் என்பதை நாம் முன்னர் அறிந்தோம். அத்தகைய காதல் உலகில் நாம் சந்திக்கும் தலைவன், தலைவி, தோழி முதலியவர்கள் கற்பனை உலகத்து மாந்தர்கள்; இன்னார்

என்று சுட்டிப் பெயர் கூறி உணர்த்தப்படாதவர்கள். காதலை யாருடனுவது சார்த்திச் சொன்னுல் அதன் தூய்மை கெட்டுவிடும் என்று எண்ணின தமிழர்கள், அக்காதல் நாடகத்தில் தலைவன் தலைவியராகத் திகழ்பவர்களைச் சிறந்த நிலையில் வைத்துக் காட்டுகின்றனர். ஊழின்வலியால் சந்தித்து ஒருவருக்கும் தெரியாமல் களவு முறையில் மணம் செய்துகொண்ட இவர்களின் ஒழுக்கத்தை உலகோர் அறிய வேண்டியது அவசியம். அந்தச் செய்தி எவ்வாறு வெளியாகின்றது? எந்த முறையில்— ஒழுங்கில் — வெளியாகின்றது என்பதை அறியும் போது உண்மையில் நாம் மகிழ்கின்ருேம்; அந்த வரையறையைக் கண்டு எல்லையற்ற வியப்பெய்துகின்ருேம்.

**குறிப்பாக உண்மையை வெளியாக்கல் :** ஊழின் வலியால் ஒன்றுபட்ட தலைவனும் தலைவியும் களவுக்காலத்தில் அடிக்கடி சந்திப்பதற்குத் துணைபுரிபவள் தோழி. என்ருலும், தலைவன் தலைவியை மணந்துகொண்டு உலகறியக் கணவன் மனைவியராக வாழ வேண்டும் என்ற எண்ணம் தோழிபால் எப்பொழுதும் இருக்கும். களவுக்காலத்தில் தலைவனைக் காண முடியாமல் தலைவி பிரிந்து வாழும் நேரம் அதிகமாக இருக்கும்; ஒருவருக்கும் தெரியாமல் மணமாகாதார் சந்திக்கும் வாய்ப்புக்கள் அடிக்கடி கிட்டுதலும் அவ்வளவு எளிதன்று. எனவே, பிரிவை நினைந்து தலைவி வருந்துவாள். இதனுல் தலைவியின் உடல் இளைத்துப் போகும். அதைக் கண்டு தாய்மார்கள் அஃது எதனுல் நிகழ்ந்திருக்கக்கூடும் என்று குறி பார்த்து ஆராய முற்படுவர். அத்தகைய சந்தர்ப்பங்களில் தோழி தலைவியின் களவொழுக்கத்தை, அவளுக்கு ஒரு காதலன் இருக்கின்ருன் என்பதைக் குறிப்பாகப் புலப்படுத்துவாள். சில சமயம் தலைவியே தன்னுடைய கரந்த ஒழுக்கத்தைத் தோழிக்குக் குறிப்பாகப் புலப்படுத்துவதுண்டு. தலைவி தோழிக்குக் குறிப்பாகப் புலப்படுத்துவதை இறையனர் களவியலுரையாசிரியர் இவ்வாறு குறிக்கின்ருர்: "அஃதாமாறு, இயற்கைப்புணர்ச்சி புணர்ந்தானும், பாங்கற் கூட்டம் கூடியானும் தெருண்டு வரைந்தெய்தலுற்றுத்

தமரை விடும்; விட்டவிடத்து அவர் மறுப்பர், அஃது இலக்கணமாகலான். அங்ஙனம் மறுத்தவிடத்துத் தலைமகள் வேறுபடும். 'எம்பெருமான் மறுக்கப்பட்டமையான் மற்றொரு வாறுங் கொல்லோ!' எனக் கலங்கி வேறுபடும். வேறுபாடு எய்தின பொழுதே தோழிக்குப் புலனும்; புலனாயினவிடத்து, 'எம்பெருமாட்டி, நினக்கு இவ்வேறுபாடு எற்றினானாயிற்று?' என்னும். என்றவிடத்து, இஃது எனக்குப் பட்டது, இன்ன விடத்து ஒரு ஞான்று நீயும் ஆயமும் தழையும் கண்ணியும் கோடற்கு, என்னிற் சிறிது நீங்கினாயாக, ஈங்கு நின்றேன்; ஒரு மணிச்சுனை கண்டேன்; அம்மணிச்சுனை தான் ஆம்பலே குவளையே நெய்தலே தாமரையே என்றிப்பூக்களால் மயங்கி மேதக்கது கண்டு, வேட்கையான் ஆடுவான் இழிந்தேன்; இழுக்கிக் குட்டம் புக்கேன்; புக்குத் 'தோழியோ!' என, நீ கேளாயாயினாய்; ஆக, ஒரு தோன்றல் வந்து தோன்றி எனது துயர் நீக்குதற்காகத் தன் கை நீட்டினான்; நீட்ட, யானும் மலக்கத்தான் நின் கையெனப் பற்றினேன்; பற்ற, வாங்கிக் கரைமேல் நிறீஇ நீங்கினான்; நீ அன்று கவலுதி எனச் சொல்லேன் ஆயினேன்; நீ அவ்வெல்லைக்கண்ணும் கைவிடாதாய் அஞ்ஞான்று கைவிடுவாயாயிற்று விதியாகாது எனிற் பிறிதொன்றாவது கொல்லோ எனக் கலங்கி வேறுபட்டேன்' என்று தோழிக்குத் தலைமகள் அறத்தொடு நிற்கும்"[1] தோழி இதனைச் செவிலிக்கும், செவிலி நற்றாய்க்கும், நற்றாய் தந்தை தனையற்கும் இச்செய்தியைக் குறிப்பாகப் புலப்படுத்துவர். இவ்வாறு செய்வதை இலக்கண ஆசிரியர்கள் **அறத்தொடு நிற்றல்** என்று கூறுவர். இதனை முன்னரும் விளக்கினோம்.

> தலைவி பாங்கிக் கறத்தொடு நிற்கும்,
> பாங்கி செவிலிக் கறத்தொடு நிற்றல்
> செவிலி நற்றாய்க் கறத்தொடு நிற்றல்
> நற்றாய் தந்தை தனையர்க் கறத்தொடு
> நிற்றல் என்ப நெறியுணர்ந் தோரே.[2]

என்பது விதி. அறத்தொடு நிற்றலாவது, தலைவி இன்ன

1. இறை. களவியல் - நூற்பா 29-இன் உரை.
2. நம்பி அகப்பொருள், நூற்பா 48.

தலைவனுடன் நட்புப் பூண்டு சென்றாள் என்ற உண்மையைக் கூறி, அத்தலைவியின் கற்புக்குச் சார்பாக நிற்றல் ஆகும். இதனை ஒரு சிறிது விளக்குவோம்.

**தலைவி வெளிப்படுத்தும் திறம் :** தலைவி ஒருத்தி தலைவனுடன் ஒருவருக்குந் தெரியாமல் களவு மணம் செய்துகொள்ள எண்ணுகின்றாள். தன் தாய்க்கு இச்செய்தி எட்ட வேண்டுமே; என்ன செய்வது? தோழிக்கு முதலில் இச்செய்தியைப் புலப்படுத்த எண்ணுகின்றாள்; அதைக் குறிப்பாகப் புலப்படுத்துகின்றாள் "அதோ, பார். மழை தவழும் மலை அண்ணாந்து நிற்கின்றது. அந்த மலையில் ஓங்கி வளர்ந்த மூங்கில்கள் கோடைக்காற்றால் ஆடி அசைந்து இசையை எழுப்புகின்றன. பளிங்கு போல் தெளிந்த அருவிநீர் இழும் என ஒலித்துப் பாய்ந்து கிழ்நோக்கி வருகின்றது. அங்குக் கலைமான் கூட்டங்கள் கடியகுரல் எழுப்பிக் கூளித்து விளையாடுகின்றன. சாரல்களில் மலர்ந்துள்ள பூக்களில் வண்டுகள் இன்னிசையை எழுப்புகின்றன. மரத்திலுள்ள மந்திகள் மருண்டு மருண்டு பார்க்கின்றன. இந்தச் சூழ்நிலையில் மயில் ஒன்று தோகையை விரித்து ஆடுகின்றது. அந்த மலைநாட்டிலிருந்து நேற்று ஒருவன் கட்டமைந்த அழகிய வில்லுடனும் கூரிய அம்புடனும் இங்கு வந்தான். 'இப்பக்கமாக அம்பு எய்யப் பெற்ற யானையொன்று வந்ததோ?' என்று என்னை வினவினான். தினைப்புனத்திலுள்ள நானும் என்னைச் சார்ந்த பெண்களும் அவனைப் பார்க்கத்தான் செய்தோம். அங்ஙனமிருக்க, இரவில் நான் மட்டிலும் படுக்கையில் நீர் சொரியும் கண்களுடனும் மெலிந்த தோள்களுடனும் இருப்பதற்குக் காரணம் என்னவோ?" என்று கூறும் வாயிலாக இச்செய்தியைப் புலப்படுத்துகின்றாள். இதனைக் **கபிலர்** என்ற புலவர் அமைத்த சொல்லோவியம் இது:

ஆடமை குயின்ற அவிர்துளை மருங்கில்
கோடை யவ்வளி குழலிசை யாகப்
பாடின் அருவிப் பனிநீர் இன்னிசைத்
தோடமை முழவின் துதைகுர லாகக்
கணக்கலை இகுக்கும் கடுங்குரல் தூம்பொடு
மலைப்பூஞ் சாரல் வண்டியா ழாக

இன்பல் இமிழிசை கேட்டுக் கலிசிறந்து
மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
கழைவளர் அடுக்கத் தியலியா டும்மயில்
நனவுப்புகு விறலியில் தோன்றும் நாடன்
உருவ வல்வில் பற்றி அம்புதெரிந்து
செருச்செய் யானை சென்னெறி வினாஅய்
புலர்குரல் ஏனற் புழையுடை ஒருசிறை
மலர்தார் மார்பன் நின்றோற் கண்டோர்
பலர்தில் வாழி தோழி அவருள்
ஆரிருட் கங்குல் அணையொடு பொருந்தி
ஓரியா னாகுவ தெவன்கொல்
நீர்வார் கண்ணொடு நெகிழ்தோ ளேனே.[3]

[அமை - மூங்கில்; வளி - காற்று; துதை - நெருங்கிய; கண - கூட்டமான; இமிழ் - ஒலிக்கும்; கலி - ஆரவாரம்; கழை - மூங்கில்; இயலி - உலவி; நனவு - களம்; விறலியில் - விறலி போல; உருவ - அழகிய; தெரிந்து - ஆய்ந்து; ஏனல் - தினை; கங்குல் - இரவு ]

இதைக் '**களிறுதரு புணர்ச்சி**' என்று இலக்கண ஆசிரியர்கள் குறிப்பர். இவ்வாறு **பூத்தரு புணர்ச்சியாக**வும், **புனல்தரு புணர்ச்சியாக**வும் தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்பாள்.

**தோழி புலப்படுத்தும் முறை :** களவு ஒழுக்கத்திலுள்ள ஒருத்தியின் உடல் வேறுபாட்டைச் செவிலித்தாய் முதலியோர் காண்கின்றனர். அதன் காரணத்தை நெற்குறி பார்ப்பவளைக்கொண்டு ஆராயத் தொடங்குகின்றனர். குறத்தி பாட்டுப் பாடிக்கொண்டு குறி பார்க்கின்றாள். அப்போது தோழி அருகிலிருந்த குறத்தியை நோக்கி,

அகவன் மகளே! அகவன் மகளே !
மனவுக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்
அகவன் மகளே! பாடுக பாட்டே ;
இன்னும் பாடுக பாட்டே, அவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே.[4]

[மனவுக்கோப்பன்ன — சங்குமணியினாலாகிய கோவையைப் போன்ற வெண்மையாகிய.]

---

3. அகம் - 82. 4. குறுந்தொகை - 23.

என்று கூறுகின்றாள். தெய்வங்களை அழைத்துப் பாடிக் குறி சொல்லும் ஒரு வகைப் பெண்களை 'அகவன்மகளிர்' என்று அக்காலத்தார் வழங்கினர். தான் கூறப்போகும் செய்தியை நன்கு கவனிக்க வேண்டும் என்பதற்காகத் தோழி அகவன் மகளை மூன்று முறை விளிக்கின்றாள். பாடுதற்குரிய சிறப்புடைய மலை என்று குறிப்பிடுவதற்காகவே தோழி மீட்டும் பாடும்படி வேண்டுகின்றாள். **'அவர் நன்னெடுங்குன்றம் பாடிய பாட்டு'** என்று கூறினால், **'அவர் யார்?'** என்ற ஆராய்ச்சி தாயரிடையே பிறந்து உண்மையறிவதற்கு ஏதுவாகும். எனவே, இதனால் தோழி தாயரிடம் அறத்தொடு நிற்கின்றாள். கபிலர் பாடியருளிய "குறிஞ்சிப் பாட்டில்" (பத்துப் பாட்டில் ஒன்று) தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்கும் முறைகள் மிக அழகாகக் கூறப்பெற்றுள்ளன. அதனைப் படித்து மகிழ்க.

**பிறர் புலப்படுத்தும் முறை :** தோழி மூலம் தலைவியின் களவொழுக்கத்தை அறியும் செவிலி, நற்றாய்க்கு அறத்தொடு நிற்பாள்; நற்றாய் தந்தை தனையர்க்கு அறத்தொடு நிற்பாள். இவ்வாறு தலைவி, தோழி, செவிலி, நற்றாய் அறத்தொடு நிற்கும் செய்தியைக் **'காமர் கடும்புனல்'** என்று தொடங்கும் குறிஞ்சிக்கலிப் பாட்டு மிக நயமாகச் சித்திரிக்கின்றது. 'கற்றறிந்தார் ஏத்தும்' அக்கலிப்பாட்டைப் பன்முறைப் படித்து இன்புறுக. தலைவியின் களவு ஒழுக்கத்தைக் கேட்டவுடன் தந்தைக்கும் தனையர்க்கும் சினம் எழும்; அவ்வொழுக்கத்திற்குக் காரணமாக இருந்த தலைவன்மீது சினம் பொங்கி எழும்; அவனுடன் அவர்கள் சண்டை செய்ய எண்ணுவர். பிறகு, ஆராய்ந்து ,இருவர்மீதும் குற்றம் இல்லை என்று அமைவர். இதனை,

அவருந்
தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்து
ஒருபகல் எல்லாம் உருத்தெழுந்து ஆறி
இருவர்கண் குற்றமும் இல்லையால் என்று
தெருமந்து சாய்த்தார் தலை.

[கணை - அம்பு : சிலை - வில் ; கண்சேந்து - கண் சிவந்து; உருத்தெழுந்து-சினந்தெழுந்து; ஆறி-சினந்தணிந்து ; தெருமந்து - மனஞ்சுழன்று]

என்று மேற்குறித்த குறிஞ்சிக்கலியின் பகுதியால் அறியலாம்.

**தலைவியின் கரந்த ஒழுக்கம் :** இந்த முறையில்தான் தலைவியின் களவு ஒழுக்கம் வெளிப்படும் என்று எண்ண வேண்டியதில்லை; அங்ஙனந்தான் வெளிப்பட வேண்டும் என்ற நியதியும் இல்லை. இம்முறையெல்லாம் நாடக வழக்காகப் புலவர்கள் படைத்து மொழிந்தவையே. களவொழுக்கத்தில் தலைவன் தன் கரந்துறையொழுக்கம் அலராகி, அதனால் தலைவிக்குக் காவற் கடுமைகள் உண்டாகிவிடும் என்று கருதி, சில காலம் அவளை நீங்கியிருப்பான். இவ்வாறு தலைவன் நீங்கியிருத்தலை அகப்பொருள் நூலார் **'ஒருவழித் தணத்தல்'** என்றும், தலைவியின் காவற் கடுமைகளை **'இற்செறிப்பு'** என்றும் கூறுவர். தலைவன் ஒரு வழித்தணந்த போது அவன் பிரிவாற்றாமையால் தலைவி, தன் உணர்ச்சி இழந்து, துன்பத்தின் கண்ணளாய் நாண் கெட்டு, நிறையழிந்து மயங்கியிருப்பாள்; கன்னிப்பெண்களின் பிறை தொழுதலாகிய பழக்கமும் அவளிடம் காணப்பெறாது. பாலும் உண்ணாத நிலையேற்பட்டு உண்ணும் உணவும் குறையும்; காதலனுடைய ஆற்றாமையுணர்ச்சி,

> 'அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
> கடுத்தது காட்டும் முகம்.[5]

என்று வள்ளுவர் கூறியவாறு புறத்தார்க்குத் தெளிவாகப் புலனாய்விடும்.

**தோழியின் சிந்தனை :** இந்நிலையில் தோழி இவ்வாறு எண்ணுவாள்: "எனக்குத் தலைவியின் செய்கையில் வேறுபாடுகள் புலப்பட்டன போலவே தாய்மார்க்கும் புலப்படும். அவர்கள் வருந்தி உண்மையறியாமையால் அந்நோட்டந் தெரியும் பிறரை வினவுவர். அதற்கு முன்னதாக அவளிடம் அணுக்கமாய் நிற்கும் என்னை வினவக்கூடும். அங்ஙனம் வினவுங்கால் யான் தாய்க்கு மறுமொழி பகரும் கடமையில் உள்ளேன். நான் என்ன எவ்வாறு சொல்லுவேன்?'' தோழி

5. குறள் - 706.

இவ்வாறு ஆராய்ந்துகொண்டிருக்கும் பொழுது செவிலியும் தலைவியின் உடல், செயல் வேறுபாடுகளைக் கண்டு அருகில் நிற்கும் தோழியை நோக்கி, 'இவளுக்கு நேர்ந்த வேறுபாட்டின் காரணம் யாதோ?' என்று வினவுவாள்; அல்லது வெறியாடும் வேலனை வினவுவாள். இப்போது தோழி வெளிப்படையாக உரைக்காது மேற்கூறியவாறு கட்டுவிச்சிக்கு உரைப்பது போல உரைப்பாள். இதைத்தான் **'தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல்'** என்று கூறுவர் இலக்கண ஆசிரியர். இவ்வாறே பிறர் அறத்தொடு நிற்றலுக்கும் உரைக்கப்படும். அகப்பொருள் பாடல்களைப் பயிலும் போது இந்நிகழ்ச்சிகளை விரிவாகக் காணலாம்.

**அறத்தொடு நிற்றல் - விளக்கம் :** இவ்வாறு முறையுடையதாகப் பேசும் பேச்சை 'அறத்தொடு நிற்றல்' என்று கூறக் காரணம் என்ன? தலைவி அறத்தொடு பொருந்தவே நடந்திருக்கின்றாள் என்பதை ஒருவருக்கொருவர் காட்டி நிற்றல் தான் அறத்தொடு நிற்றல் என்பது. அறம் என்பதை இங்கு 'முறை, தக்கது' என்று பொருள் படுத்த வேண்டும். இறையனார் களவியலுரையாசிரியரும், "அறம் என்பது தக்கது, தக்கதனைச் சொல்லி நிற்றல் தோழிக்கும் உரித்தென்றவாறு; அல்லதூஉம், பெண்டிர்க்கு அறம் என்பது கற்பு, கற்பின் தலை நிற்றல் என்பதூஉமாம்"[6] என்று குறித்திருப்பது ஈண்டு எண்ணிப் பார்த்ததற்குரியது. களவொழுக்க நிகழ்ச்சியைத் தொல்காப்பியரும் 'குற்றந் தீர்ந்த அறச்செய்கையாகும்' என்று கருதுகின்றார். தோழியின் கூற்றுக்களையெல்லாம் தொகுத்துக் கூறும் ஆசிரியர்,

> முன்னிலை அறன்எனப் படுதலென்று இருவகைப்
> புரைநீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்.[7]
> [கிளவி - சொல் ; புரைதீர் - குற்றம் தீர்ந்த.]

என்ற பகுதியினால் இதனைக் குறிப்பிடுகின்றார். இப்பகுதியை நச்சினார்க்கினியர் 'அறன் எனப்படுதல் இருவகைப் புரைதீர் முன்னிலையென்று கிளவி தாயிடைப் புகுப்பினும்'

6. நூற்பா - 29 இன் உரை.
7. களவியல் - நூற்பா 23 (நச்.) (வரி 41-2)

என்று உரைநடைப்படுத்தி "அறன் என்று சொல்லப்படுந் தன்மை இருவர் கண்ணும் குற்றந்தீர்ந்த எதிர்ப்பாடு என்று செவிலியிடத்தே கூறி அக்கிளவியை நற்றாயிடத்தும் செலுத்தினும்" என்று உரை கூறுவர்.

**களவியலுரையாசிரியரின் கருத்து :** தொல்காப்பியர் அறத்தொடு நிற்றலைப் 'புரைதீர்' என்று குறிப்பிட்டதைப் போலவே இறையனார் களவியல் ஆசிரியர் "மாறுகோள் இல்லாமொழி' என்று குறிப்பிடுகின்றார்.

> தோழிக் குரியவை கோடாய் தேஎத்து
> மாறுகோள் இல்லா மொழியுமார் உளவே.[8]
>
> [கோடாய் – செவிலித்தாய்; கொள்தாய் எனப் பிரித்து, தாயாகக் கொள்ளப்படுவோள் எனப் பொருள் கொள்க. தேஎத்து - மாட்டு.]

என்பது அவர் கூறும் நூற்பா. இந்நூற்பாவில் 'மாறுகோள் இல்லா மொழி' என்பதற்குக் களவியலுரையாசிரியர், "எற்றினொடு மாறு கொள்ளாமையோ எனின் தாயறிவினோடு மாறு கொள்ளாமையும், தலைமகள் பெருமையொடு மாறு கொள்ளாமையும், தலைமகளது கற்பினொடு மாறுகொள்ளாமையும், தோழி தனது காவலொடு மாறு கொள்ளாமையும், நாணினொடு மாறு கொள்ளாமையும், உலகினொடு மாறுகொள்ளாமையும் எனக் கொள்க"[9] என்று நயம்படக் கூறியிருப்பது படித்துப் படித்து இன்புறற்பாலது. தலைவிக்கு வாய்த்த களவொழுக்க நிகழ்ச்சியினால் தன்மீது குற்றம் ஏதுமில்லை என்று இவ்வாறெல்லாம் தோழி கூறுவாள். மேற்கூறிய அனைத்திற்கும் குற்றமில்லாத வகையாகத் தோழி ஆராய்ந்து கூறுவாள் என்பதை உரையாசிரியர் பெற வைத்தமை எண்ணி மகிழ்தற்குரியது.

**அறத்தொடு நிற்றல் நடைபெறும் முறை :** இவ்வறத்தொடு நிற்றல் ஏழு பகுதிகளாக நடைபெறும் என்று தொல்காப்பியர் கூறுவர்.

---

8. இறை – களவியல் - நூற்பா 14.
9. ஷ நூற்பா 14 - இன் உரை.

எளித்தல் ஏத்தல் வேட்கை யுரைத்தல்
கூறுதல் உசாவுதல் ஏதீடு தலைப்பாடு
உண்மை செப்புங் கிளவியொடு தொகைஇ
அவ்வெழு வகைய என்மனார் புலவர்.[10]

என்பது தொல்காப்பிய நூற்பா. **எளித்தல்** என்பது, தலைவன் நம் மாட்டு எளியன் என்று கூறுதல். அதனது பயன் மகளுடைத் தாயார் தம் வழி ஒழுகுவார்க்கு மகட்கொடை வேண்டுவராதலான், எளியனென்பது கூறி அறத்தொடு நிற்கப்பெறும். **ஏத்தல்** என்பது, தலைவனை உயர்த்துக் கூறுதல். அது, மகளுடைத் தாயர் 'தலைவன் உயர்ந்தான்' என்றவழி மனமகிழ்வராகலின், அவ்வாறு கூறப்பட்டது; உயர்த்துக் கூறி அறத்தொடு நிற்கப்பெறும். **வேட்கையுரைத்**தலாவது தலைவன்மாட்டுத் தலைவி வேட்கையும், தலைவிமாட்டுத் தலைவன் வேட்கையும் கூறுதல்; வேட்கை கூறி அறத்தொடு நிற்கும். **கூறுதலாவது**, தலைவியைத் தலைவற்குக் கொடுக்க வேண்டும் என்பது படக் கூறுதல். **உசாவுதல்** என்பது, வெறியாட்டும் கழங்கும் இட்டு உரைத்துழி வேலனோடாதல் பிறரோடாதல் தோழி உசாவுதல். **ஏதீடு தலைப்பாடு** என்பது, யாதானுமோர் ஏதுவை இடையிட்டுக்கொண்டு தலைப்பட்டமை கூறுதல். **உண்மை செப்புங் கிளவியாவது**, படைத்து மொழியாது பட்டாங்கு கூறுதல்.

**இது நடைபெறும் சந்தர்ப்பங்கள் :** இவ்வறத்தொடு நிற்றல் எந்தெந்த சந்தர்ப்பங்களில் நடைபெறும் என்பதை இறைவனார் களவியல் ஆசிரியர் இவ்வாறு தொகுத்துக் கூறுவர் :

காப்புக் கைமிக்குக் காமம் பெருகினும்
நொதுமலர் வரையும் பருவம் ஆயினும்
வரைவெதிர் கொள்ளாது தமர்அவண் மறுப்பினும்
அவன்வயின் வறுஉம் அருங்கம் காலம் ஆயினும்
அந்நாள் இடத்தும் மெய்ந்நாண் ஒரீஇ
அறத்தொடு நிற்றல் தோழிக்கும் உரித்தே.[11]

[காப்பு கைமிக்கு - இற்செறிப்பு அதிகமாகி; நொதுமலர் - அயலார்; எதிர் கொள்ளாது - ஏற்றுக்கொள்ளாது; தமர் - உறவினர்; அவண் - அங்கு; அவன் வறு - தலைவனுக்கு நேரிடும் துன்பம்; மெய் நாண் ஒரீஇ - உடலின் கண் நின்ற நாண் நீங்கி.]

10. பொருளியல் – நூற்பா 12.
11. இறை. களவியல் - நூற்பா 29.

என்பது அவர் கூறும் நூற்பா. தலைவியின் களவொழுக்கத்தைக் கண்ட பெற்றோர் அவளை இற்செறிக்கும் போதும், பிறர் தலைவியை மணம் பேச வருங்காலத்திலும், தலைமகனுடைய பெற்றோர் பரிசத்தோடு தலைவியை வரைவதற்கு வரும்போது தலைவியின் பெற்றோர் பரிசம் குறைவு என்று கூறியோ பிறவாறோ மணத்தை மறுத்தபோதும், தலைவன் இரவுக் காலத்தில் தலைவியைத் தேடி வருங்கால் அவனுக்கு யானை, பாம்பு, புலி முதலியவற்றால் துன்பம் நேரிடும் என்று எண்ணித் தலைவி வருந்தும் போதும் தோழி அறத்தோடு நிற்பாள். தோழி நிற்கவே, ஏனையோரும் நிற்பர்.

இன்றியாண் டையவனே தோழி குன்றத்துப்
பழங்குழி யகழ்ந்த கானவன் கிழங்கினொடு
கண்ணகல் தூமணி பெறூஉ நாடன்
அறிவுகாழ்க் கொள்ளும் அளவைச் செறிதொடி
எம்மில் வருகுவை நீயெனப்
பொம்மல ோதி நீவி யோனே.[12]

[அறிவு காழ்க்கொள்ளும் அளவை–அறிவு முதிர்கின்ற பருவத்தில்; எம் இல்–எம் வீடு; பொம்மல் ஓதி-நெருங்கிய கூந்தல்]

என்ற குறுந்தொகைப்பாடலில் தலைவியை அயலார் மணம் பேச வந்த இடத்துத் தோழி, தாய் முதலியோர்க்கு உண்மையை வெளிப்படுத்தியது காண்க. பிறவற்றிற்கும் இலக்கியங்களை இவ்வாறே கண்டு மகிழ்க.

**அறத்தொடு நிற்காத காலம்:** இந்தச் சந்தர்ப்பங்களைத் தவிர வேறு சந்தர்ப்பங்களில் தோழி அறத்தொடு நிற்க மாட்டாள். இதனைத் தொல்காப்பியர்,

அறத்தொடு நிற்கும் காலத் தன்றி
அறத்தியல் மரபிலள் தோழி என்ப.[13]

என்று கூறுவர். இவ்வாறு இவர்கள் அறத்தொடு நிற்கும் போது யார் யார் எப்படிப் பேசுவர் என்பதற்கெல்லாம் ஒரு வித ஒழுங்கு முறையைக் கூறுகின்றார் தொல்காப்பியர். ஒருவரும் பச்சையாக, நடந்தது நடந்தபடி, பேசார். பெரும்

12. குறுந்-379. 13. பொருளியல்-நூற்பா 11. (இளம்.)

பாலும் உவமானம் கூறும் வாயிலாகத்தான் கூறுவர் ; அதுவும் உள்ளுறை உவமமாகத்தான் பேசப்படும்.

**ஊழ் வலியாகக் கொள்ளல் :** இந்த அறத்தொடு நிற்றலை அகப்பொருள் நூல்கள் பற்பல வகையாகக் கூறும். அவற்றை யெல்லாம் ஈண்டு தொகுத்துக் கூறுதல் இயலாத காரியம். அவ்வாறு அறத்தோடு கூறும் உரைகளில் எல்லாம் இக்கள வொழுக்க நிகழ்ச்சியினுல் எவரும் எவரிடத்தும் குற்றம் காணுவகையாகத்தான் கூறப்பெறும். அன்றியும், எல்லோரும் இக்களவு நிகழ்ச்சி ஒரு நல்வினைப் பயனுல்தான் நடந்தது என்று மகிழ்ந்து ஏற்றுக்கொள்ளும் வகையாகப் படைத்து மொழியப்படும் திறன்கள் யாவும் அகப்பொருள் நூல்களைப் படித்துத் துய்ப்பார்க்கு எல்லையற்ற மகிழ்ச்சியைக் கொடுக்கும்.

**சில வழக்காறுகள் :** அறத்தொடு நிற்கும் முறையில் தோழி கூற்றுகவும் செவிலி கூற்றுகவும் வரும் கிளவிகள் பலவாக உள்ளன. அவற்றுள் ஒன்று வேலனைக் கொண்டு வெறியாடச் செய்து கழங்கு பார்த்தல் ; மற்றென்று, கட்டு விச்சியை அழைத்துக் குறி கேட்டல். இத்தகைய வழக்க முண்மையைத் தொல்காப்பியர்.

'களம்பெறக் காட்டினும்'[14]

என்றும்,

'கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும்
ஒட்டிய திறத்தால் செய்திக் கண்ணும்'[15]

என்றும் கூறுவர். களமாவது, கட்டும் கழங்கும் இட்டுரைக்கும் இடமும் வெறியாட்டிடமுமாகும் என்று பொருள் கூறுவர் நச்சினர்க்கினியர். மேலும், அவர் 'கட்டினும் கழங்கினும்' என்பதற்குக் 'கட்டுவிச்சியும் வேலனும் தாம் பார்த்த கட்டினுனும் கழங்கினுனும்' என்று கூறுவர். இதனுல் கட்டுவிச்சிக்குக் கட்டெடுத்தலும் வேலற்குக் கழங்கு பார்த்தலும் முறையே உரியவை என்பது பெறப்படும். **கட்டெடுத்தலாவது,** கட்டு விச்சி நெல்குறியறிந்து சொல்லுதல். அவள் குறிபார்த்தற்கு

14. களவியல்-நூற். 24 (வரி 39) (இளம்.)
15. ஷெ நூற்-25 வரி (3-4) (இளம்.)

வைக்கும் நெல்லில் பிறர் எண்ணிய எண்ணம் ஒரு வடிவு கொண்டு தோன்றி அவட்கு உரைக்குமாம். இச்செய்தி **நற்றிணை**[16] **அகநானூறு**[17] **புறநானூறு**[18] **குறுந்தொகை**[19] **'திருக்கோவையார்'**[20] என்ற நூல்களினாலும் அறியலாம். இன்னும், திருமால்பால் காதல் கொண்டு மயங்கிய பெண்ணொருத்தியின்பொருட்டு அவள் சுற்றத்தார் கட்டுவிச்சியிடம் குறி கேட்டதாகத் திருமங்கையாழ்வார் அருளிச்செய்த **சிறிய திருமடலாலும்** இச்செய்தியை அறியலாம்.

''வாராது மாமை அதுகண்டு மற்றுங்கே
ஆரானும் மூதறியும் அம்மனைமார் சொல்லுவார்
பாரோர் சொலப்படும் கட்டுப் படுத்திரேல்
ஆரானும் மெய்ப்படுவ னென்றார் அதுகேட்டுக்
காரார் குழற்கொண்டைக் கட்டுவிச்சி கட்டேறிச்
சீரார் சுளகில் சிலநெல் பிடித்தெறியா
வேரா விதிர்விதிரா மெய்சிலிராக் கைம்மோவாப்
பேரா யிரமுடையான் என்றாள் பெயர்த்தேயும்
காரார் திருமேனி காட்டினாள்.''[21]

என்ற பகுதியில் இதனைக் காண்க. பண்டைக்காலத்தில் மலைநாட்டுக் குறக்குடி மகளிரே கட்டுவிச்சியாகத் தோன்றிக் குறி சொன்னதாக இலக்கியங்களால் அறிகின்றோம். மலைக் குறத்தியர் நெல்லால் குறி சொல்லும் முறையைக் குமர குருபர அடிகளும் குறிப்பிடுவர்.

முந்நாழி முச்சிறங்கை நெல்லளந்து கொடுவா
முறத்திலொரு படிநெலையென் முன்னேவை அம்மே
இந்நாழி நெல்லையுமுக் கூறுசெய்தோர் கூற்றை
இரட்டைபட வெண்ணினபோ தொற்றைபட்ட தம்மே
உன்றுமுன் வேள்விமலைப் பிள்ளையார்வந் துநிந்தார்
உனக்கினியென் னினைகருமம் இமைப்பினிற்கை கூடும்
என்றுனை எங்கள்குலக் கன்னிமார் அறிய
எக்குறிதப் பினும்தப்பா திக்குறிகாண் அம்மே.[22]

16. நற்றிணை-288; 357; 17. அகம்-16; 18. புறம்-157;
19. குறுந்-23, 26. 20. திருக்கோவை-செய். 283-85
21. சிறிய திருமடல்-கண்ணி 18-22.
22. குமர குருபர அடிகள்-மீனாட்சியம்மை குறம்-26.

என்ற பாட்டினுல் இதனை அறியலாம். குறமகள் - குறியெயினி என்ற பெண்பாற்புலவர் ஒருவர்க்குக் குறி கூறுதல் பற்றிப் பெயர் வழங்குதலையும் அறிகின்றோம்.[23] குறி கூறும் பெண்டிர் பெரும்பான்மை மலைக்குறத்தியராகவே உள்ளனர் என்பதைக் குறம் என்ற பிரபந்தங்களாலும் இன்றும் உள்ள வழக்காலும் அறியலாம். முற்காலத்துக் குறக்குடிச் சிறுவரும் குறியிறுக்க வல்லவராயிருந்தனர் என்பது,

'குறமகள் ஈன்ற குறியிறைப் புதல்வரொடு'[24]

என்ற ஐங்குறுநூற்றடியால் பெறப்படும்.

வேலன் என்பான் யார்? வேலன் என்பான் 'முருக பூசை பண்ணுவான்.' இவனைக் குறுந்தொகை 'முருகயர்ந்த முதுவாய் வேலன்' என்று குறிப்பிடுகின்றது. முருகனுக்குரிய வேலைக் கையில் தாங்குதல் பற்றி 'வேலன்' எனப்பட்டான். அவன் கழங்கு பார்த்து குறிசொல்வது முற்காலத்து வழக்கமாக இருந்தது. இதனை,

'பெய்ம்மணல் முற்றங் கவின்பெற வியற்றி
மலைவான் கோட்ட சினைஇய வேலன்
கழங்கினுல் அறிகுவ தென்றுன்'

'அறுவை தோயும் ஒருபெருங் குடுமிச்
சிறுபை நாற்றிய பல்தலைக் கருங்கோல்
ஆகுவ தறியும் முதுவாய் வேல!
கூறுக மாதோ கழங்கின் நிட்பம்'

என்ற பாடற்பகுதிகளால் அறியலாம். இன்று தமிழ் நாட்டில் வதியும் 'தொட்டியர்' என்ற வடுகரில் பன்னிரண்டு கழற்சிக் காய்களை ஒரு பேழையுளிட்டு ஒருவனைக் கொண்டு அவற்றை எடுக்கச் செய்யும்போது வெள்ளி கட்டிய கழற்சி தோன்றிய நிலையில், அதனைக் கொண்டு இராசி முதலியனவறிந்து குறி சொல்வது இன்றும் வழக்காக உள்ளது. வேலன் கழங்கு பார்த்து வந்த முறை இது போன்றதாதல் வேண்டும். அங்ஙனம் கழங்கு பார்க்குமிடத்து அணங்குற்ற பெண்ணின் நோய் தணித்தற்கு அவன் 'படிமம்' ஒன்று பண்ணிக்

---

23. நற்றிணை-357; புறம்-157. 24. ஐங்குறு-394.

கொடுத்தலும் உண்டென்று தெரிகின்றது.[25] இனி, வெறியாட்டென்பது முருகக்கடவுள்பொருட்டுப் பலியிட்டு அக்கடவுள் ஆவேசிக்க ஆடுங் கூத்தாகும். இது பெரும்பாலும் மேற்கூறிய வேலனுல் நிகழ்த்தப்பெறும். அணங்குற்ற பெண்டிர்பொருட்டு வேலன் வெறியாடிக் கூறும் செய்தி பழைய நூல்களில் மிகுதியாகப் பயின்று வந்துள்ளன. தொல்காப்பியர் இதனைக் **'காந்தள்'** என்று குறிப்பர். இது,

> **'வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
> வெறியாட் டயர்ந்த காந்தளும்.'**[26]

என்ற நூற்பாவினுல் அறியலாகும். இக்கூறியவற்றுல் வேலனது கழங்கு பார்த்தலாலும் வெறியாட்டாலும் கட்டுவிச்சியின் கட்டெடுத்தலாலும் 'குறி கேட்டல்' தொல்காப்பியர் காலத்திற்கு முன்பிருந்த தமிழ் வழக்காறுகள் என்பது தெளிவாகும். இன்றும் கடன்மலே நாட்டில் வழக்கிலிருக்கும் **'வேலன் துள்ளல்'** என்ற ஒன்ற ஒரு வகை வெறியாட்டினைப் பழைய வெறியாட்டே என்று கருத இடமுண்டு. இங்ஙனம் பழைய இலக்கியங்களும் இன்று திரிபாக நடைபெற்று வரும் ஒரு சில வழக்கங்களும் பழைய வழக்காறுகளைத் தெரிவிக்கின்றன.

---

25. ஐங்குறு.—245.
26. புறத்திணை—நூற். 5 (இளம்.)

## 13. மேலும் சில அகத்திணை மரபுகள்

இதுகாறும் உள்ள கட்டுரைகளில் அகப்பொருள் இலக்கியப் பாடல்களைச் சுவைப்பதற்குரிய பல்வேறு அகப்பொருள் மரபுகளைக் கண்டோம். ஈண்டு மேலும் சிலவற்றைக் காண்போம்.

**அகவொழுக்கச் சிறப்பு :** அகவொழுக்கம், புறவொழுக்கம் என்ற இருவகையொழுக்கங்களில் அகவொழுக்கம் வாழ்க்கையை உண்டாக்குவது ; புறவொழுக்கம் இங்ஙனம் உண்டாக்கப்பெற்ற அகவொழுக்கத்திற்குத் துணையாக நிற்பது. உலகுயிர்த் தோற்றத்திற்கே அகவொழுக்கம் காரணமாக இருத்தலின் எல்லாப் பொருளினும் அவ்வகப் பொருளே சிறந்ததாக அமைகின்றது. ஆணும் பெண்ணும் ஒருவரையொருவர் நாடி நிற்பதற்குக் காரணமான இயல்பூக்கமாம்[1] காதல் அடிப்படையில் எழுவது அகப்பொருள். உலகுயிர்த் தோற்றமான உருவையுண்டாக்குவது கரு. இக்கரு உண்டாவதற்கு ஆணின் விரையிலுள்ள[2] விந்தணு[3] ஒன்று பெண்ணின் சினைப்பையில்[4] தோன்றும் முட்டையுடன்[5] சேர்தல் வேண்டும். இவ்வாறு அவை ஒன்று சேர்வதற்குத் துணையாக நிற்பது இருபாலாரிடையே எழும் காதல் என்ற இயல்பூக்கம் ஆகும். இந்த இயல்பூக்கத்தின் காரண

---

1. இயல்பூக்கம்—instinct.
2. விரை—teste.
3. விந்தணு—sperm.
4. சினைப்பை—ovary.
5. முட்டை—ovum.

மாக ஆணும் பெண்ணும் ஒருவரை யொருவர் அணுகிக் கட்டித் தழுவுகின்றனர். அணையும் பொழுது ஊற்றின்பம் பிறக்கு மாறு இயற்கை அமைந்துள்ளமையால், அதன் பயனாக இணை விழைச்சு ஏற்பட்டு ஆணின் விந்தணு பெண்ணின் முட்டை யுடன் சேர்கின்றது; கருவும் உண்டாகின்றது. இக்கரு முதிர்ந்து உருவும், உருவில் உயிரும் தோன்றுகின்றன. உயி ரினங்களில் ஆண், கருவையுண்டாக்குவதால் விந்தணுவையும் முட்டையையும் ஒன்று சேர்க்கும் புணர்ச்சியுடன் மட்டிலுமே உடையது. பெண்ணோ, அப்புணர்ச்சியுடன் கருவை உரு வாக்கி, உயிராக்கி, உலகில் நடமாடவிடுவதால், அக வொழுக்கத்திற்கும் உலக வாழ்க்கைக்கும் பெண்ணே ஆணை விடச் சிறப்புடையது. மக்களல்லாத உயிர்களில் பெண் ணினம் உயர்வுடையதாக இருப்பது ஈண்டு அறிதற்பாலது. மக்களுள்ளும் அகவொழுக்கத்தில் எல்லா நிலைகளிலும் தலைவி யின் நிலை உயர்ந்திருப்பது இக்கருத்துப்பற்றியே யாகும். அகவொழுக்கத்திற்குக் காரணமாகவுள்ள காதலின் அடிப் படையில் தோன்றும் இன்பத்தைத் தொல்காப்பியரும்,

> எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
> தானமர்ந்து வருஉம் மேவற் றாகும்.[6]
>
> [மேவற்றாகும்—பொருந்தி நிகழும்]

என்று எடுத்தோதியுள்ளார்.

அறிவியலறிஞர்கள் உலக இயற்கைப் பொருள்களைச் சேர்க்கை முறையால் இணைத்துப் புதுப்புதுப் பொருள்களை இயற்றி உலகை வாழ்விக்கின்றனர். அங்ஙனமே வாழ்வியல் அறிஞர்களாகிய அனுபவம் நிறைந்த மூத்தோர் பருவமறிந்து ஆண் பெண் இனத்தை ஒன்று சேர்த்து வாழ்வை மலரச் செய்கின்றனர். எனவே, கரு உருவாகும் நிலையை அடைந்த தும், ஆண் பெண் இனங்கள் தானாக எழும் காமம் என்னும் ஓர் இயல்பூக்கத்தால் உந்தப்பெற்றுக் கலவியை நாடி நிற்கும் புணர்ச்சி நிலையே உலகுயிர்த் தோற்றத்திற்கும் வாழ்க்கை நலத்திற்கும் இன்றியமையாததாய் அமைகின்றது. இந்த

6. பொருளியல் நூற்.—29 (இளம்.)

ஒழுக்கமே அகவொழுக்கம் என்பது. இந்த அகவொழுக்கத்தின் பெருமையை இருபாலாரும் அறிந்து, நன்கு உணர்ந்து அதன் தகுதியறிந்து நுகர்ந்து, இன்புற்று, இனிது வாழ வேண்டும் என்பதையே குறிக்கோளாகக் கொண்ட பழந்தமிழ் மக்கள் அகவொழுக்கத்தைப் பலவாறு விரித்தும், இலக்கண வரையறை செய்தும், இலக்கியத்திற் பொதிந்தும் பொன்னேபோற் போற்றி வந்தனர். இத்தகைய ஒழுக்கத்தைத்தான் தொல்காப்பியம் துறை முதலியன அமைத்து நன்கு விளக்குகின்றது.

**நிலங்களின் பெயர்க்காரணம் :** ஐவகையொழுக்கங்கட்கும் ஐந்து நிலங்கள் உரியவை என்றும், அவை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல். பாலை என்றும் முன்னர்க் கண்டோம்.[7] இங்ஙனம் இவற்றிற்குப் பெயர்கள் ஏற்பட்டதன் காரணத்தையும் நாம் ஆராய்ந்து கொள்ளுதல் சாலப் பயன் தரும். இப்பெயர்கள் மரம் அல்லது பூவிசேடங்கட்கு உரியவை என்பதும், முல்லை முதலியவற்றின் மிகுதி அல்லது சிறப்புப்பற்றியே அந்நிலங்கட்கு அப்பெயர்கள் வழங்கலாயின என்பதும் பண்டையோர் கொள்கை. இளம்பூரணரும் "மாயோன் மேய" என்ற நூற்பாவின் உரையில் குறிஞ்சி முதலிய பூக்களின் சிறப்புப்பற்றியே மலை முதலிய நிலங்கள் குறியிட்டாளப்பெற்றன என்று கூறுவர். அவர் கூறுவது : "முல்லை குறிஞ்சி என்பன இடுகுறியோ காரணக் குறியோ எனின், ஏகதேச காரணம் பற்றி முதலாசிரியர் இட்டதோர் குறி என்று கொள்ளப்படும். என்னை காரணம் எனின்,

'நெல்லொடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
அரும்பவிழ் அலரி தூஉ'[8]

என்றமையால், காடுறை உலகிற்கு முல்லைப்பூ சிறந்தது ஆகலானும்,

---

7. இந்நூல்—பக்கம் - (35-42)
8. முல்லைப்பாட்டு—வரி (8 - 10).

'கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனெடு நட்பே-'[9]

என்ற வழி மைவரை உலகிற்குக் குறிஞ்சிப்பூ சிறந்தது ஆகலானும்,

இருஅல் அருந்திய சிறுசிரல் மருதின்
தாழ்சினை உறங்குந் தண்துறை யூர'[10]

என்றவழித் தீம்புனல் உலகிற்கு மருது சிறந்தமையானும்,

'பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்
இனமீன் இருங்கழி ஓதம் மல்குதொறும்
கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்'[11]

என்றவழிப் பெருமணல் உலகிற்கு நெய்தல் சிறந்தன்மை யானும் இந்நிலங்களை இவ்வாறு குறியிட்டார் என்று கொள்ளப் படும்.

"பாலை என்பதற்கு நிலம் இன்றேனும், வேனிற்காலம் பற்றி வருதலின் அக்காலத்துத் தளிரும் சினையும் வாடுத லின்றி நிற்பது பாலை என்பதோர் மரம் உண்டாகலின், அச்சிறப்பு நோக்கிப் பாலை என்று குறியிட்டார்" என்பது.[12] மேலும்,

'கருங்காற் குறிஞ்சி சான்ற வெற்பு'[13]
'மருதஞ் சான்ற மருதத் தண்பணை'[14]
'முல்லை சான்ற முல்லையம் புறவு'[15]
'பாலை சான்ற சுரம்'[16]

என்று சான்றோர் செய்யுட்களிலும் பூ அல்லது அதன் முதற் பொருளின் சிறப்புப்பற்றி அந்நிலங்கள் கூறப்பெறுதலை அறிக.

இறையனர் களவியலுரையாசிரியரும் நச்சினர்க்கினி யரும் இந்நிலப்பெயர்கள் அவற்றின் ஒழுக்கமாக—மேலே கூறிய உரிப்பொருள்களடியாக—வழங்கலாயின என்று கூறுவர். அஃதாவது, முல்லைக்குரியதாகப் புலனெறி வழக்

9. குறுந்.—3.
10. அகம்—286.
11. குறுந்-9.
12. அகத்திணை-5. (இளம்) உரை
13. மதுரைக்-வரி 300.
14. சிறுபாணு-வரி 186
15. ஷை-வரி 169
16. ஷை-314.

காகச் செய்யப்பட்ட ஒழுக்கம் "இருத்தல்" என்பது; இவ்விருத்தற்கே முல்லை என்பது ஒரு பெயர் என்பதாகும். களவியலுரையாசிரியர், "ஒழுக்கமே திணை எனப்படும். குறிஞ்சியாகிய ஒழுக்கம் நிகழ்ந்த நிலமும் குறிஞ்சி எனப்பட்டது; என்னை? விளக்காகிய சுடர் இருந்த இடனும் விளக்கு எனப்பட்டது போல் என்பது" என்று கூறியுள்ளதைக் காண்க[17] ஏனைய நிலங்கட்கும் இவ்வாறே கூறிக்கொள்ளலாம். இவற்ருல் முல்லை, குறிஞ்சி என்று கூறப்பெற்ற ஒழுக்கங்களால் காடு, மலை முதலியவை அப்பெயர் பெற்றன என்பது அவ்வுரையாளரின் கருத்தாகத் தோன்றினும், அவ்வொழுக்கந்தான் அவ்வாறு பெயர் பெற்றதன் காரணம் என்னை ? என்ற வினு திரும்பவும் எழக்கூடியதாகின்றது. அதனுல் நிலங்கள் முற்குறித்தபடி பூக்களினடியாகப் பெயர் பெருது போயினும், அந்நிலத்தொழுக்கங்களேனும் அவையடியாக வழங்கலாயின என்று கூறுதல் வேண்டியதாகின்றது. ஆயின், நச்சினுர்க்கினியர், "இவ்வாறன்றி முல்லை முதலிய பூவாற் பெயர் பெற்றன இவ்வொழுக்கங்களெனின், அவ்வந்நிலங்கட்கு ஏனைய பூக்களும் உரியவாகலின் அவற்ருற் பெயர் கூறுதலும் உரிய எனக் கடாயினுர்க்கு விடையின்மை உணர்க" என இக்கொள்கையை மறுத்திட்டனர். ஆயினும், ஒவ்வோரொழுக்கத்தை உணர்த்தற்கு ஒவ்வொரு பூவை அடையாளமாகக் கொண்டொழுகுவது பண்டைத்தமிழரது வழக்கமேயாகும். இது புறத்திணையொழுக்கமாகிய நிரை கவர்தல், மீட்டல் முதலியவற்றிற்கு வெட்சி, கரந்தை முதலாகிய பூக்களை அறிகுறியாகக் கொண்டமையாலும் உறுதிப்படும். நச்சினுர்க்கினியரும், "இதற்கு (வெட்சிக்கு) அப்பூச்சூடுதலும் உரித்தென்று கொள்க" என்றும்[18] "தும்பை என்பது பூவினுற் பெற்ற பெயர்" என்றும்[19] கூறுதல் ஈண்டு அறியத் தக்கவை. எனவே, அகத்திணையொழுக்கங்கட்கும் அங்ஙனம் பூக்களை அடையாளமாகக் கொண்டு முன்னேர்

17. இறை. களவியல் - நூற்பா இன் உரை.
18. புறத்திணை-நூற் 1-இன் வுரை.
19. புறத்திணை-14—இன் உரை.

வழங்க, அவற்றினடியாக இருத்தல் முதலிய ஒழுக்கங்கள் முல்லை முதலாகப் பெயர் பெற்றன என்று கொள்ளுதல் அமைவுடையதேயாகும். 'லில்லி' என்ற வெள்ளை மலரைக் கற்புக்குக் குறியாக வழங்கி வருதலாலும், இயேசுப் பெருமானின் அன்னையின் கரத்திலுள்ள 'லில்லி' மலர் அவளது கற்பின் தூய்மையைக் குறிப்பதாலும், ஐரோப்பிய ரிடையேயும் பண்டும் இன்றும் பூவால் கருத்துக்களைக் குறிக்கும் வழக்கம் இருப்பதை அறியலாம். அன்புடையார் இருவர் பிரியுங்கால் அப்பிரிவைக் குறிக்க 'பர்கெட்-மீ-நாட்' (forget-me-not) என்ற பூவைக் கொடுத்தலும், துக்க மிகுதியை 'விப்பிங்-வில்லோ' (Weeping willow) என்ற பூவாற் குறித்தலும் இன்றும் ஐரோப்பியர் வழக்கங்களாக இருத்தல் ஈண்டு ஒப்பு நோக்கி அறியத் தக்கவை.

**நிலங்களும் அவற்றிற்குரிய ஒழுக்கங்களும் :** ஐந்திணை நெறிகளைப் பற்றி ஓரளவு முன்னர்க் கண்டோமன்றோ ? மலை நாட்டிற்குப் புணர்ச்சியும், பாலைக்குப் பிரிவும், காட்டிற்கு இருத்தலும், கடற்கரைக்கு இரங்கலும், நாட்டுக்கு ஊடலும் ஒழுக்கங்களாக அமைந்ததற்குக் காரணம் என்ன ? பண்டை யோர் நூல்களிலேனும் அவற்றிற்கு வகுக்கப்பெற்ற உரை களிலேனும் இதற்குரிய ஏற்புடைக் காரணம் காண்டல் அரிதாகும். கீழ்க்கண்டவாறு கூறுதல் பொருந்துவதாகுமா என்பது ஆராய்தற்பாலது.

முற்காலத்து மலைநாட்டு மகளிர், இக்காலத்து மலையாள நாட்டு மகளிர் போல வளமும் எழிலும் வாய்ந்து விளங்கினர். தமிழ்த்தலைவர்கள் அன்னாரைப் பெரிதும் காமுற்று வந்தனர். களவிற்குச் சிறந்த பானாட்கங்குலில் (இடையாமம்) மாவும் புள்ளும் பரந்து வழங்காது துணையுடன் மகிழ்ந்து வந்தன. மலையின் இயற்கை வளமும் காமத்தை வளர்க்கும் சூழ்நிலை யாக அமைந்தது. குறிஞ்சி நிலத்திற்குச் சிறந்த கூதிராகிய ஐப்பசி கார்த்திகைத் திங்கள்களும் (பெரும்பொழுது), இடையாமமும் (சிறுபொழுது) இருள் தூங்கித் துளி மிகுத லால் தலைவனுக்குக் களவிற் சேர்தல் அரிதாகும். இதுபற்றித் தலைவன் தலைவியர்களிடையே காமக்குறிப்புப் பெருகும்.

எனவே, களவுக்கூட்டம் குறிஞ்சி நிலத்திற்கு வைக்கப் பெற்றது; புணர்ச்சிக்குச் சிறந்த நிலைக்களன் குறிஞ்சி யாயிற்று. இங்குப் பெறும் இன்பம் பன்மடங்கு சிறக்கும் என்பது பண்டையோர் கருத்து.

தலைவியுடன் கூடிய தலைவன் பிரிந்து செல்லும் இடம் "முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து - நல்லியல் பிழந்த" நிலமேயாதலின் பிரிதல் பாலைக்கு ஆயிற்று. பிரிந்து செல்லும் இடத்தின் இடர்ப்பாடுகளைப் பன்மடங்கு பெருக்கிக் காட்டுவதற்கு ஏற்ற இடம் பாலை நிலமாகும். பிரிவுத்துன்பம் மிகைப்படுத்திக் காட்டப்பெறுவதற்குத் தகுந்த நிலைக்களம் இது.

தலைவன் தலைவியைப் பிரிந்து செல்லும் பொழுது உறவினர் அறிந்து தடுத்தால், அவன் அவளை உடன்கொண்டு செல்வான். அவளைத் தன் ஊரில் மணந்து இல்வாழ்க்கை நடத்துவான். இங்ஙனம் பெரும்பாலும் உடன்கொண்டு செல்பவன் நாட்டுத்தலைவனேயாவான். இல்வாழ்க்கை நடத்தும் பொழுது தலைவன் பரத்தமை காரணமாகத் தலைவியை விட்டுப் பிரிவான். இப்பொழுது தலைவியிடம் ஊடல் நிகழும். உழைப்பு அதிகமின்றி வளம் மிக்க மருத நிலத்தினுள்ள மக்களிடமே, "காதல் மாதர் முல்லையினெடும் பொழுது போக்கும்"[20] பழக்கம் இயல்பாக அமையும். எனவே, ஊடல் மருத நிலத்திற்காயிற்று.

இல்வாழ்க்கைக் காலத்தில் பகை களைதல்பற்றிப் பிரிந்து வினைமுற்றி மீள்வோன் பெரும்பாலும் ஊர் நோக்கி வருங்காலம் கார்ப்பருவமாகிய ஆவணி புரட்டாசி மாதங் களாகும். இக்காலத்தில் வெப்பமும் தட்பமும் மிகாது நீரும் நிழலும் பெறுதல் எளிது. ஊர்ப்பக்கத்திலும் காடும் சோலை யும் காட்சி பெருகும்; பாவும் புள்ளும் மகிழ்ந்து விளையாடும். மாலையில் பசுக்கள் மன்றில் புகும்; கோவலர் குழலோசை எங்கும் இனிக்க எழும். இச்சூழ்நிலை காமக்குறிப்பை மிகுவித்துப் பிரிவாற்றிக்கொண்டு தனித்திருக்கும் தலைவியது

20. கலித் - தாழிசை 277.

கற்பு நிலையைப் பெருகக் காட்டும். எனவே, இருத்தல் முல்லைக்காயிற்று.

தலைவனைப் பிரிந்த கிழத்திக்குக் கடலும் கழியும் கானலும் காணுந்தோறும் ஆற்றாமையைத் தோற்றுவிக்கும். ஆள் அரவம் இல்லாத கடற்கரையிலிருந்து தனிமையில் நாம் நின்று பார்த்தால் நம்மிடமும் இவ்வாற்றாமை தோன்றக் காணலாம். இச்சூழ்நிலை இரங்கலைப் புலப்படுத்துவதற்கு மிகவும் ஏற்றது. ஆகவே, இரங்கலுக்கேற்ற நிலக்களன் நெய்தலாயிற்று. இவ்வாறு இவற்றிற்கு இன்னும் ஏற்புடைய காரணங்கள் உளவேனும் அவற்றையும் கூறிக்கொள்ளலாம்.[21]

**களவு வெளிப்படுதல் :** அம்பலும் அலருமே களவு வெளிப்படுதற்குக் காரணமானவை. இவை இரண்டைப் பற்றி முன்னரே விளக்கியுள்ளோம். அம்பல் என்பது முகிழ்த்தல். அஃது ஒருவரொருவர் முகக்குறிப்பினுல் தோற்றுவித்தல். அலராவது, சொல்லுதல். இந்த இரடிண்டிற்கும் தலைவனே காரணமாவான் என்று கூறுவர் ஆசிரியர். இதனை,

> அம்பலும் அலருங் களவுவெளிப் படுத்தலின்
> அங்கதன் முதல்வன் கிழவ னாகும்.[22]

என்ற நூற்பாவால் அறியலாம். தலைவனை அறிந்துழியல்லது அம்பலும் அலரும் நிகழா. தலைவியின் வேறுபாட்டான் ஆகாதோ எனின், ஆண்டு ஏற்றினன் ஆயிற்று என ஐயம் நிகழ்தல் அல்லது துணிவு பிறவாது என்பதாக இளம்பூரணரும் நச்சினர்க்கினியரும் இனிது விளக்குவர்.

இக்களவு வெளிப்படுதலிலும் ஓர் வரையறை உண்டு; ஓர் ஒழுங்கு முறையும் உண்டு. இதனை ஓரளவு முன்னரே நன்கு விளக்கியுள்ளோம்.[23] ஈண்டு அதிலுள்ள நுட்பத்தினைக் குறிப்பிடுவோம். தலைவியின் களவு ஒழுக்கத்தை அவளது தந்தையும் தன்னையரும் குறிப்பினுலேயே உணர்வர் என்பது

21. இராகவய்யங்கார், மு : தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி - பக். (23 - 24)
22. களவியல்—நூற்பா 49. (இளம்)
23. 'முறையுடைப் பேச்சு' என்ற கட்டுரையில்.

ஆசிரியரின் கருத்து ; ஒருவர் கூறக் கொள்ளாது உய்த்துக் கொண்டுணர்வர்.

'தந்தையும் தன்னையும் முன்னத்தின் உணர்ப.[24]
[முன்னம் - குறிப்பு.]

என்பது தொல்காப்பிய நூற்பா. நற்றாய் அறத்தொடு நின்ற வழி அவர்கள் உண்மை நிலையைக் குறிப்பினால் உணர்த்துவர்.

இருவர்கட் குற்றமும் இல்லையா லென்று
தெருமந்து சாய்த்தார் தலை.[25]

என்ற கலிப்பாட்டடிகளால் இதனை நன்கு அறியலாம். செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நின்றாற்போல நற்றாயும் தந்தைக்கும் தன்னைக்கும் அறத்தொடு நிற்பாள். இதற்கு ஆசிரியர்,

'தாயறி வுறுதல் செவிலியோ டாக்கும்.'[26]

என்று விதி செய்வர்.

அறந்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
என்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்.[27]

என்ற கலிப்பாட்டடிகளால் இதை நன்கு அறியலாம்.

**இருவகை வழக்குகள் :** ஒரு சமுதாயத்தில் மக்கள் வாழும் வாழ்க்கை முறை உலகியல் வழக்கு, செய்யுள் வழக்கு என இருவகைப்படும். மக்கள் வாழ்க்கையில் இயல்பாகக் காணப் பெறும் ஒழுக்கம்—நடக்கை முறை—உலகியல் வழக்கு எனப் படும். அவ்வுலகியல் வழக்கில் சிறந்தனவாயுள்ளவற்றை அறிஞர்கள் தேர்ந்தெடுத்துப் பிற்கால மக்களின் உலகியல் வழக்குத் திருத்தமுறச் செவ்வையாக நடைபெறுதற் பொருட்டுப் பாடல்களாகப் பாடிவைப்பர். அப்பாடல் உலகி யல் வழக்கின் உயர்வு தோன்றுமாறு பலபடப் புனைந்து செய்யப்பெறும். தொல்காப்பியரும் இதனை,

வழக்கெனப் படுவது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி யவர்கட் டாக லான.[28]

---

24. களவியல் - நூற் 47. (இளம்.)
25. கலி - 39. 26. களவியல்-நூற். 48. (இளம்.)
27. கலி - 39.
28. மரபி—நூற். 94. (இளம்.)

என்று கூறியுள்ளார். இதற்குப் பேராசிரியர், "வழக்கென்று சொல்லப்படுவது உயர்ந்தோர் வழங்கிய வழக்கே ; என்னை ? உலகத்து நிகழ்ச்சியெல்லாம் அவரையே நோக்கினமையின் " என்று பொருள் கூறுவர். எனவே, இத்தகைய பாடல்களாகிய நூல் வழக்கு 'நாடக வழக்கு' எனப்படும். உலகியல் வழக்கும் நாடக வழக்கும் சேர்ந்ததே அகப்பொருட் 'புலனெறி வழக்கம்' அல்லது செய்யுள் வழக்கம் ஆகும். இதனையே ஆசிரியர் தொல்காப்பியனுர்,

> 'நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
> பாடல் சான்ற புலனெறி வழக்கம்.'[29]
>
> [புலன் நெறி வழக்கம் - நூல் நெறி வழக்கம் ]

என்று கூறுவர். இதற்கு இளம்பூரணர் தரும் விளக்கம் : " **நாடக வழக்காவது**, சுவைபட வருவனவெல்லாம் ஓரிடத்து வந்தனவாகத் தொகுத்துக் கூறுதல். அஃதாவது, செல்வத் தானும், குலத்தானும், ஒழுக்கத்தானும், அன்பினனும் ஒத்தார் இருவராய்த் தமரின் நீங்கித் தனியிடத்து எதிர்ப் பட்டார் எனவும், அவ்வழிக் கொடுப்போருமின்றி அடுப் போருமின்றி வேட்கை மிகுதியாற் புணர்ந்தார் எனவும், பின்னும் அவர் களவொழுக்கம் நடத்தி இலக்கண வகை யான் வரைந்தெய்தினர் எனவும், பிறவும் இந்நிகரனவாகிச் சுவைபட வருவனவெல்லாம் ஒருங்கு வந்தனவாகக் கூறுதல். **உலகியல் வழக்காவது**, உலகத்தாற் ஒழுகலாற்ருேடு ஒத்து வருவது. **பாடல் சான்ற புலன் நெறி வழக்கமாவது**, இவ் விருவகையானும் பாடல் சான்ற கைக்கிளை முதலாப் பெருந் திணை இறுவாய்க் கூறப்படுகின்ற அகப்பொருள்" என்பது. இதனல் களவு, கற்பு நிலைகள் தமிழரிடையே தொன்று தொட்டு வழங்கிய உலகியல் வழக்கங்களேயாகும் என்பதும், இவையே பின்னர் புலவர்களால் சிறப்பித்துப் பாடப் பெற்றும், இலக்கணம் கற்பிக்கப்பெற்றும் ,செய்யுள் வழக்கு அடைந்தன என்பதும் பெறப்படுகின்றன. இதற்கும் ஆசிரியர்,

---

29. அகத்திணை - நூற்பா. 56 (இளம்).

உயர்ந்தோர் கிளவி வழக்கொடு புணர்தலின்
வழக்குவழிப் படுதல் செய்யுட்குக் கடனே.[30]

என்றும்,

அறக்கழி வுடையன பொருட்பயம் படவரின்
வழக்கென வழங்கலும் பழித்தன் றென்ப.[31]

என்றும் விதிகள் செய்வர். எனவே, பழந்தமிழ் நூல்கள் யாவும் உலக வழக்கைத் தழுவிச் செய்யப்பெற்றவையே யாகும் என்பது ஈண்டு அறியத்தக்கது. நச்சினார்க்கினியரும் "இஃது (செய்யுள் வழக்கு) இல்லதெனப்படாது, உலகியலே யாம். உலகியலின்றேல், ஆகாயப்பூ நாறிற்று என்ற வழி அது சூடக் கருதுவதுமின்றி மயங்கக் கூறினானென்று உலகம் இழித்திடப்படுதலின் இதுவும் இழித்திடப்படும், இச் செய்யுள் வழக்கினை நாடக வழக்கென மேற்கூறினார். எவ் விடத்தும் ஒப்ப நிகழும் உலகியல் போலாது, உள்ளோன் தலைவனாக இல்லது புணர்த்தல் முதலாகப் புனைந்துரை வகையாற் கூறும் நாடகவிலக்கணம் போல யாதானும் ஒரோவழி ஒரு சாரார்மாட்டு உலகியலான் நிகழும் ஒழுக்கத் தினை எல்லார்க்கும் பொதுவாக்கி இடமும் காலமும் நியமித் துச் செய்யுட் செய்தல் ஒப்புமை நோக்கிச் செய்யப்பட்ட தாகலின்" என்று கூறுதல் காண்க.[32] மேலும் அவர், மேற் குறிப்பிட்ட "நாடக வழக்கினும்" என்ற நூற்பாவிற்கு உரை கூறுங்கால் "புனைந்துரை வகையாற் கூறுபவென்றலிற் புலவர் இல்லனவுங் கூறுபவலோவெனின், உலகத்தோர்க்கு நன்மை பயத்தற்கு நல்லோர்க்குள்ளனவற்றை ஒழிந்தோர் அறிந்தொழுகுதல் அறமெனக் கருதி அந்நல்லோர்க்குள்ளன வற்றிற் சிறிது இல்லனவும் கூறுதலன்றி யாண்டும் எஞ்ஞான் றும் இல்லன கூறார் என்றற்கன்றே 'நாடகம்' என்னாது 'வழக்கு' என்பாராயிற்று" என்றும், "இப்புலனெறி வழக் கினை இல்லது இனியது புலவரால் நாட்டப்பட்டதென்னுமோ வெனின் இல்லது என்று கேட்டோர்க்கு மெய்ப்பாடு பிறந்து இன்பம் செய்யாதாகலானும், உடன் கூறிய உலகியல் வழக்

30. பொருளியல் - நூற். 21 (இளம்.) 31. ஷெ - 22.
32. அகத்திணை நூற். 3-இன் உரை. (நச்.)

கினை ஒழித்தல் வேண்டுமாகலானும் அது பொருந்தாது" என்றும் கூறியுள்ளதை நாம் சிந்தித்து அறிதல் வேண்டும். எனவே, தொல்காப்பியர் கூறியுள்ள அகப்பொருள் விகற்பங்கள் யாவும் புனைந்துரைவகையால் புலவர்கள் பாடிவைத்த உலகியல்களே என்பது வெளிப்படை.

**கூற்று நிகழும் முறை :** அகப்பொருளில் களவிலும் கற்பிலும் கூற்று நிகழ்த்துவதற்குரியோர் இன்னார் என்று முன்னர் விளக்கினோம். அஃதாவது, பார்ப்பான், பாங்கன் முதலியோர் சொல்வதாகப் பாட்டுக்கள் புனையப்பெறும். ஆனால், ஊரார், அயலார், சேரியார், நோய்மருங்கறிநர், தந்தை, தன்னை ஆகிய அறுவரும் கூறுவதாகச் செய்யுள் செய்யும் வழக்கம் இல்லை.

ஊரும் அயலும் சேரி யோடும்
நோய்மருங் கறிநருந் தந்தையும் தன்ஐயும்
கொண்டெடுத்து மொழியப் படுத லல்லது
கூற்றவண் இன்மை யாப்புறத் தோன்றும். [33]

என்ற நூற்பாவால் இதனை அறியலாம். அஃதாவது, இவர் கூற்றாகப் பிறர் சொல்லின் அல்லது இவர்தாம் கூறார் என்பது கருத்து. பேராசிரியரும், "கொண்டெடுத்து மொழியப் படுதலல்லது' என்பது, இவர் கூற்றாகப் பிறர் சொல்லின் அல்லது இவர்தாம் கூறார் என்றவாறு" என்று கூறியிருத்தல் ஈண்டு அறியத்தகும்.[34] எடுத்துக் காட்டாக,

'எந்தையும் நிலனுறப் பொறாஅன் சீறடி சிவப்ப
எவன்இல குறுமகள் இயங்குதி என்னும்' [35]

என்ற அகப்பாட்டடிகளில் தோழி தலைவனுக்குத் தலைவியின் இற்செறிப்பை யுணர்த்துங்கால் தந்தையுட் கொண்டு கூறியதைக் காண்க. மேலும்,

---

33. செய்யுளியல் - நூற். 183 (இளம்.)
34. செய்யு. - நூற். 191 (பேரா.)
35. அகம் - 12.

அறத்தோடு நின்றேனைக் கண்டு திறப்பட
என்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்;
அவருந் தெரிகணை நோக்கச் சிலைநோக்கிக் கண்சேந்து
ஒருபகல் எல்லாம் உருத்தெழுந்து ஆறி
இருவர்கட் குற்றமும் இல்லையால் என்று
தெருமந்து சாய்த்தார் தலை. 36

என்ற கலிப்பாட்டடிகளில் தன்னையர் வரைதலுக்கு ஒருவாறு உடன்பட்டமையைத் தோழி தலைவிக்கு உரைத்ததை அறிக. இன்னும்,

ஊஉர் அலர்எழச் சேரி கல்லென
ஆனது அலைக்கும் அறனில் அன்னை. 37

என்ற குறுந்தொகையடிகளில் தலைவி தலைவனுடன் செல்வதால் ஊரில் அலரெழுதலையும் சேரியில் ஆரவாரம் நிகழ்தலையும் தோழி தலைவிக்குப் புலப்படுத்தலை உணர்க.

தலைவனொடும் தலைவியொடும் (அவளைப் பெற்ற) நற்றாய் கூறியதாகக் கூறும் வழக்கமில்லை என்று புலப்படுத்துவர் ஆசிரியர்.

ஒண்தொடி மாதர் கிழவன் கிழத்தியொடு
கண்டோர் மொழிதல் கண்ட தென்ப. 38

என்ற நூற்பாவால் இதனை அறியலாம். எனவே, நற்றாய் ஏனையோரை நோக்கியே கூறுவதாகச் செய்யுள் செய்யப் பெறும் என்பதை அறிதல் வேண்டும்.

நற்றாய், செவிலி, தோழி என்னும் இவர்களோடும் தலைவனொடும் தலைவியொடும் வழியிடையே கண்டோர் உரையாடுதல் உலகியல் வழக்கமாகும். எடுத்துக்காட்டாக,

பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கவைதாம் என்செய்யும்
நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே. 39

என்று முக்கோர் பகவர் இடைச்சுரத்தில் கண்ட செவிலியிடம் கூறியதைக் காண்க.

36. கலி. - 39 (வரி 20 - 25)
37. குறுந். - 262.
38. செய்யு. – நூற். 185 (இளம்.)
39. கலி. - 9 . வரி (13 - 15)

தலைவனும் தலைவியும் அல்லாத ஏனைய பதின்மரும்[40] தலைமகனும் தலைமகளும் ஆகிய இருவரோடும் இடமும் காலமும் நோக்கி உரை நிகழ்த்தும் மரபுகளையெல்லாம் ஆசிரியர் நன்கு விளக்குகின்றார். ஆனால், தொல்காப்பியத்தில் பிற்காலத்து அகப்பொருள் இலக்கணம் போல இக்கூற்றுக்களை துறைவரிசைப்படி வைத்து ஆசிரியர் மொழியவில்லை என்பது அறியத்தக்கது. தொல்காப்பியத்தில் தலைவன், தலைவி முதலியோர் கிளவி நிகழ்த்தும் இடங்களே தொகுக்கப்பெற்றுள்ளன. இங்ஙனம் தனித்தனி வைத்துக் காட்டப்பெற்ற கூற்றுக்களைக் கோவைக்கிளவிகள் போலத் துறைப்படுத்திக் கூறுவதற்கு ஆசிரியர் காலத்து வழங்கிய அகப்பொருள் முறைவைப்பு இன்னதென்பதை விளக்கும் இலக்கியம் கிடைக்கவில்லை. எனவே, அவற்றைத் தொல்காப்பியர் கூறும் முறைப்படி விளக்குதற்குத் தடையாகின்றது. கடைச்சங்க நாளில் அகத்திணைபற்றி எழுந்த நற்றிணை முதலிய தொகை நூல்கள் பிற்காலத்துக் கோவை நூல்களில் கண்ட துறைகளையே பெரும்பான்மை கூறினும், அவை கோவை போலக் காட்சி முதலாகத் தொடங்கி பரத்தையிற் பிரிவு இறுதியாக வைத்துக் கூறவில்லை. அவை யாவும் குறிஞ்சி, பாலை என்னும் திணை முறைப்படியே வைத்து ஓதுகின்றன. எனவே, அவற்றில் ஒரு துறைக்கு மற்றொரு துறை தொடர்பின்றியே காணப்பெறும். இங்ஙனம் தொல்காப்பியனார் அவ்வவர் கூற்றுக்களைக் கோவைபடக் கூறாமல் சென்றதையும், பழைய இலக்கியங்களும் அதற்கேற்பக் காணப்பெறுவதையும் நோக்கும் போது பண்டைக்காலத்தில் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்ற ஐந்திணையில் ஒரு முறைபற்றிப் பாடுதலே பெருவழக்காக இருந்ததென்பதை ஊகிக்கலாம். எனினும், நுணுகி ஆராய்ந்தால் தொல்காப்பியத்திலுள்ள அகப்பொருள் முறைவைப்பினை இன்னதென்பதை நன்கு அறிந்துகொள்ளலாம். இதற்குத் தொல்காப்பியனார் கருத்துக்களையே பெரும்பான்மை தழுவியமைந்த இறையனார்

40. பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, பாணன், கூத்தன், விறலி, பரத்தை, அறிவர், கண்டோர் என்போர்.

களவியலுரையும் நம்பியகப்பொருளும் பெரிதும் துணை செய்யும்.

**முறைப்பெயர்கள் :** மேற்கூறியவாறு கூற்று நிகழுங் கால் தலைவன், தலைவி, தோழி, பாங்கன் ஆகிய நால்வரும் ஒருவரையொருவர் அழைத்தற்குரிய பொதுப்பெயர் 'எல்லா' என்பது. " இச்சொல்லால் தலைவியும் தோழியும் பெரும்பான்மை தலைவனையும், அத்தலைவன் சிறுபான்மை தலைவியையும் பாங்கனையும் அழைத்துக்கொள்வர் என்று நச்சினார்க்கினியர் குறிப்பிடுவர். சில எடுத்துக்காட்டுக்கள் :

'எல்லா
தமக்கினி தென்று வலிநிற் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று.' [42]

என்பது தலைவி தலைவனை நோக்கிக் கூறியது : இஃது ஆண் பால்மேல் வந்தது.

" 'முற்றிழை யேஎர் மடநல்லாய்! நீயாடும்
சிற்றில் புனைகோ' சிறிதென்றான் ; 'எல்லாநீ
பெற்றேம்யாம் என்று பிறர்செய்த இல்லிருப்பாய்
கற்ற திலைமன்ற காண்'—என்றேன் ; 'முற்றிழாய் !
தாதுசூழ் கூந்தல் தகைபெறத் தைஇய
கோதை புனைகோ நினக்கு' என்றான்; 'எல்லா நீ
ஏதிலார் தந்தபூக் கொள்வாய் நனிமிகப்
பேதையை மன்ற பெரிதெ'ன்றேன்;" [43]

என்ற உரையாடல் முறையில் அமைந்த கலிப்பாட்டில் வந்துள்ளள 'எல்லா' இருமுறையும் தலைவி தலைவனை நோக்கி விளித்ததேயாகும்.

"எல்லா இஃதொத்தன் என்பெறான் கேட்டைக்காண்" [44]

என்ற கலிப்பாட்டடியில் தோழி தலைவியை நோக்கி விளித்த வாறு வந்துள்ளதைக் காண்க. இச்சொல் எலா, எல்ல, எலுவ எனவும் திரிந்து வழங்கும். மேலும், அன்னை, என்னை என்ற முறைப்பெயர்களும் இப்புலனெறி வழக்கில் வழங் கும். அன்னை என்பது தலைவி தோழியையும், தோழி

41. பொருளியல் - நூற். 26 (நச்.)
42. கலி. - 62 வரி (6 - 8)
43. கலி. - 111 வரி (9 – 16).
44. கலி. - 61 (வரி–1).

தலைவியையும் அழைக்கும் சொல்லாகவும், என்னை என்பது அவ்விருவரும் தலைவனை விளிக்கும் சொல்லாகவும் வழங்கப் பெறும்.

> அன்னை என்னை என்றலும் உளவே
> தொன்னெறி முறைமை சொல்லினும் எழுத்தினும்
> தோன்றா மரபின என்மனார் புலவர். 45

என்று ஆசிரியர் இதற்கு விதி செய்வர்.

**அகப்பாடல்களின் யாப்பமைதி :** மனித இனம் வளர்த்த கலைகள் யாவும் அவ்வினம் வளர்ந்த வரலாற்றை ஒட்டியுள்ளன என்று கலைவரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுவர். மானிட வாழ்க்கையிலிருந்து முளைத்த கலைகள் வாழ்க்கையில் ஓய்வான இன்பப் பகுதிக்காக என்றே ஒதுங்கி வளர்ந்தன என்றும், இவை வாழ்க்கையின் உழைப்புப் பகுதியில் சேராமல் இன்பப் பகுதிக்கு மட்டும் உரியவைகளாக நின்றன என்றும் கூறுவர். இவ்வாறு பிறந்து வளர்ந்த இசை என்னும் கலை தொடக்கத்தில் பொருளற்ற ஒலியொழுங்கும் பொருளுடைய ஒலியொழுங்கும் கலந்ததாக நின்றது. இன்றும் அவை இசையில் ஓரளவு கலந்தே நிற்பதைக் காணலாம். பொருளற்ற ஒலியொழுங்கு உணர்ச்சியைப் புலப்படுத்தவல்லதாக இருப்பதால்தான் அஃது இன்றும் போற்றப் பெறுகின்றது. பொருள் ஒலிகள் அமைந்த முறையே பாட்டு என்பது.

"பொருளற்ற உணர்ச்சி ஒலிகளையே இசைத்து மிக்க இன்பங்கண்ட மனிதன், மெல்ல மெல்ல மாறி, பொருள் ஒலிகளை மிகுதியாக இசைத்து இன்பம் காணத் தொடங்கினான். பறவைகளைப் போல் உணர்ச்சி ஒலிகளை மிகுதியாக இசைத்த காலத்தில், அவனுடைய செவிப்புலன் வாயிலாக உள்ளம் குழைந்து இன்புற்றான். இம்மாறுதல் நேர்ந்த பிறகு, பொருள் ஒலிகளை மிகுதியாக இசைத்துப் பயின்ற போது, செவிப்புலன் வாயிலாக மட்டும் அல்லாமல், அறிவின் வாயிலாகவும் உள்ளம் குழைந்து இன்புற்றான். இன்னும்

45. பொருளியல்-நூற். 50 (இளம்.)

கூறப் புகுந்தால், செவிப்புலம் வாயிலாகப் புகுந்த இன்பம் குறைந்து அறிவின் வாயிலாகப் பெறும் இன்பம் மிகுந்தது எனலாம். இந்த நிலையில், பாட்டு என்னும் கலை, உணர்ச்சி ஒலிகளின் துணையையும் கடந்து, இசைக்கருவிகளின் துணையையும் கடந்து வாழவல்லதாய் விளங்கிற்று. 'பாட்டு' (Poetry) என்னும் உயர்கலை பிறந்தநிலை இதுவே ஆகும்.''[46] இத்தகைய ஒரு நிலையில் இன்ப உணர்ச்சியைப் புலப்படுத்தும் அகப்பாடல்கள் எழுந்திருக்கலாம். இசையின்பம் மிக்க கலிப்பாட்டும் பரிபாடலும் ஆதியில் அகப்பொருள் பாடலின் யாப்பு முறைகளாக அமைந்தன என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட்டு ஆயிரு பாங்கினும்
உரிய தாகும் என்மனார் புலவர். [47]

என்ற விதியால் இதனை நன்கு அறியலாம். மேலும், ஆசிரியர் பரிபாடலின் உறுப்புகளைக் குறிப்பிடும் பொழுது,

'காமங் கண்ணிய நிலைமைத் தாகும்.' [48]

என்று கூறுவதாலும் பரிபாடல் இன்பப் பகுதி பற்றியே பாடப்பெற்றது என்பதை உணரலாம். இதனால், ஆசிரியர் தொல்காப்பியர் காலத்தில் எல்லாப் பாக்களிலும் அகப்பொருள் அதிகமாக வழங்கப்பெறுமை அறியப்படும். ஆனால், தொல்காப்பியருக்குப் பின்னருள்ள காலத்தில் இவ்வரையறை இல்லாமல் போய் விட்டது. கடைச்சங்க நூல்களில் கலிப்பாட்டு நீங்க ஒழிந்தவும் பிற்பட்ட நூல்களும் ஆசிரியம், வெண்பா, வஞ்சிப் பாக்களில் அமைக்கப்பெற்றிருப்பதால் இதனை உணரலாம். நச்சினார்க்கினியரும் ''நாடக வழக்கினும்'' என்று மேற்குறிப்

46. மு. வ. : இலக்கிய ஆராய்ச்சி பக். (113-114.)
47. அகத்திணை - நூற். 56 (இளம்.)
48. செய்யு. - நூற். 117 (இளம்.)

பிட்ட நூற்பாவின் உரையில் பிற்காலத்தில் நேர்ந்த மாறுபாட்டை, "ஆசிரியமும் வெண்பாவும் வஞ்சியும் அகம்புறம் என்னும் இரண்டிற்கும் பொதுவாய் வருமாறு நெடுந்தொகையும் புறமும் கீழ்க்கணக்கும் மதுரைக்காஞ்சியும் பட்டினப் பாலையும் என்பனவற்றுட் காண்க" என்று உரையிற் கொண்டு அமைப்பர்.[49]

**அகப்பொருளின் பெருமை :** கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என்ற இந்த ஏழு திணைகளையும் பற்றிப் புலவர்கள் பாடி வந்த வழக்கம் தொல்காப்பியனார் காலத்துக்கு முற்பட்டே பெருகி வழங்யிருத்தல் வேண்டும். இதனை,

> 'முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
> புலந்தொகுத்தோன்'

என்ற பாயிரப் பகுதி வலியுறுத்தும். அங்ஙனமே, தொல்காப்பியருக்குப் பிற்பட்ட காலத்திலும் அவரிட்ட ஆணை வழியே நூல்கள் பாடப்பெற்றுப் பெருகி இருந்தன. நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்ற எட்டுத்தொகை நூல்களுள் புறநானூறும். பதிற்றுப்பத்தும் ஒழிய ஏனைய ஆறும், பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் சிலவும், பத்துப் பாட்டில் சிலவும் அகத்திணைபற்றி அமைந்த நூல்களேயாகும். இவற்றுள் நற்றிணை முதலிய தொகை நூல்கள், பல புலவர்களால் பாடப்பெற்றவை. அஃதாவது, ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு திணை, துறை விகற்பங்களைப் பற்றிப் புலவர்கள் பாடிப்போந்த செய்யுட்கள் பிற்காலத்தொருவரால் தொகுக்கப்பெற்று முறைப்படி கோக்கப்பெற்றன. இங்ஙனம் அகப்பொருளைப் பொருளாகக் கொண்டு தம்மை ஆதரித்த அரசர், செல்வர் முதலியவர்களைப் பாட்டுடைத் தலைவராக்கிப் பாடும் வழக்கு முன்னாளில் தமிழ் மக்களால் பெரிதும் மதிக்கப் பெற்று வந்தது.[50] ஒவ்வொரு திணையின் முதல், கரு, உரிப்

---

49. அகத்திணை - நூற். 58 (நச்.)
50. இம்முறை பிற்காலத்தில் (அண்மைக் காலத்தில்) சிற்றிலக்கியங்களாக வடிவெடுக்கும் பொழுது சில நூல்கள் நாகரிகமற்ற முறையில் மிகவும் கீழ்த்தரமாகப் பாடப் பெற்றுள்ளன.

பொருள்களின் இயற்கைச் சிறப்புக்களை எடுத்து விளக்கி அழகாகப் பாடிவந்த அருமைபற்றிப் பண்டைப்புலவர் களில் சிலர் பாலை பாடிய பெருங்கடுங்கோ, பாலைக் கௌதமனார், மருதனிள நாகனார், நெய்தற் கார்க்கியன், வெறி பாடிய காமக கண்ணியார், மடல் பாடிய மாதங்கீரன் என்று அகத் திணைத் துறைப்பெயர்களால் சிறப்பித்து வழங்கப்பெறுவா ராயினர். மேலும், பண்டைக்காலத்தில் பொருளிலக் கணத்தை அறிந்திராமை பெரியதோர் இழுக்காகவும், கருதப் பெற்று வந்தது. கடைச்சங்க நாளில் ஒரு காலத்தே பொரு ளிலக்கணமறிந்த புலவர் கிடையாமற் பாண்டியன் புடைபடக் கவன்ற போது, “என்னை? எழுத்தும் சொல்லும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே? பொருளதிகாரம் பெறேமே எனின் இவை பெற்றும் பெற்றிலேம்” என அவ்வரசன் கூறினதாகவுள்ள வரலாற்றால் இதனை அறியலாம்.[51] அன்றியும், இறையனார் அருளிச்செய்த பொருளிலக்கணத்திற்குப் புலவரைக் கொண்டு பொருளறிந்த வரலாறு பொருளாராய்ச்சியில் முன்னோர்க்கிருந்த ஊக்க மிகுதியைப் புலப்படுத்தும். பொருளதிகாரத்தில் கூறப் பெறுஞ் செய்தி தமிழ் மொழிக்கே சிறப்பாகவுடையது. இதன் பொருட்டே ஆரிய அரசன் பிரகத்தனும் தமிழறிய விரும்பினான். **கபிலர்** என்னும் நல்லிசைப் புலவர் ‘குறிஞ்சிப் பாட்டு’[52] என்ற ஓர் அழகான பாட்டினைப் பாடி அவனுக்குத் தமிழின் நீர்மையினை உணர்த் தினார். இவனே பின்னர், தமிழில் கவி பாடும் அளவுக்குத் தமிழ்ப் புலமை பெற்றுத் திகழ்ந்தான்.[53] அறம் உரைக்க வந்த திருவள்ளுவனாரும் காமத்துப்பாலைக் களவு, கற்பு எனப் பகுத்து, அவற்றின் விகற்பங்களைத் தமிழ் இலக்கணத்துடன்

51. இறை. - களவியல்—நூற்பா 1 - இன் உரை.

52. பத்துப்பாட்டில் ஒன்று.

53. குறுந்தொகை - 184. ஆரியவரசன் யாழ்ப் பிரமதத்தன் என்பானல் இயற்றப்பெற்றது. பிரமதத்தனும், பிரகத்தனும் ஒருவனே என்று ஊகித்தற்கு இடம் உண்டு.

பொருந்தக் கூறிச் செல்வதிலிருந்தும் அகப்பொருளின் பெருமையை நன்கு உணரலாம். -

உயர்ந்த அன்பு நிலையை வெளிப்படுத்துவதற்கு அகத் துறைகளைவிட உயர்ந்த இடம் பிறிதின்று. எனவே, முழு முதற் கடவுளிடத்துப் பேரன்பு செலுத்தி ஆடிப்பாடி நெஞ்சு நெக் குருகி அகங்கரைந்த அடியார்களும்கூட, அக்கடவுளையும் தம்மையும் தலைவன் தலைவியர்களாகக் கொண்டு இவ்வகத் துறைகள் வாயிலாகவே பக்தி என்னும் பெருவெள்ளத்தில் இழிந்து மூழ்கிக் களிப்பாராயினர். கடவுளிடத்துச் செலுத் தும் காமப்பகுதியைப் புறத்திணைக்குரியதாக ஆசிரியர்கள் இலக்கணம் வகுத்திருப்பினும், அதன் பொருட்கூறுகள் யாவும் அகத்திணைத் தொடர்புடையனவாகவே அமைந்திருக் கின்றன. இந்த அருமை பெருமைகளைத் தேவாரம், திரு வாசகம், நாலாயிர திவ்வியப்பிரபந்தம் முதலிய நூல் களால் அறியாலாம். எனவே, சிற்றின்பத்திற்கு மட்டுமன்றிப் பேரின்பக் கடலில் இறங்குவதற்கும் இந்த அகத்துறைகள் உரிமை பூண்டுத் திகழ்வன என்பதை இளம் மாணாக்கர்கள் நன்கு உணர்தல் வேண்டும்.

# 14. திருமண முறைகள்

தலைவியுடன் களவுக்கூட்டம் வந்த தலைமகன் அவளை மணந்துகொள்வதில் இருமுறைகள் உள்ளன. அவை களவு வெளிபடுவதற்கு முன் வரைதல், களவு வெளிப்பட்ட பின் வரைதல் என்பன. இதனை,

> வெளிப்பட வரைதல் படாமை வரைதல் என்(று)
> ஆயிரண் டென்ப வரைத லாறே 1.

என்ற நூற்பாவால் அறியலாம். தலைவி அறத்தொடு நின்றதை எல்லோரும் ஒத்துக்கொண்ட பின் மணந்து கொள்ளுதல் களவு வெளிப்பட வரைதல் ஆகும். இதற்கு முன்னர்க் கூறியவை யாவும் இப்பகுதியைச் சேர்ந்தவை. களவு வெளிப்படா முன் வரைதல் என்பது, தலைமகள் அறத்தொடு நில்லாமுன் தலைவன் தலைவியை உடன்கொண்டு சென்று தன்னூரில் மணந்துகொள்வதாகும். இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாட்டுடன் மணந்துகொள்வதும் இப் பகுதியின்பாற்படும். பகற்குறி இரவுக்குறிகட்குப் பின் தோழியால் வரைவுகடாவப்பெற்று நிகழ்வதையும் இதன்பாற் படுத்துவதும் உண்டு. இவ்வாறு வரைந்துகொள்வதில் தலைவிக்கு உடன்போக்கில்லை என்பது அறியத் தக்கது. இவற்றை இறையனார் களவியலுரையாசிரியர் இவ்வாறு விளக்குவர் :

" களவு வெளிப்படா முன்னுற வரைதல் என்பது, பலரானும் சிலரானும் அறியப்பட்டது இவ்வொழுக்கம் என்னும் கருத்து எய்தா முன்னம் வரைதல் என்றவாறு ; இயற்கைப்

1. களவியல்—நூற். 50. (இளம்.)

புணர்ச்சி புணர்ந்த பின்னே தெருண்டு வரைதலும் உரியன்; அங்குத் தெருளானுய்விடின், பாங்கற் கூட்டம் கூடித் தெருண்டு வரைதலும் உரியன்; அங்குத் தெருளானுய் விடின், தோழியை இரந்து, பின்னின்று, அவள் தனையுருத்தகைமை செய்யத் தெருண்டு வரைதலும் உரியன்; அங்குத் தெருளானுய்விடின், மதியுடன் படுத்து இரந்துபின்னின்ற நிலைமைக்கண் தோழி சேட்படுப்பத் தெருண்டு வரைதலும் உரியன்: அங்குத் தெருளானுய்விடின் தோழியிற்கூட்டம் கூடியாதல், செறிப்பறிவுறுக்கப்பட்டா தல், இரவுக்குறியது ஏதம் காட்டவாதல், வரைவு கடாவப் பட்டாதல் தெருண்டு வரைதலும் உரியன்; ஈதெல்லாம் களவு வெளிப்படா முன்னுற வரைதல் விகற்பமெனக் கொள்க.

"இனி, வெளிப்பட்ட பின்றை வரைதல் விகற்பமின்று எனக் கொள்க. அவற்றுள், களவு வெளிப்படா முன்னுற வரைதல் சிறப்புடைத்து. இது தனக்காகாமையால் வரைந் தமையிற் சிறப்பின்று எனக் கொள்க. இது களவு வெளிப் பாடு அன்றென்று மறுத்து களவு வெளிப்படா முன்னுற வரைதல், அறத்தொடு நிலை நிகழாமுன் வரைதல் என்றவாறு.

"களவு வெளிப்பட்ட பின்றை வரைதல் என்பது, அறத் தொடு நிலை நிகழ்ந்த பின்றை வரைதல் என்றவாறு.

"களவு வெளிப்படா முன்னுற வரைதலும், களவு வெளிப் பட்ட பின்றை வரைதலும் ஆமாறு முன்னே சொல்லிப் போந் தோம்; அவ்வுரையையே இதற்கும் உரைத்துக்கொள்க.

**களவு வெளியாவதற்கு முன் வரைதல் :** களவு வெளியாவ தற்கு முன் வரையும் நிகழ்ச்சியில் தலைவன் தலைவியை மணம் பேசி அவள் சுற்றத்தாரை வேண்டுவான். அவர்கள் மிகுந்த பரியங் கேட்பர். அதை நிறைவேற்றுவிப்பதற்காகத் தலைவன் தலைவியை விட்டுப் பிரிவான். இப்பிரிவு, "**வரை பொருட் பிரிவு**" என வழங்கப்பெறும். இங்ஙனம் பிரிந்து சென்றவன் வேண்டும் பொருளை ஈட்டிக்கொண்டு மீண்டு, தன் உறவினரை மேற்கொண்டு தலைவியின் இல்லம் அண்மி மண முரசு ஒலித்துப் பெண் பேசுவிப்பான். களவொழுக்க நிலையில்

2. இறை. – களவியல் – நூற். 24 (உரை)

தலைவனிடம் பொருள்வயிற் பிரிதலும், வேந்தர்க்குற்றுழிப் பிரிதலும், காவற்பிரிதலும் நிகழுமேயன்றி ஏனைய ஓதற் பிரிவும் பகைவயிற் பிரிவும் தூதிற் பிரிவும் நிகழா என்று கூறுவர் தொல்காப்பியர்.

> வெளிப்படை தானே கற்பினோ டொப்பினும்
> ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக
> வரையாது பிரிதல் கிழவோர்க் கில்லை. [3]

என்ற நூற்பாவால் இதனை அறியலாம். 'மூன்று பொருள்' என்பதை இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் ஓதல், பகை, தூது என்றே பொருள் கூறியுள்ளனர்.

**களவு வெளிப்பட்டபின் வரைதல் :** 'உடன் போக்கின்' இறுதியில் தலைவியின் சுற்றத்தார் தலைவியின் "கற்பொடு புணர்ந்த கௌவை"யை நேரில் அறிந்ததும் உடன்போக்கிற்கு ஒருப்பட்டு தம்மூர் மீள்வர் என்று குறிப்பிட்டோமன்றோ ? தலைவன் தலைவியைத் தன்னூர்க்கொண்டு சேர்ப்பன். சில நாட்களுக்குப் பின்னர் தலைவியின் தமர் தலைவியின் இருப்பையறிந்து தலைவனை நெருங்கி அவனைத் தம்மூரகத்தே மணம் புரிந்துகொள்ளும்படி வேண்டுவர். அவ்வேண்டுகோளுக்குத் தலைவன் உடன்பட்டால், அவன் தலைவியின் ஊரையடைந்து அவளை வதுவை புரிந்து வாழ்வுறுவன். இனி, உடன் போக்கில் தலைவியின் தமர் இடைச்சுரத்தில் தடை புரியாமலும், அவர் தலைவியின் இருப்பையறிந்து வந்து தலைவனை மணம் புரிந்துகொள்ளுமாறு வேண்டாமலும் போவாராயின், தலைவன் அவளைத் தன் மனையில் வைத்து 'வதுவை மணம்' புரிந்துகொள்வான். இம்மண நிகழ்ச்சிக்கு முன்னர் தலைவனுடைய தாய் அவனால் கொண்டுவரப் பெற்ற தலைமகளின் பொருட்டுச் **"சிலம்புகழி நோன்பு"** என்பதொன்று செய்தல் பண்டைய மரபாக இருந்தது. மணம் புரிவதற்கு முன்னர் மணமகளது காலில் பெற்றோர்கள் அணிந்திருந்த சிலம்பை நீக்குவதற்குச் செய்யப்பெறும் சடங்கே 'சிலம்புகழி நோன்பு' என்பது. இதனை,

---

3. களவியல் - நூற். 51 (இளம்.)

நும்மனைச் சிலம்பு கழீஇ அயரினும்
எம்மனை வதுவை நன்மணங் கழிகெனச்
சொல்லின் எவனோ மற்றே வென்வேல்
மையற விளங்கிய கழலடிப்
பொய்வல் காளையை ஈன்ற தாய்க்கே. 4

[அயரினும் - சடங்கு செய்த போதிலும்; சொல்லின் எவனோ - சொன்னால் வரும் குற்றம் என்ன; வென் - வெற்றி; மையற - குற்றமில்லாதபடி; பொய்வல்காளை - பொய் கூறுதலில் வல்ல தலைவன்.]

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலால் அறியலாம். தலைவியை உடன்கொண்டு போன தலைமகன் மீண்டு தலைவியைத் தன் இல்லத்துக் கொண்டு புக்குழி அவன் தாய் அவட்குச் சிலம்பு கழி நோன்பு செய்கின்றாளெனக் கேட்ட நற்றாய் ஆண்டு நின்றும் வந்தார்க்குச் சொல்லியதாக அமைந்துள்ளது இப் பாடல். இறையனார் களவியலுரையாசிரியரும், "தலைமகள் தன்னகத்தே வதுவைக் கலியாணம் எடுத்துக்கொண்டான் என்பது கேட்ட நற்றாய், 'ஒழிந்த கலியாணம் செய்யினும், நம்மகத்தே வதுவைக் கலியாணம் செய்ய நேருங்கொல்லோ காளையைப் பயந்தாள்' என்னும் " என்று கூறி இப்பாடலை மேற்கோளாகக் காட்டுவர்.[5] இவ்வழக்கத்தை,

"சிலம்பு கழீஇய செல்வம்
பிறருணக் கழிந்தஎன் ஆயிழை அடியே 6

என்ற நற்றிணைப் பாடற்பகுதியும், "இதுகாறும் கூந்தல் வாரி, நுசுப்பிவர்ந்தோம்பியும் சிலம்புகழி நோன்பு யான் காணுமாறு நோற்றிலேன் என்பாள் பிறருணரக் கழிந்தனள் என்று இரங்கினளாயிற்று " என்ற உரைப்பகுதியாலும் அறியலாம்.

இங்ஙனம் தலைவியை ஒருவரும் அறியாமல் உடன் அழைத்துச் சென்று, அவள் சுற்றத்தார் கொடுத்தலின்றியே மணம் செய்து கோடல் முற்காலத்தில் அறநெறியாகவே கருதப்பெற்றது. தொல்காப்பியரும்,

---

4. ஐங்குறு. - 399.
5. இறை களவி. - நூற்பா 23-இன் உரை.
6. நற்றிணை - 279.

கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே
புணர்த்துடன் போகிய காலை யான. 7

என்று இதற்கு விதி செய்துள்ளார். ஆயினும், களவு வெளிப்பட்டபின் தலைவியின் தமர் உடன்பட்டுக் கொடுத்தலை முற்காலத்துப் பெருவழக்கமாக இருந்தது. இது,

'மறைவெளிப் படுதலும் தமரிற் பெறுதலும்' 8

என்ற தொல்காப்பியரின் கூற்றால் தெளியப்பெறும். இது களவின் வழிவந்த மணம் ஆகும்.

இவ்வாறன்றி களவொழுக்கம் இல்லாது மணம் செய்து கொள்ளுதலும் உண்டு. இது சிறுபான்மை ஒரு சிலரிடையே அன்று நிகழ்ந்து வந்தது. இது களவின்வழி வாராத மணம் என்று வழங்கப்பெறும். இதிலும் மணமக்களை எதிர்ப்படச் செய்து அவர் உடன்பாடு பெற்றே மணம் புரிவிப்பர். இன்று இத்தகைய முறை தமிழர்களிடையே பெருவழக்காக இருப்பதை அறியலாம்.

**கற்பு :** மேற்கூறியவாறு அன்புரிமை பூண்ட தலைமகள் தன்பால் அன்புடைய தலைவியைப் பெற்றோர் கொடுப்பப் பலரறிய மணந்து வாழும் மனை வாழ்க்கையே கற்பென வழங்கப்பெறும். கற்பு களவொழுக்கத்தின் கனி; அன்பின் வெற்றி.

கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே 9

என்பது தொல்காப்பியர் விதி. ஒத்த அன்புடைய ஒருவனும் ஒருத்தியும் நல்லூழின் ஆணையால் எதிர்ப்பட்டு உள்ளப் புணர்ச்சியிற் கூடி ஒழுகினராயினும், தலைமகளுடைய பெற்றோர் உடன்பாடின்றி அவ்விருவரும் மனைவாழ்க்கையை மேற்கொள்ள இயலாது. ஆகவே, ஒருவரையொருவர் பிரியாது வாழ்தற்குரிய உள்ளத்துறுதியை உலகத்தார் அறிய

---

7. கற்பியல் - நூற். 2 (இளம்.)
8. செய்யுளியல் - நூற். 179 (இளம்.)
9. கற்பியல் - நூற்பா 1.

வெளிப்படுத்தும் நியதிபாகிய வதுவைச் சடங்குடன் தலை மகளை மணந்துகொள்ளுதல் மனைவாழ்க்கைக்கு இன்றியமை யாத சிறப்புடைய நிகழ்ச்சியாக அமைந்தது. இவ்வாறு உள்ளப்புணர்ச்சியளவில் உரிமைபூண்டொழுகிய தலைவனும் தலைவியும், உலகத்தார் அறிய மனையறம் நிகழ்த்துதற்கு உரிமை செய்தளிக்கும் செயல் முறையே பண்டைத் தமிழரின் திருமணச் சடங்காகும். இதனை ஆசிரியர் தொல் காப்பியர் 'கரணம்' என்ற சொல்லால் வழங்குவர்.

**கற்பு - விளக்கம் :** கணவனைவிடச் சிறந்த தெய்வம் மனை விக்கு இல்லை என்றும், அவனை இன்னவாறு வழிபடுதல் வேண்டுமெனவும், தலைமகளுக்குப் பெற்றோர் கற்பிக்கின்ற னர். அந்தணர், சான்றோர், அருந்தவத்தோர், விருந்தினர் முதலியவர்பால் இன்னவாறு நடந்துகொள்ளுதல் வேண்டும் என்று தலைமகளுக்குத் தலைவன் கற்பிக்கின்றான். இதனைத் தொல்காப்பியர்,

'அந்தணர் திறத்தும் சான்றோர் தேஎத்தும்
அந்தமில் சிறப்பில் பிறர்பிறர் திறத்தினும்
ஒழுக்கங் காட்டிய குறிப்பினும்'[10]

என்று குறிப்பிடுவர்.

"நின் மனைவியை இவ்வாறு பாதுகாப்பாயாக!" என்று தலைவனுக்கும், "நின் கணவனுக்கு இவ்வாறு பணிசெய்து ஒழுகுவாயாக!" எனத் தலைவிக்கும் சான்றோர் கற்பிக்கின்ற னர். இது வதுவைச் சடங்காகிய 'கரணம்' நிகழுங்கால் கற்பிக்கப்பெறும். இது நச்சினார்க்கினியரின் விளக்கம். இறுதியில் குறிப்பிட்டதை அவர், "தலைவனும் களவின்கண் ஒரையும் நாளும் தீதென்று அதனைத் துறந்தொழுகினாற் போல ஒழுகாது, ஒத்தினும் கரணத்தினும் யாத்த சிறப்பிலக் கணங்களைக் கற்பித்துக்கொண்டு துறவறத்திற் செல்லுந் துணையும் இல்லறம் நிகழ்த்துதலிற் கற்பாயிற்று" என்று கூறுவர்.[11]

10. கற்பியல் - நூற். 5 (வரி 15 - 17)
11. கற்பியல் - நூற்பா 1-இன் உரை (நச்.)

தலைவன் தலைவியராகிய இருவரும் ஒருவரையொருவர் இன்றியமையாதவராய் மணந்து வாழுங்கால் தலைமகளது மனத்தின்கண் அமைந்த கலங்கா நிலைமையே கற்பு எனப் படும். வள்ளுவப்பெருந்தகையும் "கற்பென்னும் திண்மை"[12] என்று உரைத்தமை காண்க. இத்தகைய மன உறுதியை உலகினருக்குப் புலப்படுத்துவதுதான் திருமணச் சடங்காகிய கரணம் என்பது; காதலர் இருவரும் பிரிவின் றியைந்த நட்புடையார் என்பதனை வலியுறுத்துவது. இந்நியதி - மரபு - பிழைபடுமாயின் அவ்விருவரது வாழ்க்கை யில் சாதலையொத்த பெருந்துன்பம் நேரிடும் என்பது திண் ணம். 'கரணம் பிழைக்கில் மரணம் பயக்கும்' என்று உலகிஞே ரிடம் வழங்கும் பழமொழியும் இதனை வலியுறுத்துவதைக் காண்க.

**திருமண ஏற்பாடு:** 'வரைபொருள் பிரிவின்' பின்னர் பெண் பேசுவித்தல் நிகழும் என்று மேலே கூறினேமன்றோ? பெண்பேசுங்கால் தலைவனுடைய சுற்றத்தார்களேயன்றி அறநிலைசான்ற வேறு சான்றோர்களும் இருப்பர். இதனை, "தலைமகன் தமர் பார்ப்பார் சான்றோரை முன்னிட்டு அருங் கலங்களோடு வரைதற்குப் புகுவர்" என்னும் இறையனர் களவியலுரையால்[13] துணியலாம். அங்ஙனம் பேசச் செல் லுங்கால் மண முரசொலிக்கச் செல்வர். அவ்வமயம் தலைவி யின் சுற்றத்தாரும் தமது இல்லத்தைத் தோரணம் முதலியன நாற்றிக் கவின்படுத்திக் பொற்குடங்களும் ஐந்தலை விளக்கு களும் பிறவும் நிரல்பட அமைத்து, எதிர் முரசொலித்துத் தலை வன் சுற்றத்தாரை வரவேற்பர். இதனை ஒரு துறைப்பொரு ளாகவே கூறுவர் மணிவாசகப்பெருமான்.

பூரண பொற்குடம் வைக்க மணிமுத்தம்
பொன்பொதிந்த
தோரண நீடுக தூரியம் ஆர்க்கதொன்
மாலயற்கும்

12. குறள் – 24.
13. இறை-களவியல்-நூற்பா 29-இன் உரை.

காரணன் ஏரணி கண்ணுத லோன்கடல்
நில்லையன்ன
வாரண வும்முலை மன்றலென் றேங்கு
மணமுரசே.[14]

என்ற திருக்கோவையரின் அழகிய பாடலில் இத்துறை வந்தமை காண்க. மேற்கூறியவாறு வரவேற்றபின், அவர்கள் விரும்புமாறு பணிந்தொழுகி அவரவர்க்கு வேண்டும் இருக்கையும் சிற்றுண்டி முதலாயினவும் இனிது கொடுத்தூட்டி அளவளாவுவர்.

அனைத்தும் இனிமையாய் நடந்தேறியபின் எல்லோரும் ஓரழகிய கூடத்தில் ஒருங்கு அமர்ந்து, எல்லாம்வல்ல தம் வழிபடு கடவுளை அன்பினல் உருகிவழுத்தி, வந்தவர் கருத்தறிந்து இருந்தவர் பெண்கொடுத்துத் திருமணம் நடப்பித்தற்கு ஒரே நினைவாய் உளம் நேர்வர். ஊழ்வலியால் நடைபெற்ற களவினை நுணுகியறியும் ஒள்ளறிவுசாலா வெள்ளறிவுடையராக இருக்கும் தலைவியின் தமர் 'பரியம்' வேண்டும் என்று கூறுவர்; அவர் விரும்பியவாறு அதனை நிரம்பக் கொடுக்காவிட்டால் 'நாள் பார்த்து வரல் வேண்டும்', 'புள்திருத்தி (சகுனம் பார்த்து) வரல் வேண்டும்' என்றும், பிறவாறும் கூறி பெண் கொடுக்க இசையார். இன்னும் அவர் 'நாங்கள் எங்கள் மகளுக்கு இந்த யாண்டில் திருமணம் செய்ய இயலாது; இனி வரும் யாண்டில்தான் அதனை முடித்தல் வேண்டும்' என்று கூறியும் மறுப்பர். இதனை,

'வரைவெதிர் கொள்ளாது தமரவண் மறுப்பினும்'[15]

என்னும் இறையனர் கூற்றாலும் 'பரியஞ் சிறியதென்ருனும், இளையளால் என்ருனும், 'நாளும் புள்ளும் திருத்தி வாரீரோ' என்ருனும் அங்ஙனம் மறுத்தார் என்ப' என்னும் உரையாலும் அறியலாம்[16]. இத்திருமண வாணிகம் இன்றும் நடக்கின்றது அன்ரே? அறிவும் அறியாமையும் என்றும் விரவியிருத்தல் உலக இயல்பு என்ற உண்மையை நாம் அறிவோமாயின் இக்காரணம் நமக்குத் தெளிவாகப் புலனுகும்.

14. திருக்கோவை-296.
15. இறை. களவி - நூற். 29.
16. இறை. கள. நூற்பா-29-இன் உரை.

ஒள்ளறிவுடையாரும் அங்ஙனம் கூறி மறுப்பாராயின், அவரெல்லாரும் அங்ஙனம் உண்மையிற் கூறி மறுப்பாரல்லர். மற்று, அருமை புலப்படுத்துவதற்காகவே மறுத்துரைத்து அகற்றி அணுகுவிப்பர். "தலைமகன் தமர் பார்ப்பார் சான்றோரை முன்னிட்டு அருங்கலங்களோடு வரைதற்குப் புகுவர்; புக்கவிடத்து ஒருகாலைக்கு மறுப்பர்; பிறபோகாக் குமரியை உடையார் போலக் கதுமென நொந்திடாரன்றே!" என்று ஓரிடத்தும், "தலைமகன் பார்ப்பாரை முன்னிட்டு அருங்கலங்களோடு வரைவு வேண்டி விட் விடத்துத் தந்தையும் தன்னையன் மாரும் வரைவு மறுத்தார்; மறுப்பார் சூழ்தலும் அருகுதலும் உடைமையான், நூற்றியாட்டைக் கருமம் நூற்றவரோடு எண்ணிச் செய்யப்படுமாகலாற் சூழப்படும். இனிக், 'கண்டீரே, தம் மகளை வேண்டுவாரைப் பார்த்திருந்தாராகாதே, நாம் இந்நூற்றிடைக் கரும நூற்றவரே, இவர்களிடை மகட்பெறுவார் யார்?' எனவும், 'பெறுதற்கு அருமையுடைத்து' எனவும் கருத அருகுப. இனிக் 'கண்டீரே, தம் மகளை வேண்டுவார் உரைப்பனவும் பொய்போலும்' வேண்டுதற்கு இடையின்றியே பெற்றாராயின், 'இவ்வகை விரைந்து கொடுத்தாரால்' என்னும் புறவுரை நோக்கியும் அருகுப. அல்லதூஉம், இறப்பச் சிறியாரும், தம்மின் மிக்கார், மகள் வேண்டிச் சென்றவிடத்தும் அருகுப. இனி, உலகியலானும் அருகுப," என்று பிறிதோரிடத்தும் இறையனார் களவியலில் கூறப்பட்டிருப்பதனால் இதனைத் துணியலாம்.[17]

மேற்கூறியவாறு உளம் சேர்ந்த பின்னர் திருமணம் நிகழ்தற்குரிய நாளும் நாழிகையும் ஆங்குள்ள அருட்பெரியரால் குறிக்கப்பெறும். அந்நாளும் நாழிகையும் வருந்துணையும் இருவீட்டாரும் ஒரே நெஞ்சாய் ஒரு பெரிய மகிழ்ச்சிப் பெருக்கில் திளைப்பவர்கள்போல் இருந்து திருமண நிகழ்ச்சிக்கு வேண்டிய அனைத்தையும் ஒழுங்குபட நிறைவேற்றிக் கொண்டிருப்பர். ஒவ்வொரு கணமும் அவர்கட்கு இன்பத் தேன் சொட்டும் நற்பொழுதுகளாகத் தோன்றும்.

17. இறை. களவியல்-நூற்பா 28-இன் உரை.

**திருமண நிகழ்ச்சி :** திருமண நாளும் நாழிகையும் நெருங்க நெருங்கத் தலைவியின் இல்லம் ஓரழகிய திருமணக் கூடமாக அமைந்து இனியதாய்த் திகழும். இன்னிசைமிக்க மணமுரசுகள் பலப்பலவாய் நின்று ஓயாது ஒலிக்கும்.[18] மண நாட்கு முதல் நாள் மணமிக்க பூந்தொடைகள், சுவைமிக்க பழவகைகள், நறுஞ்சுவைமிக்க தின்பண்டங்கள், நறுமணக் கலவைகள் முதலியவற்றுடன் தலைவனையும் அவன் சுற்றத் தாரையும் கலந்து வரவேற்றுப் பெரிதும் மகிழ்வர்.

திருமணநாட்காலையில் மணமக்களைக் கண்டார் கண்ணை யும் கருத்தையும் கவருமாறு ஒப்பனை செய்து, திருமணக் கூடத்தில் இட்டுக்கொண்டு வந்து அமர்த்துவர். மூத்தோர் யாவரும் இவ்வாறு இருவர் கூடுமாறு முதலிலிருந்தே உறு பெருந்துணையாய் நின்ற இறைவனை நினைத்து வழுத்துவர்; மணமக்களை நெஞ்சார வாழ்த்துவர்; பல்வேறு சடங்குகள் நடைபெறும். இச்சடங்குகள் எவ்வெவ்வாறு பண்டு நிகழ்த் தப்பெற்றன என்பதற்கு அகம் - 86, 136 செய்யுட்களில் ஒரு சில விவரங்கள் காணப்பெறுகின்றன. தொல்காப்பியம் இவற்றைப் பொதுவாகக் 'கரணம்' என்று குறிப்பிடுகின்றது.

**மணவினைக் காலம் :** மழை, மிகுளிர், மிகுபனி இல்லாத காலமே மணவினைக்கு ஏற்றது. தவிர, உழவர்கட்கு அக் காலத்தில் ஓய்வும் கிடைக்கும். தை முதல் ஆவணி வரை தான் இந்த ஓய்வு கிட்டும்; உழவர்களின் பொருளாதார நிலையும் நன்னிலையில் இருக்கும். பெரும்பாலும், மணம் வளர் பிறையிலேயே நடைபெறும்.

> 'கனையிருள் அகன்ற கவின்பெறு காலைக்
> கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கள்
> கேடில் விழுப்புகழ் நாள்தலை வந்தென'[19]
>
> 'அங்கண் இருவிசும்பு விளங்கத் திங்கள்
> சகடம் வேண்டிய துகள்தீர் கூட்டத்து'[20]

என்ற செய்யுட்பகுதிகளால் இதனை அறியலாம். 'கனை

18. இன்று ஒலிபெருக்கிகளை வைத்து 'அபசுரப்' பாடல்களைப் பாடச்செய்து நன்னாளைக் கெடுத்தொழிப்பர் சில அறிவிலார்.
19. அகம்-86. 20 டை-136.

இருள் அகன்ற கவின்பெறு காலை' என்பது, வளர்பிறைக் காலம். நாள் என்பது நட்சத்திரம். சகடம் என்பது உரோ கிணி நாள் ; வளர்பிறையிலேயே திங்கள் உரோகிணியைக் கூடும். எனவே, வளர்பிறையாகிய முன்பனிக் காலமே மண வினைக்கு ஏற்ற காலமாதலை அறிக.

**திருமணம் நிகழும் இடம் :** தலைவியின் வீட்டார் மகட் கொடைக்கு இசைந்த பின்னர் தலைவியின் வீட்டிலேயே திருமணம் நடைபெற்றது. இதனை மேற்குறிப்பிட்ட 'பூரண பொற்குடம் வைக்க' என்ற திருச்சிற்றம்பலக்கோவைப் பாட்டால் அறியலாம். மணிமேகலை, சீவகசிந்தாமணி, நைடதம், இராமாயணம், பாரதம், திருவிளையாடற்புராணம் முதலிய இலக்கியங்களில் கூறப்பெறும் திருமண நிகழ்ச்சிக் குறிப்புக்களும் திருமணம் பெண் வீட்டில் நடைபெற்றதையே உறுதிப்படுத்துகின்றன. இன்றும் செல்வர் வீட்டுத் திருமணம் பெரும்பாலும் மணமகள் வீட்டிலேயே நடை பெற்று வருதல் உலக இயல்பாக இருத்தலை நாம் காண் கின்றேம்.

**கட்டுப்பாட்டு வாழ்க்கை :** பழங்காலத்தில் மேற்கூறிய வாறு தம் வாழ்க்கைத் துணைவரைத் தாமே தேர்ந்தெடுத்து வாழ்க்கை நடத்தி வருங்கால் காலக் கடப்பில் ஒரு சிலர் நெறி தவறி நடக்கத் தலைப்பட்டனர். காதலித்த மங்கையைக் காதலிக்கவில்லை என்று கூறினர். களவொழுக்கம் ஒழுகி வாழ்க்கை நடத்திய பிறகு துணைவியைக் கைவிடவும் செய் தனர். அதுகண்ட குலப்பெரியோர்கள் இப்பொல்லாத நோய் பலரிடையேயும் பரவக் கூடுமென்று அஞ்சி ஒருவிதக் கட்டுப்பாட்டை ஏற்படுத்தினர். பலர் முன்னிலையில் தம் பெண்ணைப் பெற்றேர் உடன்பட்டுக் கொடுக்க வேண்டும் என்ற ஒரு முறையை உண்டாக்கினர். இதைத்தான் தொல் காப்பியர், "கொடைக்குரி மரபினேர் கொடுப்பக் கொள்வது" என்று கற்பியல் முதல் நூற்பாவில் குறிப்பிட்டார். இக் கட்டுப்பாட்டின் படியே பின்னர் வந்த எல்லாத் தமிழர்களும் ஒழுகி வந்தனர். இதையே,

> பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
> ஐயர் யாத்தனர் கரணம் என்ப.21
> [பொய்-செய்த ஒன்றினைச் செய்திலேன் என்றல்; வழு-தவறு; அஃதாவது, ஒழுக்கத்து இழுக்குதல்; கரணம்-மணவினை; ஐயர் - குலப் பெரியோர்.]

என்று கூறினர் ஆசிரியர் தொல்காப்பியர். இதற்கு இளம் பூரணர், "பொய்யாவது, செய்ததனை மறைத்தல். வழுவாவது, செய்ததன்கண் முடிய நில்லாது தப்பியொழுகுதல். கரணத்தோடு முடிந்தகாலையின் அவை இரண்டும் நிகழாவாமாதலால் கரணம் வேண்டியதாயிற்று" என்று உரை கூறுவர்.

குலப்பெரியோர்கள் ஏற்படுத்திய 'மணவினை'தான் 'கரணம்' என ஆசிரியரால் சுட்டப்பெற்றது. அதுதான் தலைமகளின் பெற்றோர் கொடுப்பக் கொள்வது. அதை ஆசிரியர் பிறர்வாய்க் கேள்வியாக, நூல் வழக்காகக் கேட்டமையின் 'என்ப' என்று குறித்தனர். வடநூல் வழக்கு பற்றி நச்சினார்க்கினியர் 'கரணம்' என்பதற்குக் கூறும் பொருளையும் அஃதுடன் தொடர்பு கொண்ட வடநூற் கருத்துக்களையும் இக்காலத்துத் தமிழறிஞர்கள் ஒப்புக்கொள்வதில்லை.

மேற்குறிப்பிட்ட மணவினையில் எவ்வகைச் சடங்கும் இல்லை. மணமக்கள் பெற்றோர் உடன்பட வெளிப்படையாக இல்லறம் நடத்துதலே அம் மணவினையாகும். இக்கட்டுப்பாடு தொல்காப்பியருக்கு நெடுங்காலத்திற்கு முன்னர் ஏற்பட்டதாகும். இம்முறையே கடைச்சங்க காலம் வரை நடைபெற்றதாகவும், அதன் பின்னரே மேற்குறிப்பிட்ட ஒரு வகை மணவினை வந்திருக்க வேண்டும் என்றும் இக்கால அறிஞர்கள் கருதுவர். விரிவை அறிய விரும்புவோர் உரிய நூல்களில் கண்டு தெளிவார்களாக.

தொல்காப்பியருக்கு நெடுங்காலத்திற்கு முன்னரே ஐயர் கரணம் யாத்திருப்பதால், அதற்கு முன்னிருந்த தமிழர் களவும் கற்புமாகிய வாழ்க்கை நெறியைக் கடைப்பிடித்து வந்தமை புலனாகின்றது. இது தமிழர் நாகரிகத்தின் கொடுமுடியாக விளங்குகின்றது.

---

21. கற்பியல் - நூ. 4.

இந்த மணவினை ஐயர் கரணம் யாத்த காலந்தொட்டு அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நால்வகைப் பட்ட தமிழ் வகுப்பினருக்கும் ஒன்றாக நடந்து வந்தது. இந் நால்வரிடையேயும் 'கொண்டு கொடுத்து' வந்த முறை வழங்கி வந்தது. நாளடைவில் முதல் மூவரும் வேளாள டருன் கொண்டுகொடுக்கும் வழக்கம் நின்று போயிற்று. முதல் மூவரும் தம்மொடு தாமே கொண்டு கொடுப்பாராயி னர். வேளாளர் தங்களுக்குள் கொண்டு கொடுத்து வந்தனர்;

மேலோர் மூவர்க்கும் புணர்ந்த கரணம்
கீழோர்க் காகிய காலமும் உண்டே.[22]

என்று தொல்காப்பியரும் நூற்பா செய்தனர். மேலோர் என்றது முதல் மூவரை; கீழோர் என்பது இறுதியில் குறிப் பிட்டவரை. 'காலமும் உண்டே' என்ற தொடரால் தொல் காப்பியருக்கு நெடுங்காலத்திற்கு முன் இவ்வழக்கம் இருந் தது என்பது பெறப்படுகின்றது.

மேலோர் மூவர்க்கும் கீழோர்க்கும் மணவேற்றுமை ஏற் படா முன் எல்லாத் தமிழ் மக்களும் ஒன்றாக மணந்து கொண்டு வாழ்ந்து வந்த காலம் திரும்பவும் வருமாயின், சமூகத்தில் இன்று நிலவும் பல்வேறு கோளாறுகள் நீங்கும். சாதிக் கட்டுப்பாட்டாலும் வரதட்சிணை முறையாலும் நசித்துச் செத்துக்கொண்டு கிடக்கும் தமிழர் சமுதாயம் ஓரளவு உய்யும். வரதட்சிணை முறையை ஒழிக்கும் சட்டம் இயற்றப்பெற்றாலும், அதனால் நெடுங்காலமாகப் புரையோடி வந்த சமுதாயம் உடனே திருந்தும் என்று சொல்வதற்கில்லை. மக்கள் கல்வியறிவாலும், பகுத்தறிவாலும், சமூகத் தொண் டர்களின் பணியாலும் நாளடைவில் திருந்த வேண்டும். அந்த நற்காலம் இனித் தமிழர்க்கு என்று வாய்க்கப் பெறுமோ?

---

22. கற்பியல் - நூற். 3.

# 15. இல்லறவொழுக்கம்

தலைவனும் தலைவியும் பல்லோர் அறியத் திருமணம் புரிந்துகொண்டு வாழ்க்கை நடத்துதலே இல்லறவொழுக்கம் என்று ஆன்றோர் குறிப்பிட்டுள்ளனர். ஆசிரியர் தொல்காப்பியர் கற்பு அல்லது இல்லறவொழுக்கத்தை,

மறைவெளிப் படுதலும் தமரிற் பெறுதலும்
இவைமுத லாகிய இயல்நெறி பிழையாது
மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்
பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே.[1]

என்று குறிப்பர். களவு வெளிப்பட்ட பின் தமர் கொடுப்பக் கொள்ளும் மணவினை நிறைவேறியபின் மலிவு, புலவி, ஊடல், உணர்வு, பிரிவு ஆகிய ஐந்து கூறுகளும் அடங்கிய பகுதியே கற்பென வழங்கப்பெறுவது. கற்பு என்பதுதான் இல்லறவொழுக்கமாகும். தொல்காப்பியத்தில் ‘கற்பு’ என்று வரும் இடங்களையெல்லாம் ஆராயின்[2] அது ‘இலலறம்’ என்ற பொருளையே குறித்தல் அறியலாம். கற்பு என்பதற்கு ‘மகளிர்க்கு மாந்தர்மாட்டு நிகழும் மன நிகழ்ச்சி’ என்று இளம்பூரணரும், ‘தன் கணவனைத் தெய்வமென்று உணர்வதொரு மேற்கோள்’ என்று நச்சினர்க்கினியரும் கூறுவர்.[3] இனி, ஆசிரியர் இல்லறவொழுக்கத்தில் கூறும் பகுதிகளை நோக்குவோம்.

---

1. செய்யுளி. - நூற். 179 (இளம்.)

2. அகத்திணை - நூற்பா 44; களவியல் - நூற்பா 1, 23, 51; கற்பியல். நூற்பா 1, 11, 21; பொருளியல் - நூற்பா - 32, 37; 51.

3. பொருளியல் - நூற். 51 (இளம். உரை). பொருளியல் - நூற். 53 (நச். உரை.)

## முதலாவது : மலிவு

மலிவு என்பது, இல்லொழுக்கமும் புணர்ச்சியும் முதலாயவற்ருல் மகிழ்தல். அஃதாவது களவு முற்றி மணந்து கொண்ட காதலர் மனக்குறை தீரக் கூடிக் கலந்து இன்புற்று வாழ்தல். மலிவு - மகிழ்ச்சி. இம்மலிவுக் காலத்தே தலைவனும் தலைவியும் களவுக்காலத்தே நிகழ்ந்தவற்றை ஒருவர் மற்றவரோடு கூறி இன்புறுவர். இப்பகுதியில் நிகழும் செய்திகளைத் தொல்காப்பியர் “கரணத்தின் அமைந்து முடிந்தகாலை” என்ற கற்பியல் நூற்பாவிலும்,[4] “அவனறிவாற்ற அறிவும்” என்ற கற்பியல் நூற்பாவிலும்[5] தொகுத்துக் கூறியுள்ளார். இந்த நூற்பாக்கள் முறையே தலைவனுக்கும் தலைவிக்கும் கூற்றுக்கள் நிகழும் இடத்தைக் கூறுபவை. இவற்றில் காணும் செய்திகள் சில தொல்காப்பியர் காலத்து வழங்கிய இல்லற முறைகளை விளக்குகின்றன.

அவற்றுள்,

> ‘கரணத்தின் அமைந்து முடிந்த காலை
> நெஞ்சுதளை அவிழ்ந்த புணர்ச்சி’

என்பது ஒன்று.

தமிழர் மணமுறையில் நிகழ்தற்குரிய கரணங்கள் இவை யென்பது தம் காலத்தில் வாழ்ந்த எல்லோர்க்கும் நன்கு தெரியுமாதலின் அவற்றை ஆசிரியர் தொல்காப்பியனுர் தம் நூலில் விரித்துக் கூறவில்லை. ஆயினும், தொன்றுதொட்டுத் தமிழர்கள் கொண்டொழுகிய திருமணச் சடங்குகள் சிலவற்றை அகம்-86, 136 பாடல்களால் ஒருவாறு உணரலாம். இதற்கு நச்சினர்க்கினியர் கூறும் ‘வேள்வியாசான் காட்டிய முறையே அங்கி சான்ருக நிகழும் சடங்குமுறை’ தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் காணப்பெறவில்லை. எனவே, ஆசிரியர் மேற்கொண்ட திருமண முறைக்கும் தமிழர் கொண்டொழுகிய திருமணச் சடங்கு முறைக்கும் பெரிதும் வேறுபாடுண்டு என்பது அறிதற்பாலது. இதனை,

---

4. நூற்பா-5. 5. நூற்பா - 6.

'ஒத்துடை யந்தணன் எரிவலஞ் செய்வான்போல்'[6]

என்ற கலித்தொகைச் சொற்றெடராலும் உறுதிப்படுத்த லாம். இதில் புரிநூல் அந்தணராகிய வேதியரது வேள்விச் சடங்கு உவமையாக எடுத்துரைக்கப்பெறுகின்றது. இதனை ஊன்றி நோக்கின் இங்ஙனம் எரிவலம் வருதல் ஒத்துடை யந்தணராலன்றி ஏனைய தமிழ் மக்களால் மேற்கொள்ளப் பெறாத சடங்கென்பது நன்கு புலனாகும். ஆனால், இளம் பூரணர் 'கரணத்தின் அமைந்து முடிந்தகாலை' என்பதற்கு, 'ஆசான் புணர்ந்த கரணத்தினால் வதுவை முடிந்தபின்' என்று கூறுவர். இவர் தமிழர் முறைப்படி நடைபெற்ற வதுவை மணத்தைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

**நெஞ்சுதளை அவிழ்ந்த புணர்ச்சி :** தலைவியைத் தலைவன் கண்ணுற்ற ஞான்று தலைவன்மாட்டு உளதாகிய பெருமை யும் உரனும் தலைவிமாட்டு உளதாகிய அச்சமும் நாணும் மடனும் ஏதுவாக இயற்கைப்புணர்ச்சி இடையீடுபட்டுழி வேட்கை தணியாது வரைந்தெய்துங்காறும் இருவர்மாட்டும் கட்டுண்டு நின்ற நெஞ்சம் கட்டுவிடப் பெறுதல். இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைவன் அலரறிவுறுக்கப்பட்டு நீங்கி வரைந் தெய்துங்காறும் புணர்ச்சி வேட்கையாற் செல்கின்ற நெஞ்சினை இருவரும் வேட்கை தோற்றாமல் தளைக்கப்பட்ட தனைத் 'தளை' என்றும் கூறலாம். "உழுந்துதலைப் பெய்த" என்ற அகப்பாட்டில்,[7]

'முயங்கல் விருப்பொடு முகம்புதை திறப்ப
அஞ்சினள் உயிர்த்த காலை'

என்பதனால் இயற்கைப்புணர்ச்சியின்மையும்,

'அகமலி உவகையள் ஆகி முகன் இகுத்து
ஒய்யென இறைஞ்சி'

என்பதனால் உள்ளப்புணர்ச்சி யுண்மையும் அறியலாம். களவொழுக்கப் புணர்ச்சி போல் மனத்தில் அச்சமின்றி செய லில் விரைவின்றி நிகழும் கற்புப் புணர்ச்சியை அடியிற்

6. மருதக் கலி-4 (வரி - 5).
7. அகம். - 86.

காணும் குறுந்தொகைப் பாடலில் காணலாம்.

'விரிதிரைப் பெருங்கடல் வளைஇய உலகமும்
அரிதுபெறு சிறப்பிற் புத்தேள் நாடும்
இரண்டும் தூக்கிற் சீர்சா லாவே;
பூப்போல் உண்கண் பொன்போல் மேனி
மாண்வரி அல்குல் குறுமகள்
தோள்மாறு படூஉம் வைகலோ டெமக்கே'[8]

[புத்தேள் - தேவர் உலகம்; தூக்கின் - ஒருங்கு வைத்து ஆராய்ந்தால்; சீர் - கனம்; சாலா - ஒவ்வா ; தோள் மாறுபடுதல் - ஒருவர் இடத்தோள் மற்றவர் வலத்தோளிலும், ஒருவர் வலத்தோள் மற்றவர் இடத்தோளிலும் பொருந்தத் தழுவுதல் ]

இப்பாடலில், தலைவியுடன் இன்புற்று இல்லறம் நடத்தும் தலைவன், அத்தலைவியினால் வரும் இன்பம் எப்பொருளினும் சிறப்புடைய தென்று தோழி முதலியோர் அறியும்படி கூறுவதாக வந்துள்ளதைக் காண்க. இது நெஞ்சுதளை யவிழ்ந்த புணர்ச்சியாகும்.

'அல்லல் தீர ஆர்வமொ டளைஇச்
சொல்லுறு பொருள்'

என்பது இரண்டு.

தலைவி தன் துன்பந்தீர ஆர்வத்தோடு பொருந்தச் சொல்லப்பட்ட பொருண்மை என்று இதற்குப் பொருள் கூறுவர் இளம்பூரணர்: இஃதாவது, களவுக்காலத்தில் வருந்திய வருத்தம் தீரத் தனது காதல் மிகுதி தோன்றச் சொல்லும் பொருள் இது.

யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே.[9]

[யாய் - என் தாய்; ஞாய் நின் தாய்; எந்தை - என் தந்தை; நுந்தை - நின் தந்தை; எவ்வழி - எவ்வாறு; செம்புலம் - செம்மண் நிலம்.]

8. குறுந். - 101.
9. குறுந். - 40.

களவுக்காலத்து வருந்திய வருத்தம் தீரத் தன் காதல் மிகுதி தோன்ற இனித் தம்மிடையே பிரிவு நேராது என்று தலைவன் புலப்படுத்தித் தலைவியின் அச்சத்தை நீக்கியதைக் காண்க. நெஞ்சம் தம்மிற் கலந்ததனால் இப்புணர்ச்சி தெய்வத்தாலாயிற்று எனத் தலைவன் தெருட்டியதும் உணரத் தக்கது.

"சொல்லென
ஏனது சுவைப்பினும் நீகை தொட்டது
வானோர் அமிழ்தம் புரையுமால் எமக்கென
அடிசிலும் பூவும் தொடுதல்"

என்பது மூன்று.

தலைவன் யாதானும் ஒன்றை நுகருங்கால் தலைவியை நோக்கி, 'நீ கையால் தொட்டது வானோர் அமிழ்தத்தை ஒக்கின்றதே! அதற்குக் காரணம் யாதோ?' என்று கேட்பான். இவ்வாறு புனைந்துரைத்தல் இல்வாழ்க்கையில் நிகழும் என்பதை இலக்கியங்கள் வாயிலாக அறியலாம்.

'வேம்பின் பைங்காய்என் தோழி தரினே
தேம்பூங் கட்டி என்றனிர்'10

இஃது ஊடியிருந்த தலைவியின் உடன்பாடு பெறுவதற்குத் துணைபுரியும் வண்ணம் தலைவன் தோழியை வேண்டிய பொழுது அவள் கூறியது. இங்ஙனமே, தலைவனும் தலைவியும் இல்லறம் நடத்தும் திறத்தை அவர் மனைக்குச் சென்று வந்த செவிலி நற்றாய்க்குக் கூறுகின்றாள்.

முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅ துடீஇக்
குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்
தான்துழந் தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன் (று) ஒண்ணுதல் முகனே.11

[முளிதயிர் - முற்றிய தயிர்; கழுவுறு கலிங்கம் - துடைத்துக் கொண்ட ஆடை; குய்ப்புகை - தாளிப்பின் புகை; கமழ - மணக்க; துழந்து - துழாவி; அட்ட - சமைத்த; தீம் புளிப்பாகர் - இனிய புளிப்பையுடைய குழம்பு; ஒள் நுதல் - தலைவி.]

---

10. குறுந். - 196. 11. குறுந். - 167.

தலைவி சமைத்த புளிக்குழம்பைத் தலைவன் இனிதென்று கூறி உண்கின்றான். தலைவி அகம் மகிழ்கின்றாள். இந்த மகிழ்ச்சியை அவளது முகம் காட்டுகின்றது. இயல்பாகவே பொலிவு பெற்ற நுதல் மகிழ்ச்சியால் பின்னும் பொலிவு பெறு கின்றது. அம்மகிழ்ச்சியை மிகுதியாக வெளிப்படுத்தாமல் 'நுண்ணிதின்' மகிழ்கின்றாள்.

"அந்தணர் திறத்தும் சான்றோர் தேஎத்தும்
அந்தமில் சிறப்பிற் பிறர்பிறர் திறத்தினும்
ஒழுக்கம் காட்டிய குறிப்பு"

என்பது நான்கு.

துறவியர், பெரியோர், பெற்றோர், சுற்றம் முதலியோ ரிடம் இன்ன இன்னவாறு நடந்துகொள்ள வேண்டும் என் பதைத் தலைவன் தலைவிக்குக் கூறுவதுதான் இது. அன்னார் தலைவிக்குப் புதியவர்களாதலின் அவரவர் இயல்புக்கேற்ற வாறு தலைவி நடந்துகொள்ள வேண்டுமன்றோ? குடும்பத் தலைமைப் பொறுப்பேற்றுக்கொண்டுள்ள அவள், அக் குடும்பத் தொடர்புடையோர் இயல்பறிந்து கொள்ளுதல் இன்றியமையாததன்றோ? இத்துணை நுட்பமாக அறிந்து ஒழுகிய பண்டையோரின் இல்லற வாழ்க்கை வியந்து போற்றற்குரியது.

'அந்தரத் தெழுதிய எழுத்தின் மான
வந்த குற்றம் வழிகெட ஒழுகல்'

என்பது ஐந்து.

'களவுக்காலத்தில் ஒழுகிய ஒழுக்கக் குறைபாட்டான் நிகழ்ந்த குற்றத்தை ஆகாயத்து எழுதிய எழுத்து அழிவது போல அழியும்படி பிராயச்சித்தம் செய்து ஒழுகுதல்' என்பது இதன் பொருள். களவுக்காலத்து உண்டாய பாவ மாவது - தீண்டத்தகாத நாட்களிலும் தீய இராசி நாள்களி லும் தலைவன் தலைவியைக் கூடியது முதலியன. இதனைத் தொல்காப்பியரே,

மறைந்த ஒழுக்கத் தோரையும் நாளும்
துறந்த ஒழுக்கம் கிழவோற் கில்லை.[12]

12. களவியல்-நூற் 44. (நச்.)

என்று கூறியதனுல் உரையாசிரியர்களது குறிப்புக்களாலும் அறியலாம்.

‘நோன்மையும் பெருமையும் மெய்கொள அருளிப்
பன்னல் சான்ற வாயிலொடு பொருந்தித்
தன்னி னுகிய தகுதி’

என்பது ஆறு.

தலைவனுல் ‘உளதாகிய பொறையையும் கல்வி முதலிய பெருமையையும் உடைய மகவைத் தலைவி தன் வயிற்றகத்தே கொண்டிருப்பதனுல், ஆராய்ச்சி மிக்க அந்தணரோடு கூடிச் செய்யத்தகும் சடங்குகளைச் செய்யும் தகுதியைக் குறிக்கின்றது இது. தன்னினுகிப மெய் - கருப்பம். இதனுல் தொல்காப்பியனுர் காலத்தே தமிழர்கள் குழந்தை பிறந்ததும் சில சடங்குமுறைகளை மேற்கொண்டனர் என்பது பெறப் படுகின்றது. தலைவி கருப்பமுற்றுல் சுற்றம் முதலியோர்க்கு விருந்திட்டு மகிழும் வழக்கம் இன்று போல் அன்றும் இருந்து வந்தது என்பதை ஊகிக்கலாம்.

ஆற்றல் சான்ற தாமே யன்றியும்
நோற்றேர் மன்றநங் கேளிரவர் தகைமை
வட்டிகைப் படுஉம் திட்டம் ஏய்ப்ப
அரிமயிர் ஒழுகுநின் அவ்வயி றருளி
மறைநவில் ஒழுக்கம் செய்தும் என்றனர்;
துனிதீர் கிளவிநந் தவத்தினும்
நனிவாய்த் தனவால் முனிவர்தம் சொல்லே.

இதில், ‘நம் தலைவரேயன்றி சுற்றத்தாரும் நோற்று ஒரு கருப்பம் தங்கிய நினது வயிற்றைக் கண்டு உவந்தெனவும், அதற்கேற்ற சடங்கு செய்து மென்றுர் எனவும், முற்காலத்து நாம் கேட்ப நமக்குக் கூறிய முனிவர் சொல்லும் உண்மை யாயிற்றெனவும்’ கூறியவாறு காண்க. இது தோழி கூற்று.

‘புதல்வற் பயந்த புனிறுசேர் பொழுதில்
நெய்யணி மயக்கம் புரிந்தோள் நோக்கி
ஐயர் பாங்கினும் அமரர் சுட்டியும்
செய்பெருஞ் சிறப்பொடு சேர்தல்’

[புனிறு - வாலாமை: ஈன்றணிமை; ஐயர் - முனிவர்; அமரர் - தேவர்.]

என்பது ஏழு.

சிறப்பெய்தி மகப்பேறு பெற்று ஈன்றணிமை சேர்ந்த காலத்தில் எண்ணெய் ஆடும் தலைவியை முகமன் கூறுதற்கு முனிவர்மாட்டும் தேவர்கள் புதல்வனைப் பாதுகாத்தற் பொருட்டும் செய்யும் பெரிய சிறப்புக்களைக் குறிக்கின்றது இப்பகுதி. அப்பொழுது செய்யப்பெறும் சிறப்புக் களாவன: பிறந்த புதல்வன் முகம் காண்டல், ஐம்படை பூட்டுதல், பெயரிடுதல் முதலியன. குழந்தை பிறந்த பின் தாய் எண்ணெய் நீராடல், பாட்டன் பாட்டியார் குழந்தைக்குப் பெயரிடல், இரவலருக்குப் பரிசில் வழங்கல், குழந்தையைக் காக்க என்று இல்லுறை தெய்வ வழிபாடு செய்தல் முதலியவை இக்காலத்திலிருப்பதைப் போலவே அன்றும் இருந்தமை இதனால் அறியக்கிடக்கின்றது. இத் தகைய மலிவுபற்றிய பல செய்திகள் தொல்காப்பியத்தில் காணப் பெறுகின்றன.

**இரண்டாவது : புலவி, ஊடல், உணர்வு.**

இவை மூன்றும் ஒன்றையொன்று பிரிக்க முடியாத பொருள்களாகும். இவற்றுள், “புலவி அண்மைக்காலத் தது; ஊடல் அதனின் மிக்கது” என்பர் இளம்பூரணர்.[13] உணர்தல் என்பதை ‘ஊடலை அளவறிந்து நீங்குதல்’ என்று குறிப்பர் பரிமேலழகர்.[14] கற்பில் இவையே சிறந்த பகுதி யாகும்; உளவியல் நுட்பமும் செறிந்த பகுதியுமாகும். காதலர்களின் உள்ளக்கிடக்கையை அப்படியே படம் பிடித் துக் காட்டுவது இப்பகுதி. தலைவன் தலைவியர்க்கிடையே நிலவும் அன்பு எத்தகையது என்பதைக் காட்டவே நமது முன்னையோர் இப்பகுதியை அவ்வளவு மிகைபடக் கூறியுள்ள னர் என்பது கருதத் தக்கது.

துனியும் புலவியும் இல்லாயிற் காமம்
கனியும் கருக்காயும் அற்று.[15]

என்று கூறுவர் வள்ளுவப்பெருந்தகை. துனி என்பது,

13. கற்பியல் - நூற். 15-இன் (உரை)
14. குறள் - 1109-இன் (உரை)
15. குறள் - 1306.

முதிர்ந்த கலாம். புலவி என்பது, இளைய கலாம். புலவி - மன வேறுபாடு; அஃதாவது பொய்ச் சினம். இவை இரண்டும் நன்றாகப் பழுத்து அழுகிய பழத்திற்கும் இளங்காய்க்கும் (கருக்காய்) முறையே உவமைகளாயின. மேலும் அவர், காமத்துப்பாலில் தலைவன் வேறு மகளிரைக் கலந்தானாகக் கருதித் தலைவி ஊடியதாகக் கூறும் குறள்கள் யாவும், அவன் மாட்டு அச்செயல் நிகழ்ந்ததோ என்ற ஐயத்தால் தலைவி கருதிச் சொல்லியனவேயன்றி, பிற நூல்கள்போல், உண்மையில் நிகழ்ந்ததாகக் கொண்டு தலைவனை இழித்துக் கூறும் கருத்துடையன ஆகாமை உய்த்துணரத் தக்கது. வள்ளுவர் பெருமானும் இக்கருத்தினை,

> இல்லை தவறவர்க் காயினும் ஊடுதல்
> வல்ல தவரளிக்கு மாறு. [16]

என்று குறிப்பிட்டிருத்தலைக் காண்க. இங்ஙனமே அப்பெரியார் தாம் கூறப்புக்க காமப் பகுதியை எல்லா நாட்டவரும் ஏற்குமாறு தூய்மைப்படுத்திக் கூறியிருப்பதை எண்ணி மகிழ்க.

இனி, தொல்காப்பியர் தலைவிமாட்டு நிகழும் புலவி ஊடல் உணர்வுகளைப்பற்றிக் கூறுவதைக் காண்போம். தலைவன் தலைவியர்க்குள் புலவி முதலியன நிகழுங் காலத்தில் அவ்விருவர்பாலும் வாயில்களாக நின்று பேசுவதற்குரியார் பன்னிருவர் என்று முன்னரே குறிப்பிட்டுள்ளோம். அவர், தோழி, செவிலித்தாய், பார்ப்பான், பாங்கன், பாணன், (அவன் மனைவியாகிய) பாடினி, ஏவலாளர் (இளையோர்), விருந்தினர், கூத்தன், (அவன் மனைவியாகிய) விறலி, அறிவர், கண்டோர் ஆகியோர். இவர்களைத் துறவுக் காலத்துக்குரிய தூதுவராகக் கூறுவர் நச்சினார்க்கினியர்.[17] அங்ஙனம் கூறியிருப்பதால் யாதொரு சிறப்பும் இல்லை என்பதை ஊன்றி நோக்கினால் உணரலாம். இந்த வாயில்களோடு தலைவனது ஆற்றுமைதன்னையும் அவன் புதல்வனையும் சேர்த்துக் கூறலும் உண்டு.[18]

16. குறள் - 1321. 17. கற்பியல் - 52-இன் உரை (நச்)
18. கற்பியல் - 37-இன் உரை (நச்.).

வாயில்கள் கூற்று நிகழ்த்துவதில் சில வரையறைகள் உள. பெரும்பாலும் வாயில்கள் தலைவன், தலைவியரிருவரும் மனமகிழச் சொல் நிகழ்த்துதலையே நோக்கமுடையவரா யிருப்பர்.

> எல்லா வாயிலும் இருவர் தேஎத்தும்
> புல்லிய மகிழ்ச்சிப் பொருள என்ப. 19

என்பது தொல்காப்பியரின் விதி. இவர்கள் தலைவன்பால் குறை வேண்டும் பொழுது அவனை நேராகச் சுட்டிக் கூறுது பிறரைக் கூறுவது போலக் கூறுவர். அஃதாவது, படர்க்கை யால் ஒருவனைப் பற்றிப் பேசுவதைப் போலக் கூறுவர். அங்ஙனம் கூறுதல் **'முன்னிலைப் புறமொழி'** என வழங்கப்பெறும்.

> உண் கடன் வழிமொழிந் திரக்குங்கால் முகனுந்தாம்
> கொண்டது கொடுக்குங்கால் முகனும்வே
> றுதல் பண்டுமிவ் வுலகத் தியற்கை. 20

என்ற கலிப்பாட்டடிகளில் தோழியின் கூற்று முன்னிலைப் புறமொழியாக அமைந்துள்ளதைக் காண்க. 'கடன் வாங்குவோர் இரந்து வாங்கும்பொழுது கொண்டிருக்கும் முகமும் அதனைத் திருப்பிக் கொடுக்குங்கால் கொள்ளும் முகமும் வேறுபடுவது உலகத்தியற்கை' என்பது இதன் பொருள். 'முன்னர் வேட்கையுடைய நீ வேட்கைப் பருவத்தளாய தலைவியை இரந்து அவளது நலத்தினை நுகர்ந்து உன் வேட்கையைத் தீர்த்துக்கொண்டாய்; உன் வேட்கையைத் தணித்தவள் பின்னர் வேட்கைப் பருவத்தளாயவிடத்து உன்னை இரக்கும் பொழுது நீ சிறிதும் இரங்கலை' என்ற கருத்துடன் தோழியின் பேச்சு தலைமகனை நோக்கியவாறு காண்க. இன்று 'சாடைபேசுதல்' என்று இது வழங்குகின்றது. எந்நிலையிலும் வாயில்கள் : தலைவி முன்னர்த் தலைவனை இழித்துரையார்.

> மனைவி தலைத்தாட் கிழவோன் கொடுமை
> தம்முள வாதல் வாயில்கட் கில்லை. 21
>
> [தலைதாள் - தாட்டலை.]

---

19. கற்பியல் - நூற் 37 (இளம்.) 20. கலி - 22.
21. கற்பியல் - நூற் 24 (இளம்.)

என்பது தொல்காப்பியம். தலைவன் தலைவியர் அன்பில்லாக் கொடுஞ்சொற்களைக் கூறுமிடத்து அவ்விருவர்முன் நில்லாது ஒன்றன்மேல் வைத்துச் சிறைப்புறத்தாராகக் கூறுவர்.

> அன்புதலைப் பிரிந்த கிளவி தோன்றின்
> சிறைப்புறங் குறித்தன் றென்மனார் புலவர்.[22]

என்பது தொல்காப்பியர் கூறும் விதி. இந்தப் புலவியும் ஊடலும் தலைவற்கும் உண்டேனும், தலைவன் பரத்தமையால் தலைவிமாட்டே நிகழ்வதாகக் கூறுதல் புலனெறி வழக்கமாகும்.

தலைவிபால் வேறுபாடு உண்டாகும் பொழுது தலைவன் அவள் சினத்தைத் தணிவித்தற் பொருட்டு நெருங்கி வந்து, பணிதல் உண்டு.

> காமக் கடப்பினுள் பணிந்த கிளவி
> காணுங் காலைக் கிழவோற் குரித்தே
> வழிபடு கிழமை யவட்கிய லான.[23]

என்பது ஆசிரியர் இதற்குக் கூறும் விதியாகும். தலைவியும் தன் உள்ளத்தில் நிகழும் அன்பினை மறைத்துக்கொண்டு, வேறு பொருள் பயக்கும் சொற்களால் தன் பணிவை அவனுக்குக் காட்டுவள்.

> அருள்முந் துறுத்த அன்புமொழி கிளவி
> பொருள்பட மொழிதல் கிழவோட்கும் உரித்தே.[24]

என்ற தொல்காப்பியரின் விதியால் இதை அறியலாம். புலவிக் காலத்தில் இவ்வாறு மனைவி உயர்வும் கிழவோன் பணிவும் நிகழ்தல் முறையாகும் என்பது ஆசிரியர் கருத்து.

> மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
> நினையுங் காலைப் புலவியுள் உரிய[25]

என்பது அவர் கூறும் விதி. ஏன்? அவளும் தலைவிதானே!

---

22. கற்பியல் - நூற். 38 (இளம்.)
23. ஷை - நூற். 19 (இளம்.)
24. கற் - நூற். 20 (இளம்.)
25. பொருளியல் - நூற். 31 (இளம்.)

இன்றும் இம்முறை நடைமுறையில் உள்ளதை நாம் நன்கு அறிவோம். இதனை ஆசிரியர் மற்றோர் இடத்தில்,

'கொடுமை யொழுக்கம் கோடல் வேண்டி
அடிமேல் வீழ்ந்த கிழவன்'.[26]

என்று குறிப்பிடுவர். அக வாழ்வில் தலைவனும் தலைவியும் ஒருவரையொருவர் புகழ்ந்து கோடலும் உண்டு.

நிகழ்தகை மருங்கின் வேட்கை மிகுதியிற்
புகழ்தகை வரையார் கற்பி னுள்ளே. 27

என்பது இதற்கு உரிய விதி. இத்தகைய மனைவி உயர்வும் கிழவோன் பணிவும் கலித்தொகை 128 - ஆம் பாடலுள் தலைவி கூற்றாக மிக அழகாகச் சித்திரிக்கப் பெற்றுள்ளதைப் படித்து இன்புறுக.

புலவியும் ஊடலும் பெரும்பாலும் தலைவிக்குரியவேனும் சில சமயம் தலைவனிடமும் நிகழ்தல் உண்டு.

உணர்ப்புவரை இறப்பினும் செய்குறி பிழைப்பினும்
புலத்தலும் ஊடலும் கிழவோர்க் குரிய.[28]

தலைவி ஊடியவழி தலைவன் தேற்றத் தலைவி தேறும் எல்லையை இகந்தனளாயினும் (கற்பில்), அல்ல குறிப்பட்டதன் காரணமாக தலைவி வாராமை குறித்தும் (களவில்) தலைவனிடம் ஊடல் நிகழும் என்பர் ஆசிரியர். இறையனார் களவியல் ஆசிரியர் முன்னதை **"உணர்ப்புவயின் வாரா ஊடல்"** எனக் குறிப்பிடுவர்.[29] இச்சமயத்தில் தோழி தலைவனை நெருங்கிப் பிணக்கினைத் தீர்க்க முயலுவாள்.

அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்.[30]

[அலந்தாரை - துன்பம் உற்றோரை; அல்லல் - துன்பம்; புலந்தார் - பிணங்கியிருப்பார்; புல்லா - கலவாது].

என்பது தலைவி குறிப்பினால் தோழி கூற்று வந்ததைக்

---

26. கற். - நூற். 6 (இளம்.)
27. பொருளியல்-நூற். - 32. (இளம்.)
28. கற்பியல் - நூற். 15. (இளம்.)
29. இறை. - கள. நூற். - 50.
30. குறள் - 1303.

காண்க. இங்ஙனம் தோழி கூறுதலன்றி தலைவியும் கூறப் பெறுவள். இதனை நச்சினார்க்கினியர் பாடாண் திணைக் கைக் கிளையில் அடக்குவர்.

யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டதற்பின்
தானூட யானுணர்த்தத் தானுணராள்—தேனூறும்
கொய்தார் வழுதிக் குளிர்சாந் தணியகலம்
எய்தா திராக்கழிந்த வாறு.[31]

என்ற முத்தொள்ளாயிரப் பாடலால் இதனை அறியலாம். சில சமயம் தலைவனிடம் தோழி பணிமொழியும் கூறுவள்; கடுமொழியும் கூறுவள்.

பரத்தை மறுத்தல் வேண்டியும் கிழவி
மடத்தகு கிழமை உடைமை யானும்
அன்பிலை கொடியை என்றலும் உரியள்.[32]

என்று விதியும் செய்வர் ஆசிரியர். தோழி, ' அன்பிலை, கொடியை'' என்று கடிந்து கூறியதைக் கேட்ட தலைவன் சினங்கொண்டானோ என ஐயுற்ற தலைவி, தலைவனது குறிப்பை யறிவதற்கும் தான் கொண்ட துனி தலைவற்கு என்னாகுமோ என அஞ்சியும், 'நான் இறந்து பட்டாலும் சரி, அவரை அவ்வாறு கூறாதே' என அயன்மையுடைய மொழியால் கூறுவாள்.

அவன்குறிப் பறிதல் வேண்டியுங் கிளவி
அகன்மலி யூடல் அகற்சிக் கண்ணும்
வேற்றுமைக் கிளவி தோற்றவும் பெறுமே.[33]

[வேற்றுமைக் கிளவி – அயன்மையுடைய சொல்]

என்று ஆசிரியரும் இதற்கு விதி செய்வர்.

நன்னலந் தொலைய நலமிகச் சாஅய்
இன்னுயிர் கழியினும் உரையல்; அவர்நமக்
கன்னையும் அத்தனும் அல்லரோ தோழி
புலவியஃ தெவனோ அன்பிலங் கடையே.[34]

[சாஅய் – மெலியவும்; உரையல் - சொல்லற்க; அத்தன் - தந்தை; அன்பிலங் கடை - அன்பு இல்லாவிடத்து].

31. முத்தொள். - 10.
32. கற்பியல்-நூற் 17. (இளம்.)
33. ஷை-நூற். 18. (இளம்.)
34. குறுந் -93.

என்ற குறுந்தொகைப் பாடலில் தலைவி, "அவரை அன்பிலை கொடியை என்றுதி. அன்பில்வழி நின் புலவி அவரை என் செய்யும் ? அவர் நமக்கு இன்றியமையாத எமரல்லரோ வென" இருவகையாலும் தோழிக்கு அயன்மை கூறியவாறு காண்க. தலைவியின் அப்பண்புரையைக் கேட்ட தலைவன், தலைவி ஊடல் தணிந்து கூட விரும்புகிறுள் என்பதை யுணர்ந்து ஊடல் தணிவான்.

ஒரோவழி அவ்விருவரும் தங்கள் ஊடல் நீங்காது பிணங்கியே நிற்பாராயின், அறிவர் என்போர் முன்வந்து அவ்விருவர் வாழ்க்கையினும் தமக்குள்ள வருத்தந் தோன்றக் கழறியுரைப்பர். இவ்வாறு இடித்துரைக்கும் அவராணையை அவ்விருவரும் ஒருபோதும் கடவார்.

> இடித்துவரை நிறுத்தலும் அவர தாகுங்
> கிழவனும் கிழத்தியும் அவர்வரை நிற்றலின்.[35]

என்று விதி கூறுவர் தொல்காப்பியர்.

> உடுத்தும் தொடுத்தும் பூண்டுஞ் செரீஇயுந்
> தழையணிப் பொலிந்த ஆயமொடு துவன்றி
> விழவொடு வருதி நீயே ; இஃதோ
> ஓரான் வல்சிச் சீரில் வாழ்க்கை
> பெருநலக் குறுமகள் வந்தென
> இனிவிழ வாயிற் றென்னுமிவ் வூரே.[36]

[செரீஇயும் - செருகியும்; ஆயம் - பரத்தையர் கூட்டம். துவன்றி - நெருங்கி. வல்சி - ஊதியம். பெருநலம் - மிக்க அழகு.]

'ஏர் பிடித்தவன் என்ன செய்வான் ? பானை பிடித்தவள் பாக்கியம்' என்பது போன்ற கருத்தால் அறிவர் தலைவனைக் கழறிது காண்க.

> மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
> எனைமாட்சித் தாயினும் இல்.[37]

இதனைத் தலைவியைக் கழறியதற்கு எடுத்துக்காட்டாகக்

---

35. கற்பியல் - நூற். 14.
36. குறுந் - 295.
37. குறள் - 52.

கொள்ளலாம். பெரும்பாலும் அறம் பொருள் இன்பம் கூறும் அறிவர் கூற்றுக்களில் புறப்பொருள் வரும். பேகன் என்ற வள்ளலும் அவன் மனைவியும் ஊடல் நீட்டித்துப் பெரிதும் பிணங்கி நின்ற போது அவ்விருவரையும் கூட்டுதற்குக் கபிலர் முதலிய அறிஞர் முன்வந்து அவ்வள்ளலுக்கு உறுதி கூறிய செய்தி புறநானூற்றால் அறியலாகும். சோழன் மனைவி ஊடல் நீட்டித்தவிடத்துப் புகழேந்திப் புலவர் சென்று, அவ்வூடல்தீரக் கூறியதையும் இதற்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

புலவி காமச் சிறப்பைப் பயக்கவல்லதாயினும், அது சிறிது நீளினும் அதன் சுவை கைக்கும் என்பதை இல்லறத்தில் ஒழுகுவார் நன்கு அறிவர்.

உப்பமைந் தற்றால் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல்.[38]

என்ற வள்ளுவர் கூற்றை அறிக. 'உப்பு மிக்கவழித் துய்ப்பது சுவையன்றானாற்போல புலவி மிக்கவழிக் கலவி இன்பமின்றாம்' என்ற பரிமேலழகர் உரையையும் எண்ணி மகிழ்க. எனவே, தொல்காப்பியர் இப்புலவியின் இறுதியில் தலைவனை அன்போடும் இடித்துக் கூறி, அவனைத் தழுவுதலே தலைவிக்கு முறையாகும் என்று கூறுவர்.

தாய்போல் கழறித் தழீஇக் கோடல்
ஆய்மனைக் கிழத்திக்கும் உரித்தென மொழிப
கவவொடு மயங்கிய காலை யான[39]

[கவவு - முயக்கம்].

என்பது விதி. மிக்க சிறப்பினும் தலைவி தன்னைப் புகழ்ந்து கொள்ளுதல் முறையன்று; எனினும், அவனுடைய காமக் கிழத்தியிடத்துத் தான் நடந்தொழுகும் மரியாதைபற்றியும், தலைவனது பரத்தமை கருதாது தான் கூடியொழுகுதல் பற்றியும் தலைவி குறிப்பால் தன்னை வியந்துகொள்ளுதல் கூடும்.

---

38. குறள் - 1302.
39. கற்பியல் - நூற். 32.

> நற்புகழ் இளவி கிழவன்முற் கிளத்தல்
> எத்திறத் தானும் கிழத்திக் கில்லை
> முற்பட வருஉந் இரண்டலங் கடையே.[40]

என்பது தொல்காப்பிய விதி.

தலைவன் பரத்தையிற்பிரிந்து கரந்தொழுகுதல் தன் ஊரின் கண்ணேயல்லது வேற்று நாட்டு ஊர்களில் ஆகா தெனக் கூறும் இறையனார் களவியல்.

> பரத்தையிற் பிரிவே நிலத்திரி பின்றே.[41]

என்பது விதி. தலைவன் பரத்தையருடனும் ஏனைய மனைவியருட னும் தன்னூர்க்குப் புறம்பாயுள்ள 'செய்குன்றமும் வாவியும் விளையாட்டிடமும்' போன்றவற்றிற்குச் சென்று இன்ப நுகர்ச்சி எய்துவான்.

> யாறும் குளனும் காவும் ஆடிப்
> பதியிகந்து நுகர்தலும் உரிய என்ப.[42]

என்பது விதி. இதில் 'யாறும் குளனும் காவும் ஆடி' என் பதற்கு நச்சினார்க்கினியர் "காவிரியும் தண்பொருநையும் ஆன் பொருநையும் வையையும் போலும் யாறுகளிலும், இரு காமத்திணையேரிபோலும் குளங்களிலும், திருமருதந்துறைக் காவே போலும் காக்களிலும் விளையாடி" என்று கூறுவர். காவிரிப்பூம்பட்டினத்தையடுத்து இருகாமத்திணையேரிகள் இருந்தமை பட்டினப்பாலையாலும்[43] சிலப்பதிகாரத்தா லும்[44] அறியலாம். மதுரையில் வையையை யடுத்துத் திரு மருதந்துறை என்னும் உய்யானம் இருந்தமை கலித்தொகை யாலும்[45] பரிபாடலாலும் விளங்கும். தலைவனின் பரத்தைமை யொழுக்கம் ஊரில் அலராய் எழுங்கால் தலைவனை நினைந்து தலைவிக்கும், தலைவியை நினைந்து தலைவனுக்கும் காமம் மிக்கு நிகழும் என்று கூறுவர் தொல்காப்பியர்.

> அலரில் தோன்றும் காமத்து மிகுதி.[46]

என்பது விதி.

---

40. கற்பியல்-நூற் 39.
41. இறை கற்பியல் நூற் 52.
42. கற்பியல் - நூற். 50.
43. பட்டின - வரி 39.
44. சிலப் - 9 : 59-62.
45. கலி - 26.
46. கற்பியல் - நூற். 22.

ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளும்இந் நோய்.[47]

[கௌவை-பழிச்சொல்]

நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால்
காமம் நுதுப்பேம் எனல்.[48]

[நுதுப்பேம்-அவிப்போம்]

என்ற குறட்பாக்களை இதற்கு இலக்கியமாகக் கொள்ளலாம். பரத்தையிற்பிரிவு பற்றி இறையனார் களவியலுரையாசிரியர் எழுதுவது: "அஃதேயெனின் மற்றைப் பிரிவெல்லாம் வேண்டுக, ஆள்வினை மிகுதி உடைமையான்; இப்பிரிவு எற்றிற்கோ எனில், பரத்தையிற்பிரிந்தான் தலைமகன் என்றால், ஊடலே புலவியே துனியே என்றிவை நிகழும். நிகழ்ந்தால், அவை நீக்கிக் கூடினவிடத்துப் பெரியதோர் இன்பமாம்; அவ்வின்பத் தன்மையை வெளிப்படுப்பன அவை எனக் கொள்க" என்பது. இப்பரத்தைப் பிரிவு எல்லாக் குலத்தார்க்கும் உரித்து என்பதை,

காதற் பரத்தை எல்லார்க்கும் உரித்தே [49]

என்று இறையனார் களவியலும்,

பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே
நிலத்திரி பின்றஃ தென்மனார் புலவர்.[50]

என்று தொல்காப்பியமும் விதிகள் செய்யும்.

தலைவன் பரத்தையிற்பிரிந்த காலத்தில் தலைவி பூப்பெய்தினளாயின் அச்செய்தி அவனுக்கு அறிவிக்கப்பெறும் வழக்கம் இருந்ததாகத் தெரிகின்றது. இதனை இறையனார் களவியலுரையாசிரியர் கூறுமாறு : "தலைமகன் பரத்தையிற் பிரிந்த காலத்துத் தலைமகட்குப் பூப்புத் தோன்றிற்று; தோன்றத், தலைமகன் உணரும். எங்ஙனம் உணருமோ எனின், வாயில்கள் உணர்த்த உணரும். என்னை வாயில்கள் உணர்த்துமாறு எனின், தலைமகன் வாயில்களும் தலைமகள்

47. குறள் - 1147. 48. குறள் - 1148.

49. இறை - களவியல் நூற்பா 40-இன் உரை.

50. கற்பியல்-28 (இளம்.)

மாட்டு உளவாம்: தலைமகள் வாயில்களும் தலைமகன்மாட்டு உளவாம்; ஆகலான், அவர்கள் உணர்த்த உணரும் என்பது.''[51] இங்ஙனமின்றி, தலைவிக்குப் பூப்பு நிகழ்ந்த நாளில் சேடி செங்கோலஞ் செய்து, செப்புப் பாலிகையுட் செம்பூவும் நீரும் கொண்டு சென்று, தலைமகனை வலம் வந்து பூவும் நீரும் அவன் அடிமேற் பெய்து போகப் பூப்பு நிகழ்ந்ததென்று தலைமகன் உணரும் என்றும், இம்முறை மேலாயினரிடங்களில் பூப்பு உணர்த்துமாறென்றும் அதே உரையில் கூறுவர். திருக்கோவையாரிலும் இச்செய்தி வருகின்றது.[52] நம்பியகப் பொருள் இதனை,

> 'செவ்வணி யணிந்து சேடியை விடுப்புழி
> அவ்வணி யுழையர்கண் டுணர்ந்துக் கூறலும்'[53]

என்று கூறும். இங்ஙனமே, பரத்தைப் பிரிவில் தலைவிக்குப் புதல்வன் பிறந்த செய்தி யறிவித்தற்கு அவர் வெள்ளணி யணிந்து செல்வதும் பண்டைய வழக்கமாக இருந்தது.[54]

மேற்கூறியவாறு அறிவிக்கப்பெற்ற தலைவியின் பூப்புச் செய்தி கேட்டதும் தலைவன் காலம் தாழ்த்தாது சென்று, அது நிகழும் மூன்று நாளும் அவளை அணுகியிருக்க வேண்டும் என்றும், நான்காம் நாள் முதல் பன்னிரண்டு நாள் வரை அவளை அவன் கூடியுறைய வேண்டும் என்றும் கூறுவர். இதனை,

> பூப்பின் புறப்பா டீரா று நாளும்
> நீத்தகன் றுறையார் என்மனார் புலவர்
> பரத்தையிற் பிரிந்த காலை யான.[55]

என்ற நூற்பாவால் அறியலாம். இதில் 'பூப்பின் புறப்பா டீராறு நாளும்' என்பதற்குப் 'பூப்பு நிகழும் மூன்று நாளுக்கும் புறம்பாகிய பன்னிரண்டு நாள்'' என்று பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர். மேலும் அவர், 'பூப்புப் புறப்பட்ட ஞான்றும் மற்றை நாளும் கருத்தங்கில் அது வயிற்றில் அழிதலும், மூன்றும் நாள்

51. இறை. களவியல் 43 - இன் உரை.
52. திருக்கோவை–163
53. நூற்பா - 205.
54. ஷை - 206.
55. கற்பியல் - நூற். 46 (இளம்.)

தங்கில் அது சில்வாழ்க்கைத்தாகலும்பற்றி முந்நாளும் கூட்டமின்றென்றார். கூட்டமின்றியும் நீங்காதிருத்தலிற் பரத்தையிற் பிரிந்தானெனத் தலைவி நெஞ்சத்துக் கொண்ட வருத்தம் அகலும். அகல வாய்க்கும் கரு மாட்சிமைப்படுமாயிற்று. இது மகப்பேற்றுக் காலத்திற்குரிய நிலைமை கூறிற்று '' என்று கூறுவர். இறையனார் களவியலில் வருகின்ற இதேயடிக்கு அதன் உரையாசிரியர், "பூப்புப் புறப்பட்ட நாள் முதல் பன்னிரு நாளும் '' என்று பொருள் கூறுவர். மேலும் அவர் கூறுவன: "தலைவன் இவ்வகையாற் பூப்பு உணர்ந்து வாயில்களோடுஞ் சென்று தலைமகளிடத்தானாய் முந்நாளுஞ் சொற்கேட்கும் வழி உறைவானாவது. உறைந்தபின்னை ஒன்பது நாளும் கூடி உறைவானாவது. முந்நாளும் சொற்கேட்கும்வழி உறைதற்குக் காரணம் என்னையெனின், தலைமகன் பரத்தையர் மாட்டானாகை, முன்னின்ற பொருமை உண்டன்றே, அது முந்நாளுஞ் சொற்கேட்கும் வழி உறையவே நீங்கும். நீங்கிய பின்னைக் கூட்டமாகவே கரு நின்றது மாட்சிமைப்படும்........., முந்நாளும் கூடியுறையப்பெறும் குற்றம் என்னோ எனின், பூப்புப் புறப்பட்ட ஞான்று நின்ற கரு வயிற்றிலே அழியும்; இரண்டாவது நாளில் நின்ற கரு வயிற்றிலே சாம்; மூன்றாம் நாள் நின்ற கரு குறுவாழ்க்கைத்தாம்; வாழினும் திருவின்றாம். அதனாற் கூடப்படாது என்ப '' என்பது.[56] இக்கருத்துக்களை இன்று கருத்தடைபற்றிப் பேசப்பெறும் கருத்துக்களுடன் ஒப்பு நோக்கி ஆராய்க.[57] இயற்கைக் கருத்தடைக்காலம் (Safe period) இன்னும் திட்டவட்டமாகக் கண்டுபிடிக்கப்பெறவில்லை. ஆயின், பண்டைத் தமிழர் இயற்கைக் கருத்தடை முறையைக் கண்டறிந்து வேண்டும் போது கருப்பெற்றும் வேண்டாத போது கருத்தடை செய்தும் வாழ்ந்து வந்தனர் என்பதைபறிந்து இன்றைய தமிழர்கள் பெருமிதம் கொள்வார்களாக.

---

56. இறை - களவி - நூற்.43 இன் உரை.

57. இந்த ஆசிரியர் எழுதியுள்ள மணமக்களுக்கு என்ற நூலில் இது தெளிவாக, அறிவியலடிப்படையில், ஆராயப்பெற்றுள்ளது.

இவ்வாறு வாயில்களால் உணர்த்தப்பெற்ற தலைவன் தன் இல்லத்தை யடைந்து தலைவியுடன் கூடிப் பள்ளியிடத் தனாய் இருக்கின்ற காலத்தில்தான் புலவி ஊடல் உணர்வுகள் நிகழும் என்றும், இங்ஙனமே தலைவனால் பின்வதுவை செய்யப்பெற்ற மனைவியர்க்கும் பரத்தையர்க்கும் இப்புலவி முதலாயின உண்டென்றும் கொள்ளுதல் வேண்டும். இவை நிகழுங்கால் நேரும் கூற்றுக்களின் விகற்பங்களையெல்லாம் ஈண்டு உரைக்கின் அவை மிகவும் விரியும். அவற்றை தலைவன், தலைவி முதலியோரின் கூற்றுக்களின் நூற்பாக் களாலும், பண்டை அகப்பொருள் இலக்கியங்களாலும், பிற் காலத்தெழுந்த கோவை முதலிய நூல்களாலும் தெரிந்து கொள்ளலாம். இனி, பிரிவுபற்றிய செய்திகளை அடுத்துக் காண்போம்.

## 16. காதல் வாழ்வில் நேரிடும் பிரிவுகள்

**பா**லை நிலத்தையும் பண்பட்ட இலக்கியங்களாக மலர் வித்த சிறப்பு உலகிலேயே தமிழர்களிடத்தில்தான் சிறப்பாகக் காண முடியும். பாலை நிலமே இல்லாத நாட்டில் வாழும் இவர்கள் பாலை நிலத்தில் வாழும் வாய்ப்புக்கள் பெருவிடினும் கூட ஏனைய நிலப்பகுதிகளைப்பற்றிய இலக்கியங்களைவிட பாலை நிலத்தைப்பற்றிய மிகச்சிறந்த இலக்கியங்களை உருவாக்கியிருக்கின்றனர். பாலையைப்பற்றிப் பாடவேண்டிய வாய்ப்பு அரபு நாட்டாருக்குத்தான் இயல்பாகவே உண்டு; அவர்கட்கு வாய்த்துள இயற்கைச் சூழ்நிலைகளினால் பாலை யைப்பற்றிப் பாடியுள்ளனர். ஆனால், தமிழர்கள் அப்படி யல்ல; வேண்டுமென்றே பாலையைத் தேர்ந்தெடுத்து அதைப் பற்றிக் கவிதைகள் புனைந்துள்ளனர். மகிழ்ச்சியுடன் வாழ்க்கை நடத்துவதற்கு இடையூருகவுள்ள நிலைகளையெல் லாம் உயர்ந்த கவிதைகளின் படைப்புக்குப் பொருளாகக் கொண்டுள்ளதை இங்குக் காணலாம். சங்கப் பாடல்களில் பாலைத் திணையைப்பற்றியே அதிகமான பாடல்கள் காணப் பெறுகின்றன. எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாகிய அக நானூற்றில் மட்டிலும் **நானூறு** பாடல்களில் **இருநூறு** பாடல்கள் பாலைத்திணையைச் சார்ந்தவை. இத்தகைய உயர்ந்த கவிதை கள் புனைவதற்குக் கருவியாக உள்ள பிரிதல் ஒழுக்கத்திற்குக் காரணமாகக் காதலர்களின் வாழ்வில் நேரிடும் பிரிவுக் கட்டங் களைப்பற்றி ஒரளவு இவண் தெரிந்துகொள்வோம். இவை யாவும் கற்பொழுக்கத்தால் நிகழ்வனவாகும.

**பிரிவு வகைகள் :** களவு ஒழுக்கத்தில் இருக்கும்பொழுது ஒரு நிமித்தத்தின் பொருட்டோ அல்லது ஒரு கருமத்தின்

பொருட்டோ, தலைவன், தலைவியை விட்டுப் பிரியும் வழக்கம் இல்லை. அவன் தலைவியை மணந்துகொண்டு இல்வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் பொழுதுதான் தலைவியை விட்டுப் பிரியும் வாய்ப்புக்கள் நேரிடும்; கட்டங்கள் ஏற்படும். அகப் பொருள் நூல்களில் ஆறு வித பிரிவுகள் கூறப்பெறுகின்றன. இறையனர் களவியல் என்னும் நூலில்,

ஓதல் காவல் பகைதணி வினையே
வேந்தர்க் குற்றுழி பொருட்பிணி பரத்தையென் (று)
ஆங்க ஆறே அவ்வயிற் பிரிவே.[1]

என்று அப்பிரிவுகள் தொகுத்துக் கூறப்பெற்றுள்ளன. கல்வியின் பொருட்டும், நாடு காத்தற்பொருட்டும், இரண்டு அரசர்கள் தம்முள் மாறுகொண்டு பொரும் பொழுது அவர் களைச் சமாதானம் செய்யும் பொருட்டும், அரசன் கட்டளைப் படி ஏதாவது ஒரு நிமித்தத்தின் பொருட்டும், பொருள் தேடு தற்பொருட்டும், பரத்தை காரணமாகவும் பிரியும் போது தலைவன் தலைவியை உடன் கூட்டிக்கொண்டு செல்லான். அவ்வாறு சென்றதாகச் சான்றோர்களின் இலக்கியங்களும் இல்லை. தொல்காப்பியர் இக்குறிப்பை,

முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை.[2]

என்ற நூற்பாவில் புலப்படுத்துகின்றார். 'முந்நீர் வழக்கம்' என்பதற்கு இளம்பூரணர், 'கப்பல் வழியாகக் கடலில் செல்லும் பிரிவு' என்று உரை கூறுவர். முந்நீர் என்பது கடல். 'ஆனால், நச்சினார்க்கினியர், 'முந்நீர் வழக்கம்' என்பதற்கு, 'ஓதல், தூது, பொருள் ஆகிய மூன்று நீர்மையால் செல்லும் பிரிவு என்று பொருள் கூறுவர். இளம்பூரணர் கருத்துப்படி கடல் வழியாக மகளிரைக் கூட்டிச் செல்லும் வழக்கம் இல்லாவிடினும், தரை வழியாகச் செல்லும் பிரிவில் தலைவியைக் கூட்டிச்செல்லும் வழக்கம் உண்டு என்று அருத்தாபத்தியால் பெறப்படுகின்றது. ஆனால் நச்சினார்க்கினியர், கூறுவது போல, தலைவியை உடன்கூட்டிச் செல்லும் புலனெறி

1. நூற்பா—35.
2. அகத்திணை—நூற்பா 37.

வழக்காகச் சான்றோர் செய்யுட்களை இயற்றவில்லையாதலின், அவ்வழக்கம் தமிழர்களிடையே என்றும் இருந்ததில்லை என்று கருத வேண்டியுள்ளது. இன்றும் செட்டி நாடு போன்ற பகுதிகளில் வாழும் தனவணிகரும் அவரைச் சார்ந்த பிறரும் மலேயா போன்ற பிற நாடுகளுக்குச் செல்லும் பொழுது உரிமை மகளிரைக் கூட்டிச் செல்வதில்லை. [3]

**ஓதற்பிரிவு :** கல்வியின் பொருட்டுத் தலைவன் பிரிவான் என்பதனால், தலைவன் இதுகாறும் கல்வி கற்றிலன என்று கருத வேண்டியதில்லை. இதற்கு முன்பே அவன் நல்லாசிரியனை யடைந்து அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு குறிக்கோள் பொருள்களை உணர்த்தும் நூல்களையெல்லாம் முறைப்படி கற்றுத் துறை போகியவன். எவ்வளவுதான் கற்றாலும் 'கல்வி கரையில' அல்லவா! 'கற்றது கைம்மண் அளவு, கல்லாதது உலகளவு' என்று ஆன்றோர் கூறியிருக்க வில்லையா ? இன்றுகூடப் பல பட்டங்களைப் பெற்று ஆராய்ச்சித் திறன் மிக்க அறிஞர்கள் வெளிநாடு சென்று, பல அறிவியல் துறைகளிலும் பொறி நுட்பத் துறைகளிலும் தொழில் நுணுக்கத் துறைகளிலும் மேலும் கற்று வருவதைக் காண் கின்றோமல்லரோ? 'ஓதற்பிரிவு' என்பதற்கு இளம்பூரணர், "தமது நாட்டகத்து வழங்காது பிற நாட்டகத்து வழங்கும் நூல் உளவன்றே, அவற்றினைக் கற்றல் வேண்டிப் பிரிதல்" என்று கூறியிருத்தல், இன்று வெளிநாடுகளுக்குச் சென்று கல்வி பெறும் வழக்கத்தை நினைவுபடுத்துகின்றது. இங்ஙனம் 'அறிதோறும் அறியாமையைக்' காட்ட வல்ல ஒப்பற்ற கல்விச் செல்வத்தைப் பெறச் செல்வோரைப் பரணர் என்ற சங்கப் புலவர்,

> கைதொழு மரபில் கடவுள் சான்ற
> செய்வினை மருங்கிற் சென்றோர். [4]

என்று குறிப்பிடுகின்றார். 'கடவுள் சான்ற செய்வினை' என்பது ஓதற்பிரிவினை உணர்த்துகின்றது. இன்றுகூட

---

3. இவ்வழக்கம் சிறிது சிறிதாக மாறத் தொடங்குகின்றது. ஒரு சிலர் இன்று கூட்டிச் செல்கின்றனர்.

4. அகம்—125.

மனைவினை முடித்துக்கொண்ட மாணுக்கர்கள்—சிறப்பாகத் தொழிற்கல்லூரிகளில்—பயின்று வருவதை நாம் காணலாம். அவர்கள் யாவரும் 'ஓதற்பிரிவில்' உள்ளவர்களே.

**காவற்பிரிவு :** காவற்பிரிவு என்பது நாட்டைப் பாது காத்தற் பொருட்டுப் பிரியும் பிரிவு. இதனுல் நாட்டில் எளி யோர்களை நலிவோர் உளர் என்று நினைக்க வேண்டியதில்லை. ஒரு நாட்டில் பல இடங்களில் தமக்குள்ள குறைகளை நேரில் வந்து சொல்லுவதற்கு இயலாத மூத்தோர், பெண்டிர், இருக்கை முடவர், கூனர், குருடர், பிணியுடையோர் முதலிய வர்கள் இருத்தல் கூடும். அவர்களை நேரில் சந்தித்து அவர் கள் குறைகளைக் கேட்டு, அவற்றினை ஓராற்ருன் நீக்குவதற் பொருட்டுப் பிரிவது. காடுகளில் ஒன்றினையொன்று நலியும் உயிர்ச் சாதிகளைக் கண்டு தீமை செய்வனவற்றை முறை செய்வதற்கும், கொடிகளில் சிக்குண்டு அல்லலுறும் விலங்கு களைத் துறை நீக்குதற்பொருட்டும், வளம் குன்றிய இடங் களில் குன்றியதன் காரணத்தை ஆய்ந்து வளம் தோற்றுவித் தற்பொருட்டும், கோவில், சாலை, பொதுவிடங்கள் இவற் றினை ஆராயவதற்கும், நல்குரவால் வருந்தும் குடிகளைப் புரத்தற்பொருட்டும் செல்வத்தைக் 'காவற்பிரிவு' என்று சொல்லுவர். தன்னுல் பாதுகாக்கப்பெறும் உயிர்ச்சாதிகள், குடிகள் முதலியோருக்குத் தன் உருக் காட்டுவதற்கும், ஒற்று வந்துள்ள மாற்றரசர்கட்குத் தனது ஊக்கம் காட்டுவதற்கும் செல்வதாகவும் இப்பிரிவு கூறப்பெறும்.

**பகை தணிவினைப் பிரிவு :** பகை தணிவினை என்பது, சமாதானத்தை ஏற்படுத்தச் செல்லும் தூதுவர் போலச் செல்லும் செலவு அன்று. தனக்குக் கீழ்ப்பட்ட இரண்டு அரசர்கள் 'இன்று போர் தொடங்குவேன், நாளை போர் தொடங்குவேன்' என்று மாறுபட்ட கருத்துக்களால் முரண் கொண்டு இருப்பதைக் கண்டு, 'இவர்கள் போர் தொடங்கிஞல் இவர்களின் அகந்தையின் காரணமாக ஒன்றுமறியாத மக் களும் விலங்குகளும் அழிய நேரிடும்' என்று கழிபேரிரக்கங் கொண்டு, எப்படியாவது—அவர்களைக் கெஞ்சியாவது—அப் போரை ஒழிப்பதற்குப் பிரியும் பிரிவுதான் 'பகைதணிவினை'

என்பது. இன்று மேற்கு நாடுகள் அறிவியல் அறிவின் மமதையால் நீரிய குண்டு (Hydrogen bomb) போன்ற உருத்திரக் கூறு பொருந்திய குண்டுகளை ஆயத்தம் செய்துவிட்டதன் செருக்கால், போர் தொடங்க முனைந்துகொண்டிருக்கும் பொழுது அகிம்சை நெறியொழுகும் **இராஜாஜி, இராஜேந்திர பிரசாத், பண்டித ஜவஹர்லால் நேரு** போன்ற பெரியார்கள் அவர்களை இரந்தாவது அமைதியை நிலை நாட்ட வேண்டும் என்ற நோக்கத்துடன் செல்லும் செலவை 'பகை தணிவினை' என்று கூறலாம். சமாதானத்தின் பொருட்டுக் கூட்டப் பெறும் ஐ. நா. அவையின் மாநாட்டிற்குச் செல்வதும் இத்துறையின்பாற்பட்டதே. அரசன் தூது சென்றதற்கு இளம் பூரணரும் நச்சினர்க்கினியரும் பாரதத்தில் தூது சென்ற வாசுதேவனை எடுத்துக்காட்டாகக் குறிப்பிட்டுள்ளனர்.

**வேந்தர்க்குற்றுழிப் பிரிவது:** வேந்தர்க்குற்றுழித் தலைவன் பிரிவான் என்பதனல், அந்த அரசன்கீழ் சேவகம் செய்து பிழைக்கின்றான் என்று நினைக்க வேண்டா. தனக்கு நண்பனாக இருக்கும் ஓரரசனுக்கு யாதாவது ஒரு காரணத்தால் விபத்து நேரிடுமாயின் அதனை நீக்குதற்குப் பிரிவான் என்று கூறுவர் இறையனார் களவியல் உரையாசிரியர். நாடக வழக்காக அவ்வாசிரியர் அங்ஙனம் கூறினாராயினும், இதனை இவ்வுலக வழக்கிலும் வைத்து எண்ணலாம். இரண்டாவது உலகப் பெரும் போர் நடைபெற்ற பொழுது போர்க் காரணமாக எத்தனையோ வீரர்கள் பல்வேறு போர்த் துறைகளில் பெரிய பெரிய பதவிகளை வகித்தனர். அவர்கள் அவசியத்தின் நிமித்தம் அடிக்கடித் தத்தம் நாட்டைவிட்டு அயல்நாடு போக வேண்டி வந்தது. இத்தகைய நிகழ்ச்சிகளை வேந்தர்க் குற்றுழிப் பிரியும் பிரிவுகளாகக் கருதலாம். இவ்வாறு நடைபெறும் நிகழ்ச்சிகளையெல்லாம் இப்பிரிவினில் அடக்கினும் இழுக்கொன்றுமில்லை.

**பொருட்பிணிப் பிரிவு:** பொருள் காரணமாகப் பிரியும் பிரிவு பொருட்பிணிப் பிரிவாகும். இது பொருள்வயிற் பிரிவு என்றும் வழங்கப்பெறும். பொருள் இல்லாக் குறையால், பொருள் திரட்ட வேண்டும் என்ற நோக்கத்தால், தலைவன்

பிரிகின்றான் என்று கருதவேண்டியதில்லை. தன் பெற்றோர் ஈட்டிய பொருளும் குடிவழியாகப் பெற்ற செல்வமும் ஏராளமாக அவனிடம் இருந்தாலும், அவற்றைத் துய்ப்பது ஆண்டன்மைக்கு இழுக்காகும் என்று கருதியும் தனது முயற்சியால் ஈட்டிய பொருளைக் கொண்டு வாழ்க்கை நடத்த வேண்டும் என்று எண்ணியும் பிரிவான். அன்றியும், தன் முன்னோர் சேமித்த தாயப் பொருளைக் கொண்டு தேவர் காரியமும் பிதிரர் காரியமும் செய்வித்தால் தேவர்களும் பிதிரர்களும் இன்புறுவர் என்பது அக்காலத்தினர் கொள்கை. தானே தன் முயற்சியால் பொருள் ஈட்டி, அதனைக்கொண்டு இச்செயல்களை ஆற்றுவித்தால் தனக்கும் பெருமை ஏற்படுவதுடன் தேவர்கட்கும் பிதிரர்கட்கும் இன்பம் உண்டாகும் என்ற கருத்தால் பொருளீட்டப் பிரிவான். இன்றுகூடப் பொதுவாக எல்லாப் பகுதிகளிலும், பெரும்பாலும் செட்டிநாட்டுப் பகுதிகளிலும், பணம் ஈட்டுவதற்காகப் பலர் வெளிநாடு செல்வதைக் காண்கின்றோம். ஏராளமான செல்வத்தில் புரளும் செல்வர்களும் பொருள் தேடலின் நிமித்தம் வெளிநாடு செல்வதைக் காண்கின்றோம். இவர்கள் எல்லோரும் எந்த நோக்கத்தின் பொருட்டுப் பொருள் தேடுகின்றனர் என்பதைக் கூறவியலாவிடினும், பொருள் தேடச் செல்லுகின்றனர் என்பது மட்டிலும் தெரிய வருகின்றது.

**பரத்தையிற்பிரிவு :** பரத்தையிற்பிரிவு என்பது பொதுப் பெண்டிர்மாட்டுப் பிரியும் பிரிவு. இணைவிழைச்சு (கல்வி) காரணமாகத் தலைவன் அவர்களை நாடிச் சென்றான் என்று எண்ண வேண்டியதில்லை. தலைமகளை விட்டு அப் பொதுப் பெண்டிர்களின் ஆடல் காண்பதற்காகவும் பிரிவான் என்று கருதுதல் வேண்டும். இக்காலத்தில் எத்தனையோ இசை நிகழ்ச்சிகட்கும் நாட்டிய நிகழ்ச்சிகட்கும் பலர் செல்வதைக் காண்கின்றோம். அவர்கள் யாவரும் எந்நோக்கத்திற்காக அவ்விடங்கட்குச் செல்லுகின்றனர் என்பதை நாம் அறிவோம். சிலர் அவற்றைக் கண்டும் கேட்டும் சுவைப்பதற்காகச் செல்லுகின்றனர் ; சிலர் பெருமைக்காகச் செல்லுகின்றனர். இவ்வாறு செல்லுங்கால் சிலர் தலைவியை விட்டுச்

செல்லுகின்றனர் ; சிலர் தம்முடன் கூட்டிச் செல்லுகின்றனர். தலைமகளை விட்டுச் செல்லும்போது நிகழ்ச்சிகளின்பால் ஊன்றி நிற்கும் தம் உணர்ச்சி தலைமகள்மாட்டு நிற்கும் தம் உணர்ச்சியை மறைக்கும். ஏனெனில், இரண்டு உணர்ச்சிகள் ஒருங்கே இருப்பது இயற்கைக்கு முரணானது. இதனால் தம் உணர்ச்சி முழுவதும் அரங்க நிகழ்ச்சிகளிலேயே ஈடு பட்டிருக்கும். அரங்க நிகழ்ச்சிகளில் பங்கு பெறுவோர் பொதுமகளிராக இருப்பின் எத்தனையோ செல்வர்கள் மயங்கி அப்பொதுப் பெண்டிர்களுடன் உறவு கொள்வதையும் காண்கின்றோம். இப்பரத்தையிற் பிரிவுபற்றிக் கருத்து வேறுபாடுகளும் உள. சிலர் பண்டைத்தமிழர்களிடம் இப் பரத்தையிற்பிரிவே இருந்ததில்லை என்று கூறுகின்றனர். எது எவ்வாறாயினும் நாடக வழக்காகப் புலவர்களால் படைத்து மொழியப்பெறும் தலைவர்களிடம் இக்குறை இல்லாமலிருந்திருக்கக்கூடும் ; உலகில் நடமாடும் சாதாரண மக்களிடம் பரத்தைமாட்டுச் செல்லுங் குணம்—பரத் தைமை—சிறிதும் இருந்ததில்லை என்று கூறுவது அவ்வளவு பொருத்தமாகத் தோன்றவில்லை· அவ்வாறு கூறுவோர் மனித இயல்பையும் உளவியற் பண்புகளையும் சரியாக அறிய வில்லை என்றுதான் சொல்ல வேண்டும். பேராசிரியரும் திருக்கோவையார் உரையில் ''பரத்தையிற்பிரிவு'' என்னும் தலைப்பில் தோற்றுவாயாக, "பரத்தையிற் பிரிதலென்பது தலைமகளை வரைந்தெய்திய பின்னர், வைகலும் பாலே நுகர் வான் இடையே புளிங்காடியையும் நுகர்ந்து அதன் இனிமை யறிந்தாற்போல, அவள் நுகர்ச்சியினிமை அறிதற்குப் புறப் பெண்டிர்மாட்டுப் பிரியாநிற்றல் ; அல்லதூஉம், பண்ணும் பாடலும் முதலாயின காட்டிப் புறப்பெண்டிர் தன்னைக் காத லித்தால் தான் எல்லார்க்குந் தலைவனாகலின் அவர்க்கும் இன்பஞ் செய்யப் பிரியாநிற்றல் என்றுமாம்; அல்லதூஉம், தலைமகளை ஊடல் அறிவித்தற்குப் பிரிதல் என்றுமாம். இவ்வாறெழிந்து தனக்கின்பம் வேண்டிப் பிரிவானாயின், 'கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலனும் ஒண்டொடி கண்ணேயுள' (குறள்—1101) என்பதனால்

இவளுக்குத் தலைமகள் என்னும் பெயரோடு மாறுபட்டுத் தனது பெருமையொடும் மாறுபடா நிற்கும்'' என்று கூறு வதைக் காண்க. இவ்விடத்தில் இறையனார் களவியலுரை யாசிரியர் இப்பிரிவு பற்றிக் கூறும் கருத்துக்களும் ஒப்பு நோக்கி உணர்தற்பாலவை.[5] இவ்வாறு பேராசிரியரும் களவியலுரையாசிரியரும் பிற உரையாசிரியர்களும் செய்யுள் வழக்கில் இப்பிரிவைக் குற்றமற்றதாகக் கொண்டாலும், உலக வழக்கில் இவ்வொழுக்கம் நிகழ்ந்து வந்தமையின் வள்ளுவர் போன்ற அறநிலையில் நிற்கும் சான்றோர்கள் இதனைத் தம்நூல்களில் இழித்துக் கூறியுள்ளதைத் தமிழ் மக்கள் எண்ணி உணர்வார்களாக. தமிழ் நெறி உயர்ந்த நெறியென்பதைத் தம் உள்ளத்தில் நிலை நிறுத்துவார்களாக.

**சாதி வேறுபாடு**: மேற்கண்டவாறு கூறப்பெறும் ஆறு வகைப் பிரிவுகட்கும் காலவரையறையும் இலக்கண நூல் களில் கூறப்பெற்றுள்ளது. கல்வியின்பொருட்டுப் பிரியும் பிரிவு மூன்றாண்டுகட்கு மேற்படக் கூடாதென்பது பண்டை யோர் கொள்கை.

'வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது.'[6]

என்பது தொல்காப்பியம். ஏனைய பகை, தூது, பொருள் பற்றிய பிரிவுகள் ஓராண்டுக்குள்ளாதல் வேண்டுமென்பதும் தொல்காப்பியரின் கருத்தாகும்.[7] வட நூலார் ஓதற் பிரி வுக்கு ஆறாண்டும், அறப்புறங் காவற்கு எட்டாண்டும் கூறு வர். இனி, வேட்டைமேற் சேறல், நாடு காணச் சேறல் முதலிய பிரிவுகளைப் பாலையொழுக்கமாகக் கொண்டு புலனெறி வழக்கம் செய்தல் கூடாது என்பது ஆன்றோர் கொள்கை. இங்ஙனம் ஒவ்வொரு பிரிவுக்கும் காலவரையறை கூறிய வர்கள் அப்பிரிவுக்குரியார் யாவர் என்பதையும் குறிப்பிட் டுள்ளனர். தொல்காப்பியர் காலத்திலேயே நால்வகைச் சாதிகள் வகுக்கப்பெற்றிருந்தன. அதனை எண்ணியே உரையாசிரியர்கள், அந்தணர், அரசர், வணிகர், வேளாளர்

---

5. இறை-நூற்பா 40-இன் உரை.
6. கற்பியல் நூற்பா 47.
7. ஷெ—நூற்பா 48, 49.

ஆகியோர்க்கு இந்த இந்தப் பிரிவுகள் உரியவை என்று கூறிச் செல்லுகின்றனர். ஆனல், ஆசிரியர் தொல்காப்பியனர் இப் பிரிவு இவர்க்குரியது எனத் தெளிவாக நூற்பா செய்து காட்ட வில்லை. எனவே, பிறப்பு காரணமாகத் தொல்காப்பியர் உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற கொள்கையைக் கூறினர் இல்லை என்பது சிந்திக்கற்பாலது. தமிழ் மறை அருளிய திருவள்ளுவரும்,

> பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் ; சிறப்பொவ்வா
> செய்தொழில் வேற்றுமை!யான். [8]

என்று கூறியுள்ளதை நாம் நன்கு அறிவோம். தவிர, உலகியலில் இன்னர்தான் போர் காரணமாகப் பிரிய வேண்டும், இன்னர்தான் பொருளீட்டுவதற்குப் பிரிய வேண்டும் என்ற நியதியும் என்றும் இருந்ததாகத் தெரியவில்லை. இன்று எல்லாச் சாதியினரும் எல்லாத் தொழில்களையும் செய்து வருவது கண்கூடு. பார்ப்பனர் போரில் ஈடுபடுகின்றனர்; அரசாங்க அலுவல் பார்க்கின்றனர்; வாணிகம் செய் கின்றனர்; உழவுத்தொழில் புரிகின்றனர். அங்ஙனமே, வேளாளர் மறையோதுகின்றனர்; அரசாங்க அலுவல்களில் அமர்ந்துள்ளனர்; வாணிகத்தில் ஈடுபடுகின்றனர். ஏனைய சாதியினரும் எல்லா விதத் தொழில்களிலும் ஈடுபடுகின்றனர். எனவே, மக்கள் தொழில் செய்யும் பொழுது, செய்யும் தொழில் காரணமாக அந்தந்தச் சாதியினராகின்றனர் என்று கோடலே பொருந்தும்; பண்டும் இம்முறையே வழக்கிலிருந் திருக்க வேண்டும். நான் ஆசிரியத் தொழிலிலிருப்பதால், யான் பார்ப்பனன். என் மைந்தர்களில் ஒருவன் வாணிகம் செய்தால் அவன் வணிகன் ; இன்னெருவன் உழவுத் தொழி லில் ஈடுபட்டால் அவன் வேளாளன். [9] ஓதல், பகை, தூது என்று பிரிவிற்கு நிமித்தம் கூறும் தொல்காப்பியர்,

> அவற்றுள், ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன. [10]

---

8. குறள்—972.

9. ஆந்திர நாட்டில் இன்றும் ஆசிரியத் தொழிலிலுள்ளவரை அய்யவாரு (அய்யர்) என்று வழங்குவதை அறிக.

10. அகத்திணை—நூற்பா 28.

என்று கூறும் பொழுது 'உயர்ந்தோர்' என்று பொதுப்படையாக இருப்பது சிந்தித்தற்குரியது. பிறப்பினுல் உயர்வு உண்டு என்ற கொள்கையில் அழுந்திய உரையாசிரியர்கள் 'உயர்ந்தோர்' என்பதற்குத் தத்தமக்குத் தோன்றியவாறு பொருளுரைத்தனர். இளம்பூரணர், 'நால்வகை வருணத்தினும் உயர்ந்த அந்தணர், அரசர்' என்றும் நச்சினுர்க்கினியர், 'அந்தணர் முதலிய மூவர்' என்றும் பொருளுரைத்தனர். ஒவ்வொருவரும் தத்தம் மனப்பான்மைக்கேற்றவாறு ஒவ்வோர் அளவுகோல் கொண்டனர். இங்ஙனம் உரையாசிரியர்கள் சாதிப் பிரிவையொட்டி உயர்ந்தோர் என்று கூறியிருப்பது இக்காலத்திற்குச் சிறிதும் ஏற்காது; எக்காலத்திற்கும் ஏற்காது; ஏற்கவும் முடியாது. எனவே, 'உயர்ந்தோர்' என்பதற்கு 'அறிவினுலும் ஒழுக்கத்தினுலும் சீலத்தினுலும் பண்பாட்டினுலும் உயர்ந்தோர்' என்று கோடலே பொருந்தும்; அஃதே அறிவுடைமையுமாகும். மேற்குறிப்பிட்ட நூற்பாவினை அடுத்து வரும் நூற்பாக்களிலும் பிரிவுகளைப்பற்றிப் பொதுப்படையாகவே கூறியிருப்பது இதனை வலியுறச் செய்யும்.

**பாலைத்திணையின் உயர்வு :** தலைவன் பிரிந்து செல்லும் பொழுது, 'இத்தனை நாட்களுக்குள் வந்துவிடுவேன், இத்தனை மாதங்களுக்குள் வந்துவிடுவேன், இத்தனை இருதுக்குள் வந்துவிடுவேன்' என்று கூறிச் செல்வதாகப் புலவர்கள் பாடல்கள் புனைவது மரபு. அக்குறித்த பருவத்தில் தலைவன் வாராத பொழுது, தலைவி மனங்கவல்வதாகப் பாடல்களில் கூறப்பெறும் பாலைத்திணைப் பாடல்களில் இலக்கியச் சுவை கனிந்திருக்கும். காரணம், இன்பத்தை அறிவு நிலையில் வைத்து எண்ணிப் பார்த்தல் பிரிவு நிலையில்தான் சாத்தியப்படும். கூடியிருக்கும் பொழுது இன்பத்தை உணர்வார்களேயன்றி அதனை எண்ணி மகிழ நேரம் இராது. மனம் ஒன்ருக இருப்பினும் தொழிற்படும் புலன்களின் வேறுபாட்டால் ஐந்தாவது போல, பாலைத்திணை ஒன்ருக இருந்தாலும் அத்திணை காரணமாக நிகழும் நிகழ்ச்சி வேறுபாடுகளால் ஐந்திணை ஆகின்றது என்றுகூடக் கூறலாம். பாலைத்திணையாகிய பிரிவு இல்லாவிட்டால் கூடுதலும், இருத்தலும், ஊடுதலும்,

இரங்கலும் யாங்ஙனம் நிகழ முடியும்? அன்பின் ஐந்திணைக்கு' வித்துப் போல் இத்திணை இருப்பதுடன் இன்பத்திணைச் சிறக்கச் செய்வதும் இதுதான். உலக இன்பத்திற்கு இன்றி யமையாததாகவுள்ள பொருளை ஆக்குவதற்கும் இத்திணை தான் அடிப்படையாகவுள்ளது. எனவே, திருக்குறளில் பொருள் அறத்திற்கும் இன்பத்திற்கும் நடுவே இருந்து இரண்டினையும் சிறப்பிப்பது போல, பாலைத்திணையும் 'குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல்,' என்ற தொடரில் நடுவாக அமைந்து தனக்கு இருபாலும் உள்ள திணைகளைச் சிறப்பிக்கின்றது. இக்காரணத்தால்தான் தொல்காப்பியரும் இதனை, **'நடுவுநிலைத் திணை'** எனச் சிறப்பித்தார். இக் காரணங்கள்பற்றியே பாலைத்திணைப் பாடல்கள் படிப்பதற்கு மிகவும் சுவையாக உள்ளன. மேற்குறிபிட்ட சில கருத்துக் களை மனத்தில் இருத்திப் பாலைத்திணைப் பாடல்களைப் படிக்கும் பொழுது பாடல்களில் குறிப்பிடப்பெறும் நிகழ்ச்சிகளின் அடிப்படைக் கருத்துக்கள் விளக்கம் அடைவதுடன் பாட்டின் சுவையும் விஞ்சி நிற்கும்.

# 17. உள்ளுறை உவமம்

**ஒத்திருக்க வேண்டிய பண்புகள் :** காதலை ஒரு தெய்வ உணர்ச்சியாகப் போற்றி வளர்த்த தமிழர்கள் அக்காதல் உணர்ச்சிகளுக்குப் பாத்திரங்களான தலைவன் தலைவியர் ஊழின் வலியாய் கூட்டப்பெறுவர் என்று நம்பிக்கை கொண்டிருந்தனர். இந்தத் தலைவன் தலைவியர் பத்து வகைப் பண்புகளில் ஒத்திருக்க வேண்டும் என்று தொல்காப்பியர் கூறுவர்.

> 'பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு
> உருவு நிறுத்த காம வாயில்
> நிறையே அருளே உணர்வொடு திருவென
> முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே.' [1]

என்பது அவர் கூறும் நூற்பா. ஒத்த பிறப்பும், ஒத்த ஒழுக்கமும், ஒத்த ஆண்மையும், ஒத்த வயதும், ஒத்த உருவும், ஒத்த அன்பும், ஒத்த நிறையும், ஒத்த அருளும், ஒத்த அறிவும், ஒத்த செல்வமும் என்ற பத்துப் பண்புகளிலும் ஒத்தவர்களாக இருக்க வேண்டுமென்பது அவர் கொண்ட குறிக்கோள். இங்குப் பிறப்பு என்பது, குலம்பற்றி வரும் பண்பாடு. குடிமை என்பது, ஒழுக்கம் பற்றி வருவது; 'ஒழுக்கமுடைமை குடிமை' (குறள் - 133) என்ற வள்ளுவர் வாக்கை ஈண்டு எண்ணிப் பார்க்க வேண்டும். ஆண்மையாவது, ஆண்மைத் தன்மை ; அஃதாவது, ஆள்வினையுடைமையும் வலி பெயராமையுமாகும். ஆண்டு என்பது, ஒருவரைவிட ஒருவர் முதியராக இல்லாமல் ஒத்த பருவத்தினராக இருத்தல் ; அது

1. மெய்ப்-நூற். 25 (இளம்.)

குழந்தைப் பருவங் கழித்து ஆண்மை பிறக்கும் பதினறு பிராயத்தானும், பெண்மை பிறக்கும் பன்னிரண்டு பிராயத் தாளும் ஆதல் ; உரு என்பது, வனப்பு; இளமைப் பருவத் தில் காணப்பெறும் ஒருவித மினுமினுப்பான உயிர்த்தன்மை (grace). நிறுத்த காம வாயில் என்பது, நிலை நிறுத்தப்பட்ட புணர்ச்சிக்கு வாயில்; அ:ாவது ஒருவர்மாட்டு ஒருவர்க்கு நிகழும் அன்பு. நிறை என்பது, அடக்கம்; மறை பிறர் அறியாது நெஞ்சினை நிறுத்தல். அருள் என்பது, பிறர் வருத் தத்திற்குப் பரியும் கருணை; எல்லா உயிர்க்கும் இடுக்கண் செய்யாத அருளுடையராயிருத்தல். உணர்வு என்பது, அறி வுடைமை ; உலகியலால் செய்யத் தகுவது அறிதல். திரு என்பது, செல்வம் ; அ:தாவது, பொருளுடைமையும் பொருள் கொணர்ந்து துய்த்தலுமின்றி எஞ்ஞான்றும் திருத்தகவிற்ரு கியதோர் உள்ள நிகழ்ச்சி. இன்று உலகில் நடைபெறும் திருமணங்களில் மணமக்கள் இந்த முறையில் எவ்வாறு ஒத்திருக்கின்றனர் என்பதை எண்ணிப் பார்க்கும் போதுதான் தொல்காப்பியரின் கருத்திற்கும் இன்றைய நடைமுறைக்கும் எவ்வளவு இடைவெளியுள்ளது என்பது தெரியவரும்.

**பெயர் சுட்டிக் கூருமை :** இந்தத் தலைவன் தலைவியரை அகப்பொருள் நூலார் பெயர் சுட்டிக் கூறமாட்டார்கள். எல்லாக் காலத்திலும் எல்லாவிடங்களிலும் இருக்க வேண்டிய அவர்களை எங்ஙனம் பெயர் சொல்லி அழைப்பது? தொல் காப்பியரும்,

> மக்கள் நுதலிய அகன்ஐந் திணையும்
> சுட்டி ஒருவர்ப் பெயர்கொளப் பெருஅர்.[2]

என்ற விதியும் வகுத்துள்ளார். அந்தந்த நிலங்களில் வழங்கப் பெறும் நாடன், ஊரன், வெற்பன், துறைவன், கொடிச்சி, கிழத்தி என்ற பெயர்களால் வழங்கப் பெறுவர் என்பதை அகப்பொருள் பாடல்களைப் பயில்வார் அறிவர்.

**உள்ளுறை உவமம் :** அகப்பாடல்களில் ஒருவருடன் ஒருவர் பேச்சு நிகழ்த்தும் போது காதல் சம்பந்தமான நிகழ்ச்சி

2. அகத்திணை-நூற். 57 (இளம்.)

களைப் பெரும்பாலும் உவமை வாயிலாகப் பேசும்படி கவிதைகளை அமைப்பது ஒருவித மரபு. அகப்பொருள் பாடல்களில் பெரும்பாலும் பயின்று வருவது **உள்ளுறை உவமம்.** இதில் வெளிப்படையாகத் தோன்றும் கருத்துக்கள் உள்ளே அடிப்படையாக உறைந்துகொண்டிருக்கும் கருத்துக்களுக்கு உவமையாக வரும்படி அமைக்கப்பெற்றிருக்கும். சாதாரணமாக வெளிப்படை உவமமானல் அதில் உவமேயமும் இருக்கும்; உள்ளுறை உவமத்தில் உவமேயம் வெளிப்படையாகத் தெரியாது. ஆனல், உவமை போலக் கொண்டு இதற்கு ஒப்பான வேறு பொருளைச் சிந்தித்து அறிந்துகொள்ள முடியும். தொல்காப்பியரும் இதனை,

> உள்ளுறுத்து இதனொடு ஒத்துப்பொருள் முடிகென
> உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம்.[3]

என்று கூறியுள்ளார்.

ஓர் எடுத்துக் காட்டால் இதனை விளக்குவோம்.

> ‘கோழிலை வாழைக் கோண்மிகு பெருங்குலை
> ஊழுறு தீங்கனி உண்ணுநர்த் தடுத்த
> சாரற் பலவின் சுளையொடு ஊழ்படு
> பாறை நெடுஞ்சுனை விளைந்த தேறல்
> அறியாது உண்ட கடுவன் அயலது
> கறிவளர் சாந்தம் ஏறல் செல்லாது
> நறுவீ அடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்கும்
> குறியா இன்பம் எளிதின் நின்மலைப்
> பல்வேறு விலங்கும் எய்தும் நாட !’[4]

[கோழ் இலை-வளமான இலைகளையுடைய, கோள்மிகு - காய்த்தல் மிக்க; ஊழ் உறு - முதிர்ச்சியுற்ற; உண்ணுநர் - உண்போர்; சாரல்-பக்கமலை; ஊழ்படுசுளை - முற்றிய சுளை; தேறல் - தேன்; கடுவன்-ஆண் குரங்கு; கறிவளர் சாந்தம் - மிளகுக்கொடி படர்ந்த சந்தன மரம்; ஏறல் செல்லாது - ஏறுதல் மாட்டாது; நறுவீ அடுக்கம்-நறிய பூக்களாலாகிய படுக்கை; கண் படுக்கும்-தூங்கும் ]

என்பது ஒரு நாள் பகலில் தலைவியைச் சந்திக்க வந்த தலைவனைத் தோழி விளித்துப் பேசியது. இது தலைவனுடைய

3. அகத்திணை-நூற்பா 51.
4. அகம்—2.

நாட்டின் வளத்தைக் கூறுவதாக அமைந்துள்ளது. "நின்னுடைய நாட்டில் நல்ல செழித்த வாழைகள் மிகுந்திருக்கும். நன்ருகப் பழுத்த குலேகள் அவற்றில் தொங்கும். கனிகள் வெடித்துத் தேனைச் சொட்டிக்கொண்டிருக்கும். உண்பவர்க்கு நறுஞ்சுவை பயக்கும் பலாப்பழங்கள் மிகுதியாக அங்குக் காணப்பெறும். அவ்வருக்கைப் பலாச்சுளையிலிருந்தும் தேன் வடிந்துகொண்டிருக்கும். இந்த இரண்டு வகைத் தேனும் கற்பாறைகளிலுள்ள குழிகளில் தேங்கியிருக்கும். சில சமயம் ஆண் குரங்கு தாகவிடாய் மிகுதியால் இத்தேனை நீர் என்று நினைத்து அளவுக்கு மீறிப் பருகிவிடும். இம்மதுவின் 'போதையால்' மிளகுக்கொடி படர்ந்துள்ள சந்தன மரத்தில் ஏறமுடியாது மயங்கி அம்மரத்தின்கீழ் நல்ல பூக்களாலாகிய படுக்கையில் அயர்ந்து தூங்கும். இங்ஙனம் பல்வேறு விலங்குகளும் நின் நாட்டில் எதிர்பாராத இன்பத்தை அடையும். அத்தகைய நாட்டின் தலைவனே!" என்று தன் பேச்சைத் தொடங்குகின்ருள் தோழி.

தலைவன் நீண்ட நாட்களாகக் களவு ஒழுக்கத்தில் ஒழுகி வருகின்ருன். அவனை எப்படியாவது கற்பொழுக்கத்தில் புகுத்தி விடவேண்டும் என்று தோழி கருதுகின்ருள். இதைத் தலைவனிடம் நேரில் வெளிப்படையாகச் சொல்லாது குறிப்பாகப் பெறவைக்கின்ருள். நீரை எதிர்பார்த்து வந்த குரங்கு தேனை எதிர்பாராது உண்டது போலவே, விலங்கு வேட்டைக்காக வந்த தலைவன் தலைவியை அடைந்தான். மான் வேட்டைக்கு வந்தவன் மான் போன்ற மைவிழியாளைப் பெற்ருன். எல்லையற்ற இன்பப் போதையால் குரங்கு தன் குலத்தொழிலாகிய மரம் ஏறுதலையும் மறந்து மலர்ப்படுக்கையில் தூங்குவது போலவே, தலைவனும் களவு ஒழுக்கமாகிய எல்லையற்ற இன்ப வெள்ளத்தில் ஆழ்ந்து பல்லோர் அறியத் தலைவியை வரைந்துகொண்டு வாழ வேண்டும் என்ற அறநெறியையும் மறந்து மயங்கி இருக்கின்ருன். இவ்வாறு உள்ளுறை உவமத்தால் தோழி தலைவனை விரைவாகத் திருமணம் புரிந்து கொள்ள வேண்டும் என்று எண்ணும்படி செய்கின்ருள்.

**கருப்பொருள்கள் :** தலைவனுடன் பேசிய தோழியின் பேச்சில் வாழை, பலா, தேன், சந்தன மரம் போன்ற குறிஞ்சி நிலத்திலுள்ள பொருள்களே வந்துள்ளன; குரங்கும் மலை நாட்டில் காணப்படும் விலங்கே. எனவே, குறிஞ்சி நிலத்தின் கருப்பொருள்களே அவள் கூற்றில் வந்துள்ளன என்பதை அறிதல் வேண்டும். கவிஞன் உள்ளுறை உவமையை அமைக்கும் போது அந்தந்த நாட்டிலுள்ள கருப்பொருள்களைக் கூறும் முகத்தான் அதனை அமைப்பான். கேட்போருக்கு அப் பொருள்களின் தன்மைகளை வெளிப்படையாக எடுத்து வருணித்துச் சொல்லுவது போலிருக்கும். ஆனால், அப்படிச் சொல்லும் போது வருணனையின் உள்ளே அடிப்படையாக வேறொரு கருத்து உறைந்திருக்கும். வருணனையில் வரும் பொருள்கள் அவற்றுக்கு ஒப்பான வேறு ஒரு கருத்தை அறிவதற்குப் பயன்படும் உவமை போல் இருக்கும். இவ்வாறு உள்ளுறை உவமத்தில் வரும் பொருள்களைக் கொண்டு வேறு ஒரு பொருளை நினைக்க முடிவதால் இலக்கண ஆசிரியர்கள் உள்ளுறை உவமையை **'உவமப் போலி'** என்று மற்றொரு பெயராலும் குறிப்பிடுவர்.

**தெய்வத்தை அமைக்கார் :** தமிழர்கள் தெய்வ வழிபாட்டில் சிறந்தவர்கள்; தெய்வத்திற்கு முதல் இடம் கொடுத்து வாழ்கின்றவர்கள். இவ்வுலக வாழ்க்கையையொட்டி வரும் நிகழ்ச்சிகளைக் கூறும் சந்தர்ப்பங்களில் உள்ளுறை உவமையை அமைக்கும் போது கருப்பொருள்களில் தெய்வத்தைத் தவிர, ஏனையவற்றை மட்டிலுந்தான் கொண்டனர்; தம் வாழ்க்கையுடன் தெய்வத்தையும் சார்த்திப் பேசி, அதன் சிறப்பை அவர்கள் கெடுக்க விரும்பவில்லை. இதனை நன்குணர்ந்த தொல்காப்பியரும் தான் நூல் செய்யும்போது இவ்வுள்ளுறை அமைக்கும் வழக்கத்தை,

> 'உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலம்எனக்
> கொள்ளும் என்ப குறிஅறிந் தோரே.'[5]
>
> [நிலம் எனக் கொள்ளும்-இடமாகக் கொள்ளும்; குறி-இலக்கணம்.]

என்ற விதியால் குறிப்பிடுவர்.

5. அகத்திணை-நூற்பா 50.

**உள்ளுறை உவம வகை :** தொல்காப்பியப் பொருளதிகாரத்திலுள்ள உவமை இயலில் இவ்வுள்ளுறை உவமங் குறித்து விரிவாகப் பேசப்பெறுகின்றது. இந்த உள்ளுறை ஐந்து வகைப்படும் என்று ஆசிரியர் கூறுகின்றார்.

'உவமப்போலி ஐந்து என மொழிப'[6]

என்பது அவர் கூறும் விதி. உரையாசிரியர் இளம்பூரணர் இதற்கு, "அவையாவன இதற்கு உவமை இல்லை எனவும், அதற்கு இதுதானே உவமை எனவும், பல பொருளினும் உளதாகிய உறுப்புக்களைத் தெரிந்தெடுத்துக்கொண்டு சேர்த்தின் இதற்கு உவமையாம் எனவும், பல பொருளினும் உளதாகிய கவின் (அழகு) ஓரிடத்து வரின் இதற்கு உவமையாம் எனவும், கூடாப்பொருளோடு உவமித்து வருவனவும்" என்று விளக்கம் கூறுகின்றார். இந்த ஐந்து வித உள்ளுறை உவமைகளும், வினை, பயன், உறுப்பு, உரு, பிறப்பு என்ற ஐந்தின் ஏதுவாகச் சொல்லப்பெறும் என்பது அவர் கருத்து. ஆசிரியர் தொல்காப்பியனார் இதனை,

'தவலருஞ் சிறப்பின்அத் தன்மை நாடின்
வினையினும் பயத்தினும் உறுப்பினும் உருவினும்
பிறப்பினும் வருஉம் திறத்த என்ப.'[7]

என்று கூறுகின்றார் என்பது அவர் கொண்ட கொள்கை. "நினக்கு உவமை இல்லை என்னும் வழிச் செயலானுதல், பயனானுதல், உறுப்பானுதல், உருவானுதல், பிறப்பானுதல் ஒப்பார் இல்லை எனல் வேண்டும் என்பது கருத்து. பிறவும் அன்ன" என்று அவர் இதற்குக் கூறும் உரையால் அவர் கருத்தினை அறியலாகும். ஆனால், பேராசிரியர் என்ற உரையாசிரியர் இந்த இரண்டு நூற்பாக்களுக்கும் பொருள் கூறும் போது வினை, பயன், உறுப்பு, உரு, பிறப்பு என்ற ஐந்து வகையாக உள்ளுறை உவமை அமைக்கப்பெறும் என்று கூறுகின்றார்.

**உள்ளுறை அமைக்கும் முறை :** இந்த உள்ளுறை உவமை கூறுங்கால் தலைவன் முதலியோர் கூறும் முறைகளுக்கும், இன்

6. உவமை இயல்-நூற்பா 24.
7. ஷை—நூற்பா 25.

வின்னர்தான் உள்ளுறை உவமங் கூறுவதற்கு உரியவர்கள் என்பதற்கும், அங்ஙனம் கூறும் போது யார் யார் எப்பொருள் களை அமைத்துக் கூற வேண்டும் என்பதற்கும் விதிகளை வகுத் துள்ளார் ஆசிரியர் தொல்காப்பியனர். பெரும்பாலும் இவ் வுவமை அகவாழ்வில் நேரிடும் இன்ப துன்பங்களைப்பற்றியே வரும். ஆசிரியர் தொல்காப்பியர்,

> இனிதுறு கிளவியும் துனியுறு கிளவியும்
> உவம மருங்கில் தோன்றும் என்ப.[8]

[இனிதுறு கிளவி—மகிழ்ச்சி பயக்கும் கூற்று; துனியுறு கிளவி—புலவி பயக்கும் கூற்று.]

என்று இதனைப் புலப்படுத்துவர். தலைமகள் அதிகமாக வெளியில் திரிந்து அனைத்தையும் அறிந்தவள் அல்லளாத லால், அவள் அவளறிந்த கருப்பொருள்களை மட்டும் அமைத் துக் கூறுவாள். தோழி அதிக தூரம் செல்லும் பழக்கம் இல்லாவிட்டாலும் தலைவி உறையும் நிலத்தைப்பற்றி நன்கு அறிந்திருப்பாளாதலால் அந்நிலத்திலுள்ள எல்லாக் கருப் பொருள்களையும் அமைத்து உள்ளுறை உவமை கூறுவாள். தொல்காப்பியர் இதனை,

> கிழவி சொல்லின் அவன்அறி கிளவி
> தோழிக் காயின் நிலம்பெயர்ந்து உரையாது[9]

என்று கூறுகின்றூர். அன்றியும், தலைவி இந்த இன்பதுன்பங் களைப் புலப்படுத்தும் இடங்களில் மட்டுந்தான் கூறுவதற்கு உரியவள் என்பது இளம்பூரணர் கருத்து. "கிழவோட்கு உவமை ஈரிடத்து உரித்தே" (நூற்பா - 31) என்ற உவமை இயல் நூற்பாவிற்குப் பொருள் கூறும்போது இவ்வாறு குறிப்பிடுகின்றூர். ஆனல், பேராசிரியர் என்பார் 'ஈரிடம்' என்பதற்கு 'மருதமும் நெய்தலும்' என்று பொருள் கூறி, மருதத்திணையிலும் நெய்தல் திணையிலுந்தான் தலைவி உள்ளுறை உவமங் கூறுதற்குரியவள் என்று விதந்து ஓது கின்றூர். தலைவன் உவமை கூறுங்கால் தன் தலைமைத் தன்மை தோன்றக் கூறுவான். 'கிழவோற் காயின் உரனெடு கிளக்

8. இயல் நூற்பா-30. 9. ஷெ நூற்பா-26 (பேரா.)

கும்' (நூற்பா - 28) என்பது தொல்காப்பியர் வாக்கு. இவன் எல்லாப் பொருள்களையும் அமைத்து உவமை கூறுவான்.

கிழவோற் காயின் இடம்வரை வின்றே.[10]

என்பது தொல்காப்பியம்; அங்ஙனமே நற்றாய், செவிலி, பாணன் முதலியோர் சொல்லுங்கால் இடம் வரையறுக்கப் படாது சொல்லப்பெறுவர். தொல்காப்பியர்,

ஏனோர்க் கெல்லாம் இடம்வரை வின்றே.[11]

என்று இதற்கு விதியும் வகுத்துள்ளார்.

**தோழியும் செவிலியும் கூறும் முறை:** தலைவியின் வாழ்க்கையில் நேர்முகமாக அதிகத் தொடர்பு கொள்பவர் செவிலியும் தோழியும்; தலைவியின் நுண்ணிய பண்புகளையெல்லாம் நன்றாக அறிந்தவர்கள் இவர்களே. எனவே, இவர்கள் காலத்திற்கும் இடத்திற்கும் பொருந்துமாறு உள்ளுறை உவமங் கூறுவர். தொல்காப்பியர் இதனை,

தோழியும் செவிலியும் பொருந்துவழி நோக்கிக்
கூறுதற்கு உரியர் கொள்வழி யான.[12]

என்ற விதியால் பெற வைக்கிறார். இந்த உண்மைகளை நன்கு மனத்திற்கொண்டு அகப்பொருள் பாடல்களைப் பயின்றால்தான் ஆண்டுக் காணும் உள்ளுறை உவமத்தின் சிறப்பையும் நயத்தையும் நன்கு அறிய முடியும்.

**உள்ளுறையின் சிறப்பு:** பொருளிலக்கணத்திற்கு ஏனைய உவமம் உரியதாயினும், இவ்வுள்ளுறையுவமமே மிகவும் சிறந்தது என்பது தொல்காப்பியரின் கருத்து. பேராசிரியரும், "மற்றிவையெல்லாம் அகப்பொருட்கே உரியவாக விதந்தோதியதென்னை, புறப்பொருட்கு வாராதன போல எனின், ஆண்டு வருதல் அரிதாகலின் இவ்வாறு அகத்திற்கே கூறினான் என்பது" என்று எழுதினர்.[13] இதுபற்றியே இவ்வுள்ளுறையுவமத்தைத் தொல்காப்பியரும் அகத்திணையில் வைத்து ஓதுவாராயினர் என்பதையும் நாம் அறிதல் வேண்டும்.[14]

---

10. ஷை நூற்பா 32.
11. ஷை நூற்பா—29.
12. ஷை நூற்பா 33.
13. ஷை 31-இன் உரை. (பேரா.)
14. அகத்திணை—49—51 (இளம்.)

உவமைதான் எல்லா அணிகளிலும் எளிமையானது; ஏனைய அணிகட்குத் தாய் போன்றது. கவிஞன் தான் கூற வந்த ஒன்றிற்கு விளக்கம் தரவேண்டியும் அப்பொருளினிடத்து உள்ளே அமைந்து கிடக்கும் ஓர் இயல்பையோ பல இயல்புகளையோ எடுத்துக் காட்ட வேண்டியும் உவமையைக் கையாளுகின்றான். இவ்வாறு சாதாரணக் கவிஞர்களிடம் சிறந்த கவிதைக் கருவியாக இலங்கும் உவமை கூறும் இயல்பு தமிழ்க் கவிஞர்களிடம் — சிறப்பாகச் சங்க காலத்துக் கவிஞர்களிடம் — சிறந்த முறையில் பண்பட்டுக் கிடந்தது. அந்த இயல்பை அவர்கள் சிறந்த முறையில் வளர்த்து நயம் படக் கூறும் உள்ளுறை உவமைகளை அமைத்துப் பாடல்களை ஆக்கினர். உள்ளுறை அமைந்த பாடல்கள் சங்கத் தமிழின் இணையற்ற மணிகள். அவை பயில்வார் நாவில் தேன் சுரக்கச் செய்து அவர்கட்குப் புலமை வளத்தையும் நல்கிக் கன்னித் தமிழின் எழிலைப் பாரெங்கும் காட்டும் ஆற்றல் பெற்றுத் திகழ்கின்றன. அத்தகைய சங்கத் தமிழ்ப் பாடல்களைச் சுவையறிந்து படித்துப் பயன் பெறுவது இன்றைய தமிழ் மக்களின் கடமை.

# 18. இறைச்சிப் பொருள்

கவிதையின்பம் துய்ப்பார்க்கு உள்ளுறை உவமம் சிறந்த விருந்தாக இருக்கும் என்பதை முன்னர்க் கண்டோம்; பெரும்பாலும் அவ்வுள்ளுறை உவமங்கள் சங்கப் பாடல்களில்தான் பயின்று வரும் என்பதையும் பார்த்தோம். பாடல்களில் உள்ளத்தைச் செலுத்திப் பயின்றால்தான் இவ்வுள்ளுறைப் பொருள்களை அறிய முடியும் என்பதையும் தெரிந்து கொண்டோம். உள்ளுறை உவமத்தைவிட நுட்பமாகக் கூறப்பெறுவது இறைச்சிப் பொருள்; உள்ளுறை உவமத்தைப் போலவே இறைச்சியும் சங்கப் பாடல்களைச் சிறப்பிக்கின்றன. 'உடனுறை' என்றும் இதனைத் தொல்காப்பியர் குறிப்பர். இலக்கணக் கடலைக் கரைகண்டுணர்ந்த பன்மொழிப் புலவர் உயர்திரு. **வே. வேங்கடராஜுலு ரெட்டியார்** அவர்கள் 'இறு' தங்கு என்பதன் அடியிற்பிறந்த பெயர் இறைச்சி என்று கூறியுள்ளார்கள்.[1] எனவே, இறைச்சி என்பதும், உடனுறை என்பதும் ஒரு பொருளைக் குறிக்கும் சொற்கள் என்பதை ஈண்டு நாம் அறிதல் வேண்டும்.

**உள்ளுறை வகை :** ஆசிரியர் தொல்காப்பியனார் பிறிதொரு பொருள் தோன்ற நிற்குமாறு உள்ளுறையாகக் கூறுவதை ஐந்து வகையாகப் பிரித்துள்ளார்.

உடனுறை உவமம் சுட்டுநகைச் சிறப்பெனக்
கெடலரு மரபின் உள்ளுறை ஐந்தே.[2]

என்பது அவர் கூறும் விதி. இவற்றுள் உடனுறை என்று

---

1. கரந்தைத் தமிழ்ச் சங்க வெள்ளி விழா மலர் ("இறைச்சிப் பொருள்" என்ற கட்டுரையில்.)
2. பொருளியல்—நூற்பா 46.

கூறப்பெறும் இறைச்சியும், உள்ளுறை உவமமும் பயின்று வருவன ; வழக்கிலுள்ளன. ஏனைய சுட்டு, நகை, சிறப்பு என்பன அதிகம் பயின்று வருவதில்லை ; வழக்கில் இல்லை. எனவே உள்ளுறை உவமம், இறைச்சிப் பொருள் ஆகிய இரண்டிற்கு மட்டிலுந்தான் தொல்காப்பியர் விதி கூறி விளக்கியுள்ளார் ; ஏனைய மூன்றன் பெயர்களைக் குறிப்பிட்ட னரேயன்றி அவற்றின் இலக்கணத்தை வரையறுத்துக் கூற வில்லை. ஆனல், உரையாசிரியர்கள் இவற்றைச் சிறிது விளக்கியுள்ளனர்.

**இளம்பூரணரின் விளக்கம் :** உடனுறையாவது, உட னுறைவதொன்றனைச் சொல்ல, அதனனே பிறிதொரு பொருள் விளங்குவது. உவமம் என்பது, உவமையைச் சொல்ல உவமிக்கப்படும் பொருள் தோன்றுவது. சுட்டு என்பது, ஒரு பொருளைச் சுட்டிப் பிறிதோர் பொருட்படுதல். நகை யாவது, நகையினற் பிறிதொரு பொருள் உணர நிற்றல். சிறப்பு எனபது, இதற்குச் சிறந்தது இஃது எனக் கூறுவத னனே பிறிதோர் பொருள் கொளக் கிடப்பது. இங்ஙனம் விளக்கிய உரையாசிரியர் ஒவ்வொன்றுக்கும் எடுத்துக் காட்டுக்களையும் தந்துள்ளார். அவற்றைப் பயின்று உளங் கொள்க.[3]

**நச்சினர்க்கினியரின் விளக்கம் :** உடனுறையாவது, நான்கு நிலத்தும் உளவாய் அந்நிலத்துடன் உறையும் கருப்பொரு ளாற் பிறிதொன்று பயப்ப மறைத்துக் கூறும் இறைச்சி. உவமமாவது, அக்கருவாற் கொள்ளும் உள்ளுறையுவமமும் ஏனையுவமமும். நகையும் சிறப்பும் பற்ருது ஒன்று நினைந்து ஒன்று சொல்வனவும், அன்புறுதகுந இறைச்சியுட் சுட்டி வரு வனவும் சுட்டெனப்படும். நகையாவது, நகையாடி ஒன்று நினைந்து ஒன்று கூறுதல். ஏனையுவமம் நின்று, உள்ளுறை யுவமத்தைத் தத்தம் கருப்பொருட்குச் சிறப்புக் கொடுத்து நிற்பது, சிறப்பு என்னும் உள்ளுறையாகும். இவை ஐந்தும் ஒன்றனை உள்ளுறுத்தி அதனை வெளியிடாமற் கூறுதலின்

3. பொருளியல்-நூற்பா 46-இன் உரை (இளம்.)

'உள்ளுறை' எனப்பெற்றன என்று விளக்குவர் நச்சினர்க்கினியர்.

**இறைச்சி விளக்கம் :** இனி, இறைச்சிப் பொருளுக்கு எடுத்துக் காட்டொன்றைக் கண்டு, அதன் இலக்கணத்தை ஆராய்வோம் : தலைவன் ஒருவன் நீண்ட நாட்களாகக் களவு ஒழுக்கத்தில் ஒழுகி வருகின்றான். இரவிலும் பகலிலும் வந்து வந்து போகின்றான். இரவில் சந்திக்கும் இடத்தை 'இரவுக் குறி' என்றும், பகலில் சந்திக்கும் இடத்தைப் 'பகற்குறி' என்றும் அகப்பொருள் நூல்கள் கூறும் ; இலக்கண ஆசிரியர்களும் அவற்றை அப்பெயர்களாலேயே குறிப்பர். இவ்வாறு இரவிலும் பகலிலும் வந்து போகும் தலைவனை விரைவில் பல்லோர் அறியத் தலைவிக்கு மணம் புரிவித்துக் கற்பு நெறியில் வாழ வைக்கவேண்டும் என்று கருதுகின்றாள் தோழி ; தலைவியின் வாழ்வு செப்பமுற அமைய வேண்டும் என்ற கருத்துடையவள் அல்லவா இவள் ? தான் அடிக்கடி குறியிடம் அமைத்துக் கொடுத்தால் தலைவன் கற்பு நெறியில் ஒழுக மனமிசையான் என்று கருதி, அவ்வித வாய்ப்புக்கள் கொடுப்பதைத் தவிர்க்க வேண்டும் என்று எண்ணுகின்றாள். அடிக்கடி நெருங்கிப்பழகும் தலைவனிடம் திடீரென்று "முடியாது" என்று எப்படிச் சொல்வது ? தன் கருத்தை நேர்முகமாகச் சொல்லாது குறிப்பாகப் பெற வைக்கின்றாள்; 'இல்லை' என்பதை இனிமையாகச் சொல்லுகின்றாள்.

ஒரு நாள் தலைவன் இரவுக்குறியை நாடி வருகின்றான். அவன் வரும் வழியில் ஒரு பெரிய காட்டாறு உள்ளது. ஆற்றில் வெள்ளம் தலைகீழாகப் புரண்டு பெருக்கெடுத்து ஓடுகின்றது. நீரின் நிறம் தெரியாது மறையும்படி முதிர்ந்து விழுந்த மலர்கள் மறைத்து நிற்கின்றன. நீர் நிறம் கரப்ப ஊழ் உறுபு உதிர்ந்து பூமலர் கஞலிய கான்யாறு அது. அத்தகைய காட்டாற்றில் வெள்ளம் கரைகளில் மோதி சுழிகளுடன் மீளும் ; அங்ஙனம் வெள்ளம் மோதும் கரைகளில் உள்ள கற்களில் முதலைகள் தங்கியிருக்கும். அன்றியும், வெள்ளமோ மதம் மீறி நிற்கும் களிற்றியானையையும் இழுத்துச் செல்லும் வலியுனை யுடையது. அத்தகைய வெள்ளத்

தினையுடைய ஆற்றினைக் கடந்து வருகின்றான் தலைவன். தோழி அந்தப் பயங்கரமான சூழ்நிலையை அவனுக்கு எடுத்துக் காட்டி, 'இதிலும் மக்கள் வருவார்களோ?' என்று கேட்கின்றாள். தலைவன் ஒரு நாள் துன்பம் எய்தினாலும் மறுநாளே தலைவி உயிரை விட்டுவிடுவாள் என்று குறிப்பிடுகின்றாள். இடையூறு இல்லாத வழிகளிலும் அடிக்கடி அங்குப் போய் வருபவர்கள்கூடத் தவறி விழாமல் இருப்பதில்லையே என்று அவனுக்கு எடுத்துக் காட்டுகின்றாள்; அதனால் தானும் தலைவியும் வருந்துவதாகக் கூறுகின்றாள்.

இனி, இரவில் வருவதை நிறுத்திப் பகலில் வரலாம் என்று சொல்லுகின்றாள்; அதற்கும் குறியிடம் அமைத்துக் காட்டுகின்றாள். தலைவியின் வீட்டின் தோட்டத்தினை யடுத்துள்ள மலையிலுள்ள காந்தட் புதரிடத்து வந்தால் தலைவியை ஒருவித இடையூறும் இன்றிச் சந்திக்கலாம் என்று அவள் கூறுகின்றாள். அம்மலையில் மரங்கள் செறிந்து பழங்கள் ஏராளமாகப் பழுத்துத் தொங்குகின்றன; தேன் கூடுகள் வட்டம் வட்டமாக அங்குக் காணப்பெறுகின்றன. இக்கருத்துக்களை அமைத்துத் தோழியின் கூற்றாகக் **கபிலர்** கூறும் அகநானூற்றுச் சொல்லோவியம் இது;

நீர்நிறம் கரப்ப ஊழ்உறுபு உதிர்ந்து
பூமலர் கஞலிய கடுவரல் கான்யாற்றுக்
கராஅம் துஞ்சும் கல்உயர் மறிசுழி
மராஅ யானை மதந்தப ஒற்றி
உராஅ ஈர்க்கும் உட்குவரு நீத்தம்
கடுங்கண் பன்றியின் நடுங்காது துழந்து
நாம அருந்துறைப் பேர்தந்து யாமத்து
ஈங்கும் வருபவோ? ஓங்கல் வெற்ப!
ஒருநாள் விழுமம் உறினும் வழிநாள்
வாழ்குவள் அல்லள்என் தோழி; யாவதும்
ஊறுஇல் வழிகளும் பயில வழங்குநர்
நீடு இன்றுஆக இழுக்குவர்; அதனால்
உலமரல் வருத்தம் உறுதும்;எம் படப்பைக்
கொடுந்தேன் இழைத்த கோடுஉயர் நெடுவரைப்
பழந்தூங்கு நளிப்பில் காந்தள்அம் பொதும்பில்
பகல்நீ வரினும் புணர்குவை; அகன்மலை

வாங்குஅமைக் கண்ணிடை கடுப்பயாய்
ஓம்பினன் எடுத்த தடமென் தோளே.[4]

[கரப்ப-மறைய; ஊழ் உறுபு-முதிர்புற்று; பூமலர்-அழகிய மலர்கள்; கஞலிய-நெருங்கிய; கடுவரல்-நீர் விரைந்து வருதல்; கான்யாறு-காட்டாறு; கரா-முதலை; துஞ்சும்-தூங்கும்; மரிசுழி-மோதி மீளும் சுழிகள்; மரா-மருவாத; உட்குவரும்-அச்சம் தோன்றும்; நீத்தம்-வெள்ளம்; கடுங்கண்-அஞ்சாமையையுடைய; துறந்து-கடந்து; நாம-அச்சந்தரும்; பேர்தந்து-தாண்டி; விழுமம்-துன்பம்; வழிநாள்-மறுநாள்; ஊறு-இடையூறு; இழுக்குவர்-தவறு எய்துவர்; உலமரல்-மனம் சுழலுதல்; உறுதும்-அடைவோம்; வாங்கு அமை-வளைந்த மூங்கில்; கண் இடை-கணுக்கட்கு நடுவான இடம்; கடுப்ப-ஒக்க; யாய்-செவிலித்தாய்; எம் படப்பை-எம் தோட்டத்தினை அடுத்துள்ள; கொடுந்தேன்-வட்டமாகிய தேன்கூடு; கோடு-சிகரம்; நளிப்பில்-மரச்செறிவில்; பொதும்பு-புதர் ]

**இறைச்சி விளக்கம் :** மேற்கூறியுள்ள குறிப்புரையைக் கொண்டு பாடலை நன்கு உளங் கொள்க. இப்பாடலில் தோழி தலைவனை இரவுக்குறி விலக்கிப் பகற்குறிக்கண் வருமாறு கூறுகின்றாள்; இரவில் வந்த தலைவனைப் பகலில் வருமாறு சொல்லுகின்றாள். இங்கு,

"எம் படப்பைக்
கொடுந்தேன் இழைத்த கோடுஉயர் நெடுவரை
பழந்தூங்கு நளிப்பில் காந்தள்அம் பொதும்பில்"

என்பதில் தோழி பகற்குறி அமைக்கின்றாள். என்றாலும், 'தேன் அழிப்பதற்கு வருவாரும், பழம் எடுப்பதற்கு வருவாரும், பூப்பறித்தற்கு வருவாரும் பலராதலின், பகலிலும் வாராதி; வரைந்துகொண்டு செல்' என்பது குறிப்பு. இது தான் இறைச்சிப் பொருள். வடநூலார் இதனை 'வியங்கியம்' என்று கூறுவர். இங்கு இந்த இறைச்சிப் பொருள் சொற்பொருளினும் சிறந்திருக்கின்றதை அறிக. இதனால் இது 'தொனி' எனப்படும். ஆசிரியர் தொல்காப்பியனார் இறைச்சியின் இலக்கணத்தை,

---

4. அகம்-18.

இறைச்சி தானே பொருள்புறத் ததுவே.[5]

என்று குறிப்பிடுகின்றார். சொற்பொருளுக்குப் புறத்ததாக இருக்கும் பொருளே இறைச்சி என்பது. இதுவே இந்த நூற்பாவின் நேர்பொருள். சொற்பொருளுக்குப் புறத்தே தோன்றும் குறிப்புப் பொருளே இறைச்சி என்பது தொல் காப்பியனாரின் கருத்தாகும். உரையாசிரியராகிய இளம் பூரணர்,

இறைச்சி தானே உரிப்புறத் ததுவே.

என்று பாடங்கொண்டு, 'இறைச்சிப் பொருள் என்பது, உரிப்பொருளின் புறத்ததாகித் தோன்றும் பொருள்' என்று கூறுகின்றார். இதற்கு அவர் தரும் எடுத்துக்காட்டு :

நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே, சாரற்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே.[6]

[கருங்கோல் - பெரிய கொம்பு; ஆரளவின்று - அருமை அள வின்று, அளத்தற்கரிய ஆழமுடையது என்றபடி; இழைக்கும் - உண்டாகும்.]

இக்குறுந்தொகைப் பாட்டு களவொழுக்கத்தில் ஒழுகிவரும் தலைமகன் வேலிப்புறத்தே நின்றதை அறிந்த தோழி, அவன் தலைவியை வரைந்துகொள்ள வேண்டும் என்னும் எண்ண முடையளாகி, அவன் செவியிற்படும்படி தலைவியுடன் அவன் கொண்ட நட்பைப் பழித்துக் கூறிய போது, தலைவி அந்நட்பு மிகச் சிறப்புடையது என்று உணர்த்துவதாக வந்துள்ளது. "இதில் நாட்டிற்கு அடையாகி வந்த குறிஞ்சிப்பூவும் தேனும் இறைச்சிப் பொருள் என்று கொள்க" என்று இளம்பூரணர் எடுத்துக் காட்டுகின்றார்.

மேற்கூறிய விளக்கம் இரண்டு காரணங்களால் அமை வுடையதாகத் தோன்றவில்லை. **ஒன்று :** குறிஞ்சிப்பூவும் தேனும் கருப்பொருள்களே ; அவை உரிப்பொருளின் புறத்தாய பொருள்கள் அல்ல. இப்பொருளே தொல்காப்பியர் கருத்

5. பொருளியல்-நூற்பா 33.
6. குறுந்-3.

தாயின் அவர் 'இறைச்சி தானே கருப்பொருள் என்ப' என்று விதி கூறியிருப்பர்; அவர் அங்ஙனம் கூறவில்லை. **இரண்டு :** மேற்காட்டிய "உடனுறை உவமம்.........ஐந்தே" (பொருளியல்-46) என்ற நூற்பாவில் உள்ளுறையாகக் கூறப் பெறும் பொருள்கள் ஐந்தனுள் இறைச்சியை முதலாக வைத்துக் கூறியிருப்பதற்கு அது சிறந்தது என்ற ஒரே காரணந்தான் ; அதில் **உடனுறை** என்பதற்கு, "உடனுறைவ தொன்றைச் சொல்ல, அதனானே பிறிதொரு பொருள் விளங் குவது" என்று உரையும் கூறியுள்ளார். அன்றியும் அவர் கூறும் எடுத்துக்காட்டும் அவரது இந்த உரைக்கு முரணாக அமைந்துள்ளது. இப்பொருளுக்கு அவர் கூறியுள்ள எடுத்துக் காட்டையும் நோக்குவோம்.

> **விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி**
> **மறந்தனம் துறந்த காழ்முளை அகைய**
> **நெய்பெய் தீம்பால் பெய்தினிது வளர்ப்ப**
> **நும்மினும் சிறந்தது நுவ்வை ஆகுமென்று**
> **அன்னை கூறினள் புன்னையது சிறப்பே;**
> **அம்ம நாணுதும் நும்மொடு நகையே**
> **விருந்திற் பாணர் விளரிசை கடுப்ப**
> **வலம்புரி வான்கோடு நரலும் இலங்குநீர்த்**
> **துறைகெழு கொண்கநீ நல்கின்**
> **நிறைபடு நீழற் பிறவுமார் உளவே.**[7]

[ஆயம் - தோழியர் கூட்டம்; காழ்முளை-புன்னைவிரை; அகைய-தழைக்க; நுவ்வை-உன் தமக்கை; விருந்திற் பாணர்-புதியராய் வந்த பாணர்; விளர் இசை-மெல்லிய இசை; கடுப்ப-ஒப்ப; வலம்புரி வான்கோடு-வலம்புரிச் சங்கு; நரலும்-ஒலிக்கும்; கொண்கன்-நெய்தல் நிலத் தலைவன்; நிறை படு நீழல்-நிறைந்த மரத்தின் நீழல்.]

என்பது அவர் காட்டிய நற்றிணைப் பாட்டு. இது பகற் குறி நாடிவந்த தலைவனொருவனுக்கு அதனை மறுத்துத் தோழி கூறியதாக வந்துள்ளது. சிறுமி ஒருத்தி புன்னைக் கொட் டையை வைத்து மணலில் விளையாடினாள். ஒரு நாள் ஒரு கொட்டையை மறந்து மணலில் வைத்துச் சென்றுவிட்டாள்.

7. நற்றிணை-172.

அன்றிரவு மழை பெய்ததால் அது மணலில் மறைந்து முளை விட்டுச் செடியாக வளர்ந்தது; கொட்டையை மறைந்துவிட்ட சிறுமி அச் செடியைக் கண்ட நாள் முதல் அதனைத் தன் குழந்தையாகப் பாவித்துப் பாலும் நெய்யும் ஊற்றி வளர்த்து வந்தாள். இவள் மங்கைப் பருவம் கடந்து திருமணம் புரிந்துகொண்டு இல்வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கின்றாள். இவளுக்குப் பல குழந்தைகள் பிறக்கின்றன. முதல் குழந்தை பெண். இவள் சிறு பிள்ளையாக இருக்கும் பொழுது புன்னை மரத்தைப் போல விட்ட இடத்தில் நில்லாமல் ஓடியாடி விளையாடுவாள். பானைகளை உடைப்பதும் பாற்செம்புகளை உருட்டுவதும் பிற குழந்தைகளை அலைக்கழிப்பதும் இவள் நாள்தோறும் செய்து வரும் சிறுகுறும்புகள். அந்நிலையில் அவள் தாய் அவளைப் பார்த்து, "உன் தமக்கையாகிய புன்னை மரத்தைப் பார். உன்னைப் போலவா குறும்புகள் செய்கின்றாள்? உனக்கு மட்டிலும் வெட்கம் இல்லை!" என்று பன்முறை வற்புறுத்திச் சொல்வதுண்டு. பல முறை வற்புறுத்தித் தனக்கு அறிவுரை கூறியதால் மகளும் அப் புன்னை மரத்தைத் தன் தமக்கையாகவே எண்ணி வாழ்ந்தாள். இவளும் மங்கைப் பருவம் அடைந்து களவொழுக்கத்தில் ஒழுகி வரும் போது இவள் காதலன் ஒரு நாள் பகலில் அவளைச் சந்திக்க வருகின்றான். அவனைப் பார்த்து அவள் தோழி, "எம் தமக்கையாகிய புன்னையின் எதிரில் உன்னோடு நகைத்து விளையாடி மகிழ்வதற்கு யாம் நாணுகின்றோம். இனி, தலைவியைச் சந்திக்க வேறு இடம் பார்த்துக்கொள்ள வேண்டியதுதான்" என்று கூறிவிடுகின்றாள். இது பாடலில் வந்துள்ள செய்தி. இளம்பூரணர், "இதனுள் 'புன்னைக்கு நாணுதும்' எனவே, அவ்வழித் தான் வளர்த்த புன்னை என்று 'பலகாலும் அன்னை வருவள்' என்று உடனுறை கூறி விலக்கியவாறு" என்று விளக்கம் எழுதியுள்ளார். இதில் வந்த உடனுறை 'பகலில் இனி வாராதி' என்பதுவும், 'வரைந்து கொள்' என்பதுவும்.

**இறைச்சியினின்று தோன்றும் வேறு பொருள்:** இறைச்சிப் பொருளினின்று தோன்றும் பொருளும் உண்டு

என்பதற்கும் தொல்காப்பியர் விதி செய்துள்ளார்.

இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே
திறத்தியல் மருங்கில் தெளியு மோர்க்கே. [8]

என்பது அவர் கூறும் விதி. இதற்கு இளம்பூரணர் கூறும் பொருளே நேர்பொருள். "சொற்பொருளுக்குப் புறத்தே தோன்றுவதாகிய இறைச்சிப் பொருளினின்று தோன்றும் பொருளும் உள" என்பது அவர் கூறும் உரை; அஃதாவது, குறிப்புப் பொருளினின்று தோன்றும் குறிப்புப் பொருளும் உண்டு என்பது இதன் கருத்து. இவ்வாறு தோன்றுவதை வடநூலார் **'வீசிதரங்க நியாயம்'** [9] என்று கூறுவர். 'பொருளுமாருளவே' என்று கூறுவதால், இவ்வாறு தோன்றும் பொருள் சிறுபான்மையாகவே இருக்கும் என்பது தெரிகின்றது. 'திறத்தியல் மருங்கில் தெளியு மோர்க்கே' என்பதால், இப்பொருளை உணரும் ஆற்றலுடையாரும் சிலரே என்பதும் போதரும். வடநூலாரும் குறிப்புப் பொருளை அறிதலே அருமை என்று கூறுவர்.

எல்லா, உதுக்காண் எழில்நீர்ப் பொய்கைப்
பரந்த தாமரைப் பாசடைக் குருகு
துலக்கமில் உடல தாகிப் பசுங்கலத்து
வளையோளிர்ந் தாஅங் கொளிசெய் வதுவே. [9]

[எல்லா-தலைவனே; உதுக்காண்-அதோ பார்; எழில்-அழகு; பொய்கை-குளம்; பாசடை-பசுமையான இலை; குருகு-நாரை; துளக்கம் இல்-அசைதல் இல்லாத; வளை-சங்கு.]

என்ற பொய்கை வருணனைச் செய்யுளை இறைச்சிப் பொருளினின்று பிறிதும் ஒரு பொருள் தோன்றுவதற்கு எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம். தலைவனைப் பார்த்துக் கூறுவதாக உள்ளது இப்பாட்டு. பசிய தாமரை இலையிலுள்ள நாரை அசையாது இருக்கின்றது என்பது 'துளக்கமில் உடலதாகி' என்பதன் சொற்பொருள். அதனால் 'அந்த இடம் மக்கள்

8. பொருளியல்—நூற்பா 34. (இளம்.)

9. வீசிதரங்க நியாயமாவது-ஒரு பொய்கையின் நடுவில் ஒரு கல்லை எறியின் அதனால் ஓர் அலை தோன்ற, அதினின்று பிறிதொன்று தோன்றும். அவ்வாறே ஒன்றனிலொன்று தோன்றிக் கரைவரைக்கும் வரும்.

நடமாட்டம் இல்லாதது' என்னும் குறிப்புப் பொருள் தோன்றும். அக்குறிப்புப் பொருளிலிருந்து, 'அவ்விடமே குறியிடத்திற்கு இயைபுடையது' என்னும் குறிப்பும், அதனால் 'புணர்ச்சி நெடிது நிகழ்தல் கூடும்' என்ற குறிப்பும் தோன்றுதலை அறிதல் வேண்டும். எனவே, குறிப்புப் பொருளின் சிறப்பும் அதன் அருமையும் ஒருவாறு தெளியப்பெற்றது. குறிப்புப் பொருள் சொற்பொருளினின்றும் சிறக்கும் பொழுது அதனைத் 'தொனி' என்று கூறுவர் வடநூலார்.

இளம்பூரணர், 'இறைச்சிப் பொருள்' இருவகைப்படும் என்று கூறுவர். அவர் 'இறைச்சிப் பொருள் பிறிதுமோர் பொருள் கொள்ளக் கிடப்பனவும் கிடவாதனவும் என இருவகைப்படும். அவற்றிற் பிறிதோர் பொருள்பட வருமாறு' என்று எழுதி அடியிற்கண்ட குறுந்தொகைப் பாட்டை எடுத்துக் காட்டாகக் கொள்வர்.

ஒன்றே னல்லேன் ஒன்றுவென் குன்றத்துப்
பொருகளிறு மிதித்த நெரிதாள் வேங்கை
குறவர் மகளிர் கூந்தற் பெய்ம்மார்
நின்றுகொய மலரும் நாடனொடு
ஒன்றேன் தோழி ஒன்றா னுனே. 10

[ஒன்றுதல்-பொருந்துதல்; நெரிதாள் வேங்கை - நெரித்த அடியையுடைய வேங்கைமரம்; பெய்ம்மார் - அணிந்துகொள்ளும் பொருட்டு; நின்றுகொய-நின்றபடி கொய்யும்படி].

அவர் இதற்குக் கூறும் விளக்கம்: "வரைவெதிர் கொள்ளாது தமர் மறுத்தவழித் தலைமகனோடு ஒன்றுமாறு என்னெனக் கவன்ற தோழிக்கு உடன் போதற் குறிப்பினளாய்த் தலைமகள் கூறியது; ஆகலின், இதனுள் 'பொருகளிறு' என்றமையால், தலைமகள் தமர் தலைமகன் வரைவிற்கு உடன்படுவாரும் மறுப்பாருமாகி மாறுபட்டதென்பது தோற்றுகின்றது. 'பொருகளிறு மிதித்த வேங்கை' என்றதனால், பொருகின்ற இரண்டு களிற்றினும் மிதிப்பது ஒன்றாகலின் வரைவுடன்படாதார் தலைமகனை அவமதித்தவாறு காட்டிற்று. 'வேங்கை நின்று கொய்ய மலரும்' என்றதனால், முன்பு ஏறிப் பறித்தல்

10. குறுந் 208.

வேண்டுவது இப்பொழுது நின்று பறிக்கலாயிற்று என்னும் பொருள் பட்டது; இதனானே பண்டு நமக்கு அரியனாகிய தலைமகன் தன்னை அவமதிக்கவும் நமக்கு எளியனாகி அருள் செய்கின்றானெனப் பொருள்படக் கிடந்தவாறு காண்க.'' [11] இதனை ஊன்றி நோக்கினால் இஃது உள்ளுறையுவமம் உடையதேயன்றி இறைச்சிப் பொருள் உடையதன்று என்பது புலனாகும். இதனையே நச்சினார்க்கினியர்,

> உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலனெனக்
> கொள்ளும் என்ப குறியறிந் தோரே. [12]

என்ற நூற்பாவின் உரையில் உள்ளுறையுவமத்திற்கு எடுத்துக் காட்டி விளக்கம் எழுதுவர். அவர் கூறும் விளக்கம்: "இக்குறுந்தொகை பிறிதொன்றின் பொருட்டுப் பொருகின்ற யானையான் மிதிப்புண்ட வேங்கை நசையறவுணங்காது மலர் கொய்வார்க்கு எளிதாகி நின்று பூக்கும் நாடன் என்றதனானே, தலைவன் நுகருங் காரணத்தானன்றி வந்து எதிர்ப்பட்டுப் புணர்ந்து நீங்குவான் எம்மை இறந்துபாடு செய்வியாது ஆற்றுவித்துப் போயினான் எனவும், அதனானே நாமும் உயிர் தாங்கியிருந்து பலரானும் அலைப்புண்ணாநின்றனம் வேங்கை மரம் போல எனவும், உள்ளத்தான் உவமம் கொள்ள வைத்தவாறு காண்க.'' மேற்கூறிய குறுந்தொகைக்கு நச்சினார்க்கினியர் கூறிய விளக்கமே அமைவுடையதாகும்.

**'தொனி'யின் விளக்கம் :** இனி, சொற்பொருளுக்குப் புறத்தே பின்னும் ஒரு பொருள் தோன்றுவது யாங்ஙனம் கூடும் என வினவலாம். மணியடிக்கும் பொழுது அம்மணியோசையின் பின் நுட்பமாகியதோர் ஓசையுண்டாதலை நாம் அறிவோமன்றோ? அங்ஙனமே, 'தொனிப்' பொருள் தோன்றுகின்றது. அன்றியும், "சொற்பொருள் வேறு; குறிப்புப் பொருள் வேறு. பொருளைக் காண்டற்கு விளக்கு துணையாதல் போல, குறிப்புப் பொருளை யறிதற்குச் சொற்பொருள் துணையாக உள்ளது. ஆதலின், சொற்பொருள் துணையாக நிற்கும் அளவினதே. எனவே, குறிப்புப் பொருள்

---

11. பொருளியல்-34-இன் உரை (இளம்.)
12. அகத்திணை-47 (நச்சி.)

சொற்பொருளாகாது. சொல்லினது பொருளின் வழியாகச் சொற்றொடரின் பொருள் தோன்றுதல் போல, சொற் பொருளின் வாசக அடியாகக் குறிப்புப் பொருள் தோன்றுவ தாகும். சொல்லின் பொருள் தன் ஆற்றலால் சொற் றொடரின் பொருளை வெளிப்படுத்தினும் பல சாதனையில் (வாக்கியார்த்த பூர்த்தியில்) இல்லாதொழிதல் போல, சொற்பொருளும் குறிப்புப் பொருளைத் தோற்றி, மறைந்து விடும்."[13] "பெரும் புலவர்தம் வாக்கில் சிறப்புடைக் குறிப்புப் பொருள் தோன்றும்" [14] என்ற வடமொழியிலக்கணக் கருத்துக் கள் ஈண்டு சிந்திக்கற்பாலவை.

இனி, ஆகுபெயர்ப் பொருளும் சொற்பொருளின் வேறாத லால், குறிப்புப் பொருள் அதனுள் அடங்காதோ என்ற வினா எழலாம். அவ்வாறு அடங்கினும், குறிப்புப் பொருள் என்பது ஒன்று உண்டு என்பது அறிஞர்அனைவராலும் ஒப்புக்கொள்ளப் பெற்றதேயாகும். அன்றியும், ஆகுபெயர்ப் பொருள் (இலக்கணை) சொல்லாற்றலைச் சார்ந்திருக்கும்; குறிப்புப் பொருள் அவ்வாறு சார்ந்திருப்பதன்று; விளக் கினால் பிற பொருள் தோன்றுதல் போலச் சொற்பொருளால் தோன்றுவது.[15] இதனாலும் ஆகுபெயர்ப் பொருளும் குறிப்புப் பொருளும் வேறு வேறேயாதல் காண்க.

**உள்ளுறையின் சிறப்பு :** முடிவில்லாத அகப்பொருள் ஒழுகலாற்றில் பெறும் இன்பம் அனைத்தும் இத்தகைய உள்ளுறைப் பொருள்களால் விளங்கித் தோன்றும்படி முன்னை யோர் வகுத்துரைத்தனர் என்பது ஆசிரியர் கருத்தாகும். இதனை அவர்,

> அந்தமில் சிறப்பின் ஆகிய இன்பம்
> தன்வயின் வருதலும் வகுத்த பண்பே. 16

என்ற விதியால் கூறுவர். தலைவன் தன் தன்மையென்ப

---

13. ஆனந்தவர்த்தனாசாரியார் ; த்வந்யாலோகம். சூ. 9-11.
14. ஷெ—சூ. 6.
15. ஷெ—சூ. 21
16. பொருளியல்—49 (நச்சி.)

தொன்றின்றி நந்தன்மை எனக் கருதுதலின், யாம் ஒன்றை நினைந்து ஒன்று கூறினும் அவன் அச்சொற்களைக் கேட்டு வெகுளாது இன்பம் எனக் கொள்வன் என்ற கருத்தால் தலைவியும் தோழியும் அவனுடைய குறைகளைக் குறிப்பாகப் புலப்படுத்தி இடித்துரைக்கும் நிலையிற் கூறிய உள்ளுறைப் பொருண்மையினைக் கேட்ட தலைவன் 'இவை இன்பந் தரும்' என்றே ஏற்றுக்கொள்வன் என்பது நச்சினார்க்கினியர் இதற்குத் தரும் விளக்கம். எனவே, இத்தகைய உள்ளுறைப் பொருண்மையால் தலைமக்களது இன்ப உணர்வு வளர்ந்து சிறத்தலைக் காணலாம். மங்கல மொழியும், இடக்கர் அடங்கிய மொழியும், குற்றமற்ற ஆண்மை காரணமாகச் சொல்லப்பெற்ற மொழியும் உள்ளுறையின்கண் அடங்கும் என்பர் ஆசிரியர்.

> மங்கல மொழியும் அவையல் மொழியும்
> மாறில் ஆண்மையில் சொல்லிய மொழியும்
> கூறிய மருங்கிற் கொள்ளும் என்ப. 17

என்பது அவர் கூறும் விதி. மங்கல மொழி என்பது, மங்கலத்தாற் கூறும் சொல் (எ.டு.) செத்தாரைத் துஞ்சினர் என்றல். அவையல்மொழி என்பது, இடக்கர் அடக்கிக் கூறுதல். (எ.டு.) கால் கழுவி வருதும் என்றல். மாறிலாண்மையிற் சொல்லிய மொழி என்பது, ஒருவனைச் சிங்கம் வந்ததென்றாற் போறக் கூறுவது. இவையெல்லாம் சொல்லால் பொருள் படாமையின் உள்ளுறையின்பாற்பட்டன. நிற்க.

**வடமொழியில் தொனி வளர்ச்சி :** வடமொழிவாணர்கள் தொனியை, வஸ்துத் தொனி, அலங்காரத் தொனி, ரஸத்தொனி என மூவகையாக வகுத்து, ஒவ்வொன்றையும் பலவாக, விரித்துக் காட்டியுள்ளனர். அவ்வாறிருப்பினும் அம்மொழியில் அலங்கார நூலாருள் முற்பட்டவர், குறிப்புப் பொருள் (வியங்கியம்), சுவை (ரஸம்) முதலியவற்றை அணிகளினுட்படுத்தியே கூறியுள்ளனர். கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த பேரறிஞராகிய **ஆனந்த வர்த்தனாசாரியர்** என்பவரே குறிப்புப் பொருளின் சிறப்பினை

17. பொருளியல்—48 (இளம்.)

யுணர்ந்து, 'த்வந்யா லோகம்' என்னும் நூலொன்றினை எழுதி உலகிற்கு அறிவித்தார். அதன்பின் அவர் கொள்கையைப் பின்பற்றி **மம்மட பட்டர், ஹேமச்சந்திரர்** முதலியோர் **காவ்யப்ர காஸம், காவ்யாநுஸாஸனம்** முதலிய நூல்களை இயற்றினர்.

**தமிழின் தொன்மை :** வடமொழியில் 'த்வந்யா லோகம்' முதலிய நூல்கள் தோன்றுவதற்குப் பல நூற்றுண்டுகட்கு முன்னரே தமிழ் மொழியில் ஆசிரியர் தொல்காப்பியனுர் இறைச்சிப் பொருள், மெய்ப்பாடு போன்ற நுட்பமான கருத்துக்களைக் கூறியுள்ளார். ஆயினும், அவை சிறப்பாகவும் விரிவாகவும் கூறப்பெறவில்லை. வட மொழியில் இத்துறைகள் இன்று நல்ல முறையில் வளர்ச்சி பெற்றுள்ளன. தொல்காப்பியருக்குப் பின்னர் வந்த இலக்கண ஆசிரியர்கள் தொல்காப்பியர் கூறிய நுண்கருத்துக்களை விரித்து வளர்க்கத் துணியவில்லை. இப்பொழுது இவற்றை நன்ருக அறிந்து கொள்ள விரும்பினுலும் விரித்துக் கூற எண்ணினுலும், வட மொழி நூல்களின் துணை இன்றியமையாததாக இருக்கும்.

நச்சினர்க்கினியர், நம்பியகப்பொருள் ஆசிரியராகிய நாற்கவிராச நம்பி, மாறன் அலங்காரமுடையார் ஆகியோர் இவ்விறைச்சிப் பொருளைக் குறித்துக் கூறியவற்றையெல்லாம் நன்கு ஆய்ந்து அவர்கள் தடுமாறும் இடங்களையும், மயங்கிக் கூறும் இடங்களையும் தெளிவாகக் காட்டி "**இறைச்சிப் பொருள்**" என்ற தலைப்பில் ஓர் ஆய்வுக் கட்டுரையை வரைந்துள்ளார்கள் பன்மொழிப்புலவர் உயர்திரு. **வே. வேங்கடராஜுலு ரெட்டியார்** அவர்கள். அக்கட்டுரை **கரந்தைத் தமிழ்ச் சங்க வெள்ளி விழா மலரை** அணி செய்து நிற்கின்றது. அன்பர்கள் அதனைப் படித்துப் பயன் பெறுவார்களாக.

# 19. தமிழர் கண்ட புறப்பொருள்

தொல்காப்பியர் பொருளை முதல், கரு, உரி என்று மூவகைப்படுத்திப் பேசுவர் என்றும், அவற்றுள் உரிப் பொருள் அகம், புறம் என இருவகைப்படும் என்றும் முன்னர்க் கண்டோம். அகப்பொருள் இன்னதென மேலே விளக்கி னேம். ஈண்டு புறப்பொருளை இன்னதென்று விளக்குவோம்.

புறமாவது, அகம் போல ஒத்த அன்புடையார் தாமே யன்றி எல்லாராலும் துய்த்துணரப்பெறுவதும், 'இஃது இவ்வாறு இருந்தது' என்று பிறர்க்குக் கூறப்பெறுவதுமாகிய ஒழுகலாறுகும். புறப்பொருள் பெரும்பான்மை அறமும் பொருளும் பற்றியே நிகழும் என்று கூறுவர் இலக் கண நூலார். இப்புறப்பொருள்பற்றிய செய்யுள் வழக்கு களும் அகப்பொருள் போலவே தமிழ் கூறு நல்லுலகத்தில் நிலவிய உலகியல் வழக்குகளினின்று விரிந்தவையே என்று கருதுவதில் இழுக்கொன்றும் இல்லை. அவை செய்யுள் வழக்கு பெறுங்கால் வரையறையின்றி விரியா வண்ணம் அவற்றையும் தமிழ்ச் சான்றோர்கள் இலக்கண வரம்புக்குட்படுத்தி ஓதுவாரா யினர். எனவே, தொல்காப்பியர் இப்புறப்பொருள்கட்கும் திணை, துறைகளை வகுத்துப் பேசுகின்றார். அன்பினால் நிகழும் அகத்திணையொழுகலாற்றைக் குறிஞ்சி முதலாகிய ஐந்திணை யாகவும் கைக்கிளை பெருந்திணைகளாகவும் சேர்த்து ஏழு திணையாகப் பகுத்தாற்போன்று, அன்பின் வழிப்பட்டனவாய் அறமும் மறமும் பற்றிப் புறத்தே நிகழும் செயல் முறைகளை யும் ஏழு திணைகளாகப் பகுத்துரைத்தல் பண்டைத் தமிழர்

1. இந்நூல்—பக்கம். (14, 15)

கண்டுணர்த்திய பொருளிலக்கண மரபாகும். வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்னும் ஏழையும் புறத்திணைகளாகக் கூறுவர் தொல்காப்பியர். இத் திணைகள் பண்டைக் காலத்தில் தமிழ் நாட்டில் வழங்கிய போர் முறைகளேயும், அம்முறையில் காட்டப்பெறும் வீரச்செயல் களேயும் பெரும்பான்மையாகவும், ஏனே அரசியல், கொடை, புகழ், நிலேயாமை முதலியவற்றைச் சிறுபான்மையாகவும் உணர்த்துகின்றன. அகத்திணையொழுகலாறுகள் தத்தம் நிலத்திற்குச் சிறப்புடைமையுடைய குறிஞ்சி முதலிய பூக்க ளாற் பெயர் பெற்றன என்று முன்னர்க் குறிப்பிட்டோம். இங்ஙனமே, புறத்திணையொழுகலாறுகளும் அவற்றை மேற் கோள்வோர் அடையாளமாகச் சூடுதற்குரிய வெட்சி, வஞ்சி முதலிய பூக்களாற் பெயர் பெறுவனவாயின என்பதை நச்சி னூர்க்கினியர் போன்ற உரையாசிரியர்களின் உரைக்குறிப்பி னின்றும் அறியலாம்.

### திணை விளக்கம்

முன்னர்க் கூறிய அகத்திணையாகிய வாழ்வியலுக்குத் துணை செய்யும் கல்வி, பொருள், அரசியல் முதலியனவே புறத் திணையில் ஏழு திணைகளில் அடக்கிக் கூறப்பெறுகின்றன. இவற்றை ஒவ்வொன்முக ஈண்டு விளக்குவோம்.

**வெட்சித்திணை :** இகல் குறித்த வேந்தர் இருவருள் ஒருவர் போர்த்தொடக்கமாகப் பகைவர் நாட்டின்மேல் படையொடு சென்று, அந்நாட்டில் வாழும் அறவோராகிய அந்தணர், மகளிர், பிணியாட்கள் முதலிய தீங்கு செய்யத்தகாத மக்களேப் போரால் விளேயும் துன்பங் களினின்றும் விலக்கி உய்வித்தல் வேண்டி, "யாம் போர் கருதி நுமது நாட்டிற் புகுகின்ரேம்; நீவிர் நுமக்குப் பாதுகாவலான இடங்களே நாடிச் செல்லுமின்" என அறிவிப்பர். அவ்வறி விப்பினேயுணர்ந்து வெளிச் செல்லும் பகுத்தறிவில்லாத ஆனிரைகளே ஒருவரும் அறியாதபடி நள்ளிரவில் தன் படை.

---

2. இந்நூல்—பக்கம் (154-167)

வீரர்களை அனுப்பிக் களவிற்கவர்ந்து வரச் செய்து அவற்றைப் பாதுகாப்பர். அறநெறி வழுவாது மேற்கொள்ளப் பெறும் தமிழரின் போர் முறையில் ஒரு வேந்தனால் அனுப்பப் பெறும் வீரர்கள் பகைவர் நாட்டிலுள்ள பசுக்கூட்டங்களைக் களவிற்கவர்ந்து வந்து பாதுகாத்தலே **வெட்சித்திணை** என வழங்கப்பெறுகின்றது. பழமை தொட்டே இவ்வழக்கம் நம் தமிழகத்தில் இருந்து வந்தமை,

> ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
> பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
> தென்புல வாழ்நர்க்(கு) அருங்கடன் இறுக்கும்
> பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
> எம்அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மின்என
> அறத்தாறு நுவலும் பூட்கை மறத்தின்''[3]

[பேணி _ பாதுகாத்து ; இறுக்கும் - செலுத்தும் ; கடி - விரைவாக ; அரண் - பாதுகாவலுள்ள இடம் ; நுவலும் - சொல்லும் ; பூட்கை - கோட்பாட்டையுடைய.]

என்ற புறப்பாட்டுப் பாடற்பகுதியால் நன்கு விளங்கும். இதனைத் தொல்காப்பியர்,

> வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்
> ஆதந்து ஓம்பல் மேவற்று ஆகும்.[4]

[முனைஞர் – முனைப் புலம் காத்திருந்த தண்டத் தலைவர் ; ஓம்பல் - மீளாமல் காத்தல் ; மேவற்றாகும் - பொருந்துதலையுடைத்து.]

என்று கூறுவர். ஆசிரியர் நச்சினார்க்கினியரும், "இரு பெருவேந்தர் பொருவது கருதியக்கால் ஒருவர் ஒருவர் நாட்டு வாழும் அந்தணரும் ஆவும் முதலிய தீங்கு செய்யத் தகாத சாதிகளை ஆண்டு நின்றும் அகற்றல் வேண்டிப் போதருக எனப் புகறலும், அங்ஙனம் போதருதற்கு அறிவில்லாத ஆவினைக் களவினால் தாமே கொண்டு வந்து பாதுகாத்தலும்" என்று இதற்கு உரை எழுதுவர்.[5] ஆசிரியர் தொல்காப்பியர் இதற்குரியனவாகப் பதினாறு துறைகள் கூறுவர்.[6]

---

3. புறம் - 9.
4. புறத்திணை-நூற். 2. (நச்சி.)
5. ஷ - நூற்பாவின் உரை.
6. நூற்பா - 3. (இளம்.)

தனது நாட்டிலுள்ள பசுக்களைப் பகைவேந்தன் படைமறவர் களவிற்கவர்ந்து சென்றதை யறிந்த மன்னன், தன் படைவீரர்களை அனுப்பி அப்பசுக்களை மீட்டுவதற்குரிய செயல் முறைகள் வெட்சித்திணையின் இடையே நிகழ்வனவாகலின், அவற்றை வேறு திணையாக்காமல் வெட்சிக்குரிய துறைகளாகவே கொண்டார் தொல்காப்பியனார். நிரை மீட்டற்பொருட்டுச் செல்லும் வீரர்கள் தமது செயலுக்கு அடையாளமாக் கரந்தைப்பூவினைச் சூடிச் செல்வர். ''வெறியறி சிறப்பின்'' எனத் தொடங்கும் புறத்திணையியல் நூற்பா[7] வெட்சித்திணைக்கு மாறாகிய கரந்தையாமாறு உணர்த்துகின்றதென்றும், அதுவும் ஆநிரை மீட்டல் காரணமாக அந்நிலத்தின்கண் நிகழ்வதாகலின் வெட்சியின்பாற்பட்டது என்றும் கூறுவர் இளம்பூரணர். இந்நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் வலிந்தும் நலிந்தும் தான் கொண்ட கருத்திற்கேற்பக் கூறும் பொருள் அமைதியுடையதாகத் தோன்றவில்லை.

**வஞ்சித்திணை** : வெட்சியார் கைப்பற்றிச் சென்ற ஆநிரையை மீட்டற்குக் கரந்தையார் தம்மால் இயன்ற வரையில் முயன்றனர் என்றாலும், அவர்கள் முன் முயற்சிகளும் முன்னேற்பாடுகளும் இலராயொழிந்தமையின், தம் கருத்தினை நிறைவேற்றிக்கொள்ள இயலவில்லை. இதனையறிந்த அரசன் தனது மண்ணை விரும்பித் தன்னாட்டு ஆகவர்ந்த அப் பகைப்புலத்து அரசன்மேல் சினமிகுதியுடையவனாய் அவன் தன்மீது படையெடுத்து வருவதற்கு முன்பே தான் அவனை வெல்லுதற்கேற்ற காலம், இடம், வலி முதலிய முன்னேற்பாடுகளால் தன்னை நன்கு வலுச்செய்துகொண்டு கொடும்போர் புரிதற்கு வஞ்சி சூடிக் கறுத்தெழுவான். இஃது அவனது கடமையுமாகும். இக்கடமையினை உளத்துட்கொண்டு ஒழியாத மண்ணாசையுடைய பகைவேந்தனைப் பொருகளத்து அழித்தல் கருதி அவன் அஞ்சும்படி படையுடன் மேற்சேறல் **வஞ்சித்திணை** என வழங்கப்பெறும். இதற்கு

7. புறத்திணை - நூற். 5 (இளம்.)

எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்
அஞ்சுதகத் தலைசென்று அடல்குறித் தன்றே.[8]

என்று தொல்காப்பியர் விதி கூறுவர். இத்திணையைப் பதின்மூன்று துறைகளாக விரித்தும் உரைப்பர்.[9] இத்திணைக்கு நச்சினார்க்கினியர் கூறும் விளக்கம் உளங்கொள்ளற்பாலது; "ஒருவன் மண்ணசையான் மேற்சென்றால் அவனும் அம் மண்ணழியாமற் காத்தற்கு எதிரே வருதலின் இருவர்க்கும் மண்ணசையான் மேற்சேறல் உளதாகலின் அவ்விருவரும் வஞ்சி வேந்தர் ஆவர் என்று உணர்க. எதிர்சேறல் காஞ்சி என்பராலெனின், காஞ்சி என்பது எப்பொருட்கும் நிலையாமை கூறுதலிற் பெரிதும் ஆராய்ச்சிப்படும் பொதுவியற் பொருண்மைப் பெயராற் கூறுலாகாமை உணர்க. ஒருவன் மேற்சென்றுழி ஒருவன் எதிர் செல்லாது தன் மதிற்புறத்து வருந் துணையும் இருப்பின் அஃது உழிஞைபின் அடங்கும். அது சேரமான் செல்வழித் தகடூரிடை அதிகமான் இருந்ததாம். இங்ஙனம் இருவரும் வஞ்சி வேந்தரெனவே மேற்கூறும் துறை பதின்மூன்றும் இருவர்க்கும் ஒப்பக் கூறலாமென்றுணர்க" என்பது அவர் உரை.[10]

**உழிஞைத்திணை :** ஓர் அரசன் ஒரு நாட்டின்மீது படையெடுத்துச் சென்றால், எதிர் நிற்கலாற்றாத அந்நாட்டு வேந்தன் கோட்டைக் கதவுகளை யடைத்து அதனுள் பாதுகாப்பாக இருந்துகொள்வான். தண்டெடுத்துச் சென்ற வேந்தன் அம் மதிலை முற்றுகை இடுவான். படையெடுத்துச் சென்ற வேந்தன் பேரரணை வளைத்து நிற்றலும், அரணுள் இருக்கும் வேந்தன் அதனைக் காத்து நிற்றலும் **உழிஞைத்திணை** என வழங்கப்பெறும்.

முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்
அனைநெறி மரபிற்று ஆகும் என்ப.[11]

என்று இதற்கு விதி செய்வர் ஆசிரியர் தொல்காப்பியர்.

---

8. புறத்திணை - நூற். 7 (நச்சி.)
9. புறத்திணை - நூற். 8 (நச்சி.)
10. புறத்திணை - நூற். 7-இன் உரை.
11. புறத்திணை - நூற். 10. (நச்சி.)

முற்றுகையிடுவோன் - புறத்துழிஞையோன், புறத்தோன் எனவும், மதிலடைத்திருப்போன் - அகத்துழிஞையோன், அகத்தோன் எனவும் பெயர் பெறுவர். பண்டை அரணைப் பற்றி நச்சினர்க்கினியர் கூறும் விளக்கம் : "முழு அரணவது - மலையும் காடும் நீருமல்லாத அகநாட்டுட் செய்த அருமதில். அது வஞ்சனை பலவும் வாய்த்து, தோட்டி முண் முதலியன பதித்த காவற்காடு புறஞ்சூழ்ந்து, அதனுள்ளே இடங்கர் முதலியன உள்ளுடைத்தாகிய கிடங்கு புறஞ்சூழ்ந்து யவனர் இயற்றிய பல பொறிகளும் ஏனைய பொறிகளும் பதணமும் ஏப்புழை ஞாயிலும் ஏனைய பிறவும் அமைந்து, எழுவுஞ் சீப்பு முதலியவற்றால் வழுவின்றமைந்த வாயிற்கோபுரமும் பிற எந்திரங்களும் பொருந்த இயற்றப்பட்டதாம்.

இனி, மலையரணும் நிலவரணுஞ் சென்று சூழ்ந்து நேர்தலில்லா ஆரதர் அமைந்தனவும், இடத்தியற்றிய மதில் போல அடிச்சிலம்பின் அரணமைந்தனவும், மீதிருந்து கணை சொரியும் இடமும் பிறவெந்திரங்களும் அமைந்தனவாம். இனிக் காட்டரணும் நீரரணும் அவ்வாறே வேண்டுவன யாவும் அமைந்தனவாம்." [12]

ஆசிரியர் இளங்கோவடிகளும் இந்த மதிலரண்களை,

"மிளையும் கிடங்கும் வளைவிற் பொறியும்
கருவிரல் ஊகமும் கல்லுமிழ் கவணும்
பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியும்
காய்பொன் உலையும் கல்லிடு கூடையும்
தூண்டிலும் தொடக்கும் ஆண்டலை யடுப்பும்
கவையும் கழுவும் புதையும் புழையும்
ஐயவித் துலாமும் கைபெய ரூசியும்
சென்றெறி சிரலும் பன்றியும் பணையும்
எழுவும் சீப்பும் முழுவிறற் கணையமும்
கோலும் குந்தமும் வேலும் பிறவும்
ஞாயிலும் சிறந்து நாட்கொடி நுடங்கும்
வாயில்" [13]

என்று தமது சிலப்பதிகாரத்தில் கூறுவதையும், அடியார்க்கு

12. புறத்திணை - நூற். 10-இன் உரை.
13. சிலப்பதி-15, வரி (207-218)

நல்லார் அவற்றிற்குக் கூறும் விளக்கங்களையும் ஈண்டு உளங் கொள்ளின் தொல்காப்பியர் கூற்று தெளிவாகப் புலனாகும்.

உழிஞைத்திணையுள் சென்று வளைத்த வேந்தன் செய்தி களை விளக்குவதற்கு நான்கு துறைகளும், இருந்து காத்த வேந்தன் செய்திகளை விளக்குவதற்கு நான்கு துறைகளும் கூறப்பெறுகின்றன. இவை,

கொள்ளார் தேஎம் குறித்த கொற்றமும்
உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும்
தொல்லெயிற் றிவர்தலும் தோலது பெருக்கமும்
அகத்தோன் செல்வமும் அன்றி முரணிய
புறத்தோன் அணங்கிய பக்கமும் திறப்பட
ஒருதான் மண்டிய குறுமையும் உடன்றோர்
வருகை பேணூர் ஆரெயில் உளப்படச்
சொல்லப் பட்ட நாலிரு வகைத்தே.[14]

என்ற நூற்பாவினால் புலனாகின்றன. இவற்றுள் சென்ற வேந்தன் செய்திகள் நான்காவன : (1) கொள்ளார் தேஎங் குறித்த கொற்றம ; அஃதாவது பகைவர் நாட்டைத் தான் கொள்வதற்கு முன்பே, அதனைக் கொண்டவன் போல வேண்டியோர்க்கு அந்நாடு அளித்தலைக் குறித்துவிடும் வெற்றி. இதற்கு எடுத்துக்காட்டாக, "இராமன் இலங்கை கொள்வதன் முன் வீடணற்குக் கொடுத்த துறையும் அது' ' என்று கூறுவர் நச்சினார்க்கினியர் ; (2) இங்ஙனம் குறித்த கொள்கையை முடிக்கவல்ல வேந்தனது பெருமையைப் படைத்தலைவர், தூதர் முதலியோர் சென்று பகை வேந்தர்க்கு எடுத்துப் புகழ்வது ; (3) ஒரு காலத்தும் அழிவில்லாத மதிலை, இற்றைப் பகலுள் அழிப்போம் என்று கூறி, அங் ஙனமே அழிக்க விரும்புதல் ; (4) அங்ஙனம் அழித்தலை விரும்பியவன் பகைமதின்மேல் சென்றவிடத்து அம்மதிலகத் துள்ளோர் பொழியாநின்ற அம்பு மாரியை விலக்குதற்குக் கிடுகு, கேடகம், பரிசை, பலகை முதலிய தோற்கருவிகளை மிகுதியாகக் கொண்டு செல்லுதல் என்பனவாகும்.

இனி உள்ளிருந்து தன் மதிலைக் காக்கும் உழிஞை வேந்தன் செய்திகள் நான்காவன : (1) அவ்வுழிஞைபோனது

14. புறத்திணை - நூற். 12 (நச்சி.)

படை குடி கூழ் அமைச்சு நட்பு நீர்நிலை ஏமப்பொருள் மேம்படு பண்டங்கங்கள் முதலிய பெருஞ்செல்வங்களைக் கூறுதல்; (2) புறத்தோனை அவ்வகத்தோன் தன் செல்வத்தாலன்றிப் போர்த்தொழிலால் வருத்தியது கூறுதல்; (3) அகத்திருந்தோன் தன் அரணுக்கு அழிவு தோன்றிய வழி அவன் புறத்துப் போந்துப் போர் செய்தலைக் கூறுதல்; (4) புறத்தோன் அகத்தோன்மேல் வந்துழி அவன் பகையினைப் போற்றாது அகத்தோன் இகழ்ந்திருத்தற்கு அமைந்த மதிலின் பெருமை கூறுதல் என்பன. மேலும், இத்திணையில் இரு பெரு வேந்தர்க்கும் ஒன்றாய் வரும் வேறு பன்னிரண்டு துறைகளையும் கூறுவர் ஆசிரியர்.[15]

**தும்பைத்திணை:** தனது வலியினை உலகம் புகழ்தலே தான் பெறு பொருளாக எண்ணி வந்த வேந்தனை மாற்று வேந்தனும் அவ்வாறே எண்ணி எதிர்த்துப் பொருவது **தும்பைத்திணை** என வழங்கப்பெறும்.

> மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
> சென்றுதலை யழிக்கும் சிறப்பிற் றென்ப [16]
>
> [மைந்து - வலி.]

என்பது இத்திணைக்கு ஆசிரியர் கூறும் விதி. எனவே, படையாளரது அரிய பெரிய வீரச்செயல்களை விளக்குவது தும்பைத்திணையாகும். சோம்பனையும், மலடனையும், மயிர் அவிழ்ந்தோனையும், பின் வாங்கினோனையும், படையிழந்தோனையும், ஒத்த படையெடாதோனையும் கொல்லார்; இஃது அறப் போர் எனப்படும்.

இத்திணையின் சிறப்பை ஆசிரியர் தொல்காப்பினர்,

> கணையும் வேலும் துணையுற மொய்த்தலிற்
> சென்ற உயிரின் நின்ற யாக்கை
> இருநிலந் தீண்டா அருநிலை வகையோடு
> இருபாற் பட்ட ஒருசிறப் பின்றே.[27]

என்ற விதியால் விளக்குவர். பலரும் ஒருவனை அணுகிப்

---

15. புறத்திணை - நூற். 13 (நச்சி.)
16. புறத்திணை - நூற். 15. (நச்சி.)
17. புறத்திணை - நூற். 13 (இளம்.)

பொதவற்கு அஞ்சி விலகி நின்று அம்பால் எய்தும் வேல் கொண்டு எறிந்தும் போர் புரிகின்றனர். அந்த ஆயுதங்கள் அவன் உடலில் தைக்கின்றன. உயிரும் உடலை விட்டு நீங்கி விடுகின்றது. எனினும், அவனது உடல் நிலத்தில் வீழாமல் அப்படியே நிற்கின்றது. அம்புகளும் வேல்களும் தேருருளியின் ஆரக்கால்கள் போல் உடலில் தைத்ததனால் உடல் உருளியின குடம் போல நிலத்தில் படாது நிற்கின்றது. அத்துணை நேரம் கீழ் விழாமல் அவ்வீரன் பொருகின்றான். மற்றொரு வீரன் பெருவிரத்துடன் பொருகின்ற நிலையில், வாள் முதலிய வற்றால் அவன் தலையும் கைகால்களும் அறுபடுகின்றன. இந் நிலையிலும் அவனது தலையும் உடலும் கையும் காலும் அட்டை யாடுதல் போல ஆடிக்கொண்டே வீரச் செயல்களைக் காட்டி நிற்கின்றன. இதனை **'அட்டையாடல்'** என்றும் கூறுவர். இந்த இருவகைச் சிறப்பும் தும்பைத்திணைக்குரியது.

> விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பின்
> ஒட்டன்றோ வன்க ணவர்க்கு.[18]

என்ற திருக்குறள் இத்தும்பைச் செயலைக் குறிக்கின்றது.

இத்தும்பைத்திணை ஏனைத் திணைக்கட்குப் பொதுவாம் என்பது நச்சினார்க்கினியர் கருத்தாகும். "இனி மேற்றுறை கூறுகின்றது. மைந்து பொருளாக வந்ததுஞ் சென்றதுமாகிய பொது இலக்கணத்திற்கே என்றுணர்க.' நிரை கொள்ளப் பட்டோன் பொருகளங் குறித்துப் போர் செய்தலும், அவன் களங்குறித்தது பொருது நிரைகொண்டானுங் களங்குறித் துப் போர் செய்தலும் வெட்சிப்புறத்துத் தும்பையாம். வஞ்சியுள்ளும் விழுப்புண்பட்ட வீரரை நோக்கி வேந்தற்குப் பொருமை நிகழ்ந்து துறக்கம் வேண்டுழி நிகழ்ந்த தும்பையும் வஞ்சிப்புறத்துத் தும்பையாம். முற்றப்பட்டோனை முற்று விடுத்தற்கு வேற்றூர் வேந்தன் வந்துழி அவன் புறம் போந்து களங்குறித்துப் போர் செய்யக் கருதுதலும், அவன் களங் குறித்துழிப் புறத்தோனும் களங்குறித்துப் போர் செய்யக் கருதுதலும் உழிஞைப்புறத்துத் தும்பையாம். இவை

18 குறள் - 775

யெல்லாம் மண்ணசையும் அரண்கோடலுமின்றி மைந்து பொருளாகச் சென்று துறக்கம் வேட்டுப் பொருந் தும்பைச் சிறப்புக் கூறிற்று.''[19] என்ற அவரது உரைப்பகுதியால் நன்கு அறியலாம். இத்திணைக்கு உரியனவாக ஆசிரியர் தொல்காப்பியனார் பன்னிரண்டு துறைகள் கூறுவர்.[20] அவை யாவும் ஒரு களத்துப் பொருது நிற்கும் இரு திறத்துப் படையாளர்க்கும் பொதுவாக அமைந்தவை. இருவர் எங்குப் பொரினும் அது தும்பை எனப்படும்.

**வாகைத்திணை :** வலியும் வருத்தமுமின்றி, குறையாத முயற்சியையுடைய ஒவ்வொருவரும் தத்தம் தொழிலையும் ஒழுக்கத்தையும் பல படியாகச் சிறப்பித்துக் கூறுதல் **வாகைத்திணை** என வழங்கப்பெறும். வாகை - வெற்றி. ஒவ்வொருவரும் தத்தமக்குரிய அறிவு, ஆண்மை, பெருமை முதலிய ஆற்றல் கூறுபாடுகளை ஏனையோரினும் வேறுபட மிகுத்துக் கூறுதல் போர் வெற்றியுள் அடங்கும்.

> தாவில் கொள்கைத் தந்தம் கூற்றைப்
> பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப.[21]

என்று வாகைத்திணைக்கு விதி கூறுவர் ஆசிரியர் தொல்காப்பியர். அவரவர்க்குரிய துறையில் ஒப்புடைய பிறரோடு உறழ்ந்து மேம்படுதலும், தமக்குரிய துறையில் எதிர்ப்பின்றி இயல்பாக மேம்பட்டு விளங்குதலும் ஆகிய இருதிறமும் வாகைத்திணையேயாம். இவற்றுள் உறழ்ச்சி வகையால் பெற்ற வென்றியை வாகை எனவும், இயல்பாகப் பெற்ற வென்றியை முல்லை எனவும் வேறுபடுத்து வழங்குதல் பிற்கால வழக்காகும்.

தமிழ் இலக்கிய வழக்கில் வாகைத் திணைப் பகுதிகள் மிகப் பரந்துபட்டு வருகின்றன. எனினும், தொல்காப்பியர் அவற்றை எழாக ஒருவாறு தொகுத்துரைப்பர்.

---

19. புறத்திணை - நூற். 16-இன் உரை.
20. ஷெ - நூற். 17.
21. புறத்திணை - நூற். 19 (நச்சி.)

அறுவகைப் பட்ட பார்ப்பனர் பக்கமும்
ஐவகை மரபின் அரசர் பக்கமும்
இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்
மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்
நாலிரு வழக்கில் தாபதப் பக்கமும்
பாலறி மரபில் பொருநர் கண்ணும்
அனைநிலை வகையோடு ஆங்கெழு வகையால்
தொகைநிலை பெற்றது என்மனார் புலவர்.[22]

என்ற நூற்பாவால் இதனை அறியலாம். (1) அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கம்: ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் அறுவகைத் தொழிலும் பார்ப்பாருக்குரியவை. (2) ஐவகை மரபின் அரசர் பக்கம்: ஓதல், வேட்டல், ஈதல், படை வழங்குதல், குடியோம்புதல் ஆகிய ஐந்தும் அரசர்க்குரியவை. (3) இருமூன்று மரபின் ஏனோர்பக்கம்: ஏனோர், வணிகரும் வேளாளரும். ஓதல், வேட்டல், ஈதல், உழவு, வாணிகம், நிரையோம்பல் ஆகிய ஆறும் வணிகர்க்குரியவை. உழவு, உழவொழிந்த தொழில், விருந்தோம்பல், பகடு புறந்தருதல், வழிபாடு, வேதம் ஒழிந்த கல்வி ஆகிய ஆறும் வேளாளர்க்குரியவை. "இனி வேளாளர்க்கு வழிபாடு கொள்ளாது, அரசர் இவரிடம் பெண் கோடல்பற்றி வேட்டல் உளதென்று வேட்டலைக் கூட்டி ஆறென்றும், அரசரால் அச்சிறப்பெய்தாத வேளாளர்க்கே வழிபாடு உரித்தென்றும் கூறுவாரும் உளர்" என்பர் நச்சினார்க்கினியர்.[23] (4) மூவகைக் காலமும் நெறியினாற்றிய அறிவன்தேயம்; மழையும் பனியும் வெயிலுமாகிய மூவகைக் காலத்தினையும் நெறியினால் அமைத்த முழுதுணர்வுடைய அறிவர் பகுதி. "அறிவன் என்றது கணியனை. மூவகைக் காலமும் நெறியினால் ஆற்றுதலாவது, பகலும் இரவும் இடைவிடாமல் ஆகாயத்தைப் பார்த்து ஆண்டு நிகழும் வில்லும் மின்னும் ஊர்கோளும் தூமமும் மீன் வீழ்வும் கோள்நிலையும் மழை நிலையும் பிறவும் பார்த்துப் பயன் கூறல்" என்பர்

---

22 புறத்திணை - நூற். 20 (நச்சி.)
23. புறத்திணை - நூற். 20-இன் உரை.

இளம்பூரணர். (5) நாலிரு வழக்கில் தாபத பக்கம் : எட்டு வகைப்பட்ட நெறிகளில் தவம் புரியும் முனிவர் பகுதி. நீராடல், நிலத்திடை கிடத்தல், தோலுடுத்தல், சடை புனைதல், எரியோம்பல், ஊரடையாமை, காட்டிலுள்ள உணவு கோடல், தெய்வ பூசையும் அதிதி பூசையும் செய்தல் என்ற எட்டையும் அவர்களது நெறிகளாகக் கூறுவர் இளம்பூரணர். நச்சினார்க்கினியர் இவற்றை தவம் புரிவார்க்கு உரியனவும், தவஞ் செய்து யோகம் செய்வார்க்கு உரியனவும் என இருவகைய என்று கூறுவர். அவர் கருத்துப்படி தவம் செய்வார்க்கு உரியன : உணவினும் நீரினும் சென்ற மனத்தைத் தடுத்தல், ஐந்தி நாப்பணும் நீர் நிலையினும் நிற்றல், கடலும் காடும் மலையும் முதலியவற்றில் நிற்றல், தாமரையும் ஆம்பலும் யாமையும் முதலிய ஆசனத்திருத்தல், உண்டற்காலை உரையாடாமை, துறந்த காலம் தொட்டு வாய் வாளாமை (மௌனம்) ஆகியவையாகும். தவம் செய்து யோகம் செய்வார்க்கு உரியன : இயமம், நியமம், ஆசனம், வளி நிலை (பிராணாயாமம்), தொகை நிலை (பிரத்தியாகாரம்), பொறை நிலை (தாரணை), நினைதல் (தியானம்), சமாதி என்பவை. (6) பாலறி மரபிற் பொருநர் : 'வாளானும் தோளானும் பொருதலும் வென்றி கூறலும்.'(7) அனை நிலை வகை : மேற் கூறியவாறு வெல்லுதலன்றி அத்தன்மைத்தாகிய நிலைமையையுடைய பிற தொழில் வகையான் வெல்லுதல் ; அஃதாவது, சொல்லான் வேறலும், பாட்டான் வேறலும், கூத்தான் வேறலும், சூதான் வேறலும், தகர்ப்போர் பூழ்ப்போர் என்பனவற்றான் வேறலும், இவற்றை உரையாசிரியர்கள் கூறும் எடுத்துக்காட்டுக்களால் தெளிவாக அறியலாம். வாகைத்திணைக்கு உரியனவாக ஆசிரியர் பதினெட்டுத் துறைகள் கூறுவர். அவற்றுள் ஒன்பது மறத்தைச் சிறப்பித்தும், ஒன்பது அறத்தைச் சிறப்பித்தும் கூறப்பெறுகின்றன.

**காஞ்சித்திணை :** காஞ்சி என்பது, நிலையாமை; அது செல்வ நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை என மூவகைப்படும். தனக்கு ஒப்பில்லாத சிறப்பென்னும் செம்பொருளைப் பெறுதல் காரணமாக யாக்கை, இளமை,

செல்வம் என்பவற்றால் நிலைபேறில்லாத இவ்வுலகியலைப் பற்றிக்கொண்டு அதனால் உளவாம் பலவகைத் துன்பங்களை யும் பொறுத்து நிற்றலாகிய ஒழுகலாறே காஞ்சித்திணை யாகும்.

பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற் றானும்
நில்லா உலகம் புல்லிய நெறித்தே,[24]
[பாங்கு - துணை].

என்பது தொல்காப்பிய விதி. நில்லாதவற்றால் நிலையுடைய தனை அடையும் முயற்சியே காஞ்சித்திணையாகும் என்பது தொல்காப்பியரின் கருத்து. அறம் பொருள் இன்பங்களை அளவறிந்து நுகர்ந்து சிறப்பென்னும் செம்பொருளைக் காணும் பொருட்டு நிலையாமைகளைச் சான்றோர் கூறுவது காஞ்சித் திணையாகும்.

காஞ்சித்திணையை ஆசிரியர் தொல்காப்பியனார் ஆண் பாற் காஞ்சி, பெண்பாற் காஞ்சி என்று இரு பகுதிகளாகப் பிரித்து ஒவ்வொன்றுக்கும் பப்பத்துத் துறைகளாக இருபது துறைகளைக் கூறுவர். இந்த இரு பகுதிகளும் இருபாலுக்கும் பொதுவேனும், சிறப்புடைமை நோக்கி அங்ஙனம் கூறப் பெற்றுள்ளன. பொதுவையும் சிறப்பையும் அறிந்து அதற் கேற்பக் கொள்வது அறிவுடையோர் கடமையாகும். வாழ்க்கை யில் நேரிடும் பலவகைத் துன்பங்களையும் விரிவாகவும் விளக்க மாகவும் எடுத்துக் கூறும் முகத்தான், நிலையாமை என்னும் உண்மையை உள்ளபடி உணர்ந்து வாழ்க்கையில் வெறுப்புக் கொள்ளாமல் அமைந்து வாழ வேண்டும் என்பதே காஞ்சித் திணையின் கருத்தாகும். பத்துப்பாட்டில் ஒன்றாகிய 'மதுரைக் காஞ்சி' என்ற பாட்டின் நோக்கம் ஈண்டு உளங்கொள்ளற் பாலது.

**பாடாண் திணை :** கொடையாளர்களைப் புலவர்கள் புகழ்ந்து பாடுவது பாடாண் திணையாகும். பாடாண் திணை— பாடு ஆண் திணை—பாடப்படும் ஆண் மகனது ஒழுக்கம். அதா வது, பாட்டுடைத் தலைவனின் வீரம், கொடை, புகழ் முதலிய ஒழுக்கத்தைச் சிறப்பித்துப் பாடுதலாகும். பாடாண்

24. புறத்திணை - நூற். 23 (நச்சி.)

என்பது, பாடுதல் என்ற வினையையும் பாடப்படும் ஆண் மகனையும் நோக்காது அவனது ஒழுகலாறாகிய திணையுணர்த் தினமையின் வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகும் என்பர் நச்சினார்க்கினியர்.

குடும்ப வாழ்வில் மேற்கொள்ளுதற்குரிய அன்புரிமைச் செயலாகிய அகவொழுக்கமும், அரசியல் வாழ்வில் மேற் கொள்ளுதற்குரிய வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி என்னும் அறுவகைப் புறவொழுக்கங்களுடன் ஆகிய இவ்வொழுக்கங்களை அடிப்படையாகக் கொண்டே ஒருவர் ஒருவரைப் பாடுதல் இயலும். வெட்சி முதலிய அறுவகை யொழுகலாறுகளும், அவற்றிற்குக் காரணமாகிய உள்ளத் துணர்வுகளும், பாட்டுடைத் தலைவன்பால் நிகழ்வன. பாடாண் திணையிலோ பாடுதல் வினை புலவர்பாலும், அவ்வினைக்குக் காரணமாகிய குணம், செயல் ஆகியவை பாட்டுடைத் தலைவன்பாலும் நிகழ்வனவாகும். வெட்சி முதலிய ஆறும் தலைமகனுக்குரிய பண்புகளை நிலைக்களனாகக் கொண்டு தோன்றும் தனிநிலைத் திணைகள். பாடாண் திணையோ தலை மகன்பால் நிகழும் மேற்கூறிய திணை நிகழ்ச்சிகளைத் தனக்கு நிலைக்களன்களாகக் கொண்டு தோன்றும் சார்புநிலைத் திணையாகும். எனவே, போர் மறவர்பால் அமைவனவாகிய வெட்சி முதலிய புறத்திணைகளிலும், குற்றமற்ற மனை வாழ்க்கையாகிய அகத்திணையிலும் அமைந்த செயல்களாய்த் தலைமக்களுக்குரிய கல்வி, தறுகண், இசைமை, கொடை எனச் சொல்லப்பட்ட பெருமிதப் பண்புகளாய்ப் புலவராற் பாடுதற்கமைந்த ஒழுகலாறு பாடாண் திணை என்பது பெறப் படும். பாடாணல்லாத பிறவும் புலவராற் பாடப்படுவன வாயினும் புலவராற் பாடப்பெறுதல் வேண்டுமென்னும் மனக்குறிப்பின்றி ஒருவன்பால் தன்னியல்பில் நிகழும் போர்ச்செயல் முதலியவற்றைத் தெரிவிக்கும் வகையால் அவை வெட்சி முதலிய திணைகளின் பாற்படுவனவென்றும், அப்பெயர்களைக் கருவாகக் கொண்டு புலவன் பாடும் போது அவற்றால் உளவாம் புகழை விரும்பும் கருத்துடன் பாட் டுடைத் தலைவன்பால் தோற்றும் உயர்ந்த உள்ளக்குறிப்பு

பாடாண் திணையென்றும் பகுத்து உணர்தல் வேண்டும். நல்லறிவுடைய புலமைச் செல்வர் பலரும் உரையினாலும் பாட்டினாலும் உயர்த்துப் புகழும் வண்ணம் ஆற்றல்மிக்க போர்த்துறையிலும் அன்பின்மிக்க மனை வாழ்க்கையிலும் புகழுடன் வாழும் நன்மக்களது பண்புடைமையே **பாடாண் திணை** எனப்படும்.

பாடாண் திணை, வெட்சி முதலிய ஆறு திணைகளையும் பாடுதல், தனக்கே உரிய பொருளைப் பாடுதல் என இரு வகைப்படும். வெட்சி முதலிய திணைகளைப் பாடுதலாவது, பாடாண் தலைவன் வெட்சி முதலிய திணைச்செயல்கள் நிகழ்த்தியதாகப் பாடுதலாகும். தனக்கே உரிய பொருளைப் பாடுதலாவது, பாடாண் திணைக்கே உரிய பொருளைப் பாடுத லாகும். அது தேவர் பாடாண், மக்கட் பாடாண் என இரு வகைப்படும். எனவே

| | |
|---|---|
| வெட்சிப் பாடாண் | தும்பைப் பாடாண் |
| வஞ்சிப் பாடாண் | வாகைப் பாடாண் |
| உழிஞைப் பாடாண் | காஞ்சிப் பாடாண் |

தேவர் பாடாண்
மக்கட் பாடாண்

எனப் பாடாண் திணை எட்டு வகைப்படும் என்று அறிதல் வேண்டும்.

மேற்கூறிய எட்டினை வேறு வகையாகவும் கூறுவதுண்டு. இளம்பூரணர்,

| | |
|---|---|
| கடவுள் வாழ்த்து வகை | ஆற்றுப்படை வகை |
| வாழ்த்தியல் வகை | பரிசில் துறை வகை |
| மங்கல வகை | கைக்கிளை வகை |
| செவியறிவுறுத்தல் வகை | வசை வகை |

என்று வகைப்படுத்துவர். பாடாண் திணைக்கு ஓதுகின்ற பொருட்பகுதி பலவும் கூட்டி ஒன்றும், நிரை கவர்தல், நிரை மீட்டல் என்னும் வெட்சி வகை இரண்டும், பொதுவியல், வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி என்பனவும் ஆக எட்டும் பாடாண் திணை வகையென வகுத்துரைப்பர் நச்சி

ர்க்கினியர். இனிப் புறத்திணை ஆறும் அன்பினைந்திணை கைக்கிளையாகிய அகத்திணை இரண்டும் ஆக இவ்வெட்டும் பாடாண் திணையின் வகையாகும் என்று கூறுவாரும் உளர்.

மக்களை உயர்த்துத் தேவராக்கிப் பாடுதலும், உயர் பொருள்களை உயர்த்துப் பாடுதலும் தேவர் பாடாண் ஆகும். தேவரைப் பாடுதல் தேவர் பாடாண் பாட்டு என வழங்கப் பெறும். மக்களை மக்களாகவே பாடுதல் மக்கட் பாடாண் ஆகும். அது செந்துறைப் பாடாண் பாட்டு என வழங்கப் பெறும். பரவல், புகழ்ச்சி, காமம் என பாடாண் பொருள் மூவகைப்படும். வாழ்த்தல், புணர்ச்சி வேட்கை என தெய்வப் பகுதி இரு பொருள் பெறும். வாழ்த்தல், புகழ்தல், புணர்ச்சி வேட்கை என மக்கட்பகுதி முப்பொருள் பெறும்.

> அமரர்கண் முடியும் அறுவகை யானும்
> புரைதீர் காமம் புல்லிய வகையினும்
> ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப [25]

என்ற நூற்பாவினால் மக்கள் பாடாண் இத்தகையது என்றும்,

> வழக்கியல் மருங்கின் வகைப்பட நிலைஇப்
> பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும்
> முன்னோர் கூறிய குறிப்பினும் செந்துறை
> வண்ணப் பகுதி வரைவின் றாங்கே.[26]

என்ற நூற்பாவினால் மக்கள் பாடாண் இத்தகையது என்றும் விளக்குவர் ஆசிரியர். இவற்றுள் தேவர்க்குரிய பாடாண் இருவகைப்படும். முதலாவது — பிறப்பினாலன்றிச் சிறப்பினால் தேவ சாதியைச் சார்ந்தனவாகச் சொல்லப்பெறும் முனிவர், பார்ப்பார், ஆனிரை, மழை, முடியுடைவேந்தர், உலகு என்னும் அறுவரையும் வாழ்த்துதல். இஃது 'அறுமுறை வாழ்த்து' என வழங்கப்பெறும். தொகை நூல்களிலும் கீழ்க்கணக் கிலும் உள்ள கடவுள் வாழ்த்தெல்லாம் இவ்வறுமுறை வாழ்த் தின்பாற்படும். இரண்டாவது—அத்தேவரிடத்தே சிறப் பில்லாத இம்மைப் பயன்களை வேண்டி அவர்பால் அக்குறிப்

25. புறத்திணை - நூற். 26 (நச்சி.)
26. ஷை - நூற். 27 (நச்சி.)

பைக் கூறுதல். இம்மைப் பயனை வேண்டுதலாவது, தன் பொருட்டேனும் பிறர் பொருட்டேனும் இம்மைச் செல்வங்களைக் காமுறுதல். இக்காம வகையில் புணர்ச்சி வேட்கையைக் கடவுளரிடத்தும் கூறும் பகுதியும் உண்டு. அறு முறை வாழ்த்தைப் போலவே கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற மூன்றையும் வாழ்த்தலும் உண்டு என்பர் ஆசிரியர்.[27] இம் மூன்றற்கும் பலர் தத்தம் அறிவின் திறத்திற்கேற்றவாறு பல்வேறு பொருள்கள் கூறுவர்.[28] கடவுள் மக்கட்பெண்டிரை நயத்தல், கடவுளை மக்கட்பெண்டிர் நயத்தல் எனப் புணர்ச்சி வேட்கை இருவகைப்படும்.

> காமப் பகுதி கடவுளும் வரையார்
> ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர்.[29]

என்று இதற்கு விதி செய்வர் ஆசிரியர். அரசர்களே பாடாண் திணையில் தெய்வமாக உயர்த்திப் பாடப்பெறுவதால் ஓர் அரசனை ஒருத்தி விரும்புவதாகவும், ஓர் அரசன் ஒருத்தியை விரும்புவதாகவும் பாடுதலே புணர்ச்சி வேட்கையாகும். முன்னது கடவுளை மக்கட்பெண்டிர் நயத்தல் எனவும், பின்னது கடவுள் மக்கட்பெண்டிரை நயத்தல் எனவும் வழங்கப்பெறும். அரச கன்னியர் முடி மன்னருக்கு மனைவியரான பின்னரே தெய்வமாக உயர்ச்சி பெறுவராகையால், கடவுட்பெண்டிரை மக்கள் நயத்தலாகப் பாடுதல் இல்லை.

மக்களை வாழ்த்தியும் புகழ்ந்தும் பாடுதலும், அறம் பொருள் இன்பம்பற்றிப் பாடுதலும் செந்துறைப் பாடாண் பாட்டாகும். பதிற்றுப்பத்தும் புறநானூற்றில் வரும் பாடாண் திணைப்பாட்டுக்களும், மக்களைப் புகழ்ந்து பாடும் செந்துறைப் பாடாண்பாட்டுக்கு இலக்கியமாகும். திருக்குறள், அறம் பொருள் இன்பம்பற்றிப் பாடும் செந்துறைப் பாடாண்பாட்டுக்கு இலக்கியமாகும். மக்கட் பாடாண் திணைக்

27. ஷை-நூற். 33 (நச்சி.)

28. வெள்ளைவாரணனார், க. தமிழ் இலக்கிய வரலாறு—தொல்காப்பியம்—புறத்திணையியல்—பக். (108-110).

29. புறத்திணை-நூற். 28 (நச்சி.)

குத் தொல்காப்பியர் இருபது துறைகள் கூறுவர்.[30] இவை யாவும் பழைய வழக்குகளையே குறிக்கின்றன.

தொல்காப்பியர் கூறியவற்றில் சில திணைகளை இரண்டாகப் பிரித்தும், அவர் அகத்தைச் சார்த்திவைத்த கைக்கிளை பெருந்திணைகளைக் கூட்டியும், வேறு சிலவற்றைச் சேர்த்தும் புறப்பொருளைப் பன்னிரண்டாக வகுத்தனர் பின்னையோர். அப்படிப் பகுத்து இலக்கணம் கூறிய நூல்களில் பழமையானது **பன்னிரு படலம்.** அதில் ஒவ்வொரு பகுதியையும் ஒவ்வோர் ஆசிரியர் இயற்றினர் என்று தெரிய வருகின்றது. அஃது இப்போது கிடைக்கவில்லை. அந்த நூலை அடியொற்றி எழுந்த மற்றோர் இலக்கண நூல் **புறப்பொருள் வெண்பாமாலை;** அதனை இயற்றியவர் ஐயர் ஆரிதனுர் என்பவர். இந்நூலின்படி அமைந்த புறத்திணைகள் வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண் திணை, பொது இயல், கைக்கிளை, பெருந்திணை என்பவை. இவற்றுள் முதலன ஏழும் புறம் எனவும், இடையிலுள்ள மூன்றும் புறப்புறம் எனவும், இறுதியிலுள்ள இரண்டும் அகப்புறம் எனவும் வகைப்படுத்தி இலக்கணம் கூறியுள்ளார். மேலும், அவர் சில துறைகட்கு வேறுபட்ட பொருளும் உரைத்துள்ளார். இவற்றை இளம்பூரணரும் நச்சினர்க்கினியரும் ஆங்காங்கே மறுத்துள்ளனர். எனினும், இத்தகைய வேறுபாடுகளை 'முன்னேர் நூலின் முடிவு ஒருங்கு ஒத்தலும் திரிபு வேறுடைத்தாலும்' என இரு வேறு வகைப்பட்ட வழி நூல், சார்பு நூல்களில் மரபு நிலை திரியாது விரவும் பொருள்களாக அமைத்துக் கோடலே முறையாகும்.

---

30. புறத்திணை-நூ. 35 (நச்சி.)

# 20. அகமும் புறமும்

பண்டைத் தமிழ்மக்கள் உயிருணர்ச்சியை அகப் பொருள் என்றும், அஃதொழிந்த ஏனையெல்லாவற்றையும் புறப்பொருள் என்றும் பகுத்து ஆராய்ந்தனர். உயிர்கட்கு அகத்தே எழுகின்ற எண்ணங்கள் யாவும் புறப்பொருள்க ளுடன் இயைந்து காணப்பெறுகின்றன. அவற்றுள் சில அப் புறப்பொருள்களை நேரே பற்றிய எண்ணங்களாகவும், மற்றும் சில அந்நேரெண்ணங்களின் விளைவான வேறெண்ணங்களாக வும் தோன்றுகின்றன. இவ்வாறு புறப்பொருள்களைப் பற்றி நேரே எழும் எண்ணங்களைப் புறப்பொருள் இலக் கணத்திலும், அவ்வெண்ணங்களின் விளைவான வேறு நுட்ப உணர்ச்சிகளையெல்லாம் அகப்பொருள் இலக்கணத்திலும் பண்டையோர் பகுத்தோதியுள்ளனர். தொல்காப்பியர் முத லில் அகத்திணை இலக்கணங் கூறிப் பின்னர் அதற்கினமான புறத்திணை இலக்கணம் கூறுகின்றார். ஆதலின், அவர் அப் புறத்திணை இலக்கணத்தில் பகுத்து எடுத்துக் காட்டும் கூறு பாடுகள் யாவும் அவர்தம் அகத்திணை இலக்கணக் கூறுபாடு கட்கு இனமுடையனவாகவே இருத்தல் வேண்டும். அகத் திணை இயல் கூறுகளை,

> கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்
> முற்படக் கிளந்த எழுதிணை என்ப.1

என்ற நூற்பாவால் இனி விளக்குகின்றார் ஆசிரியர். அஃதாவது, அகத்திணைக் கூறுபாடுகள் குறிஞ்சி, முல்லை, மரு தம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை என ஏழாம்.

---

1. அகத்திணை-நூற்பா 1.

இவ்வாறு நிலைபெயராப் பகுப்புக்களாகப் பிரித்தோதப்பெற்ற அகத்திணைகள் ஏழற்கும் அவற்றிற்கு இனமாய புறத்திணைப் பகுப்புக்களும் ஏழாதல் வேண்டும். ஆசிரியர் தொல்காப்பியனார் குறிஞ்சி முதலான ஏழு அகத்திணைகட்கும் முறையே வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் ஆகிய ஏழு புறத்திணைகளை இனமாக்கிக் காட்டுகின்றார். அஃதாவது,

குறிஞ்சிக்குப் புறம் வெட்சி;
முல்லைக்குப் " வஞ்சி;
மருதத்திற்குப் " உழிஞை;
நெய்தலுக்குப் " தும்பை;
பாலைக்குப் " வாகை;
பெருந்திணைக்குப் " காஞ்சி;
கைக்கிளைக்குப் " பாடாண்

என்ற முறையில் அமைகின்றன. இதனை, "அகங்கை இரண்டுடையார்க்குப் புறங்கை நான்காகாது இரண்டாயவாறு போல, அகத்திணை ஏழற்கும் புறத்திணை ஏழென்றலே பொருத்தமுடைத்தாயிற்று" என்று விளக்குவர் நச்சினார்க்கினியர்.[2] ஆசிரியர் தொல்காப்பியனாரும்,

'அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்
புறத்திணை யிலக்கணந் திறப்படக் கிளப்பின்
வெட்சி தானே குறிஞ்சியது புறனே'
'வஞ்சி தானே முல்லையது புறனே'
'உழிஞை தானே மருதத்துப் புறனே'
'தும்பை தனே நெய்தலது புறனே'
'வாகை தானே பாலையது புறனே'
'காஞ்சி தானே பெருந்திணைப் புறனே'
'பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே'[3]

என்ற நூற்பாக்களால் இவ்வுண்மை இயல்பினை விளங்க உரைக்கின்றார்.

**அகம் - புறம் இனமாதற்குக் காரணம் :** நாம் இவவுலகினைக் கூர்ந்து நோக்குவோமானால், 'அங்கு நிகழும் செயல்கள்

2. அகத்திணை - நூற். 1-இன் உரை.
3. புறத்திணை - நூற். 1, 6, 9, 14, 18, 22, 25 (நச்சி.)

யாவும் உயிர்களின் செயல்களாகவே காணப்பெறுகின்றன. உயிர்களின் செயல்கள் யாவும் அவ் உயிர்களின் உணர்ச்சி களைக் கவ்விக் கிடக்கின்றன. உயிர்களின் உணர்ச்சிகள் மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகளின் வாயிலாக ஐந்து வகைப்பட்டு நிகழும் என்பதை நாம் அறிவோம். அவை முறையே ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்பனவாம். இவ்வுணர்ச்சிகளும் முறையே மண், புனல், தீ, காற்று, வான் என்னும் ஐவகைப்பட்ட புறப்பொருள்களைப் பற்றியே நிகழும் என்பதை ஊகித்து அறியலாம். உயிர்கட்குப் புலனாகும் புறப்பொருள்கள் யாவும் இந்த ஐந்து வகைகட்குள் அடங்கும்; இவற்றிற்கு அப்பாற்பட்டன எவையும் இல்லை என்பது உய்த்துணர்தற்பாலது.

உயிர்கள் மேற்கூறிய ஐந்து பொருள்களையும் நுகர்ந்து தம் உணர்ச்சி நிரம்புவதற்கு இவ்வைந்து பொருள்களாலும் ஆன உடல்களைப் பெற்றிருக்கின்றன. உடம்பு மண்ணாலும், நாக்கு நீராலும், கண் தீயாலும், மூக்கு காற்றாலும், காது வெளியாலும் ஆக்கப்பெற்றுள்ளன. இப்புலனுடம்பை இவ்வைந்து வகையால்தான் பகுத்தாராய்தல் கூடும் என்பதும், இவற்றிற்கு மேலாகவோ குறைவாகவோ பகுத்தாராய்தல் இயலாது என்பதும் ஊகித்தறியக்கூடிய உண்மைகளாகும். எனவே மண் முதலாகிய ஐந்து பொருள்களையும், மெய் முதலான ஐம்பொறிகளின் வாயிலாக உயிர்கள் செயல் புரிந்து, ஊறு முதலான ஐந்து உணர்ச்சிகளையும் பெறுகின்றன என்பது பெறப்படுகின்றது. உயிர்கள் செயல் புரியுங்கால் அவற்றின் உணர்ச்சிக்கு நேரே வருவன முறையே திண்மை, தண்மை, வெம்மை, ஊக்கம், கலப்பு என்ற ஐந்து உணர்ச்சிகளாகும். இவ்வுண்மையை,

> **'தீயின் வெம்மை செய்தோன், பொய்தீர்**
> **வானிற் கலப்பு வைத்தோன், மேதகு**
> **காலின் ஊக்கங் கண்டோன், நிழல்திகழ்**
> **நீரில் இன்சுவை நிகழ்ந்தோன், வெளிப்பட**
> **மண்ணில் திண்மை வைத்தோன்.**[4]

என்ற மணிவாசகப் பெருமானின் கூற்றால் அறியலாகும்.

4. திருவாசகம் — திருவண்டப் பகுதி — வரி (22—26)

உயிர்களிடம் மேற்கூறிய திண்மை முதலான ஐந் துணர்ச்சிகட்கும் ஊறு முதலான ஐந்து உணர்ச்சிகட்கும் வேருகப் பிற உணர்ச்சிகளும் உள. அவை நட்பு, அன்பு, அறிவு, காதல், அருள் என்பவை; இவை அக உணர்ச்சிகளா கும். மண் முதலான ஐந்து பொருள்களும் ஒன்றினென்றடங் காத தனி முதற்பொருள்கள்; இவை ஐந்தினும் ஏனைய பொருள்கள் யாவும் அடங்கி அமையும். நட்பு முதலான ஐந்து உணர்ச்சிகளும் ஒன்றினென்றடங்காத வேறு வேறு தனி முதலுணர்ச்சிகளே; இவை ஐந்திலும் ஏனைய இயல்பு கள் யாவும் அடங்கி அமையும். மண் முதலான ஐந்து பொருள் களையும் நுகராத உயிர்கள் யாண்டும் இல. அங்ஙனமே, நட்பு முதலிய ஐந்து உணர்ச்சிகளையும் உணராத உயிர்கள் எவையும் இல. எனவே, உயிர்கள் யாவற்றிற்கும் மண் முத லான ஐம்பொருள்களாலும் திண்மை முதலான ஐந்து உணர்ச்சிகள் நேரே உண்டாகின்றன என்றும், அவ்வைந்து உணர்ச்சிகளும் ஊறு முதலான நுகர்ச்சிகளாக மாறுகின் றன என்றும், அவையே நட்பு முதலான வேறு உணர்ச்சிகள் ஐந்தையும் நுட்பமாய் விளைவிக்கின்றன என்றும் நாம் உணர் தல் வேண்டும். இவற்றுள் திண்மை முதலான ஐந்து புற உணர்ச்சிகளையே வெட்சி முதலிய திணைகளாகப் புறப் பொருள் இலக்கணத்திலும், நட்பு முதலான ஐந்து உணர்ச்சி களையே குறிஞ்சி முதலிய திணைகளாக அகப்பொருள் இலக் கணத்திலும் பண்டையோர் அடக்கிக் கூறியுள்ளார் என்று ஈண்டு அறிதற்பாலது. எனவே, இத்துணையும் கூறியவற்ருல் அகப்பொருள் கருத்துக்களும் புறப்பொருள் அமைப்புக்களும் இனமாகவே அமைந்துள்ளன என்பது உணரப்படும். அங் ஙனமே, அகப்பொருட் பாகுபாட்டிற்கேற்பவே புறப்பொருட் பாகுபாடும் அமைந்துள்ளது என்பதும் தெளியப்படும். இனி, இவற்றை ஒவ்வொன்ருக விளக்குவோம்.

**வெட்சி×குறிஞ்சி :** ஆசிரியர் தொல்காப்பியனுர் அகத் திணைக் குறிஞ்சிக்குப் புறனகப் புறத்திணை வெட்சியைக் கூறுவர்.

'வெட்சி தானே குறிஞ்சியது புறனே'.

என்பது அவர் கூறும் விதி. ஒரு திணையை எடுத்து விளக்க வேண்டுமானல், அந்தத் திணைக்குரிய முதல், கரு, உரிப் பொருள்களை ஆராய்தல் வேண்டும். முதற்பொருளாவன, நிலமும் பொழுதும்; கருப்பொருளாவன, தெய்வம் உணு மா மரம் முதலியன; உரிப்பொருளாவன, புணர்தல் பிரிதல் இருத்தல் முதலியன. இவற்றுள் முதன்மையாய், ஈண்டைக்கு வேண்டிய வகையாய்க் குறிஞ்சித்திணைக்குக் கொள்ளத் தகுவன நிலமும் பொழுதும் என்னும் முதற்பொருளும், பூவென் னும் கருப்பொருளும், புணர்தல் என்னும் உரிப்பொருளு மாகும். குறிஞ்சிக்கு நிலம், மலை சார்ந்த இடம்; பொழுது, நள் ளிரவு; பூ, அம்மலைநிலத்துப்பூ; புணர்தல், களவுப்புணர்ச்சி யாகும். அங்ஙனமே வெட்சியொழுக்கத்திற்கு நிலம், மலைக் கானமே; பொழுது, நள்ளிரவே; பூ, அம்மலைக்காட்டிற் பூக்கும் வெட்சிப்பூவே; புணர்தல், களவினுல் ஆநிரை கோடலே, இவற்றுல் வெட்சி குறிஞ்சிக்குப் புறனக அமைந்ததைத் தெளியலாம்.

இதனை மேலும் விளக்குவோம்: வெட்சிக்கும் குறிஞ்சிக் கும் நிலம், மண்ணின் திரளையும் மண்ணின் இயல்பும் மிக்கு விளங்கும் கரடுமுரடான மலை நிலமாகும். ஆகலின், புறப் பொருள் அரசன் மண்ணசையால் வெட்சியொழுக்கம் மேற் கொண்டு ஆநிரையைக் கவர்ந்தான்; அகப்பொருள் தலைவன் அம்மண்ணினுல் உருவாகி, அதனினும் நுட்ப இயல்பு வாய்ந்த பெண்ணுடம்பு வேட்கையால் குறிஞ்சி யொழுக்கமாகிய கள வுப்புணர்ச்சியை மேற்கொண்டான்.

மண்ணினின்று உயிர்கட்கு நேரே உண்டாகும் உணர்ச்சி திண்மை. அத்திண்மை எனப்படும் வலியுணர்ச்சியால் அரசன் போர்க்குத் தொடுத்த வெட்சி புறப் பொருளாயிற்று: அத்திண்மை எனப்படும் நெஞ்சுறுதி வன்மையால் தலைவன் தன் தலைவியைக் களவாடுதற்கெண்ணிய குறிஞ்சி அகப் பொருளாயிற்று. போர்ச்செயல் விரும்பும் வலியுணர்ச்சி யும் தலைவியின் களவொழுக்கம் விரும்பும் நெஞ்சுறுதியும் ஆகிய இரண்டும் திண்மை யுணர்ச்சியின்பாற் படுமே யாயினும், அவ்விரண்டினுள்ளும் பின்னது நுட்பம் வாய்ந்த தாகலின், அஃது அகமாயிற்று; முன்னது புறமாயிற்று.

திண்மை என்பது, ஒன்றேடொன்று இணைந்து கூடி வலி வாகும் இயல்புடையது. ஆகவே, அரசன் அயல் நாட்டையும் தன் நாட்டோடு சேர்க்கும் கூட்ட உணர்ச்சியினுல் வெட்சியை மேற்கொண்டான்; தலைவன் தன்னெடு தன் தலைவியைப் புணர்க்கும் நட்புணர்ச்சியினுல் குறிஞ்சியை மேற்கொண்டான். அரசனது கூட்ட உணர்ச்சியினும் தலைவனது நட்புணர்ச்சி நுணுக்கமுடைத்தாதல் அறிதற்பாலது.

அரசனது போருக்கு அவன் உடம்பின் வலிமை பயனுயிற்று; அங்ஙனமே, தலைவனது களவொழுக்கத்திற்கு அவன் உடம்பின் ஊறு பயனுயிற்று. போர் நிகழ்ச்சியில் ஓங்கிக் குத்துதலும் வெட்டுதலும் செய்யும் உடல் வன்மையினும், களவொழுக்க நிகழச்சியில் மெல்லத் தொடுதலும், தைவரலும் (தடவுதல்) ஆகிய உடம்பின் ஊறு மிகவும் நுட்பமானது.

ஓரிடத்தில் பகையுணர்ச்சி முதிர்ந்தால், அது நுணுகி பிறிதோரிடத்தில் நட்புணர்ச்சியாக மிகுமாதலின், அரசனது பகையுணர்ச்சி புறமாயிற்று; தலைவனது நட்புணர்ச்சி அகமாயிற்று.

மேற்கூறியவற்ருல் வெட்சி குறிஞ்சிக்குப் புறமாதலை அறியலாம். மண்ணின் பொருட்பயிற்சி வெட்சி என்னும் திண்மையுணர்ச்சியாய் நுணுகிப் புறப்பொருள் தலைவனுகை இருந்த அரசன் அகப்பொருள் தலைவனுக மாறுகின்ருன். மலைக்கானங்களில் விலங்குகளை வேட்டையாடச் சென்ற அரசன் ஆங்கு விலங்குகளோடு போர் செய்து புறப்பொருள் தலைவனுக இருக்கின்ருன்; புற உணர்ச்சி நுணுக நுணுக அவன் ஆங்கே அப்பொழுதே தன் தலைவியொடு களவில் ஒழுகி அகவுணர்ச்சி மிகுந்து அகப்பொருள் தலைவனுய் விளங்குகின்ருன். இதனை உட்கொண்டே பண்டைத்தமிழ் இலக்கியங்கள் யாவும் வேட்டமேற்சென்ற அரசன் ஆங்கொரு பொழிலகத்துத் தன் தலைவியைக் கண்டு இயற்கைப் புணர்ச்சி எய்தினன் என்று ஒரு வரலாருக ஒருவாய்ப்பட்டாற்போல் நுவல்கின்றன.

**வஞ்சி× முல்லை:** வஞ்சி என்னும் புறப்பொருள் தனக்கு அகமான முல்லை ஒழுக்கத்தோடு எங்ஙனம் பொருந்துகின்றது

என்பதைக் காண்போம். முல்லைக்கு நிலம், காடுசார்ந்த இடம்; பொழுது, கார் கால மாலை; பூ, அக்காட்டிடத்துப்பூ; இருப்பு, இளமரக்கா சூழ்ந்த வீடு. அங்ஙனமே, வஞ்சி யொழுக்கத்திற்கும் முதல் கரு உரிப்பொருள்களான இடமும் பொழுதும் பூவும் இருப்பும் முறையே காடும், வேனில் இறுதி யாகிய கார் கால இயல்பமைந்த மாலையும், காட்டிடத்திற் பூக்கும் வஞ்சிப்பூவும், பாடிவீட்டிருப்புமாகும். தலைவி தனது வீட்டில் போர்மேற்சென்ற தலைவனின் வரவை எதிர் நோக்கி இருத்தல் போலத் தலைவன் பாடி வீட்டில் இருப்பான். இவ்விருவகை இருப்பு நிகழ்ச்சிகளும் வேனிற்காலத்தே நிகழ் வனவாயினும், அவ்விருப்பைப்பற்றிய உணர்ச்சி முனைப்புக் கார் கால இயற்கையதான வேனிலிறுதிக்கண் விளையுமாத லின் ஆசிரியர் அதற்குக் கார்காலமே காலமாக வரைந்து ஓதினர் என்று அறிதல் வேண்டும். இவ்வாற்ருன் வஞ்சி முல்லைக்குப் புறனுயிற்று.

இதனை மேலும் விளக்குவோம். காட்டினை நினைத்தவுடன் நமது உணர்ச்சிக்குச் செடிகொடிகளின் ஈட்டமே உருவாய்த் தோன்றுகிறது. காடுகளில் மண் நீர் முதலிய ஐந்து பொருள்களிலும் சிறப்பாகக் காணப்படுவது நீர்; அ.:து அங் குள்ள செடிகொடிகளின் பயனுகும். இவ்வுலகில் காடிருக் கும் இடங்களிலேயே மழை நிரம்பப் பெய்கின்றது; குளிர்ந்த காற்றும் அங்குதான் வீசும். மழைக்காலத்தில் மழையும் வேனிற்காலத்தில் குளிர் காற்றும் தந்து காடுகள் தமக் குரிய நீர்த்தன்மையை வெளிப்படுத்தும்.

நீரினின்று உயிர்கள் நேராக உணரும் உணர்ச்சி தண்மை என்பது. தணிதல், ஆறுதலாகும். வஞ்சியொழுக்கம் என்பது கறுவு தீர்க்கும் செயலாதலின், அஃதொரு தணித லாகும். முல்லையும் தலைவி தனது காமக்கொதிப்பைப் பொறுத்திருக்கக்கூடிய ஒரு வகைத் தணிதலாகும். மேலும், மண் முதலான ஐம்பொருள்களில் நீரினைச் சுவைத்துக் காண் பது வாய் என்பதை நாம் நன்கு அறிவோம். போர்மேற் சென்ற வேந்தன் வஞ்சியொழுக்கத்தில் அடிக்கடி நீரைச் சுவைக்கும் வாய்ப்புக்கள் நேரிடும். இக்காலத்திலும் படை

வீரர்கட்கு நீர் ஒரு பெரிய பாதுகாப்புப் பொருளாக வேண்டப் படுகின்றது. தலைவன் பிரிவினைப் பொறுத்துக்கொண்டிருக்கும் முல்லையிருப்பின்கண்ணும் அவளை ஆற்றுவித்தற் பொருட்டு அவள் தோழியர் இனிய குடிநீர், பனிநீர் முதலியவற்றை அதிகமாகப் பயன்படுத்துவர்.

வஞ்சியொழுக்கம் மேற்கொண்ட வேந்தன் முடிவில் பகையரசன் மேல் ஒருவித அன்பு கொள்வான். முன்பெல்லாம் தன்னுடன் நட்புக் கொண்டிருந்தவன் இஞ்ஞான்று பிரிந்து தேய்ந்து தன் கையை எதிர் பார்க்கும் நிலையிலிருப்பதே இவ்வன்பினை ஊற்றெடுக்கச்செய்யும். இதனை ஆசிரியர் தொல்காப்பியரும் 'குன்றாச் சிறப்பிற் கொற்றவள்ளை' என்று ஒரு துறையமைத்துச் சிறப்பிப்பர்.[5] இங்ஙனமே, முல்லையின் முடிவிலும் முன்பெல்லாம் கூடியிருந்த தலைவி தன் தலைவனது வஞ்சிச்செலவால் பிரிவு நேர்ந்து மிகப்பெரிதும் பொறுத்திருந்து அவ்விருப்பின் பயனாகப் பின்பு கூடுங் கூட்டவியல்பினால் முதிர்ந்த அன்பு உணர்ச்சியினை ஊற்றுப் பெருக்குப்போல் பெறுவாள். எனவே, இரண்டிலும் அவற்றிற்குரியோர் பெரிது பழகிப் பயன் என்று பெறும் பொருள் அன்பேயாகும். இங்ஙனம் முல்லையும் வஞ்சியும் அகம்புறமாய் இயைந்து நிற்பதையும், நீரின் பொருட்பயிற்சி 'வஞ்சி' என்னும் தன்மையுணர்ச்சியாய் நுணுகிச் சுவைக்கும் செயலால் 'முல்லை' என்னும் அன்பு வளர்ச்சியாய்ப் பின்னும் நுணுகி அகப்பொருள் காதலர்க்குப் பேரா இன்பம் பெருக்கி நிற்பதையும் கண்டு கொள்க.

**உழிஞை × மருதம் :** நொச்சி[6] ஒழுக்கத்தை உள்ளிட்ட புறத்திணை உழிஞை அகத்திணை மருதத்துடன் கொண்டுள்ள ஒற்றுமை மிகவும் நுணுக்கமுடையது. மருதத்திற்கு உரிய இடம், வயல் சார்ந்த நிலம் ; சிறுபொழுது, வைகுறு விடியல்;

---

5. புறத்திணை - நூற். 8 (நச்சி.) இது 'வேந்தனது குறையாத வெற்றிச் சிறப்பினால் பகைவர் நாடழிதற்கிரங்கித் தோற்றோனை விளங்கக் கூறும் வள்ளைப்பாட்டு' என்பர் நச்சினார்க்கினியர். வள்ளை - உரற்பாட்டு.

6. நொச்சி - எயில் காத்தல்

பெரும்பொழுது, அறுவகைப்பொழுதும் ; தலைவனும் தலைவியும் பயன்படுத்தும் பூக்கள் தாமரை, செங்கழுநீர் முதலியன. ஒழுக்கம், ஊடல் ; அஃதாவது, தலைவனது பரத்தைமையைக் குறித்து மனங்கவன்று வாயிலடைத்து நிற்கும் தலைவியை இரவெல்லாம் பரத்தையர் வீட்டில் தங்கியிருந்த தலைவன் விடியற்காலையில் வந்து வாயில் திறக்குமாறு வேண்டி நிற்றல். இங்ஙனமே, புறத்திணை உழிஞையொழுக்கம் நிகழும். அரசனது கோட்டையும் பெரும்பாலும் வயல் சூழ்ந்த நிலத்தின்கண் இருக்கும்.[7] பகைமேற்செல்லுதல், ஆண்டின் எல்லாக் காலத்திலும் நடைபெறும் செயல்; அங்ஙனம் செல்லும் வஞ்சி மன்னன் இரவெல்லாம் பாசறையில் தங்கியிருந்து விடியற்காலையில் போர்க்கெழுந்து மதில் முற்றுவான். உழிஞையொழுக்கத்திற்கும் அதன்கண் அடங்கும் நொச்சியொழுக்கத்திற்கும் அரசர் அணியும் உழிஞைத்தழையும் நொச்சிப்பூவும் மருத நிலத்தில் உள்ளனவே. உரிப்பொருள் நிகழ்ச்சியிலும் இவ்வகப்புறத்திணைகள் மிகவும் ஒற்றுமையுடையனவாய் விளங்குகின்றன. புறத்திணை உழிஞையிலும் கோட்டைக்கு வெளியில் நிற்கும் அரசன் உள்ளிடத்தைக் கதுவ விழைகின்றனனாக, கோட்டையின் உளளிருக்கும் அரசன் அதற்கு மறுத்து வாயிலடைத்துக்கொண்டு உள்ளிருக்கின்றனன். இன்னும், வீட்டினுள் கதவடைத்து நிற்கும் தலைவி உற்ற நேரத்தில் வாயிலைத் திறந்து தன் தலைவனோடு ஊடற்போர் புரிய விரும்புதல் போலவே, கோட்டையின் உள்ளிருக்கும் அரசனும் உற்ற நேரத்தில் வாயில் திறந்து வெளிப்பட்டுப் புறத்தரசனோடு போர் புரியவே விரும்புகின்றான். எனவே, இவ்வாற்றான் உழிஞைக்கும் மருதத்திற்கும் உள்ள ஒற்றுமை நுணுக்கம் விளக்கமாதல் காண்க.

மேற்கூறிய கருத்துக்களையே ஆசிரியர் நச்சினார்க்கினியர் "இருபெரு வேந்தர் தம்முண் மாறுகொண்டவழி எதிர்

7. புறம் 338 காண்க. இதில் பச்சைப்பசேலெனப் பயிர் பரந்த கழனிகளின் நடுவில் அமைந்திருக்கும் அரசனது கோட்டையரணுக்கு நீலப்பாயலை விரித்தாற போன்ற நீர்ப்பரப்பினையுடைய கடலின் நடுவிடத்தான கப்பலை உவமை காட்டி விளக்கியுள்ளார் ஆசிரியர் குன்றூர்க்கிழார் மகனார்.

செலற்காற்றுது போய் மதிலகத்திருந்த வேந்தனின் மதில் பெரும்பான்மையும் மருதத்திடத்ததாதலானும், அம்மதிலை முற்றுவோனும் அந்நிலத்திருத்தலானும், ஒருவன் வாயில் வேண்டத் திறவாது அடைத்திருத்தலொப்புமையானும், உள்ளிருந்தவனும் புறப்பட விரும்புதலானும், மருதம் போல் இதற்கும் பெரும்பொழுது வரைவின்மையானும், சிறுபொழுதினும் விடியற்காலமே போர் செய்தற்குக் காலமாதலானும் உழிஞை மருதத்திற்குப் புறனாயிற்று'' என்று விளக்குவர்.[8]

இதனை மேலும் சற்று நுணுகி நோக்குவோம். மருத நிலத்தில் மண் முதலான ஐம்பொருள்களிலும் தீயின் முனைப்பே நன்றாய் விளங்குகின்றது.[9] அத்தீயின் இயல்பே இரண்டற்கும் இடனாதல் வேண்டும். தீயின் இயல்பு 'வெம்மை' என்பது; மருத ஒழுக்கம், ஊடல்; தலைவி வெம்மையுடையளாய் நின்று தன் தலைவனோடு ஊடுகின்றமை வெம்மையொழுக்கமேயாகின்றது. உழிஞையரசனும் நொச்சியரசன்பால் வெம்மையுடையனாய் மதில் முற்றுதலின் அவனொழுக்கமும் வெம்மையொழுக்கமாகின்றது. தீயின் வெம்மை விளக்கத்தைக் கட்பொறியே நன்கு அறிகின்றது. ஊடற்போரிலும் நொச்சிப்போரிலும் மெய் முதலான ஏனை நாற்பொறிகளினும் கட்பொறியே மிகவும் பயன்படுகின்றது. ஊடல் ஒழுகத்தில் தலைவன் தலைவியின்கண் உருத்தெழுந்த வெம்மையின் விளக்கத்தைக் காண்கின்றான். உழிஞையொழுக்கத்திலும் இரு அரசரிடையேயுள்ள வெம்மை விளக்கத்தை அறிந்துகொள்ளற்குக் கட்பொறியே மிக்குப் பயன்படுகின்றது. ஒளி என்பது வெம்மை இயல்பினதாதலின், அதனையுணரும் பொறி கட்பொறியேயாகும்.

மேலும், இந்த இரண்டு திணைகளில்தான் அறிவின் திறம் மிக்கு விளங்குகின்றது. வெட்சி முதலிய திணைகளில் பெரும்பான்மையும் ஊக்கத்ினாலும் உடலுறுதியினாலுமே செயல்

8. புறத்திணை - நூற். 9 - இன் உரை.

9. இதன் விளக்கத்தை இளவழகனார் எழுதிய 'பண்டைத் தமிழர் பொருளியல் வாழ்க்கை' என்ற நூலில் காண்க. பக்-(78-79). கழக வெளியீடு.

கள் நடைபெறுகின்றன. பகைவர் நெருங்க முடியாமல் நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண் என்ற நால்வகையரண்களையும் சூழ்ச்சிகளும் வஞ்சனைகளும் பொருந்த அமைத்து. அவற்றின் நடுவில் வலிமை சான்ற மதிலரண்கள் பலவும் கோட்டைகளும் எழுப்பிப் பல்வேறு வகையான போர்ப்பொறிகளையும் கருவிகளையும் ஆண்டு நிறுத்தி, எத்தனை நாட்களாயினும் அங்கேயேயிருந்துகொண்டு தனி வாழ்க்கை செலுத்தும் அருநிலையுடைய அகத்தரசர் புறத்தரசரோடு பொருதலும், இங்ஙனமே புறத்தரசரும் மேற்காட்டிய அணுகுதற்கரிய இத்தனை இடையூறுகளையும் தப்பி அவ்வலிய அரண்களையும் அழித்து அகத்தரசனைக் கைப்பற்றுதலும் அறிவின் திறத்தால் நடைபெறும் செயல்களன்றோ? இங்ஙனமே, குறிஞ்சி முதலிய ஏனை நிலங்களைவிட மருத நிலத்திலேயே வாழ்விடங்களும் வாழ்முறைகளும் நன்கு விளக்கம் பெற்றிருப்பதை அறிக. இனி, அகப்பொருள் ஒழுக்கத்தின் கண்ணும் ஏனைய முறைகள் யாவும் உடம்பின் தொடர்பால் இன்பம் விளைவிப்பனவாக, ஊடல்முறை மட்டிலும் அறிவுப் போரினால் இன்பம் விளைவிக்கின்றதைக் காண்க. எனவே, இவ்வாற்றால் மருதமும் உழிஞையும் அகப்புறமாய் இயைந்திருப்பதையும், தீப்பொருளின் இயல்பான உழிஞையென்னும் வெம்மையுணர்ச்சி கட்பொறி கொண்டு ஒளி காணும் செயலால் மருதம் என்னும் அறிவின் திறமாய் அணுகி அமைந்திருப்பதையும் ஓர்ந்து உணர்க.

**தும்பை × நெய்தல்:** தும்பையென்னும் புறத்திணையொழுக்கம் தனக்கு அகமான நெய்தல் ஒழுக்கத்தோடு பொருந்துவதை ஆராய்வோம். நெய்தலுக்கு நிலம், கடலும் கடல் சார்ந்த மணல் வெளியும் உப்பங்கழியுமாகும். அதற்குரிய சிறுபொழுது, எற்பாடாகும். எற்பாடு, பகற்பொழுதின் பிற்கூறு. அலையிடை வளியும் பொழிலிடை மணமுமான நெய்தல் நிலப்பயன்கள் எல்லாம் எழுகின்ற நேரம் எற்பாட்டு நேரமேயாகலின், அவற்றைத் தலைவி நுகர்ந்து காணும் நேரம் அதுவே என்க. உரையாசிரியர்கள் அனைவரும் ஆறு பெரும்பொழுதுகளையும் இதற்குரியனவாகக் கொண்டனர்.

ஆனல், இளவழகனர் மாலை, யாமம், வைகறை, காலை, நண்பகல், எற்பாடு என்னும் சிறுபொழுதுகளாறும் கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்னும் பெரும்பொழுதுகளாரேடு முறையே இயைபுடையன என்று கோள்வதே இயற்கையாகும் என்று கொண்டு முதுவேனிலை நெய்தலுக்குரிய பெரும்பொழுதாகக் கொள்வர். [10] பூ, நெய்தற் பூ; ஒழுக்கம், இரங்கலும் இரங்கல் நிமித்தமும். இங்ஙனமே, தும்பையொழுக்கம் நிகழும் இடம் மணல் பரந்த களர்வெளி நிலமான நெய்தல் நிலமே; இதுவே போர் செய்தலுக்கு எற்ற இடமாகும். இத்தும்பைத் திணையைப் பற்றிக் கூறும் பழந்தமிழ்ப் பாடல்கள் எல்லாம் பெரும்பாலும் கடலையும் கடற்புறத்தையும் பற்றிய கருத்துக்களே உவமைப் பாருள்களாக எடுத்துக்காட்டப்பெற்றிருத்தல் இதனை வலியுறுத்தும். இப்போரொழுக்கம் முனைப்பாய் நிகழ்ந்து முடியுப நேரம் ஞாயிறு பொழுதுபடும் போதாகும். அஃதாவது எற்பாடு; பிற்பகல், போர்மேற்சென்ற தலைவன் கார் காலத்து தொடக்கத்தில் போரை முடித்துத் திரும்புவான் என்று தண்டமிழ் இலக்கண இலக்கியங்களும் முல்லையொழுக்கத்தில் முடித்துக் கூறுதலின், பகைமேற்சென்ற தலைவனுக்கும் போர் நிகழும் காலம் அக்கார்ப் பருவத்திற்கு முன் பருவமான முதுவேனிற்பருவமே என்று கோடலால் தவறு ஒன்றும் இல்லை. பேரொழுக்கத்திற்குரிய தும்பைப்பூ ஏனைய நிலங்களில் பெறப்படாமையின் அது நெய்தல் நிலத்துப் பூவென்றே கொள்ளப்படும். நெய்தலைச் சார்ந்த மணல் திட்டுக்களில் இத்தும்பைப்பூக்கள் ஏராளமாகப் பூத்திருத்தலை நாம் நன்கு அறிவோம்.

தலைவனும் தலைவியும் ஒருவரையொருவர் பிரிந்தக்கால் நெய்தல் நிலத்தின் கடற்காற்றும் கானற்காற்றும் ஊறி மாலைப்பயனும் பொழிற்பயனும் நுகர்ந்து, அவ்வாற்ருல் தம் துணையை நினைந்து பிரிவாற்ருமல் இரங்குவர். போர் நிகழ்ச்சி

---

10. 'பண்டைத்தமிழர் பொருளியல் வாழ்க்கை' (கழகப்பதிப்பு) — பக் 99. 'பொழுதுகள்' பற்றி இவர் மேற்கொள்ளும் ஆராய்ச்சி (பக் 96— 102) சிந்தனைக்குரியது.

யிலும் இந்நேரத்தில் ஆண்டுள்ளார்க்கு இரக்கவுணர்ச்சி தோன்றி நிற்கும். தன்னலங்களனைத்தினையும் பொருட் படுத்தாமல் போர் முனையில் வீரத்துடன் பொருது விழுப்புண் பட்டு விழும் மறவர்களைப் பற்றி மாற்றாரும் மற்றையோரும் இரங்குவர். இவ்வுண்மையைத் தொல்காப்பியர் 'வாளோ ராடும் அமலை' என்ற துறையால் சிறப்பித்துள்ளார்.[11] பகை யினால் வீர முனைப்பும் அவர் வீழ்ச்சியினால் இரக்க முனைப்பும் எழுந்தாலும் அவற்றுள் சிறப்புடையது இரக்கமே; அதுவே போர் நிகழ்ச்சியின் முடிந்த பயனாகக் கொள்ளப் பெறும். மேலும், போர்க்களத்தில் இறந்துபட்ட வீரர்களின் பெண்டிர் அங்குச் சென்று விழுப்புண் பட்டு வீழ்ந்து கிடக்கும் தம் கணவன்மாரைத் தழுவிக்கொண்டு கண்ணீர்விட்டு இரங்குவர். நச்சினார்க்கினியரும், "நெய்தற்குரிய பெருமணல் உலகம் போலக் காடும் மலையும் கழனியும் அல்லாத களரும் மணலும் பொருகளமாக வேண்டுதலானும், பெரும்பொழுது வரைவின்மையானும், எற்பாடு போர்த்தொழில் முடியும் காலமாதலானும், இரக்கமும் தலைமகட்கே பெரும்பான்மை உளதாயவாறு போலக் கணவனை இழந்தார்க்கன்றி வீரர்க்கு இரக்கமின்மையானும், அவ்வீரக் குறிப்பின் அருள் பற்றி ஒருவர் ஒருவரை நோக்கிப் போரின்கண் இரங்குப வாகலா னும், ஒருவரும் ஒழியாமல் பட்டுழிக் கண்டோர் இரங்குப வாகலானும், பிற காரணங்களாலும் நெய்தற்குத் தும்பை புறனாயிற்று."[12] என்று நுணுக்கமாக எடுத்துக்காட்டி யுள்ளார்.

இதனை மேலும் நுணுகி ஆராய்வோம். நெய்தல் நிலத்தில் மண்முதலான ஐம்பொருள்களிலும் காற்றே மிகுந்து தோன்றும். கடல் பெரும் பரப்புடையதன்றோ? காற்றின் தன்மை 'ஊக்கம்' என்பது; அஃது ஒரு கருத்தில் முனைப் புடைய தன்மையாகும். போர் நிகழ்ச்சியில் பெரிதும் பயன் பட்டது இதுவே. தலைவன் தலைவியரும் தம் துணைவரைப் பிரிந்த நிலையில் ஒரே முனைப்பாக நின்று இரங்கியது இவ்வூக்

11. புறத்திணை - நூற். 17 (நச்சி.)
12. புறத்திணை - நூற். 14 (நச்சி.) உரை.

கத்தினாலன்றோ ? நெய்தல் நிகழ்ச்சியில் கடற்காற்றினை மலர் மணமாக முகர்ந்துணர்ந்தது மூக்கு; போர் நிகழ்ச்சியிலும் வீரர்கள் இப்பொறியினாலேயே புலாலை முகர்ந்துணர்ந்தனர். எனவே, இருதிறத்தாரும் முகர்ந்துணர்ந்தது நாற்றம் என்பது தெளிவு.

இறந்துபட்ட வீரர்களை நினைந்து இரங்குபவர்க்கு முடிவில் அவர்பால் உண்டாவது உண்மைக் காதல் எண்ணமாகும். மிகக்கொடுமையான வீரக் குறிப்பில் உழல்வார்க்கு முடிவில் விளைவது காதலே ; போர் முடிந்ததும் தலைவன் தன தலைவியின்பால் காதல் கொண்டு வீடு திரும்பும் உண்மை இதனை வலியுறுத்தும். இங்ஙனமே, நெய்தல் நிலப்பயனை எற்பாட்டில் நுகரும் தலைவிக்கும் தன் தலைவன்பால் முறுகிய காதல் உணர்ச்சி பெருகி எழுதல் இயற்கை. எனவே ஊக்கமே தும்பையொழுக்கம் என்றும், காதலே நெய்தல் உணர்ச்சி என்றும் உளங்கொள்க. காற்றின் பொருட்பயிற்சி ஊக்கம் என்றும் தும்பை யுணர்ச்சியாய் நுணுகி முகரும் செயலாதலால் காதல் என்னும் நெய்தல் உணர்ச்சியாய்ப் பின்னும் நுணுகி அகப்பொருளாகி உண்மைக் காதலர்க்கு இன்பம் விளைவித்தலை நாம் உணர்தல் வேண்டும்.

**வாகை × பாலை :** இனி, வாகைப்புறம் தனக்கு இனமான பாலையகத்தோடு பொருந்துமாற்றைக் காண்போம். வாகையொழுக்கத்திற்கும் பாலையொழுக்கத்திற்கும் உரிய இடம் குறிஞ்சி முதலான நானிலதத்துக்கும் நடுப்பட்ட வேறு நிலமாகும் ; இதுவே பாலை நிலமாகும். வெற்றி யெய்திய அரசன் அவ்வெற்றித்தோற்றம் விளங்கும்படி நெய்தலை நீங்கி வழிப்பற்றுவான் ; இவன் பற்றிவரும் அவ்வழிநிலமே வெற்றிக்குரிய நிலமாகும். அது பாலை நிலம். அங்ஙனமே தலைவியைப் பிரிந்த தலைவனும், அல்லது தலைவியோடு உடன் போகும் தலைவனும் தமது பாலையொழுக்கத்தை நிகழ்த்தும் இடம் அவ்வழிநிலமே என்பது ஈண்டறிதற்பாலது. எனவே, இரண்டற்கும் உரிய நிலம் பாலையாகும்

பாலைக்குப் பொழுது, இளவேனிலும் நண்பகலும் ஆகும். தலைவன் நண்பகலில் தலைவியைப் பிரிந்து மணல் வெளியில்

வழிச் செல்லுதலைப் போலவே, அரசனும் வாகையுடையனும் வெயிலிலெல்லாம் வழியில் தங்கி, மாலையில் தலைவியை அடைகின்றான். வாகையரசன் முடியில் அணியும் வெற்றிப் பூ 'கொத்தான் வாகை' யாகும்; அது பாலை நிலப்பூவாகும். பாலைக்கு உரிப்பொருள் பிரிதல்; தலைவனும் தலைவியும் ஒருவரையொருவர் பிரிதல். வாகைத்திணையிலும் அரசன் கலந்து புரிந்த போரினின்றும் பகைவரைப் பிரிந்து பிறல் காண்க. எனவே, முதல் கரு உரிப்பொருள்களால் இரண்டு திணைகளும் இயைந்து நிற்றலை அறிக.

இரண்டற்கும் உள்ள தொடர்பை நச்சினார்க்கினியர் கூறுமாறு: "பாலைக்குப் புணர்ச்சியின் நீங்கி இல்லறம் நிகழ்த்திப் புகழெய்துதற்குப் பிரியுமாறு போலச் சுற்றத் தொடர்ச்சியின் நீங்கி அறப்போர் செய்து துறக்கம் பெறும் கருத்தினால் சேறலானும், வாளினும் தாளினும் நிறையினும் பொறையினும் வென்றியெய்துவோரும் மனையோரை நீங்கிச் சேறலானும் பிரிவுளதாயிற்று. பாலை தனக்கென ஓர் நிலமின்றி நால்வகை நிலத்தில் நிகழுமாறுபோல முற்கூறிய புறத்திணை நான்கும் இடமாக வாகைத்திணை நிகழ்தலின் தனக்கு நிலமின்றாயிற்று. 'நாளும் நாளும் ஆள்வினையழுங்க இல்லிருந்து மகிழ்வோர்க் கில்லையால் புகழ்' (சிற்றெட்டகம்) என ஆள்வினைச் சிறப்புக் கூறிப் பிரியுமாறு போல இதற்குத் துறக்கமே எய்தும் ஆள்வினைச் சிறப்புக் கூறலும் கொள்க. பாலை பெருவரவிற்றாய்த் தொகைகளுள் வருமாறு போல வாகையும் பெருவரவிற்றாய் வருதலும் கொள்க"[13] என்பது.

இரண்டற்கும் உள்ள உறவினை மேலும் நுணுகிக் காண்போம். பாலை நிலத்தின் தோற்றம் வெட்ட வெளியே; அதனை 'வான்' என்று வழங்குவர் அறிஞர். வானில் எல்லா நுண்ணணுக்களும் கலந்து நிற்றலின் வானியல்பைக் 'கலப்பு' என வழங்கலாம் உருவுடைய அணுக்களாலான ஒவ்வொரு பொருளின் ஒவ்வோரணுவினிடையிலும் வான் வெளியுள்ளதென்று அணுவியலறிஞர் கூறுவர். வெற்றியடைந்த அரசனும் தோற்றவனுடன் பகை தீர்ந்து ஒற்றுமை

13. புறத்திணை - நூற். 18 - இன் உரை (நச்சி.)

யாகக் கலந்து நிற்றலால் வாகையிலும் 'கலப்பு' இருத்தலைக் காண்க.

வானிடை அணுவும் அணுவிடை வெளியுமாக அவை கலந்திருத்தலின், அணுக்கள் ஒன்றோடொன்று உராயுங்கால் 'ஓசை' இவ்வெளியில் விளைகின்றது. எனவே, ஓசை பிறக்கும் இடம் வான்வெளியாகும் ஓசையை உணர்வது செவிப் பொறி. வாகைப்பேற்றை அரசனும் செவியினாலேயே அறிகின்றான். அஃதாவது, கண்டார் புகழ்ந்து கூறும் சொல் லோசைகள் அவன் காதிற்கு எட்டுகின்றன. பாலையொழுக் கத்திலும் தலைவி தன் தலைவனது பிரிவை அவன் கூறும் சொற்களாலும் தோழி முதலியோர் கூறும் சொற்களாலும் செவியினாற் கேட்டே அறிகின்றான்.

வாகையொழுக்கம் ஒழுகும் அரசனிடமும் பாலைத்திணை யிலுள்ள தலைவனிடமும் அருள் என்னும் அரிய இயல்பு விளை கின்றது. வாகையரசன் தன்னால் அழிக்கப்பட்ட பகைவன் மீது அருள் கொள்ளுகின்றான். பாலையொழுக்கத் தலைவனும் தான் விட்டு நீங்கிய தலைவியின்பால் அருள் காட்டுகின்றான். எனவே, வான்வெளியின் பயிற்சி கலப்பு என்னும் வாகை யுணர்ச்சியாய் நுணுகிக் கேட்கும் செயலால் அருள் என்னும் பாலையுணர்ச்சியாய்ப் பின்னும் நுணுகியமைதலைக் கண்டு கொள்க.

**காஞ்சி × பெருந்திணை** : காஞ்சி என்பது நிலையாமையைக் கூறுவது. அறம் பொருள் இன்பங்களின் நிலையின்மை உலகியலை நோக்க நற்பொருள் அன்றென விலக்கப்படுகின் றது. அங்ஙனமே ஏறிய மடல் திறம், இளமை தீர் திறம் தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம், மிக்க காமத்து மிடல் ஆகிய நான்கும் தீயகாமம் என விலக்கப்பெறுகின்றன. அறம் பொருள் இன்பம் ஆகியவை பற்றியன்றி நிலையாமையென்ப தொன்றில்லை. அங்ஙனமே, பெருந்திணையும் ஐந்திணைக்குரிய நிலத்தின்கண் நிகழ்தலன்றித் தனக்கென ஒரு நிலத்தைப் பெற்றிருக்கவில்லை. 'காஞ்சித்திணையில் அரசனைப் புலவர் கள் வலிந்து நிலையாமை யறிவுரைத்துத் தம் வழிப்படுத்து கின்றனர். அங்ஙனமே, பெருந்திணையிலும் காதலர்கள்

தம்முள் ஒருவரையொருவர் வலிந்து வழிப்படுத்திக்கொள்ளு கின்றனர். இவ்வாற்ருன் இவையிரண்டன் உறவு முறை அறியப்பெறும்.

**பாடாண் × கைக்கிளை :** ஒரு நிலத்திற்கு உரித்தன்றி ஒரு தலைக் காமமாகி வருவது கைக்கிளையாகிய அகத்திணை. அங்ஙனமே, பாடாண் திணையும் ஒருபாங்கு உரித்தன்றி ஒருவனையொருவன் யாதானுமோர் பயன் கருதியவழி மொழிந்து நிற்பது. இயற்பெயர் கூறப்படுதலும் கழிபேரிரக்க மல்லாத செந்திறத்தால் வருவதும் இரண்டற்கும் ஒக்கும். "ஒரு தலைவன் பரவலும் புகழ்ச்சியும் வேண்ட ஒரு புலவன் வீடுபேறு முதலிய பரிசில் வேண்டுதலின், அவை தம்மின் வேருகிய ஒருதலைக் காமமாகிய கைக்கிளையோடொத்தலின் பாடாண்திணை கைக்கிளைக்குப் புறனுயிற்று"[14] என்று கூறுவர் நச்சினுர்க்கினியர்.

காஞ்சித்திணையும் பாடாண்திணையும் அரசனுடைய அரசியல் ஒழுக்கங்கள் ஆகா; அவை அவனுடைய அற ஒழுக்கங்களாகும். இந்த அற ஒழுக்கங்களை அவன் எஞ் ஞான்றும் உடையவனுயிருத்தல் வேண்டுமாகலின், இவை வெட்சி முதல் வாகை ஈருக நிகழும் ஐம்பெரும் புற ஒழுக்கங் கட்கும் பொதுவாய் அவற்றுள் அடங்கும். அங்ஙனமே கைக்கிளையும் பெருந்திணையும் நடுவணைந்திணைக் காமத் தையே ஒருவாறு குறிக்கொண்டு நிகழ்கின்றனவாகலின், இவையும் அவ்வைம்பெரும் அக ஒழுக்கங்கட்கும் பொதுவாய் அவற்றுள் அடங்கும். இதனுலும், காஞ்சியும் பாடாணும் முறையே பெருந்திணை, கைக்கிளைகளின் புறனுயின எனக் கொள்ளலாம்.

14. புறத்திணை - நூற். 25 இன் உரை (நச்சி.)

## 21. மெய்ப்பாடு-விளக்கமும் தொகையும்

மெய்ப்பாடு என்பது, வெளிப்படுவது என்று பொருள் படும். ஊன்றி நோக்கின், சுவையுணர்ச்சியே விருப்பு, வெறுப்பு முதலியவைகளைத் தந்து கண்ணீரரும்பல், மெய்ம் மயிர் சிலிர்த்தல் முதலிய மெய்க்குறிகளுடன் வெளிப்படுவ தாதலின் சுவைக்கு மெய்ப்பாடு என்னும் பெயர் பொருந்துவ தாயிற்று. சுவையெனினும் மெய்ப்பாடு எனினும் ஒக்கும். சுவைகளின் தன்மையை மேலும் சிறிது விளக்குவோம்.

**சுவை விளக்கம் :** இனிப்பு, கசப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, உறைப்பு என்பன 'அறு சுவைகள்' என்பதை நாம் அறிவோம். இவை நாவாகிய பொறி வழியாக ஒருவர் உள்ளத்தே தோன்றும் உணர்ச்சிகளாகும். இவ்வுணர்ச்சி களைத் தரும் பொருள்கள் முறையே கரும்பு, வேம்பு, புளி, உப்பு, கடுக்காய், மிளகு போன்றவைகளாகும். இவை 'சுவைப் பொருள்கள்' ஆகும். கரும்பினை நாவாகிய பொறி யாற் சுவைத்துணருமிடத்து இனிப்புச் சுவையுணர்ச்சி தோன்றும்; அங்ஙனம் தோன்றுங்கால் அது காரணமாக விருப்புத் தோன்றும். இங்ஙனமே வேம்பினைச் சுவைத்துணரு மிடத்து கைப்புணர்ச்சி தோன்றும்; அது தோன்றுங்கால் வெறுப்புத தோன்றும். இங்ஙனம் உள்ளத்தே தோன்றும் விருப்பு வெறுப்புக்கள் 'உள்ளக் குறிப்புக்கள்' என்று கூறப் பெறும். இத்தகைய உள்ளக் குறிப்புக்களைக்கொண்டு இச் சுவையுணர்ச்சிகள் வெளிப்படுங்கால் முகமலர்ச்சி, முகச்சுளிப்பு முதலாய மெய்க்குறிகளைக்கொண்டு பிறர்

அறியுமாறு வெளிப்படும். இம்மெய்க்குறிகளே 'விறல்'[1] அல்லது 'சத்துவம்' எனப்படும். எனவே, சுவையின் இயல் பினை அறியுமிடத்து, காரண காரிய முறையாகச் சுவைக்கு நிலைக்களனாகிய பொருள், சுவை, குறிப்பு, விறல் என நான்கு வகைப் பொருள்களை அறிகின்றோம்.[2]

**சுவைகளின் தொகை :** நாவாகிய பொறியினால் பெறும் அறுசுவைகள் போன்றனவாய், அவ்வொப்புமையான் வரும் சுவையென்னும் பெயரினவாய், கட்பொறியானும் செவிப் பொறியானும் அறியப்பெறும் சுவைகள்—மெய்ப்பாடுகள்— எட்டாகும். அவை : நகை, அழுகை, இழிவு, வியப்பு, அச்சம், வீரம், வெகுளி, உவகை என்பனவாகும். இந்த எட்டினையே தொல்காப்பியம் குறிக்கின்றது. இங்ஙனம் கண்ணினும் செவியினும் நுண்ணிதின் உணரப்பெறும் எண் சுவைகளும் சுவைக்கப்படும் பொருள், சுவை, குறிப்பு, விறல் என்ற வகைகளால் எண்ணான்கு முப்பத்திரண்டு ஆகும் என்பர். இவைபற்றி உரையாசிரியர்கள் தரும் விளக்கத்தைக் காண்போம்.

**இளம்பூரணர் கூறுவது :** "பேயானும் புலியானும் கண்டா னொருவன் அஞ்சியவழி, மயக்கமும் கரத்தலும் நடுக்கமும் வியர்ப்பும் உளவாகின்றே. அவற்றுள் அச்சத்திற்கேது வாகிய புலியும் பேயும் சுவைப்படு பொருள். அவற்றைக்

1. விறல் - பத்து வகைப்படும். அவை மெய்ம்மயிர் சிலிர்த்தல், கண்ணீர் வார்தல், நடுக்கமெடுத்தல், வியர்த்தல், தேற் றம், களித்தல், விழித்தல், வெதும்பல், சாக்காடு, குரற்சிதைவு என்பன. அவ்விறல், சுவைகளிலே மனக்குறிப்பு உளதாய வழி உடம் பிலே தோற்றும்; உடம்பினும் முகத்து மிகத் தோற்றும்; முகத் தின் மிகத் தோற்றும் கண்ணில்; கண்ணின் மிகத் தோற்றும் கண்ணின் கடையகத்து. இவை எட்டென்பது வடநூலார் மதம். (சிலப் - பக். 84 உ. வே. சா. அய்யர் பதிப்பு). சுப்பு ரெட்டியார் - ந: கவிநயனுபவம் (கழக வெளியீடு) என்ற நூலிலும் காண்க.

2. இங்ஙனம் இலக்கண நூலார் கூறும் சுவைக்கப்படும் பொருள், சுவை, குறிப்பு, விறல் என்பவற்றையே உளவியலாளர் முறையே பொருள் (Object), புலன்காட்சி (Perception), பொது உணர்வு (அனுபவம்), உடல்நிலை மாறுபாடுகள் (Organic states) என்று கூறுவர்.

கண்ட காலந்தொட்டு நீங்காது நின்ற அச்சம் **சுவை**. அதன் கண் மயக்கமும் கரத்தலும் **குறிப்பு**. நடுக்கமும் வியர்ப்பும் **சத்துவம்**. இவற்றுள் நடுக்கமும் வியர்ப்பும் பிறர்க்கும் புலனுவது என்று கொள்க; ஏனைய மன நிகழ்ச்சி.''

**பேராசிரியர் கூறுவது**: ''சுவைக்கப்படும் **பொருளும்**, அதனை நுகர்ந்த **பொறியுணர்வும்**, அது மனத்துட்பட்ட வழி உள்ளத்து நிகழும் **குறிப்பும்**, குறிப்புக்கள் பிறந்த உள்ளத்தாற் கண்ணீர் அரும்பலும் மெய்ம்மயிர் சிலிர்த்தலும் முதலாக உடம்பின்கண் வரும் வேறுபாடாகிய **சத்துவங்களு**மென நான்காக்கி, அச்சுவை யெட்டோடுங்கூட்டி ஒன்று நான்கு செய்து உறழ, முப்பத்திரண்டாம் ஏன்பது. எனவே சுவைப் பொருளும், சுவையுணர்வும், குறிப்பும், விறலுமென நான்காயின. விறல் எனினும் சத்துவம் எனினும் ஒக்கும். பொறியுணர்வுகள் அவ்வச் சுவையெனப்படும்.''

இங்குக் காணப்படும் முப்பத்திரண்டும் ஒருவகை.

இனி, மற்றொரு வகையிலும் இச்சுவைகள் முப்பத்திரண்டாகிய வகையினைப் பெறும். அது வருமாறு :

| | சுவைகள் | சுவை தோன்றும் நிலைக்களங்கள் (பொருள்கள்) | |
|---|---|---|---|
| 1. | நகை | எள்ளல், இளமை, பேதைமை, மடன். | 4 |
| 2. | அழுகை | இளிவு, இழவு, அசைவு, வறுமை. | 4 |
| 3. | இளிவரல் | மூப்பு, பிணி, வருத்தம், மென்மை. | 4 |
| 4. | மருட்கை | புதுமை, பெருமை, சிறுமை, ஆக்கம். | 4 |
| 5. | அச்சம் | அணங்கு, விலங்கு, கள்வர், இறை. | 4 |
| 6. | பெருமிதம் | கல்வி, தறுகண், இசைமை, கொடை. | 4 |
| 7. | வெகுளி | உறுப்பறை, குடிகோள், அலை, கொலை. | 4 |
| 8. | உவகை | செல்வம், புலன், புணர்வு, விளையாட்டு. | 4 |
| | | | 32 |

இங்குக் காணும் முப்பத்திரண்டு மற்றொரு வகை.

**சுவை தோன்றுமாறு**: சுவைகளின் தோற்றத்தையும் தொகையினையும் தொல்காப்பியர்,

பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும்
கண்ணிய புறனே நானான் கென்ப. 3

என்று கூறுவர். மெய்ப்பாடு என்பன 'பண்ணை' என்பதன் வழியாகத் தோன்றும்; அவை முப்பத்திரண்டு பொருளாம். அவற்றுற் கருதப்பெறும் பொருட்பகுதி பதினாறாக அடங்கும் என்பது இந்நூற்பாவில் குறிக்கப்பெறும் பொருட்சுருக்க மாகும். இது நாடகவியலார் கொள்கை என்பதும், தொல் காப்பியர் இக்கொள்கையினை முதலில் எடுத்துக் காட்டி மேலே தம் கொள்கையினைக் கூறுகின்றார் என்பதும் உரை காரர்கள் கருத்தாகும். இக்கருத்தினை டாக்டர் **ச. சோம சுந்தர பாரதியார்** மறுத்திடுவர்; அவர் உரை நோக்கி அறிக.[4]

இதுபற்றி **இளம்பூரணர்** கூறுவது: 'இங்குக் கூறிய பண்ணை என்பது விளையாட்டு; இஃது ஆகுபெயராகி விளை யாடும் ஆயத்தினைக் குறிக்கும்; இந்த ஆயம் கற்று வல்ல ராய் நல்லொழுக்கம் மேற்கொண்ட அறிவுடையார் கூட்டம் அன்று; இந்த ஆயத்தாரிடைத் தோன்றுவனவாய், மேற் கூறியாங்கு சுவை தோன்றும் எள்ளல் முதல் விளையாட்டு ஈறாகவுள்ள (இரண்டாம் வகையாய) முப்பத்திரண்டு பொருள்களின் புறத்தே தோன்றுவனவாய் உள்ளன பதினாறு மெய்ப்பாடுகள்; அவை சுவை எட்டு, சுவைகளின் குறிப்பு எட்டு எனப் பதினாறாகும்.'

**பேராசிரியர்** கூறுவது: 'பண்ணை என்பது முடியுடை வேந்தரும் குறுநில மன்னரும் முதலாயினோர், நாடக மகளிர் ஆடலும் பாடலும் கண்டும் கேட்டும் காமம் நுகரும் இன்ப விளையாட்டு என்பதும், அதனைக் கூறும் நாடக வழக்கிற்கு உரிய பகுதிகள், முற்கூறியாங்கு பொருள், சுவை, குறிப்பு, விறல் என்ற நான்கு வகைகளால் ஆன முப்பத்திரண்டு ஆகும் என்பதும் (முதல் வகை முப்பத்திரண்டு), அவை தாமும் பொருளும் சுவையும் ஒன்றாக எட்டும், குறிப்பும்

3. மெய்ப் - நூற். 1 (இளம்.)

4. சோமசுந்தர பாரதியார். ச. டாக்டர் : மெய்ப்பாட்டியல் உரை பக். (221)

சத்துவமும் ஒன்ருக எட்டும் ஆகி, இங்ஙனம் பதினருக அடங்கும்.'

எனவே இவ்விரு உரையாசிரியர்களும், இங்குக் கூறிய பண்ணை என்பது இன்னது, முப்பத்திரண்டாவன இன்னவை என்பதில் பெரிதும் கருத்து மாறுபடினும் அவை பதினருக முடியும் பொருள் இன்னவை என்பதில் ஒன்றிய கருத்தின ராதலை அறிக.*

**வட நூலார் கொள்கை :** சுவைகளின் இயல்பினையும், அவை உண்டாகும் முறையினையும், அவற்றின் வகைகளையும் பற்றி வடமொழி இலக்கணம் கூறும் கருத்துக்களை ஈண்டறிதல் சாலப் பயன் தரும். மக்கள் உள்ளத்தில் ஒவ்வொரு கால் எழும் உளவேறுபாடு **பாவம்** எனப்படும். பாவங்களுள் சில நிலை பெற்றிருக்கும்; பல சிறிது நேரம் நின்று மறையும். தனக்கு ஒற்றுமையுடையனவும் வேற்றுமையுடையனவுமாகிய பிற **பாவங்களால்** கேடுருமல்[1] ரஸமாகிச் சமையுமளவும் நிலை நிற்கும் **பாவம்** ஸ்தாயி பாவம் (நிலை பேறுடைய **பாவம்**) எனப்படும். அது காதல், சோகம் முதலாக ஒன்பது வகைப்படும். உலகியலில் உண்டாகும் காதல் முதலியவற்றிற்குக் காரணமாயும் காரியமாயும் துணைக்காரணமாயும் இருப்பவை கவிஞனின் வாக்கிலும் நடிகனின் அபிநயத்திலும் அறிவிக்கப் படும்போது முறையே விபாவம் (விசேடித்துத் தோன்றியது) என்றும், அனுபாவம் (பின்னர்த் தோன்றியது) என்றும், சஞ்

*இனிமேற் கூறும் கருத்துக்கள் யாவும் பன்மொழிப் புலவர் உயர் திரு. வே. வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்களின் 'சுவையியல்' என்ற கட்டுரையைத் தழுவினவை.

1. ஒற்றுமையுடைய பாவத்தால் கேடுருமல் நிலைபெறுதலாவது - ஒரு மாதினைக் கண்டு அவளிடம் காதல் கொண்டானொருவன், பின்னர் வேறொரு மாதினைக் காணும் போது பின்னவள்பால் காதல் செலுத்தாது, முன்னைய மாதின் நினைவு உண்டாகி, அவள்பால் காதல் கொள்வது. வேற்றுமையுடைய பாவத்தால் கேடுருமல் நிலை பெறுதலாவது - ஒரு மகள்பால் காதலித்தான் ஒருவன் பின்னர் இளமகள் ஒருத்தியின் சாவு, பிரிவு முதலியவற்றைக் கண்டவிடத்தும், அவற்ருல் சோகமும் வெறுப்பும் உண்டாகி, முன் காதலிக்கப்பட்டவளிடத்து முன்னைய காதல் கெடாதிருப்பது.

சாரி பாவம் (துணை செய்வதாகத் தோன்றியது—இது நிலைபேறில்லாத பாவம்) என்றும் வழங்கப்படும். அஃதாவது:

காரணம் - விபாவம்
காரியம் - அனுபாவம்
துணைக் காரணம் - சஞ்சாரிபாவம்

என்று வழங்கும். இவ்விபாவ அனுபாவங்களால் வெளிப்படுகின்ற ஸ்தாயி பாவமே ரஸம் என்னும் பெயர் பெறும்.

மேற்கூறிய விபாவம் இரண்டுவகைப்படும். காதல் முதலாயின தோன்றுவதற்குச் சார்பாயிருக்கும் பொருள் ஆலம்பன விபாவம் எனப்படும். தோன்றிய காதல் முதலியவற்றை வளர்த்து விளங்கச் செய்வது உத்தீபன விபாவம் எனப்படும். காதலுக்குத் தலைவன் தலைவியர் ஆலம்பன விபாவம். அவர்களுடைய உருவின் சிறப்பு அணிகலன் முதலியனவும், தென்றல் நிலா கடலொலி முதலியனவும் உத்தீபன விபாவம். இனி, காரியமாகிய அனுபாவமும் இரண்டு வகைப்படும். ஒன்று, அகத்தது; மற்றொன்று, புறத்தது, அந்தக் கரணத்தைச் சார்ந்தனவாகிய ஸ்தம்பம், பிரளயம் முதலியவை முதற்பிரிவிற்குரியவை. அவை சாத்விக பாவம் எனப்படும். கடைக்கண் நோக்குதல் முதலிய செய்கைகள் இரண்டாம் பிரிவைச் சேர்ந்தவை. காதல் முதலிய ஸ்தாயி பாவங்களைத் துணைக்காரணமாய் நின்று வளர்க்கின்ற நலிவு, நினைவு, விரைவு முதலியன சஞ்சாரி பாவம் எனப்படும்; இதனை வியபிசாரி பாவம் என்று கூறுதலும் உண்டு. இஃது அரசனைப் பின் தொடரும் ஏவலர் போலவும், கடலிற்பிறக்கும் அலைகள் போலவும் ஸ்தாயி பாவங்களைப் புலப்படுத்தி நிற்கும்.

எ - டு. துஷ்யந்தனுக்குச் சகுந்தலையும், சகுந்தலைக்குத் துஷ்யந்தனும் காதலுக்கு ஆலம்பனம். அக்காதல் தென்றல், நிலா, சோலை முதலிய உத்தீபன விபாவங்களால் எழும்பப்பட்டு, கண்ணீர் வார்தல், கடைக்கண்ணோக்குதல் முதலிய காரியங்களால் அனுபவப்பட்டு, விரைவு, நினைவு, முதலிய சஞ்சாரி பாவங்களால் வளர்க்கப்பட்டு மனத்தில் நிலைபெறுகின்றது.

இவ்வாறு தோன்றி, தெளிவாகி, வளர்ந்து வருகின்ற காதல் முதலாகிய பாவங்கட்கு நல்லறிஞர் உள்ளத்தில் உண்டாகும் பிரதி பிம்பமே 'ரஸம்' எனப்படும் என்று கொள்க. தூய வெண்ணிறத்தவாகிய ஞாயிற்றின் கதிர்கள் செந்நிறக் கண்ணாடியில் படும்போது அவற்றிற்குச் செந்நிறம் உண்டாதல் போன்று, காரணம் முதலியவற்றிற்கும் காதல் முதலியவற்றிற்கும் பிரதிபலிக்கச் செய்யும் பொருளின் தன்மையை அனுசரித்துச் சில விசேட வேறுபாடுகள் உண்டாகின்றன. அதனால் காரணம் முதலியவை விபாவம் முதலாய நிலையில் இன்ன மனிதர், இன்ன நேரம், இன்ன இடம் இவை போன்ற சிறப்பியல்புகளை விட்டுப் பொதுவாய வடிவில் அமைகின்றன. அவ்வாறே ஸ்தாயி பாவங்களுள் சோகம், இளிவரல் முதலிய மாறுபட்ட உளவேறுபாடுகளும் அனுகூலபாவங்களாக அமைகின்றன. அதனானே கருணம் (சோகத்தால் உண்டாவது), பீபத்ஸம் (இழிவரலால் உண்டாவது) முதலாய ரஸங்களிலும் நமக்குச் சுவையும் ஈடுபாடும் உண்டாகின்றன. மகாகவி **நீலகண்ட தீட்சிதர்**, "நிர்வேதம், பயம், சோகம், ஜுகுப்ஸை முதலியவைகளும் இலக்கியங்களில் ரஸத்தன்மையன ஆகின்றன" என்று கூறியிருப்பது ஈண்டு அறியத்தக்கது.

நல்லறிவாளன் தன் தூய உள்ளத்தில் இந்த விபாவம முதலியவைகளை மீட்டும் மீட்டும் நினைக்கும் செயலுக்குச் **சுவைத்தல்** (சர்வணம்) என்று பெயர். அவ்வாறு சுவைக்கும் நிலையில் கரும்பின் துண்டிலிருந்து இனிப்புச் சுவை உண்டாதல் போன்று விபாவம் முதலியவற்றிலிருந்து சிருங்காரம் முதலிய ரஸம் தோன்றுகிறது.

காதல் முதலிய உளவேறுபாடுகள் நல்லறிவாளருள்ளத்தில் ஆதிகால முதலே வாஸனை ரூபமாய்ப் படிந்துள்ளன. அவற்றை விபாவம் முதலியன எழுப்பிவிடுகின்றன. என் போலவோ எனின், பொருள்களில் அமைந்து கிடக்கின்ற நிலையியல் மின்சாரத்தைத் (static electricity) தேய்த்தல் வெளிப்படுத்துவது போல என்க. இவ் விபாவம் முதலியவை ஒருங்கு சேர்ந்து ஆகிய சிறப்பியற்செயலால் பூர்வ வாசனைக்கு எழுச்சி வருவதனோடு உள்ளம் ராஜஸ தாமஸ குணங்கள்

அகலப்பெற்று, சுத்த சத்துவமாய்ச் சமைகின்றது. ஆன்மா அஞ்ஞானத் திரையினின்று நீங்கி சித்ப்ரகாச ஆனந்த ரூப மாய் விளங்குகின்றது. இத்தகைய சத்துவ நிலை அடைந்த உள்ளத்திற்கு இத்தகைய ஆத்தும சாட்சியாய் விஷய மாகின்ற அநாதி வாஸனு ரூபமாகிய காதல் முதலிய **பாவமே** ரஸம் என்று அறுதியிடப்பெற்றுள்ளது.

**கருத்து வேறுபாடு :** மேற்கூறியதில் கருத்து வேறுபாடு உண்டு. நாடகங்களில் வரும் துஷ்யந்தன் முதலிய பாத்திரங் களில் உண்மை உணர்வினுல் அவருக்குச் சகுந்தலை முதலிய வர்களிலுள்ள காதல் முதலியவற்றின் நேர் காட்சியே (சாட் சாத் காரம்) ரஸம் என்பர் ஒரு சாரார். சகுந்தலை முதலிய வர்களின் விஷயமான காதல் முதலியவற்ருேடுகூடிய துஷ்யந் தன் முதலானவரோடு (நாடகம் காணும்) நல்லறிஞனுக்குக் கனவினேடொத்த ஒற்றுமையுணர்வே (ஸாயுஜ்ய ஜ்ஞானம்) ரஸம் என்பர் ஒரு சாரார். இனி, விபாவம் முதலியவற்றைச் சுவைத்தலில் நல்லறிஞன் தனக்குத் துஷ்யந்தன் முதலானவ ரோடு அபேதம் கற்பிப்பதானுல் சகுந்தலை முதலானவர் விஷய மான காதலே ரஸம் என்பர். முன்னைய இரண்டு கொள்கை யினும் இதுவே அமைவுடையதாகக் கொள்ளப் பெறுகின்றது.

**ரஸத்தின் வகைகள் :** ரஸம் ஒன்பது வகையாகும். அவையாவை :

| | வடமொழி | | தமிழ் |
|---|---|---|---|
| 1. | சிருங்காரம் | ... | உவகை |
| 2. | கருணம் | ... | அழுகை |
| 3. | வீரம் | ... | பெருமிதம் |
| 4. | ரௌத்திரம் | .... | வெகுளி |
| 5. | ஹாஸ்யம் | ... | நகை |
| 6. | பயானகம் | ... | அச்சம் |
| 7. | பீபத்ஸம் | .... | இளிவரல் |
| 8. | அற்புதம் | ... | மருட்கை |
| 9. | சாந்தம் | .... | (நடுவு நிலை) |

என்பன. இவற்றுள் சாந்த ரஸம் உலகியலின் நீங்கினுர் பெற் றியாகலின் அதனையொழித்து, ஏனைய எட்டனையுமே **பரத**

**முனிவர்** தமது நூலில் கூறியுள்ளார். பேராசிரியர் உருத்திரத்தையொழித்து ஏனைய எட்டைத் தாம் கூறியதற்கு ஆதாரமாகக் காட்டும் நூற்பா யாண்டையதோ தெரியவில்லை.[5] பேராசிரியர் கருத்து நூல் வழக்கிற்குப் பொருந்துமாறில்லை என்று மறுத்திடுவர் பன்மொழிப்புலவர் திரு. **வே. வேங்கடராஜுலு ரெட்டியார்.**[6] மேலும், அவர் தொல்காப்பியர் கூறும் எண் சுவைகளின் பெயர்களுள் 'உவகை' என்பது பொருந்துமாறில்லை என்று சான்றுகளுடன் விளக்குவர். உரையாசிரியர்கள் உவகையெனினும் சிருங்காரம் எனினும் ஒக்கும் என்பராயினும், ஆசிரியர் தொல்காப்பியனார் உவகைச் சுவைக்குக் கூறியுள்ள பொருள்களை நோக்கின் அது பொருந்தாமை புலனாகும். இங்ஙனமே 'இளிவரல்' என்பதும் பீபத்ஸ ரஸத்திற்கு உரிய சொல் ஆகாது என்றும், அஃது 'இழிவரல்'' (பேராசிரியருரையில் இருப்பது போல்) என்றிருப்பின் ஒரு கால் பொருந்துவதாகும்.

**ரஸம் சமையும் முறை :** மேற்கூறிய ரஸம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு ஸ்தாயி பாவத்தால் சமைவது.

1. சிருங்காரத்திற்கு ஸ்தாயி பாவம் ரதி (காதல்)
2. கருணத்திற்கு ,, சோகம்
3. வீரத்திற்கு ,, உற்சாகம்
4. ரௌத்திரத்திற்கு ,, குரோதம்
5. ஹாஸ்யத்திற்கு ,, ஹாஸம் (நகை)
6. பயானகத்திற்கு ,, பயம்
7. பீபத்ஸத்திற்கு ,, ஜுகுப்ஸை (அருவருப்பு)
8. அற்புதத்திற்கு ,, விஸ்மயம் (ஆச்சரியம்)
9. சாந்தத்திற்கு ,, நிர்வேதம் (விரக்தி)

இந்நிலை பெற்ற பாவமே ரஸமாகும். எடுத்துக்காட்டாக நகை (ஹாஸம்) என்னும் பாவத்தினின்று ஹாஸ்யம் என்

5. மெய்ப்பா. – நூற். 2இன் உரை (பேரா.)
6. ''சுவையியல்'' - என்னும் தம் கட்டுரையில்.

னும் சுவை தோன்றும். ஆயின், ஆசிரியர் தொல்காப்பியனர் **பா**வத்திற்குரிய பெயரையே சுவைக்கும் கூறியுள்ளார். இஃது அமைதியாதல் அரிது; பெயரிடும் நெறியில் அறிவியல் முறையும் அன்று.

**ரஸங்களின் பரிணமம்** : மேற்கூறிய ஒன்பது சுவைகளுள் கருணம் ஒன்றுதான் பல்வேறு ரஸங்களாகப் பரிணமிக்கின்றது என்பர் ஒரு சாரார். காரணம், இஃது உலகின் அடிப்படை உண்மை நிலையில் கிடக்கின்றது. ஆன்மாவும் உலகும் பின்னிக் கிடக்கின்றன என்பது அறிஞர் கூறுவதாலும், ஆன்மாவின் கூறு இன்பமாகவும் உலகின் கூறு துன்பமாகவும் அவர்கள் உணர்த்திபிருப்பதாலும், கருண ரஸம் துன்பத்தில் இன்பத்தைக் காணத் துணை செய்வதாலும் அதுவே உலகை வாயிலாக ஆன்மாவை உணரும் முறையாதலாலும் இதுவே சிறந்த ரஸம் என்பது அவர்கள் கருத்து. வான்மீகி கருணத்தில் உருகித் தோய்ந்து கிடந்த பொழுதுதான் இராமாயணம் தோன்றியது. **பவபூதி** என்ற வடமொழிக் கவிஞரும் கருணம் ஒன்றுதான் ரஸம் என்பதாகக் கூறிப் போந்தார். மற்றொரு சாரார் சிருங்காரம் ஒன்றே சிறந்தது என்றும், அதிலிருந்தே ஏனையவை தோன்றின என்றும் கூறுவர். இது முதல் ரஸமாகக் குறிப்பிட்டிருப்பதே அதன் சிறப்பை யுணர்த்துகின்றதென்றும், அதுவே இலக்கியங்களில் அதிகமாகக் கையாளப்பெற்றிருக்கின்றது. என்றும், அதன் காரணமாகவே அது 'ரஸங்களின் மன்னன்' என்று வழங்கப் பெறுகின்றது என்றும் அவர்கள் கூறுவர். பிறிதொரு சாரார் அற்புத ரஸத்திற்கு முதலிடம் தந்து, அதிலிருந்தே ஏனையவை தோன்றுகின்றன என்று பகர்வர்.

மேற்கூறிய ஒன்பது ரஸங்களுக்கும் உரிய ஒன்பது பாவங்களும் எல்லா உயிர்களிடத்தும் பற்றியிருக்கும் ஆனல் சிலருடைய மனோ விருத்திகள் பல பிறப்புக்களிலுள்ள வாஸனை மிகுதியினல் சில பாவங்களில் மிக்குச் செல்லும் ; சிலவற்றில் குறைந்திருக்கும். அதனல், இவை அறவே இல்லாதிருக்கும் என்று கருதுதல் தவறு. வீரத்திற்குக் காரணமாகிய உற்சாகம், பயானகத்திற்குக் காரணமாகிய

அச்சம், ரௌத்திரத்திற்குக் காரணமாகிய குரோதம் ஆகியவை எல்லா உயிர்களிடத்தும் மிக்குக் காணப்படாமைக்குக் காரணம் பரம்பரையாகிய வாஸனைகளின் குறைவே. சிருங்காரத்திற்குக் காரணமாகிய காதல் எல்லா உயிர்களிடத்தும் காணப்படுவதற்குக் காரணம் பரம்பரை வாஸனைத்யின் மிகுதியே. ஆதலின், இவ்வெல்லாச் சுவைகளையும் எல்லா உயிர்களும் ஒரே பிறப்பில் அனுபவித்தல் அரிது. இனி பக்தி, வாத்ஸல்யம் முதலியவற்றையும் ஒரு சிலர் சுவைகளாகக் கூறுவர். அது தவறு; அவையெல்லாம் பாவங்களேயாகும். 'பக்தி ரஸம்' என்பது உபசாரமாக வழங்குவதல்லது காப்பியச் சுவைபற்றிய சிறந்த நூல்களில் வழங்குதல் இல்லை. எனவே சுவை ஒன்பது என்பதே நூலாசிரியர் அனைவருக்கும் ஒப்ப முடிந்த கொள்கை.

**சுவையின் தன்மை :** உலகியல் நிகழ்ச்சிகளிலும் செயல்களிலும் உண்டாகும் இன்பத்தை ரஸம் என்று கொள்ளுதல் பொருந்தாது. என்னையெனின், ஒரு சுவைக்குக் கூறும் இலக்கணம் எல்லாச் சுவைகட்கும் பொருந்துதல் வேண்டும். உலகியற்செயல்களுள் நகை, காதல் முதலியவற்றில் இன்பம் உண்டாதல் போன்று, அழுகை, இழிவரல், அச்சம், வெகுளி முதலியவற்றில் இன்பம் உண்டாதல் இல்லையன்றோ? இதனால் உலகியலின்பத்தைச் சுவையென்று கொள்ளாமல் விடுத்து, நாடகத்திலாவது காவியத்திலாவது அச்செயல்கள் நிகழுங்கால் அவற்றைக் காண்டலும் கேட்டலும் செய்யும் நல்லறிவாளருள்ளத்தில் விபாவம் முதலியவற்றால் உண்டாகும் சுவையே ரஸம் என்று அலங்கார நூலார் அறுதியிடலாயினர். ஒரு தாய் தன் இளமகன் இறந்ததைக் குறித்து அழுதலைக் கேட்குங்கால், நமக்கு உண்மையிலேயே துயரம் உண்டாகின்றது. ஆனால், சந்திரமதி தன் மகனை நினைந்து அழுததாகவுள்ள பாட்டுக்களையும் மேகநாதன் இறந்தமை குறித்து மண்டோதரி புலம்புவதாகவுள்ள பாடல்களையும் படிக்கும் பொழுது இன்பம் உண்டாகிறது. இது பற்றிய ஒரு சில கருத்துக்கள் உளவியல் அடிப்படையில் ஆராயப் பெற்றுள்ளன.[7] ஆண்டுக் கண்டு கொள்க.

7 சுப்பு ரெட்டியார், ந: கவிதையனுபவம் (கழக வெளியீடு)

**சிருங்கார வகை :** வடமொழி இலக்கண நூலார் சிருங்காரத்தைச் சம்போக சிருங்காரம், விப்ரலம்ப சிருங்காரம் என இரு கூறுபடுத்திப் பேசுவர். இவ்விரண்டு வகையோடும் தொடர்புடைய செய்திகளே தொல்காப்பியத்தில் களவியல், கற்பியல் என்ற பகுதிகளில் கூறுப்பெறுகின்றன. அவை இச்சுவையின் தொடர்புடையன என்று தொல்காப்பியர் கூறவில்லையெனினும், அவர் அமைத்த முறைகளும் செய்திகளும் இதனுள் அடங்குவனவாயின. பரிமேலழகரும் காமத்துப் பாலில், "இது புணர்ச்சி, பிரிவு என இரு வகைப்படும். ஏனை இருத்தல் இரங்கல், ஊடல் என்பனவோவெனின், இவர் பொருட்பாகுபாட்டினை அறம் பொருள் இன்பம் என வடநூல் வழக்குப் பற்றியோதுதலான் அவ்வாறே அவற்றைப் பிரிவின் கண் அடக்கினர் என்க. இனி, அவைதம்மையே தமிழ்நூல்களோடும் பொருந்தப் புணர்ச்சியைக் களவென்றும் பிரிவைக் கற்பென்றும் பெரும்பான்மைபற்றி வகுத்து, அவற்றைச் சுவை மிகுதி பயப்ப உலக நடையோடு ஒப்பும் ஒவ்வாமையும் உடையவாகிக் கூறுகின்றார்" என்று கூறியிருப்பது ஈண்டு அறியத் தக்கது.

**தொல்காப்பியத்தின் பெருமை :** மெய்ப்பாடு, உவமை பற்றித் தொல்காப்பியத்தில் காணப்பெறினும் அணியிலக்கணத்தைப்பற்றிய தனி நூல் பழங்காலத்தில் தமிழில் இல்லை. வடமொழியிலுங்கூட அலங்காரத்தை வரையறுக்கும் இலக்கணம் பிற்காலத்தேதான் தோன்றியதென்று ஆய்வாளர்கள் கூறுவர்[8] கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக்குப்பின் எழுந்த நூல்களில்தான் அலங்காரத்தைப்பற்றிய குறிப்புக்கள் காணக் கிடைக்கின்றன என்றும், முறையாக அலங்கார இலக்கணத்தை ஆராயும் நிலை கி.பி. 4, 5-ஆம் நூற்றாண்டுகளிலிருந்தே விரிவடைந்ததென்றும் வடநூலறிஞர்கள் ஆராய்ந்து கண்டுள்ளனர். அக்காலம் முதல் குணவலங்காரம், செய்யுள் நெறி, சொற்பொருள் அணி, சுவை, தொனி முதலிய அணி இலக்கணங்கள் வடமொழியில் பல்கின. செய்யுள் நெறியே தலைமையுடையது என்போரும்,

8. History of Sanskrit Poetries, Vol. I p. 17.

அணிகளே காப்பியத்திற்கு அழகு பயப்பன என்போரும், சுவையே காப்பியத்தின் உயிர் என்போரும், தொனியே காப்பியத்திற்கு ஒளி தருவதென்போருமாக நாளடைவில் வட நூல் அணியிலக்கண ஆசிரியர்கள் பல திறப்பட்டனர். இவர்கட்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னரே எழுந்த தொல்காப்பியம் உவமையைப்பற்றியும், மெய்ப்பாட்டைப்பற்றியும், இறைச்சி உள்ளுறைகளைப் பற்றியும் வரையறுத்துக் கூறுதலை நோக்கின் அப்பழங்காலத்திலேயே நந்தமிழ் நாட்டில் கவிதையின் அழகை அறிந்து சுவைக்கும் தன்மை, வளம் பெற்றிருந்ததென்று நினைக்க இடம் உண்டாகின்றது. எனினும், பழம் பெருமையையே கூறி மகிழ்ந்துகொண்டிராமல் தொனியைப் பற்றிய நூல்களையும், சுவைகளைப் பற்றிய நூல்களையும், விரித்தெழுதத் தமிழ் அறிஞர்கள் முயல வேண்டும்; ஆக்கத் துறைகளில் பணியாற்ற முன் வருதல் வேண்டும்; செய்யுளின்பம் துய்க்க இத்தகைய நூல்கள் மிகவும் இன்றியமையாதவை. நிற்க.

**சுவைகளின் நுட்பம் :** மெய்ப்பாடுகளின் நுட்பமனைத்தும் கண்ணாலும், செவியாலும் திட்பமாக அறியவல்ல நுண்ணறிவுடைய பெருமக்களுக்கே புலப்படும்; ஏனையோர்க்கு அஃது ஆராய்ந்தறிதற்கரியது. இதனை ஆசிரியர்,

> கண்ணினுஞ் செவியினுந் திண்ணிதின் உணரும்
> உணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியின்
> நன்னயப் பொருள்கோள் எண்ணருங் குரைத்தே[9]

என்று கூறுவர். ஒருவரது மனக்குறிப்பின் வழி அவர்தம் முகம் வேறுபடுதலும் மொழி வேறுபடுதலும் இயல்பாதலின் அவ்வேறுபாடுகளுக்கு ஏதுவாயமைந்த அவற்றை முறையே கண்ணாலும் செவியாலும் உணர்ந்துகொள்ளுதல் கூடும். இந்த ஆற்றலை ஆசிரியர் உய்த்துணர வைத்த திறம் எண்ணி மகிழ்தற்குரியது. இனி ஆசிரியர் கூறும் மெய்ப்பாட்டின் விரிவை அடுத்துக் காண்போம்.

---
9. மெய்ப். - நூற். 27 (இளம்.)

## 22. இருதிணைக்கும் பொதுவான மெய்ப்பாடுகள்

தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் முதற்கண் அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாய்ச் சிறந்து நிற்கும் மெய்ப்பாடுகளைக் கூறுகின்றார். சுவையெனினும் மெய்ப்பாடெனினும் ஒக்கும். நாவாகிய பொறிகளினால் அறியப்பெறும் இனிப்பு, கசப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, உறைப்பு என்கின்ற அறுவகைச் சுவைகள் போன்று கண்ணினும் செவியினும் அறியப்பெறும் சுவைகள் எட்டு. அவை: நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்பன. இந்த எட்டு மெய்ப்பாடுகளையும்,

> நகையே அழுகை இளிவரல் மருட்கை
> அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்(று)
> அப்பா லெட்டே மெய்ப்பா டென்ப.[1]

என்ற நூற்பாவால் குறிப்பிடுவர் ஆசிரியர் தொல்காப்பியர். இந்த எட்டு மெய்ப்பாடுகளும் அவை தோன்றும் நிலைக்களன்களுக்கேற்ப நந்நான்காய்ப் பகுதிபட்டு நடக்கும் என்பர் ஆசிரியர். இவற்றுள் நகை, அழுகை, இளிவரல், மருட்கை என நான்கு மெய்ப்பாடுகளின் விரிவாகிய நானான்கு பதினாறும் தன்கண் தோன்றுதல் பிறர்கண் தோன்றுதல் என இருபகுதிப்பட்டு முப்பத்திரண்டாக நடக்கும் என்றும்; ஏனைய அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்ற நான்கு மெய்ப்பாடுகளும் நானான்கு பதினாறு பகுதிப்படுமேனும், முன்னவை போல ஒன்றிரண்டாகி முப்பத்திரண்டாகாது

1. மெய்ப் - நூற். 3 (இளம்.)

பதினுரோயாம் எனவும் உரையாசிரியர்கள் கூறுவர்; இந்த எட்டு மெய்ப்பாடுகளையும் ஒவ்வொன்ருகச் சற்று விரிவாக ஆராய்வோம்.

### 1. நகை

நகை என்பது, சிரிப்பு; அது முறுவலித்து நகுதலும், அளவே சிரித்தலும், பெருகச் சிரித்தலும் என மூன்று வகைப் படும். நகைதோன்றும் இடங்கள் மிகப பலவாகும் என்பது "உடனிவை தோன்றும்" என்ற செயிற்றியினரின் கூற்றினுல்[2] அறியலாகும். இங்ஙனம் பற்பலவாக நகை விரியுமாயினும் அவைகளை வகைப்படுத்துமிடத்து நான்கு கூறினுள் அடங்கி விடும் தொல்காப்பியர்,

> எள்ளல் இளமை பேதைமை மடனென்(று)
> உள்ளப் பட்ட நகைநான் கென்ப.[3]

என்ற நூற்பாவில் இந்த நான்கு கூறுகளையும் உணர்த்துவர். இவற்றுள் எள்ளல் என்பது, தான் பிறரை எள்ளி நகுதலும் பிறரால் எள்ளப்பட்டவழித் தான் நகுதலும் என இரண் டாகும். இளமை என்பது, தான் இளமையால் பிறரை நகுதலும் பிறரிளமை கண்டு தான் நகுதலும் என இரண்டு. பேதைமை என்பது, அறிவின்மை. இது தன் பேதைமையால் நகுதலும் பிறன் பேதைமையால் நகுதலும் என இரண்டு வகை யாகும். மடமை என்பது, பெரும்பான்மையும் கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை. இதுவும் தன் மடமையான் நகு தலும் பிறன் மடமையான் நகுதலும் என இரண்டாகும். இதுவே இளம்பூரணர் கருத்தும் என்பது, 'எள்ளல் இளமை யெனப் பொதுப்பட்டு நின்றமையால், தன்மாட்டு நிகழும் வழி யுங் கொள்க' என்ற அவர் உரையால் அறியலாம். பேதைமை என்பதற்கும் மடம் என்பதற்கும் வேறுபாடு என்னையெனின், பேதைமையென்பது கேட்டதனை உய்த்துணராது மெய்யாகக் கோடல் (stupidity); மடம் என்பது, பொருண்மையறியாது திரியக் கோடல்; இதனை ஐபுருது நம்பும் இயல்பு (simplicity or innocence) என்று கூறலாம்.

2. மெய். - நூற். 4 (இளம் - உரை) பார்க்க.
3. ஷ - நூற். 4 (இளம்.)

(௧) எள்ளல் பற்றி வரும் நகை

(அ) தான் பிறர் குறை கண்டு அவரை இகழ்ந்து கூறி நகைப்பது:

தலைவி தன்னை இகழ்ந்து கூறினள் என்று அறிகின்றாள் காதற்பரத்தை. உடனே, தலைவியின் பாங்காயினோர் கேட்கும் படி சில கூறுகின்றாள்.

"ஊரன்
எம்மிற் பெருமொழி கூறந் தம்மில்
கையும் காலும் தூக்கத் தூக்கும்
ஆடிப் பாவை போல
மேவன செய்யுந்தன் புதல்வன் தாய்க்கே."

என்ற பரத்தை கூற்றாக வந்த குறுந்தொகைப் பாட்டில் (குறுந். 8) தலைவனைக் காதற்பரத்தை அவன் குறை கூறி இகழ்ந்ததைக் காணக.

(ஆ) தன்னைப் பிறர் (அறியாமையால்) இகழ்ந்து கூற, அது கண்டு தான் நகைப்பது:

ஒரு தலைவி தன் அன்னையை மதியாது இகழ்ந்து தான் ஒரு தலைவனது கூட்டுறவினை நாடி நிற்கின்றாள். அன்னை அது கண்டு நகைத்துப் போகின்றாள்:

'நல்லை மன்னென நகூஉப்பெயர்ந் தோளே'

என்ற அகப்பாட்டடியால் (அகம். 248) மகளால் எள்ளப்பட்ட வழி தாய் நக்கதனை அறிக.

(உ) இளமை பற்றி வரும் நகை

(அ) தன் இளமைத் தன்மையால் பிறரை நகுவது:

ஒரு தலைவன் தன் தலைவியை விளையாட்டாக நடுங்கச் செய்யும் விருப்பால் தான் மிகக் கொடிய காட்டின் வழியே செல்ல இருப்பதாகக் கூறுகின்றான். அவள் நடுங்கவே, நகைக்கின்றான். இச்செய்தி,

'நடுங்குதல் காண்பார் நகைகுறித் தனரே'

என்ற கலிப்பாட்டடியில் (கலி - 13) தோழி கூற்றாக

வந்துள்ளது. இது தலைவன் தன் இளமைத தன்மையால் பிறரை அஞ்சுவித்து நக்கதாகும்.

(ஆ) பிறர் இளமை பற்றி வரும் நகை :

தலைவியொருத்தி தன் அருமைக் குழந்தையை மடியில் வைத்து, அவனுடைய தந்தையின் குறைகளைக் கூறி, அவ்வாறே ஒழுகாதே என்றும், தந்தையின் நிறைகளைக் கூறி, அவ்வாறு ஒழுகுவாயாக என்றும் கூறுகின்றாள். அந்நிலையில் தலைவன் தலைவியின் பின்புறம் வந்து மறைந்து நிற்கின்றான். தந்தை நிற்பதைக் குழந்தை பார்த்துவிடுகின்றது; உடனே நகுகின்றது. பின் உண்மை யுணர்ந்த தலைவி, குழந்தையின் இளமைச் செயல் கண்டு தானும் நகைக்கின்றாள்.

'நிறனல்ல யாங்கழற யாரை நகுமிம்
மகனல்லான் பெற்ற மகன்'

என்ற தலைவியின் கூற்றாக வந்துள்ள கலியடிகளில் (கலி. 86) தலைவி கூறி நகுவதை அறிக. இது குழந்தையின் இளமை கண்டு தாய் நக்கதாகும்.

### (ங) பேதைமை பற்றி வரும் நகை

(அ) தன் பேதைமை பொருளாக வரும் நகை :

ஒரு தலைவி தன் தாய் தன்னை வெகுண்டதன் நலத்தினைத் தன் பேதைமையால் உணராது, அது பற்றி நகைக்கின்றாள்.

'நகைநீ கேளாய் தோழி'

என்ற அகப்பாட்டடியில் (அகம். 248) தலைவி தன் பேதைமை பொருளாக, தாயின் உரை நலம் உணராது நக்குத் தோழிக்குக் கூறியதைக் காண்க.

(ஆ) பிறன் பேதைமை பற்றி வரும் நகை :

தலைவியறியாது தலைவனுக்காகப் பரத்தையரிடத்துத் தூது செல்லும் பாணன் ஒருவன், தலைவியின் வீட்டில் வந்து புகுந்துவிடுகின்றான்; தலைவியைக் கண்டு கலங்கித் தொழுது நிற்கின்றான். அது கண்டு தலைவி நகைக்கின்றாள். 'நகை யாகின்றே தோழி' என்ற அகப்பாட்டில் (அகம். 56),

'தண்துறை ஊரன் திண்தார் அகலம்
வதுவை நாளணிப் புதுவோர்ப் புணரிய
பரிவொடு வரூஉம் பாணன் தெருவில்
புனிற்றுப் பாய்ந்தெனக் கலங்கி யாழிட்டு
எம்மனைப் புகுதந் தோனே அதுகண்டு
மெய்ம்மலி உவகை மறையினென் எதிர்சென்(று)
இம்மனை அன்றஃ தும்மனை யென்ற
என்னுந் தன்னும் நோக்கி
மம்மர் நெஞ்சினோன் தொழுதுநின் றதுவே'

என்ற அடிகளில் பாணனின் பேதைமை கண்டு தலைவி நகைத்துத் தோழிக்குக் கூறுவது காண்க.

## (ச) மடமை பற்றி வரும் நகை

*(அ) தன் மடத்தால் தனக்கு நகை தோன்றுவது:*

ஒரு தலைவி தன் தலைவனை நோக்கி, "பண்டு நீ கூறியதை மெய்யாகக் கொண்டு யான் மகிழ்ந்தேனே. உன் கூற்று பொய்யாதலை எனது மடமையால் அறியாது நகைத்தேனே அங்ஙனம் நகைத்த பற்கள் அழிவனவாக" என வெறுத்துக் கூறுகின்றாள்.

'சுரஞ்செல் யானைக் கல்லுறு கோட்டில்
தெற்றென இறீஇயரோ ஐய மற்றியாம்
நும்மொடு நக்க வால்வெள் ளெயிறே'

[கல்உறுகோடு–மலையைக் குத்திய கொம்பு]

என்ற குறுந்தொகையடிகளில் (குறுந். 169) தலைவியின் கூற்றால் இதனை அறிக. இந்நகை தோன்றிய பொழுது தலைவி தன் மடத்தால் தலைவன் உரையை மெய்யெனக் கொண்டு நகைதத நகையாகும்.

*(ஆ) பிறர் மடம் பொருளாக நகை தோன்றுவது :*

ஒரு தலைவன் செல்லுதற்கரிய கடிய வழியில் தன்னுடன் வர விரும்பும் தலைவியின் எண்ணத்தைத் தோழியின் வாயிலாக அறிகின்றான். அத்தலைவியின் மடமை குறித்து தன் நெஞ்சினிடத்தே கூறி நகைக்கின்றான்.

'நாம் நகை யுடையம் நெஞ்சே'

என்ற அகப்பாட்டடியில் (அகம். 121) தலைவியின் மடமை நோக்கித் தலைவன் நக்கதை அறிக.

## 2. அழுகை

அழுகை என்பது, அவலம்; இரக்கம். தானே அவலித்தலும், பிறர் அவலம் கண்டு அவலித்தலும் என அஃது இரு வகைப்படும். பின்னது கருணம் என்றும், அஃதுடன் சுவை ஒன்பதாதலும் உண்டு என்றும் கூறுவர் பேராசிரியர். அழுகை விரிந்து நடப்பதைத் தொல்காப்பியர்,

> இளிவே* இழவே அசைவே வறுமையென
> விளிவில் கொள்கை அழுகை நான்கே. [4]
>
> [விளிவில் கொள்கை - கேடில் கொள்கை]

என்ற நூற்பாவால் கூறுவர். இளிவு என்பது, பிறரால் இகழப்பட்டு எளியனாதல். இழவு என்பது, தந்தையும் தாயும் முதலாகிய சுற்றத்தாரையும், இன்பம் பயக்கும் நுகர்ச்சி முதலாயவற்றையும் இழத்தல் (பேரா.); உயிரானும் பொருளானும் இழத்தல் (இளம்). அசைவு என்பது, பண்டை நிலைமை கெட்டு வேறொருவாறாகி வருந்துதல் (பேரா.); அசைவு - தளர்ச்சி; தன்னிலையில் தாழ்தல். வறுமை என்பது, போகந் துய்க்கப்பெறாத பற்றுள்ளம் (பேரா.); நல்குரவு (இளம்). இவை நான்கும் தன்மாட்டுற்றதனாலும் பிறன் மாட்டுற்றதனானும் அழுகை பிறக்கும்.

### (க) இளிவு பற்றி வரும் அழுகை

*(அ)* தன்கண் தோன்றிய இளிவு பற்றிய அழுகை:

ஒரு தோழி தலைவனை நோக்கி, "நீ பரத்தையை இகழ்ந்து கைவிட்டனை ; அதனால் இளிவெய்திய அவள் அழுதனள்" என்கின்றாள்.

> எழூதெழில் சிதைய அழுதனள் ஏங்கி
> வடித்தென உருத்த தித்திப் பல்லூழ்
> நொடித்தெனச் சிவந்த மெல்விரல் திருகுபு
> கூர்நுனை மழுகிய எயிற்றள்
> ஊர்முழுதும் நுவலுநிற் காணிய சென்மே.

என்ற தோழி தலைமகனை வாயில் மறுத்ததாக வந்த அகப்

---

* 'இழிவே' என்பது இளம்பூரணர் கொண்ட பாடம்.

4. மெய்ப் - நூற். 5 (இளம்).

பாட்டின் (அகம்.176) அடிகளில் பரத்தை தன்கண் தோன்றிய இளிவு பற்றி அழுத அழுகையைக் காண்க.

(ஆ) பிறன்கண் தோன்றிய இளிவு பற்றிய அழுகை:

ஒரு தலைவன் தோழியிடம் பன்னாளும் அலைந்து இளிவுறுகின்றான். அது பற்றி அவலங்கொண்ட தோழி தலைவியிடம் சென்று, தலைவன் இளிவெய்துவது பற்றித் தான் அவலம் உறுவதைக் கூறுகின்றாள்.

'சேயேன்மன் யானுந் துயருழப்பேன்'

என்ற கலிப்பாட்டடியில் (கலி.-37) தலைவன் இளிவு பற்றித் தோழி அவலம் உறுவதைக் காண்க.

## (உ) இழவு பற்றி வரும் அழுகை

(அ) தன்கண் தோன்றிய இழவு பற்றிய அழுகை :

இராவணன் தன் அருமைப் புதல்வன் மேகநாதன் இறந்தது பற்றி மனம் நொந்து பலவாறு புலம்புகின்றான்.

எனக்குநீ செய்யத் தக்க
கடன்எலாம் ஏங்கி ஏங்கி
உனக்குநான் செய்வ தானேன்
என்னின்யார் உலகத் துள்ளார்.

என்ற கம்பராமாயணப் பாட்டில் (இராவணன் சோகப்.-39) இராவணன் கண்ணே தோன்றிய இழவு பற்றிய அழுகையைக் காண்க.

(ஆ) பிறன்கண் தோன்றிய இழவு பற்றிய அழுகை:

கைகேயி கொண்ட வரங்களால் இராமன் நாடிழந்து காடு செல்கின்றான் என்பதை நினைந்து நகரத்திலுள்ளார் பலர் அழுகின்றனர்.

ஆடினர் அழுதனர் ; அமுத ஏழிசை
பாடினர் அழுதனர் ; பரிந்த கோதையர்
ஊடினர் அழுதனர் ; உயிரின் அன்பரைக்
கூடினர் அழுதனர் குழாங் குழாங்கொடே.

என்ற கம்பராமாயணப் பாடலில் (நகர் நீங்கு. 213) ஆடுதல்

முதலியன நிகழ்த்தியோரிடத்து அத்தொழில் நீங்கி அழுதல் தோன்றியவாறு காண்க.

### (௩) அசைவு பற்றி வரும் அழுகை

*(அ) தன்கண் தோன்றிய அசைவு பற்றிய அழுகை :*

விசயை தன் பண்டைய நிலைகெட்டு, சுடுகாட்டில் சீவகனை ஈன்று, தன் முன்னைய நிலையை நினைந்து அன்றைய நிலைக்கு அழுகின்றாள்.

> வெவ்வாய் ஓரி முழவாக,
> விளிந்தார் ஈமம் விளக்காக,
> ஒவ்வாச் சுடுகாட் டுயர்அரங்கில்
> நிழல்போல் நுடங்கிப் பேயாட,
> எவ்வாய் மருங்கும் இருந்திரங்கிக்
> கூகை குழறிப் பாராட்ட
> இவ்வா றாகிப் பிறப்பதோ?
> இதுவோ! மன்னர்க் கியல்,வேந்தே!

என்ற சிந்தாமணிப் பாடலில் (சிந்தா. 309) விசயை தன்கண் தோன்றிய அசைவுபற்றி அழுவதைக் காண்க.

*(ஆ) பிறன்கண் தோன்றிய அசைவு பற்றிய அழுகை:*

இராவணன் இறந்த பிறகு மேல் உலகிலும் அவன் தன் நிலைமை கெட்டுத் தளர்ச்சியுறுவதை எண்ணி வீடணன் அழுகின்றான்.

> நல்லாருந் தீயாரும் நரகத்தார்
> சொர்க்கத்தார் நம்பி! நம்மோடு
> எல்லாரும் பகைஞரே யார்முகத்தே
> விழிக்கின்றாய் எளியை ஆனாய்.

என்ற கம்பராமாயணப் பாடலில் (இராவணன் வதைப். 225) இராவணன்கண் தோன்றிய அசைவு பற்றி வீடணன் புலம்புவதைக் காண்க.

### (௪) வறுமை பற்றி வரும் அழுகை

*(அ) தன்கண் தோன்றிய வறுமை பற்றிய அழுகை:*

ஒரு குழந்தை தன் தாய்ப்பால் வற்றிவிட்டமையின் தனக்கு உணவு இல்லையாவது பற்றி அழுகின்றது.

இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுக நோக்கி
நீரொடு நிறைந்த விரிதழ் மழைக்கணொன்
மனையோ ளெவ்வ நோக்கி நினைஇ
நிற்படர்ந்திசினே நற்போர்க் குமண !*

என்ற புறப்பாட்டடிகளில் (புறம். 164) 'சுவைத்தொ றழூஉம்' என்றது குழந்தை பால் பெரு வறுமை தனக்கு எய்தலால் அடைந்த அழுகை காண்க.

(ஆ) பிறர்கண் தோன்றிய வறுமை பற்றிய அழுகை :

மேற்கூறிய குழந்தையின் நிலையினை நோக்கி யழும் தாயிடத்தே பாலின்மையாய வறுமை கண்டு தந்தை அவலிப்பது.

மனையோள் எவ்வம் நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண!

என்ற அடிகளில் மனைவியின் வறுமை நோக்கிக் கணவன் அவலித்தது காண்க.

---

*ஒப்பிடுக:

ஆடெரி படர்ந்த கோடுயர் அடுப்பில்
ஆம்பி பூப்பத் தீம்பசி யுழல
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொறும் சுவைத்தொறும் பால்கா ணமல்
குழவி தாய்முகம் நோக்க
மனைவி என்முகம் நோக்க யாமும்
நின்முகம் நோக்கி வந்தனன் குமண.

—ஒப்பிலாமணிப் புலவர் (தனிப்பாடல் திரட்டு)

இருங்கனல் அடுப்பில் ஆம்பி
யெழுப்பவுண் இன்றித் தூர்ந்து
சுருங்கிய கொங்கைத் தோலைச்
சுவைத்தழும் மகத்தாய் நோக்க
மருங்கெனை அவளும் நோக்க
வருந்திநின் நோக்கிப் புக்கேன்
பெருங்கலி தவிர்த்து வாழப்
பேணுதி குமண என்ன.

—செய். 249 (மு. ரா. கந்தசாமிக் கவிராயர் : குமண சரித்திரம்)

## 3. இளிவரல்

இளிவரல் என்பது, இழிபு; அஃதாவது, மானக் குறைவு. இந்த மெய்ப்பாடு விரிந்து நடப்பதை ஆசிரியர்,

> மூப்பே பிணியே வருத்தம் மென்மையோடு
> யாப்புற வந்த இளிவரல் நான்கே.[5]

என்ற நூற்பாவால் கூறுவர். இங்கு மூப்பு என்பது, முதுமை காரணமாகத் தோன்றும் தளர்ச்சி. பிணி என்பது, நோய். வருத்தம் என்பது, இடுக்கண்; அஃதாவது, அல்லல். வருத்தம் என்பதை முயற்சி என்பர் பேராசிரியர் (அஃதாவது, பயன் விளையாத வீண் முயற்சி). மென்மை என்பது, எளிமை; அஃதாவது ஆற்றலும் பொருளும் இன்றி எளியராம் நிலைமை. இவை நான்கும் தன்மாட்டுத் தோன்றினும் நிகழும்.

### (க) மூப்புப் பற்றி வரும் இளிவரல்

(அ) தன்கண் தோன்றும் மூப்புப் பற்றி வரும் இளிவரல் :

ஒரு புலவர் தன் முதுமையை நினைந்து தன்னை இகழ்ந்து கொள்ளுகின்றார்.

> 'தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்(று)
> இருமிடை மிடைந்த சிலசொற்
> பெருமூ தாளரேம் ஆகிய எமக்கே.'

என்ற புறப்பாட்டடிகளில் (புறம். 243) புலவர் தாம் இளமைக் காலத்துச் செய்ய மாட்டாது தமக்கு வந்துள்ள முதுமை பற்றித் தம்மை இகழ்ந்தமை காண்க.

(ஆ) பிறர்கண் தோன்றும் மூப்புப் பற்றி வரும் இளிவரல்:

ஒரு வீரன் தன்னை எதிர்த்து நிற்கும் ஒரு முதியவனை நோக்கி, "நின்னொடு போர் புரிதல் எனக்கு இழிவு ஆகும்" என்கின்றான்.

> 'மூத்துத்தலை இறைஞ்சிய நின்றோ டியானே
> போர்த்தொழில் தொடங்க நாணுவல்'

---

5. மெய்ப். நூற். 6 (இளம்).

இவ்வடிகளில் தன்னை எதிர்க்கும் பிறன் முதுமையை உட்கொண்டு தனக்கு இகழ்ச்சி நேரிடும் என்று எண்ணிக் கூறுவதை அறிக.

### (உ) பிணி பற்றி வரும் இளிவரல்

(அ) தன்கண் தோன்றிய பிணி பற்றிய இளிவரல் :

காமப்பிணிகொண்ட தலைவியொருத்தி மழையுடன் வந்த வாடைக்காற்றினை நோக்கி, 'நீ இமயமலையையும் அசைக்கும் தன்மையினை உடையாய். நீ எளியவளாகிய என்னை அலைப்பது வீரமோ?' என்று கூறித் தன் பிணியுடைமை கருதி இகழ்ச்சியுறுகின்றாள்.

'இமயமும் துளக்கும் பண்பினை
துணையிலர் அளியர் பெண்டிரிஃ தெவனே'

என்ற குறுந்தொகையடிகளில் (குறுந். 158) தலைவி தன்கண் தோன்றிய பிணிபற்றிய இளிவந்ததை அறிக. குப்பைக் கோழியாரின் குறுந்தொகையும் (குறுந். 305) அதுவே.

(ஆ) பிறன்கண் தோன்றிய பிணி பற்றிய இளிவரல் :

காமப் பிணியால் வருந்தும் நெஞ்சினைக் கொண்ட தலைமகன் ஒருவன் அல்ல குறிப்பட்டு மீள்கின்றான். அவன் நெஞ்சினை நெருங்கிச் சொல்லுகின்றான். நெஞ்சினைப் பிறர் போல் வைத்துக் கூறுவது மரபு.

குணகடற் றிரையது பறைதபு நாரை
திண்டேர்ப் பொறையன் தொண்டி முன்துறை
அயிரை யாரிரைக் கணவந் தாங்குச்
சேயள் அரியோள் படர்தி
நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே.

இதில் (குறுந். 128) தலைமகன் நெஞ்சினை வேறு நிறுத்தி அதன்கண் உள்ளே நோய் கண்டு தான் இளிவரலுற்றதைக் காண்க

### (ஊ) வருத்தம் பற்றி வரும் இளிவரல்

(அ) தன்மாட்டுளதாம் வருத்தம் பற்றிய இளிவரல் :

ஒரு தலைவியின் பருவ நலன்களால் வருந்திய தலைவன், 'யான் அவளை அறிந்து நயக்க, அவள் என்னையறிந்து நயந்திலளே' எனத் தன்பால் இளிவரலுறுகின்றான்.

'யான்தன் அறிவல் தான்அறி யலளே'

என்ற குறுந்தொகையடியில் (குறுந். 337) தலைவன் தான் எய்திய வருத்தம்பற்றித் தன்பால் இளிவரலுற்றதைக் காண்க.

(ஆ) பிறன்கண் தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல் :

எல்லா நலன்களும் வாய்க்கப்பெற்ற தலைவன் ஒருவன்—உலகம் புரப்பான் போல்பவன்—ஒன்று இரப்பான் போல வருத்தமுற்றுக் குறையிரக்கின்றான். தோழி தலைவியை நோக்கி, 'தலைவனின் செயல் நமக்கும் இளிவரலாம்' என்கின்றாள். 'ஒன்று, இரப்பான்போல் எளிவந்துஞ் சொல்லும்' என்ற கலியடியில் (கலி. 47) வந்துள்ள தோழி கூற்று, 'குறிப்பினால் நமக்கும் இஃது இளிவரலாம்' என்னும் பொருள் தருதலின், இது தலைவன் வருத்தம் பற்றித் தலைவி தோழியர்க்கு இளிவரலுறுவது காண்க.

## (ச) மென்மை பற்றி வரும் இளிவரல்

(அ) தன்கண் தோன்றிய மென்மை பற்றிய இளிவரல்:

ஒருவன் தன் மென்மையால் பிறர் வன்மை கண்டு அஞ்சி அவர்மாட்டுத் தாழ்வுரை கூறல் ; தன் மென்மையால் தான் இளிவரலுறுதல்.

(ஆ) பிறர் மென்மை கண்டு தான் இளிவரலுறுதல் :

ஒருவன் பிறர் மென்மை கண்டு அவரிடம் வன்மொழிகள் கூறின், அதுபற்றி அவனுக்கு வரும் இளிவரல்.

புகழ் எய்துவான் ஒருவன் செயல் :

வலியரென வழிமொழியலன்
மெலியரென மீக்கூறலன்

என்பது புறம் (புறம்.239). எனவே, இவற்றிற்கு எதிராய வலியரென வழி மொழிதல், தன்கண் தோன்றிய மென்மை பற்றி ஒருவற்கு இளிவரல், மெலியரென மீக்கூறல், பிறர்

கண் தோன்றிய மென்மை பற்றிய ஒருவன் வன்சொல்லால் அவன் இளிவரல் எய்துவது என அறிக.

### 4. மருட்கை

மருட்கை என்பது, வியப்பு. இதன் இயல்பை ஆசிரியர் தொல்காப்பியர்,

> புதுமை பெருமை சிறுமை ஆக்கமொடு
> மதிமை சாலா மருட்கை நான்கே.[6]

என்ற நூற்பாவால் கூறுவர். இவற்றுள் புதுமை என்பது, முன்னறியா யாணர்த்தன்மை ; அஃதாவது, நூதனம்; "யாதொன்றானும் எவ்விடத்தினும் எக்காலத்தினும் தோன்றாததோர் பொருள் தோன்றிய வழி வியத்தல். அது கந்திருவர் அந்தரம் போவது கண்டு வியத்தல் போல்வன"[3] என்பர் இளம்பூரணர். பறழுக்கு வயிற்றில் புறப் பையுடைய கங்காரு, பறக்கும் மீன், சிற்றுயிருற்றக்கால் பற்றிப் பிசைந்துண்ணும் பூச்செடி, கையிலடங்குஞ் சிறுநாய், கண்கொள்ளாப் பெருமலை, முக்கண், ஐங்கால், அறுவிரல் முதலிய வழக்கிறந்த உறுப்புடைய உயிர்கள், பெண் ஆணு தல், ஆண் பெண்ணுதல் முதலியவற்றைக் காணுங்கால் எழும் உணர்வு புதுமையிற் பிறக்கும் வியப்பாகும். இது பெரிதும் இயற்கையில் தோன்றும் இயல்பிற்றும். பெருமை என்பது, பண்டு கண்ட பொருள்கள் போலாத பொருள்கள் அவ்வளவிற் பெருத்தன கண்டு வியத்தல். அவை மலையும் யானையும் செல்வமும் முன்கண்ட அளவின் மிக்கன கண்ட வழி வியப்பு வரும். சிறுமை என்பது, இறப்பச் சிறியன கண்டு வியத்தல். அது 'கடுகின் பல துளை' போல்வன. ஆக்கம் என்பது, அறிவுடை மக்கள் சமைப்பாலாவது; எனவே, ஆக்க மருட்கை செயற்கையில் தோன்றும் அரும் பொருள் விளைக்கும் வியப்பாகும். வானவூர்தி, பேசும்படம், தொலைக்காட்சி, அணுகுண்டு, 'ஸ்புட்னிக்' போல்வன ஆக்க மருட்கையாம். ஆக்கம் என்பதை ஒன்றன் பரிணமங்கண்டு வியத்தல் என்று கூறி, "அது தன்னளவின்றி நன்னிலஞ்

6. மெய்ப் - நூற். 7 (இளம்).

சார்பாகத் தோன்றும் மஃமுதலாயின ஆகிய வழி வியத்தலும், நல்கூர்ந்தான் யாதொன்று மிலாதான் ஆக்கமுற்றுழி யின், அதற்குக் காரணமுணராதான் அது கண்டு வியத்தலும் இளையான் விரங்கண்டு வியத்தலுமாம். பிறவும் உலகத்து வியக்கத்தகுவன எல்லாம் இவற்றின்பாற் படுத்திக் கொள்க" என்பர் இவை நான்கும் தன்கண் தோன்றுதலும் பிறர்கண் தோன்றுதலுப்பற்றி எட்டாகும். உலக வழக்கினுள் நின்றவாறு நில்லாமல் அறிவினைத் திரித்து வேறு படுத்துவது வியப்பென்னும் மெய்ப்பாடாதலின் அதனை 'மதிமை சாலா மருட்கை' என அடைபுணர்த்தோதினார் ஆசிரியர். எனவே, திரிபின்றி இயல்பாகிய அறிவுடன் கூடிய நிலையில் மருட்கை தோன்றுவதற்கு இடமில்லை என்பது புலனாகும்.

### (ச) புதுமை பற்றிய மருட்கை

*(அ) தன்கண் தோன்றிய புதுமை பற்றிய மருட்கை:*

ஒரு தலைவனை ஆயத்தார் பலருங் கண்டனர். அவருள் தலைவி அவனைக் காதலித்தாள். அதனால் அவள் உருவமும் செயலும் வேறுபட்டுப் புதுமை அடைந்தனள். தான் ஒன்றுமறியாதாள் போலத் தன் தோழிக்குத் தன்பால் எய்திய புதுமையைக் காட்டி வியக்கின்றாள்

> 'மலர்தார் மார்பன் நின்றோற் கண்டோர்
> பலர்தில் வாழி தோழி அவருள்
> ஆரிருட் கங்குல் அணையொடு பொருந்தி
> ஓர்யா னாகுவ தெவன்கொல்'

என்ற அகப்பாட்டடிகளில் (அகம்-82) தன் கருத்து வெளிப்படாது தன் மெய்க்கண் தோன்றிய புதுமையைத் தலைவி வியந்ததனைக் காண்க. இது தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்கும் பாடல்.

*(ஆ) பிற பொருட்கண் தோன்றிய புதுமைபற்றிய மருட்கை:*

மயில்கள் முன்பெல்லாம் ஆடும் நெறியானன்றிப் புதுமையாக ஆடின. அவற்றை மந்திகள் வியந்து நோக்கின.

'மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
கழைவளர் அடுக்கத் தியலி யாடுமயில்'

என்ற அகப்பாட்டடிகளில் (அகம் - 82) மயிலாகிய பிற பொருட்கள் எய்திய புதுமை பற்றி மந்திக்கு மருட்கை தோன்றியது காண்க.

### (உ) பெருமை பற்றிய மருட்கை

(அ) தன்கண் தோன்றிய பெருமை பற்றிய மருட்கை :

தலைவியொருத்தி தலைவனொருவனைக் கண்டவிடத்து நாடோறும் தேனிறால் போலச் சிறுகச் சிறுக வளர வேண்டிய நட்பு நிலத்தின் அகலம், விசும்பின் உயர்வு, கடலின் ஆழம் ஆகிய இவை போலத் தன்பாற் பெருகக் கண்டு வியக்கின்றாள்.

நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே சாரல்
கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே.

என்ற குறுந்தொகையில் (குறுந். 3) தலைவி தன்பாற் பெருகிய நட்பினைக் கண்டு வியத்தல் காண்க.

(ஆ) பிறன்கண் தோன்றிய பெருமை பற்றிய மருட்கை:

அங்ஙனமே, தலைவன்பாற் சிறுகச் சிறுக வளரவேண்டிய நட்பு, மேற்கண்டவாறு உடனே பெருகக் கண்ட தலைவி, அது பற்றித்தான் வியப்பதாயின், அது பிறன்கண் தோன்றிய மருட்கையாகும். இதற்கும் மேற்காட்டிய பாடலையே எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

### (ஊ) சிறுமை பற்றிய மருட்கை

(அ) தன்கண் எய்திய சிறுமை பற்றிய மருட்கை:

ஒருவன் பிணியால் வருந்தி, அதனால் தன் உடல் மிகவும் இளைத்தமை ஆடியிற் கண்டு வியத்தல் போல்வது.

(ஆ) பிறர்கண் தோன்றிய சிறுமை பற்றிய மருட்கை.

ஒரு தலைவன் தலைவியின் இடைச் சிறுமை கண்டு வியப்பது.

மைம்மலர் ஒதி மணிநகைப் பேதைதன்
கொம்மை வரிமுலை ஏந்தினும்—அம்ம
கடையிற் சிறந்த கருநெடுங்கண் பேதை
இடையிற் சிறியதோன் றில்.

என்ற பாடலில் தலைவன் அங்ஙனம் வியந்தவாறு காண்க.

## (ச) ஆக்கம் பற்றிய மருட்கை

*(அ)* தன்கண் தோன்றிய ஆக்கம் பற்றிய மருட்கை :

நரிவெரூஉத் தலையார் என்ற புலவர் தன் உடம்பு வேறு பட்டிருந்தவர். அவர், சேரமான் பெருஞ்சேரல் இரும் பொறையைக் கண்ட நாளில் அவ்வேறுபாடு நீங்கி முன்னை நல்லுருப் பெற்றனர். இஃது ஆக்கம். இங்ஙனம் ஆக்கம் பெற்ற காலை வியந்து அவ்வரசனைப் பாடி வாழ்த்தினர்.

எருமை யன்ன கருங்கல் இடைதோறு
ஆனிற் பரக்கும் யானைய முன்பின்
கானக நாடனை நீயோ பெரும
[முன்பு - வலி]

என்ற புறப்பாட்டடிகளில் (புறம் - 5) அப்புலவர் தன்கண் தோன்றிய ஆக்கம் பற்றி மருட்கை எய்தி அரசனை வாழ்த்து தலை அறிக.

(ஆ) பிற பொருளின்கண் தோன்றிய ஆக்கம் பற்றிய மருட்கை.

ஆலம் வித்து மிகச் சிறியது. அது முளைத்தெழுந்து பெருமரமாகி மிக்க நிழலைப் பயக்கின்றது. அந்த ஆக்கத்தைக் கண்டு ஒருவர் வியக்கின்றார்.

'உறக்குந் துணையதோர் ஆலம்வித் தீண்டி
இறப்ப நிழற்பயந் தாஅங்கு'

என்ற நாலடியாரில் (நாலடி. 38) ஆலம் வித்தாய பிற பொருளின் ஆக்கம் கண்டார் ஒருவர் வியந்தவாறு காண்க.

## 5. அச்சம்

அச்சம் என்பது, பயம். அச்சத்தின் இயல்பினைத் தொல்காப்பியர்,

அணங்கே விலங்கே கள்வர்தம் இறையெனப்
பிணங்கல் சாலா அச்சம் நான்கே.[7]
[பிணங்கல் - மாறுபடல்]

என்ற விதியால் கூறுவர். அணங்காவன : எதிர்ப்பட்டாரை வருத்தும் இயல்பினவாகிய பேய் பூதம் முதலியன. விலங்கென்பன: அரி வேங்கை புலி முதலாகவுள்ள கொடிய விலங்குகள். கள்வரென்பார் : சோர்வு பார்த்து வஞ்சித்துக் கொடுந்தொழில் புரிவோர். இறை எனப்படுவார் : தந்தை, ஆசிரியன், அரசன், வழிபடு தெய்வம் என இவ்வுரிமை முறையிற் பணி கொண்டு தம்மை ஆள்வோர். அஞ்சத்தக்கனவாகிய இவற்றைக் கண்ட நிலையில் உள்ளம் நடுக்கமுற்று அஞ்சுதல் இயல்பு. இங்ஙனம் நடுங்காது பிணங்கி நிற்பாரது மனத்தில் அச்சம் தோன்றுவதில்லை என்பார், 'பிணங்கல் சாலா அச்சம்' என்றார். இவை தன்கண் தோன்றலும் பிறன்கண் தோன்றலும் என்னும் தடுமாற்றமின்றிப் பிறிது பொருள் பற்றியே வரும்.

## (க) அணங்கு பற்றி வரும் அச்சம்

தமிழ் நாட்டுக் குறிஞ்சி மகளிர் விரத்தினைப் பற்றிக் கூறுமிடத்து, அவருட் சூல்கொண்ட மகளொருத்தி தானும், அச்சம் விளைவித்துக் கருவினைச் சிதைக்க வல்ல பொருள்கள் அச்சுறுத்தியவிடத்தும் அஞ்சாது மீள்வது பற்றிக் கூறும்.

யானை தாக்கினும் அரவுமேற் செலினும்
நீனிற விசும்பின் வல்லேறு சிலைப்பினும்
சூன்மகள் மாறா மறம்பூண் வாழ்க்கை

என்னும் பெரும்பாணாற்றுப்படை அடிகளில் (வரி 134 -36) குறிக்கப்பெறும் இடி போலும் தெய்வச் செயல் பற்றி ஒருவர் மாட்டு அச்சம் நிகழ்வது போல்வது இது.

## (உ) விலங்கு பற்றி வரும் அச்சம்

இதற்கும் மேற்கூறிய செய்யுட்பகுதியையே மேற்கோளாகக் கொள்ளலாம். யானை, அரவு முதலியன விலங்கு என்ற இப்பகுதியில் அடங்குவதை அறிக.

---

7. மெய்ப்-தூற். 8 (இளம்).

### (௩) கள்வர் பற்றி வரும் அச்சம்

ஒரு தலைவி தலைவனை நோக்கி, 'நீ கண்ணை மூடித் திறப்பதற்குள் மறைந்துவிடுங் கள்வன். என்னை விட்டு நீங்குதி' என்கின்றாள்.

> ஒரூஉ யெங்கூந்தல் கொள்ளல்யாம் நின்னை
> வெரூஉதுங் காணுங் கடை.

என்ற கலிப்பாட்டடிகளில் (கலி - 87) கள்வன் போலும் தலைவனைக் கண்டு தலைவி அஞ்சி, 'இமைப்பின் இதழ்மறைபாங்கே கெடுதி' என்று கூறுவகைக் காண்க.

### (௪) இறை பற்றி வரும் அச்சம்

சிற்றரசர்கள் தம் பேரரசனை நிமிர்ந்து நோக்காது அஞ்சிக் குனிந்து நிற்பர்.

> எருத்துமே நோக்குநின் வாழலே மென்னுங்
> கருத்திற்கை கூப்பிப் பழகி—பெருத்திறைஞ்சிக்
> கால்வண்ண மல்லாற் கடுயான்றேர்க் கோதையை
> மேல்வண்ணங் கண்டறியா வேந்து.

என்ற இலக்கண விளக்கப் பழம் பாடலில் இறை பொருளாக அச்சம் பிறந்தமை அறிக. இனி, மகளிர் ஊடலால் தலைவர்க்கு வரும் அச்சம் முதலியனவும் இவற்றுள் அடங்கும். எடுத்துக்காட்டு வந்துழிக் காண்க.

## 6. பெருமிதம்

பெருமிதம் என்பது, வீரம். அஃது ஏனைப் பெருமைகளோடும் ஒப்ப நில்லாது பேரெல்லையாக நிற்பதால் பெருமிதம் எனப்பட்டது என்பர் பேராசிரியர். எனவே, அறிவு, ஆண்மை பொருள் முதலிய சிறப்புக்களால் மக்கள் எல்லாரோடும் ஒப்ப நில்லாது உயர்ந்து நிற்றல் பெருமிதம் ஆகும் எனக் கொள்ளுதல் பொருந்தும். பெருமிதம் என்பது, தன்னைப் பெரியனாக மதித்தல் என்பர் இளம்பூரணர். பெருமிதத்தின் இயல்பு,

> கல்வி தறுகண் இசைமை கொடையெனச்
> சொல்லப் பட்ட பெருமிதம் நான்கே. [௬]

---

௬. மெய் - நூற். 9 (இளம்.)

என்ற தொல்காப்பிய விதியால் அறியப்படும். இவற்றுள் கல்வி என்பது, தவம் முதலாகிய செயலின் திறம். தறுகண் என்பது, அஞ்சத்தக்கன கண்ட இடத்து அஞ்சாமை; அஃதாவது, உள்ளத்து உறுதியாகிய வீரம். இசைமை என்பது, இன்பமும் பொருளும் இறப்பப் பயப்பினும் பழியொடு வருவன செய்யாமையாகிய புகழ்ச்சித் திறம். கொடை என்பது, உயிரும் உடம்பும் உறுப்பும் முதலிய எல்லாப் பொருளும் கொடுத்தலாகிய வன்மைத்திறம். இவை நான்கும் ஒருவர் பால் அமைந்த நிலையில் அவரிடத்தே பெருமிதம் என்னும் மெய்ப்பாடு தோன்றுதல் இயல்பு. இது தன்கண் தோன்றிய பொருள்பற்றியே வரும் என்பர் பேராசிரியர்.

### (க) கல்வி பற்றி வரும் பெருமிதம்

காளமேகப் புலவர் தன் ஆசுகவி பாடுந்திறத்தைச் செப்பி அதிமதுரகவிக்கு ஏடெழுதி அனுப்புகின்றார்:

'தூதைந்து நாழிகையில் ஆறுநா ழிகைதனில்
சொற்சந்த மாலைசொல்லத்
துகளிலா அந்தாதி ஏழுநா ழிகைதனில்
தொகைபட விரித்துரைககப்
பாதஞ்செய் மடல்கோவை பத்துநா ழிகைதனில்
பரணியொரு நாள்முழுதுமே
பாரகா வியமெலாம் ஓரிரு தினத்திலே
பகரக் கொடிகட்டினேன்;'

என்ற பாடற்பகுதியில் காளமேகம் தன்னுடைய கவி பாடும் பெருமிதத்தை வெளிப்படுத்துவதைக் காண்க. சீட்டுக்கவிகளின் முற்பகுதியில் இத்தகைய பெருமிதத்தைக்[1] காணலாம்.

### (உ) தறுகண்பற்றி வரும் பெருமிதம்

மிகக் கடுமையாகப் போர் புரியும் அனுமன் முன்னே அகம்பன் என்ற அரக்கன் அஞ்சாது பெருமிதத்துடன் எதிர்த்து வருகின்றான்.

இன்றிவன் தன்னை வென்று
ஏற்றிவாள் இலங்கை வேந்தை
வென்றிய ஒக்கி மற்றை

மனிதரை வெறிய ராக்கி
நின்றுளர் நேடிய துன்பம்
அமரர்பால் நிறுப்பன் என்று

என்ற கம்பராமாயணப் பாடற்பகுதியில் (பிரம்மாத்திரம் —129) அகம்பன் தன் தறுகண்பற்றிப் பெருமிதம் கூறுதல் காண்க.

### (௩) இசைமை பற்றிய பெருமிதம்

துச்சாதனன் திரௌபதியைத் துகில் உரிகையில் சினம் கொண்ட வீமன் தருமனிடம் தம் புகழ் பற்றிப் பேசுகின்றான்.

சோரத்திற் கொண்டதில்லை—அண்ணே!
சூதிற் படைத்ததில்லை;
வீரத்தி னாற்படைத்தோம்—வெம்போர்
வெற்றியினாற் படைத்தோம்.

இப்பாடலில், வீமன் திரௌபதியைப் பெற்ற, தன் புகழை நினைந்து கூறுவதைக் காண்க.

### (௪) கொடை பற்றி வரும் பெருமிதம்

போர்க்களத்தில் கண்ணனுக்குத் தம் புண்ணியம் அனைத்தும் உதவிய பிறகு கன்னன் தன் கொடைபற்றிய பெருமிதத்தால் பேசுகின்றான்.

தருமன்மகன் முதலான அரிய காதல்
தம்பியரோ டெதிர்மலைந்து தறுகண் ஆண்மைச்
செருவில்என துயிர்அனைய தோழற் காகச்
செஞ்சோற்றுக் கடன்கழித்தேன்; தேவர் கோவுக்கு
உரைபெறுநற் கவசமுங்குண் டலமும் ஈந்தேன்;
உற்றபெரு நல்வினைப்பே றுனக்கே தந்தேன்;

என்ற பாடற்பகுதியில் (வில்லி பாரதம்-பதினேழாம் போர்ச். —248) கன்னனின் பெருமிதத்தைக் காண்க.

## 7. வெகுளி

வெகுளி என்பது, உருத்திரம் (சினம்). அதன் இயல்பினை ஆசிரியர்,

உறுப்பறை குடிகோள் அலைகொலை என்ற
வெறுப்பின் வந்த வெகுளி நான்கே. [9]

9. மெய்ப்.- நூற். 10 (இளம்.)

என்ற நூற்பாவால் கூறுவர். இவற்றுள் உறுப்பறை என்பது, கையை வெட்டுதலும் கண்ணைத் தோண்டுதலும் போன்ற கொடுஞ்செயல்கள். குடிகோள் என்பது, பிறரது குடிப்பிறப்பின் உயர்வுக்கும் அவருடைய சுற்றத்தார்க்கும் கேடு சூழ்தல். அலை என்பது, அரசியல் நெறிக்கு மாருகக் கோல் கொண்டு அலைத்தல் முதலிய தீத்தொழில்கள். கொலை என்பது, பிறருடைய அறிவும் புகழும் முதலிய நன்மைகளை அழித்துப் பேசுதல். இங்ஙனம் நால்வகைப் படக் கூறப்பெற்ற இக்கொடுஞ்செயல்கள் காரணமாக மக்களது மனத்தே வெகுளி தோன்றுதல் இயல்பு. இது பிறர்கண் தோன்றிய பொருள்பற்றியே வரும். "இப்பொருள் நான்குந்தான் பிறரைச் செய்புங்காலும் வெகுளி பிறக்கும்; தன்னைப் பிறர் செய்யுங்காலும் வெகுளி பிறக்கும் என்று கொள்க." என்பர் இளம்பூரணர்.

### (க) உறுப்பறை பற்றி வரும் வெகுளி

தன்னுடைய மூக்கும் காதும் சுக்கிரீவனல் அழிந்தமை கண்டு கும்பகருணன் சினங்கொள்ளுகின்ருன்.

> என்னுடைத் தன்மையன் இனைய எண்ணிலாப்
> பெண்ணுடைத் தன்மைய தாய பீடையால்
> புண்ணுடைச் செவியொடு மூக்கும் பொன்றலால்
> கண்ணுடைச் சுழிகளும் குருதி கால்வன.

என்ற கம்பராமாயணப் பாடலில் (கும்பகருணன் வதைப் —297) கும்பகருணன் கொண்ட சினத்தால் அவன் கண்கள் குருதியை வெளிப்படுத்தியதைக் காண்க.

### (உ) குடிகோள் பற்றி வரும் பெருமிதம்

ஒரு வீர மகள் தன் மகன் போர்க்களத்தில் புறங்காட்டி மாண்டுத் தன் மறக்குடிக்குக் கேடு சூழ்ந்தான் என்று அம் மகன்மீது வெகுள்கின்ருள்.

> நின்மகன்,
> படையழிந்து மாறினன் என்றுபலர் கூற
> மண்டமர்க் குடைந்தன ளுயின் உண்டவென்
> முலையறுத் திடுவென் யானெனச் சினைஇ'

என்ற புறப்பாட்டடிகளில் (புறம்—278) ஒரு வீரத்தாய் சினந்து வீரம் பேசுவதைக் காண்க.

(ங) அலை பற்றி வரும் வெகுளி

ஒரு யானை ஒரு புலியோடு அலைப்புண்டு வெகுளி எய்திப் பின் அதனை அலைத்தும் சினம் நீங்கிலது.

> வரிவயம் பொருத வயக்களிறு போல
> இன்னும் மாறாது சினனே.

என்ற புறப்பாட்டடிகளில் (புறம்—100) யானை புலியால் தான் எய்திய அலைப்புப் பற்றி வெகுண்டமை அறிக.

(ச) கொலை பற்றி வரும் வெகுளி

ஓர் அரசனைப்பற்றி மாற்றரசர்கள் அவன் புகழ் அழியும் இழிசொற்களைக் கூறினர். அது கேட்ட அரசன் சினந்தெழுந்து செரு வென்றான்

> உறுதுப் பஞ்சா துடல்சினஞ் செருக்கிச்
> சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
> அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொ
> டொருங்ககப் படேஎ னாயின்

என்ற புறப்பாட்டடிகளில் (புறம்—72) சிறு சொல் கூறிய மாற்றரசர்கள்மீது தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனின் சினம் வெளிப்படுதல் காண்க.

## 8. உவகை

உவகை என்பது, காமம் முதலிய மகிழ்ச்சி, இதன் இயல்பினை,

> செல்வம் புலனே புணர்வு விளையாட்டென
> அல்லல் நீத்த உவகை நான்கே. [10]

என்ற நூற்பா உணர்த்துகின்றது. செல்வம் என்றது, செல்வத்தால் உண்டாகும் நுகர்ச்சியினை. புலன் என்பது, கல்விப் பயனாகிய அறிவுடைமையினை. புணர்வு என்றது, அன்

10. மெய்ப் - நூற். 11 (இளம்).

பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கிற் காமப்புணர்ச்சியினை. விளையாட்டு என்றது, யாறும் குளமும் சோலையும் முதலாகிய வனப்புமிக்க இடங்களில் தங்கித் துணையொடு விளையாடி மகிழும் விளையாட்டினை. உலகியல் வாழ்வில் பிறரது துன்பத்தினைக் கண்டு கீழ்மக்கள் அடையும் போலி மகிழ்ச்சி உண்மையான உவகையாகாது என அறிவுறுத்தும் நோக்கத்துடன் 'அல்லல் நீத்த உவகை' என அடைபுணர்த்தோதினர் ஆசிரியர்.

### (க) செல்வம் பற்றிய உவகை

ஒருவன் தனக்குரிய இல்லின்கணிருந்து தன் முயற்சியால் எய்திய பொருளைத் தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல்கட்கும் பகுத்துத் தன் கூற்றைத் தான் உண்டலால் மகிழ்ச்சி எய்துகின்றான்.

> தம்மில் இருந்து தமதுபாத் துண்டற்றால்
> அம்மா அரிவை முயக்கு.

என்ற குறளில் (குறள் - 1107) ஒரு தலைவன் தேடும் பொருளைத் தேடி முடித்த செல்வத்தால் உண்டாகும் மகிழ்ச்சியே தனது இன்ப வாழ்க்கையின் பயன் என்று கூறுவதைக் காண்க.

### (உ) புலன் பற்றி வரும் உவகை

அறிஞரின் கூட்டத்தால் இனிய மகிழ்ச்சி தோன்றும்.

> இகல்லர் எஃகுடையார் தம்முட் குழீஇ
> நகலின் இனிதாயிற் காண்பாம்.

என்ற நாலடியாரில் (நாலடி. — 137) ஒருவர் தம் கல்வியறிவால் மகிழ்வதைக் காண்க.

### (ங) புணர்வு பற்றி வரும் உவகை

தலைவியைக் கண்டு அவளுடன் புணர்ந்து பெற்ற மகிழ்ச்சியை ஒருவன் கூறுகின்றான்.

> தொடிக்கண் வடுக்கொள முயங்கினள்
> வடிப்புறு நரம்பில் தீவிய மொழிந்தே.

என்ற அகப்பாட்டடிகளில் (அகம் — 142) தலைவன் தலைவி

இவ்வாறு முயங்கினமையால் 'நன்றும், உவஇனி வாழிய நெஞ்சே!' என்று தன் நெஞ்சத்திற்குச் சொல்லுவதைக் காண்க.

### (ச) விளையாட்டு பற்றி வரும் உவகை

சீவகன் தன் துணைவியருடன் நீர் விளையாட்டயர்கின்றான். காந்தருவதத்தை விளையாட்டில் தோற்றோடி சீவகனைத் தழுவிக்கொள்ளுகின்றாள்.

அடுத்தசாந் தலங்கல் சுண்ணம்
    அரும்புனல் கவர அஞ்சி
உடுத்தபட் டொளிப்ப ஒண்பொன்
    மேகலை ஒன்றும் பேசா
கிடப்பமற் றரசன் நோக்கிக்
    'கெட்டதுன் துகில்மற்' றென்ன
மடத்தகை நாணிப் புல்லி
    மின்னுச்சேர் பருதி யொத்தான்.

என்ற சிந்தாமணிப் பாடலில் (சிந்தா. — 2666) 'மடத்தகை நாணிப் புல்லி, மின்னுச்சேர் பருதியொத்தான்' என்றதனால் இங்கு விளையாட்டுப் பொருளாக உவகை பிறந்தமை அறிக.

**வேறு சில மெய்ப்பாடுகள் :** மேற்கூறிய எட்டு மெய்ப்பாடுகளைத் தவிர, வேறு முப்பத்திரண்டு மெய்ப்பாடுகள் கூறப் பெறுகின்றன. அவற்றைக் கூறும் நூற்பா :

ஆங்கவை ஒருபால் ஆக ஒருபால்
உடைமை இன்புறல் நடுவுநிலை யருளல்
தன்மை அடக்கம் வரைதல் அன்பெனாக்
கைம்மிகல் நலிதல் சூழ்ச்சி வாழ்த்தல்
நாணுதல் துஞ்சல் அரற்றுக் கனவெனாஅ
முனிதல் நினைதல் வெரூஉதல் மடிமை
கருதல் ஆராய்ச்சி விரைவுயிர்ப் பெனாஅக்
கையா றிடுக்கண் பொச்சாப்புப் பொறாமை
வியர்த்தல் ஐயம் மிகைநடுக் கெனாஅ
இவையும் உளவே அவையலங் கடையே.11

என்பது. இவற்றுள்,

11. மெய்ப் - நூற். 12 (இளம்).

(1) **உடைமை** என்பது, செல்வம்; செல்வ நுகர்ச்சியாயின் உவகைப் பொருளாம்; இஃது அன்னதன்றி அச் செல்வந்தன்னை நுகராதே நினைந்து இன்புறுதற்கு ஏதுவாகிய பற்றுள்ளம்.

**எ - டு. 'நெடுநெல் யானையும் தேரும் மாவும்**
**படையமை மறவரும் உடையம் யாமென்று**
**உறுதுப் பஞ்சாது'**

என்ற புறப்பாட்டடிகளில் (புறம் - 72) இம்மெய்ப்பாடு வந்துள்ளமை அறிக.

(2) **இன்புறல்** என்பது, அவ்வுடைமையை நினையுந் தோறும் இடையிட்டுப் பிறக்கும் மனமகிழ்ச்சி.

**எ - டு. உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்**
**கள்ளுக்கில் காமத்திற் குண்டு.**

என்ற குறளில் (குறள் - 1281) கூறப்படுவதோர் மெய்ப்பாடு.

(3) **நடுவு நிலை** என்பது, ஒன்பது சுவையுள் ஒன்றென நாடக நிலையுள் வேண்டப்படுஞ் சமநிலை; அஃதாவது,

**'செஞ்சாந் தெறியினும் செத்தினும் போழினும்**
**நெஞ்சோர்ந் தோடா நிலைமை.'** [12]

அது காம வெகுளி மயக்க நீங்கினோர் கண்ணே நிகழ்வது. நடுவுநிலையை, இளம்பூரணர் 'ஒரு மருங்கு ஓடாது நிகழும் மன நிகழ்ச்சி' என்பர்.

**எ -டு. சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்**
**கோடாமை சான்றோர்க் கணி.**

என்ற குறளில் (குறள்-118) இம்மன நிகழ்ச்சியைக் காண்க.

(4) **அருளல்** என்பது, மக்கள் முதலிய சுற்றத்தாரை அருளுதல். 'எல்லாவுயிர்க்கும் அளி செய்தல்' (இளம்).

**'அரிதாய அறன்எய்தி அருளியோர்க் களித்தலும்'**
என்ற கலிப்பாவின் அடியில் (கலி. - 11) இம்மெய்ப்பாட்டைக் காண்க.

12. சீவக சிந்தா. - 2825.

(5) **தன்மை** என்பது, சாதித்தன்மை; பார்ப்பாராயிற் குந்தி மிதித்துக் குறுநடை கொண்டு வந்து தோன்றலும், அரசராயின் எடுத்த கழத்தொடுப் அடுத்த மார்பொடும் நடந்து சேறலும், இடையராயிற் கோற்கையும் கொடுமடி யுடையும் விளித்த விளையுப் வெண்பல்லுமாகித் தோன்றலும் என்ற இன்னோரன்ன வழக்கு நோக்கிக் கொள்க.

**எ-டு. 'காயாம்பூக் கண்ணிக் கருந்துவ ராடையை**
**மேயு நிரைமுன்னர்க் கோலூன்றி நின்றுயோர்**
**ஆயனை யல்லை'.**

என்ற கலிப்பாட்டடிகளில் (கலி - 108) ஆயர் தன்மையைக் காண்க. பிறவும் வந்த வழிக் கண்டு கொள்க.

(6) **அடக்கம்** என்பது, உயர்ந்தோர் முன் அடங்கியொழுகும் ஒழுக்கம்; அவை: பணிந்த மொழியும் தணிந்த நடையும் தானை மடக்கலும் வாய் புதைத்தலும் முதலாயின.

**எ-டு. நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்**
**மலையினும் மாணப் பெரிது.**

என்ற குறளில் (குறள்-124) இந்த அடக்கம் காண்க.

(7) **வரைதல்** என்பது, காப்பன காத்துக் கடிவன கடிந்தொழுகும் ஒழுக்கம்; அவை: பார்ப்பாராயின் முத்தீ வேட்டலும் புலவும் கள்ளும் முதலாயின கடிதலும் என்று இன்னோரன்ன கொள்க. வரைதல் என்பது தொழிலாதலான் தன்மையெனப்படாது.

**எ-டு. பெண்விழைந்து பின்செலினும் தன்செலவிற்**
**[குன்றுமை**
**கண்விழைந்து கையுறினும் காதல் பொருட்கின்மை**

என்ற திரிகடுகத்தில் (செய்-29) இதனைக் காண்க.

(8) **அன்பு** என்பது, அருட்கு முதலாகி மனத்தில் நிகழும் நேயம்; அஃதுடையார்க்குப் பிறர்கண் துன்பங் கண்டவழிக் கண்ணீர் விழுமாதலின் அவ்வருளானே அன்புடைமை விளங்கும். 'அன்பென்பது, பயின்றூர்மாட்டுச் செல்லும் காதல்' என்பர் இளம்பூரணர்.

எ-டு. **புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை**
**அகத்துறுப் பன்பி லவர்க்கு.**

என்ற குறளினல் (குறள் 79) இது அறியப்படும்.

(9) **கைம்மிகல்** என்பது, ஒழுக்கக்கேடு; அது சாதித் தருமத்தினை நீங்கினமை தன்னுள்ள நிகழ்ச்சியானே பிறர் அறியுமாற்ருல் ஒழுகுதல்.

எ-டு. **குணனிலனுய்க் குற்றம் பலவாயின் மாற்ருர்க்**
**கினனிலனும் ஏமாப் புடைத்து.**

என்ற குறளில் (குறள் 868) இதனைக் காண்க.

(10) **நலிதல்** என்பது, பிறர்க்கு இன்ன செய்து நெருங்குதல்; அது தீவினை மாக்கட்கண் நிகழும். அவரைக் கண்டு அச்சம் எழுந்ததாயின அஃது அச்சத்தினுள் அடங்குமாகுவின் அஃதன்று இஃதென்பது.

எ டு. **வாடை நலிய வடிக்கண்ணுள் தோள்நசை**
**ஓடை மழகளிற்ருன் உள்ளான்கொல்—கோடல்**
**முகையோ டலம்வர முற்றெரிபோல் பொங்கிப்**
**பகையோடு பாசறையுளான்.**

என்ற பாடலில் (புறப்பொருள் வெண்பா-170) இம்மெய்ப்பாடு வருதல் காண்க.

(11) **சூழ்ச்சி** என்பது, சுழற்சி. சூழ் வருவானைச் சுழல் வரும் என்பவாகலின், அது வெளிப்படுவதோர் குறிப்பின் அவன்கண் தோன்றின் அதுவும் மெய்ப்பாடு; அஃதாவது, மனத்தடுமாற்றம். சூழ்ச்சியை 'எண்ணம்' என்பர் இளம்பூரணர்.

எ-டு. **சூழ்வார்கண் ணுக ஒழுகலான் மன்னவன்**
**சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.**

என்ற குறளில் (குறள்-445) வந்துள்ளது ஒரு மனநிகழ்ச்சி.

(12) **வாழ்த்தல்** என்பது, பிறரால் வாழ்த்தப்படுதல்: இது பிறவினையன்ருேவெனின், ஒருவனை 'நீடு வாழ்க' என்று வாழ்த்தல் பிறவினையாயினும் அவற்ருன் வாழ்விக்கப்படுதலின் அவன் அவ்வாறு கூறுதல் அமையும் என்பது. வாழ்த்

தல் என்பதைப் 'பிறனை வாழ்த்தல்' என்பர் இளம்பூரணர்.

எ-டு. 'வாழி யாதன் வாழி' (ஐங்குறு-6)

என்றும்,

'எங்கோ வாழிய குடுமி' (புறம்-9)

என்றும் இவ்வாறு வருவழி, ஆண்டு வரும் மன நிகழ்ச்சி மெய்ப்பாடாம். அஃதேல் வைதலும் மெய்ப்பாடாதல் வேண்டும் எனின், அது வெருளியின் முதிர்வு. இஃது அன்பின் முதிர்வு ஆகாதோ எனின், அன்பின்றியும் அரசன் முதலாயினோரைச் சான்றோர் வாழ்த்துதலின் அடங்காதென்க" என்பர் இளம்பூரணர்.

*(13)* நாணுதல் என்பது, நாணுள்ளம் பிறர்க்கு வெளிப்பட நிகழும் நிகழ்ச்சி. நாணுதல் என்பதை இளம்பூரணர் 'தமக்குப் பழி வருவன செய்யாமை' என்பர்

எ-டு. நாணால் உயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால்
நாண்துறவார் நாண்ஆள் பவர்.

என்ற குறளால் *(குறள்-1017)* இஃது அறியப்படும்.

*(14)* துஞ்சல் என்பது, உறக்கம்; அது நடந்து வருகின்றுன்கண்ணும் விளங்கத் தோன்றுதலின் அதுவும் மெய்ப்பாடெனப்பட்டது.

எ-டு. '......................முனிவின்றி
னைத்தலை யுலகமுந் துஞ்சும்.'

என்ற குறுந்தொகையடியில் (குறுந் - 4) தலைவி தோழியிடம் தான் மட்டிலும் துயிலாதிருந்தமையைக் கூறும் கூற்றில் இதனைக் காண்க.

*(15)* அரற்று என்பது, அழுகையன்றிப் பலவுஞ் சொல்லித் தன் குறை கூறுதல்; அது காடு கெழு செல்விக்குப் பேய் கூறும் அல்லல் போல வழக்கினுள்ளோர் கூறுவன. அரற்று என்பதை 'உறக்கத்தின்கண் வரும் வாய்ச் சோர்வு' என்பர் இளம்பூரணர்.

எ-டு. "பாயல்கொண் டென்தோட் கனவுவார் ஆய்கோல்
தொடிநிரை முன்கையாள்; கையாறு கொள்ளாள்
கடிமனை காத்தோம்ப வல்லுவள் கொல்லோ ?
..............................................................................
.............................என்றுல்ராயிழாய்"

என்ற கலிப்பாட்டடிகளில் (கலி.24) தலைவன் அரற்றினமை காண்க.

(16) கனவு என்பது, வாய் வெருவுதல்; அதனானும் அவனுள்ளத்து நிகழ்கின்றதொன்று உண்டென்று அறியப் படும்.

எ-டு. நுண்பூண் மடந்தையைத் தந்தோய் போல
இன்றுயில் எடுப்புதி கனவே.

என்ற குறுந்தொகை யடிகளில் (குறுங்-147) தலைவன் தலைவியைக் கனவிற் காண்டலும்

நனவினால் நல்காக் கொடியார் கனவினால்
என்எம்மைப் பீழிப் பது.

என்ற குறளில் (குறள்-1217) தலைவி தலைவனைக் கனவில் காண்டலும் அறிக.

(17) முனிதல் என்பது, வெறுத்தல்; அஃது அருளும் சினமும் இன்றி இடை நிகர்த்தாதல்.

எ-டு. காலை யெழுந்து கடுந்தேர் பண்ணி
வாலிழை மகளிர்த் தழீஇயச் சென்ற
மல்லல் ஊரன் எல்லினன் பெரிதென
மறுவருஞ் சிறுவன் தாயே
தெறுக அம்மஇத் திணைப்பிறத் தல்லே.

என்ற குறுந்தொகையில் (குறுங்.45) தோழி, தலைவி கற் பொழுக்கமுடைய குடியில் பிறத்தலை வெறுத்தல் அறிக

(18) நினைத்தல் என்பது, விருப்புற்று நினைத்தல்; 'நின்னை மிகவும் நினைத்தேன்' என்பது வழக்காதலின்; அந்நினை வுள்ளம் பிறர்க்குப் புலனாதலின் மெய்ப்பாடாயிற்று. இதனைக் 'கழிந்ததனை நினைத்தல்' என்றும், 'அது மறந் தாங்கு மறவாது பின்புந் தோற்றுதலின் மெய்ப்பாடாயிற்று' என்றும் கூறுவர் இளம்பூரணர்.

எ-டு. நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்
சினைப்பது போன்று கெடும்.

என்று குறளில் (குறள் 1203) இதனை அறிக.

(19) **வெரூஉதல்** என்பது, விலங்கும் புள்ளும் போல வெருவி நிகழும் உள்ள நிகழ்ச்சி; அஃது அஞ்ச வேண்டாதன கண்டவழியும் கடிதிற் பிறந்து மாறுவதோர் வெறி. இதனை "அச்சம் போல் நீடு நில்லாது கதுமெனத் தோன்றி மாய்வ தோர் குறிப்பு. அதனைத் துணுக்கு என்றான் என்பது" என்பர் இளம்பூரணர்.

எ-டு. 'ஒரூஉநீ எங்கூந்தல் கொள்ல்யா நின்னை
வெரூஉதுங் காணுங் கடை.'

என்ற கலிப்பாட்டடிகளில் (கலி.87) அஞ்சத் தகுவது அஞ்சுத லின்மையும் அஞ்சினர்க்குள்ள வேறுபாடு அதன்பின் நிகழாமையும் காண்க.

(20) **மடிமை** என்பது. சோம்புதல்.

எ-டு. மடிமை குடிமைக்கண் தங்கின் தன்ஒன்னார்க்
கடிமை புகுத்தி விடும்.

என்ற குறளில் (குறள்-608) மடிமை என்பதோர் மெய்ப் பாடுண்மை அறிக.

(21) **கருதல்** என்பது, மறந்ததனை நினைத்தல். கருதலைக் 'குறிப்பு' என்பர் இளம்பூரணர்.

எ-டு. செறாஅச் சிறுசொல்லும் செற்றார்போல் நோக்கும்
உறாஅர்போன் றுற்றார் குறிப்பு.

என்ற குறளில் (குறள்-1097) இம்மெய்ப்பாடு உள்ளமை அறிக.

(22) **ஆராய்ச்சி** என்பது, ஒரு பொருளை நன்று தெரிந்து ஆராய்தல். 'ஒரு பொருளைக் குறித்து அதன் இயல்பு எத்தன்மைத்தென ஆராய்தல்' (இளம்). ஆய்தல் எனினும், தெரிதல் எனினும், தேர்தல் எனினும், நாடல் எனினும் ஒக்கும்.

எ - டு. **தேரான் தெளிவும் தெளிந்தான்பின் ஐயுறவும்**
**தீரா இடும்பை தரும்.**

என்ற குறளில் (குறள்-510) இவ்வாராய்ச்சிக் குறிப்பு தோன்றியவாறு காண்க.

(23) **விரைவு** என்பது, இயற்கை வகையான் அன்றி ஒரு பொருட்கண் விரைவு தொழில்பட உள்ள நிகழும் கருத்து. ஒரு பொருளைச் செய்ய நினைத்தான் அது தாழ்க்கில் அப்பயன் எய்தான் கடிதில் முடித்தல் வேண்டுமெனக் குறித்த மன நிகழ்ச்சி. (இளம்.)

எ-டு. **மாலை வாரா அளவைக் காலியற்**
**கடுமாக் கடவுமதி பாக! நெடுநீர்ப்**
**பொருகயல் முரணிய உண்கண்**
**தெரிதீங் கிளவி தெருமரல் உயவே.**

என்ற குறுந்தொகையில் (குறுந். 250) வினைமுற்றி வரும் தலைவன் காதலின் வேகத்தால் மாலை வருவதற்குள் தலைவி யிருக்குமிடத்திற்குத் தேரை விரைந்து செலுத்துமாறு ஏவுதலை அறிக.

(24) **உயிர்ப்பு** என்பது, வேண்டிய பொருளைப் பெறாத வழிக் கையறவெய்திய கருத்து: அது, நெட்டுயிர்ப்பிற்கு முதலாகலின் அதனையும் உயிர்ப்பென்றான் என்பது. 'முன்பட விடும் அளவின்றிச் சுவாதம் நீள விடுதல்' (இளம்)

எ டு. **'............பானாட்**
**பள்ளி யானையின் உயிர்த்தென்**
**உள்ளம் பின்னுந் தன்னுழை யதுவே'**

என்னும் குறுந்தொகையடிகளில் (குறுந். 142) தலைவன் தலைவியைப் பிரிந்து வந்த பின்னரும் தன்னுள்ளம் அவளிடத்தி லிருப்பதாகக் கூறுவதில் இம்மெய்ப்பாடு காண்க.

(25) **கையாறு** என்பது, அவ்வுயிர்ப்புமின்றி வினை யொழிந்தயர்தல். 'காதலர் பிரிந்தால் வரும் துன்பமும் அந்நிகரனவும் வருவது.' (இளம்.)

எ-டு. **'.........................பிரிந்தோர்**
**கையற வந்த பையுண் மாலை'**

என்ற குறுந்தொகையடிகளில் (குறுந்.391) தலைவரைப் பிரிந்த மகளிர் செயலறும்படி வந்த மாலை என்பதில் இம் மெய்ப்பாடு வந்துள்ளதை அறிக.

(27) **இடுக்கண்** என்பது, மலர்ந்த நோக்கமின்றி மையல் நோக்கமபட வரும் இரக்கம். இடுக்கண் என்பதை 'துன்ப முறுதல்' என்பர் இளம்பூரணர். "மேலதனோடு இதனிடை வேறுபாடு என்னையெனின், கையாறு என்பது இன்பம் பெறாமையான் வருந் துன்பம்; இடுக்கணாவது, துன்பமாயின் வந்துறுதல்" (இளம்.)

**எ-டு. அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற**
**இடுக்கண் இடுக்கட் படும்.**

என்ற குறட்பாவில் (குறள்-625) இடுக்கண் என்பது வருவ தொன்றாகக் கூறியவாறு காண்க.

கையாறு என்பது, மனத்தின்கண் நிகழ்வதோர் மெய்ப் பாடு; இடுக்கண் என்பது, மெய்யானும் தோற்றுவதோர் மெய்ப்பாடு.

(27) **பொச்சாப்பு** என்பது, அற்றப்படுதல்; அஃதாவது, பாதுகாத்துச் செல்கின்ற பொருட்கண் யாதானும் ஓர் இகழ்ச்சியான் இடையறவு படுதல். பொச்சாப்பு - மறத்தல். (இளம்.)

**எ-டு. பொருள்தீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருள்தீர்ந்த**
**மாசறு காட்சி யவர்.**

என்ற குறளில் (குறள் - 199) பொச்சாப்பு மறத்த லாயிற்று.

(28) **பொறாமை** என்பது, பிறருக்கு ஆக்க முதலாயின கண்டவழி யதனைப் பொறாது நடக்கும் மன நிகழ்ச்சி. அதனை அழுக்காறு என்ப.

**எ-டு. அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்**
**தீயுழி உய்த்து விடும்.**

என்ற குறளில் (குறள் - 168) 'அழுக்காறு' என ஒரு மெய்ப் பாடு உளதாகியவாறு கண்டு கொள்க.

*(29)* **வியர்த்தல்** என்பது, பொருமை முதலாயின பற்றி மனம் புழுங்குதல்.

எ - டு. **பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்**
**துள்வேர்ப்பர் ஒள்ளி யவர்.**

என்ற குறளில் *(குறள் - 487)* 'உள் வேர்ப்பர்' என்றதனுன் மனநிகழ்ச்சி ஆகியவாறு காண்க.

*(30)* **ஐயம்** என்பது, ஒரு பொருள்மேல் இருபொருள் தன்மை கருதி வரும் மனத்தடுமாற்றம்.

எ-டு. **அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை**
**மாதர்கொல் மாலும்என் நெஞ்சு**

என்ற குறளில் *(குறள் - 1081)* ஐயம் மனத்தின்கண் நிகழ்ந்து கண்ட பொருளை இதுவெனத் துணியாத நிலைமை காண்க.

*(31)* **மிகை** என்பது, கல்லாமையும் செல்வமும இளமையும் முதலாக வரும் உள்ள மிகுதி 'மிகை-ஒருவனை நன்கு மதியாமை' (இளம்.)

எ - டு. **மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்**
**தகுதியான் வென்று விடல்.**

என்ற குறளில் *(குறள் - 158)* 'மிகுதி' என்பது, நன்கு மதியாமையாகும்.

*(32)* **நடுக்கம்** என்பது, அன்பும் அச்சமும் முதலாயின உடம்பில் புலப்படுமாற்ருன் உள்ளம் நடுங்குதல்; புதல்வர்க்குப் பிணி இல்வழியும் எவனுங்கொல் என்று நடுங்குதல் அன்பால் நடுங்குதலாம். அச்சம் என்னும் சுவை பிறந்ததன் பின்னர் அதன்வழித் தோன்றிய நடுக்கம் அச்சத்தால் தோன்றிய நடுக்கம் என்பது. 'நடுக்கம்—யாதானும் ஒரு பொருளை இழக்கின்ருமென வரும் மனநிகழ்ச்சி'. (இளம்.)

எ - டு. **கொடுங்குழாய் துறக்குநர் அல்லர்**
**நடுங்குதல் காண்மார் நகைகுறித் தனரே.**

என்ற கலியடிகளில் *(கலி. 13)* இம்மெய்ப்பாடு வந்துள்ளமை காண்க.

இம்முப்பத்திரண்டு மெய்ப்பாடுகளும் அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாக நிகழும் என்றே கொள்வர் இளம் பூரணரும் பேராசிரியரும்.

டாக்டர் ச. **சோமசுந்தர பாரதியார்** இவை முப்பத் திரண்டும் எவ்வெட்டாய் முறையே இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கொடு தழாஅல், தோழியிற்புணர்வு என்ற நான்கு பகுதிகட்கும் தொகுக்கப்பட்டுள்ளன என்றும் இவை அகத்துறைக்கே சிறப்பாக வரும் என்றும் ஏதுக்காட்டி நிறுவுவதுடன் பழைய உரையாசிரியர் இருவர் கொள்கையை யும் மறுத்திடுவர். இவற்றை அவர் உரைநோக்கி உணர்க.[13]

இனி, அகத்துறைக்கே உரியனவாகவுள்ள மெய்ப்பாடு களை அடுத்துக் காண்போம்.

13. சோமசுந்தர பாரதியார். ச. டாக்டர். மெய்ப்பாட்டியல் உரை. நூற்பா 12இன் உரை.

## 23. அகத்திணைக்குரிய மெய்ப்பாடுகள் - (களவு)

ஆசிரியர் தொல்காப்பியனார் அகனைந்திணைக்கே பெரும்பான்மையாக உள்ள மெய்ப்பாடுகளில் களவிற்கும் கற்பிற்கும் உரியனவற்றைத் தனித்தனியே பிரித்தோதுகின்றார். இங்ஙனம் ஓதும் முறையிலே முதலில் களவென்னும் ஒழுகலாற்றிற்குச் சிறந்து வரும் மெய்ப்பாடுகளை ஆறு கூறுபடுத்தி உரைக்கின்றார். நல்லூழின் ஆணையால் ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்ட வழி, அவ்வெதிர்ப்பாடாகிய காட்சி தொடங்கிப் புணர்ச்சியளவும் நிகழும் மெய்ப்பாடுகளை மூன்று கூறுகளாகவும், அவ்விருவரும் மெய்யுற்றுக் கூடிய புணர்ச்சிக்குப் பின் மறைவில் நிகழும் ஒழுகலாறாகிய அக்களவு வெளிப்படும் அளவும் நிகழும் மெய்ப்பாடுகளை மூன்று கூறுகளாகவும் விரிந்து நடப்பதாக விதந்தோதுகின்றார். மேலும், அவர் இந்த ஆறு பகுதிகளும் ஒவ்வொன்றும் நந்நான்கு பகுதியுடையனவாகி ஒன்றன்பின் ஒன்றாய் முறையே நடைபெறும் என்றும் விரித்துரைக்கின்றார். இந்த ஆறு கூறுகட்குரிய மெய்ப்பாடுகள் நிகழாத பொழுது வேறு சில மெய்ப்பாடுகளும் நடைபெறும் என்று இருபது மெய்ப்பாடுகளைத் தனியாக ஒரு நூற்பாவில் எடுத்துரைக்கின்றார். இவற்றை நாம் சற்று விரிவாகக் காண்போம்.

இவற்றுள் எதிர்ப்படுதலாகிய காட்சி முதல் புணர்ச்சி வரையிலுமுள்ள மூன்று பகுதிகட்குரிய மெய்ப்பாடுகளை முதலில் நோக்குவோம்.

**முதல் மெய்ப்பாடு:** ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்ட வழி தலைவியின் உளத்தெழுங் காதல் முதற்குறிகளை உணர்த்துவது இது. இது,

புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல்
நகுநய மறைத்தல் சிதைவுபிறர்க் கின்மையொடு
தகுமுறை நான்கே ஒன்றென மொழிப.[1]

என்ற நூற்பாவால் அறியப்படும்.

(1) **புகுமுகம் புரிதல்** என்பது, தலைவனும் தலைவியும் எதிர்ப்பட்டவிடத்துத் தன்னை அவன் நோக்குதலைத் தலைவி விரும்புதல். புகுதல் என்பது, தலைமகன் நோக்கிய நோக்கெதிர் தான் சென்று புகுதல்; முகமென்பது, அங்ஙனம் தான் புகுதற்கிடமாகிய நோக்கு; நோக்கெதிர் நோக்குதலை முகநோக்குதல் என்பவாகலின் இந்நோக்கு முகம் எனப்பட்டது; புரிதல் என்பது, மேவுதல்; அ∴தாவது விரும்புதல்.

**எ - டு. யானோக்குங் காலை நிலனோக்கும்; நோக்காக்கால்
தானோக்கி மெல்ல நகும்.**

என்ற குறளில் (குறள் - 1094) தலைவன் கூற்றாக வந்துள்ளமை காண்க.

(2) **பொறிநுதல் வியர்த்தல்** என்பது, தலைவன் தன்னை நோக்கிய நிலையில அச்சமும் நாணும் ஒருங்கு வந்தடைதலால் வியர்வை அரும்பிய நெற்றியினளாதல்.

**எ - டு. யாழ்ப்போரில் சீவகனை முதலில் எதிர்த்த வாசவதத்தைக்குக் காதற்பெருக்கால் "காமர் நுதல் வியர்ப்ப" எனத் திருத்தக்க தேவர் கூறும் குறிப்பு இதுவேயாகும்.**

(3) **நகுநய மறைத்தல்** என்பது, அதன் பின்னர்த் தலைமகனிடம் தோன்றிய குறிப்புக்களால் அவனுடன் அளவளாவி மகிழ வேண்டுமென்ற விருப்பம் தன்னுள்ளத்தே தோன்றிய நிலையிலும் அவ்விருப்பம் புறத்தே வெளிப்படாதபடி மறைத்தல்.

**எ - டு. முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ளதொன் றுண்டு.**

என்ற குறளில் (குறள் - 1274) இக்குறிப்பு வந்துள்ளமை காண்க.

---

1. மெய்ப். — நூற் .13 (இளம்.)

*(4)* **சிதைவு பிறர்க்கின்மை** என்பது, இங்ஙனம் தலைமகள் தனது விருப்பத்தினை மறைத்தனளாயினும் உள்ளஞ் சிதைந்து நிறை பழியுமாதலால் தன் சிதைவு புறத்தார்க்குப் புலனாகாதவாறு நெஞ்சினை நிறுத்தல்.

**எ - டு மறைப்பேன்மன் காமத்தை யானோ ; குறிப்பின்றித்**
**தும்மல்போல் தோன்றி விடும்.**

என்று பெண்ணியல்பு கூறும் குறளில் *(குறள் - 1253)* இக் குறிப்புப் புலனாதல் அறியப்படும்.

இந்த நான்கு குறிப்புக்களும் ஒன்றன் பின் ஒன்றாக முறைப்படி நிகழும்.

**எ - டு. யான்றற் காண்டொறும் தான்பெரிது மகிழாள்**
**வாணுதல் வியர்ப்ப நாணினள் இறைஞ்சி**
**மிகைவெளிப் படாது நகைமுகங் கரந்த**
**நன்னுதல் அரிவை தன்மனஞ் சிதைந்ததை**
**நீயறிந் திலையால் நெஞ்சே**
**யானறிந் தேன் அது வாயா குதலே.**

என்ற இயற்கைப்புணர்ச்சி பெற்று நீங்கிய தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுவதாக வந்துள்ள இலக்கண விளக்க மேற்கோள் செய்யுளில் இவை நான்கும் முறையே ஒருங்கு வந்தமை காண்க.

**இரண்டாம் மெய்ப்பாடு :** இது முதலிற் கண்டாங்கே கொண்ட காதல் வளர விளையும் விருப்பக் குறிகளை உணர்த்துகின்றது. இதனை,

> கூழை விரித்தல் காதொன்று களைதல்
> ஊழணி தைவரல் உடைபெயர்த் துடுத்தலொடு
> கெழீஇய நான்கே இரண்டென மொழிப.[2]

என்ற நூற்பாவால் அறியலாகும்.

*(1)* **கூழை விரித்தல்** என்பது, மேற்குறித்த வண்ணம் தலைமகள் தனது மனச்சிதைவினைப் புறத்தார்க்குப் புலப் படாமல் மறைத்த வழியும், உள்ள நெகிழ்ச்சியினால் உடம் பொடு தொடர்புடையதாகி வேறுபட்ட அவளது கூந்தலாகிய

---

2. மெய்ப். — நூற். 14 (இளம்.)

முடி தன் வயத்ததன்றி நெகிழ்ந்து தாழ்தல். புணர்ச்சிக் காலத்து மகளிர்க்கு இஃது இயல்பு. கூழை - மயிர்.

*(2)* **காதொன்று களைதல்** என்பது, கூந்தலைப் போலன்றிக் காதிடைப்பெய்து அணியப்பெற்ற தோடு முதலிய அணிகளுள் ஒன்று நிற்ப மற்றொன்று நெகிழ்ந்து வீழ்தல். இதனைச் "செவியில் பூட்டாது நெருகிய தோடு ஒன்றைத் திருத்துவாள் போலக் கழற்றுதல்" என்பர் டாக்டர் சோமசுந்தர பாரதியார்.[3]

*(3)* **ஊழணி தைவரல்** என்பது, தனது உடம்பின் வேறு பாடுணர்ந்த தலைமகள் தோடு போல நெகிழப் பெய்யப்படு முறையினவன்றிச் சிறிது இறுகச் செறித்தணியும் முறைமை யினவாகிய கைவளை, மோதிரம் முதலிய அணிகலன்களைக் கழன்று விழாதபடி இறுகச் செறிப்பது போலத் தடவுதல். ஊழ் - முறை: இயல்பு.

*(4)* **உடை பெயர்த்துடுத்தல்** என்பது, தனது உடம்பின் நெகிழ்ச்சியை உணர்ந்த தலைமகள் தான் உடுத்த உடையினைக் குலைத்துக் குலைத்துப் பல முறையும் இறுக உடுத்துக் கொள்ளுதல். "பெயர்த்து என்பது மீட்டும் என்னும் பொருளைக் குறிக்கும்: அழித்து எனக் கொள்ளுதல் அமைவுடைய தன்று. முன் கட்டியுள்ள ஆடை நெகிழ்வதை மீட்டும் இறுக்குதல் என்பதே பொருநதிய பொருளாகும்; அவ்வாறன்றி, ஆடையைத் தலைவன் எதிர்ல் தலைவி தானே அழித்துடுத்தல் பெண்ணீர்மையன்றாதலின் இது பொருளன்மை தேற்றம்" என்பது டாக்டர் பாரதியார் அவர்களின் குறிப்பு.

இவை நான்கும் முறையே நிகழும். தலைவியின் உள்ளச் சிதைவறிந்து தலைவன் அவளை மெய்யுற அணுகிய நிலையில் நிகழ்வன இவையாதலின், இவை களவின் இரண்டாம் கூறு என முறைப்படுத்தப்பெற்றன.

எ - டு. **விண்ணுயர் விறல்வரைக் கவாஅன் ஒருவன்**
**கண்ணின் நோக்கிய தல்லது தண்ணென**
**உரைத்தலு மில்லை மாதோ, அவனே**
**வரைப்பாற் கடவுளு மல்லன், அதற்கே**

3. சோமசுந்தர பாரதியார், ச. டாக்டர் : மெய்ப்பாட்டியல் உரை.

**ஓதி முந்துறக் காதொன்று ஞெகிழ**
**நிழலவிர் மணிப்பூண் நெஞ்சொடு கழலத்**
**துகிலும் பன்முறை நெகிழ்து நிமிர்ந்தனவே,**
**நீயறி குவையதன் முதலே,**
**யாதோ தோழிஅது கூறுமா றெமக்கே.**

என்ற இலக்கண விளக்க மேற்கோள் பழம்பாட்டில் இந் நூற்பா சுட்டும் மெய்ப்பாடு நான்கும் ஒருங்கே நிகழ்ந்தமை தலைவியே கூறுதல் காண்க. இப்பாடல் தோழிக்குத் தலைவி அறத்தொடு நின்றது.

**மூன்றும் மெய்ப்பாடு :** இஃது ஊன்றிவளர் காதலின் மூன்றுங் கூறுபாடு உணர்த்துகின்றது. இதனை ஆசிரியர்,

அல்குல் தைவரல் அணிந்தவை திருத்தல்
இல்வலி யுறுத்தல் இருகையும் எடுத்தலொடு
சொல்லிய நான்கே மூன்றென மொழிப [4]

என்ற நூற்பாவால் குறிப்பிடுவர்.

(1) **அல்குல் தைவரல்** என்பது, முற்கூறியவாறு உடைப் பெயர்த்துடுத்த தலைமகள் உடை பெரிதும் நெகிழ்ந்த நிலையில் அவ்வற்றம் மறைத்தற்குத் தன் மறைந்த தானத்தைக் கையால் பொத்துதல். 'அல் குல்' என்பதற்கு இடக்கர்ப் பொருள் கூறுதல் பொருந்தாது என்று மறுப்பர் டாக்டர் பாரதியார். அல் குல் என்பது இருப்புறுப்பு (ஆசனம்). தைவரல், தடவுதலாம். 'உடை பெயர்த்துடுத்திய' பின் குலையாது திருத்திய கலை முன்நிலை படிய இடைக்கீழ் அவ் வுடை தொடும் தடம் விரி இருப்புறுப்பைத் தடவுதல் இயல்பு. அவ்வியல்பு இங்கு 'அல் குல் தைவரல்' எனக் குறிக்கப் பட்டது'' என்பது டாக்டர் பாரதியாரின் உரை.

அல்குல் என்பது, தொடைக்கு மேலும் இடைக்குக் கீழும் உள்ள பகுதி (buttocks).[5] அதன் மேற்பகுதி சுருங்குதலின்—சிறுத்தலின்—'அல்குல்' எனப்பட்டது. அல்குதல்—சுருங்குதல். தொடைக்கும் இடைக்கும் நடுவிலுள்ள பகுதியின் பின் பக்கமே—முதுகிற்குக் கீழ் உள்ள பகுதி—அல்குல் எனப்

4. மெய்ப். நூற். 15 (இளம்.)
5. கலி. 85 இன் உரை (நச்.)

படும். பெண்டிரின் அப்பின்பக்கமே ஆடவரின் கண்ணையும் கருத்தையும் கவர்வதாகும். அல்குலுக்குத் தேர்த்தட்டையும் பாம்பின் படத்தையும் உவமை கூறுவர் புலவர் பெருமக்கள். அவ்விரண்டும் ஒப்புமையாதலை ஒப்பிட்டு அறிக.

**(2) அணிந்தவை திருத்தல்** என்பது, உடையினைச் சார இடையிலணிந்த கடிசூத்திரம்[6] முதலியவற்றை நெகிழாது திருத்திப் போற்றிக்கொள்ளுதல். ஊழணி திருத்தியும் உடை திருத்தியும் கொண்டபின், விரும்பப் புனைந்த வேறு கலன் திருத்தலும் காதற்காட்சியில் புகுமுகம் புரியும் பெண்டிர்க்கு இயல்பு. அணிந்தவை — ஊழணியல்லாப் பிற கலன்கள்.

**(3) இல்வலி யுறுத்தல்** என்பது, இல்லாத வன்மையை மிகுத்தல். அஃதாவது, தலைமகள் தன் வலியற்ற நிலையிலும் தான் புணர்ச்சியை வேண்டாதாள் போல்வதொரு வன்செய்கையைப் படைத்துக்கொண்டு நிற்றல். பெருகுங் காதலால் தூண்டப்பெறும் தலைவி "செற்றார் போல் நோக்கு" வதும், "நிறையழியுந் தலைவி தனக்கில் வலியுறுத்தும்" நிற்பதும் பெண்ணியல்பாகும்.

**(4) இருகையும் எடுத்தல்** என்பது, இங்ஙனம் தலைமகள் தன்கண் உளதாகப் படைத்துக்கொண்ட வன்மையினாலும் தடுக்கப்படாது நெஞ்சத்தின் நிறையழிதலால் தன் இருகைகளும் தலைவனை முயங்கும் விருப்பத்தால் தாமே எழுவன போல்வதோர் குறிப்புடையளாதல்.

எ - டு. **ஓதியும் நுதலும் நீவி யான்றன்**
**மாதர் மென்முலை வருடலிற் கலங்கி**
**உள்ளத் துகுநள் போல அல்குலின்**
**ஞெகிழ்நூற் கலிங்கமொடு புகுமிடன் அறியாது**
**மெலிந்திலள் ஆகி வலிந்துபொய்த் தொடுங்கவும்**
**யாமெடுத் தணைத்தொறுந் தாமியைந் தெழுதலின்**
**இம்மை யுலகத் தன்றியும் நம்மை**
**நீளறி நெடுங்கண் பேதையொடு**
**கேளிரிந் தனகொல்இவள் வேய்மென் றோளே.**

6. கடி — காப்பு, காவல்; அஃதாவது, உடைக்குக் காப்பு. கடிசூத்திரம் - அரை ஞாண்.

என்று இயற்கைப்புணர்ச்சிக்கண் தலைவன் தன்னிலையுரைத்த தாக வந்துள்ள இலக்கண விளக்க மேற்கோள் பழம்பாட்டில் இந்த நான்கு மெய்ப்பாடுகளும் வந்துள்ளமை அறிக.

இங்ஙனம் மூன்று கூறுகளாகப் பகுத்துரைத்த இப் பன்னிரண்டு மெய்ப்பாடுகளும் இயற்கைப்புணர்ச்சியாகிய முதற்கூட்டத்திற்கு முன்னே நிகழ்வனவாகும். ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்படுங்கால் தனது மனக்கருத்தினை நாணும் நிறையுமாகிய குணங்களால் புறத்தார்க்குப் புலனாகாது மறைக்கும் நிகழ்ச்சி பெண்மையின் இயல்பாதலால் இவண் கூறப்பட்ட மெய்ப்பாடுகள் பெரும்பான்மையும் தலைமகள்கண்ணே சிறந்து நிகழும் என்பர் பேராசிரியர்.[7] இனி வருவன புணர்ச்சிக்குப் பின்னும் களவு வெளிப்படுந் துணையுமுள்ள பின் மூன்று கூறுகளாகும்.

**நான்காம் மெய்ப்பாடு :** இது தோலாக் காதலின் நான்காம் கூறுபாடு உணர்த்துகின்றது. இதனை,

பாராட் டெடுத்தல் மடந்தப வுரைத்தல்
ஈரமில் கூற்றம் ஏற்றலர் நாணல்
கொடுப்பவை கோடல் உளப்படத் தொகைஇ
எடுத்த நான்கே நான்கென மொழிப.[8]

என்ற தொல்காப்பிய நூற்பாவால் அறியலாம்,

**(1) பாராட்டெடுத்தல்** என்பது, புணர்ச்சி நிகழ்ந்த பின்னர்த் தலைமகனது பெருமையைத் தலைவி நினைந்து பாராட்டும் உள்ளக் குறிப்பினளாதல். இது தலைமகனுக்கும் ஒக்கும்.

**எ - டு. கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்**
**ஒண்டொடி கண்ணே யுள.**

என்ற குறளில் (குறள்—1101) தலைவன் தலைவியின் நலத்தைப் பாராட்டுகின்றான்.

**எ - டு. நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் ஆரள வின்றே சாரல்**
**கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே.**

7. மெய்ப். நூற். 17 (பேரா.)
8. மெய்ப், நூற், 16 (இளம்.)

என்ற குறுந்தொகையில் (குறுந். 3) புணர்ந்த தலைவன் நலம் தலைவி பாராட்டுதல் காண்க.

**(2) மடந்தப உரைத்தல்** என்பது, விளையாடும் பருவத்து இயல்பாகிய மடமை நீங்கக் காமப்பொருட்கண்ணே சிறிது அறிவு தோன்ற உரையாடும் குறிப்பினளாதல். மடம் - கள்ள மற்ற பிள்ளைத்தன்மை ; தபுதல்-கெடுதல், நீங்குதல். முன் காமம் சாலாக் காலமெல்லாம் கரவறியாத் தலைவி களவில் தலைவனை மணந்தபின் முன்னைய குழவி நீர்மை கழியத் தேர்ந்துரையாடத் தேறுதல் இயல்பு. அந்நிலைதான் மடந் தபுதல். அவ்வறிமடநிலையில் தேர்ந்துரையாடலே மடந்தப உரைத்தல் என்பது அறியப்படும்.

**(3) ஈரமில் கூற்றம் ஏற்றலர் நாணல்** என்பது, களவொழுக் கம் சிறிது வெளிப்படும் நிலையில் சுற்றத்தார் கூறும் கடுஞ் சொற்களை முனியாது ஏற்றுக்கொண்டு, 'புறத்தார்க்கு இது புலனாகுங்கொல்?' என நாணும் உள்ளக் குறிப்பினளாதல்.

எ - டு. **யானே யீண்டை யேனே ; என்னலனே**
**ஆனா நோயொடு கான லஃதே ;**
**துறைவன் தம்மூ ரானே ;**
**மறைஅல ராகி மன்றத் தஃதே.**

என்ற குறுந்தொகையில் (குறுந். 97) தலைவி அலர் நாணுதல் கூறப்படுதல் அறிக.

**(4) கொடுப்பவை கோடல்** என்பது, தலைமகன் அன்பினால் கொடுத்த தழை, கோதை, தார், கண்ணி, தோள்மாலை முதலியவற்றை மறுக்காது ஏற்றுக்கொண்டு அவற்றைப் பாராட்டும் உள்ளமுடையளாதல்.

இவை நான்கும் முறையே ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றுதற்குரியவை.

எ - டு. **ஒருநாள் வந்து பலநாள் வருத்து**
**நின்னே போலுநின் தழையே என்வயின்**
**நிற்பா ராட்டியும் சொற்கொளல் இன்றியும்**
**யாய்எதிர் கழறலில் பேரலர் நாணியும்**
**மயல்கூர் மாதர்க்குத் துயர்மருந் தாயினும்**
**நோய்செய் தன்றால் தானே**
**நீதொடக் கரிதலின் ஓரிடத் தானே.**

என்று கையுறை மறுத்ததாக வந்துள்ள இலக்கண விளக்க மேற்கோள் பழம்பாட்டில் மேற்கூறிய நான்கு மெய்ப்பாடு களும் முறையே வந்துள்ளமை காண்க.

**ஐந்தாம் மெய்ப்பாடு:** இது காதலின் ஐந்தாங்கூறுன வற்றை உணர்த்துகின்றது.

தெரிந்துடம் படுதல் திளைப்பு வினை மறுத்தல்
கரந்திடந் தொழிதல் கண்டவழி உவத்தலொடு
பொருந்திய நான்கே ஐந்தென மொழிப.[9]

என்ற நூற்பாவில் இக்கூறில் உள்ளவற்றை அறியலாம்.

*(1)* **தெரிந்துடம்படுதல்** என்பது, தலைவன்-தலைவி இருவர்க்கும் கூட்டமுண்மை சிலர் பலர்க்குப் புலனாக, அதனால் எழுகின்ற அலருக்குத் தலைவி நாணமுற்று, இவ்வொழுக லாற்றினைத் தன் பெற்றோர்க்குத் தெரிவிப்பதா, அன்றி தெரிவியாதிருப்பதா எனத் தடுமாறிப் பின் ஒருவகையால் ஆராய்ந்து, தன் குலத்திற்கும் ஒழுக்கத்திற்கும் பெண் தன்மைக்கும் ஏற்ற வகையால் சொல்ல வேண்டுவனவற்றைத் தெரிந்துகொண்டு, இன்னவாறு நிகழ்ந்ததென்று தோழிக்கு உடம்படுதலும் அவள் வழியாகச் செவிலிக்கு உடம்படுதலும் என இன்னோரன்ன குறிப்பினளாதல்.[10]

*(2)* **திளைப்புவினை மறுத்தல்** என்பது, தலைவி தலைவனுடன் முன்னர்ப் பல நாள் பகற்குறியினும் இரவுக்குறியினும் அளவளாவி மகிழ்ந்தவாறு போன்று கூடி மகிழ்தலைத் தனக்கு இயல்பாகிய அச்சமும் நாணமும் மடனும் காரணமாக மறுக்கும் குறிப்பினளாதல்.

*(3)* **கரந்திடத்தொழிதல்** என்பது, தலைமகள் பெற்றோரால் இற்செறிக்கப்படுதல் காரணமாகத் தலைவனது கூட்டத்தை மறுத்த ஏதத்திற்கு நாணியும் அஞ்சியும் அவன் முன்னர் வெளிப்படாது மனையகத்தே மறைந்தொழுகுங் கருத்துடைய ளாதல்.

*(4)* **கண்டவழி உவத்தல்** என்பது, தலைவன் முன்னர்த் தோன்றாது மறைந்தொழுகுவாள் ஒரு நாள் எதிர்பாராத

9. மெய்ப். நூற். 17 (இளம்.)
10. இஃது 'அறத்தொடு நிற்றல்' எனப்படும்.

நிலையில் அவனைக் காணலுற்ற பொழுது எல்லையற்ற பெரு மகிழ்ச்சியுடையளாதல். இது தலைமகற்கும் உரித்து.

இவை நான்கும் இடையறவின்றி ஒருங்கு தொடர்த லுடையவை.

**எ - டு.** **அறியாய் கொல்லோ நீயே தெருவர**
**நோக்குதொறும் பனிக்கு நெஞ்சமொ டிவளே**
**யாய்க்கறி வுருலின் நின்னெதிர் நாணி**
**மனைவயிற் பிரியலண் மன்னே யதற்கே**
**நினைவிலள் இவளென வுரைத்தி**
**புனைதார் மார்ப காண்டியோ அதுவே.**

என்ற இலக்கணவிளக்க மேற்கோள் பழம்பாட்டில் இந்த நான்கு மெய்ப்பாடுகளும் தோன்றுதல் காண்க. இது பகற் குறிக்கண் தலைமகளை இடத்துய்த்து வந்து தலைமகனை எதிர்ப் பட்டு நின்று தோழி வரைவுகடாவுவதாக வந்த பாட்டு.

**ஆறும் மெய்ப்பாடு :** இது மாருக் காதலின் ஆறுங்கூறு உணர்த்துகின்றது. இதனை,

புறஞ்செயச் சிதைதல் புலம்பித் தோன்றல்
கலங்கி மொழிதல் கையற வுரைத்தல்
விளம்பிய நான்கே ஆறென மொழிப.[11]

என்ற நூற்பாவால் அறியலாம்.

(1) **புறஞ்செயச் சிதைதல்** என்பது, வளர்ந்தெழு காதலால் தளர்ந்தழி நெஞ்சொடு தனிமை தாங்காத் துனியால் வருந்தும் தலைமகள் பூவும் சாந்தும் பூணும் துகிலும் முதலாயின கொண்டு தன்னைப் புறத்தே கோலஞ்செய்த நிலையிலும் அவள் தன் அன்பிற்கினிய தலைவனைக் கூடப்பெருமையால் தன் அகத்தே மகிழ்ச்சியின்றி நெஞ்சழிந்து சோர்தல்.

(2) **புலம்பித் தோன்றல்** என்பது, சுற்றத்தார் பலரும் சூழ அவர்கள் நடுவே தான் வாழும் நிலையிலும் தலைவனது துணை யின்றி வருந்துதலால் தான் தனியள் என்று அறிவிக்கும் கருத்தினளாதல்.

(3) **கலங்கி மொழிதல்** என்பது, தனிமையால் வருந்தும் தலைவியைப் பரிந்து சுற்றம் துனிமுதல் வினவ, அவள் கையும்

11. மெய்ப். - நூற். 18 (இளம்.)

களவுமாகப் பிடிபட்ட கள்வரைப் போன்று தான் சொல்லு வனவற்றை மனத்தடுமாற்றம் தோன்றக் குழறி மொழிதல்.

(4) **கையறவுரைத்தல்** என்பது, தனிமை தாங்காத் தலைவி தனது மனக்கலக்கத்தை அடக்கிக்கொண்டு பேசும் நிலையிலும் தனது செயலற்ற தன்மை தோன்றக் கூறுதல்.

**எ - டு. இவளே,**
**அணியினும் பூசினும் பிணியுழந் தசைஇப்**
**பல்கிளை நாப்பண் இல்கிளை போல**
**மொழிவகை யறியாள் பொழிகண் ணீர்துடைத்**
**தியானே கையற வலம்வரும்**
**கூருய் பெரும!நிற் றேறு மாறே.**

என்று வரைவுகடாவுவதாக வந்துள்ள இலக்கணவிளக்க மேற்கோள் பழம்பாட்டில் இங்குக் கூறிய மெய்ப்பாட்டுணர்வுகள் நான்கும் ஒருங்கமையத் தோழி கூறினமை காண்க.

'கையறவுரைத்தல்' தோன்றியதன் பின்னர் நிகழ்வன ஒருதலைக் காமமாகிய கைக்கிளைக்கும் ஒவ்வாக் காமமாகிய பெருந்திணைக்கும் மெய்ப்பாடாவனவன்றி நடுவணைந்திணை எனப்பட்ட நற்காமத்திற்கு ஏற்புடையன அல்ல என்பர். இந்த எல்லை மீறிய மெய்ப்பாடுகள் களவொழுக்கத்தினுள் வாரா என்று அறிவித்தற்கென்றே 'கையறவுரைத்தல்' என்ற மெய்ப்பாடு ஈற்றில் வைக்கப்பெற்றது. மேலும், தலைமகன் பால் தோன்றும் குறிப்புச் சிலபற்றித் தலைமகள்பால் பல குறிப்புப் பிறக்குமாகலின் தலைமகளிடத்துத் தோன்றும் மெய்ப்பாடுகளே சிறந்தவை என்று ஈண்டு வரையறுத்துரைக்கப்பெற்றன.

மேற்குறிப்பிடப்பெற்ற அறுவகையாக நடக்கும் இருபத்து நான்கு மெய்ப்பாடு போல்வன பிறவும், அவை தமது உட்பகுதியாகி வருவன பிறவும் ஐந்திணையொழுக்கத்திற்கே உரியனவாகும். கழிபெருங்காதலால் தலைமகளுக்கு ஆற்ருமை நேர்ந்தவிடத்து 'மன்னியவினை' எனப்பட்ட புணர்ச்சி, மேற்கூறியவாறு ஆறு வகைப்பட்ட மெய்ப்பாடுகளை

முறையே நிமித்தமாகக் கொண்டு வாராமையும் உரித்து என்பர் ஆசிரியர்.[12]

களவிற்குரியனவாக மேற்கூறப்பெற்ற ஆறு வகை மெய்ப்பாடுகளையும் ஒன்று முதல் ஆறு அவத்தைகள் எனவும், அவற்றின் பின்னர் உளவாம் நாண் நீங்கிய காதலில் தேறுதல், உன்மத்தம், மயக்கம், சாக்காடு என்பன முறையே ஏழு, எட்டு, ஒன்பது, பத்தாம் அவத்தைகள் எனவும் கூறுவர் இளம்பூரணர்.[13] பிற்கூறிய நான்கும் அகனைந்திணையின்பத்திற்கு உரியனவன்மையின் இவற்றையும் சேர்த்துப் பத்து அவத்தைகள் என்று தொல்காப்பியர் வரையறை செய்ய வில்லை என்பது பேராசிரியரின் கருத்து.[14]

இக்கூறிய இருபத்துநான்கு மெய்ப்பாடுகளும் கற்பினுள் இம்முறையானே வரல் வேண்டும் என்ற நியதி இல்லை. இதன் காரணமாகவே இவை களவிற்கே விதந்து கூறப் பெற்றன என்பதை அறிக.

### வேறு சில மெய்ப்பாடுகள்

மேற்கூறிய மெய்ப்பாடுகள் நிகழாதவிடத்து அடியிற் கூறப்பெறும் மெய்ப்பாடுகள் உளவாகும். இவையும் அன்பின் ஐந்திணைக்கே உரியவையாம். இம்மெய்ப்பாடுகளை,

> இன்பத்தை வெறுத்தல் துன்பத்துப் புலம்பல்
> எதிர்பெய்து பரிதல் ஏதம் ஆய்தல்
> பசியட நிற்றல் பசலை பாய்தல்
> உண்டியிற் குறைதல் உடம்புநனி சுருங்கல்
> கண்துயில் மறுத்தல் கனவொடு மயங்கல்
> பொய்யாக் கோடல் மெய்யே என்றல்
> ஐயஞ் செய்தல் அவன்தம ருவத்தல்
> அறனழிந் துரைத்தல் ஆங்குநெஞ் சழிதல்
> எம்மெய் யாயினும் ஒப்புமை கோடல்
> ஒப்புவழி யுறுத்தல் உறுபெயர் கேட்டல்
> நலத்தக நாடிற் கலக்கமும் அதுவே.[15]

---

12. மெய்ப் - நூற். 20 (இளம்.)
13. மெய்ப் - நூற். 19 (இளம்.) உரை.
14. மெய்ப் - நூற். 20 (பேரா.) உரை.
15. மெய்ப் - நூற். 22 (இளம்.)

என்ற நூற்பாவால் அறியலாம். இவை யாவும் தனிப் படர் மெலிவின் துனி நனிவிளக்கும் மெய்ப்பாடுகளாகும். இவற்றுள்,

**(1)** **இன்பத்தை வெறுத்தல்** என்பது, கோலஞ்செய்தலை வெறுத்தலும் யாழும் குழலும் பூவும் சாந்தும் முதலாக இன்பத்திற்கேதுவாகிய பொருள்களைக் கண்ட நிலையில் அவற்றின்மேல் வெறுப்புத் தோன்றுதலும்.

**எ - டு.** **'பாலும் உண்ணாள் பந்துடன் மேவாள்**
**விளையா டாயமொ டயர்வோள்'**

என்ற குறுந்தொகையடிகளில் (குறுந். 396) முன் தலைவி விரும்பிய பால், பந்து, ஆயம் எல்லாம் கூடப்பெறாத தலைவிக்கு வெறுப்பாயினமை விளக்கப்பெறுதல் காண்க.

**(2)** **துன்பத்துப் புலம்பல்** என்பது, தனிமை தாங்காக் காதலர் படர்மெலிந்திரங்கலாகும்.

**எ - டு.** **கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்**
**குரைத்தலும் நாணுத் தரும்.**

என்ற குறளில் (குறள் - 1162) இத்துன்ப மெய்ப்பாடு தோன்றுதல் காண்க.

**(3)** **எதிர் பெய்து பரிதல்** என்பது, உருவு வெளிப்பாடு; அது தலைமகனையும் அவன் தேர் முதலாயினவற்றையும் தன்னெதிர் பெய்துகொண்டு பரிந்து கையறுதல்.

**எ - டு.** **வாரா தாயினும் வருவது போலச்**
**செவிமுத லிசைக்கும் அரவமொடு**
**துயில்மறந் தனவால் தோழியென் கண்ணே.**

என்ற குறுந்தொகையடிகளில் (குறுந். 301) இம்மெய்ப்பாடு வந்தமை காண்க.

**(4)** **ஏதம் ஆய்தல்** என்பது, கூட்டத்திற்கு வரும் இடையூறு உண்டென்று பலவும் ஆராய்தல்; அது நொதுமலர் வரையக் கருதுவர் கொல் எனவும், பிரிந்தோர் மறந்து இனி வாரார் கொல் எனவும் தோன்றும் உள்ள நிகழ்ச்சி.

**எ - டு. பிரிவெண்ணிப் பொருள்வயிற்**
**சென்றநங் காதலர்**
**வருவர்கொல் ? வயங்கிழாஅய் !**
**வலியப்பல்யான் கேளினி''**

எனக் கலியடிகளில் (கலி. 11) இக்குறிப்பு வருதலை உணர்க.

**(5) பசியட நிற்றல்** என்பது, பசி வருத்தவும் அதற்குத் தளராது ஊண் உண்ணுமை.

**எ - டு. 'அன்னுய் வாழிவேண் டன்னை நின்மகள்**
**பாலும் உண்ணுள் பழங்கண் கொண்டு**
**நனிபசந் தனள்என வினவுதி;'**

[பழங்கண்-துன்பம்]

என்ற அகப்பாட்டடிகளில் (அகம் – 48) இம்மெய்ப்பாடு தோன்றுதல் அறிக.

**(6) பசலை பாய்தல்** என்பது, கூட்டம் பெருது ஆற்ருத் தலைமகள் காதல் நோயால் தன் மாமைக்கவின் இழந்தெய்தும் நிற வேறுபாடு.

**எ - டு பசந்தாள் இவளென்ப தல்லால் இவளைத்**
**துறந்தார் அவரென்பார் இல்.**

என்ற குறளில் (குறள் - 1188) பசலை பாய்ந்த குறிப்பு வந்தமை காண்க.

**(7) உண்டியிற்குறைதல்** என்பது, பசியட நிற்றலை யன்றிச் சிறிது உண்டியூட்டியவழிப் பண்டு போலாது கழியவும் சிறிதுண்டல்.

**எ - டு. தீம்பால் ஊட்டினும் வேம்பினும் கைக்கும்**
**வாரா யெனினும் ஆர்வமொடு நோக்கும்**
**நின்னிற் சிறந்ததொன் றிலளே**
**யென்னினும் படாஅள் என்னிதற் படலே.**

என்ற இலக்கணவிளக்க மேற்கோள் பழம்பாடலில் இவ்வியல்பு விளக்கப்பெறுதல் அறிக.

(8) **உடம்பு நனி சுருங்கல்** என்பது, உணவில்லாமையும் தணப்பொல்லாமையும் நலிய உடல் நாளும் மெலிதல்.

எ - டு. **யாமெங் காதலர்க் காணே மாயிற்**
**செறிதுனி பெருகிய நெஞ்சமொடு பெருநீர்க்**
**கல்பொரு சிறுநுரை போல**
**மெல்ல மெல்ல இல்லா குதுமே.**

என்ற குறுந்தொகையில் (குறுந். 290) படர் ஒல்லாது உடல் மெலியும் காதல் இயல்பு வருதல் காண்க.

(9) **கண்துயில் மறுத்தல்** என்பது, இரவும் பகலும் உறக்கத்தை மேற்கொள்ளாமை.

எ - டு. **மன்னுயிர் எல்லாம் துயிற்றி அளித்திரா**
**என்னல்ல தில்லை துணை.**

என்ற குறளில் (குறள் - 1168) இம்மெய்ப்பாடு வந்துள்ளமை அறிக.

(10) **கனவொடு மயங்கல்** என்பது, அரிதினில் துயிலெய்தியவழித் தலைமகனைக் கனவிற்கண்டு களித்து விழித்த பின் காணாது வெருளுதல்.

எ - டு. **நனவினால் நல்கா தவரைக் கனவினால்**
**காண்டலின் உண்டென் உயிர்.**

என்ற குறளில் (குறள் - 1213) கனவொடு மயங்கும் நிலையைக் காண்க.

(11) **பொய்யாக் கோடல்** என்பது, காதல் மிகையால் மெய்யைப் பொய்யாகத் திரித்துக் கோடல்.

எ - டு. **பெண்ணியலா ரெல்லாரும் கண்ணிற் பொதுவுண்பர்**
**நண்ணேன் பரத்தநின் மார்பு.**

என்ற குறளில் (குறள் - 1311) தலைவி மெய் திரித்துப் பொய்யாக் கோடலைக் காண்க.

(12) **மெய்யே என்றல்** என்பது, முன்னதற்கு மாறாகத் தலைவன் பொய்ப்பினும் தலைவி அவன் சொல் மெய்யெனத் துணிதல்.

**எ - டு. 'கானம் காரெனக் கூறினும்**
**யானோதே றேனவர் பொய்வழங் கலரே.'**

என்ற குறுந்தொகையில் (குறுந். 21) தலைவன் சொல் மெய்யெனக் கொள்ளும் மெய்ப்பாடு வருதல் காண்க.

**(13)** ஐயம் செய்தல் என்பது, தலைவர் நம்மைத் துறப்பாரோ என்று ஐயுறுதல்.

**எ - டு. 'ஒண்ணுதல் நீவுவர் காதலர் மற்றவர்**
**எண்ணுவ தெவன்கொலோ அறியேன் என்னும்'**

என்ற கலியடிகளில் (கலி. 4) ஐயுறுதல் காதற்கு இயல்பாதலை அறிக.

**(14)** அவன்தமர் உவத்தல் என்பது, தலைவனுக்கு உறவாயினரைக் கண்டு மகிழ்தல்.

**எ - டு. செய்வன சிறப்பிற் சிறப்புச்செய் திவ்விரா**
**எம்மொடு சேர்ந்துசென் றீவாயாய் செம்மால்**
**நலம்புதி துண்டுள்ளா நாணிலி செய்த**
**புலம்பெலாந் தீர்க்குவேம் மன்.**

என்ற கலிப்பாட்டடிகளில் (கலி. 83) இம்மெய்ப்பாடு வந்துள்ளமை அறிக.

**(15)** அறனழிந்துரைத்தல் என்பது, அறனழிய வெறுப்பது போல் வெறுத்துக் கூறல்.

**எ - டு. விளியுமென் இன்னுயிர், வேறல்லம் என்பார்**
**அளியின்மை யாற்ற நினைந்து.**

என்ற குறளில் (குறள். 1209) இம்மெய்ப்பாட்டினைக் காண்க.

**(16)** ஆங்கு நெஞ்சழிதல் என்பது, சொல்லளவில் அறனழிவது போலக் கூறிய தலைவி பின் அவ்வளவிற்கு உளம் உளைந்து வருந்துதல்.

**எ - டு. பெறுஅமை அஞ்சும் பெறிற்பிரி வஞ்சும்**
**அறுஅ விடும்பைத்தென் நெஞ்சு.**

என்ற குறள் (குறள் - 1295) இம்மெய்ப்பாடு குறிப்பது.

**(17) எம்மெய்யாயினும் ஒப்புமை கோடல்** என்பது, யாதாயினும் ஒரு பொருளைக் கண்டவிடத்துத் தலைமகனோடு ஒப்புமை கொள்ளுதல்.

எ - டு. **இந்திர நீலமொத் திருண்ட குஞ்சியும்**
**சந்திர வதனமும் தாழ்ந்த கைகளும்**
**சுந்தர மணிவரைத் தோளு மேயல**
**முந்தியென் னுயிரையம் முறுவல் உண்டதே.**

என்ற கம்பராமாயணப் பாடலில் *(மிதிலைக்காட்சி - 56)* சீதாப்பிராட்டி இராமனது வண்ணம், வடிவு முதலியவற்றிற் கேற்ப ஒப்புக்கோடல் காண்க.

**(18) ஒப்புழி உவத்தல்** என்பது, ஒப்புமையுண்டாகிய வழியே உவமை கொண்டு அதனானே உவகை தோன்றுவது.

எ - டு. **'காமரு நோக்கினை யத்தத்தா வென்னுநின்**
**தேமொழி கேட்டல் இனிதுமற் றின்னாதே'**

என்ற கலியடிகளில் *(கலி. 80)* தலைவி ஒப்புவழி உவந்தமை காண்க.

**(19) உறுபெயர் கேட்டல்** என்பது, தலைமகன் பீடார் பெரும்புகழ் பிறர்வாய்க் கேட்டு மகிழ்தல்.

எ - டு. **நசைஇயார் நல்கார் எனினும் அவர்மாட்**
**டிசையும் இனிய செவிக்கு.**

என்ற குறளில் *(குறள் 1199)* தலைவனின் உறுபெயர் கேட்டு தலைவி மகிழ்தலை அறிக.

**(20) கலக்கம்** என்பது, மனம் கலங்கி நிற்கும் நிலை ; சொல்லத் தகாதன சொல்லுதல் என்பர் பேராசிரியர்.

எ - டு. **'பையெனக் காண்கு விழிப்பயான் பற்றிய**
**கையுளா மாய்ந்தான் கரந்து.'**

என்ற கலிப்பாட்டடிகளில் *(கலி. 142)* இம்மெய்ப்பாட்டினைக் காண்க.

இந்த இருபது மெய்ப்பாடுகளும் தலைமகனுக்கும் ஏற்ற வகையான் கொள்ளப்படும். இவையெல்லாம் அறனும் பொருளுமன்றி இன்பப்பொருள் நிகழ்ந்தவிடத்து அவ்ரவர்

உள்ளத்து நிகழ்வனவாதல் வழக்குநோக்கி உணரப்படும், இவையாவும் உள்ளத்து நிகழ்ந்தனவற்றை வெளிப்படுப்பன ஆகலான் மெய்ப்பாடெனப்பட்டன என்பர் பேராசிரியர். இக்கூறிய மெய்ப்பாடுகள் யாவும் களவிற்கே சிறப்பாக உரியவை.

**ஒரு கருத்து :** புணர்ச்சிக்கு முன்னும் பின்னும் நிகழ்வதாகக் கூறப்பெறும் மெய்ப்பாடுகள் யாவற்றையும் சிருங்கார ரஸத்திற்கு நிமித்தமான பாவங்களாகவே கொள்ளுதல் வேண்டும் என்று கூறுவர் பன்மொழிப்புலவர் உயர்திரு. **வே. வேங்கடராஜுலு ரெட்டியார்** அவர்கள். அவர் மெய்ப்பாட்டியலைப்பற்றிக் கூறியுள்ள கருத்து நமக்குப் பெரும் பயன் விளைக்கும்; அஃது இத்துறையில் ஆக்கவேலை செய்வார்க்குத் தூண்டுகோலாகவும் இருக்கும்.

"ஆசிரியர் தொல்காப்பியனார் மெய்ப்பாடுகளைக் கூறுமிடத்து ஒவ்வொரு மெய்ப்பாடும் நந்நான்கு பொருளிற் பிறக்குமென்றும், அவை இன்னவை இன்னவை என்று கூறினாராயினும் அவர் மெய்ப்பாட்டின் (ரஸத்தின்) இயல்பினை விரித்துக் கூறினாரல்லர்; பின்னும், உடைமை முதலாக முப்பத்திரண்டு மெய்ப்பாடுகளும் உள்ளன எனக் கூறினவர், அவ்வெட்டனோடு இவற்றிற்குள்ள வேறுபாடும் விளங்க உரைத்திலர். இவற்றால், மெய்ப்பாட்டியலை ஆசிரியர் சுருக்கமாகவே கூறியுள்ளார் என்பது புலனாகும். வடமொழியில் இவற்றை விரித்துக் கூறும் நூல்கள் பல, அவற்றைப் பின்பற்றிக் கன்னடம் முதலிய திராவிட மொழிகளிலும் சிற்சில நூல்கள் தோன்றியுள்ளன. தமிழிலோ, தொல்காப்பியத்தோடே நின்றது. ஆதலின், மெய்ப்பாட்டியலை நன்கு அறிந்துகொள்ளுதல் அரிதாகும்."[16]

இனி, கற்பிற்குரிய மெய்ப்பாடுகளை அடுத்துக் காண்போம்.

---

16. வேங்கட ராஜுலு ரெட்டியார், வே, பரணர்-பக் 157

# 24. அகத்திணைக்குரிய மெய்ப்பாடுகள்-(கற்பு)

தொல்காப்பியர் கற்புக்குரியனவாகக் கூறும் மெய்ப்பாடுகளையும் முதலில் உலகறிய இடையறவின்றி உடனுறை இன்ப மனையற வாழ்க்கை வேட்கையால் வரைவு வற்புறுத்தும் மெய்ப்பாடுகள் எனவும், அதன் பின் வரைந்து உடன் வாழும் திருந்திய கற்புக்குரிய மெய்ப்பாடுகள் எனவும் தனித் தனியாக இரண்டு பிரிவில் விரித்தோதுகின்றூர்.

**வரைவு வேட்கைக்குரிய மெய்ப்பாடுகள் :** வரைந்து எய்தும் கூட்டத்திற்கு ஏதுவாகிய மெய்ப்பாடுகள் இன்னின்னவை என்பதை,

> முட்டுவயிற் கழறல் முனிவுமெய்ந் நிறுத்தல்
> அச்சத்தின் அகறல் அவன்புணர்வு மறுத்தல்
> தூதுமுனி வின்மை துஞ்சிச் சேர்தல்
> காதல் கைம்மிகல் கட்டுரை யின்மையென்
> ருயிரு நான்கே அழிவில் கூட்டம்1

என்ற நூற்பாவில் குறிப்பிடுகின்றூர், ஈண்டு அழிவில் கூட்டம் என்றது, வரைந்தெய்தும் கூட்டம். அஃதாவது, களவிற்போலப் பிறர்க்கு மறைத்து இடையறவுபடுங் கரவுக் காதலைப் போலாது, உலகறிய ஒளியாது ஒழியாதுடனுறையும் கற்புக்காதற் கூட்ட வேட்கைக் குறிப்பாகும் இது. 'கூட்டம்' என்பது, இங்குக் கூட்டம் தரும் வரைவு வேட்கைக் குறிப்பிற்காதலால் ஆகுபெயர். இக்கூறியவற்றுள்,

**(1) முட்டுவயிற் கழறல்** என்பது, களவொழுக்கத்திற்கு முட்டுப்பாடாகிய வழி* இடித்துரைத்தல்.

---

1. மெய்ப்—நூற். 23 (இளம்.)

* நிலவு வெளிப்பாடு, காவலர் கடுகுதல், தாய்துஞ்சாமை, ஊர்துஞ்சாமை முதலியவற்ருல் தலைவன் குறியிடத்து வருவதற்கு இடையிடுபடுதல்.

எ - டு. 'இரும்பிழிமாரி' என்ற அகப்பாட்டில் (அகம்-122)

**நொச்சி வேலித் தித்தன் உறந்தைக்**
**கல்முதிர் புறங்காட் டன்ன**
**பன்முட் டின்றால் தோழிநங் களவே.**

என்ற அடிகளில் தலைமகன் கேட்பத் தோழி கழறியுரைத்தல் காண்க.

(2) முனிவு மெய்ந்நிறுத்தல் என்பது, வரையாக் கூட்ட வெறுப்பைத் தலைவி தன் மெய்ப்படு குறிப்பால் வற்புறுத் துணர்த்தல்.

எ - டு. **நோமென் நெஞ்சே நோமென் நெஞ்சே**
**இமைதீய்ப் பன்ன கண்ணீர் தாங்கி**
**அமைதற் கமைந்தநங் காதலர்**
**அமைவில ராகுதல் நோமென் நெஞ்சே**

என்ற குறுந்தொகையில் (குறுந்.4) தலைமகள் தன் பிரிவுத் துயரைத் தான் ஆற்றியிருக்கும் செவ்வியை உணர்த்துவதன் மூலம் இம்மெய்ப்பாட்டினைப் புலப்படுத்துவதை அறிக.

(3) அச்சத்தின் அகறல் என்பது, 'தலைமகன்கண் வரும் ஏதம் அஞ்சி அவனை நீங்கும் குறிப்பு' என்பர் பேராசிரியர்; 'இவ்வொழுக்கம் பிறர்க்குப் புலனாம் எனக் கூட்டத்தின் அகன்றொழுகல்' என்பர் இளம்பூரணர்.

எ - டு. "..... ...............................

**அரும்படர் எவ்வம் இன்றுநாம் உழப்பினும்**
**வாரற்க தில்ல தோழி! சாரற்**
**பிடிக்கை யன்ன பெருங்குரல் ஏனல்**
**உண்கிளி கடியும் கொடிச்சிகைக் குளிரே**
**சிலம்பிற் சிலம்பும் சோலை**
**இலங்குமலை நாடன் இரவி னானே.**

[குளிர் - கிளிகளை ஓச்சும் ஒருவகைக் கருவி]

என்ற குறுந்தொகையில் (குறுந்.360) ஆற்றின் ஏதமும் காவல் மிகுதியும் அஞ்சி வேறுபட்ட தலைவியின் நிலையைத் தாய் வெறியாட்டு எடுத்து ஆராயப் புகுந்ததை அறிந்த தலைவியின் கூற்றில் இம்மெய்ப்பாடு புலனாவதை அறிக.

**(4) அவன் புணர்வு மறுத்தல்** என்பது, இரவுக்குறியும் பகற்குறியும் விலக்குதற்கெழுந்த உள்ள நிகழ்ச்சி.

எ - டு. **நல்வரை நாட நீவரின்**
**மெல்லிய லோருந் தான்வா ழலளே.**

என்ற அகப்பாட்டடிகளில் (அகம்.12) தலைமகள் குறிப்பினைத் தோழி கூறியதாகலான் அஃது அவன் புணர்வு மறுத்தல் எனப்படும்.

**(5) தூது முனிவின்மை** என்பது, புள்ளும் மேகமும் போல்வன கண்டு சொல்லுமின் அவர்க்கென்று தூதிரந்து பன்முறையாலும் சொல்லுதல்; அஃதாவது, வரைவு கருதி தலைவனுக்குத் தூதுய்க்கவும் அவன் தூது எதிரவும் விரும்புதல்.

எ - டு. **இன்ன ளாயினள் நன்னுதல் என்றவர்த்**
**துன்னச் சென்று செப்புநர்ப் பெறினே**
**நன்றுமன் வாழி தோழி.**

என்னும் குறுந்தொகையில் (குறுந். 98) தணந்துறையும் தலைவனுக்குத் தலைவி தூதுய்ப்பதையும் முனியாமையையும் காண்க.

**(6) துஞ்சிச் சேர்தல்** என்பது, மனையகத்துப் பொய்த்துயிலோடு மடிந்து வைகுதல். அஃதாவது, வரைவு நீட்டுந் தலைவன் கூட்டம் மகிழாது தலைவி மனமாழ்தல். வேண்டியவாறு கூட்டம் நிகழப்பெருமையின் தலைமகனொடு புலந்தாள் போல மடிந்தொன்றுமாதலின் 'துஞ்சிச் சேர்தல்' எனப்பட்டது.

எ - டு. **என்மலைந் தனன்கொல் தானே தன்மலை**
**யார நாறு மார்பினன்**
**மாரி யானையின் வந்துநின் றனனே.**

என்ற குறுந்தொகையில் (குறுந்.161) என்ன காரியம் மேற்கொண்டு வந்தான் என்றமையின் இது துஞ்சிச் சேர்தல் ஆயிற்று என்பதை அறிக.

**(7) காதல் கைம்மிகல்** என்பது, புணர்வு பெறுமல் வரைவு நீட்டித்த வழிக் காதலுணர்வு வரம்பிகந்த நிலையில் நிகழும் உள்ளக் குறிப்பு.

எ - டு. உள்ளின் உள்ளம் வேமே, யுள்ளா
திருப்பினெம் மளவைத் தன்றே, வருத்தின்
வான்ஞேய் வற்றே காமம்
சான்ஞே ரல்லர்யா மரீஇ யோரே.

என்ற குறுந்தொகையில் (குறுந்.102) தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் நெடுங்காலம் நீட்டித்தானுக, அதனை உணர்ந்து அவனது பிரிவைத் தலைவி ஆற்ருளெனத் தோழி கவன்றதையறிந்த தலைமகள் கூற்றில் இம்மெய்ப்பாடு தோன்றுவதைக் காண்க.

'கன்றும் உண்ணுது' (குறுந்.27) என்பதுவும் அது.

**(8)** **கட்டுரையின்மை** என்பது, உரை மறுத்திருத்தல்; கூற்று நிகழ்த்துதலின்றி உள்ளக் கருத்தினையும் மறைத்தமர்ந்திருத்தல். இதனல் தோழிக் கண்ணுயினும் தலைமகன் கண்ணுயினும் உரைமுறை நிகழ்வதல்லது தலைமகள் உரையாள் என்பது அறியத்தக்கது.

எ - டு. யான்றன் அறிவன் தானறி யலளே
யாங்கா குவன்கொல் தானே
பெருமுது செல்வர் ஒருமட மகளே

என்ற குறுந்தொகையில் (குறுந். 337) தலைமகள் கட்டுரையாதிருத்தலின் தலைமகன் தமரினெய்தல் வேண்டினமையிற் கட்டுரையின்மையின் வரைவு கடாவுதலாயினமை காண்க.

கையி ஞற்சொலக் கண்களிற் கேட்டிடும்
மொய்கொள் சிந்தையின் மூங்கையு மாயினேன்.

என்ற சிந்தாமணிச் செய்யுளில் (சிந்தா. 997) குணமாலைக் கூற்றில் கழிகாதலால் உரையறுதல் காண்க.

**வரைந்த பின் நிகழும் மெய்ப்பாடுகள் :** இனி, வரைந்து உடன் வாழும் கற்புக்காதலுக்குரிய மெய்ப்பாடுகளைக் காண்போம். அவற்றை,

தெய்வம் அஞ்சல் புரையறந் தெளிதல்
இல்லது காய்தல் உள்ளது உவர்த்தல்
புணர்ந்துழி யுண்மைப் பொழுதுமறுப் பாக்கம்

அருண்மிக உடைமை அன்புதொக நிற்றல்
பிரிவாற் றாமை மறைந்தவை யுரைத்தல்
புறஞ்சொன் மாணாக் கிளவியொடு தொகைஇச்
சிறந்த பத்துஞ் செப்பிய பொருளே.[2]

என்ற நூற்பாவால் குறிப்பிடுவர் ஆசிரியர். அவற்றுள்,

**(1) தெய்வம் அஞ்சல்** என்பது, சூள் பொய்த்தல், பரத்தையர் கூட்டம் முதலிய தலைவன் தவறுகளுக்குக் கடவுள் அணங்குமெனத் தலைவி அஞ்சுதல், தெய்வம் தொழாது கணவற்றொழுவதே நல்லில்லாட்டியர் தொல்லறமாதலின், தெய்வம் பரவுதல் என்னாது அஞ்சல் என்று அமையக் கூறப்பட்டது.

**எ - டு. நீயுறும் பொய்ச்சூள் அணங்காகின் மற்றினி**
**யார்மேல் விளியுமோ கூறு.**

என்ற கலிப்பாட்டடிகளில் (கலி.88) இக்குறிப்பு வந்தமை காண்க.

**(2) புரையறந் தெளிதல்** என்பது, தனக்கு ஒத்த இல்லறம் இன்னதென்று தலைமகளது உள்ளத்தே படுதல்.

**எ - டு. 'விரியுளைக் கலிமான் தேரொடும் வந்த**
**விருந்தெதிர் கோடலின் மறப்ப லென்றும்'**

என்ற கலிப்பாட்டடிகளில் (கலி 75) இக்குறிப்பு வந்தமை அறிக. இஃது 'அவனொடு சொல்லாடாது ஊடியிருப்பேனாயின், விருந்துகொண்டு புகுதரும்; அதனால் ஊடலை மறப்பேன் என்றதனால் புரையறந்தெளிதலாயிற்று' என்ற பேராசிரியரின் விளக்கம் காண்க.

**(3) இல்லது காய்தல்** என்பது, களவொழுக்கத்திற் போலன்றித் தலைமகன்பால் இல்லாத குற்றத்தை ஏறட்டுக் கொண்டு வெகுள்தல்.

**எ - டு. நற்றா ரகலத்துக் கோர்சார் மேவிய**
**நெட்டிருங் கூந்தற் கடவுள ரெல்லார்க்கு**
**முட்டுப்பா டாகலும் உண்டு.**

என்ற கலிப்பாட்டடிகளில் (கலி.93) தலைவன் கடவுளரையே

2. மெய்ப்-நூற். 24 (இளம்.)

கண்டு தங்கினையினும் நெட்டிருங் கூந்தற் கடவுளரையே கண்டாயென்று இல்லது சொல்லிக் காய்தலே, அறிக.

எ - டு. கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்
காட்டிய சூடினீர் என்று.

என்ற குறளும் (குறள். 1313) அது.

**(4) உள்ளது உவர்த்தல்** என்பது, தலைமகனுற்பெற்ற தலையளி உண்மையேயாயினும் அதனை உண்மையென்று தெளியாது அருவருத்து நிற்கும் உள்ள நிகழ்ச்சி.

எ - டு. வெய்யாரும் வீழ்வாரும் வேருகக் கையின்
முகைமலர்ந் தன்ன முயக்கின் தகையின்றே
தண்பனி வைகல் எமக்கு.

என்ற கலிப்பாட்டடிகளில் (கலி.78) பரத்தையர் சேரியிற் சென்று வந்த தலைவனோடு ஊடிய தலைவி தலைவனின் முயக்கம் உண்மையன்பு கொண்டது அன்று என்று கூறுதல் காண்க.

**(5) புணர்ந்துழி யுண்மை** என்பது, புணர்ந்தவழி ஊடலுள்வழி மறைத்துக் கூறாது அவ்வழி மன நிகழ்ச்சியுண்மை கூறுதல்.

எ - டு. குளிரும் பருவத்தே யாயினுந் தென்றல்
வளியெறியின் மெய்யிற் கினிதாம்—ஒளியிழாய்
ஊடி யிருப்பினும் ஊர நறுமேனி
கூடல் இனிதாம் எமக்கு.

எனற ஐந்திணை ஐம்பதில் (செய்.30) தலைவி புணர்ந்துழி உண்மை கூறியமை அறிக.

**(6) பொழுது மறுப்பாக்கம்** என்பது, களவின்கண் பகற்குறியும் இரவுக்குறியுமென வரையறுத்தாற் போல்வதோர் வரையறையின்மையின் அப்பொழுதினை மறுத்தலாகிய ஆக்கம்; எனவே, களவுக்காலத்துப் பொழுது வரைந்து பட்ட இடர்ப்பாட்டின் நீங்கிய மன மகிழ்ச்சி ஆக்கம் எனப்படும்.

எ - டு. அயிரை பரந்த அந்தண் பழனத்து
ஏந்தெழில் மலர்ந்த தூம்புடைத் திரள்கால்
ஆம்பல குறுநர் நீர்வேட் டாங்கிவள்
இடைமுலைக் கிடந்து நடுங்க லானீர்
தொழுதுகாண் பிறையிற் றோன்றிய நுமக்கு
அரியேம் ஆகிய காலைப்
பெரிய நோன்றனிர் நோகோ யானே.

என்ற குறும்பாட்டில் (குறுந்.178) 'தொழுது காண் பிறையில் தோன்றினம்' என்பது, களவுக்காலத்து இடையீடு பெருகிற்றெனக் கூறி, அங்ஙனம் வரைந்த பொழுதினை மறுத்த காலத்து நடுங்கலானீர் என்றமையின் இஃது அப் பொருட்டாயிற்று.

(7) **அருள்மிக உடைமை** என்பது, களவுக்காலத்துப் போலத் துன்பமுற்றூற்போலன்றி அருள்மிகத் தோன்றிய நெஞ்சினளாதல்.

எ - டு. நின்ற சொல்லர் நீடுதோ றினியர்
என்று மென்றோள் பிரிபறி யலரே.

என்ற நற்றிணைப் பாட்டில் (நற்.1) தலைவனது பிரிவை யறிந்து கூறிய தோழிக்குத் தலைவி தன்னை வருந்தும்படி விட்டுப் பிரிகின்ற அன்னதொரு குணக்குறைபாடு தலைவ னிடம் இல்லை என்று கூறுவதில் இம்மெய்ப்பாடு புலனாதல் காண்க.

(8) **அன்புதொக நிற்றல்** என்பது, களவுக்காலத்து விரிந்த அன்பெல்லாம் இல்லறத்தின்மேல் பெருகிய விருப்பி னானே ஒருங்குத் தொக நிற்றல்.

எ - டு. ................பெருங்கல் நாடன்
இனிய னாகலின் இனத்தின் இயன்ற
இன்னா மையினும் இனிதோ
இனிதெனப் படூஉம் புத்தேள் நாடே.

என்ற குறும்பாட்டில் (குறுந்.288) தலைவி தலைவனுடன் அன்பு தொக நிற்றல் காண்க.

(9) **பிரிவாற்ருமை** என்பது, களவில் பிரிவாற்றுதல் வேண்டுமாறு போலக் கற்பினுள் பிரிவாற்றுதல் வேண்டப் படாமையின் தலைவன் பிரிவைத் தாங்காது அழுங்குதல்:

**எ - டு. இடனின்றி யிரந்தோர்க்கொன்
நீயாமை யிழிவெனக்
கடனிறந்து செயல்சூழ்ந்த
பொருள்பொரு ளாகுமோ
வடமீன்போல் தொழுதேத்த
வயங்கிய கற்பினுள்
தடமென்றேள் பிரியாமை
பொருளாயின் அல்லதை**

என்ற தாழிசையில் (கலி 2) இனைய கற்பினுளைப் பிரியாமை பொருளாயினன்றி நும்மால் தரப்படும் பொருள் பொரு ளாகுமோ என்பது. இதன் கருத்து : பிரிவாற்ருமையின் இவள் இறந்துபடுவள் ; பின்னை அப்பொருள் கொண்டு ஆற்றும் இல்லறம் யாண்டையது எனத் தலைமகள் பிரிவாற் ருமையைத் தோழி கூறியவாறு.

**(10) மறைந்தவையுரைத்த புறஞ்சொல் மாணுக்கிளவி** என்பது, தலைவனது மறைந்த ஒழுக்கத்தைப்பற்றி அயலார் கூறும் புறஞ்சொல்லின் தீமை குறித்து எழுந்த சொல்; அலர்

**எ - டு. நடுநாள் வரூஉம் இயல்தேர்க் கொண்கனெடு
செலவயர்ந் திசினல் யானே
அலர்சுமந் தொழிகஇவ் அழுங்க லூரே.**

என்ற நற்றிணையில் (நற்.149) அலர்மிகாமை கூறும் கூற்றில் கற்புக்கடம் பூண்டு கூறுதல் காண்க.

இவை பத்தும் கற்பிற்குச் சிறந்த மெய்ப்பாடுகளாம். கரந்தொழுகலால் காமஞ்சாலாத களவினும், வரைந்து உல கறிய உடன் வாழ்ந்து ஏமஞ்சான்ற மக்களொடு துவன்றிக் கிழவனும் கிழத்தியும் வாழ்தலால் காமஞ்சான்ற கற்புச் சிறந்தது. அச்சிறந்த வாழ்வு முன் கழிந்த களவின் பயனு மெனக் கற்பியல் இறுதியில் தெளிக்கப்பட்டிருப்பதால், அன்புத்திணையிற் சிறந்தது கற்புக்காதல். அதற்குச் சிறந்

தன இவண் கூறப்பட்ட மெய்ப்பாடு பத்தும். இந்த அமைவு தோன்றவே 'சிறந்த பத்தும் செப்பிய பொருளே' எனக் கூறப்பட்டது.

இதன் பிறகு காம நிகழ்ச்சியின்கண் ஒத்த அன்பின ராய்க் கூறுவதற்குரிய தலைவனும் தலைவியும் ஆகிய இவ்விரு வர்பாலும் அமைய வேண்டிய பத்துக் கூறுகளைக் கூறுவர் ஆசிரியர். அவை : பிறப்பு, குடிமை, ஆண்மை, யாண்டு, உரு, அன்பு, நிறை, அருள், உணர்வு, திரு என்பவை யாகும். இப்பத்து ஒப்புவகைக் குணங்களும் தலைவன் தலைவி ஆகிய இருவர்பாலும் அமைந்தால்தான் தலையாய காதல் நிலை பெறும் என்பதை உணர்த்த அவை ஈண்டுக் கூறப்பெற்றன முன் களவியலில்,

'ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பால தாணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப'[3]

என்ற நூற்பாவில், தலைக்காட்சியில் முளைத்த காதல் நிலைத்து வளர்தற்கு இன்றியமையாதது தலைமக்களின் ஒப்பு என வாளா சுட்டப்பட்டது. இங்கு அவ்வொப்பின் வகை விரித்து விளக்கப்பட்டது. இவைதாமே மெய்ப்பாடாகாமை இவற்றின் தன்மையால் தெளியப்படும். இவை ஒவ்வொன் றினையும்பற்றி முன்னரே விளக்கியுள்ளோம்.[4]

**காதலுக்காகாத குற்றங்கள் :** இக்கட்டுரையிலும் இதற்கு முந்திய கட்டுரையிலும் கூறிய மெய்ப்பாடுகள் தோன்றுதற் குரிய காதலுக்காகாத குற்றங்களைத் தொகுத்துக் கூறுவர் ஆசிரியர். இவை.

நிம்பிரி கொடுமை வியப்பொடு புறமொழி
வன்சொல் பொச்சாப்பு மடமையொடு குடிமை
இன்புறல் ஏழைமை மறப்போ டொப்புமை
என்றிவை யின்மை என்மனார் புலவர்.[5]

என்ற நூற்பாவில் கூறப்பெறுகின்றன.[6]

---

3. களவியல்-நூற்-2. (இளம்.)
4. இந்நூல்-பக்கம் (216, 17)
5. மெய்ப்-நூற். 26 (இளம்.)
6. இந்நூற்பாவின் பொருள் டாக்டர் ச. சோ. பாரதியார் அவர்களின் ''மெய்ப்பாட்டியல் உரை'' நோக்கி எழுதப்பெற்றது.

**நிம்பிரி** என்பது, பிழைபொருப் பெற்றி; அஃதாவது, சகிப்பின்மை. இஃது அழுக்காறு அன்று. இது காதல் வாழ்வுக்கு ஏதமாதலின் விலக்கப்பட்டது. 'நிம்பிரி' என்ற சொல் ஆசிரியரால் மிக அருமையாக வழங்கப்பெறுகின்றது. **கொடுமை** என்பது, அறன் அழிய நெறி பிறழும் இயல்பு. **வியப்பு** என்பது மருட்கை; அஃதாவது, தலைமகள்பால் தெய்வத் தன்மை கண்டான் போல் வியந்தொழுகுதல். இதனை 'அற்புதம்' என்பர் வடநூலார். இஃது ஒத்த காதலுக்கு ஒல்லாக் குற்றமாகும். மருட்கை மதிமை சாலா காதலின், அஃதுள்வழித் தலையாய காதல் நிலையாது. கற்பறக் காதல் வாழ்வில் **காரைக்காலம்மையாரின்** அற்புதச் செயல் கண்டு அவ்வம்மையை அணங்கென மருண்ட **பரமதத்தனுக்குக்** காதல் நீங்கியதால், வியப்பு காதலுக்கு ஏலாக் குற்றமாதல் அறிக. **புறமொழி** என்பது, பழி தூற்றுதல்; இல்லாட்கு நல்லறம் "புறஞ்சொல் மாணுக்கிளவி"யென மேற்கூறியதனுலும், பழிதூற்றும் தவறுடைமை காதல் வாழ்வுக்கு ஏதம் பயக்குமாதலாலும் இது விலக்கப்பட்டது. **வன்சொல்** என்பது, வருத்தமுறுத்தும் கடுஞ்சொல்; அஃதாவது, கண்ணோட்டமின்றிச் சொல்லும் சொல். **பொச்சாப்பு** என்பது, கடைப்பிடியின்றி நெகிழ்ந்திருத்தல்; அஃதாவது சோர்வு. **மடமை** என்பது, சோம்புள்ளம்; முயற்சியில்லாத உள்ளம். **குடிமை இன்புறல்** என்பது, தலைவி தன் குடியுயர்வுள்ளியுவத்தல். இது கற்புக்காதலுக்குப் பொருந்தாது. முன்னர்க் களவியலில் இருவர்க்கும் குடிமை ஒப்புமை நன்றும் என்றும், அன்றேல், தலைவன் மிக்கோனுதல் தவருகாது எனவும் கூறி, எஞ்ஞான்றும் தலைவியின் உயர்வைத் தவிர்த்தமை ஈண்டு நினைவுகூர்தற்பாலது. **ஏழைமை மறப்பு** என்பது, எளிமையை மறப்பது. தணிவுணர்வு மறப்பது அன்பொழுக்கத்திற்கு ஆகாத தவறு. அஃகி அகன்ற அறிவுடையளாயினும், பிற பெருமை அனைத்தும் உடையளாயினும், தணிவொடு பணிதலும் தாழ்ந்தவனெனினும் தலைவனுயர்வு தன்னுள்ளத்து நிறுத்தலும் காதல் தலைவிக்கு இன்றியமையாதவை. அதனுல் தலைவி தன் தாழ்வு மறுத்தல் இல்லறக் காதலுக்கு

இழுக்கென விலக்கப்பட்டது. தலைவிக்கு உயர்குடியுவகை விலக்கியதோடமையாது தன் பணிவு மறவாது தலைவனுயர் வுள்ளலும் இன்றியமையாதென வற்புறுத்தும் குறிப்பால் குடிமையின்புறல் கூடாதென்பதனோடு ஏழைமை மறப்பும் விதந்து விலக்கப்பட்டமை அறிக. **ஒப்புமை** என்பது, ஆண் பாலாயினும் பெண்பாலாயினும் தான் காதலிக்கப்பட்டாரைக் கண்டவழி அவர் போல்வர் என ஆண்டு நிகழும் உள்ள நிகழ்ச்சி. அந்நினைவும் கற்பறம் அழிக்கும் இழுக்கமாதலின் கடியப்பட்டது. முன்னர் எம்மெய்யாயினும் ஒப்புமை கோடல் வேண்டப்பட்டதெனின், அது மலர் மதி போன்ற பொருள்களை அவற்றிற்கேற்கும் தலைமக்கள் உறுப்போடொப்புமை கோடலே குறித்தலின், அது குற்றமற்ற காதற்குறிப்பு எனக் கொள்ளப்பட்டது. இங்குப் பிறரோடு தலைமக்களின் ஒப்பு நினைப்பது உண்மைக் காதலுக்கேலாப் பிழையாதலின் அது கடியப்பட்டது.

மேற்கூறியவற்றுள் 'குடிமை இன்புறல்' ஒரு தொட ராகவும் 'ஏழைமை மறப்பை', 'ஏழைமை', 'மறப்பு' என இரண்டாக்கியும் குற்றம் பதினொன்று எனக் கொள்வர் இளம் பூரணர். பேராசிரியரோ, 'குடிமை இன்புறல்' என்ற தொடரைக் 'குடிமை', 'இன்புறல்' என வெவ்வேறு பிரித்துப் பன்னிரு குற்றம் எண்ணிக் காட்டுவர். குடிமை காதலர்க்கு வேண்டப்பெறும் ஒப்புவகையுள் ஒன்றெனவும் (மெய்ப். நூற். 25), இன்புறல் உண்மைக் காதற்குறிப்பு என்று எண்ணப்படும் மெய்ப்பாடுகளுள் ஒன்றெனவும், (மெய்ப். நூற். 12) முன்னர்க் குறிப்பதனால் அவற்றைக் காதலுக்கு ஒவ்வாத குற்றங்களெனத் தொல்காப்பியர் இவண் கடிந்தா ரெனக் கோடல் முன்னொடு பின் முரணுவதால் அவ்வாறு கொள்ளுதல் எனைத்தானும் கூடாது. ஆதலின், 'குடிமை இன்புறலை' ஒரே தொடராகக்கொண்டு பிறப்பின் பெருமிதம் தலைவிக்கேலாத் தவறெனக் கூறுதலே கருத்தாதல் தேற்றம். அங்ஙனமே, மறப்பை ஏழைமையின் வேறாகப் பிரித்தலும் பொருந்தாது. மேலே, பொச்சாப்பு மெய்க்காதற் குறிகளுள் ஒன்றெனக் கூறப்படுதலின், அதனையே மறப்

பெனச் சொல் மாற்றிக் காதலுக்கேலாத குற்றமெனக் கருதுவதற்கில்லை. அன்றியும், ஏழைமையுணர்வு நன்ருவ தன்றிக் காதல் வாழ்வில் கடிவரையின்று. ஆதலின், அவ் விரண்டினையும் ஒருங்கெண்ணி, ஏழைமை மறப்பைக் குற்ற மாகக் கொள்வதே ஒருதலை. இன்னும், மேலிரு நூற்பாக் களும் பத்தே கூறுதலை நோக்க, ஈண்டும் அவ்வாறே பத் தெனக் கோடலே ஏற்புடைத்தாகும். இனி, 'இன்மை என் மனூர்'' என்பதைக் 'காதலர்க்கு இன்மை வேண்டும்' என விரித்தது, பொருள் விளங்கும் பொருட்டும், 'இன்மை வேண்டும்' என நிற்பிற் பொருள் முடியாமையானும் என்க.

மேற்கூறிய பத்துக் குற்றங்கள் உள்வழி உண்மைக் காதல் நிலையாது. காதல் மெய்ப்பாடுகளைக் காணுதல் அவைபற்ற இடத்தாம் எனச் சுட்டுவதற்கே அவை இவண் கூறப்பெற்றன. இத்தகைய மெய்ப்பாடுகள் நுண்ணுணர் வுடையாருக்கே புலனுகும் என்பது முன்னர் உணர்த்தப் பெற்றது. கவிதை இன்பத்தின் கொடுமுடியைக் காண்ப தற்கு இத்தகைய மெய்ப்பாடுகளை அறிதல் மிகவும் இன்றியமையாதது.

# 25. உவமையணி

**தொ**ல்காப்பியர் காலத்திலும் அதற்கு முன்னரும் அகப்பொருள் புறப்பொருள்களைக் கூறும் பாக்களை அணி செய்வதற்குக் கவிஞர்கள் **'உவமம்'** என்னும் அணியையே துணையாகக் கொண்டிருந்தனர். உவமம் என்பது, ஒரு பொருளோடு ஒரு பொருளினை ஒப்புமை கூறுமுகமாக அப் பொருளினுடைய வண்ணம், வடிவு, தொழில் முதலிய இயல்புகளை நன்கு புலப்படும்படி செய்வதாகிய பொருட் புலப்பாட்டு நெறியாகும். காட்டில் திரியும் 'ஆமா' என்ற விலங்கினைக் கண்டறியாத ஒருவன் அதனை அறிந்துகொள்ள விரும்பினால், 'ஆவினைப் போன்றது ஆமா' என்று அவனுக்குத் தெரிந்த பசுவினை ஒப்புமையாகக் காட்டி உணர்த்துதல் மரபு. அந்த ஒப்புமையைக் கேட்ட பிறகு, அவன் காட்டிற்குச் சென்று, ஆமாவை நேரில் கண்டு, 'ஆமா இதுவே' என்று உணர்ந்துகொள்வான். இவ்வாறு, பிறிதொன்றனை ஒப்புமை யாக எடுத்துக்காட்டித் தான் சொல்லக் கருதிய பொருளின் இயல்பினை விளக்குவதே 'உவமம்' எனப்படும். **'உவமம்'** எனினும் **உவமை** எனினும் ஒக்கும்.

வடமொழியில் உவமை அளவையாகவும் அணியாகவும் வகுக்கப்பெறுகின்றது உவமை அளவையாகும் போது அது பொருளின் இயல்பை மிக அணித்தாக எடுத்துக் கூறுவது (ஸாமீப்ய மானம் உபமானம்) என்பர். தொல்காப்பியர் உவமையை அணி என்னும் பெயரால் குறிக்கவில்லை. அகத்திணையியலில் அவர்,

உள்ளுறை யுவமம் ஏனை உவமமெனத்
தள்ளா தாகுந் திணையுணர் வகையே.[1]

1. அகத்திணை - நூற். 49 (இளம்)

என்று கூறிப் பின்னும் சில நூற்பாக்களை அமைத்தார். இந்த இரண்டினைத்தான் உவமயியலில் விரித்துரைக்கின்றார். உலக வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் பெருக வழங்கும் ஏனைய உவமத்தின் இயல்பினை முதலிலும், செய்யுளுக்குரிய—சிறப்பாக அகப்பொருளுக்கே உரிய—உள்ளுறை யுவமத்தின் இலக்கணத்தினை இரண்டாவதாகவும் வைத்து விளக்குகின்றார். உள்ளுறை யுவமத்தினை முன்னர் விளக்கினோம்.[2] ஏனைய உவமத்தினை ஈண்டு விளக்குவோம்.

சொல்ல எடுத்துக்கொண்ட பொருளைப் பொருள் என்றும், அதனது இயல்பினை விளக்குவதற்கு ஒப்புமையாக எடுத்துக் காட்டப்படும் பிற பொருள் உவமை என்றும் வழங்கப்பெறும். வடநூலார் இவ்விரண்டினையும் முறையே உபமேயம் என்றும், உபமானம் என்றும் வழங்குவர். உவமையும் பொருளும் ஆகிய இவ்விரு பொருளின்கண்ணும் ஒத்தமைந்த வண்ணம், வடிவு, தொழில், பயன் என்பன பற்றியமைந்த ஒப்புமைத் தன்மை 'பொதுத்தன்மை' என்று வழங்கப்பெறும். அத்தன்மையினை விளக்குவதற்பொருட்டு அன்ன, ஆங்க, போல, புரைய என்பன போன்ற அவற்றைச் சார்ந்து வரும் இடைச்சொற்கள் உவம உருபு எனப்படும். இங்ஙனம் உவமையும் பொருளும் அவற்றிடையே அமைந்த பொதுத்தன்மையும் ஆகிய இவை இன்னவென வெளிப்படையாக உணர்தற்கேற்ற சொல் நடையினையுடையது **'ஏனையுவமம்'** எனப்படும்.

**உவமை விகற்பம் :** ஒரு பொருளை ஒரு பொருட்கு உவமையாகக் கூறுங்கால் அவ்விரண்டிற்கும் பொதுவாகியதொரு தொழில் காரணமாகவும், அத்தொழிலாற்பெறும் பயன் காரணமாகவும், மெய்யாகிய வடிவு காரணமாகவும், மெய்யின்கண் நிலைபெற்றுத் தோன்றும் உருவாகிய வண்ணங் காரணமாகவும் ஒப்பிட்டு உரைக்கப்பெறும். இதனை ஆசிரியர் தொல்காப்பியனார்,

> வினைபயன் மெய்உரு என்ற நான்கே
> வகைபெற வந்த உவமத் தோற்றம்.[3]

2. இந்நூல் பக்கம் (217.224)
3. உவமயியல் – நூற். 1 (இளம்.)

என்று விதி செய்து காட்டுவர். அஃதாவது, வினையுவமம், பயனுவமம், மெய்யுவமம், உருவுவமம் என்று பெயர் கூறப் படும். வினையாற் கிடைப்பது பயனாதலின், வினையின் பின்னர்ப் பயன் வைக்கப்பட்டது; அங்ஙனமே, மெய்யின்கண் புலப்பட்டுத் தோன்றுவது நிறமாதலின், மெய்யின் பின்னர் உரு வைக்கப்பட்டது. வடிவும் வண்ணமும் பண்பென ஒன்றாக அடங்குமாயினும் கட்புலனாம் பண்பும், உற்றுணரும் பண்பும் எனத் தம்முள் வேறாதல் நோக்கி மெய்யினையும் உருவினையும் வேறு பிரித்துரைத்தார் ஆசிரியர். மெய்யாகிய வடிவனை இருட்டிலும் கையினால் தொட்டறிதல் கூடும்; வண்ணமாயின் அவ்வாறு தொட்டறிந்து கொள்ள இயலாது.

சில எடுத்துக்காட்டுக்கள் மேற்கூறிய உவம வகைகளைத் தெளிவாக்கும். **'புலியன்ன மறவன்'** என்பது, புலி பாயுமாறு போலப் பாய்வன் எனத் தொழில்பற்றி ஒப்பித்தமையின் வினையுவமம் ஆயிற்று. **''மாரியன்ன வண்கை'** என்பது மாரியால் விளைக்கப்படும் பொருளும் வண்கையால் பெறும் பொருளும் ஒக்கும் என்பது பட வந்தமையின் பயன் உவமம் எனப்படும். **'துடியிடை'** என்பது, அல்குலும் (இடுப்பின் கீழ்ப்பகுதி) ஆகமும் (இடுப்பின் மேல்பகுதி) அகன்று காட்ட அஃகித் (சுருங்கி) தோன்றும் மருங்குலால் (இடுப்பு) துடி அதனோடு ஒத்தது. இது வடிவொத்தமையின் மெய்யுவமம் எனப்படும். **'பொன்மேனி'** என்பது, பொன்னின்கண்ணும் மேனியின்கண்ணும் உள்ள நிறம் ஒத்தலால் உருவுவமம் ஆயிற்று. வினை, பயன், மெய், உரு என்னும் நான்கனுள் அளவும் சுவையும் தன்மையும் வெம்மையும் முதலாகவுள்ள யாவும் அடங்குமாதலின் உவமப்பகுதி இந்நான்கே என்று வரையறுத்தார் ஆசிரியர் என்பது ஈண்டு அறியத் தக்கது.

ஒரு பொருளோடு ஒரு பொருளை உவமை கூறுங்கால், மேற்கூறிய நான்கு விகற்பங்களில் ஒன்றும் பலவும் ஒருவமை யில் விரவியும் வரும் என்பர் ஆசிரியர்.

விரவியும் வருஉம் மரபின என்ப. 4

என்பது தொல்காப்பிய நூற்பா.

4. உவம.– நூற். 2 (இளம்.)

'செவ்வான் அன்ன மேனி அவ்வான்
இலங்குபிறை அன்ன விலங்குவான் வையெயிற்று'

என்ற அகப்பாட்டடிகளில் (அகம் - கடவுள் வாழ்த்து) 'செவ்வான் அன்ன மேனி' என்பதில், நிறம் ஒன்றே பற்றி உவமை வந்தது ; 'அவ்வான்....வையெயிற்று' என்பதில்— அஃதாவது 'பிறையன்ன வையெயிறு' என்பதில்,—பிறைக்கும் எயிற்றுக்கும் வண்ணமும் வடிவமும் ஒத்து வந்தன. மேலும்,

'காயா மென்சினை தோய நீடிப்
பஃறுடுப் பெடுத்தவலங்குலைக் காந்தள்
அணிமலர் நறுந்தா தூதுந் தும்பி
கையாடு வட்டில் தோன்றும்
மையாடு சென்னிய மலைகிழ வோனே.'

என்ற அகப்பாட்டுப் பகுதியில் (அகம்-108) ஆடுதல் தொழில் பற்றியும் வடிவு பற்றியும் வண்ணம் பற்றியும் வண்டிற்கு வட்டுக்காய் உவமையாய் வந்துள்ளமை காண்க.

**உவமை அமைக்கும் முறை :** உவமை அமைக்கும் பொழுது உவமிக்கப்படும் பொருளாகிய உபமேயத்தைவிட அதன் இயல்பினைப் புலப்படுத்தற்பொருட்டு எடுத்துக் கூறப்படும் உவமை உயர்ந்த பொருளாக அமைய வேண்டும் என்பது,

உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை.[5]

என்ற நூற்பாவால் அறியப்படும். இங்கு 'உயர்ச்சி' என்றது, வினை பயன் மெய் உரு எனச் சொல்லப்பெற்ற பொதுத் தன்மைகளால் உபமேயத்தினும் உபமானம் உயர்வுடையதாதலை. இதனுல் நாம் அறிய வேண்டுவன : உயர்ந்த பொருளுக்கு இழிந்ததொன்றனை உவமையாகக் கூறுதல் கூடாது. உவமானத்துடன் உபமேயம் பொருள் முழுவதும் ஒத்திருத்தல் வேண்டுமென்ற வரையறை இல்லை. அதன் ஒரு பகுதி மட்டிலும் ஒத்து அமைந்திருத்தல் சாலும். உலக வழக்கில் இழிந்ததெனக் கருதப்பெறும் பொருளை உவமையாக எடுத்தாள நேருங்கால் அதன்கண் அமைந்த உயர்ந்த தன்மையினையே ஒப்புமையாகக்கொண்டு உயர்ந்த குறிப்புப்பட உவமம்செய்தல் வேண்டும்.

5. உவம. - நூற். 3 (இளம்.)

**உவமையின் நிலைக்களம் :** மேற்கூறியவாறு தோன்றும் உவமை சிறப்பு, நலன், காதல், வலி என்ற நான்கனுள் ஒன்றை நிலைக்களமாகக்கொண்டே தோன்றுதல் வேண்டும்.

> சிறப்பே நலனே காதல் வலியொடு
> அந்நாற் பண்பும் நிலைக்கும் என்ப.

என்ற நூற்பாவினால் இதனை அறியலாம். அவற்றுள் சிறப்பு என்பது, உலகத்துள் இயல்பு வகையாலன்றிச் செயற்கை வகையாற் பெறுவது. நலன் என்பது, ஒரு பொருட்கண் இயல்பாய்த் தோன்றிய நன்மை. காதல் என்பது, நலனும் வலியும் இல்லாத நிலையிலும் காதல் மிகுதியால் அவை யுள்ளனவாகக்கொண்டு கூறுவது. வலி என்பது, ஒரு பொருளுக்குத் தன் தன்மையால் உளதாகிய ஆற்றல். சில எடுத்துக்காட்டுகளால் இவற்றினை விளக்குவோம்.

> முரசு முழங்குதானை மூவரும் கூடி
> அரசவை யிருந்த தோற்றம் போலப்
> பாடல் பற்றிய பயனுடை எழாஅல்
> கோடியர் தலைவ கொண்ட தறிக.

என்ற பொருநராற்றுப்படையடிகளில் (வரி 54-57) பெருமை மிக்க தண்டமிழ் வேந்தர்களாகிய சேர, சோழ, பாண்டியர் மூவரும் தமிழிற் பகைமை நீங்கி ஒன்றுகூடி அரசவையில் வீற்றிருந்த தோற்றம் போல நிருத்த கீத வாத்தியம் என்னும் இம்மூன்றும் பிரிவின்றி ஒத்து நிகழும்வண்ணம் கூத்தர் தலைவன் தங்கியிருந்த செய்தி கூறப்பெறுவதால் இவ்வுவமை சிறப்பினை நிலைக்களமாகக்கொண்டு பிறந்ததாகும்.

> 'ஓவத் தன்ன இடனுடை வரைப்பின்'

என்ற புறப்பாட்டடியில் (புறம்-251) சித்திரம் போலும் வனப் பமைந்த இடத்தினையுடைய நகரம் என்று அதன் செயற்கை நலம் தோன்ற உவமை கூறினமையின், இவ்வுவமை நலன் என்பதனை நிலைக்களமாகக்கொண்டு பிறந்தது என்பதை அறிக.

> 'பாவை யன்ன பலராய் மாண்கவின்

என்ற அகப்பாட்டடியில் (அகம்-98) 'பாவையினை யொத்த

---

6. உவம.—நூற். 4 (இளம்.)

பலரும் ஆராயத்தக்க, மாண்பமைந்த என் மகளது வனப்பு' எனத் தாய் தன் மகளிடத்தே கொண்ட பேரன்பு காரணமாகக் கூறியதாகலின் இவ்வுவமையின் நிலைக்களம் காதல் என்பது அறிதற்பாலது. 'கண் போல்வான் ஒருவன் உளன்' என்பதும் அது.

'அரிமான் அன்ன அணங்குடைத் துப்பின்
திருமா வளவன்'

என்ற பட்டினப்பாலை அடிகளில் (வரி 298-99) திருமாவளவனாகிய கரிகாலனிடத்தே அமைந்துள்ள வலிமை காரணமாக அவனுக்குச் சிங்க ஏற்றை உவமை கூறியதாகலின் இவ்வுவமையின் நிலைக்களம் வலி என்பது இனிது புலனாகும்.

இந்த நான்கினைத் தவிர ஆசிரியர் தொல்காப்பியனார்,

'கிழக்கிடு பொருளோ டைந்து மாகும்' [7]

என்ற நூற்பாவால் ஐந்தாவது நிலைக்களம் ஒன்றினையும் கூறுகின்றார். கிழக்கிடு பொருள் என்பது, கீழ்ப்படுக்கப்படும் பொருள்; அஃதாவது இழிவு தோன்ற கூறப்பெறும் பொருள்.

'அரவுநுங்கு மதியின் நுதலொளி கரப்ப'

என்ற அகப்பாட்டடிகளில் (அகம்-313) பிரிவிடை வேறுபட்டு வருந்தும் தலைமகளது நுதலின் ஒளியிழந்த நிலையினைக் கூறுவார், இராகு என்னும் பாம்பினால் விழுங்கப்பட்டு ஒளியிழந்த திங்களை அதற்கு உவமை கூறினமையின், இது கிழக்கிடு பொருள் நிலைக்களமாகப் பிறந்த உவமை என்பதை அறிக.

**சில மரபுகள் :** உவமை கூறுங்கால் முதலும் சினையும் எனக் கூறப்படும் இருவகைப் பொருள்களுக்கும் கருதிய மரபினால் அவ்வவற்றிற்கு ஏற்றவை உவமையாய் வருதற்கு உரியன. அஃதாவது, முதலொடு முதலும், சினையொடு சினையும், முதலொடு சினையும், சினையொடு முதலும் வேண்டியவாற்றான் உவமஞ் செய்தற்கு உரியன; அங்ஙனம் செய்யுங்கால் மரபு பிறழாமற் செய்ய வேண்டும். இதனை,

முதலுஞ் சினையுமென் றாயிரு பொருட்கு
நுதலிய மரபின் உரியவை உரியன [8]

7. உவம.-நூற். 5 (இளம்.) 8. உவம-நூற். 6 (இளம்.)

என்ற விதியினல் கூறுவர் ஆசிரியர். சில எடுத்துக்காட்டுக்கள் இக்கருத்தினைத் தெளிவாக்கும்.

'ஒருகுழை யவன்போல்
இணர்சேர்ந்த மராஅமும்'

என்பதில் (கலி.26) முதற்பொருளுக்கு முதற்பொருள் உவமமாயிற்று.

'தாமரை புரையும் காமர் சேவடி'

என்பதில் (குறுங் கடவுள்) சினைக்குச் சினையே வந்து உவமையானதைக் காண்க.

'அடைமரை யாயிதழ்ப் போதுபோற் கொண்ட
குடைநிழற் றோன்றுநின் செம்மலைக் கண்டு'

என்பதில் (கலி.84) முதற்பொருளுக்குச் சினைப்பொருள் உவமையாயிற்று.

'நெருப்பின் அன்ன சிறுகட் பன்றி'

என்பதில் (அகம்.84) சினைப்பொருளோடு முதற்பொருள் உவமையாக வந்தது. இங்ஙனம் மரபு பிறழாது உவமஞ் செய்யப்படும் என்று கூறுவர் பேராசிரியர்.

**சுட்டிக் கூரு உவமம் :** 'பவளம் போலும் செந்துவர்வாய்' என்பது உவமையும் பொருளும் ஆகிய அவ்விரண்டிற்கும் பொதுவாக அமைந்த செம்மைக் குணத்தினைச் சுட்டிக்கூறி உவமஞ்செய்தமையால் 'சுட்டிக் கூறிய உவமம்' எனப்படும். இங்ஙனம் உவமையுடன் பொருளுக்கு அமைந்த ஒப்புமைக் குணத்தினைச் சுட்டிக் கூருது 'பவளவாய்' என்ருற்போல் வரும் உவமம் **'சுட்டிக் கூரு உவமம்'** எனப்படும். சுட்டிக்கூரு உவமத்தில் அமைந்த உவமத்தினையும் பொருளினையும் இணைத்து நோக்கி, அவ்விரண்டிற்கும் பொதுவாய்ப் பொருந் தியதோர் ஒப்புமைக் குணம் பற்றி வினை பயன் மெய் உரு என்னும் நான்கினுள் இஃது இன்ன உவமையென்று துணியப் படும் என்பர் ஆசிரியர்.

'சுட்டிக் கூரு உவம மாயின்
பொருளெதிர் புணர்த்துப் புணர்ந்தன கொளலே'[9]

என்பது தொல்காப்பிய விதி. 'பவளவாய்' என்று உவமை

9. உவம— நூற். 7 (இளம்.)

கூறிய நிலையில் ‘வல்லென்ற பவளத்திற்கும் மெல்லென்ற உதட்டிற்கும் உள்ள வன்மை மென்மை பற்றி இங்கு உவமை கொள்ளுதல் பொருந்தாது ; அவ்விரண்டினும் அமைந்த செம்மை நிறம் பற்றியே இங்கு உவமஞ் செய்தது’ என இவ்வாறு ஒப்பு நோக்கி அறிந்துகொள்ள வேண்டும் என்பர் பேராசிரியர். மேலும்,

‘மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து’

என்ற குறளின்கண் (குறள்-90) ‘அது போல’ எனச் சுட்டிக் கூறு உவமையாயினவாறு கண்டு கொள்க.

உவமையும் பொருளும் தம்மின் ஒத்துள்ளன என்று உலகத்தார் ஏற்று மகிழும் வகையில் உவமை அமைதல் வேண்டும். ‘மயில் தோகை போலும் கூந்தல்’ என்று சொல்ல வேண்டுமேயன்றி, ‘காக்கைச் சிறகன்ன கருமயிர்’ என்று கூறல் ஆகாது. இனி, உபமேயமாகிய பொருளை உவமை யாக்கி உவமையை உவமிக்கப்படும் பொருளாக்கி மயங்கக் கூறுமிடத்து அஃது உவமம் போல் உயர்ந்ததாக்கி வைக்கப் படும்.

‘வருமுலை யன்ன வண்முகை யுடைந்து
திருமுக மவிழ்ந்த தெய்வத் தாமரை’

என்ற சிறுபாணாற்றுப்படையடிகளில் (வரி 72-3), வருமுலை யும் திருமுகமும் உவமையாகி முகையும் பூவும் பொரு ளாயின. முலையும் முகமும் உயர்ந்தனவாகச் செய்தமையின், அவை உவமமாகுங்காலும் உயர்ந்தனவாயின. மேலும், பெருமையும் சிறுமையும் பற்றி உவமங் கூறுங்கால் உலக வழக்கினைக் கடந்து இன்னுவாகச் செய்யாது சிறப்புடை மையில் நீங்காது கேட்டோர் மனங்கொள்ளும்படி செய்தல் வேண்டும். இவ்வாறு செய்தற்கு வழக்கே அளவுகோலாகும்.

‘அவாம்போ லகன்றதன் அல்குல்மேற் சான்றோர்
உசாஅப்போல உண்டே மருங்குல்.’

என்றதில் அல்குல் பெரிதென்பான் ஆசையோடு உவமித் தலின் இது தக்கதாயிற்று; மருங்குல் நுண்ணிதென்பான் சான்றோர் உசாவோடு (ஆராய்ச்சியுடன்) அதுவும் தக்க

தாயிற்று. முன்னது கழிபெரும் பரப்பிற்றாகவும், பின்னது கழியச் சிறியதாகவும் உவமிக்கப்பட்டன; இரண்டும் சிறப்புப் பற்றியே வந்தன.

**உவம உருபுகள் :** உவமத்தினையும் பொருளினையும் ஒப்புமை காட்டி இயைத்துரைக்குங்கால் அவற்றின் இடையே வரும் சொல்லாகிய உவம உருபுகள் அன்ன, ஏய்ப்ப, உறழ, ஒப்ப, என்ன, மான, ஒன்ற, ஒடுங்க, ஒட்ட, ஆங்க, வென்ற, வியப்ப, எள்ள, விழைய, இறப்ப, நிகர்ப்ப, கள்ள, கடுப்ப, காய்ப்ப, மதிப்ப, தகைய, மருள, மாற்ற, மறுப்ப, புல்ல, பொருவ, பொற்ப, போல, வெல்ல, வீழ, நாட, நளிய, நடுங்க, நந்த, ஓட, புரைய என வரும் முப்பத்தாறும் அவை போல்வன பிறவுமாகிப் பல்வேறு குறிப்பினவாய் வரும் என்பர் ஆசிரியர்.[10]

இதன்கண் 'பிறவும்' என்றதனால், இங்குச் சொல்லப் படாத நோக்க, நேர, அனைய, அற்று, இன், ஏந்து, ஏர், சீர், கெழு, செத்து, ஏர்ப்ப, ஆர, துணைப்ப, மலைய, ஆர, அமர முதலிய பிறவுருபுகளும், ஐந்தாம் வேற்றுமைப் பொருள்பற்றி வருவன வும், எனவென்னெச்சங்கள் பற்றி வருவனவும் ஆகிய உவம வுருபுகள் எல்லாம் தழுவிக்கொள்ளப்பட்டன. 'புலி போன்ற சாத்தன்', 'புலி போலுஞ் சாத்தன்' எனப் பெயரெச்சமாகவும் ; 'புலி போன்று வந்தான்', 'புலி போலப் பாய்ந்தான்' என வினையெச்சமாகவும் ; 'சாத்தன் புலி போலும்', 'சாத்தன் புலி போன்றனன்' என வினைமுற்றாகவும் ; அன்ன, இன்ன என இடைச்சொல்லாகவும் 'தேன் போல இனிய மொழி' என விரிந்தும் ; 'தேன் போலும் மொழி' என உவமை விரிந்து ஒப்புமை குறித்துத் தொக்கும் ; 'தே மொழி' என எல்லாம் தொக்கும் பல்வேறு வடிவங்களில் உவம உருபுகள் பயின்று வரும் என்பது அறியத்தக்கது.

மேலும், இவ்வுருபுகள் வினை, பயன், மெய், உரு என்ற நான்கு பகுதிகளிலும் வழங்குமிடத்து, இன்னவின்ன உருபுகள் இன்னவின்ன உவமைகட்கே உரியன என்றும், உவமயியல் 12 முதல் 16 முடியவுள்ள ஐந்து நூற்பாக்களில் வரை

10. உவம.—நூற். 11 (இளம்.)

யறுத்து எடுத்தோதுகின்றார் ஆசிரியர். இவ்வாறு ஒவ்வோர் உவமப்பகுதிக்கு உரிமைப்படுத்தும் உருபுகளை நியமித்தலின் பிற்காலத்துப் போல எல்லா உருபுகளும் எல்லா உவமைகட்கும் ஆசிரியர் நாளில் வழங்கின அல்ல என்பதும் அங்ஙனம் வழங்காது உரிமைப்பட்டத்து ஒவ்வொரு காரணம் பற்றியே என்பதும் நன்கு அறியப்படும். இதனால்தான்,

‘தத்தம் மரபில் தோன்றுமன் பொருளே’11

என்று அவ்வுருபுகளின் மரபு வழுவா நிலையையும் ஆசிரியர் வற்புறுத்துவாராயினர். ஈண்டுப் பேராசிரியரும், “மறுப்ப ஒப்ப என்பன முதலாயின ஒரு காரணமுடையவென்பது ஆசிரியன் பெருமரபினவாக உரிமைப்படுத்துக் கூறினமையின் அறிந்தாம். அல்லதூஉம், ‘மரபில் தோன்றும்’ என்றதனான், இவையெல்லாம் மரபு பற்றியே அறியல் வேண்டும். எனவே, தலைச்சங்கத்தார் முதலாயினார் செய்யுட்களுள் அவ்வாறு பயின்று வருமென்பது அறிந்தாமன்றே. இவ்வாறு சூத்திரஞ் செய்தலான் என்பது” என்று எழுதுவர்.[12] இங்ஙனம் மரபு பற்றி வரும் உருபுகளாகத் தொல்காப்பியர் கூறியவற்றுள் ‘நளிய, நந்த’ என்ற இரண்டும் பண்டே வழக்கு வீழ்ந்தன என்பது, “அவ்விரண்டும் இக்காலத்து அரிய போலும்; அவை வந்தவழிக் கண்டு கொள்க” என்று பேராசிரியர் குறித்தலால் அறியலாகும்.[13] இவ்வுவம உருபு வரையறையிலக்கணத்தைத் தொல்காப்பியத்தின் பழமையை உணர்த்தும் சான்றுகளுள் ஒன்றாகச் சிலர் கொள்வர்.[14]

**உவமைகளின் வகை:** மேற்சொல்லப்பெற்ற உவமை வினை, பயன், மெய், உரு என்னும் நான்கு வகையாதலேயன்றி எட்டாக வரும் பகுதியும் உண்டு என்பதை,

‘நாலிரண் டாகும் பாலுமா ருண்டே’15

என்ற நூற்பாவால் புலப்படுத்துவர் ஆசிரியர். “அவை

11. உவம நூற். 17 (இளம்.)
12. உவம - நூற். 17 (பேராசிரியர் உரை.)
13. ஷெ - நூற். 16-இன் உரை.
14. வேங்கடராஜுலு ரெட்டியார், வே - பரணர் பக். (171—173).
15. உவம - நூற் 18 (இளம்.)

யாவன : வினையுவமம், வினையும் வினைக்குறிப்புமென இரு வகையாம். பயன் என்பது, நன்மை பயத்தலும் தீமை பயத்தலும் என இருவகையாம். மெய் என்பது, வடிவும் அளவும் என இருவகையாம். உரு என்பது, நிறமும் குணமும் என இருவகையாம். இவ்வகையினால் எட்டாயின" என்பர் இளம்பூரணர். இனி, மேற்கூறிய நால்வகை யுவமமும் உவமத்தொகை நான்கும் உவம விரி நான்குமாக வருதலால் எட்டாதலுடைய எனவும், முன்னர் வினை முதலிய நான்கு உவமைகளுக்கும் எவ்வெட்டுருபுகளாகத்[16] தொகுத்துரைக்கப்பட்ட ஒவ்வொரு தொகுதியும் இரண்டு கூறாகி நாலிரண்டு எட்டுப் பகுதிகளாக வரும் எனப் பகுத்துரைத்தலும் பொருந்தும் எனவும் கொள்வர் பேராசிரியர்.

பெருமை பற்றியும் சிறுமை பற்றியும் ஒப்புமை கொள்ளப்படும் உவமைகள் நகை முதல் உவகை ஈறுகச் சொல்லப்பட்ட எண் வகை மெய்ப்பாடுகளின் வழியே புலப்படத் தோன்றும் என்பர் அறிஞர்.[17] எனவே, எண்வகை மெய்ப்பாடும் பற்றி உவமை எட்டெனப்படும் என்பதாயிற்று. எடுத்துக்காட்டாக,

'அவாப்போல் அகன்றதன் அல்குல்மேற் சான்றேர்
உசாஅப்போல உண்டே மருங்குல்'

என்பது பெருமையும் சிறுமையும் பற்றி **உவகை** நிகழ்ந்தது.

'பெருஞ்செல்வர் இல்லத்து நல்கூர்ந்தார் போல
வரும்செல்லும் பேரும்என் நெஞ்சு.'

என்று முத்தொள்ளாயிர அடிகளில் பெருக்கம் பற்றி **இழிவரல்** வந்தது. பிறவும் இவ்வாறே கொள்ளப்படும்.

**மேலும் சில மரபுகள் :** உவமை எனப்பட்ட பொருளால் உபமேயமாகிய பொருளுக்கு ஒத்தனவெல்லாம் அறிந்து துணியும்பொருட்பகுதியும் உள்ளன ; பலவாகி வரும் அப்பொருட் பகுதிகளின் இலக்கண வகையைக் கருவியாகக் கொண்டு அவை நன்கு துணியப்படும்.[18] இவ்வாறு உவமை

16. உவம.—நூற். 12, 14, 15, 16. (இளம்.)
17. ௸ - நூற். 19. (இளம்.)
18. உவம - நூற். 20 (இளம்.)

யாகிய பொருளைக்கொண்டு உவமேயமாகிய பொருளுக்கு பொருந்தியன இவையென ஆராய்ந்துணருமிடத்து நெடுங் காலமாக அடிபட்டு வழங்கிய உலக வழக்கினையொட்டியே அவை அறியப்படுவன என்பர் ஆசிரியர்.[19]

இன்னொரு மரபும் ஈண்டு அறிதற்பாலது. அஃதாவது, அடையும் அடையடுத்த பொருளும் என இவ்வாறு இரண்டாய் நிறுத்தப்படும் உவமையின் வழியே உவமித்துரைக்கப்படும் என்பர் ஆசிரியர். அது,

இரட்டைக் கிளவியும் இரட்டை வழித்தே.[20]

என்ற நூற்பாவால் அறியப்படும்.

'பொன்காண் கட்டளை கடுப்பக் கண்பின்
புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பின்'

என்ற பெரும்பாணாற்றுப்படையடிகளில் (வரி - 220 - 1) சண்பங்கோரையின் பூந்துகள் படிந்த செஞ்சுவட்டினையும் அச்சுவட்டினைப் பொருந்திய உழவர் சிறார து கரிய மார்பினை யும் இணைத்து ஒன்றாக உவமிக்கக் கருதிய புலவர் அவ் விரண்டினையும் முறையே பொன்னின் உரையோடும் அதனைப் பொருந்திய உரைகல்லோடும் இணைத்து உவமை கூறியுள் ளார். இதனால் இதில் இரட்டைக்கிளவியாகிய உவமேயம் இரட்டைக்கிளவியாகிய உவமானத்தின் பின் வந்துள்ளமை அறியப்படும்.

**உவமையின் சிறப்பு:** அணிகளுள் தலைசிறந்தது உவமை யாகும். காவியங்களுக்கு அழகைக் கொடுப்பது இதுவே. மேனாட்டு இலக்கியங்களில் 'பெருங்காப்பிய உவமை' (Epic simile) என்று ஒருவகை உவமை உண்டு. இத்தகைய காப்பிய உவமைகளில், உவமிக்கப்பெறும் பொருள்களுடன் வேறு சில பல செய்திகளும் கூறப்படும். இவற்றையொத்த அணிகள் கம்பராமாயணத்திலும்

19. ௸ - நூற். 21 (இளம்.)
20. உவம. - நூற். 22 (இளம்.)

காணலாம்.[21] உவமையிலிருந்தே ஏனைய அணிகள் பிறந்தன என்பது சில அறிஞர்களின் கொள்கை. அப்பைய தீட்சிதர் 'சித்திர மீமாம்ஸை' என்னும் தன்னுடைய நூலில்,

'உவமை யென்னுந் தவலருங் கூத்தி
பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து
காப்பிய அரங்கிற் கவினுறத் தோன்றி
யாப்பறி புலவ ரிதயம்
நீப்பறு மகிழ்ச்சி பூப்ப நடிக்குமே.[22]

என்று கூறியதனால் இதனை யறியலாம்.

ஆசிரியர் தொல்காப்பியனார் பொருட்புலப்பாட்டினைச் செய்யும் கருவி என்ற முறையிலேயே உவமையின் பகுதிகளை உவமஇயலில் விரித்துக் கூறினர். பிற்காலத்தில் வந்த தண்டியாசிரியர் முதலியோர் உவமையாகிய இதனைச் செய்யுட்கு அலங்காரமாகக்கொண்டு தாம் இயற்றிய அணி யிலக்கண நூலில் இதனையும் ஓரலங்காரமாக்கி இலக்கணம் கூறியுள்ளனர். 'தாமரை போலும் முகம்' என வரும் உவமத் தொடர் 'முகம் போலும் தாமரை' என மாறி, இடை நின்ற உவம உருபு தொக்கு 'முகத்தாமரை' என வரின் அஃது உருவகம் என வேறோர் அணியாய்விடும் என்பது அன்னோர்

21. அவற்றுள் சிலவற்றை இப்பாடலில் காண்க:

'பொடியுடைக் கானமெங்கும் குருதிநீர் பொங்க வீழ்ந்த
தடியுடை எயிற்றுப் பேழ்வாய்த் தாடகை தலைகள் தோறும்
முடியுடை அரக்கற் கந்நாள் முந்தியுற் பாத மாகப்
படியிடை யற்று வீழ்ந்த வெற்றியம் பதாகை யொத்தாள்.'

—தாடகை வதைப்.73.

'இன்னல்செய் இராவணன் இழைத்த தீமைபோல்
துன்னருங் கொடுமனக் கூனி தோன்றினாள்.'

—மந்தரை சூழ்.39.

'கொலைது மித்துயர் கொடுங்கதிர் வாளினக் கொடியாள்
முலைது மித்துயர் மூக்கினை நீக்கிய முறைமை
மலைது மித்தென இராவணன் மணியுடை மகுடத்
தலைது மித்தற்கு நாட்கோண்ட தொத்ததோர் தன்மை'

—சூர்ப்பணகைப்-96.

22. செந்தமிழ்—தொகுதி 7 : பக்கம் 144.

துணிபாகும்.[23] இவ்வாறே தன்மை, வேற்றுமை, வேற்றுப் பொருள் வைப்பு, ஒட்டு முதலிய அணிகள் பலவும் தொல் காப்பியனார் கூறிய உவமப்பகுதிகளை அடிப்படையாகக் கொண்டு வகுக்கப்பெற்றன என்பது நுண்ணுணர்வினாற் கூர்ந்து நோக்கினால் இனிது புலனாகும்.

கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த தண்டியாசிரியர் வடமொழியில் இயற்றிய 'காவியா தரிசம்' என்னும் அலங்கார நூலிலும், அதன் தமிழ் மொழிபெயர்ப்பாகிய 'தண்டியலங் காரம்', 'மாறனலங்காரம்' முதலிய பிற்கால நூல்களிலும் வகுத்துரைக்கப்பெறும் அணிவிகற்பங்கள் ஆசிரியர் தொல் காப்பியனார் காலத்தில் வெவ்வேறு அணிகளாக வழங்கவில்லை என்பதும், தொல்காப்பியனார் கூறும் உவமப்பகுதிகளைச் செய்யுளிற் பிரிப்பின்றி ஒன்றாகிய பொருளுறுப்பெனக் கொள்வதன்றிச் செய்யுளுக்கு வேறாகி நின்று அதற்கு அழகு செய்யும் வேறோர் அலங்காரமாகக் கூறுதல் பொருந் தாது என்பதும் பேராசிரியர் போன்ற உரையாசிரியர்களின் துணிபாகும். "இவ்வோத்தினிற் கூறுகின்ற உவமங்களுட் சிலவற்றையும் சொல்லதிகாரத்தினுள்ளுஞ் செய்யுளிய லுள்ளுங் கூறுகின்ற சில பொருள்களையும் வாங்கிக்கொண்டு, மற்றவை செய்யுட்கண்ணே அணியாம் என இக்காலத்தார் நூல் செய்தாருமுளர். அவை ஒருதலையாகச் செய்யுட்கு அணி யென்று இலக்கணங் கூறப்படா; என்னை? தாம் காட்டிய இலக்கணத்திற் சிதையாவழியும் வல்லார் செய்யின் அணி யாகியும் அல்லார் செய்யின் அணியன்றாகியும் வரும். ......அல்லதூஉம், பொருளதிகாரத்துட் பொருட்பகுதிக ளெல்லாஞ் செய்யுட்கு அணியாகலான்,............அவை யெல்லாம் தொகுத்து அணியெனக் கூறாது வேறு சிலவற்றை வரைந்து அணியெனக் கூறுதல் பயமில் கூற்றாம்.......இனி, அவற்றைப் பொருளுறுப்பு என்பதல்லது அணியென்ப வாயின், சாத்தனையும் சாத்தனாலணியப்பட்ட முடியும் தொடியும் முதலாயவற்றையும் வேறு கண்டாற்போல,

23. உருவகத்தை ஆங்கிலத் திறனாய்வாளர் 'உறைந்த உவமை' (condensed simile) என்று கூறுவர்.

அவ்வணியுஞ் செய்யுட்கு வேருதல் வேண்டும். இனி, செய்யுட்கு அணி செய்யும் பொருட்படை எல்லாம் கூருது சிலவே கூறியொழியின் அது குன்றக் கூறலாம்'' என்ற பேராசிரியரின் உரைப்பகுதியால் இதனை நன்கு அறியலாம்.[24] மேலும, இதிலிருந்து தொல்காப்பியனுர் கூறிய உவமப் பகுதிகளின் நுட்பமும், அந்நுட்பம் இனிது விளங்காத பிற் காலத்தில் வேறு காரணம் உணரப்பெருது இடர்ப்பட்டுச் செய்தனவாகிய அணியிலக்கணங்களின் அமைதியும் நன்கு புலனுதல் காண்க.

24. உவமையியல் - நூற் 37 பேராசிரியர் உரை.

# 26. செய்யுளின் உறுப்புக்கள்—(1)

பண்டைக் காலத்துத் தமிழறிஞர்கள் தாம் அறிந்த கருத்துக்களைச் செய்யுட்களிலேயே பொதிந்து வைத்தனர். இதனை நன்கு அறிந்த தொல்காப்பியர் செய்யுட்குரிய இலக்கணத்தைத் தமது நூலில் தொகுத்துரைக்கின்றார். இதனை "யாப்பதிகாரம்" என வேறோர் அதிகாரமாக்கிக் கூறுவாரும் உளர்.[1] இக்கருத்து பல அறிஞர்கட்கும் ஒப்ப முடிந்ததொன்று அன்று. அங்ஙனம் கூறின் தொல்காப் பியத்திலுள்ள 'மரபியலை' 'வழக்கதிகாரம்' என்று வேறொன்று கூற வேண்டுமாதல் நேரிடும். அன்றியும், எழுத்தும் சொல்லும் பொருளும் என மூன்றற்கும் மூன்றதிகாரமாக்கி, அதிகாரம் ஒன்றுக்கு ஒன்பது இயல்களாக ஆசிரியர் நூல் செய்த முறையோடு இது மாறுகொள்ளும் என்று கூறி அக் கருத்தினைப் பொருந்தாது என்று மறுத்திடுவர் பேராசிரியர்.[2]

**செய்யுளின் உறுப்புக்கள் :** தொல்காப்பியர் செய்யுட்கு உரிய உறுப்புக்களாக முப்பத்து நான்கினைக் குறிப்பிடு கின்றார். அவை : மாத்திரை, எழுத்தியல் வகை, அசை வகை, சீர், அடி, யாப்பு, மரபு, தூக்கு, தொடைவகை, நோக்கு, பா, அளவியல், திணை, கைகோள், பொருள்வகை, கூற்று வகை, கேட்போர், களன், காலவகை, பயன், மெய்ப் பாடு, எச்ச வகை, முன்னம், பொருள், துறைவகை, மாட்டு

---

1. "எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமும் யாப்பதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொணர்ந்து, 'பொருளதிகாரம் வல்லாரை எங்கும் தலைப்பட்டிலேம்' என்று வந்தார்"—இறையனார் களவியல்- பாயிர உரைப்பகுதி

2. செய்யு.நூற்பா 1- இன் உரை.

என்னும் யாப்பிலக்கணப் பகுதியாகிய இருபத்தாறும், அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என்று தொடர்நிலைச் செய்யுட்கு (காப்பியம்) உரியனவாகக் கூறப்பெறும் எட்டும் எனக் கூறுவர் தொல்காப்பியர். இவை தொல்காப்பியருக்கு முன்பிருந்த தொல்லாசிரியர்கள் வகுத்தவை.

மாத்திரை எழுத்தியல் அசைவகை எனாஅ
யாத்த சீரே அடியாப் பெனாஅ
மரபே தூக்கே தொடைவகை எனாஅ
நோக்கே பாவே அளவியல் எனாஅ
திணையே கைகோள் பொருள்வகை எனாஅ
கேட்போர் களனே காலவகை எனாஅ
பயனே மெய்ப்பா டெச்சவகை எனாஅ
முன்னம் பொருளே துறைவகை எனாஅ
மாட்டே வண்ணமோ டியாப்பியல் வகையின்
ஆறு தலையிட்ட அந்நா லைந்தும்
அம்மை அழகு தொன்மை தோலே
விருந்தே இயைபே புலனே இழைபெனாஅப்
பொருந்தக் கூறிய எட்டொடுந் தொகைஇ
நல்லிசைப் புலவர் 'செய்யு ளுறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே[3]

என்றும் நூற்பா மேற்கூறிய முப்பத்து நான்கினையும் தொகுத்துணர்த்துகின்றது.

**'தளை' கூறப்படாததன் காரணம்:** இந்த நூற்பாவில் **தளை** என்பது தனி உறுப்பாகக் குறிக்கப்பெறவில்லை. சீரொடு சீர் புணரச் சேர்த்தியற்றும் அடியில் நின்ற சீரின் ஈற்றசை யுடன் வருஞ்சீரின் முதலசை ஒன்றியும் ஒன்றாமலும் வர இரு சீர்கள் இசைத் தொடர்ச்சியுறத் தம்முள் தளைத்து (கட்டப்பட்டு) நிற்றலே தளை என்பது. சீரது தொழிலாகிய இத்தளையைச் செய்யுளுக்குரிய தனியுறுப்பாகக் கொள்ளாது சீராலாகிய அடியின் அமைப்பாகவே கொண்டு இலக்கணம் கூறுவர் தொல்காப்பியர். இவ்வாறன்றிச் சிறுகாக்கை பாடினியார் முதலிய பிற்கால யாப்பிலக்கண நூலாசிரியர்கள் தளை என்பதனைத் தனியுறுப்பாகவே கொண்டனர். இருசீர்

3. செய்யு.-நூற்பா 1 (இளம்.)

இணைந்தது குறளடிபாம் என்பது, ஆசிரியர் தொல்காப்பிய னார்க்கும் பிற்கால யாப்பிலக்கண ஆசிரியர்க்கும் ஒப்ப முடிந்த தாகும். இனி, சீரிரண்டு தளைத்து நிற்றல் தளையென்னுந் தனியுறுப்பாமெனக் கொள்ளின் இவ்விரு சீர் இணைப்பைக் குறளடியென வேறோர் உறுப்பாகக் கூறுதல் பொருந்தாது. அன்றியும், தளை பல அடுத்து நடப்பதே அடியெனக் கொள் வார்க்கு அத்தளையால் அடிவகுப்பதன்றிச் சீரால் அடிவகுத் தல் குற்றமாய் முடியும். எனவே, சீரது தொழிலாகிய தளை யென்பதனைத் தனி வேறு உறுப்பாகக் கொள்ளுதல் கூடா தென்பது பேராசிரியர் போன்றவர்களின் துணிபாகும்.[4]

இனி, செய்யுளுக்குரிய முப்பத்து நான்கு உறுப்புக் களையும் பற்றிய செய்திகளைச் சுருக்கமாகக் காண்போம்.

**1. மாத்திரை :** மாத்திரை என்பது எழுத்திற்குச் சொல்லிய மாத்திரைகளைச் செய்யுள் பொருந்தியமைங்கு அளவு. அவை : குற்றெழுத்து ஒரு மாத்திரை ; நெட்டெழுத்து இரண்டு மாத்திரை ; உயிரளபெடை மூன்று மாத்திரை ; குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தமும் மெய்யும் ஓரோ வொன்று அரை மாத்திரை ; ஒற்றளபெடை ஒரு மாத்திரை ; ஐகாரக் குறுக்கம் ஒருமாத்திரை ; மகரக்குறுக்கம் கால் மாத்திரை : ஏறிய உயிரினளவே உயிர்மெய்க்கு அளவு மாத்திரை என்பது கைநொடி, அல்லது கண்ணிமைக்கும் கால அளவு. மாத்திரையினது அளவு மாத்திரை எனப்பட்டது.

**2. எழுத்தியல் :** எழுத்துக்களைச் செய்யுளுக்கியைய இயற்றிக்கொள்ளும் கூறுபாடு. அஃதாவது, எழுத் ததிகாரத்தில் முப்பத்து மூன்று எழுத்துக்களையும் உயிர், குறில், நெடில், மெய், வலி, மெலி, இடை, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என இயல்பு வகையால் பத்தும் ; உயிர்மெய், உயிரளபெடை எனக் கூட்ட வகையால் இரண்டும் ; ஐகாரக் குறுக்கம், ஔகாரக் குறுக்கம் எனப் போலி வகையால் இரண்டும் ; யாழ் நூலாகிய இசை நூல் முறையான் வரும் ஒற்றிசை நீளுதல் ஒன்றும் ஆகப் பதினைந்து பெயரவாய்ப் பகுத்துரைத்த வகையாம். இவற்

4. செய்யு.-நூற்.1 (பேராசிரியர் உரை)

ரேடு மகரக் குறுக்கமும் கூட்டிப் பதினைறெழுத்தெனக் கொள்ளுதலும் உண்டு.

இந்த இரண்டும் எழுத்ததிகாரத்தில் கூறிய இலக்கணத் தில் பிறழாமல் செய்யுளுக்கு உறுப்பாய் வரும் என்பர் தொல்காப்பியர்

**3. அசை வகை :** அசை வகை என்பது, எழுத்தாலாகிய அசைகளின் கூறுபாடு. இஃது இயலசை, உரியசை என இரண்டாகப் பகுத்து ஓதப்பெறும். இவற்றின் கூறுபாடுகள் செய்யுளியல் 3 முதல் 10 முடியவுள்ள நூற்பாக்களால் விரித் தோதப் பெறுகின்றன.

குறிலும் நெடிலும் தனித்து வரினும் ஒற்றடுத்து வரினும் அது நேரசையெனப்படும்.

**எ - டு.** **போ** – நெடிலாகிய நேரசை
**ழி** - குறிலாகிய நேரசை
**வேந்** - நெடிலொற்றடுத்தாய நேரசை
**தன்** - குறிலொற்றடுத்தாய நேரசை

என நேரசை நான்கு வந்தவாறு காண்க.

போது சாந்தம் பொற்ப வேந்தி
ஆதி நாதற் சேர்வோர்
சோதி வானந் துன்னு வாரே.

என்ற ஆசிரியப்பாவில் இந்த நால்வகை அசைகளையும் பல முறை நோக்கிப் பயின்றுணர்க.

குறிலிணையும் குறில் நெடிலும் தனித்து வரினும் ஒற் றடுத்து வரினும் நிரையசை எனப்படும்.

**எ - டு.** **வெறி** - குறிலிணையாலாய நிரையசை
**சுறா** - குறில் நெடிலாலாய நிரையசை
**நிறம்** - குறிலிணை ஒற்றடுத்தாய நிரையசை
**குரால்** - குறில் நெடில் ஒற்றடுத்தாய நிரையசை

என நிரையசை நான்கு வந்தவாறு காண்க.

அணிநிழ லசோகமர்ந் தருனெறி நடாத்திய
மணிதிக ழவிரொளி வரதனைப்
பணிபவர் பவநனி பரிசறுப் பவரே.

என்ற ஆசிரியப்பாவில் இந்நால்வகை நிரையசைகளையும் பல

முறை நோக்கிப் பயின்றுணர்க. இதில் ஈற்றசை மட்டிலும் நேரசையாக வந்துள்ளது அறிதற்பாலது.

'இரண்டெழுத்தானுகாது ஒரெழுத்தானுதலின் நேரிய அசை நேரசையென்ருயிற்று. இரண்டெழுத்து நிரைதலின் இணையசையென்னும் பொருள்பட நிரையசையென்ருயிற்று' என நேர், நிரை என்பவற்றின் பெயர்க்காரணம் கூறுவர நச்சினர்க்கினியர். இவ்வசைகளுக்கு உறுப்பாய் நின்ற குறிலும் நெடிலும், மாத்திரையாகிய ஓசையளவினல் தம்முள் ஒவ்வாவாயினும், எழுத்தாந் தன்மையில் ஒன்றெனவே கொண்டு எண்ணப்படும் தகுதி நோக்கி அவையிரண்டும் ஒவ்வோரலகு பெறும் என விதிக்கப்பெற்றன.

மேலும், சீராகிச் சேர்ந்து நிற்பினும் தனி நின்று பொருள் பயக்கும் ஆற்றலுடைய அசையைச் சிறப்புடையசை என்றும், பொருள் பயக்கும் ஆற்றலில்லாத அசையைச் சிறப்பிலசை என்றும் கூறுவர் ஒருசார் ஆசிரியர். மேற்காட்டிய பாடலில் 'அணிநிழல்' என்னும் சீரில் நின்ற அசைகள் இரண்டும் சிறப்புடையசைகள்; அவை 'அணி' என்றும், 'நிழல்' என்றும் தனி நின்று பொருள் பயக்கின்றன. 'நடாத்திய' என்னும் சீரில் நின்ற அசைகள் இரண்டும் சிறப்பிலசைகள்; அவை 'நடாத்' என்றும், 'திய' என்றும் அசையாகிப் பிரிவுழிப் பொருள் பயவாதிருத்தலை அறிக.

மேற்கூறப்பெற்ற நேர், நிரை என்னும் இரண்டசைகளும் குற்றியலுகரம் முற்றியலுகரம் என்பவற்றுள் ஒன்றை இறுதியிற் பெற்றுப் பிளவு படாது ஒருசொல் தன்மை எய்தி வரின், அவை முறையே நேர்பு, நிரைபு என்னும் இருவகை அசைகளாகும்.

> இருவகை உகரமோ டியைந்தவை வரினே
> நேர்பு நிரைபும் ஆகும் என்ப
> குறிலிணை உகரம் அல்வழி யான.[5]

என்ற நூற்பா இதனை உணர்த்தும். தனிக் குற்றெழுத்தாகிய நேரசையின் பின் இங்ஙனம் இருவகை யுகரமும் வந்து நேர்பசையாதல் இல்லை என்பதை அறிதல் வேண்டும்.

---

5. செய்யுள். - 4 (இளம்.)

எ-டு. **வண்டு, நாகு, காம்பு**—இவற்றில் நேரசையின் பின் குற்றியலுகரம் வந்து நேர்பசையாயிற்று.

**மின்னு, நாணு, தீர்வு**—என்றவற்றில் நேரசையின் பின் முற்றியலுகரம் வந்து நேர்பசையாயிற்று.

**வரகு, குரங்கு, மலாடு, பனுட்டு**—இவற்றில் நிரையசையின் பின் குற்றியலுகரம் வந்து நிரைபசையாயிற்று.

**இரவு, புணர்பு, உலாவு**—என்றவற்றில் நிரையசையின் பின் முற்றியலுகரம் வந்து நிரைபசையாயிற்று.

நேரின்பின் உகரம் வருதலின் நேர்பு; நிரையின் பின் உகரம் வருதலின் நிரைபு என இவையிரண்டும் காரணப் பெயராயின.

மேற்கூறிய நால்வகை அசைகளுள் நேர், நிரை என்னும் இரண்டும் **இயலசை** எனவும், நேர்பு, நிரைபு என்னும் ஏனைய இரண்டும் **உரியசை** எனவும் பெயர் பெறும் என்று கூறுவர் ஆசிரியர்.

> இயலசை முதலிரண் டேனவை உரியசை.[6]

என்ற நூற்பா இதனை உணர்த்தும். நேர், நிரை என்பன செயற்கை வகையால் இயற்றிச் சேர்க்கப்படாது இயற்கை வகையால் நின்றாங்கு நிற்ப வரும் அசைகளாதலின் அவ்விரண்டும் **இயலசை** எனப்பட்டன. இயலசையாகிய இவை செய்யும் தொழில் செய்தற்கு உரிய வகையில் அமைந்தவை நேர்பும் நிரைபும் ஆதலின் அவ்விரண்டும் **உரியசை** எனப் பட்டன. எனவே, ஆட்சியுங் குணனுங் காரணமாகப் பெயரெய்துவித்ததாயிற்று.

அசையையும் சீரையும் ஓசையொடு சேர்த்து வேறு படுத்து உணர்த்துதல் செய்யுளிலக்கணத் துறைபோயினாரது நெறியாகும் என்பர் ஆசிரியர்.

> அசையுஞ் சீரும் இசையொடு சேர்த்தி
> வகுத்தனர் உணர்த்தல் வல்லோ ராறே.[7]

---

6. செய்யு-நூற். 6 (இளம்.) 7. செய்யு-நூற். 10 (இளம்.)

என்ற நூற்பாவினுல் இதனையறியலாம். எனவே, பொருளுக் கேற்பச் சொற்களைப் பிரித்தவழித் தளையும் சீரும் சிதையுமாயின் அவ்விடத்து ஓசையை நோக்கி அதன்படி சேர்த்தல் வேண்டும் என்பது கருத்து.

**எ - டு. மலர்மிசை யேகினுன் மாணடி சேர்ந்தார்**
**நிலமிசை நீடுவாழ் வார்.**

என்ற குறட்பாவில் (குறள்-3) 'வாழ்வார்' என்பதனைப் பொருள் நோக்கி ஒரு சீராக்கின் ஓசை கெடும். அதன்கண் 'வாழ்' என்பதனைப் பிரித்து முதல் நின்ற சீரோடொட்ட ஓசை கெடாதாம். இங்ஙனம் பொருள் நோக்காது ஓசையே நோக்கிச் சீர்வகுக்கும் முறையினைப் பிற்கால யாப்பிலக்கண நூலாசிரியர்கள் **'வகையுளி'** என வழங்குவர். வகையுளி— பிரிவுள்ளது. வகை - கூறுபாடு அடியின்கண் அசையொடு சீர்களை இலயம்படுமாறு இசையறுத்துக் கூறுங்கால் மொழி சிதைந்து பிரிந்திசைப்பது வகையுளியாகும்.

**4. சீர் :** அசைகள் இரண்டானும் சேர்ந்து ஓரோர் சொல் இலயம்பட இசைத்து நிற்பது சீர் எனப்படும். இல யம் - முடிவு, ஒத்து முடிதல். சீர் - தாளம், தாளவறுதி. பேராசிரியர், "உலகத்துச் சொல்லெல்லாம் ஈரசையானும் மூவசையானுமன்றி வாரா" என்று கூறி நாட்டுவர்.[8]

"தாமரை புரையுங் காமர் சேவடி"

என்ற குறுந்தொகையடியில் ஈரசையினுற் சீராகி நான்கு சொல்லாகி ஓசையற்று நின்றவாறும்,

"எந்நன்றி கொன்ருர்க்கு முய்வுண்டா முய்வில்லை"

என்ற திருக்குறளடியில் மூவசையினுற் சீராகி அவ்வளவினுல் ஓசையற்று நின்றவாறும் காணலாம்.

இவண் கூறப்பெற்ற அசைகளில் இயலசை மயங்கி வந்தன **இயற்சீர்** என்றும், உரியசை மயங்கி வந்தன **ஆசிரிய வுரிச்சீர்** என்றும் வழங்கப்பெறும் என்று கூறுவர் தொல் காப்பியர்.[9] மயங்குதலாவது, ஒருங்கு வருதல். ஓரசைச்

---

8. செய்யு-நூற். 12-இன் உரை (பேரா).
9. செய்யு-நூற். 12 (இளம்).

சீர் நான்கு, ஈரசைச்சீர் பதினாறு, மூவசைச்சீர் அறுபத்து நான்கு, ஆகச் சீர் எண்பத்து நான்கில் அசைச்சீர் நான்கெனவும், அது தனி வழங்கும் வழி இயற்சீர் ஒக்குமெனவும்; ஈரசைச்சீர் பதினாறிலும் சிறப்புடைய இயற்சீர் நான்கும் சிறப்பிலியற்சீர் ஆறும் எனப் பத்தாமெனவும்; ஆசிரியவுரிச் சீர் ஆறு எனவும்; மூவசைச்சீர் அறுபத்துநான்கில் வெண்பாவுரிச்சீர் நான்கெனவும்; ஏனைய அறுபதும் வஞ்சியுரிச்சீர் எனவும் செய்யுளியல் 11 முதல் 30 முடியவுள்ள நூற்பாக்களில் ஓதுவர் ஆசிரியர். இவற்றின் செய்திகளை ஈண்டு விரிக்கிற் பெருகும்.

**5. அடி:** சீர் இரண்டும் பலவும் தொடர்ந்து ஆவதோர் உறுப்பு அடியெனப்படும் அடியென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது நாற்சீரடியே என்பது ஆசிரியர் கொள்கை.

"நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே,"[10]

என்ற நூற்பாவால் இதனை அறியலாம். இருசீராலும் முச்சீராலும் ஐஞ்சீராலும் அறுசீர் முதலியவற்றாலும் இயன்று வரும் அடிகள் பலவுளவாயினும் அவை அத்துணைச் சிறப்பில என்பது ஆசிரியரின் கருத்து. அந்நாற்சீரடி இரண்டும் பலவும் தொடர்ந்து வருவதே பாட்டாகும் என்பது ஆசிரியரின் கொள்கை.

'அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே' 11

என்ற ஆசிரியரின் விதியால் இதனை அறியலாம். இதனால் பண்டைச் செய்யுட்கள் வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி என்ற யாப்பில் இம்முறைப்படியே அமைந்திருந்தன என்பது உணரப்பெறும். பேராசிரியரும், "தலை யிடை கடைச்சங்கத்தாரும் பிற சான்றோரும், நாற்சீரடியான் வரும் ஆசிரியமும் வெண்பாவும் கலியுமே பெரும்பான்மையும் செய்தார்; வஞ்சிப்பா சிறு வரவிற்றாமெனக் கொள்க"[12] என்று கூறிப் போதல் நோக்கத்தக்கது.

நாற்சீரடியுள் நான்கெழுத்து முதல் ஆறெழுத்து ஈறாக வரும் மூன்றும் குறளடியாகும். ஏழெழுத்து முதல் ஒன்ப

10. செய்யு.-நூற். 31 (இளம்.) 11. செய்யு.-நூற். 34 (இளம்.)
12. செய்யு.-35-இன் உரை (பேரா).

தெழுத்தளவும் வரும் மூன்றடியும் சிந்தடி எனவும், பத்தெழுத்து முதல் பதினுன்கெழுத்தளவும் வரும் ஐந்தடியும் நேரடியென்றும் (இதனை அளவடி என வழங்குவர் உரையாசிரியர்), பதினைந்து முதல் பதினேழெழுத்தளவும் அமையும் மூன்றடியும் நெடிலடி என்றும், பதினெட்டெழுதது முதல் இருபது எழுத்தளவும் உயரும் மூன்றடியும் கழிநெடிலடி என்றும் அடிகளை எழுத்தளவிறைற் பெயர் கூறி வழங்குவர் ஆசிரியர்.[13] "இப்பெயரெல்லாங் காரணப்பெயர். மக்களுள் தீரக்குறியானைக் குறளனென்றும், அவனினெடியானைச் சிந்தனென்றும், ஒப்பமைந்தானை அளவிற்பட்டானென்றம், அவனினெடியானை நெடியானென்றும், அவனினெடியானைக் கழிய நெடியானென்றுஞ் சொல்லுப. அவை போல் கொள்க இப்பெயர் என்பது" என்ற பேராசிரியரின் விளக்கமும் ஈண்டுக் காண்க.[14]

மேற்கூறப்பெற்ற ஐவகை அடியிலும் நேர் இறுதியாக வரும் சீரில் ஐந்தெழுத்தின் மேற்பட அமைதல் இல்லை: நிரையீருகிய வஞ்சிச்சீராயின் ஆறெழுத்தளவினதாய் நிற்றலும் உண்டு.

சீர்நிலை தானே ஐந்தெழுத் திறவாது
நேர்நிரை வஞ்சிக் காறும் ஆகும்.[15]

என்ற நூற்பாவால் இதனை அறியலாம். மேலும், வஞ்சிச்சீர் முச்சீரடியாக வல்லது நாற்சீரடியாக வருதல் இலக்கணமன்ருதலின் இருபது எழுத்தின் மிக்க நாற்சீரடிப்பா இல்லை என்பது இந்நூற்பாவால் உய்த்து உணரப்பெறும். இன்னும், ஈண்டோதப்பெற்ற அடிகள் பல தொடுக்கும்வழி ஓரடிக்கோரடி எழுத்தளவு மிகுந்தும் குறைந்தும் வருவனவாயினும், அவ்வடிகளில் அமைந்த சீரது நிலை, ஓசையால் மிகுதலும் குறைதலும் இல்லை என்பது ஆசிரியரின் கருத்து. எழுத்துக்களை எண்ணுங்கால் ஒற்றும், ஆய்தமும், குற்றியலிகரமும்

13. செய்யு.-35, 36, 37, 38, 39. (இளம்.)
14. செய்யு. 40-இன் உரை (பேரா)
15. செய்யு.-நூற். 40 (இளம்.)

குற்றியலுகரமும் கணக்கிற்கு எடுத்துக்கொள்ளப் பெறுதல் இல்லை ; உயிரும் உயிர்மெய்யுமே கொள்ளப்பெறும்.

மேற்கூறிய ஐவகை அடிகளையும் விரித்துணர்த்துங் காலத்து, அவை அறுநூற்று இருபத்தைந்தாக விரியும்.

ஐவகை அடியும் விரிக்குங் காலை
மெய்வகை அமைந்த பதினேழ் நிலத்தும்
எழுபது வகையின் வழுவில வாகி
அறுநூற் றிருபத் தைந்தா கும்மே.[16]

என்ற நூற்பாவால் இதனை அறியலாம் "அடி அறுநூற் றிருபத்தைந்தாமாறு: அசைச்சீர், இயற்சீர், ஆசிரியவுரிச்சீர், வெண்சீர், வஞ்சியுரிச்சீர் என்ற ஐந்தினையும் நிறுத்தி, இவ்வைந்து சீரும் வஞ்சிச்சீராக உறழும் வழி இருபத்தைந்து விகற்பமாம். அவ்விருபத்தைந்தின்கண்ணும் மூன்றாவது ஐந்து சீரையும் உறழ நூற்றிருபத்தைந்து விகற்பமாம். அந்நூற்றிருபத்தைந்தின்கண்ணும் நான்காவது ஐந்து சீரையும் உறழ அறுநூற்றிருபத்தைந்தாம்" என்று விளக்குவர் இளம்பூரணர். அடிகளின் பாகுபாட்டினை நன்குணர்ந்தோர் நாற்சீரடிகளை விரித்தாற்போன்று ஐஞ்சீரடி முதலாக வரும் ஏனைய அடிகளையும் பெருக்கிக் காணுமிடத்து அவை வரம்பிலவாம் என்பர் ஆசிரியர்.

ஆங்ஙனம் விரிப்பின் அளவிறந் தனவே
பாங்குற உணர்ந்தோர் பன்னுங் காலை 17

என்பது அவர் கூறும் விதி. "அஃதாவது, அறுநூற்றிருபத்தைந்தினோடும் ஐந்தாவது வரும் சீரையும் உறழ மூவாயிரத்தொருநூற்றிருபத்தைந்து விகற்பமாம். அதன்கண் ஆறாவது இவ்வகை ஐந்து சீரையும் உறழப் பதினையாயிரத்து அறுநூற்றிருபத்தைந்து விகற்பமாம். அதன்கண் ஏழாவது வரும் சீரைந்தினையும் உறழ எழுபத்தெண்ணாயிரத்தொரு நூற்றிருபத்தைந்து விகற்பமாம். இவ்வகையினானுறழ வரம்பிலவாய் விரியும். அன்றியும், இச்சொல்லப்பட்ட

16. செய்யு. நூற். 48. (இளம்.)
17. செய்யு. நூற். 49. (இளம்.)

அடியினை அசையானும் எழுத்தானும் விரிக்க வரம்பிலவாம்'' என்பது இவ்விதிக்கு இளம்பூரணர் தரும் விளக்கம்.

பதினெழ் நிலத்தனவாக [18] மேல் வகுக்கப்பெற்ற, ஐவகையடியும் ஆசிரியப்பாவிற்கு உரியன. அவை தனித்தனி யுரியனவாகி வருதலேயன்றி விரவி வரினும் விலக்கப்படுதல் இல்லை என்பர் ஆசிரியர்.[19] அளவடியும் சிந்தடியும் வெண்பா விற்கு உரியன.[20] அளவடியின் மிக்க பதின்மூன்று எழுத்து முதலாக நெடிலடியும் கழிநெடிலடியுமாகிய இருபதெழுத்தின் காறும் வரும் அவ் அடிகள் கலிப்பாவிற்கு உரியவையாகும்.[21] ஆசிரியப்பாவின் ஈற்றயலடி முச்சீராக வருதல் உண்டு. முச்சீரடி ஆசிரியப்பாவின் இடையிலும் வரப்பெறும். முச்சீரடி கலிப்பாவினுள் நிரம்பவும் நிற்கும். வஞ்சிப்பாவின் இறுதி ஆசிரியப்பாவின் இறுதி போன்று முடியும். வெண்பாவின் ஈற்றடி மூன்று சீரையுடையதாகும். அதன்கண் இறுதிச் சீர் அசைச்சீராய் வரும். ஈற்றயலடி முச்சீராய் வரும் ஆசிரிய முடிவே கலிப்பாவிற்கு முடிபாகும்; கலிப்பா வெண்பா வின் இயல்பினாலும் பண்புற முடிதல் உண்டு என்பர் ஆசிரியர்.[22] இங்ஙனம் அடியினைப்பற்றிக் கூறும் கருத்துக் களையெல்லாம் ஈண்டு உரைக்கிற் பெருகும்.

இவ்விடத்தில் **தளையைப்** பற்றி அறிந்துகொள்ளுதல் பொருத்தமுடைத்து. சீரொடு சீர் புணரச் சேர்த்தியற்றும் அடியிலே சீர்களின் இடைநின்று இசைத்தொடர்ச்சியுற அவைகளைப் பிணிப்பது தளையாகும். தளையெனினும் பந்த மெனினும் ஒக்கும். தளை-பிணிப்பது, பிணித்தல். பந்தம் - கட்டுதல், கயிறு. தளை ஏழு வகைப்படும். இயற்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசையோடு நேராய் ஒன்றுவது நேரொன்றாசிரி யத்தளையாம். நிரையாய் ஒன்றுவது நிரையொன்றாசிரியத் தளையாம்; மாமுன் நிரையும் விளமுன் நேரும் என மாறு பட்டு வருவது இயற்சீர் வெண்டளையாம். வெண்சீர் நிற்ப

18. பதினெழ் நிலம்-நாலெழுத்து முதல் இருபது எழுத்து ஈருகவுள்ள பதினேழும்.

19. செய்யு.-50 51, (இளம்) 20 ஷ-நூற் 55. 21. ஷ-நூற். 56. 22. செய்யு.-நூற். 70. 71. (இளம்)

வருஞ்சீர் முதலசையோடு ஒன்றுவது வெண்சீர் வெண்டளை யாம்; நிரையாய் ஒன்றில் கலித்தளையாம். வஞ்சியுரிச்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசையோடு ஒன்றுவது ஒன்றிய வஞ்சித் தளையாம்; ஒன்றாதது ஒன்றா வஞ்சித்தளையாம். தளைகாணுங் கால் இளம்பூரணர் கருத்துப்படி ஓரசைச் சீரையும் ஆசிரிய வுரிச் சீரையும் இயற்சீராகக் கொள்ளல் வேண்டும். எனவே, நேரொன்றாசிரியத் தளை, நிரையொன்றாசிரியத் தளை, வெண்சீர் வெண்டளை, இயற்சீர் வெண்டளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றாத வஞ்சித்தளை, கலித்தளை என்று தளை ஏழாயினவாறு காண்க.

**6. யாப்பு:** யாப்பு என்பது, அடிதோறும் பொருள் ஏற்பச் செய்வதோர் செய்கையாகும். இதனை ஆங்கிலத்தில் metre என்று குறிப்பிடலாம். எழுத்து முதலாக அசை, சீர், அடி எனத் தொடர்புற்று இயன்ற அடியினால் புலவன் தான் சொல்லக் கருதிய பொருளைச் சொற்கள் மிகாமலும் குறை யாமலும் இறுதியளவும் முற்றுப்பெற நிறுத்துதல் **யாப்பு** என்று சொல்லுவர் செய்யுள் செய்யவல்ல புலவர்.

எழுத்து முதலா ஈண்டிய அடியிற்
குறித்த பொருளை முடிய நாட்டல்
யாப்பென மொழிப யாப்பறி புலவர்.[22]

என்பது ஆசிரியர் கூறும் விதி. இந்த யாப்பு பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுமொழி என ஏழு வகைப்படும்.

பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே
அங்கதம் முதுசொல் அவ்வேழ் நிலத்தும்
வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்
நாற்பெயரெல்லை அகத்தவர் வழங்கும்
யாப்பின் வழியது என்மனார் புலவர்.[24]

என்ற நூற்பாவினால் இதனை அறியலாம்.

**7. மரபு:** மரபு என்பது காலம், இடம் முதலியன பற்றி வழக்கு மாறுபடினும் அத்திரிபுக்கு ஏற்ப வழுப்படாமல் செய்வதோர் செய்கை "குறித்த ஒரு பொருளை முடியச்

---

23. செய்யு.-நூற். 74 (இளம்.) 24. செய்யு.-நூற். 74 (இளம்.

சொற்றொடுக்குங்கால் இயற்சொல்லாகிய பெயர், வினை, இடை, உரியானும்; ஏனைத் திரிசொல், திசைச்சொல், வட சொல்லானும் எழுவகை வழுவும் படாமல் புணர்ப்பது என்ற வாறும்" என்பர் இளம்பூரணர்.[25] பேராசிரியர் மரபு பற்றிய கருத்தினை மிக விரிவாக விளக்கியுள்ளார்.[26] ஈண்டுக் கூறும் மரபுகள் செய்யுட்கே உரியவென்பதும், மரபியலிற் கூறப் படுவன பொதுவென்பதும் வேறுபாடு உணரத்தக்கன.

**8. தூக்கு :** தூக்கு என்பது, பாக்களை அடிதோறும் துணித்து நிறுத்தலாகிய ஓசைவிகற்பமாகும். அஃதாவது, அகவி (அழைத்து)க் கூறும் ஓசையது அகவல்; செப்ப லோசையது வெண்பா; துள்ளலோசையது கலி; தூங்க லோசையது வஞ்சி எனத் துணிவது. மருட்பாவிற்குரிய ஓசை மேற்கூறிய தூங்கலும் துள்ளலும் ஒழிந்த ஏனைச் செப்பலும் அகவலும் ஆகிய இரு கூறுமல்லது, தானாக வேறு படுத்து இதுவெனக் காட்டும் தனிநிலை இல்லை என்பர் ஆசிரியர். எனவே, தூக்கியல் நான்கு வகைக்குமேல் இல்லை என்பது பெறப்படும்.

"தூக்கியல் வகையே ஆங்கென மொழிப."[27]

என்ற ஆசிரியர் கூற்றாலும் இஃது அறியப்பெறும்.

**9. தொடை :** தொடை வகை என்பது, எழுத்துச் சொற் பொருள்களை எதிரெதிர் நிறுத்தித் தொடுக்கப்படுவனவாகிய தொடை விகற்பம். இவை பூத்தொடை போலச் செய்யுட்குப் பொலிவு செய்வனவாதலின் தொடை எனப்பட்டன. இது மோனை, எதுகை, முரண், இயைபு, அளபெடை என்று ஐந்து வகைப்படும். பொழிப்பு, ஒரூஉ, செந்தொடை என அமைந்தவற்றை ஆராயின் அவையும் தொகைப் பாகு பாடாம். நிரல் நிறுத்தமைத்தலும், இரட்டையாப்பும் தொடை வகையுள் அடங்கும்.

அடிதொறும் முதலெழுத்து ஒத்தமைவது மோனைத் தொடையாகும் (alliteration). முதலெழுத்து அளவொத்து

25. செய்யு.-நூற். 76 இன் உரை (இளம்.)
26. செய்யு.-நூற். 80 (பேரா. உரை).
27. செய்யு.-நூற். 83 (இளம்.)

நிற்க இரண்டாம் எழுத்து ஒன்றின் எதுகையாகும். மோனைத் தொடைக்கும் எதுகைத் தொடைக்கும் எடுத்த எழுத்தே வருதலின்றி வருக்கவெழுத்தும் உரியனவாகும். சொல்லினு லாவது பொருளினுலாவது மாறுபடத் தொடுப்பது முரண் தொடை எனப்படும். ஈற்றெழுத்து ஒன்றிவரின் இயைபுத் தொடையாம். அளபெடை வரத் தொடுப்பது அளபெடைத் தொடையாகும். இவ்வைந்தும் பாட்டின் அடிதொறும் வரு வதற்குரிய தொடைகளாகும்.

ஒரு சீர் இடையிட்டு (முதற்சீரும் மூன்ருஞ்சீரும்) எதுகையாய் வரின்[28] அது பொழிப்புத் தொடையெனப்படும். இரண்டு சீர் இடையிட்டுத் (முதற்சீரிலும் நான்காஞ்சீரிலும் மோனை முதலாயின வரத்) தொடுப்பது ஒரூஉத் தொடை யாகும். இக்கூறிய தொடையும் தொடை விகற்பமும் போலாது வேறுபடத் தொடுப்பது செந்தொடையாம்.

மெய்பெறு மரபின் தொடைவகை தாமே
ஐயா யிரத்தா றைஞ் ஞூற்றொடு
தொண்டு தலையிட்ட பத்துக்குறை யெழுநூற்
றொன்பஃ தென்ப உணர்ந்திசி னோரே.[29]

என்ற நூற்பாவால் முற்கூறப்பெற்ற தொடைகளின் விரி வகையை உணரலாம். இதற்கு உரை எழுதிய இளம்பூரணர் தொடையின் பாகுபாடு 13699 என்றும், பேராசிரியர் 13708 என்றும் கணக்கிட்டுக் காட்டுவர். நச்சினர்க்கினியரோ 19291 என்று உரைப்பர். இவையனைத்தையும் ஈண்டு காட்டப்புகின் மிக விரியும்.

**10. நோக்கு :** நோக்காவது ஒரு செய்யுளைக் கேட்டோர் அதன்கண் மாத்திரை முதலாக அடி நிரம்புந் துணையும்

28. 'எதுகை என ஓதினராயினும் 'வந்தது கொண்டு வாராதது முடித்தல்' என்பதனுல் மோனை இயைபு முரண் அளபெடை என்பனவும் பொழிப்புத் தொடையாம் என்று கொள்க' என்று கூறுவர் இளம்பூரணர் (செய்யு. 94இன் உரை). நச்சினர்க்கினியரும், ''இங்ஙனம் எதுகையைப் புலப்பட வைத்து ஏனைய அருத்தாபத்தியாற் கூறியது, எல்லாவற்றினும் எதுகை சிறந்து தோன்றுதல் பற்றி' என்று உரைப்பர்.

29. செய்யு.-நூற். 97 (இளம்.)

பாடற்பகுதியை மீண்டும் மீண்டும் கூர்ந்து நோக்கி அதனகத் தமைந்த பொருள் நலங்களை உய்த்துணர்தற்குக் கருவி யாகியதோர் உறுப்பாகும். நோக்குதல் - பயன் கோடல் என்பர் நச்சினார்க்கினியர்.[30] அஃதாவது, கேட்டோர்க்கு நோக்குப்படச் செய்தல்.

**மாத்திரை முதலா அடிநிலை காறும்**
**நோக்குதற் காரணம் நோக்கெனப் படுமே**[31]

என்ற நூற்பா இதனை விளங்க உரைப்பதை அறிக. "யாதா னும் ஒன்றைத் தொடுக்குங் காலத்துக் கருதிய பொருளை முடிக்குங்காறும் பிறிது நோக்காது அது தன்னையே நோக்கி நிற்கும் நிலை. அடிநிலைகாறும் என்றதனால் ஓரடிக்கண்ணும் பலவடிக்கண்ணும் நோக்குதல் கொள்க. அஃது ஒரு நோக்காக ஓடுதலும் பல நோக்காக ஓடுதலும் இடையிட்டு நோக்குதலும் என மூன்று வகைப்படும்" என்று இதனை விளக்குவர் இளம் பூரணர். இதனை "முல்லை வைந்நுனை தோன்ற" என்ற அகப் பாட்டினுள் (அகம்—8) பேராசிரியர் விளக்கிக் காட்டியுள்ள னர்.[32] ஈண்டு விரிப்பிற் பெருகுமாதலின் ஆண்டுக் கண்டு கொள்க.

இனி, ஏனைய உறுப்புக்களை அடுத்துக் காண்போம்.

---

30. தொல்.—சொல்.-நூற் 288.
31. செய்யு-நூற் 100 (இளம்)
32. செய்யு.. நூற். 104 (பேராசிரியர் உரை.)

## 27. பாவின் வகை

**பா** என்பது செய்யுளின் முப்பத்து நான்கு உறுப்பு களில் ஒன்று. "பாவென்பது, சேட்புலத்திலிருந்த காலத்தும் ஒருவன் எழுத்துஞ் சொல்லும் தெரியாமற் பாடம் ஓதுங் கால், அவன் சொல்லுகின்ற செய்யுளை விகற்பித்து இன்ன செய்யுளென்று உணர்தற்கேதுவாகிப் பரந்து பட்டுச் செல்வ தோர் ஓசை" என்பர் பேராசிரியர்.[1] அப் பா ஏழு வகைப் படும். அவை, பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முது சொல் என்பன.

'பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே
அங்கதம் முதுசொல் அவ்வேழ் நிலத்தும்.[2]

என்ற நூற்பாப் பகுதியால் இதனை அறியலாம். இவற்றுள் பா என்பது அடி வரையறை யுடையது ; ஏனையவை அடி வரை யறை யுடையன அன்று. ஈண்டு அடிவரையறையுள்ள பாவினை ஆராய்வோம். பாவென்பது, செய்யுள்.

தொல்காப்பியர் காலத்திலும் அதற்கு முன்னும் இலக் கியங்கள் நால்வகைப் பாடல்களில் இயற்றப்பெற்றன அவை, ஆசிரியப்பா, வஞ்சிப்பா, வெண்பா, கலிப்பா என்பன. இதனைத் தொல்காப்பியர்,

ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென
நாலியற் றென்ப பாவகை விரியே.[3]

என்று குறிப்பிடுவர். ஒருசார் ஆசிரியர் 'வெண்பா ஆசிரியம் கலி வஞ்சி' என்ற வரிசையில் ஓதியதற்கும், தொல்காப்பியர்

---

1. செய்யு.—நூற். 1 (பேரா. உரை.)
2 செய்யு.— நூற். 75 (இளம்.)
3. செய்யு.—நூற். 101 (இளம்.)

'ஆசிரியம் வஞ்சி வெண்பா கலி'' என்ற முறையில் ஓதியதற்கும் இளம்பூரணர், "அவரும் ஒரு பயன் நோக்கி ஓதினர், இவரும் ஒரு பயன் நோக்கி ஓதினர் என்க'' என்று கூறி, மேலும் இவ்வாறு விளக்குவார்: "என்னை? வெண்பாவாவது, பிற தளை யோடு மயங்காமையானும், மிக்கும் குறைந்தும் வாராத அடியான் வருதலானும், அந்தணர் நீர்மைத்தென முற்கூறினர். அதன்பின் அங்கிகர்த்தாகிப் பிற தளையும் வந்து இனிய ஓசை யுடைத்தாய்ப் பரந்து வருதலின் அரசத் தன்மையது என்பதனான் ஆசிரியப்பாக் கூறினர். அதன்பின் அங்கிகர்த்தாகிச் சிறப்பான்மை வேற்றுத் தளை விரவலின் வணிகர் நீர்மைத் தென்பாக் கலிப்பாக் கூறினர். அதன்பின் வஞ்சிப்பா அளவடியான் வருதலின்றிக் குறளடியுஞ் சிந்தடியுமாய் வந்து பல தளையும் விரவுதலின் வேளாண் மாந்தரியல்பிற்றென வஞ்சிப்பாக் கூறினர். இவ்வாசிரியரும் பதினேழ் நிலத்தினும் வருதலானும் இனிய ஓசைத்தாகலானும் அடிப்பரப்பினாலும் ஆசிரியப்பா முற்கூறினர். அதன்பின் ஆசிரிய நடைத்தாகி இறுதியாசிரியத்தான் இறுதலின் வஞ்சிப்பாக் கூறினர்; இங்கிகர்த்தன்றி வேறுபட்ட ஓசைத்தாகலான் வெண்பா அதன்பின் கூறினர் அதன் பின் வெண்சீர் பயின்று வருதலானும் வெண்பா வுறுப்பாகி வருதலானும் கலிப்பாக் கூறினரென வறிக'' என்பர்.

இவ்வாறு நான்கு வகையாக விரிந்த பாவினது பகுதியை உண்மைத் தன்மை நோக்கியுரைப்பின் ஆசிரியப்பா, வெண்பா என இரண்டாய் அடங்கும். அவற்றுள் ஆசிரியத்தின் நடையினை யுடையதாய் வஞ்சிப்பா அடங்கும். வெண்பாவின் நடையினை யுடையதாய்க் கலிப்பா அடங்கும்.[4] ஆசிரியர் தொல்காப்பியனார் பாவின் இலக்கணத்தைச் செய்யுளியலில் 101 முதல் 149 முடியவுள்ள நூற்பாக்களால் விரித்தோதுகின்றார்.

மேற்கூறிய பாக்களால் அறம், பொருள், இன்பம் என்ற மூன்று பொருள்களை உணர்த்துவதாக நூல்கள் எழும். மக்களின் வாழ்க்கை இந்த மூன்றையுமே அடிப்படையாகக் கொண்டது: பொருளீட்டுதல், அறம் புரிதல், இன்பம்

4. செய்யு—நூற். 103, 104. (இளம்.)

நுகர்தல். இவைகளே மக்கள் வாழ்க்கையின் குறிக்கோள்களாகும். இவ்வுலகில் உள்ள மக்கள் அனைவரும் நல்ல வழிகளில் பொருளினை ஈட்டி, நல்லறம் புரிந்து, இன்பம் துய்த்து வாழ்வார்களாயின், அதுவே வானுறை வாழ்வாகும். இதுவே தொல்காப்பியரின் கருத்து.

அந்நிலை மருங்கின் அறம்முத லாகிய
மும்முதற் பொருட்கும் உரிய என்ப[5]

என்பது அவர் கூறும் நூற்பா. "உலகியற்பொருள் மூன்றனையும் கூறுவான் அவற்றை மும்முதற் பொருளென்றான். அவையின்றி வீடு பெறுமாறு வேறின்மையின் வீடும் ஆண்டுக் கூறினான். என்பது" என்ற பேராசிரியன் உரைப்பகுதியும் இதனை வலியுறுத்தும். இதனை வலியுறுத்தவே தெய்வப் புலமைத் திருவள்ளுவரும் முப்பாலாகக் கூறி மெய்யுணர்த்தலான் வீடு பேற்றிற்கு நிமித்தம் கூறினர் என்பதும் ஈண்டு உணரத்தக்கது. "வீடென்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகலின், துறவறமாகிய காரணவகையாற் கூறப்படுவதல்லது இலக்கண வகையாற் கூறப்படாமையின், நூற்களாற் கூறப்படுவன ஏனை மூன்றுமேயாம்" என்று பரிமேலழகரும் இதனை விளக்கியுள்ளார்.[6] எனவே, பழந்தமிழர் வீ[டு] என்பஃதைப்பற்றிக் கவலைப்பட்டனர் என்று சொல்வதற்கி[ட]மில்லை. மேற்கூறிய மூன்று அறங்களையும் பின்பற்றும் ஒருவர் வீட்டினைப்பற்றிக் கவலை கொள்ள வேண்டியதில்லையன்றோ.

இனி, ஒவ்வொரு பாவினைப்பற்றிய இலக்கணத்தினையெல்லாம் விரிவாகக் காண்போம்.

## ஆசிரியப்பா

ஆசிரியப்பாவாவது, பெரும்பான்மை இயற்சீரானும் ஆசிரியவுரிச்சீரானும் ஆசிரியத்தளையானும் அகவலோசையானும் நாற்சீரடியானும் சிறுபான்மை ஒழிந்த சீரானும் தளையானும் அடியானும் வருவது. இது சீரும் பொருளும இசையும் நுண்மையவாகப்பெற்று ஆசிரியர் அறிவித்தல்

5. செய்யுநூற். 102 (இளம்)
6. திருக்குறள்-உரைப்பாயிரம்.

போலப் பொருள்களை அறிவித்து நிற்றலால் ஆசிரியப்பா எனப்பட்டது இவ்வாசிரியப்பா அடிநிலையாற் பெயரிட்டு வழங்கப்படும் என்பர் இளம்பூரணர். ஈற்றயலடி முச்சீரான் வருவதனை **'நேரிசையாசிரியம்'** என்பர். ஓர் ஆசிரியப்பாவில் இடையிடை முச்சீர் வரின் அது **'இணைக்குறளாசிரியம்'** என வழங்கப்பெறும். எல்லா அடியும் நாற்சீரடியாகி ஒத்து வருவது **'நிலைமண்டிலவாசிரியம்'** ஆகும். யாதானும் ஓரடியை முதலும் முடிவுமாக மாற்றி உச்சரித்தாலும் ஓசையும் பொருளும் வழுவாது எல்லா அடியும் ஒத்து வரும் பாட்டு **அடிமறி மண்டிலவாசிரியம்'** என வழங்கப்பெறும். எனவே, ஆசிரியம் நான்கு வகைப்படும் என்றாயிற்று.

இனி, முச்சீரடி முதலாக அறுசீரடி ஈறாக மயங்கிய ஆசிரியத்தினை **'அடி மயங்காசிரியம்'** என்று வழங்குவர். வெண்பா அடி மயங்கிய ஆசிரியத்தினை **'வெள்ளடி மயங்காசிரியம்'** என்று பெயரிட்டு வழங்குவர். வஞ்சியடி மயங்கிய ஆசிரியம் **'வஞ்சியடி மயங்காசிரியம்'** என்று உரைக்கப்படும்.

ஆசிரியப்பாவின் பெருக்கத்திற்கு எல்லை ஆயிரம் அடியாகும்; சுருக்கத்திற்கு எல்லை மூன்றடியாகும்.

த் ஆசிரியப் பாட்டின் அளவிற் கெல்லை
க ஆயிர மாகும்; இழிபுமூன் றடியே 7

ஏற நூற்பாவினல் இஃது அறியப்படும்.

ஏ

## வஞ்சிப்பா

வஞ்சிப்பா ஆவது, வஞ்சியுரிச் சீரானும் ஏனைச் சீரானும் ந்சீரடியானும் முச்சீரடியானும் தூங்கலோசையானும் வந்து ரிச் சொற் பெற்று ஆசிரியச் சுரிதகத்தான் இறுவது. இது ள் சிந்தடியில்லாத அடிகளையும், புறநிலை வாழ்த்து முதலிய பொருள்களையும் அமைந்து வரற் கொட்டாது வஞ்சம் புரிந்து நிற்றலால் வஞ்சி எனப்படடது. வஞ்சி-வஞ்சமுடையது. இப் பா இருசீரடி வஞ்சிப்பா, முச்சீரடி வஞ்சிப்பா என இருவகைப் படும். மேலும்,

7. செய்யு—நூற். 150 (இளம்.)

'வஞ்சி மருங்கின் எஞ்சிய உரிய'[8]

என்று ஓதியதனல் ஆசிரியவடியோடும், வெண்பாவடியோடும் கலியடியோடும் மயங்கி வருவனவும் கொள்ளப்பெறும் பட்டினப்பாலையுள்,

''நேரிழை மகளிர் உணங்குணாக் கவடுங்'' (22)

என்பது ஆசிரிய அடி.

''கோழி எறிந்த கொடுங்காற் கனங்குழை'' (23)

என்பது வெண்பா அடி.

''வயலாமைப் புழுக்குண்டு வறளடும்பின் மலர்மலைந்து'' (64 65)

என்பது கலியடி. வஞ்சிப்பா ஆசிரிய நடையினையுடையது என்று மேலே கூறினேமாதலின், வஞ்சிப்பாவிற்கும் ஆயிரம் அடி பேரெல்லையாகக் கொள்ளப்படும்.

## வெண்பா

வெண்பா யாப்பாவது, வெண்சீரானும் இயற்சீரானும் வெண்டளையானும் செப்பலோசையானும் அவலடியானும் முச்சீர்றடியானும் வருவது. வெண்பா என்பது, வெண் ணிறம் போன்ற இயல்புடைமைபற்றி வந்த ஒப்பினாகிய பெயர். இயல்பாவது, வெண்ணிறம் வேறொன்று விரவிய வழிக் கேடுறுதல் போலப் பிற தளை விரவியவழி வெண்பா வின் இசைகெடுதல். நெடுவெண்பாட்டு, குறுவெண்பாட்டு, கைக்கிளை, பரிபாட்டு, அங்கதச் செய்யுள் எனச் சொல்லப்பட் டவையும் அளவொத்தவையும் எல்லாம் வெண்பா யாப்பின என்பர் ஆசிரியர் தொல்காப்பியர்.

நெடுவெண் பாட்டே குறுவெண் பாட்டே
கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுளொ(டு)
ஒத்தவை எல்லாம் வெண்பா யாப்பின.[9]

என்ற நூற்பாவால் இதனை அறியலாம். இவையெல்லாம் ஓசையான் ஒக்குமாயினும் அளவானுந் தொடையானும் பொருளானும் இனத்தானும் வேறுபடுத்திக் குறியிடுகின்றார்

8. செய்யு.—நூற். 21 (இளம்.)
9. செய்யு.—நூற். 114 (இளம்.)

ஆசிரியர் என்பது இளம்பூரணரின் கருத்து. தொல்காப்பியர் நான்கினை அளவென்றும், நான்கின் மிக்கவற்றை நெடிலென்றும், குறைந்தவற்றைக் குறள், சிந்து என்றும் வழங்குவராகலின், இவற்றுள் பொருளாலும் இனத்தாலும் வேறுபடுத்தப்பெறாத வெண்பாக்கள் மூவகைப்படும். அவை நெடுவெண்பாட்டு, குறுவெண்பாட்டு, சமநிலை வெண்பாட்டு என்பன

**நெடுவெண்பாட்டு :** நெடுவெண்பாட்டாவது, அளவடியின் நெடிய பாட்டு. அஃதாவது, நான்கின் மிக்க அடிகளையுடையதாய் வரும் வெண்பாவாகிய பாட்டு. ஐந்தடி முதல் பன்னிரண்டடியளவும் வரும் நெடுவெண்பாட்டினைப் பிற்காலத்தார் **'பஃறொடை வெண்பா'** எ. று வழங்குவர். ஒரூஉத் தொடை பெற்றுவரும் பஃறொடை வெண்பாவினை **நேரிசைப் பஃறொடை** என்றும், ஒரூஉத் தொடையின் றி வரும் பஃறொடை வெண்பாவினை **இன்னிசைப் பஃறொடை** என்றும் வழங்குதல் உண்டு.

நெடுவெண்பாட்டின் பெருக்கத்திற்கு எல்லை பன்னிரண்டடி; இதன் சிற்றெல்லை ஏழடி.

**குறுவெண்பாட்டு :** குறுவெண்பாட்டாவது, அளவடியிற் குறுகிய பாட்டு. அஃதாவது, நான்கடியிற்குறைந்த பாட்டு. இஃது இரண்டடியானும் மூன்றடியானும் வரும். இரண்டடியும் ஒரு தொடையான் வருவது **குறள் வெண்பா**, விகற்பத் தொடையா ன் வருவது **விகற்பக் குறள்வெண்பா.** மூன்றடியால் வரும் வெண்பா **சிந்தியல் வெண்பா** என்று வழங்கப்பெறும். மூன்றடியும் ஒரு தொடையான் ஒத்துவருவதை **இன்னிசைச் சிந்தியல் வெண்பா** என்றும், வேறுபட்ட தொடையான் வருவதை **நேரிசைச் சிந்தியல் வெண்பா** என்றும் வழங்குவர்.

குறுவெண்பாட்டிற்கு அளவு அளவடியும் சிந்தடியுமாகிய எழுசீராம் என்பர் ஆசிரியர்.

மேலும் இவற்றுள்,

ஒருபொருள் நுதலிய வெள்ளடி இயலால்
திரிபின்றி முடிவது கலிவெண் பாட்டே. 10

என்று ஆசிரியர் ஓதினமையால், புணர்தல் முதலாகிய

10. செய்யு - நூற். 151 (இளம்.)

பொருள்களுள் யாதானும் ஒரு பொருளைக் குறித்துத் திரிபின்றி முடியும் பஃறொடை வெண்பாவினைக் **'கலிவெண்பா'** எனவும், குறள் வெண்பா முதலிய எல்லா வெண்பாக்களும் கொச்சகக் கலிக்கு உறுப்பாய் வரிற் **'கொச்சகம்'** எனவும், பரிபாடற்கு உறுப்பாய் வரிற் **'பரிபாடல்'** எனவும் கொள்ளப்படும் என்பர் இளம்பூரணர்.

**சமநிலை வெண்பாட்டு :** நான்கடியால் வருவது சமநிலை வெண்பாட்டு அல்லது **சமநிலை வெண்பா** எனப்படும். அவற்றுள் இரண்டாமடியின் இறுதிக்கண் ஒரூஉத் தொடை பெற்று வருவதை **நேரிசை வெண்பா** எனவும், ஒரூஉத் தொடை பெறாது வருவதை **இன்னிசை வெண்பா** எனவும் வழங்குவர். சமநிலை வெண்பாவை **'அளவியல் வெண்பா'** என்று வழங்குதலும் உண்டு.

அளவியல் வெண்பாவிற்கு உயர்ந்த எல்லை ஆறடி; சிற்றெல்லை நான்கடி. அளவியல் வெண்பா சிறப்புடைத் தாதல் நோக்கிப் பதினெண்கீழ்க்கணக்கினுள்ளும் முத்தொள் ளாயிரத்துள்ளும் ஆறடியின் ஏறாமல் செய்யுள் செய்தார் பிற சான்றோரும்.

**கைக்கிளை :** கைக்கிளை என்பது, கைக்கிளைப் பொருண்மை. இப்பொருண்மைத்தாக வரும் வெண்பா **கைக்கிளை வெண்பா** எனப்படும். கைக்கிளை, ஆசிரியப்பாவினால் வரப்பெறாது. அங்ஙனம் வரின் அது 'பாடாண்பாட்டுக் கைக்கிளை' ஆகும். மேலும், கைக்கிளைப் பொருண்மை வெண்பாவாக வருதலே யன்றி, முதலிரண்டடியும் வெண்பாவாகிக் கடையிரண்டடியும் ஆசிரியமாகி இருபாவினாலும் வரப்பெறும் என்று விதி செய்வர் ஆசிரியர்.[11] இவ்வாறு வருவதனை **மருட்பா** என வழங்குவர். இக்கருத்தினானே ஆசிரியரும்,

> மருட்பா ஏனை இருசார் அல்லது
> தானிது என்னுந் தன்மை யின்றே.[12]

என்று ஓதினர் என்பது ஈண்டு அறிதற்பாலது.

---

11. செய்யு.—நூற். 115 (இளம்.)
12 ஷ—நூற். 81 (இளம்.)

பரிபாட்டு: பரிபாட்டாவது, பரிந்து (பல அடிகளும் ஏற்று) வரும் பாட்டாகும். அஃதாவது, ஒரு வெண்பாவாக வருதலின்றிப் பல உறுப்புக்களோடு தொடர்ந்து ஒரு பாட்டாகி முற்றுப்பெறுவது.

பரிபாடல், வெண்பா உறுப்பான் வருதலேயன்றித் தொகைநிலையும் விரியுமாகக் கூறிய பா நான்கனுள் இன்ன பா என்று அறியப்படும் இயல்வழியின்றிப் பொதுப்பட யாக்கப் பட்டு நிற்றற்கும் உரியதாகும் என்பர் ஆசிரியர்.[13] பொதுப் பட யாக்கப்பட்டு நிற்றலாவது ஆசிரியம் வஞ்சி வெண்பா கலி மருட்பா என்று ஓதப்பட்ட எல்லாப் பாவின் உறுப்பும் உடையதாதல். இங்ஙனம் பொதுவாய் நிற்றலேயன்றிக கொச்சகமும் அராகமும் சுரிதகமும் எருத்தும் என்று சொல்லப்பட்ட நான்கும் தனக்குறுப்பாகக் காமப்பொருள் குறித்து வரும் நிலையினதாகும் இது.[14] மேலும், சொற்சீரடியும் முடுகியலடியும் பரிபாடற்கு உரியவை என்பர் ஆசிரியர்.

"கொச்சகம் என்பது ஐஞ்சீரடுக்கி வருவனவும், ஆசிரிய வடி, வெண்பாவடி, வஞ்சியடி, கலியடி, சொற்சீரடி, முடுகிய லடி என்று சொல்லப்பட்ட அறுவகையடியானும் அமைந்த பாக்களை உறுப்பாக உடைத்தாகி வெண்பாவியலால் புலப் படத் தோன்றுவது. இவற்றுள்,

'சொற்சி ரடியும் முடுகி யலடியும்
அப்பா நிலைமைக் குரிய வாகும்'[15]

என வேறு ஓதுதலின், ஏனை நான்குங் கொச்சகப் பொருளாகக் கொள்ளப்படும்" என்பர் இளம்பூரணர்.

"கொச்சகம் என்பது ஒப்பினாகிய பெயர்; ஓராடையுள் ஒரு வழியடுக்கியது கொச்சகம் எனப்படும்; அது போல ஒரு செய்யுளுட் பல குறள் அடுக்கப்படுவது கொச்சகமெனப் பட்டது" என்று கூறுவர் பேராசிரியர்.[16] "பல கோடுபட அடுக்கி யுடுக்கும் உடையினைக் கொச்சகம் என்பவாகலின்,

13. செய்யு—நூற். 116 (இளம்.)
14. செய்யு.—நூற். 117 (இளம்.)
15. ஷ—நூற். 118 (இளம்.)
16. செய்யு.—நூற். 121 (பேரா.)

அது போலச் சிறியவும பெரியவும் விராய் அடுக்கியும் தம்முள் ஒப்ப அடுக்கியும் வருஞ்செய்யுளைக் கொச்சகம்* என்றார்'' என்று உரைத்திடுவர் நச்சினார்க்கினியர்.[17]

"**அராகம்** என்பது, ஈரடியானும் பலவடியானும் குற்றெழுத்து நெருங்கி வரத் தொடுப்பது'' என்று கூறுவர் இளம்பூரணர். "குறிலிணை பயின்ற அடி அராகம் எனப்படும்'' என்றும், "அராகமென்பது. அருது கடுகிச் சேறல்; பிறிதொன்று பெய்து ஆற்றவேண்டுந்துணைச் செல்வதாகிய பொன்னினை அராகித்ததென்பாகவலின், அதுவும் ஒப்பினாகிய பெயராயிற்று, என்னை? மாத்திரை நீண்டும் துணிந்தும் வாராது குற்றெழுத்துப் பயின்று வந்து நடைபெறுதலின்'' என்றும் விளக்கியுரைப்பர் பேராசிரியர்.

"**சுரிதகம்** என்பது, ஆசிரியவியலினாலாவது வெண்பாவியலினாலாவது பாட்டிற்கருதிய பொருளை முடித்து நிற்பதாகும்.'' இதனை 'அடக்கியல்' எனவும் வழங்குவர்.

"**எருத்தென்பது**'' இரண்டடி யிழிபாகப் பத்தடிப் பெருமையாக வருவதோருறுப்பு. பாட்டிற்கு முகம் தரவாதலானும், கால் சுரிதகமாதலானும், இடைநிலைப் பாட்டாகிய தாழிசையும் கொச்சகமும் அராகமும் கொள்ளக் கிடத்தலின் எருத்தென்பது கழுத்தின் புறத்திற்குப் பெயராக வேண்டுமாதலான் அவ்வுறுப்பு தரவைச் சார்ந்து கிடத்தல் வேண்டுமென்று கொள்க'' என்பர் இளம்பூரணர். "எருத்து என்பது, தரவு'' என்பர் பேராசிரியர்.

பரிபாடற்கண் மலையும் யாறும் ஊரும் வருணிக்கப்பெறும். சுரிதகமின்றியும் பரிபாடல் முற்றுப் பெறுதலுண்டு.

**சொற்சீரடியாவது**, பாட்டின்றித் தொடுக்கப்பெறும் கட்டுரைக்கண் சொல்லுமாறு போல எண்ணோடு[18] கூடியும் முற்

---

*இக்காலத்தார் கொச்சகத்தைப் பெண்டிர்க்குரிய உடையுறுப்பாக்கிக் 'கொய்சகம்', 'குசவம்' என்று பலவாறு சிதைத்து வழங்குவர்.

17. செய்யு.—நூற். 152 (பேரா.)

18. எண்ணென்பது, ஈரடியாற் பலவாகியும் ஓரடியாற் பலவாகியும் வருதல் என்பர் இளம்பூரணர்; 'எண்ணுதற் பொருள்' என்பர் பேராசிரியர்.

றிய நாற்சீரடியின்றி முச்சீரடியானும் இருசீரடியானும் குறைவாகிய சீரையுடைத்தாகியும், ஒழிந்த அசையினை உடைத்தாகியும், ஒரு சீரின் பின்னே பிறிதொரு சீர் வரத் தொடுக்கப்படாது ஓரசை வரத்தொடுத்தும் சொல்தானே சீராந்தன்மையைப் பெற்று நிற்றலாதம்.

''முடுகியலாவது, ஐந்தடியானும் ஆறடியானும் ஏழடியானும் குற்றெழுத்து பயிலத் தொடுப்பது'' என்பர் இளம்பூரணர். ''முடுகியலடி என்பது, முடுகியலோடு விராய்த் தொடர்ந்தொன்றுகிய வெண்பாவடி'' என்பர் பேராசிரியர்.

பரிபாடலின் உயர் எல்லை நானூறு அடி; சிற்றெல்லை இருபத்தைந்து அடி. எனவே, இடையெல்லா அடியானும் அது வரப்பெறும் என்பது அறிதற்பாலது.

**அங்கதம் :** அங்கதம் என்பது வசை, அங்கதப் பொருண்மைத்தாக வரும் வெண்பா **அங்கத வெண்பா** என வழங்கப்பெறும். அங்கதம் இரு வகைப்படும். அவை : செம்பொருளங்கதம், பழிகரப்பங்கதம் என்பவை. வாய்காவாது சொல்லப்பட்ட வசையே செம்பொருளங்கதம் எனப்படும். தான் மொழியும் மொழியை மறைத்து மொழிபின், அது பழிகரப்பு எனப் பெயர் பெறும். இக்கூறிய அங்கதம் செம்பொருட் செவியுறை, செம்பொருளங்கதம், பழிகரப்புச் செவியுறை, பழிகரப்பங்கதம் என்று நான்கு வகையானும் கூறப்படும். புகழொடும் பொருளொடும் புணர வரின், அது செவியுறைச் செய்யுளாகும். வசையொடும் நசையொடும் புணர்ந்த செய்யுள் அங்கதச் செய்யுள் எனப் பெயர் பெறும்.

அங்கதப் பாட்டாகிய வெண்பாவிற்கு சிற்றெல்லை இரண்டடி : பேரெல்லை பன்னிரண்டடி என்பர் ஆசிரியர்.[19]

### கலிப்பா

துள்ளலிசையுடைத்தாய்த் தரவு, தாழிசை முதலிய உறுப்புக்களைப் பெற்று நடப்பது கலிப்பா எனப்படும். இது பொருளினாலும் இசையினாலும், எழுச்சியும் பொலிவும்

19. செய்யு.—நூற். 152 (இளம்.)

வேகமும் பெற்று வருதலால் கலிப்பா எனப்பட்டது. கலி - எழுச்சி, பொலிவு, வேகம், பா - செய்யுள்.

கலிப்பா நான்கு வகைப்படும். அவை : ஒத்தாழிசைக்கலி, கலிவெண்பாட்டு, கொச்சகம், உறழ்கலி என்பவை.

ஒத்தா ழிசைக்கலி கலிவெண் பாட்டே
கொச்சகம் உறழொடு கலிநால் வகைத்தே 20

என்ற நூற்பா இதனை உணர்த்தும்.

**ஒத்தாழிசைக் கலி** : ஒத்தாழிசைக் கலி இரண்டுவகைப் படும். இவற்றுள் முதல் வகை இடைநிலைப்பாட்டு (தாழிசை), தரவு, போக்கு (சுரிதகம்), அடைநிலைக்கிளவி (தனிச்சொல்), என்னும் நான்குறுப்புடையதாகப் பயின்றுவரும்.

இடைநிலைப் பாட்டே தரவுபோக் கடையென
நடைநவின் றொழுகும் ஒன்றென மொழி 21

என்ற நூற்பா இதனைப் புலப்படுத்தும். இங்குச் சிறப் புடைமை கருதித் தாழிசையை முற்கூறினரேனும் தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம் என இம்முறையால் வருதலே ஒத்தாழிசைக் கலியாதும் என்பதை அறிக.

**தரவாவது,** மற்றைய உறுப்பின் பொருள்களைத் தொகுத்துத் தந்து கலிப்பாவின் முதலுறுப்பாய் முன்னிற்பது. தரவு தருதலுடையது. பாட்டின் முகத்துத் தரப்படுவது. முகத்திற்படுந் தரவினை முகம் எனவும், இடைநிற்பனவற்றை இடைநிலை எனவும், இறுதிக்கண் முரிந்து மாறுஞ் சுரிதகத் தினை முரிநிலை எனவும் வழங்குவர் கூத்த நூலார். இது நாலடி இழிபாகப் பன்னிரண்டு அடி உயர்வாக இடை வரும் அடி எல்லாவற்றிலும் வரப்பெறும் என்பர் ஆசிரியர்.[22] 'எருத்தம்' என்றும் வழங்கப்பெறும். எருத்தம் - பிடரி.

**தாழிசையாவது,** தாழம்பட்ட இசையுடையதாய் அடிக ளாலே தரவினின்றும் தொகை குறைந்து கலிப்பாவின் இரண்டாம் உறுப்பாய் நிற்பது. இது பதினோரடி முதல்

20. செய்யு.– நூற். 125 (இளம்)
21. செய்யு.– நூற். 128 (இளம்.)
22. செய்யு.– நூற் 129 (இளம்.)

இரண்டடிகாறும் இழிந்து வரப்பெறும். இதனை 'இடைநிலைப் பாட்டு' என்றும் வழங்குவர்.

**தனிச்சொல்லாவது**, தனியே சொல்லப்படும் ஒரு சீராய்ப் பொருள் நிரம்பி விட்டிசைத்துப் பெரும்பாலும் சுரிதகத்தின் முன்னே நிற்பது. 'விட்டிசை', 'கூன்', 'தனிநிலை', 'அடைநிலை' என்றும் இதனை வழங்குவர். விட்டிசை - ஒரோசையினின்று மற்றோரோசை விட்டு இசைக்கப்படுவதற்குக் காரணமாக இருப்பது. கூன் - நேர்மையாக வந்த ஓசை சுரிதகத்தோடு பொருந்தாமல் தடைப்பட்டு வளைதற்குக் காரணமாக உள்ளது. கூன் - வளைவு. அடைநிலை என்பது, முன்னும் பின்னும் பிறவுறுப்புகளை அடைந்தன்றி வாராதது.

**சுரிதகமாவது**, தனிச்சொல்லுக்குப் பின்னே அகவற்பா, வெண்பா என்னும் இரண்டனுள் ஒன்றாய் வந்து கலிப்பாவின் இறுதியுறுப்பாய் நின்று முடிப்பது. குனிதிரை நீர்ச்சுழி போல் நின்று சுரிந்திறுவது சுரிதகம்; அஃதாவது, சுருக்கிக் கூறுவது. இது 'அடக்கியல்', 'வைப்பு', 'வாரம்', போக்கியல்' என்றும் வழங்கப்பெறும். அடக்கியல் - உள்ளுறுப்பின் பொருளெல்லாம் ஒருவகையான் அடக்கிக் கூறுவது. வைப்பு - ஈற்றில் வைக்கப் படுவது. வாரம் - கூறிய பகுதியைப் பின்னும் பற்றிக் கூறுவது. போக்கியல் - குறித்த பொருளை முடித்துப் போக்குதல்.

ஒத்தாழிசைக்கலியின் இரண்டாவது வகைச் செய்யுள் தேவரைப் பராவும் பொருண்மையுடையது தேவரைப் பராவலாகிய அது **வண்ணகம்** எனவும், **ஒருபோகு** எனவும் இரு வகைப்படும்.

**வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா:** இது தரவு, தாழிசை, எண், வாரம் என்று சொல்லப்பட்ட நான்கு உறுப்பினை யுடையது. "வண்ணித்துப் புகழ்தலின் வண்ணகம் எனப்படும்; என்னை? தரவினானே தெய்வத்தினை முன்னிலையாகத் தந்து நிறீஇப் பின்னர் அத்தெய்வத்தினைத் தாழிசையாலே வண்ணித்துப் புகழ்தலின் அப்பெயர் பெற்றதாகலின், ஒழிந்த வுறுப்பான் வண்ணிப்பினும் சிறந்த உறுப்பு இதுவென்க....அவ்வெண்ணுறுப்புத்தான் நீர்த்திரை போல் வரவரச் சுருங்கிவருதலின்

அம்போதரங்கம் எனவும்[23] அமையுமாகலின் அதனை அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவெனவும் சொல்லுப,'' என்று உரைப்பர் பேராசிரியர்.[24]

இக்கூறிய வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவிற்குத் தரவு நான்கும், ஆறும், எட்டுமாகிய நேரடியினால் வரும். இவ்வாறு இரட்டைப்படை அடிகளால் வருதலன்றி, ஐந்தும், ஏழும், ஒன்பதுமாக வாராது என்ப பேராசிரியர் முதலியோரின் கருத்தாகும். அடக்கியல் வாரம் தரவோடு ஒத்த இலக்கணத்தது; **எண்** என்பது, முதல் தொடுத்த உறுப்புப் பெருகிப் பின் தொடுக்கும் உறுப்புச் சுருங்கிப் பலவாய் வருவது.

'முதற்றொடை பெருகிச் சுருங்குமன் எண்ணே'[25]

என்பர் ஆசிரியர். "எனவே, இரண்டடி இரண்டும், ஓரடி நான்கும், இருசீர் எட்டும், ஒரு சீர் பதினாறும் ஆகி எண் பல்கும் என்பது. இருசீர் குறளடியுமாகலின் ஒரு சீரான் வருவன சிற்றெண்ணெனவே படும்; ஆகவே, ஒழிந்த எண் மூன்றும் தலையெண்ணும் இடையெண்ணும் கடையெண்ணும் என மூன்றுங்கூடியே எண்ணெனற்குரியனவாயின். இது நோக்கிப் போலும் எண்ணென்று அடக்காது,

"சின்ன மல்லாக்காலை" (செய்.-நூற்.—146)

என ஒரு சீரினை வேறுபடுத்து மேற்கூறுகின்றதென்பது. இனி அளவடியினை நாட்டியே 'முதற்றொடை பெருகிச் சுருங்கும்' என்றமையின், அளவடியிற் சுருங்கின இருசீரும் ஒரோவழிச் **சின்ன**மெனப்படும்" என்பர் பேராசிரியர்.

---

23. அம்போதரங்கமாவது, உயர்ந்தோங்கிப் பெருவடிவமாயெழுந்து வரவரச் சுருங்கிக் கரையடைந்தொடுங்கும் இயல்புடைய நீர்த்திரை போன்று முன்னர் நாற்சீரடியாய் உயர்ந்தோங்கிப் பின்னர் முச்சீரடியாய் அதனின் சுருங்கி, அதன்பின் இருசீரடியாய் அதனினும் சுருங்கி முடிவது, அம்போ-நீரினது; தரங்கம் - திரை, அலை; அசையடி, சொற்சீரடி, எண், பிரிந்திசைக் குறள் என்பன இதன் வேறு பெயர்கள்.

24. செய்யு.—நூற். 140 (பேரா.)
25. செய்யு—.நூற். 139 (இளம்.)

"இனி, ஈரடியிரண்டினைப் பேரெண் எனவும், ஓரடி அதனிற்குறைதலின் சிற்றெண் எனவும், இவற்றிற்கும் பின் வரும் சின்னத்திற்கும் இடையே நிற்றலின் இருசீரை இடையெண் எனவும், முடிவிற்கு அளவாய் நிற்குஞ் சின்னத்தினை அளவெண் எனவும் பெயர் கூறினும் அமையும்" என்பர் நச்சினார்க்கினியர்.

இனி, ஒரு போகு என்ற கலியின் இயல்பும் இரண்டு வகைப்படும். அவை: கொச்சக வொருபோகும், அம்போதரங்க வொருபோகும் என இரண்டாக உணரப்படும். 'ஒரு போகு' என்ற தொடர் ஓர் உறுப்புப் போகியது (இழந்தது) எனப் பொருள்படுவதாகும். ஒத்தாழிசைக்கலிக்கு ஓதிய உறுப்புக்களுள் ஒருறுப்பு இழந்தமையால் 'ஒரு போகு' எனப் பெயராயிற்று. "ஒருறுப்பு இழத்தலின் ஒருபோகாதல் ஒகுதுமாயினும்" என்று பேராசிரியர் கூறுதலால் (செய். நூற் 147-இன் உரை) இப்பெயர்க்காரணம் ஒருவாறு புலனாதல் காணலாம். கொச்சகம் ஒருவழி வாராதது 'கொச்சக வொருபோகு' ஆகும்; வண்ணகப் பகுதிக்குரிய எண்ணுறுப்பு (அம்போதரங்கம்) ஒரு வழியில்லாதது 'அம்போதரங்கவொருபோகு' எனப் பெயர் பெற்றது. "கொச்சகவுறை போலப் பெரும்பான்மையும் திரண்டு வருவது 'கொச்சகம்' எனவும், பலவுறுப்புக்களும் முறையே சுருங்கியும் ஒரோவழிப் பெருகியும் கடைக்கண் விரிந்து நீர்த்தரங்கம் போறலின் 'அம்போதரங்கம்' எனவும் கூறினர்" என்று நச்சினார்க்கினியர் கூறுவது காண்க.

கொச்சக வொருபோகு: தரவு முதலாயின உறுப்புக்களுள் தரவின்றித் தாழிசை பெற்றும், தாழிசையின்றித் தரவு முதலியன உடைத்தாகியும், எண்ணாகிய உறுப்புக்களை இடையிட்டுச் சின்னம்* என்றதோர் உறுப்புக்குறைந்தும் அடக்கியலாகிய சுரிதகமின்றித் தரவுதானே அடி நிமிர்ந்து சென்றும் இவ்வாறு ஒத்தாழிசைக்குரிய யாப்பினும் பொருளி

* அம்போதரங்கச் செய்யுள்களுக்குரிய நால்வகை எண்ணுறுப்புக்களுள் இறுதியெண்ணைச் சிறுகி வரும் எண் 'சிற்றெண்' எனப்பெறும். இது 'சின்னம்' எனவும் வழங்கப்பெறும்.

னும் வேறுபாடுடைத்தாகி வருவது **கொச்சக வொருபோகாகும்** என்பர் ஆசிரியர்.[26] "எனவே, ஒத்தாழிசைக்கலிக்கு உறுப்பாகியவற்றுள் ஒன்றும் இரண்டும் குறைந்து வருவன கொச்சக வொருபோகனெப் பெயர் பெறுமென்று கொள்க" என்பர் இளம்பூரணர்.[27] இக்கொச்சக வொருபோகு பத்தடிச் சிறுமையாகவும் இருபதடிப் பெருமையாகவும் வரப்பெறும் என்பர் ஆசிரியர்.[28]

**அம்போதரங்க வொருபோகு :** இது எருத்து, கொச்சகம், அராசம், சிற்றெண், அடக்கியல் வாரம் என்னும் இவ்வுறுப் புக்களையுடையது என்பர் ஆசிரியர் தொல்காப்பியர்.

எருத்தே கொச்சகம் அராகஞ் சிற்றெண்
அடக்கியல் வாரமொ டந்நிலைக் குரித்தே. [29]

என்ற நூற்பாவினுல் இதனை அறியலாம். இது தன் உறுப் பெல்லாங் கூடி அறுபதடித்தாகியும், அதன் செம்பாலாகிய முப்பதடித்தாகியும், அதன் வாரமாகிய பதினைந்தடித்தாகியும் எல்லை பெறும். "எனவே, இது தலையள வம்போதரங்க வொருபோகும், இடையள வம்போதரங்க வொருபோகும், கடையள வம்போதரங்க வொருபோகும் என மூன்றற்கும் சிற்றெல்லை கூறியவாருயிற்று" எனவும், "அவற்றுக்குப் பேரெல்லை கூறுமாறென்னையெனின், அறுபதிற்றடித்தெனத் தலையளவிற்கு வேறு கூறி, அவ்வளவைப்பற்றி அதன் செம்பாலும் அதன் வாரமுமெனப் பாகஞ்செய்து வந்தானுகலாற் கடையள வம்போதரங்கத்திற்குச் சிற்றெல்லை பதினைந்தாம். கடையள வம்போதரங்கத்திற்குச் சிற்றெல்லை பதினைந்தாகிய ழிப் பேரெல்லை முப்பதின்காறும் உயருமெனவும், இடையள விற்குச் சிற்றெல்லை முப்பதாகிய வழிப் பேரெல்லை அறுபதின் காறும் உயருமெனவும், தலையளவிற்குச் சிற்றெல்லை அறுப தாகிய வழி அதனையும் இவ்வாறே இரட்டிப்ப அதன் பேரெல்லை நூற்றிருபதாமெனவும் கொள்ள வைத்தா

26. செய்யு.—நூற் 143 (இளம்.)
27 ஷை — நூற்பாவின் உரை.
28. செய்யு.— நூற். 144 (இளம். )
29. ஷை — நூற். 146. (இளம்.)

னென்பது" எனவும் விளக்குவர் பேராசிரியர். மேற்கூறிய உறுப்புக்களே பரிபாடற்கும் உறுப்புகளாமாயினும், இவை இம்முறையே வரின் அம்போதரங்க வொருபோகாம் எனவும், அறுபதடியிற்குறைந்து முறை பிறழ்ந்து வருவனவும், ஒத்து அறுபதடியின் மிக்கு வருவனவும் **பரிபாடல்** எனக் கொள்ளத் தக்கனவாம் எனவும், இவற்றிடையே யடைந்த வேறுபாட்டினை விளக்குவர் இளம்பூரணர்.[30] இவற்றுள் **அராகம்** என்பது, அறுது (இடையறவு படாது) கடுகிச் செல்லுதல்; மாத்திரை நீண்டும் இடையறவு பட்டும் வாராது குற்றெழுத்துப் பயின்று வந்து நடைபெறுவது அராகம் என்னும் உறுப்பாகும்.

மேற்கூறியவற்றால் கலிப்பாவின் விகற்பகங்களை அடியிற் கண்டவாறு ஆசிரியர் கூறியிருப்பது உணரப்படும்.




இவற்றுள் ஒத்தாழிசைக் கலியின் விகற்பங்கள் மேலே விளக்கப்பெற்றன. ஏனையவற்றை இனிக் காண்போம்.

**கலிவெண்பாட்டு** : ஒரு பொருளைக் குறித்துத் தொடுக்கப் பட்ட வெள்ளடியியலால் திரிபின்றி முடிவது கலிவெண் பாட்டாகும்.[31]

---

30. செ—நூ. 146-இன் உரை.

31. வெண்கலிப்பாட்டு என்பது இதன் மற்றொரு பெயர்.

ஒருபொருள் நுதலிய வெள்ளடி இயலால்
திரிபின்றி முடிவது கலிவெண் பாட்டே.[32]

என்பது தொல்காப்பிய நூற்பா. 'செப்பலோசையிற்சிதையாது ஒரு பொருள்மேல் வெள்ளடியால் வெண்பா முடியுமாறு முடிவன **கலிவெண்பா** என்னும் சிறப்புடையன என்பது ஆசிரியர் தொல்காப்பியர் கருத்தாகும்' என்று கூறுவர் யாப்பருங்கல ஆசிரியர். இளம் பூரணரும், " 'வெள்ளடியால்' என்னாது 'வெள்ளடியியலான்' என்றமையால், வெண்டளையால் வந்து ஈற்றடி முச்சீராய் வருவனவும், பிற தளையால் வந்து ஈற்றடி முச்சீராய் வருவனவும் கொள்ளப்படும்" என்பர். இவற்றுள் வெண்டளையால் வந்த செய்யுள் 'வெண்கலிப்பா' எனவும், அயற்றளையால் வந்த செய்யுள் 'கலிவெண்பா' எனவும் இவர் உரையில் குறிப்பிடப்பெற்றுள்ளன. கலித்தளை தட்டுக் கலியோசை தழுவி ஈற்றடி முச்சீரான் முடிவதனை 'வெண்கலிப்பா' எனவும், வெண்டளை தட்டு வெள்ளோசை தழுவி ஒரு பொருள்மேல் வருவதனைக் 'கலிவெண்பா' எனவும், பெயரிட்டு வழங்குவர் குணசாகரர்[33] யாருப்பருங்கலவிருத்தி யாசிரியரும், "வெள்ளோசையினுல் வருவதனைக் 'கலி வெண்பா வென்றும் பிறவாற்ருல் வருவனவற்றை 'வெண்கலிப்பா' என்றும் வேறுபடுத்துச் சொல்வாரும் உளர்" என்று கூறுவர்.

மேற்கூறியவற்றைக் கூர்ந்து நோக்கின் வெண்டளையால் வந்ததனைக் **கலிவெண்பா** எனவும், பிற தளையால் வந்ததனை **வெண்கலிப்பா** எனவும் வழங்கும் பெயர்வழக்கே பொருத்த முடையதெனத் தெரிகின்றது.

**கொச்சகக் கலி**: தரவாகிய உறுப்பும் சுரிதகமாகிய உறுப்பும் இடையிடை வந்து தோன்றியும், ஐஞ்சீரடுக்கியும் ஆறு மெய் பெற்றும் வெண்பாவின் இயல்பினுல் புலப்படத் தோன்றும் பா நிலை வகை 'கொச்சகக் கலிப்பா'வாகும். இதன் இயல்பினை,

32. செய்யு.—நூற். 147 (இளம்.)
33. யாப். - காரிகை 32-இன் உரை.

தரவும் போக்கும் இடையிடை மிடைந்தும்
ஐஞ்சீர் அடுக்கியும் ஆறுமெய் பெற்றும்
வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்
பாநிலை வகையே கொச்சகக் கலியென
நூல்நவில் புலவர் நுவன்றறைந் தனரே.34

என விதி செய்து காட்டுவர் ஆசிரியர். ஆறு மெய் பெறுத லாவது, தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம், சொற்சீரடி, முடுகியலடி என்னும் ஆறுறுப்பினையும் பெறுதல். இதற்கு 'அராகம்' என்னும் உறுப்பைக் கூட்டி 'முடுகியல்' என்னும் உறுப்பைக் கழித்து உரைப்பதும் உண்டு. "ஒத்தாழிசைக் (கலிக்)குத் தாழிசையாகிய உறுப்பு மிக்குவந்தாற்போலக் கொச்சகக் கலிக்கும் வெண்பாவாகிய உறுப்பு மிக்கு வரும் என்று கொள்க" என இளம்பூரணர் கூறுதலால், ஒத்தா ழிசைக் கலியின் வகையாய்க் கலியோசை தழுவிய கொச்சக வொருபோகும், வெண்பாவியலால் வெளிப்பட முடியும் கொச்சகக் கலியும் தம்முள் வேறெனப் பகுத்துணர்தல் வேண்டும்.

மேற்காட்டிய நூற்பாவின் முதல் மூன்றடியினை ஒரு நூற்பாவாகவும், இறுதியிரண்டடிகளை மற்றொரு நூற்பா வாகவும் கொண்டு பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கூறும் உரை ஏற்புடைத்தன்று.

**உறழ்கலி :** கூற்றும் மாற்றமும் விரவி வந்து சுரிதகமின்றி முடிவது 'உறழ்கலிப்பா' வாகும்.

கூற்றும் மாற்றமும் இடையிடை மிடைந்தும்
போக்கின் றாகல் உறழ்கலிக் கியல்பே 35

என்பது தொல்காப்பியரின் விதி. எனவே, ஒருவர் ஒன்று கூறுவதற்கு மற்றொருவர மறுமாற்றம் கூறிச் சென்று பின்னர் அவற்றைத் தொகுத்து முடிப்பதோர் சுரிதகமின்றி முடிதல் உறழ்கலியின் இலக்கணம் என்பது அறிதற்பாலது. 'இதனைக் கொச்சகக் கலியின் பின் வைத்தமையான் அக் கொச்சகவுறுப்பின் ஒப்பன இதற்கு உறுப்பாகக் கொள்ளட் படும்' என்றார் இளம்பூரணர்.

34. செய்யு—நூற். 148 (இளம்)
35. செய்யு—நூற். 149 (இளம்)

உறழ்கலியாகிய "இது நாடகச் செய்யுட் போல வேறு வேறு துணிபொருளவாகியும், பல தொடர்ந்தமையிற் பெரிதும் வேறுபாடு நோக்கியும், இது பொருளதிகாரமாதலாற் பொருள் வேறுபாடுபற்றியும், வரலாற்று முறைமைபற்றியும்" இதனைக் கொச்சகக் கலியினும் அடக்காது வேறு செய்யுளாகப் பிரித்து இலக்கணம் கூறினர் தொல்காப்பியர் என்று விளக்குவர் பேராசிரியர்.[36]

மேற்கூறியவை யாவும் அடிவரையறையுள்ள பாக்களின் அளவியல்;[37] வரையறை. இதனுள் பாக்களின் பல்வகைப் பட்ட விகற்பங்கள் கூறப்பட்டன.

இந்த நால்வகைப் பாக்களும் வாழ்த்தியற்குரிய பாக்கள் என்றும், புறநிலை வாழ்த்து கலிப்பா வகையினால் வருதல் இல்லையென்றும் (இது வெண்பாவினும், ஆசிரியப்பாவினும் இவையிரண்டும் புணர்ந்த மருட்பாவினும் வரப்பெறும்.) வாயுறை வாழ்த்து, அவையடக்கியல், செவியறிவுறூஉ என்ற மூன்றும் கலியிலும் வஞ்சியிலும் வாரா எனவும் ஆசிரியர் விதி செய்து காட்டுவர். இவற்றை யெல்லாம் ஈண்டு விரிக்கிற் பெருகும்.

இதுகாறும் அடிவரையறையுள்ள பாவகைகளை ஆராய்ந் தோம். இனி, அடிவரையறையில்லாத நூல், உரை முதலிய அறுவகைச் செய்யுட்களையும் 'பண்ணத்தி' என்ற இசைப்பா வகையினையும் நூலின் வகைகளையும் அடுத்துக் காண்போம்.

---

36. செய்யு.—156 (பேரா.) நூற்.
37. செய்யுளின் பன்னிரண்டாவது உறுப்பு.

# 28. இலக்கிய வளர்ச்சி

ஒரு மொழியிலுள்ள நூல்கள் அவ்வக்காலத்திற்கேற்ப மாறுபடுகின்றன. ஒரு நூல் தோன்றுங்காலத்தில் எவை எவை நாகரிகமாகவும், அறிஞர்களின் செயல்களாகவும், வியக்கத்தக்க செய்திகளாகவும் கருதப்பெற்றனவோ அவை தாம் அக்காலத்தில் தோன்றும் இலக்கியங்களிலும் பிரதி பலிக்கும். பண்டைக்காலத்தில் அகம், புறம் என்ற துறை களில் வரையறைப்பட்டு ஆயிரக்கணக்கான பாடல்கள் புலவர்களால் இயற்றப்பெற்றன. அகத்துறைப் பாடல்கள் அளவின்றி எழுந்தன. கி. பி. ஐந்து, ஆறு நூற்றுண்டுகளில் பக்திப் பாடல்கள் தோன்றின. அவற்றினையடுத்து காப்பியங் களும், பின்னர், அவற்றினைத் தொடர்ந்து புராணங்களும் எழுந்தன. பெரும்பாலும் இவை யாவும் வடமொழியிலிருந்த புராணங்களின் மொழி பெயர்ப்பாகும். முகமதியர்களின் படையெடுப்பாலும் பிறவற்றுலும் நம் நாட்டில் அமைதி குன்றி யிருந்த காலத்தில் பெருங்காப்பிய வளர்ச்சியில் தடை ஏற்பட்டது. இக்காலத்தில் சில்லறைப் பிரபந்தங்கள் பல எழுந்தன. தூது, உலா, காதல், கலம்பகம் போன்றவை இவற்றிற்கு எடுத்துக்காட்டுகளாகக் கொள்ளலாம். ஐரோப் பியர் வருகைக்குப் பிறகு ஆங்கில அறிவின் தொடர்பினுல் இலக்கியப் படைப்பில் புதிய திருப்பம் ஏற்பட்டுள்ளது. இலக்கிய வானில் தோன்றிய மறுமலர்ச்சியின் காரணமாகத் தமிழில் புதுப்புது நூல்கள் தோன்றி வளர்ந்து வருகின்றன. தமிழ் இலக்கிய வளர்ச்சியால் காணும் இத்தகைய மைல் கற்களிலிருந்து நாம் ஓர் உண்மையை அறிகின்ருேம்.

காலதேச வர்த்தமானங்களுக்கேற்ப மனிதனுடைய நடையுடை பாவனைகள் மாறி வருகின்றன என்றும், அவற்றிற்கேற்ப அவனது ,நோக்கங்களும் விருப்பங்களும் மாறுகின்றன என்றும், அவற்ருல் அவனுல் இயற்றப்பெறும் நூல்களும் புதிய புதிய வடிவங்களைப் பெறுகின்றன என்றும் அறிகின்ருேம். அது கிடக்க.

**செய்யுளின் வகை:** தொல்காப்பியர் செய்யுளியலில் செய்யுட்கே உரிய சில மரபுகளைக் குறிப்பிடுகின்ருர். செய்யுள் அடிவரையறை உள்ளன, அடிவரையறை இல்லன என்று இரண்டு வகைப்படும். அடிவரையறை உள்ளன ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலி என்ற பாக்களும்; தாழிசை, துறை, விருத்தம் என்ற பாவினங்களும் ஆகும். இவற்றின் விவரங்களை முன்னர்க் கண்டோம். ஈண்டு அடிவரையறை இல்லாதனவற்றைக் காண்போம். அவை ஆறு வகைப்படும் என்று கூறுவர் ஆசிரியர் தொல்காப்பியர்.

எழுநிலத் தெழுந்த செய்யுள் தெரியின்
அடிவரை யில்லன ஆறென மொழிப 1

என்பது அவர் கூறும் நூற்பா. எழு நிலமாவன: பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்பன என்பர் இளம்பூரணர்; அகமும் புறமுமாகிய எழுவகைத் திணைகள் என்பர் பேராசிரியர்.[2] அவற்றுள் பாட்டொழிந்த ஆறும் அடிவரையறை இல்லாதவையாகும். இவை இன்னவை என்று தொல்காப்பியர்,

1. செய்யு.—நூற். 157 (இளம்.)
2. ஒப்பிட்டு உணர்க.

“பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே
அங்கதம் முதுசொல் அவ்வேழ் நிலத்தும்
வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்
நாற்பே ரெல்லை அகத்தவர் வழங்கும்
யாப்பின் வழிய தென்மனர் புலவர்.”

—தொல்-பொருள்-செய்-75 (இளம்.)

"அவைதாம்,
நூலி னான வுரையி னான
நொடியொடு புணர்ந்த பிசியி னான
ஏது நுதலிய முதுமொழி யான
மறைமொழி கிளந்த மந்திரத் தான
கூற்றிடை வைத்த குறிப்பி னான." 3

என்ற நூற்பாவால் விரித்தோதுகின்றார். அதன் பிறகு, இவை ஒவ்வொன்றையும் இன்னதெனவும் விளக்குகின்றார்.

பண்டைக் காலத்தில் தமிழ்மொழியில் எண்ணற்ற வகையான இலக்கியங்கள் தோன்றியிருக்க வேண்டும். இலக்கியங்கள் தோன்றிய பிறகுதான் இலக்கணம் தோன்ற வேண்டும் என்பதை நாம் நன்கு அறிவோம். எனவே, தொல் காப்பியரும் அக்காலத்தில் வழங்கின நூல்களுள் முக்கிய மானவற்றைத் தம் இலக்கணத்தில் குறிப்பிடுகின்றார். அவற் றுள் நூல் என்பது, சொல்ல எடுத்துக்கொண்ட பொருள் தொடக்கம் முதல் முடியும்வரை மாறுபாடின்றியமையத் தொகுத்தும் வகுத்தும் காட்டித் தன்கண் அடங்கிய பொருளை விரித்துரைத்தற்கேற்ற சொல்லமைப்பொடு பொருந்தி நுண்பொருள்களை விளக்கும் பண்பினதாகும். இதனைத் தொல்காப்பியர்,

நூலெனப் படுவது நுவலுங் காலை
முதலும் முடிவும் மாறுகோ ளின்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி
உண்ணின் றகன்ற உரையொடு புணர்ந்து
நுண்ணிதின் விளக்கல் அதுவதன் பண்பே.4

என்ற நூற்பாவால் விளக்குவர். நூலின் இயல்பினை விளக்கும் இரண்டு நூற்பாக்கள் மரபியலிலும் காணப் பெறுகின்றன. நூற்பாவின் பொருளை விரித்துரைக்கும் நிலையில் அமைந்த காண்டிகையுரையும், அதனை விளங்கக் கூறும் உரை விகற்பமும் உடையதாகிப் பத்துவகைக் குற்றமு மின்றி நுண்பொருளினவாகிய முப்பத்திரண்டு உத்தி

3. செய்யு.—நூற். 158 (இளம்.)
4. செய்யு.—நூற். 159 (இளம்.)

களோடு பொருந்தி வருவது நூல் என்று சிறப்பித்து உரைக்கப்பெறுவதாகும். இதனை,

ஒத்த சூத்திரம் உரைப்பிற் காண்டிகை
மெய்ப்படக் கிளர்ந்த வகைய தாகி
ஈரைங் குற்றமும் இன்றி நேரிதின்
முப்பத் திருவகை உத்தியொடு புணரின்
நூலென மொழிப நுணங்குமொழிப் புலவர்.[5]

என்று நூற்பாவால் அறிகின்றோம். அன்றியும், நூற்பாவின் முன்னர் உரையை விரித்துரைக்குமிடத்தும், நூற்பாவின் பொருள் விளங்கக் காண்டிகையுரையினை இயைத்து உரைக்குமிடத்தும் இப்பொருளை இவ்வாறு கூறுதல் வேண்டும் என்று விதித்தலும், இப்பொருளை இவ்வாறு கூறலாகாது என விலக்குதலும் ஆகிய இருவகையோடு அவ்விடத்துப் பொருந்துவனவும் நூலின்கண் கூட்டியுரைக்கப்பெறும். இது,

உரையெடுத் ததன்முன் யாப்பினுஞ் சூத்திரம்
புரைதப உடன்படக் காண்டிகை புணர்ப்பினும்
விதித்தலும் விலக்கலும் எனவிரு வகையொடு
புணர்ந்தவை நாடிப் புணர்க்கவும் பெறுமே.[6]

என்ற நூற்பாவால் உணரப்படும். எனவே, மேற்குறிப்பிட்ட ஒரு செய்யுளியல் நூற்பாவும் இரண்டு மரபியல் நூற்பாக் களும் பொதுவாக நூலின் இலக்கணத்தைக் கூறுவன என்பது பெறப்படும். இவ்வாறு அமைந்த நூல் சூத்திரம், ஓத்து, படலம், பிண்டம் என்று நான்கு வகையாக நடைபெறும் என்று நூலின் பாகுபாட்டை (அமைப்பை) உணர்த்துவர் தொல்காப்பியர். அவற்றுள் சூத்திரம் (நூற்பா) ஒரு பொருளையே நுதலிவரும்; ஆடி சிறிதாயினும் அகன்று பட்ட பொருளை அறிவித்தல் போல, சூத்திரமும் படித்த அளவிலேயே அதனால் சொல்லப்பெறும் அகன்ற பொருளும் அதனுள் ஒருங்கு தோன்றி நிற்கும்.

5. மரபியல்-நூற். 100 (இளம்.)
6. மரபியல்-நூற். 101 (இளம்.)

சூத்திரம் தானே
ஆடி நிழலின் அறியத் தோன்றி
நாடுதல் இன்றிப் பொருள்நனி விளங்க
யாப்பினுள் தோன்ற யாத்தமைப் பதுவே. 7

என்பது சூத்திரத்தின் தன்மையை விளக்கும் தொல்காப்பிய நூற்பா. சூத்திரத்தின் தன்மை எவ்வாறிருத்தல் வேண்டும் என்பதற்கு மரபியலிலும் ஒருநூற்பா காணப்படுகின்றது. அது,

சில்வகை எழுத்தின் செய்யுட் டாகிச்
சொல்லுங் காலை உரையகத் தடக்கி
நுண்மையொடு புணர்ந்த ஒண்மைத் தாகித்
துளக்கல் ஆகாத் துணைமை பெய்தி
அளக்கல் ஆகா அரும்பொருட் டாகிப்
பல்வகை யானும் பயன்தெரி புடையது
சூத்திரத் தியல்பென யாத்தனர் புலவர். 8

என்பது. அஃதாவது, சிலவகை எழுத்தினால் இயன்ற யாப்பினதாய், விரித்துரைத்தற்கேற்ற பொருளனைத்தையும் தன்னகத்து அடக்கி நுட்பமும் விளக்கமும் உடையதாகிப் பல்லாற்றானும் பொருளை ஆராய்தற்குக் கருவியாய் விளங்குவது சூத்திரம் ஆகும். ஒத்து என்பது, ஓரினப் பொருளை ஒருசேரத் தொகுத்துரைப்பது,

நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு
ஓரினப் பொருளை ஒருவழி வைப்பது
ஒத்தென மொழிப உயர்மொழிப் புலவர். 9

என்பது தொல்காப்பியம். ஒரு சாதியாயினும், தம்முள் ஒத்தனவே கூறல் வேண்டும் என்பதாம். சொல்லதிகாரத்தில் வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல், விளிமரபு என்ற மூன்றன் பொருளையும் வேற்றுமையென ஓரினமென்று ஓரோத்தாக வைக்காமல் வேறு வேறு வைக்கப்பெற்றிருப்பதனால் இதனை நன்கு அறியலாம். படலம் என்பது, ஓரினமாகிய நெறியின்றிப் பல நெறியான் வருவன பொருளால்

7. செய்யு.—நூற். 162 (இளம்.)
8. மரபியல்—நூற். 102 (இளம்.)
9. செய்யு.—நூற். 163 (இளம்.)

பொதுமொழியால் தொடர்பு பெறுவது; அஃதாவது, ஒரு நெறிப் பொருட்குப் பொதுவாகப் பட்டதனை விலக்கி, விரவிய பொருட்குப் பொதுவாக மொழிவதாகும். இதனை 'அதிகாரம்' என்றும் கூறலாம்.

ஒருநெறி யின்றி விரவிய பொருளால்
பொதுமொழி தொடரின்அது படலம் ஆகும்.[10]

என்பது தொல்காப்பியம். எடுத்துக்காட்டாக, கிளவியாக்கம் முதலாக எச்சவியல் ஈறுகக் கிடந்த ஒன்பதோத்தினும் உள்ள பொருள்கள் வேறுபாடுடையவாயினும், அவையாவும் சொல்லிலக்கணம் உணர்த்தினமையால் 'சொல்லதிகாரம்' என்று பெயர் பெற்றது. பிண்டம் என்பது, மேற்கூறிய சூத்திரம், ஓத்து, படலம் என்ற மூன்று உறுப்புக்களையும் ஒரு சேரத் தன்னகத்தே கொண்டு இலங்குவது.

மூன்றுறுப் படக்கிய தன்மைத் தாயின்
தோன்றுமொழிப் புலவர்அது பிண்டம் என்ப.[11]

என்று இதனை விளக்குவர் தொல்காப்பியர். "மூன்றுறுப் படக்குதலாவது, சூத்திரம் பலவுண்டாகி ஒத்தும் படலமும் இன்றுகிவரினும், ஒத்துப் பலவுண்டாகிப் படலமின்றி வரினும், படலம் பல்வாகி வரினும் அதற்குப் பிண்டம் என்று பெயராம்" என்று இதற்கு விளக்கம் தருவர் இளம்பூரணர். அவற்றுள் சூத்திரத்தால் பிண்டமானதற்கு இறையனர் களவியலையும், ஒத்தினல் பிண்டமானதற்குப் பன்னிரு படலத்தையும், அதிகாரத்தால் பிண்டமானதற்குத் தொல்காப்பியத்தையும் எடுத்துக்காட்டுக்களாகக் கொள்ளலாம். இவற்றை முறையே சிறுநூல், இடைநூல், பெருநூல் என்றும் வழங்குவர். மேற்கூறியவாறு நூல் நான்கு முறையில் நடைபெறும் என்பதை,

ஒருபொருள் நுதலிய சூத்திரத் தானும்
இனமொழி கிளந்த ஓத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானும்
மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானும்என்று
ஆங்கனை மரபின் இயலும் என்ப.[12]

10. செய்யு.— நூற் 164 (இளம்.)
11. செய்யு.— நூற். 165 (இளம்.)
12. செய்யு.— நூற். 161 (இளம்.)

என்ற நூற்பாவால் விளக்குவர் ஆசிரியர் தொல்காப்பியர். இது நூலின் அமைப்பினைப்பற்றிக் கூறும் நூற்பாவாகும். இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்னும் மூன்று உறுப்பினை அடக்கி நிற்கும் அகத்தியத்தைப் 'பிண்டத்தினை அடக்கிய வேறொரு பிண்டம்' என்று கூறுவர் நச்சினார்க்கினியர். இவற்றையெல்லாம் எண்ணும்பொழுது 'நூல்' என்பது இலக்கணத்தையே குறிக்கின்றது என்பது தெரிய வரும்.

தொல்காப்பியர் காலத்திலும் அதற்கு முன்னரும் இக்காலத்தில் நாம் 'உரை நடை' (prose) என்று வழங்கும் நூல்கள் அவ்வளவாக இருந்ததில்லை. பண்டையோர் அனைத்தையும் செய்யுள் நடையிலேயே அமைக்கும் நெறியைப் பின்பற்றி வந்ததாலும், இக்காலத்திலுள்ளனபோல் எழுது கருவிகளும் பிறவும் அக்காலத்தில் இல்லையாதலாலும் அக்காலத்தில் உரைநடைச் செல்வங்கள் அதிகமாக வளரவில்லை என்று ஒருவாறு ஊகிக்கலாம். இதைப்பற்றிய விவரங்களை உரைநடை வளர்ச்சியைபற்றிக் கூறும் அறிஞர் நூல்களில் கண்டு கொள்க.[13] எனினும், ஒரு சிறிது வழங்கினவற்றை ஆசிரியர் தொல்காப்பியர் தம் நூலில் குறிப்பிடுகின்றார்.

பாட்டிடை வைத்த குறிப்பி னானும்
பாவின் றெழுந்த கிளவி யானும்
பொருள்மர பில்லாப் பொய்ம்மொழி யானும்
பொருளொடு புணர்ந்த நகைமொழி யானுமென்று
உரைவகை நடையே நான்கென மொழிப.[14]

என்ற நூற்பா உரையின் பாகுபாட்டினை உணர்த்துகின்றது. பல சொல் தொடர்ந்து பொருள் காட்டுவனவற்றுள் ஓசை தழுவியவற்றைப் பாட்டென்றும் ஓசையின்றிச் செய்யுள் தன்மையதாய் வருவதை நூல் என்றும் குறித்த தொல்காப்பியர், அவ்வகையின்றி வரும் உரைத்திறனை மேற்காட்டிய

13. இவ்வாசிரியரின் "தமிழ் பயிற்றும் முறை" என்னும் நூலில் இவ்வரலாறு ஓரளவு சுருக்கமாக ஆராயப்பெற்றுள்ளது. பக்கம் (363—368) பார்க்க. (முதற்பதிப்பு)

14. செய்யு.– நூற். 166(இளம்.)

நூற்பாவில் குறிப்பிடுகின்றார் என்பது ஈண்டு அறியத்தக்கது. இவற்றுள் 'பாட்டிடை வைத்த குறிப்பு' என்பது, உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாகிய சிலப்பதிகாரத்தில் இடையிடையே வரும் உரைநடையைப் போன்றது. 'பாவின் றெழுந்த கிளவி' என்பது, உலக வழக்கில் பாட்டின்றித் தனியே வழங்கும் வசன நடை. "வழக்கின்கண் ஒரு பொருளைக் குறித்து வினவுவாரும் செப்புவாரும் கூறும் கூற்று" என்பர் இளம்பூரணர். 'பொருள் மரபில்லாப் பொய்ம்மொழி' என்பது, ஒரு பொருளின்றிப் பொய்படத் தொடர்ந்து சொல்லுவது. அஃதாவது, யானையும் குருவியும் தம்முள் நட்பாடி இன்னவிடத்தில் இன்னவாறு செய்தன என்று அவற்றின் இயல்புக்கு ஒவ்வாத வகையில் இயைத்துரைக்கப்பெற்றுக் கதையளவாய் வழங்கும் உரை நடை.[15] 'பொருளொடு புணர்ந்த நகைமொழி' என்பது, பொய்யெனப்படாது மெய்யெனப்பட்டும் நகைப்பொருள் அளவாய் வருவது. அஃதாவது, முழுதும் பொய் என்று தள்ளப் படும் நிலையிலமையாது உலகியலாகிய உண்மை நிலையை ஒருவாற்றான் அறிவுறுத்துவனவாய்க் கேட்போருக்கு நகைச் சுவையை விளைவிக்கும் பஞ்ச தந்திரக் கதைபோலும் உரை நடை.

பிசி என்பது 'புதிர்' அல்லது 'விடுகதை' என்று கருதலாம். இஃது ஒப்புமைத் தன்மையொடு பொருந்திய உவமப் பொருளும், ஒன்று சொல்ல மற்றொன்று தோன்றுந் துணிவு பட வரும் சொல் நிலையும் என்று இருவகைப்படும்.

ஒப்பொடு புணர்ந்த உவமத் தானும்
தோன்றுவது கிளந்த துணிவி னானும்
என்றிரு வகைத்தே பிசிநிலை வகையே.[16]

என்பது தொல்காப்பிய நூற்பா. 'யானை செல்லும்' என்று வெளிப்படையாகச் சொல்லாமல் 'பிறை கவ்வி மலை நடக்

15. பண்டைக் காலத்தில் வழங்கி வந்த 'சிறுகதைச் செல்வத்தை'த்தான் இவ்வாறு தொல்காப்பியர் குறிப்பிட்டார் எனக் கருதலாம்.

16. செய்யு.—நூற். 169 (இளம்.)

கும்' என உவமானத்தால் குறிப்பிற் புலப்பட வைத்தலே 'ஒப்பொடு புணர்ந்த உவமம்' என்பது.

"நீராடான் பார்ப்பான் நிறஞ்செய்யான் நீராடில்
வராஅடும் நீர்க் காக்கை"

என்பது 'நெருப்பு' என்னும் பொருள் குறிப்பில் தோன்ற அமைந்த சொற்றொடர் நிலை. இது 'தோன்றுவது கிளந்த துணிவு' என்னும் பிசி வகைக்கு எடுத்துக்காட்டு.

சென்ற காலத்தில் புகழுடன் வாழ்ந்த அறிஞர் பெருமக்களிடத்து அமைந்த நுண்ணறிவு, சொல் வன்மை, உயர்ந்த நோக்கம், அன்னோர் பெற்றிருந்த நல்வாழ்க்கை அனுபவங்கள் ஆகிய இவையெல்லாவற்றையும் திரட்டித் தருதல் 'முதுமொழி' என்பது. பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகிய 'பழமொழி நானூறு' என்பது இவ்வகையில் அடங்கும். முதுசொல், முதுமொழி, மூதுரை, பழமொழி என்பன ஒரு பொருள் குறித்த பல சொற்களாகும். முதுமொழியைத் தொல்காப்பியர்,

நுண்மையும் சுருக்கமும் ஒளியும் உடைமையும்
மென்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப. [17]

என்ற நூற்பாவால் குறிப்பிடுவர்.

இனி, மந்திரம் என்ற இலக்கிய வகையைக் காண்போம். இதனைத் தொல்காப்பியர்,

நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப. 18

என்று கூறுவர். சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டும் குறைவின்றிப் பயன்தரச் சொல்லும் ஆற்றலுடையாரே 'நிறைமொழி மாந்தர்' ஆவார். அஃதாவது, இரு வகைப் பற்றுக்களையும் நீக்கி, ஐம்புலன்களையும் அடக்கி, எவ்வுயிர்க்கும் அருளுடையராய் வாழும் பெரியோர். ஆணை

17. செய்யு. நூற். - 170 (இளம்.)
18. செய்யு. நூற். - 171 (இளம்.)

யிற் கிளத்தலாவது, 'இஃது இவ்வாறு ஆகுக' எனத் தமது ஆற்றல் தோன்றச் சொல்லுதல். "மறைமொழி - புறத்தாற்குப் புலனாகாமல் மறைத்துச் சொல்லும் சொற்றொடர்" என்பது பேராசிரியரின் விளக்கம். எனவே, 'இவ்வாறு ஆகுக' என்று தமது ஆணையால் சொல்லப்பெற்று, அவ்வாற்றலனைத்தையும் தன்கண் பொதிந்து வைத்துள்ள செறிவுடைய நன்மொழியே 'மந்திரம்' என்பது.

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும் 19

என்ற குறளில் இதனை 'நிறைமொழி' எனக் குறிப்பிடுகின்றார், வள்ளுவப்பெருந்தகை. 'நிறைமொழி என்பது, அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப்பொருள்களைப் பயந்தே விடும் மொழி' என்பர் பரிமேலழகர். எனவே, மறைமொழி என்பதற்கு, நிறைமொழி மாந்தரது ஆணையின் ஆற்றல் அனைத்தையும் தன்னகத்தே மறைத்துக்கொண்டுள்ள மொழி எனவும் பொருள் கொள்ளுதல் பொருந்தும். இதையே, ஆசிரியர் தொல்காப்பியர் பிறிதோரிடத்தில்,[20] "வாய்மொழி" என்ற பெயரால் குறிப்பிடுவர். திருவாய்மொழி, திருமொழி என்ற பெயர்கள் இப்பெயர் வழக்கத்தை அடியொற்றி அமைந்தவையாகும். எனவே, சபித்தற் பொருட்டாகிய மந்திரச் செய்யுளை அங்கதப் பாட்டெனவும், வசைப்பொருட்டாகாது உலக நலங்குறித்து வரும் மறைமொழியினையே மந்திரம் எனவும் வழங்குதல் தொல்காப்பியனார் கருத்தென்பது ஈண்டு அறியத்தக்கது. திருமூலரின் திருமந்திரத்தைச் சிறந்த மந்திர இலக்கியமாகக் கொள்ளலாம்.

எழுத்தின் இயல்பினாலும் சொல்லின் தொடர்ச்சியாலும் புலப்படாது, சொல்லினால் உணரப்படும் பொருட்குப் புறத்தே பொருளுடைத்தாய் நிற்பது 'குறிப்பு மொழி' ஆகும்; இதுவே 'கூற்றிடை வைத்த குறிப்பு' என்பது.

---

19. குறள்—28.
20. 'பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே. (செய்யு-நூற். 75.)

எழுத்தொடும் சொல்லொடும் புணரா தாகிப்
பொருட்புறத் ததுவே குறிப்புமொழி என்ப. 21

என்பது தொல்காப்பியம். கவியால் பொருள் தோன்ருது பின்னர் 'இன்னது இது' எனக் குறிப்பினுல் உய்த்துணர்ந்து சொல்ல வைத்தலின் இது 'குறிப்பு மொழி' எனப்பட்டது. பாட்டிடைப் பொருள் பிறிதாகி அதனிடையே குறித்துக் கொண்டு உணரினல்லது இக்குறிப்பு புலனுகாது என்பதை உணர்த்தவே, இதனைக் 'கூற்றிடை வைத்த குறிப்பு' என்ருர் ஆசிரியர். ஒருசார் ஆசிரியரால் இது **பொருளிசை** என்றும் வழங்கப் பெறும். இதற்கு,

'குடந்தலையர் செவ்வாயிற் கொம்பெழுந்தார் கையின்
அடக்கின மூக்கின ராம்'

என்ற எடுத்துக்காட்டு தருவர் பேராசிரியர். இதனுள் குடமே தலையாகப் பிறந்தார் எனவும், கொம்பெழுந்த வாயினர் எனவும், கையுட்கொண்ட மூக்கினர் எனவும் கூறியக் கால், எழுத்தும் சொல்லும் பொருளும் இயல்பிலவாதலும் குறிப்பினுன் அதனைக் **குஞ்சரம்** எனக் கொண்டவாறும் கண்டு கொள்க. எனவே, மேற்கூறியனவற்ருல் அடி வரையறை யில்லாதனவாகிய அறுவகைச் செய்யுள்களின் இயல்பு ஒருவாறு உணர்த்தப்பெற்றது.

**பண்ணத்தி**: பண்ணத்தி என்பது, இசை நூலின் பாவினமாகும். பாட்டின்கண் கலந்த பொருளையுடையன வாகிப் பாட்டுக்களின் இயல்பையுடையன 'பண்ணத்தி' எனப்படும்.

பாட்டிடைக் கலந்த பொருள வாகிப்
பாட்டின் இயல பண்ணத் திய்யே. 22

என்பது இதனையுணர்த்தும் நூற்பாவாகும். "பண்ணைத் தோற்றுவித்தலாற் பண்ணத்தி என்ருர். அவையாவன சிற்றிசையும் பேரிசையும் முதலாக இசைத் தமிழில் ஓதப்படுவன" என்பர் இளம்பூரணர். 'பாட்டிடைக் கலந்த பொருளவாகி' என்று ஆசிரியர் கூறுதலான், இயற்றமிழ்ப் பாடல்களுக்கு உரியனவாகச் சொல்லப்பெற்ற பொருள்களே பண்

21. செய்யு.-நூற். 172 (இளம்.)
22. செய்யு.-நூற். 173 (இளம்.)

ணைத் தோற்றுவிக்கும் செய்யுளாகிய இவ்விசைப்பாடல் களுக்கு உரியன என்பதும், பாட்டு எனக் கூறாது 'பாட்டின் இயல்' என்றமையால், இயற்றமிழ்ப் பாடல்களுக்கு உரியன வாக முற்கூறப்பட்ட நோக்கு முதலிய செய்யுளுறுப்புகள் சிலவற்றை இவ்விசைப்பாடல்கள் பெற்றே வருதல் வேண் டும் என்ற நியதியில்லை என்பதும் நன்கு விளங்கும்.

இவண் கூறப்பெற்ற பண்ணத்தி பிசியொடு ஒத்த இயல் பினது என்பர் ஆசிரியர்.

அதுவே தானும் பிசியொடு மானும்.[23]

என்ற நூற்பா இதனை உணர்த்தும். "பிசியென்பது, இரண் டடியளவின்கண்ணே வருவதாதலின் இதுவும் இரண்டடி யான் வருமென்று கொள்ளப்படும்" எனவும்,

"கொன்றை வேய்ந்த செல்வன் அடியினை
என்றும் ஏத்தித் தொழுவோம் யாமே."

என்பது, "பிசியொடு ஒத்து அளவினதாகிப் பாலையாழென்னும் பண்ணிற்கு இலக்கணப் பாட்டாகி வந்தமையின் பண்ணத்தி யாயிற்று" எனவும் இளம்பூரணர் கூறிய விளக்கம் ஈண்டு நோக்கத் தக்கது.

பண்ணத்தி என்னும் இவ்விசைப்பாடல்களின் அடியள வின் பேரெல்லை பன்னிரண்டு அடியாகும்; இவற்றின் அடி நாற்சீரினும் மிக்கும் குறைந்தும் வரினுங் கடியப்படாது. இதனை,

அடிநிமிர் கிளவி ஈராறு ஆகும்
அடியிகந்து வரினும் கடிவரை யின்றே.[24]

என்ற நூற்பாவினுல் அறியலாம்.

மேற்கூறியவை யாவும் அடிவரையறையில்லாத செய்யு ளின் விகற்பங்களாகும். அஃதாவது, அவற்றின் அளவியல்[25] உணர்த்தப்பெற்றவாகும்.

23. செய்யு.-நூற். 174 (இளம்.)
24. செய்யு.-நூற். 175 (இளம்.)
25. செய்யுளின் பன்னிரண்டாவது உறுப்பு.

**வாழ்க்கையின் நோக்கம் :** இவ்வுலகத்தில் நாம் கல்வி பெறும் நோக்கம் வையத்தில் வாழ்வாங்கு வாழ வழிவகுத்துக் கொள்வதற்காகவே என்பது இக்காலக் கல்வி நிபுணர்களின் கொள்கை. பண்டைப் பெருமக்களது கொள்கையும் இதுவே யாகும்.

'அறம்பொருள் இன்பம்வீ டடைதல்நூற் பயனே.'[26]

என்ற நன்னூற் பாயிர நூற்பா இதனை நன்கு வலியுறுத்தும். தொல்காப்பியரின் குறிக்கோளும் இதுவே. செய்யுள்களைப் பற்றிப் பேசுங்கால் அவர் இக்கருத்தினையே கூறியிருப்பதை மேலே குறிப்பிட்டோம். இவ்வுலகிலுள்ள மக்கள் அனைவரும் பொருள் பெற்று, அறம் புரிந்து, இன்பம் துய்த்து வாழ்வார்களாயின், அவர்கட்கு இவ்வுலகமே வானுலகமாகும். விடு என்னும் சொல்லின் பொருளான 'விடுதலை' என்பதைப் பெற்ற உலகமாகும் ; இதுவே பழந்தமிழரின் கருத்து. எனவே, பண்டையோர் எழுதிய நூல்கள் யாவும் வாழ்விற்கு வழிகோலுவதாகவே அமைந்திருந்தன,

**நூல்களின் பிரிவு :** பண்டையோர் எழுதிய நூல்கள் முதல் நூல், வழி நூல் என்ற இரு பிரிவினுள் அடங்கும். இதனை ஆசிரியர் தொல்காப்பியனார்,

மரபுநிலை திரியா மாட்சிய வாகி
உரைபடு நூல்தாம் இருவகை நிலைய
முதலும் வழியுமென நுதலிய நெறியின.[27]

என்று கூறுவர். மரபாவது, நூலுக்கு இன்றியமையாத இயல்பு. நூல்கள் அவ்வியல்பு திரியாத மரபுடைத்தாகி வருதல் வேண்டும். முதல் நூல் என்பது, ஓர் ஆசிரியர் தானே பல செய்திகளை ஆராய்ந்து கண்டறிந்த உண்மைகளை மக்கள் அறியும்படி எழுதி வைப்பது. 'ஒப்பு நோக்குக் கொள்கையைப்[28] பற்றி ஐன்ஸ்டைன்[29] எழுதிய நூலும்,

26. நன்னூல் - நூற்.
27. மரபியல் - நூற். 95 (இளம்.)
28. ஒப்பு நோக்குக் கொள்கை - Theory of Relativity.
29. ஐன்ஸ்டைன் - Einstein.

**'இராமனின் விளைவு'** [30] என்பதைப் பற்றி சர். சி. வி. இராமன் எழுதிய நூல்களும் முதல் நூலுக்கு எடுத்துக்காட்டுக்களாகும். முதல் நூலைச் சுருக்கியோ பெருக்கியோ எழுதுவது **வழி நூல்** ஆகும். இவற்றைத் தொல்காப்பியர்,

> வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
> முனைவன் கண்டது முதனூ லாகும் [31]
> வழியெனப் படுவ ததன்வழித் தாகும் [32]

என்ற நூற்பாக்களால் கூறுவர்.

**வழி நூல்களின் வகைகள் :** அதன் பிறகு வழி நூல்களின் வகைகளை விளக்கப் புகுகின்றார் ஆசிரியர்.

> தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்
> ததர்ப்பட யாத்தலோ டனைமர பினவே [33]

என்பது வழி நூல்களின் வகையை விளக்கும் தொல்காப்பிய நூற்பா. அஃதாவது,

*(1)* **தொகுத்த**லென்பது, முதல் நூலின் விரிந்து பரந்து பட்ட பொருள்களைச் சில்வாழ்நாட் சிற்றறிவின் மாக்கட்கு அறியத் தொகுத்துக் கூறுதல். எ - டு. சீவக சிந்தாமணிச் சுருக்கம், கந்த புராணச் சுருக்கம் என்பன போன்றவை.

*(2)* **விரித்த**லென்பது, முதல் நூலில் தொகுத்துச் சொல்லப்பெற்றவற்றை விரித்து விளக்குதல். எ - டு. இக் காலத்தில் பல துறைகளிலும் வெளிவரும் விளக்க நூல்கள் போன்றவை.

*(3)* **தொகை விரி** என்பது, முதல் நூலில் விரிவாக உள்ளனவற்றைச் சுருக்கியும், சுருக்கமாக உள்ளனவற்றை விரித்தும் மக்களுக்கு விளங்கும் முறையில் எழுதுதல். எ - டு. இன்று அமெரிக்க நாடுகளிலிருந்து பல துறைகளிலும் வெளிவரும் பல்வேறு நூல்களை இதற்கு எடுத்துக் காட்டுக்களாகக் கூறலாம்.

---

30. இராமனின் விளைவு - Raman's Effect.
31. மரபியல் - நூற். 96 (இளம்.)
32. ஷை - நூற். 97 (இளம்.)
33. மரபியல் - நூற். 99 (இளம்.)

(4) **மொழிபெயர்த்து அதர்ப்பட யாத்தல்** என்பது, வேறு மொழிகளில் உள்ள சிறந்த நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்து எழுதுதல். எ - டு. ஆங்கிலம், குசராத்தி, இந்தி, மராத்தி. வங்காள மொழிகளிலிருந்து தமிழில் மொழி பெயர்த்து வெளிவரும் சிறுகதை இலக்கியங்கள், புதினங்கள் ; ஆங்கிலம் போன்ற மேனாட்டு மொழிகளிலிருந்து அறிவியல் போன்ற பல்வேறு துறைகளில் மொழி பெயர்க்கப் பெற்று வெளிவரும் தமிழாக்க நூல்கள்.

சிறந்த நூல்கள் எம்மொழிகளிலிருப்பினும் அவற்றை மொழி பெயர்த்துக்கொள்ளும் உயரிய நெறி தமிழர்களிடமிருந்தது என்பதற்கு இது போதிய சான்றாகும். இடைக் காலத்தில் வடமொழியிலிருந்து தமிழுக்குப் பல நூல்கள் வந்தன. இன்று மேல் நாட்டு மொழிகளிலிருந்து பெயர்க்கப் பெற்று வெளி வந்துகொண்டிருக்கின்றன. இன்னும் இந்த மனப்பான்மை நம்மிடம் விரிய வேண்டும். மொழிப்பற்றுடைய பல மொழியினரும் தங்கள் இலக்கியங்களை வளர்ப்பதற்கு 'மொழி பெயர்த்து அதர்ப்பட யாத்தல்' முறையைப் பின் பற்றுதல் வேண்டும். உலக மக்களுக்குள் ஒற்றுமையும் பண்பாட்டுத் தொடர்பும் வளர வேண்டுமாயின் ஒவ்வொரு மொழியிலும் தோன்றும் சிறந்த இலக்கியங்கள் யாவும் ஏனைய மொழிகளிலும் பரவ வேண்டும். தொல்காப்பியர் காட்டும் பண்டைத் தமிழரின் பண்பு இற்றைத் தமிழருக்கும் முற்றிலும் பொருந்தும். பல துறைகளிலும் ஒரு எழுச்சியை ஏற்படுத்திய பாரதியார்,

> சென்றிடுவீர் எட்டுத் திக்கும்—கலைச்
> செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்

என்று கூறி கலைத்துறையிலும் அறை கூவி அழைப்பதைக் காண்மின். மேலும் அவர்,

> 'பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
> தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்.'

என்றும் வழிகாட்டுகின்றார் ; இது வழி நூல்களைப் பெருக்கி இலக்கிய வளங்கொழிக்கச் செய்யும் வழியாகும். நம்முடைய இளைஞர்கள் பல புதிய துறைகளையும் நன்கு

பயின்று, அத்துறைகளில் ஆய்வுகள் நடத்திப் புது நூல்களை யும் எழுத வேண்டும்.

'இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும்''

என்பது முதல் நூல்களைப் பெருக்குவதற்குப் பாரதியார் காட்டும் வழியாகும். இவ்வாறு தமிழ் மொழியில் முதல் நூல்களையும், வழி நூல்களையும் பெருக்கித் தமிழ் மொழியை உரமாக்க வேண்டும். பிறநாட்டுச் செல்வங்களைக் கொணர்ந்து வீட்டுச் செல்வத்தைப் பெருக்க வேண்டியது ஒவ்வொரு இந்தியனின் கடமையாகும்.

**தமிழ் இலக்கிய வரலாறு -தொல்காப்பியம்**[34] என்ற நூலின் ஆசிரியர் நூன் மரபுபற்றிச் செய்யுளியலிலும் மரபியலிலும் காணப்பெறும் நூற்பாக்களை ஒப்பவைத்து நோக்கின் இவ் விருவகை நூற்பாக்களும் சொல் நடையாலும் பொருளமைப் பாலும் தம்முள் வேறுபடுகின்றனவென்றும், ஆகவே இவை தொல்காப்பியனார் காலத்திற்குப் பின்பு இயற்றப்பெற்று வழங்கியவை என்றும், பிற்காலத்தவரால் எல்லா நூற்கும் உரிய பொதுப்பாயிரமாகத் தொல்காப்பியத்தின் இறுதியில் சேர்க்கப்பெற்றிருத்தல் வேண்டும் எனவும், பின்வந்த உரையாசிரியர்கள் இவற்றையும் தொல்காப்பியரின் வாய் மொழியெனவே கொண்டு உரையெழுத நேர்ந்ததெனவும் எண்ணுதற்கு இடமுள்ளது என்றும் செய்யும் ஊகம் மிகவும் பொருத்தமென்றே தோன்றுகின்றது. இதனை வலியுறுத்த நன்னூலின் மயிலைநாதர் உரையிலிருந்து அவர் காட்டும் சான்று இதனை மேலும் நன்கு வலியுறுத்துகின்றது.

எனினும், நூலின் பொது இலக்கணத்தைக் கூறும் நூற் பாக்களையும், நூலின் அமைப்பினைக் கூறும் நூற்பாவையும் வேறு பிரித்து உணரவேண்டும் என்பது ஈண்டு அறியத் தக்கது. செய்யுளியலில் நூலின் இயல்பும், நூற் பாகுபாடு களும், பாகுபாடுகளின் இலக்கணமும் கூறப்பெற்றுள்ளன; மரபியலில் நூலின் இலக்கணமும் நூலின் வகைகளும் அவ்வகைகளின் இலக்கணமும், உரைவகைகளும் பிறவும் கூறப்பெறுகின்றன.

---

34. வெள்ளை வாரணனார், க: தமிழ் இலக்கிய வரலாறு - தொல் காப்பியம். பக்கம்(305 - 306).

## 29. செய்யுளின் உறுப்புக்கள்—(2)

இதற்கு முன்னைய மூன்று கட்டுரைகளில் தனி நிலைச் செய்யுட்கு உரியனவாகக் கூறப்பெற்ற பன்னிரண்டு உறுப்புக்களை ஆராய்ந்தோம். இனி, எஞ்சியுள்ள பதினான்கு உறுப்புக்களையும் ஈண்டு ஆராய்வோம்.

13. **திணை:** செய்யுளிற் கூறப்பெறும் ஒழுகலாறுகளை அகத்திணை, புறத்திணை என்று பாகுபடுத்தி அறிதற்குரிய கருவி 'திணை' என்று வழங்கப்பெறும். அத்திணையாவது கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல், பெருந்திணை என்னும் ஏழு திணைகளும் முறையே மேற்சொல்லப்பட்டன என்பர் ஆசிரியர்.

> கைக்கிளை முதலா ஏழ்பெருந்திணையும்
> முற்கிளந் தனவே முறையி னான 1

என்ற நூற்பாவினால் இதனை அறியலாகும். "முறைமையிற் சொல்லுதலாவது, பாடாண்பாட்டினைக் கைக்கிளைப் புறமெனவும், வஞ்சியை முல்லைப் புறமெனவும், வெட்சியைக் குறிஞ்சிப் புறமெனவும், வாகையைப் பாலைப் புறமெனவும், உழிஞையை மருதப் புறமெனவும், தும்பையை நெய்தற் புறமெனவும் ஓதிய நெறி கொள்ளப்பெறும். இவ்வாறு கொள்ளவே, பதினான்கு திணையும் ஏழாகியடங்குமாயின" என்று விளக்குவர் இளம்பூரணர். இவற்றின் விவரங்கள் யாவும் முன்னைய கட்டுரைகளில் விரிவாக விளக்கப்பெற்றன.

14. **கைகோள்:** இது அகத்திணையொழுக்க விகற்பமாகிய களவு, கற்பு என்னும் பாகுபாடுகளை அறியச் செய்தல்.

1. செய்யு.- நூற்.177 (இளம்.)

கைகோள் என்பது 'ஒழுக்கங்கோடல்' என்பர் பேராசிரியர்.[2] களவு, கற்பு என்பனவற்றைப்பற்றி முன்னர் விளக்கப் பெற்றது.[3]

**15. கூற்று :** செய்யுள் கேட்டாரை 'இது கூறுகின்றார் இன்னார்' என உணர்வித்தல் **கூற்று** எனப்படும். இதன் கூறுபாடு செய்யுளியல் 181 முதல் 187 முடியவுள்ள நூற் பாக்களில் விரித்துரைக்கப் பெறுகின்றது.

பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, தலைவன், தலைவி என்று சொல்லப்பெற்ற கலந்தொழுகும் மரபினை யுடைய அறுவகையோரும் **களவு** என்னும் ஒழுகலாற்றில் கூற்று நிகழ்த்துவதற்குரியவர். பாணன், கூத்தன், விறலி, பரத்தை, அறிவர், கண்டோர் என்னும் அறுவரும் முற்கூறிய அறுவருடன் **கற்பு** என்னும் ஒழுகலாற்றில் கூற்று நிகழ்த்து வதற்குரியவர்.

தலைமகள் வாழும் ஒரே ஊரில் உள்ளவர்கள், அவளது அயல்மனையில் உள்ளார், சேரியில் உள்ளார், அவளது நோயின் கூறுபாட்டினைக் குறிப்பினால் அறிவோர், தந்தை, தமையன் ஆகிய இன்னோர் கூற்றாகப் பிறர்கொண்டு கூறின் அல்லது இவர் தாமே கூறினாராகச் செய்யுள் செய்தல் இல்லை.

எ-டு. **"எந்தையும்,**
**நிலனுறப் பொறாஅன் சீறடி சிவப்ப**
**எவன்இல குறுமகள் இயங்குதி என்னும்"**

என்ற அகப்பாட்டடிகள் (அகம் 12) தந்தையுட்கொண்டு கூறியனவாக வந்துள்ளதைக் காண்க.

தலைவனொடும் தலைவியொடும் நற்றாய் (அவளைப் பெற்ற தாய்) கூறியதாகக் கூறும் வழக்கம் இல்லை.[4] எனவே, நற்றாய் ஏனையோரை நோக்கியே கூறுவாள் என்பது பெறப் படும். நற்றாய், செவிலி, தோழி என்னும் இவர்களோடும்

2. செய்யு. - நூற். 188(பேரா.)
3. இந்நூல் பக்கம்—(66—79)
4. செய்யு. - நூற். 184 (இளம்.)

தலைவனொடும் தலைவியோடும் வழியிடையே கண்டோர் உரையாடுதல் உலகியலில் கண்ட வழக்கம் ஆகும்.

எ - டு. வில்லோன் காலன கழலே தொடியோள்
மெல்லடி மேலன சிலம்பே.

என்ற குறுந்தொகையடிகள் (குறுந் - 7) செவிலிக்குக் கண்டோர் கூறியனவாக அமைந்திருத்தல் காண்க.

தலைவியை உடன்கொண்டு போகும் இடைச்சுரத்தின் கண்ணே, தலைமகன் உலகியல் நெறியை உளங்கொண்டு தனது ஆற்றல் தோன்ற ஆணைமொழியை எடுத்துரைத்தற்கும் உரியன் என்பர் ஆசிரியர்.[5] எனவே, மெல்லிய காமம் நிகழுமிடத்து வன்மொழியாகிய ஆணையினைத் தலைமகளிடம் கூறுதல் பொருந்தாதாயினும், உலகியல் கருதி அவ்விடத்துக் கூறுதல் தவறாகாது என அறிவுறுத்தாராயிற்று.

தலைவனும் தலைவியும் அல்லாத ஏனைப் பதின்மரும் தலைமகனும் தலைமகளுமாகிய இருவரோடும் மேற்கூறிப் போந்த மரபினால் இடமும் காலமும் கருதி உரை நிகழ்த்துவதற்கு உரியராவர்.

ஒழிந்தோர் கிளவி கிழவன் கிழத்தியொடு
மொழிந்தாங் குரியர் முன்னத்தின் எடுத்தே. 6

என்ற நூற்பா இதனை விளக்கும். "'எடுத்தென்பது' அறம் பொருள் இன்பங்கட்குத் தகாத சொற்களை எடுத்துக் கூறுதல். அஃதாவது, தலைவனைப் பார்ப்பானும் பாங்கனும் கழறலும், தோழி இயற்பழித்தலும், தலைவியைச் செவிலி யலைத்தலும், பாணர் கூத்தர் பாசறையிற் சென்று கூறுதலும், தோழி தலைமகனை வற்புறுத்தலும் முதலியன" என்று இளம்பூரணர் எடுத்தோதுவர்.

**16. கேட்போர் :** 'இன்னார்க்குச் சொல்லுகின்றது இது' எனத் தெரிவித்தல் கேட்போர் என்பதாம்.

தலைவியும் தலைவனும் கூறக் கேட்போர் மேற்சொல்லப்பட்ட பதின்மருமே. பார்ப்பார், அறிவர் என்னும் இருவர்

5. செய்யு.—நூற். 186 (இளம்.)
6. செய்யு.—நூற். 187 (இளம்.)

கூற்றும் எல்லோரும் கேட்கப் பெறுவர். பரத்தையும் வாயில்களும் என்னும் ஈரிடத்தும் நிகழும் கூற்றுக்கள், தலைமகள் கேட்பாளாகக் கருதிச் சொல்லாக்கால் பயன்படுவன அல்ல. எனவே, தலைமகள் பாங்காயினர் கேட்பச் சொல்லினும் அமையும் என்பதாயிற்று. வாயில்கள் உசாவுமிடத்துத் தலைமகளை நோக்காது தமக்குள்ளும் உசாவுதலுரித்து.[7]

ஞாயிறு, திங்கள், அறிவு, நாண், கடல், கானல், விலங்கு, மரம், தனிமையுணர்வை மிகுதிப்படுத்தும் பொழுது, பறவை, நெஞ்சம் எனச் சொல்லப்பெற்ற பதினொன்றும் ஒன்றைக் கூறுதலும் கேட்டலும் இல்லாத அவை போல்வன பிறவும் தாம் கருதிய நெறியினால் ஒன்றைச் சொல்லுவன போலவும் கேட்பன போலவும் சொல்லியமையப்பெறும் என்பர் அறிஞர்.[8]

நேர்ந்தநங் காதலர் நேமி நெடுந்திண்டேர்
ஊர்ந்த வழிசிதைய வூர்கின்ற ஓதமே
பூந்தண் பொழிலே புணர்ந்தாடும் அன்னமே
ஈர்ந்தண் துறையே இதுதகா தென்னீரே. [9]

இப்பாடலுள் கடல், கானல், புள், மரம் கூறப்பட்டமை காண்க. இங்ஙனம் காதலால் மனங்கலங்கியவர்கள் பறவை விலங்குகளோடும் உயிரிலாப் பொருள்களோடும் பேசுவதாகக் கற்பனை செய்தல் எல்லா நாட்டு இலக்கியங்களிலும் உண்டு; இதனையொட்டியே தூதுப்பிரபந்தங்கள் பிற்காலத்தில் எழுந்தன.

**17. இடம்:** ஒரு செய்யுளைக் கேட்டால் 'இதன்கண் கூறப்பெறும் பொருள் நிகழ்ச்சி இன்ன இடத்து நிகழ்ந்தது' என அறிதற்கு ஏதுவாகியதோர் உறுப்பு இடம் எனப்படும். **இடம்** எனினும் **களம்** எனினும் ஒக்கும். இதனை,

ஒருநெறிப் பட்டாங் கோரியல் முடியும்
கரும நிகழ்ச்சி இடமென மொழிப [10]

என்ற விதியால் விளக்குவர் ஆசிரியர். ஒரு நெறிப்படுதலா

7. செய்யு.-நூற். 188–191 (இளம்.)
8. ஷ நூற். 192 (இளம்.)
9. சிலப்.—கானல்வரி-பாடல் 35.
10. செய்யு.—நூற். 193 (இளம்.)

வது, அகமாயினும் புறமாயினும் ஒரு பொருள்மேல் வருதல். ஓரியல் முடிதலாவது, அகத்தின்கண் களவு, கற்பு என்பவற்றுள் ஒன்றைப்பற்றியோ, அல்லது அவற்றின் விரியாகிய இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப் பாடு முதலியவற்றுள் ஒன்றைப்பற்றியோ, புறத்தின்கண் நிரைகோடல், மீட்டல், மேற்சேறல் முதலியவற்றுள் ஒன்றைப்பற்றியோ வருதல். கரும நிகழ்ச்சியாவது, மேற்கூறிய அகமும் புறமுமாகிய பொருட்பகுதிகளுள் யாதாயினும் ஒன்றைப்பற்றி நிகழும் வினை நிகழ்ச்சி. இது 'வினை செய்யிடம்' எனப்படும். காடுறை யுலகம் முதலாக மேற்சொல்லப்பட்ட நிலப்பகுதிகள் முன்னர்த் திணையென அடக்கப்பட்டனவாதலால், ஈண்டு இடமென்றது வினைசெய்யிடத்தையே என்பது நன்கு புலனாகும். கரும நிகழ்ச்சி என்றதனால் அந்நிகழ்ச்சிக்கு நிலைக்களமாகிய தன்மை, முன்னிலை, படர்க்கை என்பனவும் இடம் எனக் கொள்ளப்படும்.

**18. காலம் :** இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என மூன்று காலத்தினும் நிகழ்கின்ற நிகழ்ச்சி ஆராய்ந்துணருமாறு செய்யுளுள் தோன்றச் செய்யின் அது காலம் என்னும் உறுப்பாகும்.

> இறப்பே நிகழ்வே எதிர தென்னுந்
> திறத்தியல் மருங்கில் தெரிந்தனர் உணரப்
> பொருள் நிகழ் வுரைப்பது கால மாகும். 11

என்பது ஆசிரியர் கூறும் விதி. பெரும்பொழுதும் சிறுபொழுதும் முதல், கரு, உரிப்பொருள் என்பவற்றோடு கூடித் திணையென அடங்குமாதலின் அவற்றின் வேறாகிய பொருள் நிகழ்ச்சியை ஈண்டுக் காலம் என்றார்.

> அன்னாய் வாழிவேண் டன்னை நம்படப்பைத்
> ...

என்ற நற்றிணைப் பாட்டில் (நற்-10) நிகழ்காலம் இளமைப் பருவம் என்பன தோன்ற வந்தது. மேலும் இதனுள், 'நீத்த லோம்பு மதி' என்பது எதிர்காலம் குறித்து நின்றது காண்க.

11. செய்யு.-நூற். 194 (இளம்.)

**19. பயன் :** சொல்லிய சொல்லால் பிறிதொன்று பயப்பச் செய்தல் பயன் என்னும் உறுப்பாகும்.

இதுநனி பயக்கும் இதன்மா றென்னுந்
தொகுநிலை கிளவி பயனெனப் படுமே.[12]

என்று இதற்கு விதி செய்து காட்டுவர் ஆசிரியர்.

எ - டு. **சூரல் பம்பிய சிறுகான் யாறே**
**சூரர மகளிர் ஆரணங் கினரே**
**வாரல் வரினே யானஞ் சுவலே**
**சாரல் நாட நீவர லாறே.**

இதனாற் பயன் வரைந்துகோடல் வேண்டுமென்பது. புறத்திற்கும் இஃது ஒக்கும். "இவ்வகையினால் யாதாயினுமொரு செய்யுளாயினும் பயன்படக் கூறல் வேண்டுமென்பது கருதிப் 'பயன்' என ஒரு பொருள் கூறினார்" என்பர் இளம்பூரணர்.

**20. மெய்ப்பாடு :** யாதானும் ஒன்றைக் கூறியவழி அதனை ஆராய்ந்துணர்தலின்றிச் செய்யுளிடத்து வந்த அப்பொருள் தானே வெளிப்பட்டுத் தோன்றினாற்போன்று கண்ணீரரும்பல், மெய்ம்மயிர் சிலிர்த்தல் முதலிய மெய்ப்பாடு தோன்றுமாற்றால் வெளிப்படச் செய்வது **மெய்ப்பாடு** என்னும் உறுப்பாகும். அது நகை முதலிய எண் வகை மெய்ப்பாட்டு நெறியினையும் பிழையாதாகி, மேல் மெய்ப்பாட்டியலில் சொல்லப்பட்ட இலக்கணத்தையுடையதாம் என்பர் ஆசிரியர்.

எண்வகை இயனெறி பிழையா தாகி
முன்னுறக் கிளந்த முடிவின தது வே[13]

என்ற நூற்பா இதனை விளக்கும்.

உரன்நெரிந்து விழஎன்னை
யுதைத்துருட்டி மூக்கரிந்த
நரன்இருந்து தோள்பார்க்க
நான்கிடந்து புலம்புவதோ ?
கரன் இருந்த வனம் அன்றோ ?
இவைபடவும் கடவேனோ ?
அரன் இருந்த மலையெடுத்த
அண்ணாவோ! அண்ணாவோ![14]

---

13. செய்யு. - நூற். 197 (இளம்.)
14. ஆரணி.- சூர்ப்பணகைப். - 109.

என்ற பாடலில் அழுகை என்ற மெய்ப்பாடு (தன்கண் தோன்றிய அவலம்) புலப்பட வந்தவாறு கண்டு கொள்க. மெய்ப்பாடுபற்றிய செய்திகள் முன்னர் விரித்துரைக்கப் பட்டன.[15]

"கவிப்பொருள் உணர்ந்தால் அதனாலே சொல்லப் படும் பொருள் உய்த்து வேறு கண்டாங்கு அறிதலை மெய்ப் பாடு என்றான். அது தேவருலகம் கூறினும் அதனைக் கண் டாங்கு அறியச் செய்தல் செய்யுளுறுப்பாம்........ நோக் குறுப்பால் உணர்ந்த பொருட்பிழம்பினைக் காட்டுவது மெய்ப் பாடென்பது இதன் கருத்து. இக்கருத்தினாற் "கவி கண் காட்டும்' எனவும் சொல்லுப" என்று பேராசிரியர் கூறிய விளக்கம் எண்ணி மகிழத்தக்கது.

**21. எச்சம் :** கூற்றினாலும் குறிப்பினாலும் எஞ்சி நின்று பின் கொணர்ந்து முடிக்கப்பெறும் இலக்கணத்தொடு பொருந்தியது எச்சம் என்னும் உறுப்பாகும். . எனவே, கூற் றெச்சம், குறிப்பெச்சம் என எச்சம் இருவகையாயின.

எ - டு. **செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த**
**செங்கோ லம்பின் செங்கோட் டியானைக்**
**கழறொடிச் சேஎய்க் குன்றம்**
**குருதிப் பூவின் குலைக்காந் தட்டே.**

பாங்கியிற் கூட்டத்தை விரும்பிய தலைமகன் செங்காந்தட் பூவை கையுறையாகக் கொடுத்துத்தோழியின்பால் தன் குறை கூறிய வழி அவள், 'இஃது எமது மலையிடத்தும் உள்ளதாத லின் இதனை வேண்டேம்' என்று மறுத்துக் கூறியதாக அமைந் தது இப்பாடல் (குறுந். 1). இதில், "செய்யுள் முடிந்த வழியும் இக் காந்தளால் யாம் குறையுடையம் அல்லம் எனத் தலைவற் குக் கூறிற் கூற்றெச்சமாம். அக்கூற்றும் செய்யுட்குச் சிதை வின்மையின்; அது காண்பாயாகிற் காணெனத் தலைவியை நோக்கி இடத்துய்த்துக் கூறிற் குறிப்பெச்சமாம். அவனைக் கூடுகவெனத் தான் கூறாளாகலின்" என்று நச்சினார்க் கினியர் இதனை விளக்குவர். பேராசிரியரும் இதே செய் யுளை எடுத்துக் காட்டி இங்ஙனமே விளக்குவர்.[16]

15. இந்நூல் (21—24) கட்டுரைகளில்.
16. செய்யு.-நூற் .206(நச்.);(பேரா.)

**22. முன்னம்:** செய்யுளைக் கேட்போன், 'இவ்விடத்துத் தோன்றிய மொழியைச் சொல்லுதற்குரியாரும் கேட்டற்குரியாரும் இன்னர்' என்று அறியுமாற்ருல் அங்ஙனம் அறிதற்கு ஓர் இடம் நாட்டி அவ்விடத்துக் கூறுவார்க்கும் கேட்பார்க்கும் ஏற்ற உரை செய்யுட்கு ஈடாகச் சொல்லுவது **முன்னம்** என்ற உறுப்பாகும் என்பர் ஆசிரியர்.[17]

**எ - டு. யாரிவன் எங்கூந்தல் கொள்வான் இதுவுமோர்**
**ஊராண்மைக் கொத்த படிறுடைத்து.**

என்ற கலித்தொகையடிகளில் (கலி - 89) இம்மாற்றம் சொல்லுகின்ருள் தலைமகள் என்பதும், இங்ஙனம் சொல்லப் பட்டான் தலைமகன் என்பதும், குறிப்பினுல் அறிதலின் இது முன்னம் என்ற உறுப்பாயிற்று. இவ்வுறுப்பு அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாகும்.

**23. பொருள் வகை:** பொருள் என்றது, புலவன் தான் தோற்றிக்கொண்டு செய்யப்படுவதோர் பொருண்மையை, இன்பமும் துன்பமும் புணர்தலும் பிரிதலும் ஒழுக்கமும் எனப்பட்ட இவை வழுவாத நெறியால் இத்திணைக்கு இது பொருளென்று ஆசிரியரின் ஓதிய உரிப்பொருளன்றி எல்லா உரிப்பொருட்கும் ஏற்பப் பொதுவாகி நிற்கும் பொருளே பொருள்வகை என்பர் ஆசிரியர்.

இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்
ஒழுக்கமும் என்றிவை இழுக்குநெறி யின்றி
இதுவா மித்திணைக் குரிப்பொருள் என்னுது
பொதுவாய் நிற்றல் பொருள்வகை என்ப[18]

என்ற நூற்பாவால் இதனை அறியலாம்.

கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் திண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாணுதல்
அந்தீங் கிளவிக் குறுமகள்
மென்றோள் பெறல்நசைஇச் சென்றவென் னெஞ்சே.

17. செய்யு -நூற்.199
18. செய்யு -நூற். 200 (இளம்.)

என்ற அகப்பாட்டிலுள்ளது போலச் (அகம் -9) செய்யுள் செய்த புலவன் தன் புலமைத் திறத்தால் தானே வகுத்துரைக்கும் பொருட்கூறு அனைத்தும் பொருள் வகை என்னும் இவ்வுறுப்பின்பாற்படும். இது பாலைப்பாட்டினுள் வந்த தாயினும் முல்லை முதலிய எல்லா உரிப்பொருட்கும் ஏற்கப் பொதுவாக அமைந்திருத்தலை எண்ணி உணர்க

**24. துறை:** முதற்பொருளும் கருப்பொருளும் முறை பிறழ வந்தாலும், 'இஃது இதன்பாற்படும்' என்று ஒரு துறைப்பட வகுத்தற்கு ஏதுவாகியதோர் கருவி அச்செய்யுட்கு உளதாக அமைத்தல் **துறை** என்ற உறுப்பாகும்.

அவ்வம் மாக்களும் விலங்கும் அன்றிப்
பிறவவண் வரினுந் திறவதின் நாடித்
தத்தம் இயலான் மரபொடு முடியின்
அறத்திறந் தானே துறையெனப் படுமே.[19]

என்பது ஆசிரியர் தொல்காப்பியனார் கூறும் விதியாகும். அஃதாவது, ஐவகை நிலத்திற்கும் உரியவெனப்படும் பல்வேறு வகைப்பட்ட மக்களும் மாவும் புள்ளும் ஓதிவந்தவாறன்றிப் படைத்துச் செய்யினும் அவ்வத்திணைக்கேற்ற இலக்கணமும் வரலாற்று முறைமையும் பிறழாமல் ஒரு துறையின்பாற்படச் செய்தல் துறையாகும் என்பது.

அகத்திணையில் களவும் கற்பும் பற்றிய பாடல்களை மேற்கூறிய இலக்கண முறையால் உரைக்க வேண்டுமென்பது,

திணையே கைகோள் கூற்றே கேட்போர்
இடனே காலம் எச்சம் மெய்ப்பாடு
பயனே கோளென் றுங்கப் பத்தே
அகனைந் திணையும் உரைத்த லாறே 20

என்ற இறையனார் களவியல் நூற்பாவினாலும் அறியப்படும். இதில் தொல்காப்பியர் கூறியுள்ள செய்யுளுறுப்புக்களுள் 13 முதல் 21 வரையுள்ள பகுதிகள் வந்துள்ளமை அறிக. இந்நூற்பா ஈற்றில் எஞ்சிநின்ற 'கோள்' என்பது பாட்டினகத்துப் பொருள் கொண்டு நிற்கும் நிலை. அஃதாவது, விற்பூட்டு,

---

19. செய்யு.-நூற். 201 (இளம்.)
20. இறையனார் களவியல் நூற் - 56

விதலையாப்பு, கொண்டு கூட்டு, பாசிநீக்கு, ஒருசிறைநிலை என்னும் ஐந்து நிலைகளில் இன்னதோர் பொருள் கொண்டு நின்றது இப்பாடல் என்பதாகும்.[21] இங்ஙனம் திணைமுதல், கோள் ஈருக வைத்து அகத்திணைப் பாடல்களை உரைத்தல் பண்டைய வழக்காகும். எடுத்துக்காட்டாக,

அணியும் அமிழ்துமென் னாவியும்
ஆயவன் தில்லைச்சிந்தா
மணியும்ப ராரறி யாமறை
யோனடி வாழ்த்தலரிற்
பிணியும் அதற்கு மருந்தும்
பிறழப் பிறழமின்னும்
பணியும் புரைமருங் குற்பெருந்
தோளி படைக்கண்களே [22]

என்ற திருக்கோவையாரில் "**திணை** : குறிஞ்சி; **கைகோள்** : களவு; **கூற்று** : தலைமகன் கூற்று; **கேட்பது** : நெஞ்சு, நெஞ் சென்பது பாட்டின்கண் இல்லையாலோவெனின், எஞ்சிற் றென்பதாம் ; வறிதே கூறினன் எனினும் அமையும் ; **இடம்**: முன்னிலை ; **காலம்** : நிகழ்காலம் ; **எச்சம்** : இப்பெருந் தோளி படைக்கண்களென்புழி இவ்வென்னுஞ் சுட்டுச்சொல் லெஞ்சிற்று; **மெய்ப்பாடு** ; உவகையைச் சார்ந்த பெருமிதம் ; ஈண்டு மெய்ப்பாட்டுப் பொருள்கோள் கண்ணினன் யாப்புற வறிதல் என்னை ?

'கண்ணினுஞ் செவியினுந் திண்ணிதி னுணரும்
உணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியின்
நன்னயப் பொருள்கோ ளெண்ணருங் குரைத்தே'[23]

---

21. 'விற்பூட்டு என்பது, முதலுங் கடையும் பொருள் கொண்டு நிற்பது; விதலையாப்பு என்பது, தலையும் நடுவுங்கடையும் பொருள் கொண்டு நிற்பது; பாசிநீக்கு என்பது, சொற்றோறும் அடிதோறும் பொருளற்று நிற்பது; கொண்டுகூட்டு என்பது, சொற்களைக்கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளுமாறு அறிந்து பொருள் கொள்ள நிற்பது; ஒருசிறைநிலை என்பது, ஒரு பாட்டினகத்துச் சொல்லப்பட்ட பொருள் ஒரு வழி நிற்பது'' - இறை. கள. நூற். 56 - இன் உரை.

22. திருக்கோவையார் - செய் - 5.

23. மெய்ப்பாட்டி - நூற். 27. (இளம்.)

என்றாராகலின். பயன்: தலைமகளது குறிப்பறிந்து மகிழ்தல். பிணியுமதற்கு மருந்துமாம் பெருந்தோளி படைக்கணக ளென்றமையின், அவளுடம்பாட்டுக் குறிப்பு அவள் நாட்டத்தானுணர்ந்தானென்பது. என்னை?

'நாட்ட மிரண்டும் அறிவுடம் படுத்தற்குக்
கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்.' 24

என்றாராகலின்" என்று பேராசிரியர் திணை முதலியவற்றால் துறையை உணர்த்துதல் காண்க.

**25. மாட்டு:** மாட்டென்பது, பல்வேறு பரப்பிற்றாயினும் அன்றாயினும் நின்றதனோடு வந்ததனை ஒரு தொடராகக் கூட்டி முடித்துக்கொள்ளச் செய்தல். மாட்டுதலாவது, தனித்து நிற்பதனைக் கொண்டுவந்து கூட்டி முடித்தல் என்று பொருள்படும். இது மேற்கூறிய 'கோள்' என்பதன்பாற் படுவதேயாம்.

அகன்றுபொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும்
இயன்றுபொருள் முடியத் தந்தனர் உணர்த்தல்
மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின். 25

என்பது தொல்காப்பியனாரின் விதி. செய்யுளிடத்தே கூறப் பெறும் பொருள் சேய்மைக்கண்ணே கிடப்பினும், அன்றி, அணுகிய நிலையில் நிற்பினும் ஒரு தொடர்புபட அமைந்து பொருள் முடியும்படி கொண்டுவந்து இயைத்துணர்த்துதல் 'மாட்டு' என்னும் உறுப்பாகும் என்று சொல்வர் செய்யுள் வழக்குணர்ந்த அறிஞர் என்பது இதன் பொருளாகும்.

எ - டு. பட்டினப்பாலையில். 26

முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்
வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய
வாரேன் வாழிய நெஞ்சே (வரி 218 - 20)

என நின்றது. பின்னர்,

வேலினும் வெய்ய கானமவன்
கோலினும் தண்ணிய தடமென் றோளே. (வரி 300 - 1)

24. களவியல் - நூற். 5 (இளம்.)
25. செய்யு. - நூற். 202 (இளம்.)
26. இது 301 அடிகளைக் கொண்ட பாட்டு.

எனச் சேய்த்ததாகச் சென்று பொருள் கோடலின் அஃது அகன்று பொருள் கிடப்பினும் இயன்று பொருள் முடியுத் தந்து உரைத்ததாகும்.

திறந்திடுமின் தீயவை பிற்காண்டும் மாதர்
இறந்துபடிற் பெரிதாம் ஏதம் — உறந்தையர்கோன்
தண்ணார மார்பிற் றமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணாக் கதவு

என்ற முத்தொள்ளாயிரப்பாடலில் உள்ளது அணுகிய நிலை எனப்படும். இதனைப் பிற்கால இலக்கண நூலார் **பூட்டுவிற் பொருள்கோள்** என வழங்குவர்.

**26. வண்ணம் :** பாவின்கண்ணே நிகழும் ஓசை விகற்பமாகிய சந்த வேறுபாடு **வண்ணம்** என்று வழங்கப்பெறும். வண்ணமாவன, பாஅவண்ணம் முதல் முடுகு வண்ணம் ஈறாக இருபது வகைப்படும் என்பர் ஆசிரியர்.[27]

அவற்றுள், பாஅவண்ணம் என்பது, சொற்சீரடியினை உடையதாகி நூலின்கண் பயின்று வரும் நூற்பாவினது ஓசை விகற்பமாகும். தாஅவண்ணம் என்பது, எதுகை இடையிட்டமையத் தொடுக்கப்படுவதாகும். வல்லெழுத்து மிக்குப் பயின்று வருவது வல்லிசை வண்ணம் எனப்படும். மெல்லெழுத்து மிகுந்து வருவது மெல்லிசை வண்ணமாகும். இடையெழுத்து மிக்கு வருவது இயைபு வண்ணம் என வழங்கப்பெறும். அளபெடை பயின்று வருவது அளபெடை வண்ணமாகும். நெட்டெழுத்துப் பயின்று வருவது நெடுஞ்சீர் வண்ணம் எனப்படும். குற்றெழுத்துப் பயின்று வருவது குறுஞ்சீர் வண்ணமாகும். சித்திரவண்ணமாவது, நெட்டெழுத்தும் குற்றெழுத்தும் ஒப்ப விரவி வருவது. ஆய்தம் பயின்று வருவது நலிபு வண்ணமாகும். அகப்பாட்டு வண்ணம் என்பது, முடியாத தன்மையின் முடிந்ததன் மேலது. அஃதாவது, பாட்டினது முடிபினை விளக்கி வரும் ஈற்றசை ஏகாரம் முதலியவற்றால் முடியாது, இடையடிகள் போன்று முடியாத தன்மையால் முடிந்து நிற்பதாகும். புறப்பாட்டு வண்ணமாவது, முடிந்தது போன்று முடியாதாகி வருவது.

---

27. செய்யு. - நூற். 205 (இளா்.)

அஃதாவது, பாட்டின் முடிபினை யுணர்த்தும் இறுதியடி புறத்தே நிற்கவும் அதற்குமுன் உள்ள இடையடி முடிந்தது போன்று நிற்பதாகும். ஒழுகிய ஓசையால் செல்வது ஒழுகு வண்ணமாகும். நீங்கின தொடையாகி அமைந்தது ஒரூஉ வண்ணமாகும். "யாற்றொழுக்கு போலச் சொல்லிய பொருள் பிறிதொன்றனை அவாவாமை அறுத்துச் செய்வது ஒரூஉ வண்ணமாம்" என்று பொருள்கொள்வர் பேராசிரியர்.[28] எண்ணுப் பயின்று வருவது எண்ணு வண்ணமாகும். அறுத்தறுத்தொழுகும் ஓசையினதாய் வருவது அகைப்பு வண்ணம் எனப்படும். அறுத்தறுத்தொழுகுதலாவது, விட்டு விட்டுச் செல்லுதல். ஒருவழி நெடில் பயின்றும், ஒரு வழிக் குறில் பயின்றும் வருதல் - இதன் இயல்பு என்பர். தூங்கலோசைத்தாகி வருவது தூங்கல் வண்ணமாகும். இதில் வஞ்சியுரிச்சீர் பயின்று வரும். சொல்லிய சொல்லினலே சொல்லப்படும் பொருள் சிறப்பச் செய்வது ஏந்தல் வண்ணமாகும். ஏந்தல் - மிகுதல்; அஃதாவது, ஒரு சொல்லே மிக்கு வருதல். அராகந்தொடுப்பது உருட்டு வண்ணம் ஆகும். அராகமாவது, உருட்டிச் சொல்லப்படுவது. "நெகிழாது உருண்டவோசையாகலிற் குறுஞ்சீர் வண்ணமெனப் படாது உருட்டுவண்ணம் எனப்பட்டது" என்பர் பேராசிரியர்.[29] நாற்சீரடியின் மிக்கு ஓடி ஓரடி உருட்டு வண்ணத்தையொத்து அராகந் தொடுத்து வருவது முடுகு வண்ணம் எனப்படும். வண்ணங்களாவன இவையேயாம் என்று வரையறை செய்வர் தொல்காப்பியர்.

"குறில், நெடில், வல்லினம், மெல்லினம், இடையினம் என நிறுத்து, அகவல், ஒழுகிசை, வல்லிசை, மெல்லிசை என்ற நான்கனோடும் உறழ இருபதாம். அவற்றைத் தூங்கிசை, ஏந்திசை, அடுக்கிசை, பிரிந்திசை, மயங்கிசை என்பனவற்றோடு உறழ நூறும். அவற்றைக் குறிலகவற்றூங்கிசை வண்ணம், நெடிலகவற்றூங்கிசை வண்ணம் என ஒருசார் ஆசிரியர் பெயரிட்டு

28. செய்யு. - நூற். 227 (பேரா.)
29. செய்யு. - நூற். 232 (பேரா.)

வழங்குப." என இளம்பூரணர் கூறும் விளக்கம்[30] பிற்கால யாப்பிலக்கண மரபை அடியொற்றி அமைந்ததாகும்.[31]

எனினும், "நான்கு பாவினேடும் இவற்றை வைத்து உறழவும், அவை மயங்கிய பொதுப்பா இரண்டினேடு உறழவும் நூற்றிருபதாகலும், உயிர் மெய் வருக்கம் எல்லாவற்ருேடும் உறழ்ந்து பெருக்கின் எத்துணையும் பலவாகலும், இனிப் பிறவாற்ருற் சில பெயர் நிறீஇ அவற்ருல் உறழ்ந்து பெருக்க வரையறை யிலவாகலும் உடையவாயினும் இவ்விருபது வகையானல்லது சந்த வேற்றுமை விளங்காதென்பது கருத்து" எனப் பேராசிரியர் கூறிய விளக்கமே[32] ஆசிரியர் தொல்காப்பியனுர் கருத்தினை நன்கு புலப்படுத்துகின்றது என்பது ஈண்டு உளங்கொள்ளத் தக்கது.

மேற்கூறப்பெற்ற இருபத்தாறு உறுப்புக்களும் செய்யுள் ஒவ்வொன்றுக்கும் — ஒவ்வொன்றின் யாப்பிற்கும் — இன்றியமையாத உறுப்புக்களாகும்.

30. செய்பு. - நூற். 226 (இளம்.)
31. யாப்பருங்கலக் காரிகையும் யாப்பருங்கல விருத்தியும்.
32. செய்யு. - நூற். 234 (பேரா.)

# 30. காப்பிய வனப்பு

காப்பியமென்பது 'காவ்யம்' என்னும் வடசொல் திரிந்த சொல்லாகும். கவியாற் செய்யப்படுவது காவியம். தமிழில் அதனைப் பொருட்டொடர்நிலைச் செய்யுள், கதைச் செய்யுள், அகலகவி, தொடர்நடைச் செய்யுள், விருத்தச் செய்யுள் என்று பல்வேறு விதமாக வழங்குவர். நச்சினார்க்கினியர் சீவகசிந்தாமணி உரையில் அந்நூலைத் தொடர்நிலைச் செய்யுளென்றே கூற வேண்டும் என்றும், காப்பியமென்று கூறுதல் தகாதென்றும் உரைத்தார். 'முந்து நூல்களிற் காப்பிய மென்னும் வடமொழியால் தொடர்நிலைச் செய்யுட்குப் பெயரின்மை அவர் அங்ஙனம் கூறுவதற்கு ஒரு காரண மாகும். அடியார்க்கு நல்லார் பெருங்கதையிலும் சீவக சிந்தாமணியிலும், மணிமேகலையிலும் காப்பியம் என்னும் பெயர் வந்ததை எடுத்துக்காட்டி, "சொற்றொடர் நிலை பொருட் டொடர் நிலையென்னும் தொடர்நிலைச் செய்யுட்கும் 'காப்பியம்' என்று பெயர் கூறுதலும் ஆசிரியர் கருத்தென உணர்க" என்று கூறியுள்ள பகுதி நச்சினார்க்கினியர் கூற்றுக்கு ஏற்ற மறுப்பை உணர்த்துகின்றது. சிலப்பதிகார அரும்பத உரையாசிரியர் அந்நூலைக் 'காவியம்' என்றே கூறுவர். 'இளங்கோவடிகள் தாம் துறந்து இக்காவியம் செய்தார்'; 'உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்— பாட்டும் உரையும் கலந்து வந்த காவியம்' என்ற பதிகவுரைப் பகுதிகளை நோக்குக.

"தமிழ்க் காப்பியங்கள்" என்ற நூலின் ஆசிரியர் பொருட்டொடர்நிலைச் செய்யுட்களை அவற்றின் சிறப்பு

1. ஜகந்நாதன், கி. வா. : தமிழ்க் காப்பியங்கள்-பகுதி 3.

நோக்கி மூன்று வகையாகப் பிரிப்பர். அவை : (1) பொருள் மட்டும் தொடர்ந்து கதை தழுவாது வரும் தொடர்நிலைச் செய்யுள். இவ்வகையில் பத்துப்பாட்டும் பொருட்டொடர்பை யுடைய பிரபந்தங்களும் அடங்கும். (2) பொருள் தொடர்ந்து கதை தழுவி வருவனவற்றுள் அறம், பொருள், இன்பம், வீடென்னும் நான்கனுள் சிலவற்றையே பயனாக உடையன. இவ்வகையில் மணிமேகலை, நீலகேசி, பெரிய புராணம், புராணங்கள் முதலியன அடங்கும். (3) கதை தழுவி வருவ தோடு அறம், பொருள், இன்பம், வீடு என்ற நாற்பொருளை யும் கூறுவன. இதில் பெருங்காப்பியங்களும் நாடகக் காப்பியங்களும் அடங்கும்.

தொல்காப்பியப் பொருளதிகாரம் முழுவதிலும் ஓரிடத் தில்தான் **'தொடர்நிலை'** என்ற தொடர் வழங்கப் பெற்றுள்ளது.

> மாட்டும் எச்சமும் நாட்ட மின்றி
> உடனிலை மொழியினும் தொடர்நிலை பெறுமே.[2]

என்ற நூற்பாவில் இதனைக் காண்க. **"தமிழ் இலக்கியச் சரிதத்தில் காவியகாலம்"** என்ற நூலின் ஆசிரியர்[3] தொல் காப்பியருக்குக் 'காவியம்' உளதென்றேனும், அது 'தொடர் நிலை' என்ற குறியீட்டினால் அவரால் வழங்கப்பெற்ற தென்று கொள்ளுதல் சிறிதும் பொருந்துவதன்றாகும் என்று கூறுவர். பிற்காலத்தில்தான்—சுமார் 18-ஆம் நூற் றாண்டளவில்—**காவியம்** என்ற கருத்துத் தமிழில் புகுந்த தென்றும், 11-ஆம் நூற்றாண்டளவில் 'காவியம்' என்ற வட சொல்லையே தமிழில் அமைத்தனர் என்றும், 12-ஆம் நூற்றாண்டளவில்தான் இச்சொல்லுக்குப் பதிலாக 'தொடர் நிலை' என்பதை வழங்கலாயினர் என்றும், 'காவியம்' என்ற குறியீடே சிறந்ததென்றும் தம் கொள்கையை நிறுவு வர் திரு. பிள்ளை அவர்கள். அது கிடக்க.

தொல்காப்பியத்தில் செய்யுள் உறுப்புக்களாகக் கூறப் பெற்றுள்ள முப்பத்து நான்கு உறுப்புக்களில் தனிச் செய்

---

2. செய்யு. - நூற். 203 (இளம்.)
3. பேராசிரியர் எஸ். வையாபுரி பிள்ளை; காவிய காலம் பக். 270–272.

யுட்கு உரியனவாகவுள்ள இருபத்தாறு உறுப்புக்களை முன்னர்க் கண்டோம்.[4]

> அம்மை அழகு தொன்மை தோலே
> விருந்தே இயைபே புலனே இழைபெறு அப்
> பொருந்தக் கூறிய வெட்டொடுந் தொகைஇ
> நல்லிசைப் புலவர் செய்யு ளுறுப்பென்
> வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே.[5]

என்ற நூற்பாப் பகுதியில் வரும் அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என்ற எட்டு உறுப்புக்களும் தனிநிலைச்செய்யுட்கேயன்றித் தொடர் நிலைச் செய்யுட்கு சிறப்பாக உரியன என்பது பேராசிரியர், நச்சினார்க்கினியர், அடியார்க்கு நல்லார் ஆகிய மூவரின் கருத்தாகும்.

**வனப்பு** என்னும் தலைப்பின்கீழ்க் கூறப்படும் இலக் கணங்களிற் பெரும்பாலன தொடர்நிலைச் செய்யுளோடு தொடர்புடையனவே. 'வனப்பு' என்னும் சொல்லுக்கு 'அழகு' என்பது பொருள். தொடர்நிலை முழுவதும் அமைந்த அலங் காரம் வனப்பாகும். மேற்கூறிய எட்டு உறுப்புக்களைப் பற்றியும் பேராசிரியர் கூறியுள்ள கருத்துக்கள் சிந்திக்கற் பாலவை: "இவை பல செயயுளும் திரண்டவழி இவ் வெண்வகையும் பற்றித் தொகுக்கப்படும் எனக் கூறப் பட்டதாகலானும் என்பது. இவற்றை வனப்பென்று கூறப் படுமாறு என்னை? அச்சூத்திரத்துப் பெற்றிலமாலெனின்,— **வனப்பென்பது, பெரும்பான்மையும் பல உறுப்புந் திரண்ட வழிப் பெறுவதோர் அழகாதலின் அவ்வாறு கோடும்.** அத னாற் பல செய்யுளும் உறுப்பாய்த் திரண்டு பெருகிய **தொடர் நிலையதே** வனப்பென்னும் பெயர்ப்பகுதி வகையான் ஏற்ப தென்பது. அஃதேல் இவ்வெட்டும் தனி வரும் செய்யுட்கள் வந்தால் அழகு செய்யாவோவெனின்,—அவை போல இவை தனிவரும் செய்யுட்குமாகும் என்றற்கன்றே அவ் விருபத்தாறு உறுப்போடும் இவற்றை ஓரினப்படுத்து ஓதிய

4. இந்நூல் - 26, 29 கட்டுரைகளில்.
5. செய்யு - நூற். 1. (இளம்.)

தென்பது. அஃது இயைபிற்கொப்ப வாராதென்பது முன்னர்ச் சொல்லுதும். இதனானே முன்னையுறுப்புக்கள் தொடர்நிலைச் செய்யுட்கு வருமென்பதூஉங் கொள்க. அல்லாக்கால், மாத்திரை முதலாகிய ஒரோ உறுப்பான் அழகு பிறவாதாகிய சொல்லும் இவற்றையே வனப்பென்று ஒரோ செய்யுட்கே கொள்ளின் என்பது."[6] நச்சினார்க்கினியரும் சீவகசிந்தாமணி உரையில் இதே கருத்தினைத் தெரிவிக்கின்றார். இனி, இந்த எட்டு உறுப்புக்களையும் ஒவ்வொன்றாக நோக்குவோம்.

**1. அம்மை :** அம்மையென்பது, அடி நிமிர்வில்லாத செய்யுட்கள் பல தொடர்ந்த நூலின் அமைதியாகும்.

> சின்மென் மொழியால் சீர்புனைந் தியாப்பின்
> அம்மை தானே அடிநிமிர் வின்றே.[7]

என்பது தொல்காப்பியர் கூறும் விதியாகும். சிலவாய் மெல்லியவாய சொல்லோடும் இடையிட்டு வந்த பனுவலிலக்கணத்தோடும் அடிநிமிர்வில்லாது 'அம்மையாம்' என்றவாறு. "'அம்மை' என்பது குணப்பெயர். அமைதிப்பட்டு நிற்றலின் அம்மையென்றாயிற்று" என்பர் பேராசிரியர். அடி நிமிராமை — ஆறடியின் மேற்படாமை. சிலவாதல், சுருங்கின எண்ணினவாகிய சில சொற்களால் இயன்று வருதல். மெல்லியவாதல், சிலவாகிய அச்சொற்களும் பல எழுத்துக்களாலியன்று விரிந்தனவாகாமல் சிலவெழுத்துக்களாலமைந்து சுருங்கி நிற்றல். இச்செய்யுட்கள் அறம், பொருள், இன்பம் என்ற மூன்றற்கும் இலக்கணம் சொல்லுமென்றும், பதினெண்கீழ்க்கணக்கு அவ்வனப்பமைந்த நூல்கள் என்றும் அவர் கூறுவர். இந்த வனப்பையுடைய நூல்கள் நீதி நூல்களாம். வடமொழியிலும் நீதி சாத்திரங்கள் உள்ளன; அவை காப்பியங்களாகக் கொள்ளப்பெறவில்லை.

**2. அழகு :** திரிசொல் பயிலாது செய்யுளுட்பயின்று வரும் சிறந்த சொற்களால் ஓசையினிதாகச் சீர் பெற யாக்கப்படும் அவ்வகைச் செய்யுள் 'அழகு' எனப்படும்.

---

6. செய்யு. - நூற். 235 (பேரா.)
7. செய்யு. - நூற். 227 (இளம்.)

செய்யுள் மொழியால் சீர்புனைந் தியாப்பின்
அவ்வகை தானே அழகெனப் படுமே.[8]

என்பது தொல்காப்பியரின் விதி. இவ்வனப்புக்கு நெடுந்தொகை முதலாகிய எட்டுத்தொகை நூல்களை எடுத்துக் காட்டுக்களாகக் கொள்வர் பேராசிரியர். செய்யுளின் நடையழகு நோக்கி அமைந்தது இவ்வனப்பு. மேலும், அம்மை 'தாய பனுவல்' என்றும் (தாவுதல் — இடையிடுதல்), அழகு அத்தகையதென்றும் அம்மையைப் போல் அறம் முதலாகிய மூன்றும் சொல்லப்படுவன அல்லவென்றும் பேராசிரியர் கருதுவர். இவ்வனப்புக்குக் காட்டிய எடுத்துக் காட்டுபற்றி ஆராய்ந்தால் இதுவும் காப்பியத்திற்குரியதன் றென்று தோன்றுகின்றது.

அம்மையும் அழகும் தனி நிலைச் செய்யுட்கள், தொடர் நிலைச் செய்யுட்கள் என்பவற்றில் அமைந்த இலக்கணம் என்று கோடலும் ஏற்புடைத்து.

**3. தொன்மை:** உரையொடு பொருந்திப் போந்த பழமைத்தாகிய கதைப்பொருளாகச் செய்யப்படுவது '**தொன்மை**' என்ற வனப்பாகும்.

தொன்மை தானே சொல்லுங் காலை
உரையொடு புணர்ந்த பழமை மேற்றே.[9]

என்பது தொல்காப்பிய விதி. உரையொடு புணர்தல்— நெடுங்காலமாகப் பலராலும் சொல்லப்பட்டு வழங்கி வருதல். பழமை—பழங்கதை. அவை இராம சரிதமும், பாண்டவ சரிதமும் முதலாயவற்றின்மேல் வருஞ்செய்யுள் என்பர் இளம்பூரணர்.

இனி, பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் 'உரையொடு புணர்ந்த' என்ற தொடருக்கு 'உரைநடையுடன் விரவிப' எனப் பொருள்கொண்டு, பெருந்தேவனாரால் பாடப்பட்ட பாரதமும் தகடூர் யாத்திரையும் சிலப்பதிகாரமும் போல் அமைந்த உரையிடையிட்ட செய்யுட்களைத் 'தொன்மை' என்ற வனப்புக்கு எடுத்துக்காட்டுகளாகக் குறித்துள்ளனர்.

8. செய்யு. - நூற். 228 (இளம்.)
9. செய்யு. - நூற். 229 (இளம்.)

இவற்றுள் இப்பொழுது வழக்கிலுள்ளது 'சிலப்பதிகார மாகும். அஃது ஒரு சிறந்த காப்பியம். அதன் இடை யிடையே உரை வந்துள்ளமையின், அதற்கு 'உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யு'ளென்ற ஒரு பெயரும் வழங்கி வருகின்றது.

தொல்காப்பியர் காலத்தே உரையிடையிட்ட பாட்டுடைத் தொடர்கள் மிகுதியாக வழங்கின என்று ஊகம் செய்ய இடம் உள்ளது. இல்லையெனின், அவற்றைத் தனியே ஒரு பிரிவாகப் பிரித்துக் கூறுது பின்வருவனவற்ருேடு சேர்த்துக் கூறியிருத்தல் கூடுமன்றே? உரையின் இலக்கணம் வகுக்கும் பொழுதும் தொல்காப்பியர் உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளை நினைவுறுத்துவது ஈண்டு சிந்திக்கத்தக்கது. முற் காலத்திருந்த உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுட்களின் பெயர்கள்கூட இப்பொழுது தெரிந்தில. பிற்காலத்தெழுந்த பாரதமொன்று உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாக அமைந்துள்ளது. அது 'பாரத வெண்பா' என்று வழங்கும்.

**4. தோல் :** இழுமென்னும் ஓசையையுடைய மெல் லென்ற சொல்லால் விழுமிய பொருள் பயப்பச் செய்பி னும், பரந்த மொழியால் அடிநிமிர்ந்து வரத் தொடுப்பினும் **'தோல்'** என்னும் செய்யுளாம்.

> இழுமென் மொழியால் விழுமியது நுவலினும்
> பரந்த மொழியால் அடிநிமிர்ந் தொழுகினும்
> தோலென மொழிப தொன்மொழிப் புலவர்.[10]

என்பது தொல்காப்பியரின் விதி.

இதனல், பல பாட்டுக்களாலேனும் தொடர்ந்து வரும் ஆசிரியப்பாவினுலேனும் இயற்றப்பெறும் காப்பியமே 'தோல்' என்பது பெறப்படும். இழுமென் மொழி, பரந்த மொழி என்பன யாப்பையும் நடையையும்பற்றிய இலக்கண மாகும்; விழுமியது நுவலுதல், பொருள் அமைப்பின் இலக் கணமாகும். அறம், பொருள், இன்பம், வீடு என்பன விழு மிய பொருள். இந்நான்கையும் பொருளாக உடையதே **'தோல்'** என்ற காப்பிய அமைப்பு. 'யாப்பினும் பொருளினும்

---

10. செய்யு. - நூற். 230 (இளம்.)

வேற்றுமையுடையது' எனப்பட்ட கொச்சகத்தால் இயன்ற சிவக சிந்தாமணி போன்ற தொடர்நிலைச் செய்யுட்கள் இழு மென் மொழியால் விழுமியது நுவன்ற 'தோல்' என்ற வகை யைச் சார்ந்தன எனவும், ஆசிரியப் பாட்டால் ஒரு கதைமேல் தொடுக்கப்பட்ட தொடர்நிலைச் செய்யுட்கள் பரந்த மொழி யால் அடிநிமிர்ந்தொழுகிய 'தோல்' என்னும் வகையின்பாற் படுவன எனவும் நச்சினார்க்கினியரும் பேராசிரியரும் கூறுவர். இவர்களிருவரும் தோலென்பது ஒரு கதைமேல் தொடுக்கப் பட்டதென்று குறித்தனர்.

அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையின்கண் தொல்காப்பியமே சிலப்பதிகாரத்துக்கு இலக்கணம் என்று கூறுவர். மேலும், அவர், " 'இழுமென்...ஒழுகினும்' என்பத னல், குவிந்து மெல்லென்ற சொல்லானும், பரந்து வல்லென்ற சொல்லானும் அறம் பொருளின்பம் வீடென்னும் விழுமிய பொருள் பயப்ப ஒரு கதைமேற் கொச்சகத்தானும், ஆசிரியத்தானும், வெண்பாவானும், வெண்கலிப்பாவானும் மற்றும் இன்னோரன்ன செய்யுட் களானும் கூறுக என்றமையான், இத்தொடர்நிலைச் செய்யுள் அங்ஙனம் கூறிய தொடர்நிலை என உணர்க" எனத் தோலின் இலக்கண நூற்பாப் பொருளை விரித்து உரைத்திடுவர்.

தொன்மையும் தோலும் பொருளமைப்பில் ஒருவகைப் பட்டன; யாப்பு முறையில்தான் அவை வேற்றுமையுடை யன. தொன்மை உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாத லின் அது தனியே வகுக்கப்பட்டது. தோல் பல குறுஞ்செய் யுட்களால் அமைந்தது, சில நெடுஞ்செய்யுளால் அமைந்தது என இரண்டு வகைப்படும். இவற்றைப்பற்றியே உரை யாசிரியர்கள் பலவாறு கூறுகின்றனர். தொன்மையும் தோலும் ஒரு பழங்கதைப் பொருளாக இயற்றப்பெறுவன வாதலின், அவை கதைச்செய்யுளாகும்.

**காப்பியப் பொருள் :** ஒவ்வொரு நாட்டிலும் வழங்கி வரும் பழைய கதைகளையே அந்நாட்டுக் கவிஞர்கள் காப்பி யங்களாக அமைப்பர். இத்தகைய முறையே நாகரிகம் மிக்க நாடுகளில் வழக்கமாகக் காணப்பெறுவது. பொருள்

தொடர்ந்து வருவதற்குக் கதையே மிகவும் ஏற்றது. அதனை விரிக்கும் வழி விரிக்கலாம் ; தொகுக்கும் வழித் தொகுக்கலாம் ; பலவகைச் சொற்பொருள் நயங்களையும் அமைத்திடலாம். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருளையும் கதையில் அமைத்துக் காட்டலே கவர்ச்சியைத் தரும் ; படிப்போர் மனத்திலும் பசுமரத்தாணியைப் போல் பதியும். காவியமானது மனைவியின் உரைக்கு இணையாகும் என்பர். கணவனுக்குத் தனது கருத்தையறிவிக்கப் புகும் மனைவி மிக இனிய சொற்களால் மனங்கவரும் முறையில் மெல்ல அறிவித்தலைப் போல், காவியங்கள் உயர்ந்த அறநெறிப் பொருள்களைச் சொற்பொருள் நயங்களோடு மனம் கவரும் வண்ணம் புலப்படுத்துகின்றன. எனவே, காப்பியம் கதை மேல் படர்வதாயிற்று. பழைய கதைகளைக் காப்பியங்களாக அமைக்கும் பயிற்சி தண்டமிழ் நாட்டில் தொல்காப்பியர் காலத்துக்கு முன்னரே இருந்ததென்பதும், அதுபற்றியே தொல்காப்பியர் இவ்விலக்கணம் அமைத்தனர் என்பதும் அறியக் கிடக்கின்றன. பிற்காலத்தில் சமணர்களுக்குள் வழங்கி வந்த பழங்கதையைச் **'சீவக சிந்தாமணி'** என்னும் காப்பியமாகத் திருத்தக்க தேவர் இயற்றியமையை நோக்குக.

**5. விருந்து :** விருந்தென்பது, புதிதாகச் சொன்ன யாப்பின் மேலது.

> விருந்தே தானும்
> புதுவது புனைந்த யாப்பின் மேற்றே. 11

என்பது ஆசிரியர் கூறும் விதி. "புதிதாகப் புனைதலாவது, ஒருவன் சொன்ன நிழல்வழியன்றித் தானே தோற்றுவித்தல்" என்பர் இளம்பூரணர். "புதுவது கிளந்த யாப்பின் மேற்று" என்றதென்னையெனின்,—புதிதாகத் தாம் வேண்டியவாற்றாற் பல செய்யுளுந் தொடர்ந்து வரச்செய்வது. அது, முத்தொள்ளாயிரமும், பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளுமென உணர்க. கலம்பகம். முதலாயினவும் சொல்லுப" என்று விளக்குவர் பேராசிரியர்.

---

11. செய்யு.-நூற். 231 (இளம்.)

முற்கூறிய 'தோல்' என்பது பழைய கதையைப் புதிதாகக் கூறலென்றும், ஈண்டுக் கூறிய 'விருந்தென்பது' பழையதும் புதியதுமாகிய கதைமேற்றன்றித் தான் புதிதாகப் படைத்துத் தொடர்நிலைச் செய்யுள் செய்வதென்றும் இவ்விரண்டிற்கு முள்ள வேறுபாட்டினை விளக்குவர் நச்சினார்க்கினியர்.

புதுமைக் கதைகளை இக்காலத்தார் 'புதினம்' (novel) என்ற பெயரால் குறிப்பிடுவர். விருந்து என்பது அப் புதினத்தைக் குறிப்பதாகக் கொள்ளுதலால் இழுக்கொன்று மில்லை. புதிய புதிய கதைகளை அமைத்துப் புதிய புதிய காப்பியங்களை இயற்றும் வழக்கு மற்ற மொழிகளில் விரிவாகக் காணப்பெறுகின்றது. ஆங்கில நாடகக் காப்பியங்களில் பெரும்பாலன இம்முறையில்தான் அமைந்தன. தமிழ் மொழியில் பிற்காலத்தில் இத்தகைய காப்பியங்கள் இயற்றப்பெறுவிடினும், தொல்காப்பியர் காலத்தில் அவை இருந்தனவென்றே கொள்ளுதல் வேண்டும். இக்காலத்தில் பாரதியார் இயற்றியுள்ள **'பாஞ்சாலி சபதம்'**, பார்திதாசன் படைத்துள்ள **'பாண்டியன் பரிசு'** போன்ற காப்பியங்களை 'விருந்து' என்னும் தலைப்பில் அடக்கலாம்.

**6. இயைபு :** ஞ, ண, ந, ம, ன, ய, ர, ல, வ, ழ, ள என்னும் பதினொரு புள்ளியுள் ஒன்றனை இறுதியாகக் கொண்டு பொருட்டொடராகவும் சொற்றொடராகவும் முடியும் செய்யுள் **'இயைபு'** எனப்படும்.

> ஞகார முதலா னகார ஈற்றுப்
> புள்ளி இறுதி இயைபெனப் படுமே.[12]

என்பது தொல்காப்பிய விதி. னகார ஈற்றான் இற்றதற்குச் சித்தலைச் சாத்தனாராற் செய்யப்பட்ட **மணிமேகலை**யையும், கொங்கு வேளிராற் செய்யப்பட்டபெருங்**கதை**யையும் எடுத்துக் காட்டுக்களாகக் காட்டுவர் பேராசிரியர். பரந்த மொழியால் அடி நிமிர்ந்தொழுகிய 'தோல்' என்பன பெரும்பான்மையும் உயிரீற்றதாய் வருதலும், இயைபு ஈண்டுக் கூறிய மெய்யீற்றதாய் அவை வருதலும் தம்முள் வேற்றுமையாகும்.

12. செய்யு.-நூற். 232 (இளம்.)

இவண் கூறிய நூற்பா பொருட்டொடர் நிலையில் ஒவ்வொரு பாட்டின் இறுதியும் அமைந்த முறை பற்றி வகுக்கப் பெற்றது இப்பொழுது னகர ஈற்ருல் இற்ற காப்பியங்களே அறியப் பெறுகின்றன ; அவையும் தொல்காப்பியர் காலத்திற்குப் பின்னர் எழுந்தவை. இந்நூற்பாவில் கூறிய இலக்கணத்திற்கு இலக்கியம் அவர் காலத்திற்கு முன்னரே வழங்கியிருத்தல் வேண்டும். இக்கருத்தையுட்கொண்டே, "மற்றையீற்ருன் வருவனவற்றுக்கும் ஈண்டு இலக்கணம் உண்மையின் இலக்கியம் பெற்றவழிக் கொள்க ; இப்பொழுது அவை வீழ்ந்தன போலும்" என்று பேராசிரியரும், "ஒழிந்த ஒற்றுக்களுக்கும் இலக்கணம் உண்மையின் இலக்கியம் இக்காலத்து வீழ்ந்தன போலும்" என்று நச்சினர்க்கினியரும் கூறினர்.

'இயைபு' என்ற பெயரை நினைந்து சொல் இயைபையும் இலக்கணமாக அமைத்தனர் உரையாசிரியர்கள். "இயை' யென்றதனுனே பொருளும் இயைந்து சொல்லும் இயைந்து வரும் என்பது கருத்து" என்பர் பேராசிரியர். அவ்வியைபு செய்யுளந்தாதி என்றும், சொற்ருெடர் நிலை என்றும் சொல்லப்படும். அந்தாதி, சலம்பகம் முதலிய பிரபந்தங்கள் சொற்ருெடர் நிலைகளாகும். அவற்றில் சொல் மாத்திரம் தொடர்ந்து வந்திருக்கும். பொருட்டொடர் நிலைக்கண் இச்சொற்ருெடர்ச்சி அமைந்ததற்கு உதயணன் கதையை எடுத்துக்காட்டாகக் கொள்க. கலியாணன் கதை என்பதும் அத்தகையதே.[13]

**7. புலன் :** பலருக்கும் தெரிந்த வழக்கச் சொல்லினலே செவ்விதாகத் தொடுக்கப்பட்டுக் குறித்த பொருள் இதுவென ஆராய வேண்டாமல் தானே விளங்கத் தோன்றுவது 'புலன்' என்னும் செய்யுளாம்.

> சேரி மொழியாற் செவ்விதிற் கிளந்து
> தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றிற்
> புலனென மொழிப புலனுணர்ந் தோரே.[14]

---

13. யா. வி-.பக். 195.
14. செய்யு.-நூற். 233 (இளம்.)

என்பது ஆசிரியர் கூறும் விதி. சேரி மொழியைப் 'பாடி மாற்றங்கள்' என்று குறிப்பர் பேராசிரியர். அவற்றிற்கு எடுத்துக்காட்டாக 'விளக்கத்தார் கூத்து' முதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுளைக் கூறுவர் அவர். திரிசொல்லன்றி எளிதாகச் செய்யப்படுவது 'புலன்' ஆகும் என்பது யாப்பருங்கல விருத்தியாசிரியர் கொள்கை. நாடகச் செய்யுளில் கூற்றுக்குரியாருக்கு ஏற்றவாறு சொல் அமைய வேண்டிச் சேரிமொழி விரவி வருதல் வேண்டும். வடமொழி நாடகக் காப்பியங்களில் 'பாகதம்' விரவி வருதலைப் போல இதனைக் கொள்ளலாம்.

8. **இழைபு :** 'இழைபு' என்பது, "இசைப்பாட்டாகிய செந்துறை மார்க்கத்தது" என்பது ; அஃதாவது, இது ஒரு வகை இசைப்பாட்டாகும்.

ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத் தடக்காது
குறளடி முதலா ஐந்தடி ஒப்பித்து
ஒங்கிய மொழியான் ஆங்கவண் மொழியின்
இழைபின் இலக்கணம் இயைந்த தாகும்.[15]

என்பது தொல்காப்பிய விதியாகும். ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்துப் பயிலாமல் குறளடி முதல் ஐந்தடியினையும் ஒப்பித்து ஓங்கிய மொழியால் பொருள் புலப்படச் செய்வது 'இழைபு' என்னும் வனப்பாகும். இழைபாவன கலியும் பரிபாடலும் போலும் இசைப்பாட்டாகிய செந்துறை மார்க்கத்தது எனவும், இவை 'தேர்தல் வேண்டாது பொருள் இனிது விளங்கல் வேண்டும்' என்றது, அவிநயத்திற்கு உரியவாதல் நோக்கி எனவும் பேராசிரியர் கூறிய விளக்கம் அறியத்தக்கது.

மேற்கூறியவை யாவும் தொல்காப்பியத்தில் கண்ட காப்பிய வனப்புபற்றிய செய்திகளாகும். வடமொழியில் காப்பிய இலக்கணங்களை விளக்கும் நூல்களில் பெரும்பாலும் காப்பியத்தின் பொது இலக்கணம், காப்பியங்களின் வகை, காப்பியத்தில் அமையும் அணிகள், சுவைகள், குணம், குற்றம் என்பன ஆராயப்பெறுகின்றன. தமிழ் நூல்களில் இந்த முறை இல்லாவிடினும் இத்தகைய இலக்கணங்கள் ஆங்காங்கே கூறப்பெறுகின்றன. காப்பிய இலக்கணம் பற்றிய ஒரு தனி இலக்கண நூல் தமிழ்மொழிக்கு மிகவும் இன்றியமையாதது.

15. செய்யு.-நூற். 234 (இளம்.)

## 31. சொற்பொருள் மரபுகள்—(1)

மொழி சொற்களால் ஆனது; சொற்கள் யாவும் பொருள்களை உணர்த்தும் குறியீடுகளாம். சொல்லுவோனது உள்ளக் கிடக்கையைக் கேட்போன் சரியாக உணர வேண்டுமாயின், சொற்களின் பொருளை இருவரும் நன்கு தெரிந்திருக்க வேண்டும். பண்டைக் காலத்தில் எவ்வாறு சொற்களுக்குப் பொருள் வழங்கினார்களோ, அந்த மரபு கெடாது அச்சொற்களை வழங்கி வரல் வேண்டும். அம்மரபு திரிய அச்சொற்கள் வழங்கப்பெறுமாயின், இவ்வுலகத்துச் சொற்களெல்லாம் பொருளிழந்து பிறிது பிறிதாகும் என்பது தொல்காப்பியனாரின் கருத்தாகும்.

'மரபுநிலை திரியிற் பிறிதுபிறி தாகும்'1

என்பது தொல்காப்பிய நூற்பா. தொன்றுதொட்டு உயர்ந்தோர்—அறிஞர்கள்—சொற்களை வழங்கி வந்த முறையே 'வழக்கு' என்பது. காரணம், உலகத்து நிகழ்ச்சிகள் யாவும் அவர்களையே நோக்கி நிற்கின்றன.

வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி அவர்கட் டாக லான 2

என்று இதனை விளக்குகின்றார் தொல்காப்பியனார். இதனையே பின் வந்தோர்,

எப்பொரு ளெச்சொலின் எவ்வா றுயர்ந்தோர்
செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே.3

என்று விளக்குவர். உலக வழக்கு, செய்யுள் வழக்கு ஆகிய

---

1. மரபியல் - நூற் . 98 (இளம்.)
2. மரபி-நூற். - 94 (இளம்.)
3. நன்னூல் - நூற். 388.

இரு வகை வழக்கிலும் நெடுங்காலமாகப் பயின்று வழங்கும் மரபுச் சொற்கள் உயர்திணை, அஃறிணை என்ற இருதிணையும் ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் என்ற ஐம்பாலும்பற்றி வரும் பொருள்களின் இளமைத் தன்மை, ஆண்மை, பெண்மை முதலிய இயல்புகளைப் புலப்படுத்தும் நிலைமையில் அமைந்தன. இவற்றின் இயல்பு களை நுண்ணிதின் விளக்குவனவாகிய இம்மரபுச் சொற்களின் பொருள் நிலை மாறுபடாதவாறு உலக வழக்கினையும் செய்யுள் வழக்கினையும் போற்றிக் காத்தல் வேண்டுமென்பது தொல் காப்பியனாரின் கருத்து.

**இளமைப் பெயர்கள் :** முதலாவதாக, இளமைப் பெயர் களை நோக்குவோம். பார்ப்பு, பறழ், குட்டி, குருளை, கன்று, பிள்ளை, மகவு, மறி, குழவி என வரும் இவ்வொன்பதும் இளமைப் பண்புபற்றிய மரபுப் பெயர்களாகும். இவை.

> மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பிற்
> பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும்
> கன்றும் பிள்ளையும் மகவும் மறியுமென்
> றென்பதும் குழவியொ டிளமைப் பெயரே.[4]

என்ற நூற்பாவில் உணர்த்தப்பெறுகின்றன. மேலும், இன்னின்னவற்றுக்குரியன என்று மரபியல் 4 முதல் 26 வரையுள்ள நூற்பாக்களால் வகுத்துக் காட்டுகின்றார் ஆசிரியர்.

பார்ப்பு, பிள்ளை என்னும் இரண்டும் பறப்பவற்றின் இள மைப் பெயர்களாகும். இவை இரண்டும் ஊர்வனவற்றிற்கும் உரியனவாகும் என்று விதி செய்வர் ஆசிரியர். அவை ஆமை, உடும்பு, ஓந்தி, முதலை முதலாயின என்று விளக்குவர் பேரா சிரியர்.

மூங்கா (கீரி), வெருகு (காட்டுப் பூனை), எலி, அணில் என்னும் இவை நான்கும் 'குட்டி' என்ற பெயர்க்குரியன. அஃதாவது, இவை மூங்காக் குட்டி, வெருகுக் குட்டி, எலிக் குட்டி, அணிற்குட்டி என வரும் என்று விளக்குவர். மேலும், அவர், "தத்துவனவற்றிற்கும் குட்டிப் பெயர் கொடுக்கப்

4. மரபி.-நூற் 1. (இளம்.)

படும்; 'தவளைக் குட்டி' என வரும். மேல் ஊர்வனவற்றுக்கும் தவழ்வனவற்றிலக்கணம் எய்துவித்தமையாற் 'பாம்புக்குட்டி' என்பதும் கொள்க'' என்று விதந்து கூறுவர்.

நாய், பன்றி, முயல், புலி, நரி என்பவற்றின் இளமைப் பெயர் 'குருளை' என்பதாகும். இவ்வைந்தினையும் 'குட்டி', 'பறழ்' என்ற பெயர்களால் வழங்குதலும் உண்டு. இவ்வைந்தனுள் நாயல்லாத ஏனைய நான்கிற்கும் 'பிள்ளை' என்ற பெயரும் உரியதாகும். அஃதாவது, பன்றிக் குருளை, பன்றிக் குட்டி, பன்றிப் பறழ், பன்றிப் பிள்ளை என வரும். இவ்வாறு ஒட்டி ஏனையவற்றையும் காண்க.

யாடு, குதிரை, நவ்வி (புள்ளிமான்), உழை, புல்வாய் என்று சொல்லப்பெற்ற ஐந்தும் 'மறி' என்ற இளமைப் பெயரை உடையன. 'மடனுடையன நவ்வி எனவும், இடைநிகரன உழை எனவும் கொள்க' என்று கூறுவர் பேராசிரியர்.

மரக்கிளையினையே வாழுமிடமாகக் கொண்ட குரங்கும் 'குட்டி' என்று வழங்கப்பெறும். மகவு, பிள்ளை, பறழ், பார்ப்பு என்ற நான்கு பெயர்களும் 'குட்டி' என்பது போல அக்குரங்கின் பகுதிக்கு உரியனவாகும். இவற்றை,

'கோடுவாழ் குரங்கும் குட்டி கூறுப.'
'மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பும்
அவையும் அன்ன அப்பா லான'.[5]

என்ற நூற்பாக்கள் நுவலும். 'கோடுவாழ் குரங்கு' என்பதனல், அதன் இனமாகிய ஊகமும், முசுவும் 'குட்டி' என்ற பெயர் பெறும் எனக் கொள்வர் இளம்பூரணர். அவை குரங்குக் குட்டி, முசுக்குட்டி, ஊகக்குட்டி என்று வரும். 'கோடுவாழ் குரங்கும்' என்பதில் உம்மையை இறந்தது தழீஇயிற்றாகக்கொண்டு மேற்கூறிய யாடு, குதிரை, நவ்வி, உழை, புல்வாய் என்னும் ஐந்து சாதிக்கும் 'குட்டி' என்னும் பெயர் கூறப்படும் என்பர் பேராசிரியர். அவை யாட்டுக் குட்டி, குதிரைக்குட்டி, நவ்விக் குட்டி, உழைமான் குட்டி, புல்வாய்க்குட்டி என வரும்.

5. மரபியல் - நூற். 13, 14 (இளம்.)

யானை, குதிரை, கழுதை, கடமை, மான்,[6] எருமை, மரை, கவரி, கராகம்[7] (கரடி), ஒட்டகம் என்பன 'கன்று' என்ற இளமைப் பெயரையுடையன. அவை யானைக் கன்று, குதிரைக் கன்று, கழுதைக் கன்று, கடமைக் கன்று, மான் கன்று, எருமைக் கன்று, மரையான் கன்று, கவரிமான் கன்று, கராக் கன்று, ஒட்டகக் கன்று என வரும்.

யானை, ஆ, எருமை, கடமை, மரை, குரங்கு, முசு, ஊகம் என்றவற்றிற்கு 'குழவி' என்ற இளமைப் பெயர் உரியது.

மேற்குறித்த இளமைப் பெயர்கள் ஒன்பதில் குழவி, மகவு என்ற இரு பெயர்களைத் தவிர ஏனைய பெயர்கள் மக்களுக்கு உரியனவாக வழங்கப்பெறுதல் இல்லை என்பது தொல்காப்பியரின் கருத்து. 'ஆண் பிள்ளை, பெண்பிள்ளை, எனப் பிள்ளைப் பெயரும் மக்கட்பாற்படுவன கொள்க' என எதிரது போற்றிக்கொள்வர் பேராசிரியர்.

பிள்ளை, குழவி, கன்று, போத்து என்ற நான்கு பெயர் களும் ஓரறிவுயிர்கட்கு உரியனவாய் வழங்கும் இளமைப் பெயர்களாகும்.

> பிள்ளை குழவி கன்றே போத்தெனக்
> கொள்ளவும் அமையும் ஓரறி வுயிர்க்கே.[8]

என்பது தொல்காப்பிய நூற்பா. இவ்விளமைப் பெயர்கள் தெங்கம் பிள்ளை, கமுகங் கன்று, கருப்பம் போத்து என வரும். ஓரறிவுயிர்க்கட் குழவி என்பது வந்தவழிக் கண்டு கொள்க. 'கொள்ளவும் அமையும்' என்ற உம்மையை எச்சப்படுத்துப் பிறவழியும் கொள்ளப்படும் என்று கூறி குழவி வேனில், குழவித் திங்கள், குழவி ஞாயிறு என்பன போன்ற இலக்கிய மேற்கோள்களைக் காட்டுவர் பேராசிரியர். இந்த நான்கு பெயர்களாலும் நெல்லும் புல்லும் குறிக்கப் பெறுதல் இல்லை.

இவ்வாறு இளமைப் பெயர்களைக் குறிப்பிட்டவற்றைத் தவிர வேறில்லை என்றும் அறுதியிடுவர்.

---

6. ஆன்கன்று - என்பது பேராசிரியர் கொண்ட பாடம்.
7. கராம் - முதலை என்று பாடம் கொள்வர் பேராசிரியர்.
8. மரபி. - நூற். 24 (இளம்.)

சொல்லிய மரபின் இளமை தானே
சொல்லுங் காலை அவையல திலவே.9

என்ற நூற்பாவால் இதனை அறியலாகும். 'அவை யல்லது பிறவில்லை' என்றமையின் ஒன்றற்குரியவற்றை ஒன்றற் குரியவாக்கி வழங்குவனவும் சிறுபான்மை கொள்ளப்படும். சிங்கத்திற்குப் புலிக்குரியதும், உடும்பு, ஓந்தி, பல்லி என்பவற்றுக்கு அணிலுக்குரியதும், நாவிக்கு மூங்காவிற்குரியதும் இவ்வாறே பிறவும் இவ்வகையின் ஏற்பனவெல்லாம் கொள்ளப்படும் என்பர் இளம்பூரணர். 'சொல்லுங்காலை' என்றதனுல் சொல்லாத 'நாகு' முதலிய இளமைப் பெயரும் தழுவிக் கொள்ளப்படும் என்பர் பேராசிரியர்.

இந்த இளமைப் பெயர்களில் பல சிலப்பதிகாரத்தில் ஒருசேரக் காணப்படுகின்றன. மலை வளங் காணச் சென்ற செங்குட்டுவன் முன்னர் மலைக்குறவர் காணிக்கைப் பொருள்களுடன் 'திறை சுமந்து நிற்கும் தெவ்வர் போல' நிற்பதை வருணிக்கும் இளங்கோவடிகள்,

"..............................
ஆளியின் அணங்கும் அரியின் குருளையும்
வாள்வரிப் பறழும் மதகரிக் களபமும்
குரங்கின் குட்டியும் குடாவடி உளியமும்
வரையாடு வருடையும் மடமான் மறியும்
காசறைக் கருவும் மாசறு நகுலமும்
பீலி மஞ்ஞையும் நாவியின் பிள்ளையும்
கானக் கோழியும் தேன்மொழிக் கிள்ளையும்
மலைமிசை மாக்கள் தலைமிசைக் கொண்டாங்கு"10

[அரி-சிங்கம்; வாள் வரி-புலி; மதகரி-மதயானை; குடா வடி உளியம் - வளைந்த அடிகளையுடைய கரடி; வருடை-மலையாடு; காசறை-கத்தூரி மான்; நகுலம்-கீரி; மஞ்ஞை-மயில்; நாவி-புழுகுப்பூனை; கிள்ளை-கிளி.]

என்று கூறுவர். அணங்கு, குருளை, பறழ், களபம், குட்டி, வருடை, மறி, கரு, பிள்ளை என்பன இளமையைக் குறிக்கும் பெயர்கள். இவற்றுள் அணங்கு, களபம், கரு என்ற

9. மரபி.-நூற்பா 26. (இளம்.)
10. சிலப்பதி.-வஞ்சிக்காண்டம்-காட்சிக்காதை. வரி (48-55)

நான்கும் தொல்காப்பியத்தில் காணப்பெறவில்லை; இவை பிற்காலத்திய வழக்குகளாகும். வாள்வரிப் பறழ், குரங்குக் குட்டி முதலிய வழக்குகளும் தொல்காப்பியத்தில் இல்லை. மேலும், திருத்தொண்டர் புராணத்தில் 'வன்புலிக்குருளை', 'வயக்கரிக் கன்று' என்றும்,[11] 'கடுமுயற்பறழ்', 'கான ஏனத் தின் குட்டி', 'கொடுவரிக் குருளை' என்றும்[12] பயின்று வந் திருப்பது ஈண்டு எண்ணற்பாலது.

**ஆண்பாற்பெயர்கள் :** இரண்டாவதாக ஆண்பால்பற்றிய மரபுப் பெயர்களை நோக்குவாம். ஏறு, ஏற்றை, ஒருத்தல் களிறு, சே, சேவல், இரலை, கலை, மோத்தை, தகர், உதள், அப்பர், போத்து, கண்டி, கடுவன் என்பனவும் பிறவும் ஆண் பால் பற்றிய மரபுப் பெயர்களாகும். இவை,

ஏறும் *ஏற்றையும் ஒருத்தலும் களிறும்
சேவும் சேவலும் இரலையும் கலையும்
மோத்தையும் தகரும் உதளும் அப்பருவம்
போத்தும் கண்டியும் கடுவனும் பிறவும்
யாத்த ஆண்பாற் பெயரென மொழிப.[13]

என்ற நூற்பாவினுல் உணர்த்தப்பெறுகின்றது. மேலும், இவையிவை இன்னின்னவற்றுக்குரியவை என்பதை மரபியல் 35 முதல் 51 வரையுள்ள நூற்பாக்களால் விரித்துரைக்கின் ருர் ஆசிரியர்.

'களிறு' என்ற ஆண்பாற்பெயரால் விதந்து பேசப்பெறு தல் யானைக்கு உரியதாகும். களிறு என்ற பெயர் ஒரு சாதிக்குரிய பெயர் போன்று யானை இனத்திற்கே யுரியதாய் வழங்கும் சிறப்புரிமை யுடைமையால்,

வேழக் குரித்தே விதந்துகளி றென்றல்.[14]

என நூற்பா செய்தார் ஆசிரியர். கேழற்கண்ணும் அது சிறுபான்மை வரும். கேழல் என்பது பெரும்பன்றி; முள்ளம்பன்றியுமாம்.

---

11. கண்ணப்ப புராண-செய். 4.
12. ஷ-செய். 26.
* 'எருது' என்றும் பாடம்.
13. மரபி. - நூற். 2 (இளம்.)
14. மரபி.-நூற். 35 [இளம்.]

புல்வாய், புலி, உழை, மரை, கவரி, கராம் (முதலை), யானை, பன்றி, எருமை என்ற ஒன்பதின் ஆணும் 'ஒருத்தல்' என்று பெயர் பெறும்.

எ - டு. **'காடுமீக் கூறுங் கோடேந் தொருத்தல்'** (அகம்—65) அகநானூற்றடியில் 'யானை ஒருத்தல்' என்று வந்துள்ளமை காண்க.

பன்றி, புல்வாய், உழை, கவரி, எருமை, மரை, பெற்றம், சுறவு என்ற எட்டுச் சாதியின் ஆணும் 'ஏறு' என்று வழங்கப் பெறும். அவை 'ஏற்றிளம் பன்றி', 'மடமான் திரிமருப் பேரெடு', 'ஏற்றிளங்கவரி', 'ஏற்றெருமை', 'மரைபேறு', 'சுறவேறு' என இலக்கியங்களில் பயின்று வருதலைக் காண லாம்.

பெற்றம், எருமை, புலி, மரை, புல்வாய், நீர்வாழ் சாதி, மயில், எழால் (புல்லூறு என்ற பறவை) என்பவற்றின் ஆண், 'போத்து' என்ற பெயர் பெறும். பன்றி, ஓந்தி முதலாயினவற்றிற்கும் இப்பெயர் உரித்து என்பர் பேரா சிரியர். மேலும் அவர், நீர்வாழ் சாதியுள் சுறா, முதலை, இடங்கர், கராம், வரால், வாளை என்ற ஆறனையும் அடக்கிப் பேசுவர்.[15] நாரையுள் ஆணும் 'போத்து' என வழங்கப் பெறுதல் உண்டு. இவை எறிபோத்து, உழுபோத்து, எருமைப் போத்து, புலிப் போத்து, மரைப் போத்து, முதலைப் போத்து, 'பகுவாய் வராஅல் பல்வரி இரும்போத்து', வாளை வெண்போத்து, மயிற்போத்து, நாரை நிரை போத்து என்று இலக்கியங்களில் பயின்று வருதலை அறியலாம்.

'இரலை', 'கலை' என்ற பெயர்கள் இரண்டும் புல்வாய் என்னும் இனத்துள் ஆண்பாற்கு உரியன. அவற்றுள் 'கலை' என்னும் பெயர் உழை, முசு என்பவற்றிற்கும் உரியவை யாகும். அவை புல்வாயிரலை, முதுகலை, பொறிக்கலை, முசுக்கலை, கருங்கட்டாக்கலை என இலக்கியங்களில் பயின்று வருதலை அறிக.

'மோத்தை', 'தகர்', 'உதள்', 'அப்பர்' என்ற நான்கு பெயரகளும் ஆடுகளில் ஆண்பாற்கு உரியனவாக வழங்கும்.

15. மரபியல்-நூற். 42 (பேரா.)

'அப்பர்' என்ற வழக்கு நம்மிடம் இன்றுள்ள இலக்கியங்களில் காணப்பெறவில்லை. இதனால் "அப்பரென்பது இக்காலத்து வீழ்ந்தது போலும்" என்று குறிப்பிடுவர் பேராசிரியர். மேலும், அவர் 'கடா' என்ற பெயரை யாட்டிற்கும், 'அப்பர்' என் பதைக் குரங்கிற்கும் உரியனவாகக் கூறுவர்.

'சேவல்' என்ற பெயர் தோகையையுடைய மயிலல் லாத ஏனைப் பறவையினத்துள் ஆண்பாற்கெல்லாம் ஒப்ப வுரியதாகும். இதனைத் தொல்காப்பியர்,

> சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணும்
> மாயிருந் தூவி மயிலலங் கடையே. [16]

என்ற நூற்பாவால் குறிப்பிடுவர். "'மாயிருந் தூவி மயில்' என்றதனால், அவை தோகையுடையவாகிப் பெண்பால் போலும் சாயலவாகலான் ஆண்பாற்றன்மை இல என்பது கொள்க" என்பர் பேராசிரியர். எனவே, தோகையையுடைய ஆண் மயில்கள் 'சேவல்' என்ற ஆண்பாற்சொல்லால் வழங்கப் பெருவாயின. "செவ்வேள் ஊர்ந்த மயிற்காயின் அது (சேவல் என்ற பெயர்) நேரவும் படும்" என்று பேராசிரியர் கூறும் அமைதி பிற்கால இலக்கிய வழக்குப் பற்றியதாகும்.

> 'எழுந்து முன்னுறு மஞ்ஞையஞ்
> சேவல்மே லேறி, [17]

என்ற கந்தபுராணச் செய்யுளடியில் 'மஞ்ஞையஞ் சேவல்' என்று போந்துள்ளமை காண்க.

'ஏற்றை' என்ற பெயர் ஆற்றலுடைத்தாகிய ஆண்பாற் கெல்லாம் பொதுவாக வழங்குவதற்குரியது என்பது தொல் காப்பியர் கருத்து.

> ஆற்றலொடு புணர்ந்த ஆண்பாற் கெல்லாம்
> ஏற்றைக் கிளவி உரித்தென மொழிப. [18]

என்ற நூற்பாவினால் இதனை அறியலாம். அவ்வ புலி யேற்றை, செந்நாயேற்றை, முதலையேற்றை பேழ்வா

16. மரபி.- நூற். 49 (இளம்.)
17. கந்தபுராணம்-தேவகாண்ட-தெய்வயானை திருமணம்-192
18. மரபி.- நூற். 50 (இளம்.)

யேற்றை, வெள்ளெலியேற்றை என்று இலக்கியங்களில் வருதல் காண்க. அவையும் அப்பெயரால் வழங்குதல் ஆற்றலுடையவாகத் தோன்றும். "'எல்லாம்' என்றதனால், சிறுபான்மை ஆற்றல் இல்லாதனவும் கொள்க" என்று கூறி, 'ஏற்றைப் பனை' என்ற எடுத்துக்காட்டும் தருவர் பேராசிரியர்.

**பெண்பாற் பெயர்கள் :** மூன்றாவதாக, பெண்பால்பற்றிய மரபுப் பெயர்களை நோக்குவோம். பேடை, பெடை, பெட்டை, பெண், மூடு, நாகு, கடமை, அளகு, மந்தி, பாட்டி, பிணை, பிணவு, பிடி என்பன பெண்மைபற்றிய மரபுப் பெயர்களாகும். இந்தப் பதின்மூன்று பெயர்களும்,

பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணும்
மூடும் நாகுங் கடமையும் அளகும்
மந்தியும் பாட்டியும் பிணையும் பிணவும்
அந்தஞ் சான்ற பிடியொடு பெண்ணே 19

என்ற நூற்பாவினால் உணர்த்தப்பெறுகின்றன. இப்பெயர்களுள் இவையிவை இன்னின்னவற்றுக்குரியன என்பதனை மரபியல் 52 முதல் 68 முடியவுள்ள நூற்பாக்கள் விரித்துரைக்கின்றன.

ஆண்பாலில் 'களிறு' என்ற ஆண்பாற் பெயரை முதலில் கூறியது போலவே பெண்பாலிலும் 'பிடி' என்ற பெண்பாற் பெயரை யானை இனத்திற்கு உரியதாக முதலில் கூறுகின்றார் தொல்காப்பியர். 'பிடிபடி' முருக்கிய பெருமரப் பூசல்' (அகம் - 8) என்ற வழக்கு வந்துள்ளமை காண்க.

ஒட்டகம், குதிரை, கழுதை, மரை என்பன 'பெட்டை' என்ற பெயர் பெறும். அவை ஒட்டகப் பெட்டை, குதிரைப் பெட்டை, கழுதைப் பெட்டை, மரையான் பெட்டை என வரும். எல்லாப் பறவைகளுக்கும் இப்பெயர் உரியது என்பது ஆசிரியர் கருத்து. அவை கோழிப் பெட்டை, மயிற் பெட்டை என வரும். பேடை, பெடை என்ற இரண்டு பெயர்களும் பறவை இனத்திற்குப் பொருந்தும்.

'அளகு' என்னும் பெண்மைப் பெயர் கோழி, கூகை, மயில் என்ற மூன்றற்கும் உரியது.

---

19 மரபிய. - நூற். 3 (இளம்.)

புல்வாய், நவ்வி, உழை, கவரி என்ற நான்கிற்கும் 'பிணை' என்ற பெண்பாற் பெயர் உரியது. "'பிணை' என்னும் சொற்பொருளின் உண்மை நோக்கின், பிரியாது பிணையும் பிற சாதிக்கும் சேவற்கும் செல்லுமாயினும், மரபு நோக்கப் பிணையென்றற்குச் சிறப்புடையன இவை நான்குமே" என்பர் பேராசிரியர்.[20]

'பிணவு', 'பிணவல்' என்னும் பெண்மைப் பெயர்கள் பன்றி, புல்வாய், நாய் என்பவற்றிற்கு உரியவையாகும்.

பெற்றம், எருமை, மரை என்ற மூன்றும் 'ஆ' என்ற பெண்மைப் பெயரை உடையவை. புனிற்று, செங்கட் காரான், மரையா என்று வந்துள்ளமையை நோக்குக.

'பெண்', 'பிணவு' என்ற பெண்பாற் பெயர்கள் மக்களில் பெண்பாலுக்கு உரியவையாகும். திருவாய்மொழியில் வரும் 'பிணாப் பிள்ளைகாள்' என்ற வழக்கினை நோக்குக.

எருமை, மரை, பெற்றம், நீர்வாழ் உயிராகிய நந்து (நத்தை) ஆகிய நான்கும் 'நாகு' என்ற பெண்பாற் பெயரை உடையவை. கருநாகு, மடநாகு என்ற இலக்கிய வழக்காறு களைக் காண்க.

'மூடு', 'கடமை' என்ற பெண்மைப் பெயர்கள் ஆட்டினத்திற்கே உரியவை. இன்று இப்பெயர்கள் வழக்கில் இல்லை.

பன்றி, நாய், நரி என்ற மூன்றும் 'பாட்டி' என்ற பெண் மைப் பெயரை உடையவை.

'மந்தி' என்ற பெண்பாற் பெயர் குரங்கு, முசு, ஊகம் என்ற மூன்றற்கும் உரியதாகும். காமர் மந்தி, கருமுக மந்தி என்று இலக்கியங்களில் பயின்று வருவதை நோக்குக.

**அருகி வழங்கிய மரபுகள் :** ஆசிரியர் தொல்காப்பியர் தம் காலத்து அருகி வழங்கிய மரபுகள் சிலவற்றையும் குறிப்பிடுகின்றார். அவை,

> குரங்கின் ஏற்றினைக் கடுவன் என்றலும்
> மரம்பயில் கூகையைக் கோட்டான் என்றலும்
> செவ்வாய்க் கிளியைத் தத்தை என்றலும்

20. மரபிய - நூற். 57 (பேரா. உரை.)

வெவ்வாய் வெருகினைப் பூசை என்றலும்
குதிரையுள் ஆணினைச் சேவல் என்றலும்
இருள்நிறப் பன்றியை ஏனம் என்றலும்
எருமையுள் ஆணினைக் கண்டி என்றலும்
முடிய வந்த வழக்கின் உண்மையிற்
கடிய லாகா கடனறிந் தோர்க்கே.[21]

என்ற நூற்பாவினுல் அறியலாகும். இதனுல் தொல்காப்பியர் வாழ்ந்த காலத்தில் ஆண் குரங்கு, கடுவன் எனவும், கூகை, கோட்டான் எனவும், கிளி, தத்தை எனவும், வெருகு, பூசை எனவும், ஆண் குதிரை, சேவல் எனவும், பன்றி, ஏனம் எனவும், ஆணெருமை, கண்டி எனவும் மருவி வழங்கின என்பது அறியப்படும்.

'முடிய வந்த அவ்வழக் குண்மையிற்
கடிய லாகா கடனறிந் தோர்க்கே';[22]

எனக் கூறப்படுவதினின்று இம்மரபுகள் தொல்காப்பியர் காலத்தே அமைக்கப்பெற்று ஆன்றோர் வழக்காயின என்பது புலனுகின்றது. இவற்றுள் குதிரைச் சேவல், எருமைக் கண்டி என்பவையொழிய, ஏனையவை இக் காலத்தும் வழங்கி வருகின்றன. மேலும், 'பெண்', 'ஆண்', 'பிள்ளை' என்ற பெயர்களும் மேற்கூறியவாறு வழக்கினுள் நிலை பெற்றன. என்று கூறுவர் ஆசிரியர். இந்த மூன்று பெயர் களும் பெண் வந்தது, ஆண் வந்தது, பிள்ளை வந்தது என்று கூறிய வழி அஃறிணைப் பொருள் என்பதை உணர்தல் அரிது ; பெண் குரங்கு வந்தது, ஆண் குரங்கு வந்தது என்றே இவற்றை விதந்து கூறல் வேண்டும். 'பெண் பிறந்தது' 'ஆண் பிறந்தது', 'பிள்ளை பிறந்தது' என்று அடையடாது சொல்லிய வழி அவை உயர்திணைக்கேயாகும் என்பது ஈண்டு அறியத்தக்கது.

'ஆண்' என்ற சொல் இருதிணை ஆண்பாற்கும், 'பெண்' என்ற சொல் இருதிணைப் பெண்பாற்கும் வழங்குதல் உலக வழக்கிற் காணப்படும். இதனை ஆசிரியர்,

21. மரபி-நூற். 69 (இளம்.)
22. மரபி-நூற். 51 (இளம்.)

ஆண்பால் எல்லாம் ஆணெனற் குரிய
பெண்பால் எல்லாம் பெண்ணெனற் குரிய
காண்பவை அவையவை அப்பா லான 23

என்ற நூற்பாவால் குறிப்பிடுகின்றார்.

**வழக்கு வீழ்ந்தவை :** மேற்கூறிய இளமை, பெண்மை, ஆண்மைப் பொருண்மைகள்பற்றி ஆசிரியர் தொல்காப்பியனார் கூறிய மரபுகளை ஆராயுமிடத்து அவற்றுள் சில இலக்கியம் பெற்று வழங்குவனவேனும், கடைச்சங்க நாளில் வழக்கற்று வீழ்ந்துவிட்டன என்பதை அறியலாம். எடுத்துக்காட்டாக 'குழவி' என்ற பெயர் இக்காலத்து மக்கட்கு வழங்கினும், ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்தில் குஞ்சரம், ஆ, எருமை, கடமை, மரை, குரங்கு, முசு, ஊகம் முதலிய விலங்குகட்கும் பெருவழக்காயிருந்தன என்பதை மேலே குறிப்பிட்டோம். இவ்வழக்குப்படி குஞ்சரக் குழவி, ஆக் குழவி, எருமைக் குழவி, முசுக்குழவி என்றிவ்வாறு வழங்கினவாதல் வேண்டும். இது போலவே 'அப்பர்', 'மூடு', 'கடமை' என்பவை யாட்டுக்கும், 'பாட்டி' என்பது பன்றி, நாய், நரிகட்கும் ஆசிரியர் காலத்து வழக்குகளாகத் தெரிகின்றன. 'இவை இக்காலத்து வீழ்ந்தன' என்றும், 'அப்பர் என்பது இக்காலத்து வீழ்ந்தது போலும்' என்றும்,[24] 'இவற்றுக்கெல்லாம் இலக்கியம் முற்காலத்தே வீழ்ந்தன' என்றும் எழுதிச் செல்லுதலால் கடைச்சங்க காலத்திற்கு முன்பே இவ்வழக்குகள் அருகினவாதல் வேண்டும். இக்காலத்தில் தொல்காப்பியர் கூறியுள்ள மரபுகளில் பெரும்பாலானவை பழையனவாகவே கழிந்தன. எ-டு. 'சேவல்' என்ற ஆண்பாற் பெயர் மயிலுக்கு மட்டிலும் வருதல் கூடாது என்றிருந்த பண்டைய வழக்கு பிற்காலத்தில் மாறி வழங்கினமையை மேலே விளக்கினோம். மற்றுமோர் எடுத்துக்காட்டு ; 'அளகு' என்ற பெண்பாற் பெயர் கோழி, கூகை, மயில் என்ற மூன்றற்கன்றி வழங்காதென்பதை மேலே காட்டினோம். இவ்வழக்கு,

'அளகைப் போர்ந்தகோடி இளையோன்' 25

23. மரபி.—நூற். (10 பேரா.)
24. ஷெ—நூற். 47 (பேரா.)
25. பரஞ்சோதி : திருவிளை. —அருச்சனைப்.— 34.

என்ற திருவிளையாடற் புராணத்து அடியில் ஆண் கோழிக்கும் வந்து மாறியமை அறியத்தக்கது. மேலும் 'குழவி', 'மகவு' என்னும் இவ்விரண்டனைத் தவிர வேறொன்றும் மக்கட்கு இளமைப் பெயர்களாக உரியதன்று என்று ஆசிரியர் கூறி, யுள்ளார். இக்காலத்தில் 'பிள்ளை' என்பதொன்றே பெரு வழக்காயுள்ளது. இனி 'குட்டி' என்னும் பெயர் மூங்கா, வெருகு, எலி, அணில் இவற்றிற்கும் நாய், பன்றி, புலி, முயல், நரி இவற்றிற்கும், குரங்கிற்கும் வழங்குதற்குரியது என்றார். ஆயின், இக்காலத்தில் 'குட்டி' என்ற பெயர் பெரும்பாலும் விலங்குகள் எல்லாவற்றிற்கும் வழங்கப் பெறுகின்றது. குட்டி என்னும் சொல் குருடாயிருப்பது என்னும் பொருளைத் தருவதாகும்; அஃதாவது, பிறக்கும் பொழுது கண் திறவாமலிருப்பது. வெருகு, எலி முதலியவை பிறக்கும்பொழுது கண் திறவாமலிருத்தலின் அவற்றிற்கு அமையும். ஆட்டுக்குட்டி என்பது போன்ற வழக்கு அமையா தன்றே! இன்னும் ஆசிரியர் உள்வயிரமுள்ளவை 'மரம்' என்றும், வெளி வயிரமுள்ளவை 'புல்' என்றும் வழங்கப் பெறும் என்று கூறியுள்ள மரபும் இக்காலத்தில் இல்லை. இவ்வாறே, மரபியலில் கூறப்பெற்ற மரபுப் பெயர்களுள் பெரும்பாலன அவ்வழக்கொழிந்தன. கடைச்சங்க காலத் திலேயே இம்மரபு பிறழ்ந்தொழிந்தது என்பதை அறியின் தொல்காப்பியனார் காலம் அதற்குப் பெரிதும் முற்பட்டதாகும் என்பது தெள்ளிதிற் புலனாகும். இன்னும், சங்க நூல் முதலாக இன்று வரையுள்ள இலக்கியங்களிற் காணப் பெறாத பல இலக்கண வழக்குகள் தொல்காப்பியத்தில் காணப்பெறுதலின், அந்நூலின் பழைமையை ஒருவாறு ஊகித்து உணரலாம். இவ்வாறு பிற்கால வழக்குகளிலும், பிற்கால நூல்களிலும் காலத்திற்கேற்பத் தொல்காப்பிய மரபுகள் மாறிவிடுகின்றன; இதுகாறும் மாறி வந்தவை புலவாகும்.

# 32. சொற்பொருள் மரபுகள் - (2)

தொல்காப்பியர் கூறியுள்ள இளமை, பெண்மை, ஆண்மை பொருண்மைகளைப்பற்றிய மரபுகளை முன்னர்க் கண்டோம். இனி, எஞ்சியுள்ள ஓரறிவுயிர்களுக்குரிய சொல் மரபுகளையும் நால்வகைச் சாதிபற்றிய மரபுகளையும் ஈண்டுக் காண்போம்.

தாவரப் பெயர்கள் (புல், மரம்) : புறத்தில் வயிரமுடைய பனை, தெங்கு, கமுகு முதலான 'புல்' என்றும், அகத்து வயிரமுடைய இருப்பை, புளி, ஆச்சா முதலாயின 'மரம்' என்றும் வழங்கப்பெறும்.

> 'புறக்கா ழனவே புல்லென மொழிப'
> 'அகக்கா ழனவே மரமென மொழிப' 1

என்ற நூற்பாக்கள் இதனை உணர்த்தும்.

தோடு, மடல், ஓலை, ஏடு, இதழ், பாளை, ஈர்க்கு, குலை எனக் கூறப்பெற்ற உறுப்பின் பெயர்களும் இவற்றை யொத்த பிறவும் புல் வகையைச் சார்ந்து வரும். இதனை,

> தோடே மடலே ஓலை என்று
> ஏடே இதழே பாளை என்று
> ஈர்க்கே குலையே நேர்ந்தன பிறவும்
> புல்லொடு வருமெனச் சொல்லினர் புலவர். 2

என்ற நூற்பாவால் அறியலாம். 'புற வயிர்ப்பும் உள் வயிர்ப்பும் இல்லாதனவற்றுள் வாழை, ஈந்து, தாமரை, கழுநீர் முதலிய ஒரு சாரன இவ்வகைப்பட்ட உறுப்புப் பெய

1. மரபு - நூற். 86, 87 (இளம்.)
2. மரபு - நூற். 88 (இளம்.)

ருடையனவாகி இவையும் புல்லெனப் படும்' என்பர் இளம் பூரணர். 'பிறவும்' என்றதனுல் குரும்பை, நுங்கு, நுகும்பு, போந்தை என்றற்றொடக்கத்தனவும் புல்லின் உறுப்பாகக் கொள்ளப்படும். நுகும்பு - மடல் விரியாத குருத்து (புறம் - 249). போந்தை - பனங்கருக்கு.

**மரத்தின் உறுப்புப் பெயர்கள் :** இலை, தளிர், முறி, தோடு சினை, பூ, அரும்பு, நனை முதலாகச் சொல்லப்பட்டனவும் அனையவை பிறவும் 'மரன்' என்ற வகையைச் சார்ந்து வரும் உறுப்பின் பெயர்களாகும்.

இலையே முறியே தளிரே தோடே
சினையே குழையே பூவே அரும்பே
நனையே உள்ளுறுத் தனையவை எல்லாம்
மரனொடு வருஉங் கிளவி என்ப. [3]

என்ற நூற்பாவால் இவற்றை அறியலாம். புற வயிர்ப்பும் உள் வயிர்ப்பும் இல்லாதனவற்றுள் முருக்கு, தணக்கு முதலிய ஒரு சாரன இவ்வுறுப்புப் பெயருடைய மரமெனப் படும். புல்லினுள் ஒரு சாரன இலை, பூ முதலிய உறுப்பின் பெயர்களைப் பெறுவனவும், புல்லிற்குச் சொல்லப்பட்ட ஈர்க்கு முதலிய உறுப்புக்கள் சில மரத்திற்கு வருவனவும் வழக்கு நோக்கி உணர்ந்துகொள்ளத் தக்கனவாகும்.

காய், பழம், தோல், செதிள், வீழ் என்பன புல், மரம் என்னும் அவ்விரு வகைக்கும் உரியனவாகும். இவற்றை,

காயே பழமே தோலே செதிளே
வீழொ டென்றுங் கவையும் அன்ன. [4]

என்ற மரபியல் நூற்பாவால் அறியலாம். தெங்கங்காய் கமுகங்காய் எனவும், வேப்பங்காய், மருதங்காய் எனவும் காய் என்பது அவ்விரண்டிற்கும் வந்தது. பழமென்பதற்கும் இஃதொக்கும். பனந்தோல், வேப்பந்தோல், பனஞ் செதிள், வேப்பஞ் செதிள், தாழை வீழ், இத்தி வீழ் என இவையும் இருபாற்குரியனவாயின. 'தாழை பூவுடைத் தாகலானும் கோடுடைத்தாகலானும், புற வயிர்ப்பின்மையானும்

3. மரபி. - நூற். 89 (இளம்.)
4. மரபி. - நூற். 90 (இளம்.)

மரமெனப்படுமாயினும் புல் என்றல் பெரும்பான்மை' என்பர் இளம்பூரணர்.

**சாதி பற்றிய பெயர்கள் :** இனி நால்வகைச் சாதிபற்றிய மரபுகளை ஆராய்வோம். தொல்காப்பியத்தில் அகத்திணையொழுகலாற்றுக்குரிய மக்களை வகைப்படுத்திக் கூறிய நிலையிலும், புறத்திணையொழுகலாற்றில் வாகைத்திணைப் பகுதிகளை விரித்துரைத்த நிலையிலும் மக்களை ஆசிரியர் தொல்காப்பியனுர் அவர்கள் வாழும் நிலத்தாலும் அவர்கள் மேற்கொண்ட தொழில்வகையாலும் பகுத்துரைத்தனரேயன்றிப் பிறப்பு வகையால் அன்று என்பது பெறப்படும்.

> பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
> செய்தொழில் வேற்றுமை யான். 5

என்ற வள்ளுவரின் வாக்கும் இதுபற்றியே என்பதும் ஈண்டு சிந்திக்கத் தக்கது. தொல்காப்பியத்தில் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற சாதிப் பாகுபாடு காணப்பெறுகின்றது. இப்பாகுபாடு அவரவர்கள் மேற்கொண்ட தொழிலால் ஏற்பட்டது.

**அந்தணர் :** அந்தணர் என்போர் எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் அறவோர்; துறவு நெறிபற்றி வாழ்ந்தவர்கள். அவர்கள் புலவர் பெருமக்களைப் போலவே ஓரிடத்திலும் நிலையாகத் தங்கியிராமல் ஊர்தோறும் சென்று நாட்டு மக்கட்கு நன்னெறி புகட்டி வந்த சான்றோர் ஆவர். இவர்கள் நூல், கரகம், முக்கோல், மணை என்பவற்றைக் கொண்டிருந்தனர்.

> நூலே கரகம் முக்கோல் மணையே
> ஆயுங் காலை அந்தணர்க் குரிய. 6

என்ற தொல்காப்பிய நூற்பாவால் இதனை அறியலாம். நூல் என்பது, தமிழ் நூல்; உரையாசிரியர்கள் இதனை முந்நூலாகக் கொள்வர். கரகம் என்பது, சிறு செம்பு; குண்டிகை. முக்கோல் என்பது, முத்தலைக் கவைக்கோல்; ஊன்றுகோலாகப் பயன்படுவது. மணை என்பது விரிப்பு; ஆதனம்.

5. குறள் - 972
6. மரபி - நூற். 71. (இளம்.)

"ஆயுங்காலை" என்பதனால் குடையும் செருப்பும் முதலாயின வும் ஒப்பன அறிந்துகொள்க" என்பர் பேராசிரியர். வெயில், மழைக்காகக் குடையும், நடைக்காகச் செருப்பும், நீர் மொண்டு கொள்ளச் செம்பும், வழிச்செலவுக்குத் துணையாக ஊன்று கோலும், தங்குமிடத்தில் விரித்துக்கொள்ள விரிப்பும், அறிவு ஆராய்ச்சிக்காகப் பழந்தமிழ் நூல்களும் உடையராய் இருந் தனர் என்பது அறியத்தக்கது. இவர்கள் சிறந்த அறிஞர்க ளாகவும், ஒழுக்கமுடைய உயர்குணச் செம்மல்களாகவும் திகழ்ந்தனர். அரசர்கள் இவர்களை அறிவுரை கூறுதற்குத் துணையாகக்கொண்டனர். சில சமயம் அரசர்கள் போர் நிமித்தம் அல்லது வேறு அலுவல் நிமித்தம் நகரை விட்டு நீங்கும்பொழுது, இவர்கள் அரசையும் பார்த்து வந்தனர்.

அந்த ணாளர்க் கரசுவரை வின்றே.[7]

என்ற நூற்பா இதனை விளக்கும். அரசன் போருக்குச் செல்லும்பொழுது படைத்தலைமை பெற்ற வணிகரும் வேளாளரும் உடன் செல்வாராதலின், அரசியலை நடத்த வேண்டிய பொறுப்பு இவர் வழிப்பட்டதென்க.

அரசர் : படை, கொடி, குடை, முரசு, புரவி, களிறு, தேர், தார், முடி முதலாகப் பொருந்துவன பிறவும் அரசர்க் குரியனவாகக் கூறுகின்றார் ஆசிரியர்.

படையுங் கொடியுங் குடையும் முரசும்
நடைநவில் புரவியுங் களிறுந் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவுகொள் செங்கோல் அரசர்க்குரிய [8]

என்பது அவர் கூறும் நூற்பா. இவற்றுள் தார் என்பது போர்ப்பூவும், அடையாளப் பூவுமாகும். போர்ப்பூ - வெட்சி. வஞ்சி, உழிஞை, தும்பை முதலிய புறத்திணைக்குரிய பூக்கள். அடையாளப்பூ - பனை, ஆத்தி, வேம்பு என்னும் மூவரசர் பூ அந்தணாளர்க்கு உரியனவாக ஓதப்பெற்றனவற்றுள் அரசர்க் குப் பொருந்துவனவும் சில உளவாம். அவை ஈதல்,

7. மரபி. - நூற். 83 (இளம்.)
8. மரபி.- நூற். 72. (இளம்.)

வேட்டல், வேட்பித்தல், ஓதல் என்னும் நான்கு தொழில்களாகும் என்பர் இளம்பூரணர்.

இனிப் பாடாண்திணையுள் பரிசில் வேண்டுவதும் பரிசில் விடுப்பதுமாகிய துறைகளில் கொடுக்குந் தலைவனுக்கு வழங்கும் காளை, இளையோன், நெடுந்தகை, செம்மல் என்ற பெயர்கள் அரசர்க்குச் சாதி வகையால் சொல்லத்தக்கனவாகும்; அந்தணர்க்காயின், புனைந்துரை வகையானே அவை கூறப் பெறும்

> பரிசில்பா டாண்டிணைத் துறைக்கிழ மைப்பெயர்
> நெடுந்தகை செம்மல் என்றிவை பிறவும்
> பொருந்தச் சொல்லுதல் அவர்க்குரித் தன்றே. 9

என்ற நூற்பாவால் இவற்றினை அறியலாகும்.

ஊரும் இயற்பெயரும் சிறப்புப் பெயரும் ஆகிய பெயர்களும், தத்தமது தொழிலுக்கேற்ற கருவியும் ஆகிய அவை அவரவர்களைச் சார்த்திச் சொல்லப்பெறும்.

> ஊரும் பெயரும் உடைத்தொழிற் கருவியும்
> யாரும் சார்த்தி அவையவை பெறுமே. 10

என்பது தொல்காப்பிய நூற்பா. இவை எல்லாச் சாதியார்க்கும் ஒப்பச் செல்லும். ஊரும் பெயரும் சார்த்திச் சொல்லப்பெறுவதற்கு எடுத்துக்காட்டுக்களாக உறையூர் ஏணிச்சேரி முடமோசி, பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகன், கடியலூர் உருத்திரங்கண்ணனார் என்பவற்றை அந்தணர்க்குரியனவாகவும்; உறையூர்ச்சோழன், மதுரைப் பாண்டியன் என்பன அரசர்க்குரியனவாகவும்; காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார், மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் என்பன வணிகர்க்குரியனவாகவும்; அம்பர் கிழான் நாகன், வல்லங்கிழான் மாறன் என்பன வேளாளர்க்குரியனவாகவும் கூறுவர் பேராசிரியர். இன்றும் ஆர்க்காட்டு இலக்குமணசாமி முதலியார், பூண்டி அரங்கநாத முதலியார், திருவாரூர் கலியாணசுந்தரனார் போன்ற வழக்காறுகள் இருப்பதை அறிக. மேலும், 'உடைத்

9. மரபி. - நூற் 74. (இளம்.)
10. ௸ - நூற் 75. (இளம்.)

தொழிற்கருவியாக அந்தணாளர்க்குச் சுருவையும் (நெய்த் துடுப்பு) சமிதை குறைக்குங் கருவியும் முதலாயின்வும்; அரசர்க்குக் குடியும் கூழும் அமைச்சும் நட்பும் முதலாயினவும்; வணிகர்க்கு நாவாயும் மணியும் மருந்தும் முதலியனவும்; வேளாளர்க்கு நாஞ்சிலும் சகடமும் முதலாயினவும் உரியன வாகக் காட்டுவர்.

தலைமைக் குணம்படச் சொல்லுஞ் சொல்லும் அவரவர்க் குரிய நிலைமைக்கேற்ப நிகழ்த்தப்பெறும்.

> தலைமைக் குணச்சொலுந் தத்தமக் குரிய
> நிலைமைக் கேற்ப நிகழ்த்துப என்ப. 11

"எனவே, இறப்ப உயர்தல் இறப்ப இழிதல் ஆகாதென்ற வாறும்" என்பர் இளம்பூரணர். பேராசிரியரோ "அந்த ணர் தலைமைக் குணம் கூறுங்கால் பிரமனொடு கூறியும், அரசரை மாயனொடு கூறியும், வணிகரை நிதியின் கிழவ னொடு கூறியும், வேளாண் மாந்தரை வருணனொடு கூறியும் தலைமைக் குணச் சொல் நிகழ்த்தப்படும். அவையெல்லாம் அவரவர் செய்யுளுட் கண்டு கொள்க" என்று உரை எழுதுவர்.

படைத்தொழிலுக்குரியவர்கள் அரசரும் வணிகருமே யாவர்; அந்தணரும் வேளாளரும் இதற்கு உரியவரல்லர்.

> இடையிரு வகையோ ரல்லது நாடிற்
> படைவகை பெறாஅர் என்மனார் புலவர் 12

என்ற நூற்பா இதனை உரைக்கின்றது. "'நாடின்' என்பத னால், ஒருசாரந்தணரும் படைக்குரியாரென்பது கொள்க; அவர், இயமதங்கியாரும் (சமதக்கினி), துரோணனும், கிருப னும் முதலாயினரெனக் கொள்க. வேளாண்மாந்தருக்கும் இஃதொக்கும்" என்பர் பேராசிரியர்.

**வணிகர்:** வணிகர்கள் உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் பெருவாணிகம் செய்தும், எண்வகைக் கூலவாணிகம் செய் தும் பொருளீட்டி வந்தனர். எண்வகைக் கூலமாவன:

11. மரபி.-நூற். 76 (இளம்.)
12. மரபி.-நூற். 77 (இளம்.)

நெல், காணம், வரகு, இறுங்கு, தினை, சாமை, புல், கோதுமை (இளம்பூரணர்); பயறு, உழுந்து, கடுகு, கடலை, எள்ளு, கொள்ளு, அவரை, துவரை (பேராசிரியர்). வணிகர்கள் இவ்வகைக் கூலத்தை விளைவிக்கும் தொழிலையும் மேற்கொள்வர்.

மெய்தெரி வகையின் எண்வகை உணவின்
செய்தியும் வரையார் அப்பா லான. 13

என்ற நூற்பாவால் இதனை அறியலாம். "இவற்றை உண்டாக்குகின்ற உழவுத்தொழிலும் வாணிகர்க்கு வரையார் என்றவாறு" என்பர் இளம்பூரணர். இவர்க்குச் சூடும் பூவும், குலப்பூவும் தனியே உண்டு.

**வேளாளர் :** வேளாளர் உழவுத்தொழிலையே செய்து மக்களுக்கு உண்டி கொடுத்து உயிர் கொடுக்கும் பெருமக்களாவர்.

வேளாண் மாந்தர்க் குழுதூண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி. 14

என்ற நூற்பாவால் இதனைக் குறிப்பிடுவர் ஆசிரியர். பலவகைத் தொழிலினராயினும், தலைமைபற்றி உழவொன்றே கூறப்பட்டது. "வேளாண் மாந்தர் பலவகைப்பட்ட தொழிலரேனும் உழுந்தொழிலே பெரும்பான்மைத்தாகலான் அதனையே சிறப்பித்துச் சொல்லுதல் மரபு" என்று பேராசிரியர் கூறுவதையும் காண்க. இவர்கள் படை, கண்ணி முதலிய சிறப்புக்கள் பெற்றுப் படைத்தலைவராகவும், சிற்றரசராகவும் மேம்பாடுற்று வாழ்பவர்கள்.

வேந்துவிடு தொழிலிற் படையுங் கண்ணியும்
வாய்ந்தன ரென்ப அவர்பெறும் பொருளே 15

என்ற நூற்பாவால் இதனை அறியலாம். இவர்கள் வேள், அரசு, காவிதி, ஏனாதி முதலிய பட்டங்கள் பெற்றுச் சீரும் சிறப்பும் பெற்றுத் திகழ்ந்ததைச் சங்க இலக்கியங்கள் காட்டும். உருவப்ப·றேரல் இளஞ்சேட்சென்னியின் கோப்

13. மரபி.-நூற். 79 (இளம்.)
14. ஷை-நூற். 81.
15. மரபி.-நூற். 82 (இளம்.)

பெருந்தேவி—அழுந்தூர் வேளின் மகள். அவன் மகன் கரிகாற் பெருவளத்தான் கோப்பெருந்தேவி—நாங்கூர் வேளின் மகள். சேரன் செங்குட்டுவன் கோப்பெருந்தேவியான இளங்கோ வேண்மாள் ஒரு கொங்குவேளின் மகள். இதனால் இவர்கள் பேரரசர் பெண்கொள்ளும் அளவிற்குச் சிறப்பினையுடைய வர் என்பது போதரும்.

மேற்கூறிய அரசர்க்குரிய எல்லாச் சிறப்புக்களும் குறுநில மன்னர்க்கும் உரியவையாம்.

> வில்லும் வேலுங் கழலுங் கண்ணியுந்
> தாரும் மாலையுந் தேரும் மாவும்
> மன்பெறு மரபின் ஏனோர்க் குரிய.[16]

என்ற நூற்பாவால் இதனை அறியலாம். ஆனால், இவை யாவும் நான்கு குலத்திலும் இழிந்த மாந்தர்க்கு அவை உள வாகக் கூறப்பெறா என்றும் விதி செய்வர் ஆசிரியர்.

இங்ஙனம் வாழ்வியல், அரசியல், பொருளியல் என்னும் உலகியல் முட்டின்றி இனிது நடைபெறப் பல்லாற்றானும் பலவகைத் தொழில் செய்து தொண்டாற்றி வந்த மக்களை, அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் என வகுத்துச் செய்யுள் செய்து சீருடனும் சிறப்புடனும் வாழ்ந்து வந்தனர் பண்டைத் தமிழர். இதனையறியாது ஒருசில பேதையர் பிறப்பினால் சிறப்புண்டு என்று தருக்கித் திரிவதை எண்ணும்போது நம் உள்ளம் நகைக்கின்றது.

'தமிழிலக்கிய வரலாறு—தொல்காப்பியம்' என்ற நூலின் ஆசிரியர் தம் நூலினுள் கூறியுள்ள[17] நால்வகைச் ...தி பற்றிய கருத்துக்களை ஈண்டு ஆராய்தல் பொருத்...டைத் தாம். அவர் தொல்காப்பிய மரபியலிலுள்ள 71 முதல் 85 வரை எண்ணுடையனவாக அமைந்த நூற்...கள் இடைச் செருகலாக அமைந்தவை என்று கூ...துப் போந்தனர். அதற்கு அவர் காட்டும் காரணங்களா...

(1) அகத்திணையொழுகலா...க்குரிய மக்களை வகைப் படுத்துக் கூறிய நிலையி... புறத்திணையொழுகலாற்றில்

16. மரபி. - நூற். 16 ; 298-300. (இளம்.)
17. பக்கங்கள்

வாகைத்திணைப்பகுதிகளை விரித்துரைத்த நிலையிலும் மக்களை வருணத்தாற் பிரித்துரைக்கும் நெறியினை ஆசிரியர் தொல்காப்பியர் மேற்கொள்ளவில்லை.

(2) மரபியலில் 1 முதல் 70 நூற்பாக்களும் 86 முதல் 90 வரையுள்ள நூற்பாக்களும் மரபுகளை விவரித்துரைப்பனவாக அமைந்திருக்க, இந்தப் பதினைந்து நூற்பாக்கள் மட்டிலும் இயல்பாக அமைந்த இந்த மரபுத்தொடர் இடையறவு பட்டுச் சிதையும் நிலையில் அமைந்துள்ளன.

(3) உரிப்பொருளாகிய ஒழுகலாறுபற்றிய இச்செய்திகள் முதல், கரு, உரி என்னும் பொருட்பகுதிகளை விளக்கிய அகத்திணையியல், புறத்திணையியல் முதலாக முன்னுள்ள இயல்களில் கூறத்தக்கனவேயன்றி, மரபுச் சொற்களின் வழக்குப் பயிற்சியைக் கூறுதற்கமைந்த இம்மரபியலில் இடம் பெறத் தக்கன அல்ல.

இவற்றை ஒவ்வொன்றாக ஆராய்வோம் :

(1) தொல்காப்பியத்தை ஊன்றிப் படிப்போர் ஆசிரியர் பிறப்பினால் சாதிப் பிரிவு செய்யவில்லை என்பதும், செய்தொழில் வேற்றுமையால்தான் அப்பிரிவு அமைந்தது என்றும் அறிவர். இதை மேற்கூறிய நூலின் ஆசிரியரே ஒப்புக் கொண்டுள்ளார். உரையாசிரியர்கள்தாம் சாதிபற்றிய கொள்கையை வற்புறுத்தி எழுதியுள்ளனர். சாதி என்னும் சொல் தொல்காப்பியத்திலேயே காணப்பெறினும், அச்சொல் ஓரிடத்திலேனும் மக்களைக் குறிக்கும் சொல்லாக வழங்கப்பெறவில்லை. அது நீரிலே வாழும் உயிர்களையே குறிக்கின்றது.[18] இன்று சாதி என்னும் சொல் பிறப்பிலே வேற்றுமை உண்டு என்பதைக் குறிப்பதாகும். பிறப்பினால் உயர்வுதாழ்வு உண்டு என்ற கொள்கை தொல்காப்பியர் காலத்தில் தமிழ்நாட்டில் இல்லை. தொழில், ஒழுக்கம், கல்வியறிவு, திறமை என இவற்றின் காரணமாகவே வகுப்புப்

---

18. நீர்வாழ் சாதியுள் அ[illegible]றப்பு உரிய.

மரபியல் - நூற். 44

நீர்வாழ் சாதியுள் நந்தும் நாகே[illegible]

—ஷெ - நூற். 64.

சாதி - ஜாதி. ஜ - பிறப்பு. ஜனித்தல் - பிறத்த[illegible]. ஜன்மம் - பிறப்பு

பிரிவுகள் தோன்றின. நாளடைவில் மக்கள் செய்யும் தொழில்களில் சிறுமை பெருமை பாராட்டத் தொடங்கினர். இவையே உயர்வு தாழ்வுகளுக்கு உறைவிடமாயின. வட மொழியிலுள்ள வேத — உபநிடத— சுமிருதிகளும் இவ்வுண் மையை ஒப்புக்கொள்கின்றன. சாதிப்பிரிவுகள் தமிழகத் தில் தாமே தோன்றியனவேயன்றி யாராலும் புகுத்தப் பெற்ற வையல்ல என்றே தோன்றுகின்றது. ‘நால்வகைச் சாதி இந் நாட்டினில் நாட்டினீர்’ என்ற கபிலரகவலைச் சான்றாகக் கொண்டு வேண்டாதார்மீது வீண்பழி சுமத்துவது அறிவுடை மைக்கு அழகன்று. இன்றுள்ளது போல் அன்றும் சாதிப் பிரிவு பொருளாதார அடிப்படையில் தோன்றியிருக்க வேண்டும். மக்கள் தத்தம் அறிவின் திறனுக்கேற்றவாறு பல தொழில் களை மேற்கொண்டு பொருளீட்டி வாழ்க்கை நடத்தியிருக்க வேண்டும். ஒவ்வொரு தொழிலையும் மேற்கொண்டவர்கள் தமது தொழில் முறைக்கேற்ப அவ்வத்தொழில் செய்வாரிடமே கொண்டு கொடுத்து வந்து நாளடைவில் வெவ்வேறு குலத் தினராகி இருக்க வேண்டும். காலப்போக்கில் அது தொடர் பற்ற வெவ்வேறு குலமெனக் கருதும் நிலை வந்துவிட்டது. ஒவ்வொருவரும் தம் பேதைமையால் ‘குலப்புராணம்’ பாடும் இயல்புடையவராக மாறிவிட்டனர். எனவே, சாதிப் பிரிவிற்கு எந்த ஒரு வகுப்பாரும் பொறுப்பல்லர் என்றே தோன்றுகின்றது.

(2) மரபியலில் பல்வேறு மரபுகள் கூறப்பெறுகின்றன. அதில் சொல்லதிகாரக் கிளவியாக்கத்து மரபென்று வகு[illegible]து ஓதப்பட்டனவும், பொருளதிகாரச் செய்யுளியலுள் ம[illegible]ன்று ஓதப்பட்டனவுமன்றி, இருதிணைப் பொருட்கு[illegible]கிய இள மையும் ஆ[illegible]மையும் பெண்மையும் பற்[illegible] வரலாற்று முறைமையும் உயர்திணையில் மக்களி[illegible]ய செய்தொழிலின் காரணமாக வழங்கப்பெறும் வகு[illegible]றிய மரபும், அஃறிணைப் புல்லும் மரனும்பற்றிய மரபு[illegible]வைபற்றி வரும் உலகியல் மரபும், நூலின் வகை[illegible]ப்பற்றி வழங்கிவரும் பெயர் மரபுகளும், அவற்றி[illegible]குபாடுகளும், அவைபற்றிய பொது இலக்கணங்களு[illegible] கூறப்பெறுகின்றன. இம்முறையில்

வைத்து நோக்கின், 71 முதல் 85 வரை உள்ள நூற்பாக்கள் இயல்பாக அமைந்துள்ள மரபுத் தொடரை இடையறவுபடச் சிதைப்பனவாகத் தோன்றவில்லை. செய்தொழில் முறையால் மக்கள் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்று வழங்கப்பெற்றனர் என்பது தொல்காப்பியரின் காலத்து வழங்கிய மரபு என்பதை ஒப்புக்கொண்டால் இந்த நூற்பாக்களின் அமைப்பும் சரியாகவே அமைந்துள்ளன என்று தோன்றுகின்றது.

(3) தொல்காப்பிய அகத்திணையியலிலும் புறத்திணையியலிலும் கூறப்பெறும் செய்திகளில் பெரும்பான்மை நாடக வழக்காகவும் சிறுபான்மை உலகியல் வழக்காகவும் கூறப்பெறுபவை; இலக்கியம் செய்யப்பெறுங்கால் அவை இலக்கிய மரபுகளாகக் கொள்ளப்பெறுபவை. அகத்திணையியலில் கருப்பொருள்கள் இன்னவை என்பதை விளக்குங்கால் நிலப்பெயரும் தொழிற்பெயருமாகிய திணை நிலப்பெயர்களால் பிரித்தோதப்பெற்றன. அகத்திணைச் செய்யுளில இவை மட்டிலும் வரலாம் என்ற வரையறை காட்டவே இங்ஙனம் உணர்த்தப் பெற்றது. புறத்திணையியலில் வாகைத் திணையில் ஒவ்வொருவருடைய தொழிலும் சிறப்பித்துக் கூறப்பெறுகின்றது. புறத்திணையொழுகலாற்றில் அதற்குரிய தலைமக்களது இயற்பெயர் கூறப்பெறும். இவையாவும் சாதாரண மக்களைப் பொதுவாக உணர்த்தவே இவ்வாறு கூறப்பெற்றது என்று கொள்ளல் வேண்டும். அந்தணர், ...சர், வணிகர், வேளாளர் என்ற பிரிவு மேன்மக்களிடம் நில...து என்று கொள்ள வேண்டும். இத்தகைய மரபுகள் இருந்த... என்பதை உணர்த்தவே அவை மரபியலில் கூறப்பெற்றனவ.

உரையாசி...
...ர்கள் தம் காலத்தில் நிலவிய சமுதாயக் கொள்கைகள்பற்ற... தமக்கு அவற்றிலிருந்த பற்றின் காரணமாகவும் தம்மு... ...ரையில் சாதிக் கொள்கைகளை நாட்டிவிட்டனர். எத்தனை... ...கையில் பண்டை இலக்கண, இலக்கிய நுட்பங்களைத் தெரி... ...ள்வதற்கு இன்றியமை யாதனவாக உள்ள அவர்களுடைய உ... ...கள் சில குழப்பங்

களையும் உண்டாக்குகின்றன. பிற்காலத்தில் வாழ்ந்த தமிழறிஞர்கள் இவற்றை எடுத்துக் காட்டி விளக்கிப் போந்தனர். பொதுவாகத் தமிழ் நூல்களையும் ஆராய்ச்சி நூல்களையும் படிக்கும் இளைஞர்கள் தம் சொந்த விருப்பு வெறுப்புக்களைக் கொண்டு அவற்றை நோக்காது அறிவியல் மனப்பான்மையுடன் அவற்றை அணுகிப் பார்க்கவேண்டும். இலக்கிய ஆராய்ச்சி செய்வதன் காரணமாக இன்று சமூகத்தில் நிலவும் சாதி வேறுபாடுகளைக் கொண்டு எவரிடமும் காழ்ப்போ பகையோ கொள்ளுதல் அறிவுடைமையன்று. தம்முடைய கல்வியாலும், ஒழுக்கத்தாலும், பண்பாட்டினாலும் இவ்வேறுபாடுகளைக் கூடிய வரை களைந்தெறிந்து ஒன்றி வாழ்வதே அறிவுடைமையாகும்.

# 33. அறுவகை உயிர்ப் பாகுபாடு

இவ்வுலகிலுள்ள உயிர்கள் யாவும் புலன்கள் வாயிலாகவே வெளியுலக அறிவினை—சூழ்நிலையைப்பற்றிய[1] தகவல்களை—அறிகின்றன. புலனுணர்ச்சிக்கு[2] அடிப்படையாக இருப்பவை உயிர்ப்பிராணிகளிடம் அமைந்துள்ள பொறிகளாகும். உயிர்ப்பிராணிகளின் உடல்கள் செயல் திறம் வாய்ந்தவை. பொறிகள் அனைத்தும் அவற்றிடம் ஒரு தாக்கலை அல்லது அதிர்ச்சியை உண்டாக்குகின்றன; அஃதாவது, தூண்டல்களை[3] எழுப்புகின்றன. இத்தூண்டல்கள் பொறிகளைத் தாக்கிக் கொள்வாய்கள்[4] மூலம் நரம்பு மண்டலத்தை அடைகின்றன; நரம்புத் தொகுதிகள் வழியாக (பொருத்துவாய்கள்)[5] நரம்புத் துடிப்புக்கள் மூளையை அடைந்து அங்குப் புலப்பாடுகளை உண்டாக்குகின்றன. பிறகு, இத்துடிப்புக்கள் தசை அல்லது சுரப்பிகளில் (இயங்குவாய்களில்)[6] செயல்களை எழுப்புகின்றன. உயிர்ப்பிராணிகள் அவற்றிற்கேற்பத் துலங்குகின்றன. ஓர் எடுத்துக்காட்டு இதனைத் தெளிவாக்கும். பள்ளிச் சிறுவன் ஒருவன் பள்ளித் தோட்டத்தில் அருநெல்லிக் கனிகளைக் காண்கின்றான். கனிகளைக் கண்கள் (கொள்வாய்) கண்டதும், இத்தாக்கல் மூளைக்குச் சென்று, மூளையின் நடுவிடத்தின் (பொருத்துவாய்) துணையால் கைகளின் தசைகளை (இயங்குவாய்) இயக்குவித்துக் கனியைப் பறிக்க

1. சூழ்நிலை - Environment.
2. புலனுணர்ச்சி - Sensation.
3. தூண்டல் - Stimulus,
4. கொள்வாய்கள் - Receptors.
5. பொருத்துவாய்கள் - Connectors.
6. இயங்குவாய்கள் - Effectors.

செய்கின்றது; வாயிலும் உமிழ்நீரைச் சுரக்கச் செய்கின்றது.

எல்லா மனச்செயல்களும் பொறிகளின் தூண்டல்களால் நடைபெறுகின்றனவாதலின், உயிர்களின் வாழ்க்கையில் பொறிகள் முக்கியத்துவத்தைப் பெறுகின்றன. அவற்றின் செயல்கள் யாவும் பொறிகளைப் பொறுத்தே அமைகின்றன. அவை பெறும் அறிவு முழுவதும் நேர்முறையிலோ, அன்றி நேரல் முறையிலோ பொறிவாயிலாகப் பெறும் செய்திகளின்மீது எழுந்ததேயாகும். வெறும் புலனுணர்வு மட்டிலும் அறிவன்றெனினும், புலனுணர்வினை அடிப்படையாகக்கொண்டே அறிவு மலர்கின்றது. மக்களாகிய நாம் பெற்றுள்ள பொறிகளின் வகைகளைப் பொறுத்தே உலகை உணர்கின்றோம்; நம்மையும் உணர்கின்றோம். நாம் ஐம்பொறிகளைவிடக் குறைவான பொறிகளைப் பெற்றிருப்பின் நாம் இவ்வுலகினைப்பற்றிக் கொள்ளும் கருத்தினையும், நாம் வானொலி அலைகளையும்[7] புதிர்க் கதிர்களையும்[8] அண்டக் கதிர்களையும்[9] உணரக்கூடிய அதிகமான பொறிகளைப் பெற்றிருப்பின் நாம் இவ்வுலகினைப் பற்றிக் கொள்ளும் கருத்தினையும் ஒப்பிட்டுச் சிந்தித்துப் பார்ப்பின் இரண்டிற்கும் உள்ள வேற்றுமை இமயமலையினும் மாணப் பெரிதாக இருப்பதை நன்கு உணரலாம்.

மனிதனுக்கு எத்தனை பொறிகள் உள்ளது என்பதை உளவியலார் இன்னும் திட்டமாக வரையறுக்கவில்லை. ஆயினும், வழிவழி வந்துள்ள "சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்" என்னும் ஐம்புலன்களுக்கு மேலாக வேறு சில புலன்களும் உள என்பது மட்டிலும் உறுதி. ஐம்பொறிகளின் வாயிலாகச் சூழ்நிலையைப்பற்றி நாம் அறிந்துகொள்ளலாம். ஆனால், நம்மைப்பற்றி நமக்குக் கூறும் பொறிகளும் உள. ஒருவகைப் பொறிகள் நம் உடலின் பல பாகங்களின் அசைவுகளையும் நிலைகளையும் நமக்குக் காட்டுகின்றன. வேறு

7. வானொலி அலைகள் - Radio-waves.
8. புதிர்க் கதிர்கள் - X - rays.
9. அண்டக் கதிர்கள் - Cosmic rays.

சில பொறிகள் நம் உள்ளுறுப்புக்களின் நிலையை நமக்குக் காட்டவேண்டிய பாலுணர்ச்சி, பசி போன்ற இயல்பூக்கங்களை எழுப்புகின்றன.

தொல்காப்பியனர் காலத்திற்கு முன்னரே தமிழர்கள் புலன்களின் அடிப்படையில் உயிரினங்களைப் பாகுபாடு செய்து உணர்ந்திருந்தனர். அவர்கள் உலகத்துப் பல்லுயிர்களையும் அறுவகையாகப் பிரித்து வகைப்படுத்தியிருந்தனர் என்பதை மரபியல் 27 முதல் 34 வரையுள்ள நூற்பாக்களால் அறிந்துகொள்ளலாம்.

**அறுவகை உயிர்கள்:** உற்றல் அறிவதாகிய உடம்புணர்ச்சியொன்றே யுடையது ஓரறிவுயிர். பரிசவுணர்ச்சியாகிய அதனேடு சுவையறிதலாகிய நாவுணர்வும் உடையது ஈரறிவுயிர். இவ்விரண்டுடன் மூக்கினல் முகர்ந்தறிதலாகிய நாற்றவுணர்ச்சியும் உடையது மூவறிவுயிர். இம்மூவகை உணர்ச்சியுடன் கண்களாற் கண்டறிதலாகிய ஒளியுணர்ச்சியும் பெற்றது நாலறிவுயிர். இந்நால்வகையுணர்வுடன் ஓசையறிதலாகிய செவியுணர்வும் வாய்க்கப்பெற்றது ஐயறிவுயிராகும். மேற்கூறிய ஐம்பொறியுணர்வோடு உய்த்துணர்வாகிய மனவுணர்வும் பெற்று விளங்குவது ஆறறிவுயிராகும். இதனை ஆசிரியர்,

ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே அதனெடு நாவே
மூன்றறி வதுவே அவற்றெடு மூக்கே
நான்கறி வதுவே அவற்றெடு கண்ணே
ஐந்தறி வதுவே அவற்றெடு செவியே
ஆறறி வதுவே அவற்றெடு மனனே
நேரிதின் உணர்ந்தோர் நெறிப் படுத்தினரே 11

என்ற நூற்பாவால் கூறுவர். உலகிலுள்ள உயிர்த் தொகுதிகளின் உடம்புகளையும் அவ்வுடம்புகளில் வைகிய உயிர்கள், மெய், வாய், மூக்கு, கண், செவி என்னும் ஐம்பொறிகளும் மனமும் ஆகிய ஆறுவகை வாயில்களையும் படிப்படியாகப் பெற்று—படிவளர்ச்சி முறையில்[12] பெற்று—அறிவி

11. மரபி.- நூற். 27 (இளம்.) 12. படி வளர்ச்சி - Evolution.

ஞல் சிறந்து விளங்கும் இயல்பினையும் நன்கு கண்டு அறு வகைப்படுத்தி உணர்த்திய பண்டையோரின் திறனை எண் ணும்போது நாம் உண்மையிலேயே இறும்பூது எய்து கின்றோம்.

மேற்கூறிய நூற்பாவில் குறிப்பிட்டவாறு அறிவதை இவ்வாறு விளக்குவர் இளம்பூரணர் : "உடம்பினால் வெப் பம், தட்பம், வன்மை, மென்மை அறியும் (உயிர்கள்), நாவி னால் கைப்பு, காழ்ப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, புளிப்பு, மதுரம், என்பன அறியும். மூக்கினால் நன்னாற்றம், தீயநாற்றம் அறியும். கண்ணினால் வெண்மை, செம்மை, பொன்மை, பசுமை, கருமை, நெடுமை, குறுமை, பருமை, நேர்மை, வட்டம், கோணம், சதுரம் என்பன அறியும். செவியினால் ஓசை வேறுபாடும், சொற்படும் பொருளும் அறியும். மனத் தினால் அறியப்படுவது இதுபோல்வன வேண்டுமெனவும், இது செயல் வேண்டுமெனவும், இஃது எத்தன்மையெனவும் அனு மானித்தல்.[13] அனுமானமாவது, புகை கண்டவழி நெருப் புண்மை கட்புலன் அன்றாயினும் அதன்கண் நெருப்பு உண் டென்று அனுமானித்தல். இவ்வகையினான் உலகிலுள்ள வெல்லாம் மக்கட்கு அறிதலாயின."

பேராசிரியர் இதனை இன்னும் நுட்பமாக விளக்குவர்: எல்லாவுயிர்க்கும் மேற்கூறிய முறையிலேயே அறிவு பிறக் கும் என்பது தோன்ற இவ்வாறு கூறியுள்ளார் ஆசிரியர். 'நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினர்' என்ற தொடர் இதனைத் தெளிவாக்கும்.

**மன உணர்வு—பொறியுணர்வு :** ஐம்பொறியுணர்வுக்கும் அடிப்படையாய் விளங்குவது மன உணர்வு ; மன உணர்வு இன்றேல், உயிர்கள் இன்பதுன்பங்களை யாங்ஙனம் துய்த் தல் இயலும்? ஒரு பொருளைக் குறித்து மனம் எண்ணிக் கொண்டிருக்கும் நிலையில் மற்றொரு பொருள் கண்ணெதிர்ப் பட்டால் அதனைக் கண்ணென்னும் பொறியுணர்வு கொள்ள அவ்வுணர்வின் வழியே மனம் திரிந்து அக்காட்சியில் ஈடுபடு தல் இயல்பு. அப்பொருளின் தோற்றத்தை மனத்திற்கு

13. அனுமானித்தல் - Deductive reasoning

அறிவித்தது பொறியுணர்வாதலின் மனவுணர்வும் பொறியுணர்வும் தம்முள் வேற்றுமையுடையன என்பது தெள்ளிதின் விளங்கும்.

அன்றியும், தேனுகிய சுவைப்பொருளை நாவென்னும் பொறியுணர்ந்தவழி இன்புறுதலும், அதனையே கண்ணுள் பெய்து மெய்யுணர்ந்தவழித் துன்புறுதலும், நறிதாயின மான்மதத்தினை (கத்தூரி) மூக்கு உணர்ந்தவழி இன்புறுதலும், அதனையே கண் உணர்ந்தவழி இன்பங் கொள்ளாமையும் உடைமையால், அவை அவ்வப் பொறியுணர்வு எனப்படும். ஐம்பொறிகளின் உதவி வேண்டாது பொருள்களின் நலந்திங்குகளைப் பகுத்துணரும் ஆற்றல் கனவு நிலையிற் போன்று நனவு நிலையிலும் மனத்திற்கு உண்டு என்பதைப் பண்டையோர் அறிந்திருந்தனர். அங்ஙனம் ஐம்பொறிகளின் உதவியின்றி மனம் தானே உய்த்து உணரும் உணர்வு மனவுணர்வு எனப்படும். இன்றைய உளவியலார் இதனைக் கருதது நிலைச் சிந்தனை[14] என்று கூறுவர். இவற்றுள் ஐம்பொறியுணர்வுக்கும் அடிப்படையாய் முற்பிறந்தது மனவுணர்வாமாகவே பொறியுணர்வென்பது, இதனை நுகர்கின்றேம் என்று எண்ணும் உய்த்துணர்வுக்கு இடமின்றியே அவ்வப் பொறிகளுக்கு அமைந்த பழக்கமெனக் கருதும்படி தன்னியல்பில் நிகழ்வதாகும் என்பது அறிதற்பாலது. ஒன்று முதல் ஐயறிவுடைய உயிர்கட்கு மனவுணர்வு இல்லையென்பாரும், உண்டென்பாரும் இரு வகைக் கட்சியினர் உளர். பிராணிகளின் நடத்தைகளிலிருந்து இதனை ஒருவாறு ஊகிக்கலாம். ஆறறிவுடைய மக்களுக்கு மனம் அமைந்திருக்கும் அளவுக்கு அவற்றிடம் மனம் அமைந்திராவிடினும் படிவளர்ச்சி முறையில் அஃது அவற்றிடம் அமைந்திருக்க வேண்டும் என்று ஊகிக்க இடம் உண்டு.

**மன உணர்வுபற்றிய ஆராய்ச்சி:** 'பாவ்லோவ்'[15] என்ற இரஷ்ய அறிஞரும், வாட்சன்[16] என்ற அமெரிக்க அறிஞரும் கற்றல் அனைத்தும் மறிவினைச் செயல்

14. கருத்து நிலைச் சிந்தனை - Ideational thinking.
15. பாவ்லோவ் - Pavlov
16. வாட்சன் - Watson

களின்[17] தொகுதி என்கின்றனர். எடுத்துக்காட்டாக, ஒரு நாயின் வாயில் உணவு சேர்ந்தவுடன் உமிழ்நீர் ஊறுதல் இயற்கை மறிவினையாகும். உணவிடும் போதெல்லாம் ஒரு மணியோசையை எழுப்பி வந்தால் உணவிடுதலும் மணியோசையும் இயைபுபெற்று முற்கூறிய தூண்டலின் துலங்கலாகிய உமிழ்நீர் ஊறுதல், பிற்கூறிய தூண்டலின் துலங்கலாகிவிடுகின்றது. உணவின்றி மணியோசையை மட்டிலும் எழுப்பினாலும் நாயின் வாயில் உமிழ்நீர் ஊறுகின்றது. இதைக் 'கற்ற மறிவினை' அல்லது 'ஆக்க மறிவினை'[18] என்பர் உளவியலார். மனிதரிடமும் இத்தகைய ஆக்கமறிவினைகள் ஏற்படுகின்றன. ஒரு தாய் ஒரு குழந்தையிடம் பந்தைக் கொடுத்தால், அஃது அதனைத் தடவிப் பார்க்கின்றது. அப்போதே, 'பந்து, பந்து' என்று அவள் உரைத்தால் அதுவும் அப்பெயரை அப்பொருளுடன் தொடர்புறுத்தி, அதனைக் கண்ட பொழுதெல்லாம் 'பந்து' என்கின்றது. இங்ஙனமே, ஆக்கமறிவினை முறையில் மொழியறிவு உண்டாகின்றது. இவ்வாறே நம் விருப்பப் பொருள்களும், வெறுப்புப் பொருள்களும், அச்சம் போன்ற உள்ளக் கிளர்ச்சிகளும் அமைகின்றன என்பர் உள்வியலறிஞர்கள். இவ்வுண்மையிலிருந்தும் மக்களின் கீழான உயிர்களிடம் மனிதனைப்போல் சிந்தனை, ஆய்தல் போன்ற செயல்களைப் புரியும் மனம் என்ற ஒன்று இல்லையென்றும் ஊகிக்க இடம் ஏற்படுகின்றது. கீழான உயிர்களின் மனம்பற்றிய ஆராய்ச்சிகளில் இன்னும் உளவியல் ஒருவிதத் திட்டமான முடிவுக்கு வரவில்லை.

புழுப்போன்ற சாதாரண பிராணிகளுக்கும் மூளை[19] இருக்கின்றது. சாதாரணமாக, ஒரு மனித மூளையின் எடை மூன்று இராத்தல்கள்; யானை மூளையின் எடை பத்து இராத்தல்கள்; திமிங்கல மூளையின் எடை பதினான்கு இராத்தல்கள். மனிதன் சிறந்த அறிவுடையவனாக இருப்பதற்கு

17. மறிவினைச் செயல் - Reflex action.
18. ஆக்கமறிவினை-Conditional reflex.
19. மூளை - Brain.

மூளையின் அளவிலிருந்து ஊகிப்பதைவிட மூளையின் எடைக்கும் உடலின் எடைக்குமுள்ள விகித அளவு சரியான கருத்தேற்றத்தைத் தருகின்றது. இந்த அளவு முறையே மனிதனுக்கு 1/50-ம், யானைக்கு 1/500-ம், திமிங்கலத்திற்கு 1/10,000-ம், இருக்கின்றது. மூளை பல செயல்களுடன் கொள்வாய்களையும்[20] உடற்பாகங்களையும் ஒருமைப்பாட்டுடன்[21] செயற்படச் செய்கின்றது. ஒரு பெரிய உடலிலுள்ள ஒவ்வொரு கொள்வாயும் தசையும் உடலுடன் போதுமான அளவு ஒருமைப்பாடு பெறுவதற்கு நரம்பிணைப்புக்களைப் பெற்றிருத்தல் வேண்டும். அஃதாவது, உடல்கள் பெரிதாகப் பெரிதாக, புலன் ஒருமைப்பாட்டிற்கும் இயக்க ஒருமைப்பாட்டிற்கும் மட்டிலும் அதிகமான மூளை இழையங்கள் தேவைப்படுகின்றன; இதில் செரிமானச் செயலும் மூச்சுவாங்கும் செயலும் அடங்கும். அதிகமாக மூளை இழையங்களைப் பெறாத கீழ்நிலை உயிரிகள் யாவும் இயல்பூக்கத்தினாலேயே[22] செயற்படுகின்றன. அஃதாவது, அவை கொள்வாய்-இயங்குவாய்[23] இணைப்புக்களால் மட்டிலும் ஆதிக்கம் பெறுகின்றன. மூளைக்கும் தண்டுவடத்திற்கும்[24] உள்ள விகிதத்தைக் கவனித்தால் இவ்வுண்மை இன்னும் தெளிவாகின்றது. மூளையின் பருமனுக்கேற்றவாறு தண்டுவடத்தின் பருமனும் அதிகமாகின்றது. படி வளர்ச்சியில் தண்டுவடத்தைவிட மூளை மிகப் பெரிதாகின்றது. மனிதக் குரங்கினிடம் தண்டுவடத்தைவிட மூளை எடையில் பதினைந்து மடங்கு பெரியது. நம்மிடம் அது ஐம்பத்தைந்து மடங்கு பெரியதாகும்.

மேற்கூறிய புல, இயக்கச் செயல்களை மட்டிலும் கவனிக்கும் மூளையமைப்புக்கள் மீன்கள், பறவைகள், ஊர்வன, தவளையினங்கள் போன்றவற்றிடம் காணப்பெறுகின்றன.

---

20. கொள்வாய் - Receptor.
21. ஒருமைப்பாடு-Integration.
22. இயல்பூக்கம் - Instinct.
23. இயக்குவாய் - Effector
24. தண்டுவடம் - Spinal cand.

பிராணிகளிடம் பெருமூளை என்ற ஒரு பகுதி தோன்றி, அது பாலுணிகளிடம்[25] எல்லா மூளையமைப்புகளைவிடவும் பெரிதாக வளர்ந்தது. முதலில் அதன் செயல்கள் முற்றிலும் நடைமுறைச் செயல்களாகவே இருந்தன. சிக்கல் அதிக மாக அதிகமாக, பெருமூளையில்[26] இணைப்பு மையங்கள்[27] என்ற பகுதிகள் தோன்றி வளர்ந்தன. இவை மூளையின் வெளிப்புறப் பகுதியில் உள்ளன. இவற்றின் அடுக்குகளே பெருமூளையின் புறணியாகும்[28]. இப்பகுதிகள் பாலுணி களிடம் மிகப் பரந்து காணப்பெறுகின்றன. மனிதனிடம் இப்பகுதிகள் அதிகமாக உள்ளன; நாயிடமும் மனிதக் குரங்கினிடமும் இப்பகுதிகள் அதிகமாக இருப்பினும் அவை இணைப்பு மையங்களாகச் செயற்படுபவை மிகக் குறைந்தே காணப்பெறுகின்றன. இந்த இணைப்பு மையங்களின் வளைந்துகொடுக்கும் தன்மையைப் பொறுத்தே மனிதன் ஆறறிவுடையவனாகக் காணப்பெறுகின்றான். இதன் காரணமாகவே, மனிதனிடம் கற்றலும், கடந்தவற்றை நினைவுகூர்தலும், சிந்தனை செய்தலும் நடைபெறுகின்றன. பெருமூளைப் புறணியில் காணப்பெறும் அதிக மடிப்புக்களுக்கேற்றவாறு மனிதன் அறிதிறன் மிக்கவனாகக் காணப்பெறுகின்றான் என்பர் உளவியலார். இவற்றையும் இவைபோன்ற முழு விவரங்களை யும் உள நூல்களில் கண்டு தெளிக.[29] இவண் விரிப்பிற் பெருகும்.

**உயிர் வகைகள் :** இனி, உயிர் வகைகளை ஒவ்வொன்றாக நோக்குவோம். உற்றால் அறிவதாகிய உடம்புணர்ச்சி (பரிச வுணர்ச்சி) யொன்றே உடையது ஓரறிவுயிராகும். ஓரறி வுடைய உயிர்களைத் தொல்காப்பியர்,

---

25. பாலுணி-Mammal.
26. பெருமூளை-Cerebrum.
27. இணைப்பு மையங்கள்-Association Centres.
28. பெருமூளையின் புறணி – Cerebral Cortex.
29. Munn, Norman, L : Psychology-chap. 3.

புல்லும் மரனும் ஓரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.30

என்ற நூற்பாவால் விளக்குவர். புறக்காழனவாகிய புல்லும், அகக்காழனவாகிய மரனும் ஓரறிவுடையன. பிற என்பன, புறக்காழும் அகக்காழும் இன்றிப் புதலும் கொடியும் போல்வன. "பயிலத் தொடுங்கால் புலருமாகலின் ஓரறிவுடையவென வழக்கு நோக்கிக் கூறினன்" என்பர் பேராசிரியர்.

பரிசவுணர்ச்சியாகிய அதனுடன் சுவையறிதலாகிய நாவுணர்வும் உடையது ஈரறிவுயிராகும். இதனை,

நந்தும் முரளும் ஈரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே 31

என்று கூறுவர் தொல்காப்பியர். "இரை சுவைக்கோடலும் பிறிதொன்று தாக்கிய வழி அறிதலும் உடைமையின், மெய்யுணர்வோடு நாவுணர்வும் உடையன" என்பர் பேராசிரியர். "நந்து என்றதனால் சங்கு, நத்தை, அலகு, நொள்ளை என்பன கொள்க. முரள் என்றதனால் இப்பி, கிளிஞ்சில் ஏரல் என்பன கொள்க" என்று கூறுவர் இளம்பூரணர்.

மேற்கூறிய இரண்டுடன் மூக்கினல் முகர்ந்தறிதலாகிய நாற்றவுணர்ச்சியும் உடையது மூவறிவுயிராகும்.

சிதலும் எறும்பும் மூவறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.32

என்பது தொல்காப்பியர் கூறும் விதி. சிதலும் (கறையான்) எறும்பும் உற்றுணர்ந்து மீள்தலும், நாச்சுவை கோடலும், நெய்யுள்வழி மோந்தறிதலும் என மூன்றறிவினையுடையவாறு காண்க. ஒன்று தாக்கியவழியன்றி அறியாமைபால் இவற்றுக்குக் கண்ணில்லை என்பதும், அதட்டியோசைப் படுத்திய நிலையில் அறிந்து விலகாமையால் செவியில்லை என்பதும் அறியப்பெறும். அட்டை முதலான உயிர்களும் இவற்றுடன் அடங்கும்.

30. மரபி - நூற். 28 (இளம்)
31. மரபி - நூற். 29 (இளம்)
32. ஷ - நூற். 30 (இளம்)

நண்டும் தும்பியும் நான்கறிவுடையன. தும்பி என்பது வண்டுகளில் முதன்மையானதொரு சாதி என்பர்.

நண்டும் தும்பியும் நான்கறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.33

என்பது தொல்காப்பிய விதி. வண்டு, தேனீ, குளவி முதலாயினவற்றையும் இவற்றுள் அடக்குவர் பேராசிரியர். "பிறவுமென்றதனுன் ஞிமிறு, சுரும்பு என்பன கொள்க" என்பர் இளம்பூரணர். இவை மெய்யுடைமையின் ஊற்றுணர்வும், இரைகோடலின் நாவுணர்வும், நாற்றங்கோடலின் மூக்குணர்வும், கண்ணுடைமையிற் கண்ணுணர்வும் உடையனவாயின என்பதை அறிக.

நாற்கால் விலங்கும் புள்ளும் ஐயறிவுடையன; அவ்வகையைச் சார்ந்தன பிறவும் உளவாம். இதனைத் தொல்காப்பியரின்,

மாவும் புள்ளும்* ஐயறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.34

என்ற விதியால் அறியலாம். "பிற ஆவன தவழ்வனவற்றுள் பாம்பு முதலாயினவும், நீர்வாழ்வனவற்றுள் மீனும் முதலையும் ஆமையும் முதலாயினவும் கொள்ளப்படும்" என்பர் இளம்பூரணர்.

உயிர்வாழ் சாதியுள் மக்கள் எனப்படுவார் ஐம்பொறியுணர்வேயன்றி மனமென்பதோர் அறிவினையும் உடையர்; அவ்வகையைச் சார்ந்த பிறவும் உளவாம் என்று கூறுவர் ஆசிரியர்.

---

33. மரபி. - நூற். 31 இளம்.)
34. மரபி. - நூற். 32 (இளம் )

*மாக்களும் என்பது பேராசிரியர் கொண்ட பாடம். மா என்பன, நாற்கால் விலங்கு. மாக்கள் எனப்படுவார், மன உணர்ச்சி இல்லாதார். கிளை என்பன, எண் கால் வருடையும் குரங்கும் போல்வன. எண்காலவாயினும் மாவெனப்படுதலின் வருடை கிளையாயிற்று. குரங்கு, நாற்காலவாகலின் கிளையாயிற்று. —பேராசிரியர் உரை

மக்கள் தாமே ஆறறி வுயிரே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.[35]

என்பது தொல்காப்பிய விதி. இதற்கும் பேராசிரியர் கூறிய வுரை நயமுடையது. அவ்வுரை : "முப்பத்திரண்டு அவயவத்தான் அளவிற்பட்டு அறிவொடு புணர்ந்த ஆடூஉ மகடூஉ மக்களெனப்படும். அவ்வாறு உணர்வினுட் குறைவுபட்டாரைக் குறைந்த வகை அறிந்து முற்கூறிய சூத்திரங்களானே அவ்வப் பிறப்பினுட் சேர்த்திக்கொள்ள வைத்தான் என்பது. அவை, ஊமுஞ் செவிடும் குருடும் போல்வன. கிளையெனப் படுவார், தேவரும் தானவரும் முதலாயினர். *'பிறப்பு' என்றதனால், குரங்கு முதலாகிய விலங்கினுள் அறிவுடையன வெனப்படும் மனவுணர்வுடையன உளவாயின் அவையும் ஈண்டு ஆறறிவுயிராய் அடங்கும் என்பது. 'தாமே' எனப் பிரித்துக் கூறினமையான் நல்லறிவுடையார் என்றதற்குச் சிறந்தார் என்பதும் கொள்க" என்பதாகும்.

பொதுவாக, பிராணிகள் இயல்பூக்கங்களால்[36] செயற்படுகின்றன. இந்த இயல்பூக்கங்களும் பிராணிகளின் பிறப்பிலிருந்து அவை முதிர்ச்சியடையும்[37] வரை மாறிக்கொண்டே வருகின்றன. ஒரு பூச்சியின் புழுப் பருவ நிலையினையோ அல்லது ஒரு பறவையின் குஞ்சு அல்லது பாலூட்டியின் குட்டியையோ உற்று நோக்கின், அவற்றின் நடத்தை அவற்றின் வளர்ந்த பிராணிகளின் நடத்தையினின்றும் வேறுபடுவதை அறியலாம். ஆனல், உயர்நிலைப் பிராணிகளிடம் நினைவாற்றல் அதிகமாக இருப்பதாலும் அறிதிறன்[38] தோன்றத் தொடங்குவதாலும், இந்த இயல்பூக்கங்கள் அனுபவத்திற்கேற்றவாறு மாறக்கூடியவையாக உள்ளன ; அவற்றிடம் கற்றல்[39] என்ற செயலும் தொடங்குகின்றது.

---

35. மரபி. - நூற். 36 (இளம்.)

*"பிறவாவது தேவர், அசுரர், இயக்கர் முதலாயினோர்' என்பர் இளம்பூரணர்.

36. இயல்பூக்கங்கள் -Instincts.

37. முதிர்ச்சி - Maturity

38. அறிதிறன் - Intelligence.

39. கற்றல் - Learning.

அனுபவத்தால் ஏற்படும் இயல்பூக்க நடத்தையின் மாற்றங்கள் மிக அரியனவாகவே உள்ளன ; பெரும்பாலான இயல்பூக்கங்கள் குடிவழியாக அவற்றின் வழித்தோன்றல்களுக்கும் இறங்குகின்றன.

மனிதனின் மிகச் சிக்கலான மூளையமைப்பின் காரணமாகவும், அது பல்வேறு தேர்ந்தெடுத்தல்களின் களஞ்சியமாக இருப்பதாலும், அவனுடைய மனவாழ்வு[40] மிகவளமுள்ளதாக அமைந்துள்ளது ; படைப்புச் செயலுக்குப் பல வாய்ப்புக்களைத் தருவதாகவும் உள்ளது. அவனுடைய மூளையும் திட்டமான கோலங்களைக் கொண்ட நட்பிணைப்புக்களால்மட்டிலும் கட்டுப்பட்டிருக்கவில்லை. அவனிடம் முதன்முதலாகப் பகுத்தறிவு முறையில் கட்டுப்பாடுள்ள நடத்தை முழு நிலையில் வளர்ச்சி பெற்றுள்ளது. இது பல்வேறு நோக்கங்கள் (goals) எய்துவதில் கொண்டு செலுத்துகின்றது ; இதனால் அவனுடைய நடத்தையிலும் பல்வேறு வகைகளைக் காண்கின்றோம். இந்த நடத்தைக் கோலம் உயர் பிராணிகளின் நடத்தையைவிடப் பெரியது ; விரிந்த நிலையிலிருப்பது. அவனுடைய நினைவாற்றலும் மிக விரிந்த நிலையிலிருப்பதால், சிறப்புக்கூறுகளைப் பொதுக் கூறுகளுடன் இணைத்து ஆய்தல் நிகழ்த்துவதும் அவனுக்குச் சாத்தியமாகின்றது. இவற்றின் காரணமாக அவன் பிராணிகளைவிட அதிகமாகக் கற்கின்றான் ; தன் அனுபவத்தாலும் பிறருடைய அனுபவத்தாலும் அதிகப் பயனை அடைகின்றான். அவன் வாழுங்காலத்திலுள்ளாரின் அனுபவத்துடன் கடந்த காலத்தில் வாழ்ந்தவர்களின் அனுபவமும் அவனுக்குத் துணை புரிகின்றது. இதன் காரணமாக, அவன் சூழ்நிலையின் அறிவை நன்கு அடைகின்றான் ; அதனைச் சிறந்த முறையில் கட்டுப்பாட்டினுள் கொண்டுவரவும் கற்றுக்கொள்கின்றான். கந்துக மதக் கரியை வசமாய் நடத்துகின்றான் ; கரடி வெம்புலி வாயையும் கட்டுகின்றான். சிறகின்றியே வானில் பறக்கின்றான் ; செவுள்களின்றியே நீரின் அடியில் பிரயாணம் செய்கின்றான். கோடையைத் தட்ப நிலையாக்கவும் மாரியை

40. மனவாழ்வு - Psychical life.

வெப்ப நிலையாக்கவும் அறிந்துகொண்டுள்ளான். இவை யாவும் இவனுடைய ஆறுவது அறிவினுல்—மன அறிவினுல்— நடைபெறுகின்றன. "அறிவுடையார் எல்லாம் உடையார்" என்ற வள்ளுவர் வாக்கும் இதன் காரணமாகவே எழுந்தது. மேலும், கற்பனை செய்யும் ஆற்றலும் மனிதனுடைய அறிவை வளர்ப்பதற்கு முதற்காரணமாக அமைந்துள்ளது. கற்பனையே படைப்பாற்றலின் அடிப்படையாகும். ஆக்க நிலைக் கற்பனையே இதில் பெரும் பங்கு கொள்ளுகின்றது. கவிதை, இசை, ஓவியம் போன்ற துறைகளிலும் அறிவியல்கள் போன்ற துறைகளிலும் மனிதனுடைய கற்பனையின் செல்வாக்கை அறியலாம். இவைபற்றிய பல விவரங்களை அறிஞர் நூல்களில் கண்டுகொள்க.[41]

மன ஆற்றலின் காரணமாகவே மனிதன் மொழியைப் படைத்துக்கொண்டான். அவன் படைத்த மொழி உணர உணர்த்தலும், உணர்த்த உணரலும் என இருவகை அறிவியக்கத்திற்குப் பயன்படுகின்றது. அவன் கண்ட மொழியும் அவ்வியக்கத்திற்கேற்ற சொற்களாகிய குறியீடுகளின் அமைப்பினைக்கொண்டு சிறந்த முறையில் இயங்கி வருகின்றது. இம்முறையிலமைந்த மொழியும் அவனுடைய அறிவு வளர்ச்சிக்கு மேலும் அடிப்படைக் காரணமாக அமைகின்றது. இதன் காரணமாகவே, படிவளர்ச்சி ஏணியில் மனிதன் கொடுமுடியில் அமர்ந்திருக்கின்றான்.

41. Edmund W. Sinnott ; Matter. Mind and Man. pp. 102-150.

# 34. தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை

ஒரு நாட்டு மக்களின் பண்டைய வரலாற்றினையும் வாழ்க்கை முறையையும் நாகரிகத்தையும் உணர்வதற்கு அந் நாட்டில் காணப்பெறும் கல்வெட்டுக்கள், செப்புப் பட்டயங் கள், நிலத்தின் கீழ்ப் புதைந்த கட்டட வகைகள், பண்டைய நாணயங்கள், அந்நாட்டில் வழங்கும் பண்டைய இலக்கியங் கள் முதலியவைகள் கருவிகளாக உதவுகின்றன. 'கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன் தோன்றி மூத்த குடியில்' முகிழ்ந்த தமிழரின் வரலாற்றினை அறிவதற்கு இலக்கியக் கருவூலமாக இருப்பது நம் செந்தமிழ் மொழிக்கு ஒரு நந்தாமணி விளக்காய்த் திகழும் **தொல்காப்பியம்** என்னும் முழு முதல் நூலாகும். இந்த நூல் பண்டைய தமிழ் நூல்களுக்கு இலக்கணம் கூறும் நூலாக இருப்பினும் அதில் காணப்பெறும் பல குறிப்புக்கள் நம் அருந்தமிழ் மக்க ளின் பெருந்திரு நாகரிக வரலாற்றினை முற்றும் எடுத்து முடியக் கூறுவதற்குப் பெருந்துணை புரிகின்றன.

நாகரிகம் என்பது அக நாகரிகம், புற நாகரிகம் என இருவகைப்படும். அவற்றுள் முன்னது 'அன்பு' என்னும் நெகிழ்ந்த இயற்கையினை அடிப்படையாகக்கொண்டு நடை பெறும். பின்னது 'செல்வம்' என்னும் வன்பொருளினை அடிப்படையாகக்கொண்டு நிகழும். அகத்தே நடைபெறும் அன்பொழுக்கம் மேன்மேல் உரம் பெற்று வளர்வதற்குப் புறத்தேயுள்ள செல்வம் துணை புரியும் முறையில் ஒழுகும் மக்களிடத்தில்தான் இருவகை நாகரிகங்களும் ஒன்றோ டொன்று முரண்படாமல் ஒருங்கொத்து நடைபெறும்; அவர்

கட்கும் இம்மை மறுமை இன்பங்களை நிரம்ப ஊட்டி அவர்தம் வாழ்வினை வளமாக்கும். அங்ஙனமின்றி, புறத்தேயுள்ள செல்வம் அகவொழுக்கமான அன்பு வளர்ச்சிக்குத் துணைபுரியாமல், அன்பு சென்றவழி தான் செல்லாமல், அதற்கு அடங்கி நடவாமல், தன்னை மறந்து கூத்தாடுமாயின், அது நாகரிகத்தினை அழித்துவிடும் கூற்றுவனுகவே மாறிவிடும். இத்தகைய போக்கிற்கு இடங்கொடுக்கும் மக்களிடையே அக நாகரிகமும் புற நாகரிகமும் ஒன்றேடொன்று மாறுபட்டு அவர் தம் இம்மையின்பங்களையும் பெறவொட்டாமல அவர்க்குப் பெருந்துன்பங்களை விளைவித்து சில நூற்ருண்டுகளில் அவர்களை அடியோடு மறையவைத்துவிடும். இங்ஙனம் செல்வத்தில் தருக்கிய காரணத்தால்தான் தமிழ் மக்களோடொத்த பழம் பெருஞ்சிறப்பினையுடைய எகுபதியர், பாபிலோனியர், அசிரியர், மெக்சிகர் முதலானேர் அடியோடு மாய்ந்து போயினர் ; அவர் வழங்கிய மொழிகளும் அவர் கட்டிய எழுநிலை மாடங்களும் இருந்த இடம் தெரியாமல் அழிந்தொழிந்தன. முன் நிற்க வேண்டிய அன்பு பின்நிற்கவும் பின் நிற்க வேண்டிய செல்வம் முன் நிற்கவும் சிறிதளவும் முறை மாறி வழுவியகாரணத்தால்தான் தமிழ் மக்கள் தம் பண்டைப் பெருமையினின்றும் குறைந்துவிட்டனர். ஆயினும், ஒருசில சான்ருேர் இன்றும் பண்டைப் பீடுடன் இருக்கின்றனர் ; அவர் வழங்கிய மொழியும் அழியாது—கன்னித் தமிழாய்—நின்று நிலவுகின்றது. அம்மொழியில் இயற்றப்பெற்ற நூல்களும் இறவாது புத்துயிர் பெற்றுப் பொலிகின்றன.

தொல்காப்பியத்தில் கூறப்பெறும் செய்திகள் யாவும் பழைய உலக வழக்கையும் செய்யுள் வழக்கையும் அடிப்படையாகக்கொண்டு விளக்கப்பெறுகின்றன. மக்கள் வாழ்க்கையில் இயல்பாகக் காணப்பெறும் ஒழுக்கம் **'உலக வழக்கு'** என்றும், அவ்வுலக வழக்கில் சிறந்தனவாயுள்ளவற்றைத் தேர்ந்தெடுத்து பிற்கால மக்களின் உலக வழக்கு சிறப்பாக நடைபெறுதற்பொருட்டுப் புலவர்களால் பலபடப் புனைந்து செய்யப்பெறுவது **'நாடக வழக்கு'** என்றும்

வழங்கப்பெறும். இந்த இருவகை வழக்குகளும் கலந்ததே **'செய்யுள் வழக்கம்'** ஆகும். ஆசிரியர் தொல்காப்பியனாரே இவற்றை,

> நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
> பாடல் சான்ற புலனெறி வழக்கம் 1

என்ற நூற்பாவில் குறிப்பிடுகின்றார். எனவே, தொல்காப்பியம் பண்டைத்தமிழரின் வாழ்க்கையைப் பாங்குற எடுத்துக் காட்டும் ஓர் ஒப்புயர்வற்ற விழுமிய நூல் என்பது பெறப் படும். இத்தகைய நூலில் காணப்பெறும் ஒரு சில குறிப்புக் களைக்கொண்டு பண்டையோர் வாழ்க்கை முறையை ஒரு சிறிது விளக்கிக் காட்டுவாம்.

**வாழ்க்கை நலம்**

ஒரு நாட்டு மக்களின் வாழ்க்கை நலத்தை அறிவதற்கு அந்நாட்டு மக்களின் கருத்துவளம் அளவுகோலாக அமை கின்றது. இக்கருத்து வளத்தை அந்நாட்டு மக்களின் இலக்கி யங்களில் காணலாம். இத்தகைய கருத்து வளத்தைக் கொண்ட இலக்கியங்கட்கும், வாழ்க்கை இயல்பிற்கும் இலக்கணம் கண்ட பெருமை தமிழ் மொழியிலேயன்றி வேறு எம்மொழியிலும் காணப்பெறாத சிறப்புடையதாகும். மக்கள் வாழ்க்கையின் இயல்பினையும் பிறவற்றையும் ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியம் என்னும் நூல் வகைப் படுத்தித் திறம்பட உரைக்கின்றது. அந்நூல் மக்கள் வாழ் வினை அகவாழ்வு, புறவாழ்வு என இரு கூறிட்டுப் பேசு கின்றது. அகவாழ்வினைப்பற்றிக் கூறுவது அகத்திணை ; புறவாழ்வினைப் பற்றிப் புகல்வது புறத்திணை. திணை என்பது, ஒழுக்கம். அகத்திலே — அதாவது மனத்திலே — நிகழும் ஒழுக்கம், அகத்திணை ; புறத்திலே நிகழும் ஒழுக்கம், புறத் திணை. இவற்றை அகப்பொருள் என்றும், புறப்பொருள் என்றும் வழங்குவதுண்டு.

**அகவாழ்வு :** ஒத்த அன்புடைய கணவனும் மனைவியும் கலந்து வாழும் குடும்பவாழ்வே அகவாழ்வாகும். அகவொழுக்

1. அகத்திணை - நூற்.56 (இளம்.)

கத்தை **ஐந்திணை, கைக்கிளை, பெருந்திணை** என எழு வகை யாகப் பாகுபடுத்திப் பேசுவது மரபு.

> கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்
> முற்படக் கிளந்த எழுதிணை என்ப.[2]

என்பது தொல்காப்பிய அகத்திணை நூற்பா. ஒத்த அன்புடைய ஒருவனும் ஒருத்தியுமாகிய காதலர் இருவர், கருத்தொருமித்து இல்லிருந்து நல்லறஞ் செய்வதற்கு இன்றியமையாத அன்பின் வழிப்பட்ட உள்ளத்துணர்ச்சியே **ஐந்திணை** என்று வழங்கப்பெறும். இன்ப வாழ்விற்கு அன்பு இன்றியமையாத பெருவிசையாக இருப்பதால், இஃது **'அன்பின் ஐந்திணை'** என்று சிறப்பிக்கப்படலாயிற்று. தலைவன் தலைவி என்னும் இருவரும் தம்முட்கூடி மகிழ்தலும், உலகிற் கடமை நோக்கித் தலைவன் சின்னாள் தலைவியைப் பிரிந்து செல்லுதலும், தலைவன் திரும்பிவிடுவதாகக் குறித்த நாளளவும் தலைவி பிரிவுத் துன்பத்தைப் பொறுத்துக்கொண்டு ஆறறியிருத்தலும், கணவன் குறித்த நாளில் வரத் தாமதிப்பின் ஆற்றாமை மிக்கு மனைவி இரங்குதலும், தலைவன் திரும்பிய பின் அன்பினாற் பிணங்குதலும் ஆகிய ஐந்து பிரிவுகளாக இந்த அகத்திணை பேசப்பெறும். இந்த ஐந்து ஒழுகலாறுகளையும் முறையே **குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம்** என்று பெயரிட்டு வழங்குகின்றது தொல்காப்பியம். சிறந்த முறையில் நடைபெறுவதற்கு முறையே மலையும் மலைசார்ந்த இடமும், மணலும் மணல் சார்ந்த வறண்ட இடமும், காடும் காடு சார்ந்த இடமும், கடலும் கடல் சார்ந்த இடமும், வயலும் வயல் சாரந்த இடமும் சில கால வரம்புகளுடன் நல்ல சூழ்நிலைகளாக அமைகின்றன என்று 'நாடக வழக்காக' அமைத்துக் காட்டுகின்றது இந்நூல்.

அன்பினைந்திணையாகிய அகவொழுக்கம் **களவு, கற்பு** என இருவகைப்படும். உருவும் திருவும் உணர்வும் முதலிய பண்புகளால் ஒத்து விளங்கும் தலைவனும் தலைவியும் நல்லூழின் வலியால் தாமே எதிர்ப்பட்டு, அன்பினால் ஒருவரையொருவர் இன்றியமையாதவராய். உலகத்தார் அறியாது மறைந்தொழுகுதல் **களவாகும்.** களவு என்பது, 'பிறர்க்குரிய

---

2. அகத்திணை - நூற். 1

பொருளை மறையிற் கோடல்' ; மறைவில் நிகழும் ஒழுகலாறு என்ற பொருளிலேயே இச்சொல் வழங்குகின்றது. இந்த ஒழுக லாற்றில், இருவருள்ளத்தும் உள் நின்று சுரந்த அன்பின் பெருக்கினல், 'தான், அவள்' என்னும் வேற்றுமையின்றி, இருவரும் ஒருவராயொழுகும் 'உள்ளப்புணர்ச்சி'யே நடை பெறும். இங்ஙனம் மறைந்தொழுகுதலைத் தவிர்த்து, பெற்ரேர் உடன்பாடு பெற்று, இருவரும் உலகத்தார் அறிய மணஞ்செய்துகொண்டு மனையறஞ் செய்தலே **'கற்பு'** என வழங்கப்பெறும். இது களவொழுக்கத்தின் முடிந்த பயனாகும்.

ஒருவன் ஒருத்தி என்னும் இருவருள் ஒருவர் மட்டும் அன்பினல் கூடி வாழ்தலில் அளவிறந்த வேட்கையுடையாரா யொழுக, மற்றவர் அவரது அன்பின் திறத்தை யுணர்ந்து கொள்ள முடியாத நிலை **கைக்கிளை** எனப்படும். கை-பக்கம்; கிளை - உறவு. ஒரு பக்கத்து உறவு என்பது இதன் பொருள்; அஃதாவது, ஒருதலைக் காமமாகும். ஒருவனும் ஒருத்தியும் தம்முள் அன்பில்லாதவராய் இருந்தும் கணவனும் மனைவியு மெனப் பிறராற் பிணைக்கப்பட்டு அன்பின்றிக் குடும்பம் நடத்தும் முறை **பெருந்திணை** என்று பேசப்பெறும். பெருந் திணை என்பது, பொருந்தாக் காமம். இத்தகைய உள்ளம் பொருந்தா வாழ்க்கை உலகியலில் பெரும்பான்மையாகக் காணப்பெறுவதால் இதனைப் பெருந்திணை என்று பெயரிட்டு வழங்கினர் முன்னையோர். இந்த இருவகையொழுக்கங் களும் எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் நடை பெறக்கூடுமாதலின், இவற்றிற்கு ஆசிரியர் தனிச் சூழ்நிலை அமைத்துக் காட்டவில்லை. மேலும், இந்த இருவகையொழுக் கங்களையும் ஆசிரியர் விரும்பவில்லையாதலின், அதனை அவர் விரிவாக எடுத்தோதவில்லை என்பதும் அறியத்தக்கது அன்றியும், இவையும் வெளியில் சொல்ல முடியாத அக வொழுக்கங்களாகவே கருதப்பெற்றனவாதலின், இவையும் அகவாழ்வுடன் இணைத்தே பேசப்பெற்றன.

**புறவாழ்வு :** அரசியல், வாணிகம், உழவு, ஏனைய தொழில் கள் ஆகியவை யாவும் புறத்திலே நிகழ்வன. ஒவ்வொரு

வரும் இவற்றைப்பற்றிப் புறத்தார் உணரும்படி உரைத்தல் இயலும். இங்ஙனம் எல்லோரும் அறியும்படி சொல்லவும் செய்யவும் கூடிய செய்திகள் எல்லாம் புறப்பொருளில் அடங்கும். புறத்திலே நிகழும் ஒழுக்கம் புறத்திணையாகும். இதுவே **புறவாழ்வாகும்**. இப்புறவொழுக்கங்களை மேற்கொள்ளுவதற்குரிய வரம்பே அரசியல் ஆகும். ஒருவர் வாழ்வில் மற்றவர் குறுக்கிட்டுப் பூசல் விளைவிக்கும் குழப்ப நிலையைத் தடுத்து, மக்களுள் ஒவ்வொருவரும் தாம் தாம் விரும்பிய குற்றமற்ற இன்பங்களை இனிது அடையுமாறு செய்யவல்ல செயல் முறைகளை அரசியல் பொறுப்பேற்று நடத்தும். பண்டைத் தமிழரின் அரசியல் வாழ்வில் மன்னனே நன்கு மதிக்கத்தக்கத் தலைவனாகத் திகழ்ந்தான். இந்த மன்னற்கு இன்றியமையாது வேண்டப்பெறுவனவாகிய கல்வி, வீரம், புகழ், கொடை முதலிய பெருமிதப் பண்புகள் யாவும் எல்லோர்க்கும் இன்றியமையாதனவாகும். இந்தச் செய்திகள் யாவும் புறவாழ்வில் அடங்கும்.

அகத்திணையை ஏழாக வகுத்ததுபோலவே புறத்திணையையும் ஏழாக வகுத்துக் கூறுவர் தொல்காப்பியர். **வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண்** என்னும் இவ்வேழும் புறத்திணைகளாகும். போர் புரியக் கருதிய வேந்தன் மாற்றாரின் ஆனிரையைக் கவர்வதும், அங்ஙனம் கவர்ந்தவற்றை அவற்றிற்குரியோர் மீட்டுக்கொள்ளுவதும் வெட்சித்திணையாகும். ஒரு மன்னன் தன் பகைவனுடைய நாட்டைக் கைப்பற்றிக் கொள்வான்வேண்டித் தண்டெடுத்துச் செல்வதும், பகைவேந்தன் அவனை எதிர்ப்பதும் வஞ்சித்திணையாகும். படை எடுத்துச் சென்ற அரசன் மாற்றானின் கோட்டை மதிலை வளைத்துக்கொள்ளுவதும், உள்ளிருக்கும் வேந்தன் அம்மதிலைக் கைவிடாமல் காப்பதும் உழிஞைத் திணையாகும். ஓரரசன் தனது நாட்டின்மீது தண்டெடுத்துப் போந்த வேந்தனை எதிர்த்துப் போருடற்றி அவனுடைய வலிமையை அழிப்பது தும்பைத் திணையாம். பகைவரை வெல்லுதலும், ஒவ்வொருவரும் தத்தம் செயல்களை வெற்றி பெறச் செய்தலும் வாகைத் திணையாகும். உலகம், இளமை

செல்வம் முதலியவற்றின் நிலையாமையைப் பற்றியும், மற்றும் பல அறிவுரைகளையும் எடுத்தியம்புவது காஞ்சித் திணையாகும். மக்கள், கடவுள், ஒழுக்கம், வீரம், புகழ், கொடை முதலியவற்றைப் புகழ்ந்து பாடுவது பாடாண் திணையாகும். இந்த ஏழு திணைகளிலும் பண்டைக் காலத்தில் நடைபெற்ற போர் முறைகளைக் காணலாம்; போரில் தமிழர்கள் காட்டிய வீரச் செயல்களை அறியலாம். தமிழரின் அரசியல், கொடை, புகழ் முதலியவற்றை உணரலாம். உலக நிலையாமை, யாக்கை நிலையாமை, செல்வ நிலையாமை போன்ற அறவுரைகளையும் ஈண்டு கண்டு தெளியலாம்.

இவ்விடத்தில் ஓர் உண்மையை நாம் சிந்தித்தல் வேண்டும். காதலும் வீரமும் தமிழர்க்கு மட்டிலும் உரிய பொருள் என்று இக்காலத்தில் சிலர் கூறி வருகின்றனர். காதல் நிகழ்ச்சிகளும் வீர நிகழ்ச்சிகளும் எல்லா மொழிகளிலும் எல்லா நாட்டு இலக்கியங்களிலும் காணப்பெறும் செய்திகளே. ஆயினும், இந்த இரண்டு உணர்ச்சிகளின் அடிப்படையில் தோன்றும் நிகழ்ச்சிகட்குத் திணை, துறைகள் அமைத்து, இலக்கண வரம்புக்குள் அடக்கி, இலக்கிய மரபுகளாகச் செய்த பெருமை **தமிழ் மொழிக்கே சிறப்புடையதாகும்.** உலக வழக்கினை நாடக வழக்காகச் செய்து கலையாக மிளிர வைத்த பெருமை தொல்காப்பியரைச் சார்ந்தது என்று கூறின், அது மிகையன்று. இங்ஙனமே செய்யுளியல், மரபியல் இவற்றில் கூறப்பெற்றுள்ளனவும் தமிழ் மொழிக்கே சிறப்பாக உடையவை. தமிழரது பண்பாட்டின் மேன்மையை அவர்களது அகவாழ்வும் புறவாழ்வும் நன்கு புலப்படுத்துகின்றன. இந்த இரண்டின் அடிப்படையில் இலக்கியங்கள் தோன்றின; அவற்றை விளக்குவதற்கு நாளடைவில் பொருளதிகாரமாகிய இலக்கணமும் அமைக்கப்பெற்றது.

### சமூக வாழ்க்கை

தொல்காப்பியத்திலிருந்து தொல்காப்பியர் காலத்தும் அவருக்கு முன்னரும் சமூக வாழ்க்கை எங்ஙனம் இருந்தது என்பதைச் சில குறிப்புக்களால் அறிந்துகொள்ளலாம். அவற்றுள் ஒரு சிலவற்றை ஈண்டுக் காண்போம்.

**மக்கட் பிரிவு :** தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே தமிழ் நாட்டில் மக்களிடையே பலவிதப் பிரிவுகள் ஏற்பட்டிருந்தன. அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற பிரிவுகள் இருந்தன. இவையாவும் அவர்கள் செய்யும் தொழிலினல் ஏற்பட்ட பிரிவுகளாகும். இவர்களைத் தவிர பாணர், கூத்தர், பொருநர், பார்ப்பார், அடிமைவேலை செய்வோர், தேர்ச்சி பெற்ற தொழிலாளர்கள் போன்ற பல பிரிவுகளும் இருந்தன.

**அந்தணர் :** அறிவு, ஆராய்ச்சி, நல்லொழுக்கம், தன்னலமற்ற தன்மை இவற்றையுடையவர்கள் யாவரும் அந்தணர் என்று வழங்கப்பெற்றனர். எல்லா உயிர்களிடத்தும் இரக்கங்காட்டி அறநெறியில் வாழ்வோர் அந்தணர். அரசர்களை அறநெறிப்படுத்தல், நாட்டு மக்கட்கு நல்லுரை வழங்கல், மக்கள் நல்வாழ்விற்காக இறைவனை வேண்டித் தவங்கிடத்தல்-இவை அந்தணரது கடமைகளாகும். அந்தணர் வடிவத்தை,

> நூலே கரகம் முக்கோல் மணையே
> ஆயுங் காலை அந்தணர்க் குரிய[3]

என்று தொல்காப்பியம் உணர்த்துகின்றது. முப்புரிநூல், தண்ணீர்க் கமண்டலம், முக்கோல், ஆசனம் ஆகியவை இவர்கட்குரியனவ. இவர்கள் ஆட்சி செய்வதற்கும் உரியவர்கள்.

> அந்தணாளர்க்கு அரசுவரை வின்றே[4].,

என்ற நூற்பா இதனை உணர்த்துகின்றது. அறிவும் பொதுநல ஆர்வமும் உடைய இல்லறம் நீத்த பெரியோர்களே அந்தணர் நிலையில் பொதுநலம் புரிந்தனர். நிலமக்கள் எல்லாரிடமிருந்தும் அந்தணர் தோன்றுவர். இவர்கள் பிறப்பினுல் தனி வகுப்பினர் அன்று.

**அரசர் :** தமிழகத்தில் ஆட்சிமுறை ஏற்பட்ட காலத்திலிருந்து சேர சோழ பாண்டியர் ஆண்டனர். இவர்களே பழந்தமிழ்ப் பெருங்குடி மக்களில் மூத்த முதற்குடியினர். இவர்களை **'வண்புகழ் மூவர்'**[5] என்று செய்யுளியலில் குறிப்பர்

---

3. மரபியல் - நூற். 71. (இளம்.)
4. ஷெ. - நூற். 83 (இளம்.)
5. செய்யு. - நூற். 75. (இளம்.)

தொல்காப்பியர். பெருநில மன்னருக்குட்பட்ட குறுநில மன்னரும் இருந்து வந்தனர். பேரரசரால் சிறப்புப் பெற்ற வணிகரும் வேளாளருமே சிற்றரசராவர். சங்ககாலச் சிற்றரசர்களில் பெரும்பாலோர் வேளாளர்களாகவே இருந்தனர்.

படை கொடி குடை முரசு குதிரை யானை தேர் தார் முடி போன்றவை அரசர்க்குச் சிறப்புடையனவாகும். இச்செய்தி,

படையும் கொடியும் குடையும் முரசும்
நடை நவில் புரவியும் களிறும் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவுகொள் செங்கோல் அரசர்க் குரிய[6]

என்ற மரபியல் நூற்பாவால் அறியப்படும். தார் என்பது, போர்க்காலத்தில் அணியப்பெறும் பூவினையும் அடையாளப் பூவினையும் குறிக்கும். வேட்டையாடுவதில் வல்லமை, பகைவர்களை எதிர்த்துப் போர் புரிந்து வெற்றி பெறும் வீரத் தன்மை, தன்னலந்துறந்து மக்களின் நல்வாழ்வுக்காக உழைக்கும் உறுதியுள்ளம், நடுநிலை தவறாத நல்லொழுக்கமுடைமை, நீதி வழங்கும் நேர்மைக் குணம் - இவை போன்ற உயர் குணங்களையுடையவர்களே அரசர்களாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். இவர்களும் தனி வகுப்பினர் அன்று. இத்தகைய பெருமைகளைப் புறத்திணையியலில் பரக்கக் காணலாம்.

அந்தணர்கட்கு உரியவைகளும் அரசர்கட்கு உரியனவாக வருதலும் உண்டு.

அந்த ணாளர்க் குரியவும் அரசர்க்கு
ஒன்றிய வரூஉம் பொருளுமா ருளவே.[7]

என்ற நூற்பாவினால் இதனை அறியலாம். அரச வாழ்வில் வெறுப்படைந்தவர்கள் அந்தணர் வாழ்வினைக் கடைப்பிடித்து அந்தணர்களாகவே வாழ்வர்.

**வணிகர் :** பழந்தமிழ் வணிகர்கள் 'கொள்வதூஉம் மிகை கொளாது கொடுப்பதூஉம் குறைகொடாது'[8] நேர்மையுடன்

6. மரபி. - நூற். 72. (இளம்.)
7. மரபி. - நூற். 73. (இளம்.)
8. பட்டினப். - வரி 210-11.

வாணிகம் செய்யும் பண்புடையவர்கள். வாணிகம் செய்யும் தொழிலை வைசியன் பெறுவான் என்று தொல்காப்பியம் கூறுகின்றது.

வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை [9]

என்பது தொல்காப்பிய மரபியல் நூற்பா. இவர்கள் உள் நாட்டிலும் வெளி நாட்டிலும் பெருவாணிகமும் கூல வாணிகமும் செய்து வந்தனர். கடல் கடந்த வாணிகமும் இவர்களிடமே இருந்தது. வாணிகத்துடன் தானியங்களை விளைவிக்கும் தொழிலையும் இவர்கள் மேற்கொள்வதுண்டு.

மெய்தெரி வகையின் எண்வகை உணவின்
செய்தியும் வரையார் அப்பா லான [10]

என்ற நூற்பாவால் இதனை அறியலாம். இதுவும் வாணிகத்துடன் தொடர்புடைய தொழிலாதலின், வணிகர்களும் நிழக்கிழவர்களாக இருந்தமை பெறப்படுகின்றது. பெருவணிகர்கள் அரசரால் படை கண்ணி முதலிய சிறப்புப் பெற்றுச் சிற்றரசர்களாகத் திகழ்ந்தனர் என்பது,

கண்ணியுந் தாரும் எண்ணினர் ஆண்டே [11]

என்ற நூற்பாவால் அறியப்படும்.

**வேளாளர் :** இவர்கள் 'தொழுதூண் சுவையினும் உழுதூண் இனிது' என்ற கொள்கையைக் கடைப்பிடித்து உழவுத்தொழிலைக் கொண்டு வாழ்பவர்கள்.

வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி. [12]

என்ற நூற்பா இதனை உணர்த்துகின்றது. பல்வகைத் தொழிலாளர்களும் வேளாளரேயாவர். தலைமை பற்றி உழவொன்றே கூறப்பட்டது. "வேளாண் மாந்தர் பலவகைப் பட்ட தொழிலரேனும் உழுந்தொழிலே பெரும்பான்மையாதலின், அதனையே சிறப்பித்துச் சொல்லுதல் மரபு" என்ற பேராசிரியரின் உரையைக் கண்டு தெளிக. சில சமயம்

9. மரபி. - நூற். 78. (இளம்.)
10. மரபி. - நூற். 79. இளம்.)
11. மரபி. - நூற். 80. (இளம்.)
12. மரபி. - நூற். 81. (இளம்.)

இவர்கள் அரசர்களால் படைக்கலம் பெற்று, மாலை பூண்டு போர் வீரர்களாகத் தொண்டாற்றவும் உரிமை பெற்றிருந் தனர்.

வேந்துவிடு தொழிலிற் படையும் கண்ணியும்
வாய்ந்தனர் என்ப அவர்பெறும் பொருளே. 13

என்ற நூற்பாவால் இதனை அறியலாகும்.

இத்தகைய நான்கு வகைப் பிரிவுகள் தொல்காப்பியர் காலத்தில் பிறப்பினுல் ஏற்பட்டவை அல்ல. தொழில், ஒழுக்கம், கல்வியறிவு, திறமை காரணமாகவே இப்பிரிவுகள் அமைந்தன என்பது அறியத்தக்கது. **'சாதி'** என்ற சொல் தொல்காப்பியத்தில் காணப்பெறினும் அஃது ஓரிடத்தி லேனும் மக்களைக் குறிக்கும் சொல்லாக வழங்கப்பெற வில்லை.

'நீர்வாழ் சாதியுள் அறுபிறப்பு உரிய'14
'நீர்வாழ் சாதியுள் நந்தும் நாகே'15

என்ற நூற்பாக்களில் 'சாதி' என்னும் சொல் நீரில் வாழும் உயிர்களைக் குறித்தலை அறிக. தமிழர்களின் வாழ்வியல், அரசியல், பொருளியல் ஆகியவை முட்டின்றி நடைபெறுவான் வேண்டி அமைந்த நான்கு விதப் பிரிவுகளாக வகுத்த நம் முன்னையோரின் அறிவின் திறன் பாராட்டுதற்குரியதன்றோ ?

இவர்களைத் தவிர அடிமைகள், தொழில்வல்லார், நடன மாடுவோர், யாழ் வாசிப்போர், நாடகம் நடிப்போர் ஆகிய வகுப்பினரும் தமிழ்நாட்டிலிருந்தனர். இச்செய்திகள் யாவும் புறத்திணையியலால் அறியப்பெறும்.

## சமய நிலை

தொல்காப்பியத்தின்மூலம் பண்டைத் தமிழர்களின் சமய நிலையையும் ஓரளவு அறிய முடிகின்றது ; மக்களால் மதிக்கத்தக்க பொருள்களனைத்தினையும் **முதற்பொருள், கருப் பொருள், உரிப்பொருள்** என மூன்று திறமாகப் பகுத்துப்

13. மரபி. - நூற். 82. (இளம்.)
14. மரபி. - நூற். 44 (இளம்.)
15. மரபி. - நூற். 64. (இளம்.)

பேசுவர் தொல்காப்பியர்.[16] உயிர் வாழ்க்கைக்கு அமைந்த நிலமும், காலமும் 'முதற்பொருள்' என வழங்கப்பெற்றன. புல் முதல் மக்கள் ஈறாகிய உயிர்ப்பொருள்களும் உயிரல் பொருள்களும் நிலமும் காலமுமாகிய முதற்பொருளின் சார்பாகக் கருக்கொண்டு தோன்றுதலின், அவை 'கருப் பொருள்' எனப்பெயர் பெற்றன. மக்களுக்குரிய அகமும் புறமுமாகிய ஒழுகலாறுகளை 'உரிப்பொருள்' என வழங்கினர் ஆசிரியர். இவற்றை மேலே கண்டோம். மக்கள் வாழும் நிலத்திற்கும் காலத்திற்கும் ஏற்ப, அவர்களுடைய உள்ளத்துணர்ச்சிகளும் செயல் முறைகளும் உருப்பெறுவனவாகும். மக்கள் வாழும் நிலத்தியல்புக்கு ஏற்ப, அவர்களுடைய மனத்தியல்பாகிய தெய்வக்கொள்கையும் வழிபாட்டு முறைகளும் ஏனையவும் தோன்றி நிலைபெறுவனவாகும். இக்காரணம்பற்றியே தொல்காப்பியர் தெய்வத்தைக் கருப்பொருள்களுள் ஒன்றாக அமைத்துக் காட்டினார். அன்றியும், அதனை அவற்றுள் முதலாவதாக வைத்து எண்ணிய சிறப்பும் எண்ணி உணர்தற்பாலது.[17]

**திணைக்குரிய தெய்வக்கரு :** காடுறை யுலகமாகிய முல்லை நிலத்தில் மாயோன் வழிபாடும், மைவரை யுலகமாகிய குறிஞ்சி நிலத்தில் சேயோன் வழிபாடும், தீம்புனலுலகமாகிய மருத நிலத்தில் இந்திரன் வழிபாடும், பெருமணலுலகமாகிய நெய்தல் நிலத்தில் வருணன் வழிபாடும் தோன்றி நிலைபெற்றன. இந்த வழிபாட்டு முறைகளை,

மாயோன் மேய காடுறை யுலகமுஞ்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும்
முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே. 18

[வேந்தன் - இந்திரன்]

16. அகத்திணை - நூற். 3.
17. தெய்வம் உணாவே மாமரம் புள்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப.—அகத்திணை நூற். - 20.
18. அகத்திணை – நூற். 5.

என்ற நூற்பாவால் தொல்காப்பியர் வகுத்துரைத்துள்ளார். நானிலத்தவர்களும் தாம் தாம் வாழும் சூழ்நிலைகளுக்கேற்பத் தம் உள்ளத்தே வகுத்தமைத்துக்கொண்டனவே இத்தெய்வ வழிபாடுகள் என்பது இந்நூற்பாவினுல் இனிது புலனுகும். அன்றியும், இவற்றுள் உயர்வு தாழ்வு கற்பித்தலும் பண்டையோர் கருத்தன்று என்பது உணரத்தக்கது. முல்லை நிலத்துக் கோவலர், தம்மால் மேய்க்கப்பெறும் ஆனிரைகள் பாற்பயன் தருதல் வேண்டிக் காயாம்பூ வண்ணனுகிய திருமாலைப் பரவிக் குரவை யாடினர். குறிஞ்சி நிலத்துக் குறவர், நறுமலரெழுதரு நன்மணம் போன்று உயிர்க்குயிராய் விளங்கும் தெய்வ மணமாகிய வெறியினையறியும் சிறப்புடைய வேலனை யழைத்து, வெறியாடச் செய்து, செங்காந்தள் நிறவண்ணனுகிய முருகக் கடவுளை வழிபட்டனர். மருத நிலத்து வாழும் உழவர், நாடு செழிக்கவும், காமச் சிறப்பு நிகழவும் வேண்டி எழிலிக்கும் இமையோர்க்கும் இறைவனுகிய இந்திரனுக்கு விழவயர்ந்தனர். நெய்தல் நிலத்துப் பரதவர், வலைவளஞ் சுரக்க வேண்டிச் சுறவுக்கோடு நட்டுத் தம் மகளிர் கிளையுடன் குழுமி வருணனைப் பரவினர். நானில மக்களின் இவ்வழிபாடுகளேயன்றி வெற்றி விளைக்கும் கொற்றவையாகிய பழையோள் வழிபாடும் தறுகண்மை மிக்க தமிழ் மறவர்களால் மேற்கொள்ளப்பெற்றது. மேலும், முருகவேள் வழிபாடு, மாயோன் சிறப்பு, கொற்றவையைப் (காளியைப்) பரவுதல் ஆகிய செய்திகள் முறையே,

> வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
> வெறியாட் டயர்ந்த காந்தளும். 19

என்ற தொடராலும்,

> மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின்
> தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும். 20

என்ற தொடராலும்,

> மறங்கடை கூட்டிய குடிநிலை, சிறந்த
> கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே. 21

19. புறத்திணை - நூற். 5.
20. ஷ - நூற். 5.
21. ஷ - நூற். 4.

என்ற தொடராலும் ஆசிரியரால் சிறப்பாக விதந்தோதத் பெறுகின்றன.

தெய்வத்தினை நில வகையால் வகுத்துக் கூறிய தொல்காப்பியர் நிலப்பாகுபாடின்றி எல்லா நிலத்திற்கும் உரிய நிலையில், அங்கிங்கெனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்த முழுமுதற்பொருளைக் **'கடவுள்'** என்ற பொதுப் பெயராற் சிறப்பித்துள்ளார். இதன் விளக்கத்தை, ''முப்பொருள் உண்மை'' என்ற தலைப்பின்கீழ்க் காண்க. நிலவகையால் பல தெய்வங்கள் கொள்ளப்படினும் 'எல்லாத் தெய்வங்களும் ஒன்றே' என்னும் உண்மையினைத் தமிழ் மக்கள் தெளிவாக அறிந்திருந்தனர்.

> ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவும்
> கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
> அவ்வவை மேய வேறுவேறு பெயரின்
> எவ்வயி னோயும் நீயே. [22]

என்ற பரிபாடற்பகுதியால் இவ்வுண்மை பெறப்படும்.

**உருவ வழிபாடு :** மாயோன், சேயோன் என்று தெய்வங்கட்கு நிறம்பற்றிப் பெயர் கூறப்பெறுவதிலிருந்து இத் தெய்வங்கட்குத் திருவுருவமைத்து வழிபடும் வழக்கமும் தொல்காப்பியர் காலத்திற்கு முற்பட்ட தொன்மையுடைய தாகும் என்பது நன்கு தெளியப்பெறும். போரில் வீரச் செயல் புரிந்து மறைந்து போன வீரர்கட்குக் கல் நட்டு வழங்கும் வழக்கம் தமிழ் நாட்டில் இருந்தது. வீரர்களின் நினைவுக்குறியாக நடப்பட்ட கல்லில் அவ்வீரர்கள் குடிகொண்டிருப்பதாகவே கருதினர். இறந்த வீரர்கட்குக் கல் நாட்டி [23] வழங்கும் முறையைத் தொல்காப்பியம் கூறுகின்றது.

> காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
> சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்தல் என்று
> இருமூன்று மரபின் கல்லொடு புணர. [24]

என்ற புறத்திணை இயல் நூற்பாப் ,பகுதியால் இது குறித்து

22. பரிபாடல்-4 வரி (67-70)
23. இதனை 'நடுகல்' என வழங்குவர். கன்னட நாட்டார் இதனை 'வீரக்கல்' என வழங்குவர். புறத்திணை-நூற். 5.
24. தொல்-புறத்திணை-63 வரி (19-22)

ஆறுவகைச் செய்திகள் அறியப்பெறுகின்றன. இங்குக் காட்சி என்பது, கல்லைத் தேர்ந்தெடுத்தல்; கால்கோள் என்பது, அக்கல்லை நடுவதற்கான தொடக்க விழாவினை மேற்கொள்ளுதல்; நீர்ப்படை என்பது, அக்கல்லை நீரில் முழுக்காட்டித் தூய்மை செய்தல்; நடுகல் என்பது, அந்தக் கல்லை நடுதல்; சீர்த்தகு மரபில் பெரும்படை என்பது, படை வீரர்கள் அக்கல்லுக்கு மரியாதை செலுத்துதல். வாழ்த்தல் என்பது, எல்லோருங் கூடி அந்த கல்லில் இறந்த வீரனுடைய ஆவி குடிகொண்டிருப்பதாக எண்ணி வாழ்த்தி வணங்குதல். இங்ஙனம் 'கற்கோள் நிலை' ஆறு வகைப்படும். இம்முறையை யொட்டியே 'பத்தினிக்குக் கல் நடுதல்' என்ற வழக்கத்தைச் சிலப்பதிகாரத்தால் அறிகின்றோம். இந்த முறையிலிருந்துதான் சிற்பக்கலை வளர்ந்தது. அழகிய உருவங்களமைத்தலும், அவற்றிற்குத் திருக்கோயில்கள் எடுத்தலும் இதிலிருந்து தோன்றி யிருத்தல் வேண்டும்.

**ஊழில் நம்பிக்கை :** தொல்காப்பியர் காலத்து மக்கள் ஊழ்வினையில் நம்பிக்கை கொண்டிருந்தனர். இந்த ஊழினைத் தொல்காப்பியர் 'பாலது ஆணை' என்ற தொடரால் வழங்குவர். ஒருவர் செய்த நல்வினைப் பயனாகிய இன்பத்தை மற்றொருவர் கவராதபடியும், தாம் நுகர்தற்குரிய தீவினைப்பயனாகிய துன்பத்தை நெகிழவிட்டு ஓடாதபடியும் வரையறை செய்வது இறைவனது ஆணையாகும். இதுவே ஊழ் என்பது. பால், வகை, நியதி, விதி என்ற சொற்கள் யாவும் ஊழினையே குறிக்கும். நடுநின்று செங்கோல் செலுத்தும் அரசனது ஆணை இல்லாக்கால், எளியோர் பொருளை வலியோர் கவர்ந்துகொள்வர். அது போல, அனைத்தையும் இயக்கும் ஆண்டவனது ஆணை முறை நிகழாக்கால் ஒருவர் செய்த வினைப்பயனை மற்றொருவர் கவர்வதாய் முடியும். இரு வினையும் உணர்வற்றனவாதலின் அவை போகத்தை விளைத்தல் மாத்திரையேயன்றி அப்போகம் வினை செய்தானைச் சென்றடையுமாறு செய்விக்கும் ஆற்றலுடையன அல்ல. எனவே, உயிர்கட்கு இருவினைப் பயன் இறைவனது ஆணையால்தான் வரும் என்பது பெறப்படுகின்றது.

இதுவே 'பாலது ஆணை' ஆகும். இறைவன் இருவினையின் மாட்டுத் தன் ஆணையை வைத்து உயிர்கள் வினைப்பயன்களை நுகருமாறு செய்வன். இதனால்தான் இறைவன் 'பால்வரை தெய்வம்'[25] என்று குறிப்பிடப் பெற்றான்.

ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்டுக் காதல் கொள்ளுவ தற்குக் காரணம், ஊழ்வினையே என்று பண்டையோர் நம்பினர்; ஊழ்வினைதான் அவர்களைச் சந்திக்கச் செய் கின்றது என்று கருதினர்.

> ஒன்றே வேறே என்றுஇரு பால்வயின்
> ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்
> ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப. 26

என்ற நூற்பாப் பகுதியினால் இதனை அறியலாம். ஒன்று படுத்துவதும் வேறுபடுத்துவதும் எனப் பால் (ஊழ்) இரு வகைப்படும் என்பதும், அவற்றுள் ஒன்றுவித்தலால் உயர்ந்த பாலின்வழி நிகழும் இறைவனது ஆணையால் உருவும் திருவும் முதலிய நலங்களால் ஒத்த தலைவனும் தலைவியும் ஓரிடத்து எதிர்ப்படுவரென்பதும் இதன் பொருளாகும். இதனையே வள்ளுவப் பெருந்தகை **ஆகூழ், போகூழ்** என்று குறிப்பிடுவர். இக்கூறியவற்றால் தொல்காப்பியர் காலத்தில் இன்றுள்ள எந்த வகைச் சமயங்களும் இல்லை என்பதும், திணைக்குரிய தெய்வக் கரு மட்டிலும் இருந்தது என்பதும், ஆயின், சமயங் கட்கு அடிப்படையான உயிர், உடல், ஊழ்வினைக் கொள்கை மட்டிலும் இருந்தன என்பதும் நாம் அறியும் உண்மை களாகும்.

## முப்பொருள் உண்மை

தொல்காப்பியர் காலத்திலும் அவருக்கு முன்னும் மக்கள் உலகம், உயிர், இறை என்ற முப்பொருள்களின் உண்மையை நன்கு அறிந்திருந்தனர்; இவற்றை ஆராய்ந்து பார்ப்பதற்கு ஏற்ற மெய்யுணர்வு அவர்களிடம் அமைந்திருந்தது. இத் தகைய மெய்யுணர்வு பெற்றவர்கள்தாம் தவத்தைச்

25. தொல். - சொல் - கிளவி - நூற். 58.
26. களவியல் - நூற் 2.

செவ்வனே செய்து வீடு பேற்றை அடைதல் இயலும்; இப் பிறவித் துன்பத்தை நீக்குதலும் கூடும். இதனைத் தெய்வத் திருவள்ளுவர்,

> ஐயத்நின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்நின்
> வானம் நணிய துடைத்து. 27

என்றும்,

> பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
> மருளானும் மாணாப் பிறப்பு. 28

என அருளிச் செய்தவாற்றால் அறியலாம்.

**உலகின் உண்மை:** உலகத்தின் இயல்பினை ஆசிரியர் தொல்காப்பியர்,

> நிலம்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
> கலந்த மயக்கம் உலகம் ஆதலின். 29

என்று கூறுகின்றார். நிலமும் நீரும் தீயும் காற்றும் வானும் என்னும் ஐம்பெரும் பொருள்களின் கலவையே உலகம் என்பது அறியத் தக்கது. கலத்தலாவது, முத்தும் பவளமும் நீலமும் மாணிக்கமும் விரவினாற் போல்வது. மயக்கமாவது, பொன்னும் வெள்ளியும் செம்பும் உருக்கியொன்றாதல் போல்வது. இங்கு உலகம் என்பது, உலகினையும் உலகினுட் பொருள்களையும் அடக்கி நிற்கின்றது. முத்தும் மணியும் கலந்தாற்போல் உலகம் நிலம் நீர் தீ வளி ஆகாயம் என விரவியும், பொன்னும் வெள்ளியும் செம்பும் உருக்கி யொன்றானாற்போல் உலகினுட் பொருள்கள் வேற்றுமைப்படாதும் நிற்கும். தொல்காப்பியனாரது கோட்பாடு நாடோறும் உலகியலிற் பயிலும் நமது அறிவுக்கு முற்றிலும் பொருத்த மாயிருப்பது உய்த்துணரத்தக்கது. உலகத்துப் பொருள் கள் யாவும் அடுத்தடுத்து உருமாறி வருவனவேயன்றி, அவை இல்லாத வெறும் பாழாதல் எஞ்ஞான்றும் இல்லையெனப் பல வியத்தகு அறிவியல் ஆராய்ச்சிகளால் அறியப்பெற்ற மெய் யுரையுடன் தொல்காப்பியரின் உண்மையுரை ஒருங்கொத்து

27. குறள் - 353.
28. குறள் - 351.
29. மரபியல் - நூற். 91 (இளம்.)

நிற்றலைக் காணும்போது நாம் உண்மையில் வியப்புக் கடலில் ஆழ்கின்றோம்.

**உயிரின் உண்மை :** உயிர்கள் என்றும் அழிவில்லன என்பது தமிழரின் கொள்கை. உயிர்கள் என்றும் நிலைபேறுடையனவாதலின் அவற்றை **'மன்னுயிர்'** என வழங்குதல் தமிழ் மரபு. இம்மரபினைத் தொல்காப்பியர் **'தொல்லுயிர்'** என வழங்குவர். 'உயிர் எத்தன்மைத்து என்று வினயவழி உணர்தல் தன்மைத்து என்றல் செவ்வன் இறையாம்' என்பர் சேனாவரையர். இதனால், உணரும் தன்மையுடையது உயிர் என்பது பெற்றாம். உயிர்களது உடம்பின்கண் அமைந்த உறுப்புக்களின் குறைவு மிகுதிகளுக்கேற்ப அவற்றின் உணர்ச்சி வாயில்கள் வேறுபடுவனவாகும். இவ்வுலகத்து உயிர்களை ஓரறிவுடையன முதல் ஆரறிவுடையன வரையில் அறுவகையாகப் பகுக்கப்பெற்றிருந்ததைத் தொல்காப்பியம் குறிக்கின்றது. இதனை,

ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே அதனொடு நாவே
மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே
ஆறறி வதுவே அவற்றொடு மனனே
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே.[30]

என்ற நூற்பாவால் அறியலாகும். சிற்றறிவுடைய உயிர்கள் தீவினைக்கு ஏதுவான மலத்தால் மறைப்புண்டு கிடந்து, இறைவனது அருளால் பிறவிக்கு வருகின்றன. அங்ஙனம் வருங்கால் முதலில் தொடுதல் உணர்வு தோன்றுதற்கு இடந் தரும் புல்லும் மரனுமாகப் பிறக்கின்றன ; அதன்பின் 'சிறிது அறிவு விளக்கம் பெற்றுத் தொடுதலுணர்வும் சுவையுணரவும் கொண்ட நத்தை, கிளிஞ்சல் முதலியனவாய்ப் பிறக்கின்றன ; அதற்குப் பிறகு சிறிது அறிவு மிகுந்து அவ்விரண்டோடு மூக்குணர்வு தோன்றுதற்கேற்ற கறையான், எறும்பு முதலியனவாகப் பிறவி எடுக்கின்றன ; அதன்பின் மேலும் அறிவு மிகுந்து அம்மூன்றோடு கண்ணறிவும் தோன்று

30. மரபியல் - நூற். 26 (இளம்.)

தற்கேற்ற நண்டு, தும்பி முதலியனவாகப் பிறக்கின்றன; அதன் பிறகு இன்னும் அறிவு முதிரப்பெற்று அவற்றோடு செவியறிவும் புலனுதற்கேற்ற விலங்குகளும் மாக்களுமாகப் பிறக்கின்றன; அதற்குப் பிறகு அறிவு விளக்கம் மிக விரிதலின் அவ்வைந்துடன் மன அறிவும் விளங்குதற்கேற்ற ஆறறிவுடைய மக்களாகப் பிறக்கின்றன. இதனை இக்கால அறிவியலறிஞர்கள் படிமுறை வளர்ச்சிக் கொள்கையில் [31] அடக்குவர்; மூளை வளர்ச்சிக்கேற்றவாறு இந்நிலை ஏற்படும் என்று அவர்கள் கூறுவர். தொல்காப்பியரும் அவரோடொத்த தமிழறிஞர்களும் மலந்தேயும் நிலைக்கு ஏற்பச் சிற்றுயிர்கள் முறையே அறிவிலும் பிறவியிலும் மேலேறி வருவதாகக் கருதுவர்.

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான். [32]

என்று மணிவாசகப்பெருமானும் கூறுதல் ஈண்டு எண்ணற்பாலது. எனவே, மலந்தேயும் அளவிற்கேற்ப உயிர்கள் மேன்மேற் பிறவியிற் சேருமென்பதும், அதனுல் ஒருயிர்க்குப் பல பிறவிகள் உளவாம் என்பதும், பிறவிகள்தோறும் ஈட்டப் பெறும் வினைகளே மேன்மேற் பிறவிகளை எடுத்தற்கேதுவாம் என்பதும் தொல்காப்பியருக்கு உடன்பாடாதல் பெறப்படும்.

**கடவுள் உண்மை:** மேற்குறிப்பிட்ட சிற்றுயிர்கள் போலாது இயல்பாகவே பாசங்களினின்று நீங்கி விளங்கப் பெறும் பேரறிவுடையவன் இறைவன். அவன் உயிர்களின் வினைக்கு ஏதுவாகிய மலத்தாற் பற்றப்படாதவன்; எனவே பிறப்பிறப்பில்லாதவன். இதனை ஆசிரியர் தொல்காப்பியனர்,

வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல்நூ லாகும். [33]

31. படிமுறை வளர்ச்சிக் கொள்கை - theory of evolution.
32. திருவாசகம் - சிவபுராணம் வரி (26-31)
33. மரபியல்- நூற். 96 (இளம்.)

என்ற நூற்பாவால் பெறவைக்கின்றார். மேலே தெய்வத் திணை நிலவகையால் மாயோன், சேயோன், வேந்தன், வருணன் என வகுத்துக் கூறியவர் ஈண்டு நிலப்பாகுபாடின்றி எல்லா நிலத்திற்கும் உரிய நிலையில் எங்கும் நீக்கமற நிறைந்த முழு முதற்பொருளைக் 'கடவுள்' என்ற பொதுப் பெயரால் சிறப்பித்துப் போற்றியுள்ளார். இங்குக் காட்டிய நூற்பாவில் தூய மெய்யுணர்வே இறைவனது திருமேனி என்பதும், அவன் ஒருவனே என்பதும் ஆசிரியர் காட்டியுள்ளமை கருதத் தக்கது. இங்ஙனமே, ஆசிரியர் திருவள்ளுவரும் இறைவனை **'வாலறிவன்'** (தூய அறிவினன்) என்று விளங்க உரைத்தமை ஈண்டு ஒப்புநோக்கி உணரத்தக்கது.[34] கடவுள் என்னும் சொல் இன்ன நிறம் இன்ன உரு என்று அறியவொண்ணாத நிலையில் எல்லாத் தத்துவங்களையும் கடந்து நிற்கும் முழு முதற்பொருளைக் குறித்து வழங்கும் ஒரு காரணப் பெயராகும். கடவுள்—கடந்து நிற்றல்; அஃதாவது பொதுத் தன்மையைக் கடந்து நிற்றல். எல்லாப் பொருள்களையும் உள் நின்று இயக்குபவன் இறைவனாதலின் **'இயவுள்'** என்ற பெயரும் அவனுக்குப் பெயராக அமைந்தது.

எல்லாத் தத்துவங்களையும் கடந்து காணவும் கருதவும் முடியாத முழுமுதற் கடவுளைக் காணவும் கருதவும் எளிதாகும் படி உருவம் கொடுத்து வழிபடலாயினர் பண்டைத் தமிழ் மக்கள். இதனை,

> கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
> வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
> கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே.[35]

என்ற நூற்பாவால் அறியலாம். இதற்கு உரையாசிரியர்கள் கூறும் பொருள்கள் ஒருபுறமிருக்க, இக்காலத் தமிழறிஞர்கள் தத்தம் அறிவின் திறத்தால் பலவாறு விளக்கிக் காட்டுவர். கொடிநிலை என்பது ஞாயிறு என்றும், கந்தழி என்பது 'தீ என்றும், வள்ளி என்பது திங்கள் என்றும் பொருளுரைத்து, இது மூத்தி வழிபாட்டினைக் குறிக்கும் என்றும், இன்னும் பல

34. குறள் - 2.
35. புறத்திணை - நூற். 27 (இளம்.)

வாருகவும் விளங்க உரைப்பர் **மறைமலேயடிகள்**.[36] நச்சினர்க்கினியர் கூறியுள்ள முறையினையொட்டிக் கொடிநிலை என்பது கீழ்த்திசையின்கண்ணே நிலைபெறுதலையுடைய மேகத்தையுணர்த்தும் என்றும், கந்தழி என்பது பற்றிழிந்தாராகிய நீத்தார் தன்மையைக் குறிக்கும் என்றும், வள்ளி என்பது வண்மைபற்றி நிகழும் அறத்தைக் குறிக்கும் என்றும், கடவுள் வாழ்தலோடு பொருந்திவரும் இம்மூன்றும் திருக்குறளில் கடவுள் வாழ்த்தையடுத்து வான் சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என வரும் மூன்றதிகாரங்களில் முறையே கூறப் பெற்றுள்ளன என்றும் கூறுவர் பேராசிரியர் மு. **இராகவய்யங்கார்** அவர்கள்.[37] இவ்விளக்கங்கள் யாவும் அந்த அறிஞர்களின் புலமையைக் காட்டுவனவேயன்றித் தொல்காப்பியனுர் கருதிய பொருளை விளக்குவனவாகத் தோன்றவில்லை.

உடல் வேறு உயிர் வேறு என்ற நம்பிக்கை தொல்காப்பியர் காலத்திலும், அதற்கு முன்னரும் இருந்து வந்தது. உடம்பை நடமாடச் செய்யும் உயிர் ஒரு தனிப்பொருள் என்பதே தொல்காப்பியரின் கொள்கையாகும். எழுத்துக்களை உயிரெழுத்துக்கள், மெய்யெழுத்துக்கள், உயிர் மெய்யெழுத்துக்கள் என்று பிரித்திருப்பதற்கு இக்கொள்கையே அடிப்படையாகும். தாமே தனித்து ஓசை பெற்று இயங்கும் எழுத்துக்கள் உயிரெழுத்துக்கள். உயிரெழுத்தின் துணையில்லையாயின் இயங்க முடியாத எழுத்துக்கள் மெய்யெழுத்துக்கள். உயிரும் மெய்யும் சேர்ந்து இயங்கும் எழுத்துக்கள் உயிர்மெய்யெழுத்துக்கள்.

'காலம் உலகம் உயிரே உடம்பே' [38]
'சென்ற உயிரின் நின்ற யாக்கை'. [39]
'உடம்பும் உயிரும் வாடியக் கண்ணும்'. [40]

---

36. மாணிக்கவாசகர் வரலாறும் காலமும் - பக். 656 - 662; 696 – 699.

37. தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி - பக். 120 - 123.

38. தொல். - சொல். - கிளவி - நூற். 58.

39. புறத்திணை - நூற். 16.

40 பொருளியல் - நூற். 9.

என்று இவ்வாறு ஆன்மா வேறு, உடல் வேறு என்பதைக் குறிக்கும் நூற்பாக்கள் பல தொல்காப்பியத்தில் காணப் பெறுகின்றன. ஆன்ம விசாரணை உயர்ந்த நாகரிகத்தின் ஒரு சின்னமாகும்.

## உறுதிப் பொருள்கள்

இந்நிலவுலக வாழ்க்கையில் மக்கள் எல்லோரும் அடைதற்குரிய உறுதிப்பொருள்களை அறம், பொருள், இன்பம், வீடு என உலகத்தோரும் சமயத்தோரும் பாகுபடுத்திக் கூறுவர். எல்லா உயிர்களாலும் விரும்பி நுகரப்படுவது இன்பம் ; அந்த இன்பத்திற்குக் காரணமாக அறிவுடைய மக்களால் ஈட்டப்படுவது பொருள் ; பிறர்க்குத் தீங்கு நினையாத மாசற்ற மனத்தால் பொருள் செய்தொழுகும் முறை அறம். நுகர்தல் வேட்கைமுறைபற்றி இன்பம் - பொருள் - அறம் எனவும், செய்கைமுறைபற்றி அறம் பொருள் இன்பம் எனவும் எண்ணுதல் மரபு. முதல் முறையில் எண்ணும் தொல்காப்பியர்,

> இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
> அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின். 41

என்று கூறுவர். இந்த மூன்றும் அன்பினால் ஊடுருவி நிற்றல் வேண்டுமென்பது தொல்காப்பியரின் கருத்தாகும். இதையே செய்கை முறையில் எண்ணும் பொழுது,

> அந்நிலை மருங்கின் அறம்முத லாகிய
> மும்முதற் பொருட்கும் உரிய என்ப. 42

என்று நூற்பாவால் உரைப்பர் ஆசிரியர். வீட்டினைப்பற்றித் தொல்காப்பியர் தனியாக எடுத்தோதவில்லை. "உலகில் பொருள் மூன்றனையும் கூறுவான் அவற்றை மும்முதற் பொருளென்றான். அவையின்றி வீடுபெறுமாறு வேறின்மையின் வீடும் ஆண்டுக் கூறினான் என்பது" என்ற பேராசிரியரின் உரைப்பகுதியால் ஆசிரியர் எடுத்தோதாத காரணத்தை அறியலாம். இவரையொட்டியே வள்ளுவப்

41. களவியல் - நூற். 1.
42. செய்யுளி. - நூற். 106.

பெருந்தகையும் வீட்டினைத் தனியாக விதந்தோதவில்லை. 'வீடென்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத் தாகலின், துறவறமாகிய காரண வகையாற் கூறப்படுவ தல்லது இலக்கண வகையாற் கூறப்படாமையின் நூல்களாற் கூறப்படுவன ஏனை மூன்றுமேயாம்''[43] என்று **பரிமேலழகரின்** உரைப்பாயிரத்தால் அறியப்பெறுவதாகும். இந்த மூன்றினைத் தவிர அறிவுடைய மக்களால் விரும்பி மதிப்பதற் குரியன பிற இன்மையின் இம்மூன்றையும் **'மும்முதற் பொருள்'** என்று ஆசிரியர் சிறப்பித்துள்ளமை உய்த்துணரத் தக்கது. அறத்தினால் பொருளாக்கி அப்பொருளால் இன்பம் நுகர்தலே மக்களது விழுமிய நல்வாழ்க்கை முறையாகும். இவ்வாறு மூன்று பகுதிகளாக நிகழும் இவ்வுலக வாழ்க்கை யின் பகுதியினை **'மூன்றன் பகுதி'** எனத் தொகுத்துரைப்பர் தொல்காப்பியர். உலக அறநூலாகிய திருக்குறளை இயற்றிய வள்ளுவப் பெருந்தகையும் தொல்காப்பியரின் முறையை யொட்டியே தம் நூலை அறம், பொருள், இன்பம் என முப்பால் களாக வகுத்தருளினர் என்பது ஈண்டு ஒப்பு நோக்கி உணரத் தக்கது.

**இன்ப நிலை :** உறுதிப்பொருள்கள் மூன்றனுள் **'இன்பம்'** என்பதனை முன்வைத்துக் கூறியதன் நுட்பத்தைச் சிறிது காண்போம். நாம் பிறவி எடுப்பதற்கு முன்னர் விழைவு, அறிவு, செயல் என்ற மூன்றும் முழுவதும் மறைவுண்டுக் கிடக்கின்றன. பிறக்கும் முன்பு நாம் அன்னை வயிற்றில் மலநீர்ப் பைகளினால் நெருக்குண்டும், அகட்டுத் தீயினால் வெதுப்புற்றும் பலவாறு துன்புறுகின்றோம். பிறவி எடுத்த பிறகு நாம் பல வகை நோய்களினாலும் நம்மைச் சூழ உள்ளார் செய்யும் கொடுமைகளினாலும் பெரிதும் துன்புறுகின்றோம். இந்நிலையில் நாம் இளமைப் பருவம் எய்தும் வரையில் ஆண்டவனால் நமக்கெனப் படைக்கப்பெற்றுள்ள பொருள்களை ஐம்புலவாயிலாக நுகர்ந்து இன்புறுகின்றோம். ஆண் இளமைப் பருவமும் பெண் மங்கைப் பருவமும் எய்தியவுடன் இருவரிடையேயும் அதுகாறும் காணக் கிடையா வேறொரு

43. திருக். - பாயிரம் (பரிமேலழகர் உரை).

புதுத் தேயத்தைக் கண்டாலொப்பப் புதியதோர் இன்ப உணர்ச்சி தோன்றுகின்றது. இவ்வின்பத்தைப் பெறுதலில் இருவரும் பெருவேட்கையும் பெருமுயற்சியும் கொள்கின்றனர். இதுகாறும் நுகர்ந்து வந்த ஐம்புல இன்பங்களெல்லாம் இப்புதிய இன்பத்தின் முன் நில்லாவாய், ஐம்புல இன்பங்களில் தாழ்ந்தவாய், இப்புதிய இன்பத்தைப் பெறுத வழி அதனால் ஏக்கமுறுவார்க்குத் துன்பந்தரும் பெற்றிய வாய் மாறிவிடுவதைக் காண்கின்றோம். ஆடவனும் மகளும் 'தானே, அவளே' என்ற வேற்றுமையின்றி, ஒருவர் பாலொருவர் அன்பு மீதூரப்பெற்று, இருவரது தன் நலன் களும் மறைந்து, இன்பம் நுகர்கின்றனர். இத்தகைய காதலின்பம் உடம்புக்கு உயிர் போல்வதாயும், இருள் சூழ்ந்த இரவில் அவ்விருளகற்றும் முழுமதி போல்வதாயும், ஓரறிவு உயிர்கள் முதல் ஆறறிவு உயிர்கள் வரை அறிவும் முயற்சியும் பெறச் சுடரொளி பரப்பும் ஞாயிறு போல்வதாயும் பல்வேறு தீய உணர்ச்சிகளாலும் அறியாமையாலும் வேறுபட்டுள்ள மக்களையும் ஒருவரோடொருவர் அளவளாவப் புகுத்தும் இறைவன்றன் அருள் விளக்கம் போல்வதாயும் இருப்பதை நாம் ஆராய்ந்து உணரமுடிகின்றது. இதனால் தான் ஆசிரியர் தொல்காப்பியனார், "இன்பமும் பொருளும் அறனும்" என நுகர்தல் வேட்கை முறைபற்றி இன்பத்தை முதலில் வைத்து ஓதுவாராயினர் என்பது தெளிவாகின்றது. தொல்காப்பியருக்குப் பின்னர் எழுந்த நூல்கள் அறம் பொருள் இன்பம் என்ற செய்கை முறையில் அமைந்தன. இங்ஙனம் அமைவதற்கு பௌத்த சமண சமயக் கொள்கை களின் செல்வாக்கே காரணம் எனக் கருதலாம். இதனால் தான் திருவள்ளுவர் தமது காலப் போக்கினையொட்டி அறத்தை முதற்கண்ணும் இன்பத்தை இறுதிக்கண்ணும் வைத்து நூலியற்றினார். ஆயினும், அவர் இன்பத்தை வாயிலாகக் கொண்டாலன்றி அறனும் பொருளும் செவ்வனே நடைபெறா என்பதை நன்குணர்ந்தவராதலின் அறத்தை இல்லறம், துறவறம் என இரண்டாகப் பகுத்துக் காத லின்பத்தின் வழிப்படுவதாகிய இல்லறத்தை முதற்கண் நிறுத்தி நூல் அருளினர் என்பது உய்த்து உணரத்தக்கது.

**பொருளியல்பு :** கல்விப் பொருள், செல்வப் பொருள் எனப் பொருள் இருவகைப்படும். இம்மையில் நிகழும் இன்ப வாழ்வு வறுமையும் அதனால் வரும் துன்பமும் இன்றி இனிது நடைபெறுவதற்கும், மறுமையின்பத்தை அவாவி செய்யப் பெறுவதாகிய தவவொழுக்கமும் பிறருதவியை எதிர் பாராமல் செய்வதற்கும் செல்வப் பொருள் இன்றியமையாது வேண்டப் பெறுகின்றது என்பதை நாம் அறிவோம். இதனை நன்குணர்ந்த ஆசிரியர் தொல்காப்பியனாரும்,

> மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய
> முல்லை முதலாச் சொல்லிய முறையாற்
> பிழைத்தது பிழையா தாகல் வேண்டியும்
> இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே 44

என்று ஓதியுள்ளார். எனவே, இம்மை மறுமைப் பேறுகளை அடைவித்தற்கு இன்றியமையாக் கருவியாக இருக்கும் இத் தகைய செல்வப் பொருளை ஈட்டும் வகையில் ஆசிரியர் கொண்ட கருத்தினை நாம் ஆராய்ந்து காணவேண்டும். கல்வி யறிவு வாயாதவர்கள் செல்வத்தை ஒழுங்கான நன்முறையில், ஈட்டும் வகையினையும், ஈட்டிய பொருளை அங்ஙனமே நன் முறையில் செலவிட்டு இம்மை மறுமை இன்பங்களை எய்தும் வகையினையும் சிறிதும் அறியார். அன்றியும், ஒருகால் ஊழ்வினை வயத்தால் கல்வியறிவு வாயாதவர்கட்குச் செல்வம் வரின், அவர்கட்குத் தலைகால் தெரிவதில்லை. அதனைப் பயன்படுத்தும் வழியினை அறியாராய், அதனையே தெய்வமெனக்கொண்டு வாழ்ந்து இருவகைப் பேறுகளைப் பெறாது மாண்டொழிதலையும், அவருக்குப் பின் அப்பொருளைப் பெறுவோர் பல்வேறு தகாத முறை களில் செலவிட்டு அழிதலையும், நாம் நாடோறும் காண்கின் றோம். எனவே, இவ்வுண்மையை நன்குணர்ந்த பண்டைத் தமிழர்கள் பொருளைப்பற்றிப் பேசுங்கால் கல்விப் பொருள் மாட்சியினை முன்நிறுத்தி வலியுறுத்தியும், அதன் பின்னரே செல்வப் பொருளை நிறுத்தியும் பேசாநின்றனர். ஆசிரியர் தொல்காப்பியனாரும் இருவகைப் பொருள்களைப் பெறும்

---

44. அகத்திணை - நூற். 30 (இளம்.)

பொருட்டு இளைஞர்கள் வேறு நாடு நோக்கிச் செல்லும் பிரிவு களில் நூல் ஓதுதற்குப் பிரியும் பிரிவை முன் வைத்தும்,[45] பொருள் தேடுவதற்குப் பிரியும் பிரிவை அதன் பின் வைத்தும் அகத்திணை இயலில் பிரிவிலக்கணம் ஓதியுள் ளமையால் இதனை அறியலாம். இம்முதலாசிரியர் வழி வந்த வள்ளுவப் பெருந்தகையும் பொருட்பாலில் கல்வியை முன்வைத்தும், அதற்குப் பல அதிகாரங்கள் கடந்து போய் செல்வத்தைப் பின்வைத்தும் நூல் இயற்றினர். இந்த இரண்டு வகைச் செல்வங்களும் அன்பினால் வளர்த்துப் பரவச் செய்வதற்கே கருவியாதல் வேண்டும் என்பதை வற்புறுத்து வீதற்கே,

'இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை'. 46

என்று நூற்பா வடிவில் ஆணை தருகின்றார் ஆசிரியர். அஃதாவது, கல்விச் செல்வம் மக்களுயிரின் அறிவை விளக் கும் கருவியாதலுடன் எல்லா உயிர்களிடத்தும் தொகுத்து வைக்கப் பெற்றிருக்கும் அன்பு என்னும் நறவினைப் புறத்தே ஒழுகச் செய்து உலகத்தை அத்தேன் பெருக்கிற் படிவித்து இன்புறச் செய்தல் வேண்டும் என்றும், பொருட்செல்வம் அக்கல்விச் செல்வத்திற்குத் துணையாக நின்று அதனையும் அன்பையும் வளரச் செய்தற்குக் கருவியாதல் வேண்டும் என்றும் நமக்குத் தெளிவாகப் புலனாகின்றது. இவ் வுண்மையை இன்று கல்வி கற்பாரும் செல்வம் திரட்டு வாரும் நன்கு அறிதல் வேண்டும்.

**அறத்தின் உண்மை :** இனி, ஆசிரியர் மூன்றாவதாக நிறுத்திய "அறம்" என்னும் முடிந்த பொருளைச் சிறிது ஆராய்வோம். அறமும் அன்பினையே முதலும் ஈறுமாய்க் கொண்டு ஈட்டப்படுதலும் நுகரப்படுதலும் செய்யப் பெறு தலும் வேண்டும் என்பது ஆசிரியரின் கருத்தாகும். இதனை மேலெடுத்துக் காட்டின "இன்பமும் பொருளும்" என்ற நூற்

45. ஓதல் பகையே தூதிவை பிரிவே. (அகத்திணை - நூற். 27).
46. களவியல் - நூற். 1

பாவின் முதலிரண்டடிகளினால் இனிது பெறப்படும். வள்ளுவப் பெருந்தகையும்,

"அறத்திற்கே அன்புசார்பு என்ப அறியார்." 47

என்று ஓதியுள்ளமை ஈண்டு ஒப்பு நோக்கி உணரத் தக்கது. எனவே, உண்மையன்பு இன்றி யாதாவது ஒரு பயன் கருதி ஆற்றும் அறம் நன்மை பயவாமை நன்கு அறியப்படும். இங்ஙனம் பயன் கருதி அறம் செய்வார் தமது கைப்பொருளா லன்றிப் பிறரது பொருளாற் செய்தற்கும் துணிவர். எல்லா உயிர்களிடத்தும் எல்லா மக்களிடத்தும் நெகிழ்ந்த அன்பு கொண்டு, எவ்வுயிர்க்கும் எவர்க்கும் தீங்கு நேராத முறையில் பெயர் புகழ்களை வேண்டாது அறம் செய்வதே செய்வோர்க்கும் பிறர்க்கும் உண்மையில் பயன்படுவதாகும். அன்றியும், தொல்காப்பியனார் 'அறம்' என்பதை ஒன்றாகக் கூறினாரன்றி அதனை 'இல்லறம்', 'துறவறம்' என்று இரண்டாகப் பகுத்து யாண்டும் ஓதினாரில்லை. அவர், இம்மை இன்பம் விழைந்து தாம் காதலன்பு பாராட்டிய மனைவி மக்களோடு ஒருங்கிருந்து நடத்திய அன்பு வாழ்க்கையும், மறுமையின்பம் அவாவி மனைவி மக்கள் தமக்குத் தொண்டு செய்ய இம்மை முயற்சியி னின்று நீங்கி இறைவன் திருவருளில் தமது உணர்வினைத் தோய்வித்திருக்கும் தவ வாழ்க்கையும் ஓர் அறத்தினுள் ளேயே அமைந்த இருவகை நிலைகளாகும் என்ற கருத்துடைய வர் என்பதை,

காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே. 48

என்ற நூற்பாவால் தெற்றென அறியலாம். 'காதலன்பால் துய்த்த காமவின்பம் நிறைந்து கடைக்கொண்டு வாழ்நாள் எல்லையின் நடுக்காலத்தில் தமக்குக் காவலாய் அமைந்த தம் புதல்வரோடு கூடியிருந்தும், தாம் அதுகாறும் செய்து போந்த அறத்தை இனித் தாம் செய்யலாகாமையின் தமக்காக அவ்

47. குறள் - 76.
48. கற்பியல் - நூற். 51 (இளம்.)

வறத்தைச் செய்யும் சுற்றத்தாருடன் அமர்ந்தும் குடும்பத் தலைமகனும் தலைமகளும் சிறந்ததாகிய தவத்தில் தமதுணர் வினைப் பயிலச் செய்தல் தாம் அதுகாறும் செய்து போந்த காதல் மனைவாழ்க்கையின் பயனாகும்' என்பது இதன் கருத்து. இதிலிருந்து, நெஞ்சினால் துறத்தலே 'துறவு' என்பது அறியப்படும். ஒவ்வொருவருக்கும் இத்தவவொழுக் கம் இன்றியமையாதது என்பது தொல்காப்பியர் கருத்து. இவ்வுலகியல் வாழ்க்கை நீடு நிற்பதன்றாய்ச் சடுதியில் எதிர்பாராது மறைந்தொழிவதாலும், நிலைபேறில்லாப் பொருள் கள் நிலையற்ற சிற்றின்பத்தையே தரக் காண்டலாலும் தொல்காப்பியர்,

> பாங்கரும் சிறப்பின் பல்லாற் றானும்
> நில்லா உலகம் புல்லிய நெறித்தே. 49

என்று காஞ்சித்திணை நூற்பாவில் 'நிலையாமையை' வற்புறுத் தித் தவ வாழ்க்கையின் மூலம் நமக்கு ஒப்பற்ற துணைவனாக வுள்ள இறைவனை இறுகப் பற்றும்படி ஆற்றுப்படுத்துகின் றார். இவ்வாறு ஐம்புலன் நுகர்ச்சியில் பற்றுத் தீர்தலைத் தொல்காப்பியர் **'காமம் நீத்தபால்'** என்று சிறப்பிப்பர்[50] 'ஆசையை நீக்கியபக்கம்' என்பது இதன் பொருள். மிக்க காமத்து வேட்கை நீங்கிய கணவனும் மனைவியும் வீடு பேற்றினை விரும்பிப் பற்றற வாழும் துறவு நிலையை ஆசிரியர் **'அருளொடு புணர்ந்த அகற்சி'** என்று குறிப்பிடுவர்.[51] இதனை இளம்பூரணர், "அருளுடைமை, கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, புணர்ச்சி விழையாமை, கள்ளுண்ணாமை, துறவு என்பனவற்றைப் பொருந்துதலாம். அவற்றுள் அருளுடைமை யொழிந்த எல்லாம் விடுதலால் 'அகற்சி' என்றார்" என்று விளக் குவர். இத்தகைய அருள் வாழ்வினை விரும்பி வேந்தர்களும் தங்கள் அரச பதவியினைத் துறத்தல் உண்டு. அங்ஙனம் துறக் கும் இயல்பினைக் **கட்டில் நீத்தபால்** என வழங்குவர் ஆசிரியர்.[52]

---

49. புறத்திணை – நூற். 18 (இளம்.)
50. புறத்திணை - நூற். 17.
51. ஷை - நூற். 17.
52. ஷை - நூற். 17.

இத்தகைய பல வரலாற்றுக் கூறுகள் அடங்கிய செய்திகளை புறத்திணை இயலில் காணலாம்.

### பழக்கவழக்கங்கள்

பண்டைத் தமிழர்களின் பழக்கவழக்கங்களைப் பற்றிய ஒருசில குறிப்புக்கள் தொல்காப்பியத்தில் புலனாகின்றன. ஒருசிலவற்றை ஈண்டுக் காண்போம்.

**திருமணச் சடங்கு :** தொல்காப்பியர் காலத்திற்கு முன்பு பண்டைத் தமிழ் மக்களில் ஆடவரும் பெண்டிரும் ஒருவரை யொருவர் எதிர்ப்பட்டுத் தம் காட்சியும் கருத்தும் ஒன்றுபட்டுத் தமக்குள் ஒருவரையொருவர் உயிர் போல் காதலிக்கும் காதலன்பு நிகழப்பெற்றபின் தமக்குள் திருமணம் செய்து கொண்டு வாழ்ந்து வந்தனர். இஃது 'அன்பினைந்திணைக் காமக் கூட்டம்' என வழங்கப்பெற்றது. அதன் பின்னர் அவர் தம் பெற்றோரும் சுற்றத்தாரும் மணங்கூட்டுவர்.

கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர்க் கொடுப்பக்கொள் வதுவே [53]

என்ற நூற்பாவால் அறியலாகும். மகளிர்க்குரியார் தம் மகளிரால் விரும்பப்பட்ட காதலர்க்குத் தம் மகளிரை மணம் செய்து கொடுக்க ஒருப்படாவழிக் காதலர் இருவரும் தம் பெற்றோர் உற்றார் அறியாமல் வேற்றிடஞ் சென்று மணஞ் செய்துகொள்வர். இது,

கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே
புணர்ந்துடன் போகிய காலை யான. [54]

என்ற நூற்பாவால் அறியப்படும். ஒருப்பட்டவழிப் பெற்றோரே 'சடங்கு' மூலம் மணம் நடத்திவைப்பர். இச் சடங்கு முறை அகம்—86-இல் சொல்லப்பட்டவாறு நிகழும். காதலர்களிடையே வஞ்சித்தொழுகுதலும் பொய்யும் தலை காட்டின காலத்தில்தான் பண்டைத் தமிழ்ச் சான்றோர் திருமணச் சடங்கை வகுத்தனர். இது,

---

53. கற்பி. - நூற். 1,
54. கற்பி. - நூற். 2.

பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப. [55]

என்ற நூற்பாவால் அறியப்படும். ஒருசிலர் 'ஐயர்' என்பது 'ஆரியர்' என்ற சொல்லின் திரிபு எனப் பிறழவுணர்ந்து, ஆரியர் வந்த பிறகு தமிழ்த் திருமண முறை சீர்ப்பட்டது என்று கூறினர். அது தவறு. ஐயர் என்ற சொல் 'ஐ' என்பதன் அடியாகப் பிறந்ததாகும். 'ஐ வியப்பாகும்' என்பது தொல்காப்பியம்.[56] 'வியக்கத்தக்க குணமும் செயலும் உடைய முனிவரையே' குறிக்கும் இச்சொல் நாளடைவில் ஒரு குடும்பத்திற்குத் தலைவராய்க்—குலப்பெரியோராய்க்— குணத்தினிலும் செயலிலும் சிறந்தாரை உணர்த்துவதற்கு வழங்கலாயிற்று என்பது அறியத்தக்கது. 'ஐயர்' என்பது சாதிப் பெயர் அன்று.

**நம்பிக்கைகள் :** தொல்காப்பிய காலத் தமிழர்கள் மந்திரத்தில் நம்பிக்கை கொண்டிருந்தனர். இன்றும் மக்கள் மந்திரச் சொற்களின் பொருளை அறியார். அக்காலத்தில் பெரியோர்களால் சொல்லப்பட்ட பொருள் தெரியாத சொற்களை மந்திரங்கள் என்று மக்கள் நம்பினர்.

நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப. [57]

என்ற நூற்பாவால் இச்செய்தி, அறியப்பெறும்.

எக்காரியங்களுக்கும் நல்ல நாள், கெட்ட நாள் பார்க்கும் வழக்கம் தமிழர்களிடமிருந்தது.

மறைந்த ஒழுக்கத்து ஓரையும் நாளும்
துறந்த ஒழுக்கம் கிழவோற் கில்லை. [58]

என்ற நூற்பாவால், களவுக்காலத்தில் கெட்ட இராசியிலும் கெட்ட நாளிலும் காதலியுடன் சேராமல் இருக்கும் ஒழுக்கம் தலைவனிடமில்லை என்பது தெரிகின்றது. எனவே, கற்புக்

---

55. கற்பி. - நூற். 4.
56. தொல். - சொல். - உரியி - நூற். 87.
57. செய்யு. - நூற். 171 (இளம்.)
58. களவி. - நூற். 45 (இளம்.)

காலத்தில் காதலர்கள் தீய ஓரையிலும் தீய நாளிலும் மருவுதல் இல்லை என்பது பெறப்படுகின்றது. வெட்சி வீரர்கள் நிரை கவரச் செல்லுங்கால் நற்சொல் கேட்டல் உண்டு. இதனை **'விரிச்சி'** என்று வழங்குவர். போர் செய்யப் புறப்படும் வேந்தன் குறித்த நேரத்தில் புறப்படத் தாமதமானால் அந் நேரத்தில் குடையையும் வாளையும் ஊருக்குப் புறத்தே அனுப்பி வைப்பான்.

> குடையும் வாளும் நாள்கோள்.[59]

என்பதனால் இது அறியப்பெறும்.

சகுனம் பார்க்கும் வழக்கமும் தமிழர்களிடமிருந்தது

> 'நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்'.[60]

என்ற சொற்றொடர் இதனைக் குறிப்பிடுகின்றது.

தான் நினைத்த காரியம் நிறைவேறினால், 'இன்னது தருவேன்' என்று தெய்வத்தை வேண்டிக்கொள்ளும் வழக்கம் அவர்களிடமிருந்தது. இக்காலத்தார் இதனை 'பிரார்த்தனை' என்றும், 'வேண்டுதல்' என்றும், 'நேர்த்திக் கடன்' என்றும் கூறுவர். தொல்காப்பியர் இதனை **'தெய்வக் கடம்'** என்று குறிப்பிடுகின்றார்.[61]

வானுலகில் வாழ்வோர்கள் வானவர்கள் என்றும், அவர்கள் உண்ணும் உணவு அமிழ்தம் என்றும், அது மிகவும் சுவையுடையது என்றும் தமிழர்கள் நம்பினர்.

> "சொல்லென
> ஏனது சுவைப்பினும் நீகை தொட்டது
> வானோர் அமிழ்தம் புரையுமால் எமக்கென
> அடிசிலும் பூவும் தொடுத்தற் கண்ணும்".[62]

என்ற கற்பியல் நூற்பாப் பகுதியால் இதனை அறியலாம். தலைவன் இல்வாழ்க்கையில் தன் மனைவியின் அட்டில் தொழிலைப் பாராட்டியது இது.

---

59. புறத். - நூற் 11.
60. புறத். - நூற். 30 (இளம்.)
61. கற்பி. - நூற். 9.
62. கற்பி. - நூற். 5.

**உடன் கட்டை ஏறுதல் :** மாண்ட கணவனுடன் மனைவி உடன்கட்டை ஏறும் வழக்கம் பழந்தமிழர்களிடம் இருந்தது. இது **'பாலை நிலை'** என்று வழங்கப்பெறும்.

> 'நல்லோள் கணவனொடு நளியழற் புகீஇச்
> சொல்லிடை யிட்ட பாலை நிலையும்.' 63
> [பாலை - புறங்காடு]

என்ற நூற்பா அடிகள் இதனை உணர்த்துகின்றன. கணவனொடு மனைவி உடன்கட்டை ஏறாது தவம் புரியும் நிலையைத் **'தாபத நிலை'** என்பர். தன் கணவன் இறந்த பொழுதே மனைவி உடனுயிர் நீத்த நிலை **முதானந்தம்**[64] என வழங்கப்பெறும். தாபத நிலை, பாலை நிலை, மூதானந்தம் ஆகிய மூன்றும் கடையன்பு, இடையன்பு, தலையன்பு பற்றி நிகழும். இம் மூன்றினையும்,

> காதலர் இறப்பிற் கனையெரி பொத்தி
> ஊதுலைக் குருகின் உயிர்த்தகத் தடங்காது
> இன்னுயிர் ஈவர் ; ஈயா ராயின்
> நன்னீர்ப் பொய்கையின் நளியெரி புகுவர் ;
> நளியெரி புகாஅ ராயின் அன்பரொடு
> உடனுறை வாழ்க்கைக்கு நோற்றுஉடம்பு அடுவர்
> பத்தினிப் பெண்டிர். 65

என்று பத்தினிப்பெண்டிரின் செயல்களாக 'மணிமேகலை' குறிப்பிடுவது ஈண்டு அறியத்தக்கது.

**துறவற நிலை :** மனைவி மக்களைத் துறந்து தனித்துறையும் துறவற நிலை தமிழர்களிடம் இல்லை. காம உணர்ச்சி மறைந்து போன இறுதிக் காலத்தில்தான் துறவறத்தை மேற்கொள்வர். இது 'உறுதிப் பொருள்கள்' என்ற தலைப்பின்கீழ் முன்னர் விளக்கப் பெற்றுள்ளது.

**வீட்டுப் பொறுப்பு :** இல்லறத்தை நடத்தும் பெரும் பொறுப்பு கணவனுக்கு வாழ்க்கைத்துணையாக நிற்கும் மனைவியிடம் இருந்தது. மனையின்கண் இருந்து மனையறம்

---

63. புறத். - நூற். 19.
64. மூதானந்தம் - முதுமை + ஆனந்தம், முதுமை - உழுவலன்பு பற்றிய ; ஆனந்தம் - சாக்காடு.
65. மணிமேகலை - ஊரலர் உரைத்த காதை - வரி (42_ 48).

நிகழ்த்தும் உரிமையுடையவள் **மனைவி.** மனை வாழ்க்கைக்குப் பொலிவினைத் தரும் மனைவியை,

'மனைக்கு விளக்காகிய வாணுதல்' 66

என்று புறநானூற்றுப் புலவர் பாராட்டுவர். இத்தகைய குடும்ப விளக்கு—இல்லினை ஆள்பவள்—'இல்லாள்' எனப்பட்டாள். கற்பொழுக்கத்தில் வாழும் பெண்ணின் பொறுப்பினை,

கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்
மெல்லியல் பொறையும் நிறையும் வல்லிதின்
விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்
பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள். 67

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது. இங்கு 'விருந்து' என்பது முன்பின் அறியாத புதியவர்கள் என்பதும், 'சுற்றம்' என்பது தன்னைச் சூழ்ந்திருப்பவர்கள் என்பதும் அறியத்தக்கவை. இல்லறம் இனிது நடைபெறுவதற்கு வேண்டிய செல்வத்தைச் சேர்ப்பது கணவனின் பொறுப்பாக இருந்தது. கணவனை இழந்தோர் பருத்திப்பஞ்சினை நூலாக நூற்றுத் தம் குடும்பத்தைப் பாதுகாத்தனர். இவர்கள் தம் குடும்ப வருவாய்க்குரிய தொழிலாக நூல் நூற்றலை மேற்கொண்டமையால் **"பருத்திப் பெண்டிர்"**[68] என்ற பெயரால் தமிழிலக்கியங்களில் குறிக்கப்பெற்றனர்.

**குணம் அமைதல் :** பெற்றோர்கள் குணம் பிள்ளைகட்கு அமையும் என்பது பழந்தமிழர்களின் கொள்கையாக இருந்தது. இது,

தந்தையர் ஒப்பர் மக்கள்என் பதனால்
அந்நமில் சிறப்பின் மகப்பழித்து நெருங்கினும். 69

என்ற கற்பியல் நூற்பாப் பகுதியால் அறியப்பெறும். பெற்றோர்களின் குணம் பிள்ளைகட்கு அமைவது குடிவழியின் பாற்பட்டதா (heredity), அன்றி சூழ்நிலையின்பாற்பட்டதா

66. புறம். - 314.
67. கற்பி. - நூற். 11.
68. புறம். – 125, 326,
69. கற்பி. - நூற். 6.

(environment)—என்பது ஆராய்ச்சிக்குரியது. பழக்கவழக்கங்களும், சுற்றுச் சார்பும், சூழ்நிலையுமே ஒருவருடைய ஒழுக்கத்திற்கும் குணத்திற்கும் காரணம் என்று உளவியலார் கூறுவர். ஆயினும், பிள்ளைகளின் உடலியற்பண்புகள் தாய், தந்தை, பாட்டன், பாட்டி முதலியவர்களையொட்டி அமைந்திருக்கும். இதுபற்றிய முழு விவரங்களை இந்நூலாசிரியர் எழுதியுள்ள 'வாழையடி வாழை' என்ற நூலில் கண்டு தெளிக.

**உயர்வு தாழ்வு :** 'பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும்' நிலை பண்டைத் தமிழர்களிடையேயும் காணப்பட்டது. செல்வம் உடையவர்கள் உயர்ந்தவர்களாகவும் வறியவர்கள் தாழ்ந்தவர்களாகவும் கருதப்பெற்றனர். இஃது,

'இன்மைய இளிவும் உடைமைய துயர்ச்சியும்'. 70

என்ற நூற்பா அடியால் பெறப்படும். உள்ளவர் உயர்ந்தோர், இல்லாதவர் இழிந்தோர் என்ற மனப்பான்மை பண்டிருந்தே தொடர்ந்து வந்துகொண்டிருக்கும் தவறான மனப்பான்மையாகும். ஆயினும், செல்வமுடையவர்கள் பிறருக்கு உதவி செய்யாது தன்னலக்காரர்களாக இருப்பின் அவர்கள் மக்களால் பழிக்கப்பட்டனர் ; அறிஞர்களாலும் புலவர்களாலும் வெறுக்கப்பட்டனர். இந்த உண்மை,

'கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தலும்' 71

என்ற அடியால் பெறப்படுகின்றது. இதனையே ஔவையார்.

'இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்'

என்று கூறினர்.

## மொழியைப் பேணல்

இலக்கணம் அமையப்பெறாத மொழிகள் வரப்பிலா வயல்களையொக்கும். பழமையும் பண்பும் வாய்ந்த பசுந்தமிழை இலக்கண வரம்புடைய மொழி என்று அறிஞர்கள் பாராட்டிப் பேசுவர். ஒரு மொழியின் பண்புகளை அதன்

70. அகத்திணை - நூற். 44.
71. புறத்திணை - நூற். 29.

இலக்கணம் நன்கு பாதுகாக்கும்' என்ற உண்மைக்குத் தமிழ் இலக்கணமாகிய தொல்காப்பியம் தக்க சான்ருகும்.

**பிறமொழிச் சொற்கள் :** தொன்று தொட்டுப் பல இனத்தார் தமிழர்களுடன் வந்து கலந்துள்ளனர். அவ்வினத் தாருடன் போந்த மொழிகளும் தமிழ் மொழியுடன் கலந் துள்ளன. ஆரியர் வந்தபொழுது ஆரியச் சொற்களும் ; இஸ் லாமியர் வந்தபொழுது அறபு மொழிச் சொற்களும், ஆங்கி லேயர் வந்தபொழுது ஆங்கில மொழிச் சொற்களும் கலந்தன. இவை யாவும் தமிழ்மொழியின் நீர்மையைக் கெடுத்துவிட வில்லை ; தமிழின் உருவத்தைக் குலைத்துவிடவும் இல்லை. தமிழில் பிறமொழிச் சொற்கள் வருங்கால் அவை தமிழ்க் கோலம் பூண்டு கலக்க வேண்டும் என்று தமிழ் இலக்கணம் வரையறை செய்தது. 'ராஜா' என்ற சொல் 'அரசன்' என்றும், 'லோக' என்பது 'உலகம்' என்றும், 'ரூபம்' என்பது 'உருவம்' எனவும் வழங்கலாயின. கவிஞர் கோமான் கம்பனும் 'ஹனுமான்' என்பதனை 'அநுமன்' என்றும், 'ராமன்' என்பதனை 'இராமன்' என்றும், 'இலட்சுமணன்' என்பதனை 'இலக்குவன்' என்றும், 'லங்கா' என்பதனை 'இலங்கை' என்றும் வழங்குவதை அறிக. உயிருள்ள மொழிகள் வளர்ந்து கொண்டே இருக்கும். பழைய சொற்கள் வழக்கு வீழ்தலும், புதிய சொற்கள் தோன்றி வழக்கு ஏற்படுதலும் இயல்பு. இதனைத்தான் பவணந்தியார்,

> பழையன கழிதலும் புதியன புகுதலும்
> வழுவல கால வகையி னானே.[72]

என்று குறித்தார். பிறமொழிச் சொற்கள் தமிழிலே கலப் பதைப்பற்றித் தொல்காப்பியர் தெளிவாகக் கூறியுள்ளார்.

> இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று
> அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே.[73]

என்ற விதியினல் இயற்சொல், திரிசொல், திசைச்சொல் வடசொல் என்ற நான்கு வகைச் சொற்களும் செய்யுட் களிலே சேர்ந்து வரலாம் என்று கூறுகின்ருர். இதில் திசைச்

72. நன்னூல் - நூற். 462.
73. தொல். - சொல். – எச்ச. - நூற். 1.

சொல்லும் வட சொல்லும் செய்யுளில் சேர்ந்து வரலாம் என்பது உணரத்தக்கது. இயற்சொல் என்பது, எல்லோருக்கும் பொருள் விளங்கும்படி வழக்கத்திலுள்ள சொல்லாகும். திரிசொல் என்பது, பேச்சு வழக்கில் பெரும்பான்மையாக வழங்காமல் இலக்கிய வழக்கில் மட்டிலும் உள்ள சொல். திசைச்சொல் என்பது, செந்தமிழ் நாட்டை அடுத்திருக்கும் பன்னிரண்டு நாடுகளிலும் வழங்கும் சொற்கள் என்பர் தொல்காப்பியர். வடசொல் என்பது, வட மொழிச் சொல். பிற மொழிச் சொற்கள் தமிழில் கலக்கக் கூடாது என்ற குறுகிய நோக்கம் தமிழர்களிடம் இல்லை என்பது அறியத் தக்கது. ஆனால், அவ்விதம் கலக்குங்கால் ஒரு வரம்புடன் வருதல் வேண்டும் என்பதே அவர்கள் நோக்கம்.

**இலக்கிய வளர்ச்சி :** தமிழில் பலவகை இலக்கியங்களும் பெருக வேண்டும் என்பது தொல்காப்பியரின் கருத்து. மொழி பெயர்ப்பு நூல்களும் புது நூல்களும் தமிழில் வந்து குவிய வேண்டும் என்பது பண்டைத் தமிழரின் நோக்கம்.

> சென்றிடுவீர் எட்டுத் திக்கும்—கலைச்
> செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்குச் சேர்ப்பீர்.

என்று பாரதியாரைப் பாடும்படி செய்தது இந்தப் பரந்த நோக்கமே. மொழிபெயர்ப்பு நூல்களை வழிநூல் வகையில் ஒன்றாகத் தொல்காப்பியரே கூறியுள்ளார். 'மொழிபெயர்த்து அதர்ப்பட யாத்தல்' என்பது அவரது திருவாக்கு.[74] இதனால் சிறந்த நூல்கள் எம்மொழியில் இருப்பினும் அவற்றை மொழி பெயர்த்துக்கொள்ளும் உயர்ந்த வழக்கம் தமிழர்களிடம் இருந்து வந்தது என்பது உணரத்தக்கது. இந்தப் பண்பாட்டின் அடிப்படையில்தான் பாரதியாரும்,

> பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
> தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும் ;
> இறவாத புகழுடைய புதுநூல்கள்
> தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்.[75]

என்று நமக்கு ஆணை தருகின்றார். உலகப் போக்கைக் கவனித்து

74. மரபியல்-நூற். 94 (இளம்.)
75. பாரதியார் கவிதைகள் - தமிழ்.

அதற்கேற்ப நம் வீட்டுச் செல்வத்தைப் பெருக்குதல் நம்மனோர் கடனாகும். தமிழ்மீதுள்ள காதலினால் 'தமிழில் எல்லாம் இருக்கின்றன' என்று 'வாய்ப்பந்தல்' போட்டுக் கொண்டிராது ஒல்லும் வகையெல்லாம் தமிழின் நீர்மை குன்றாது தமிழை வளர்ப்பது இன்றைய இளைஞர்களின் கடமையாகும். இதுவே தொல்காப்பியர் கருத்துப்படி மொழியைப் பேணுவதாகும்.

### போர் முறைகள்

தமிழர்களின் போர் முறைகளைத் தொல்காப்பியப் புறத்திணையியலால் விரிவாக அறியலாம். பெரும்பாலும் தற்காப்பு முறையில்தான் போர் நடைபெற்றது.

**நால்வகைப் படைகள் :** தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை என்ற நால்வகைப் படைகளும் போரில் பங்கு பெற்றன.

தேரும் யானையும் குதிரையும் பிறவும்
ஊர்ந்தனர் இயங்கலும் உரியர் என்ப. 76

என்ற நூற்பாவால் தமிழர்களின் ஊர்திகளை அறிகின்றோம்.

தானை யானை குதிரை என்ற
நோனார் உட்கும் மூவகை நிலையும். 77

என்ற நூற்பாப் பகுதியால் காலாட்படை, யானைப்படை, குதிரைப்படை ஆகிய படைகள் இருந்தன என்றும்,

தேரோர் தோற்றிய வென்றியும். தேரோர்
வென்ற கோமான் முன்தேர்க் குரவையும். 78

என்ற பகுதியால் தேர்ப்படைச் சிறப்பும் அறியப் பெறுகின்றன. தொல்காப்பியர் காலத்தில் தமிழ் மக்கள் கடல் கடந்து போர் செய்ததாகத் தெரியவில்லை. பொருள் தேடுவதற்காக மட்டிலுமே அவர்கள் கடல் கடந்து சென்றனர்.

**போர் முறைகள் :** வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை என்ற நான்கு புறத்திணைப் பகுதிகளிலும் தமிழர்களின் போர்

76. பொருளியல் - நூற். 17.
77. புறத் - நூற். 14.
78. புறத் - நூற். 17.

முறைகள் கூறப்பெறுகின்றன. அவற்றை ஈண்டு விரிப்பிற் பெருகும்.

**கலைகள்**

தொல்காப்பியர் காலத்திலும் அதற்கு முன்னரும் இசைக் கலை நாடகக்கலை, நாட்டியக்கலை முதலியவையும் சிற்பக் கலை, ஓவியக்கலை முதலியவையும் சிறந்து விளங்கின என்பதற்கு ஒரு சில குறிப்புக்கள் தொல்காப்பியத்தில் காணப் பெறுகின்றன. இசைக் கருவிகளமைத்தல், ஆயுதங்கள் செய்தல்,. அணிகள் அமைத்தல், வாகனங்கள் இயற்றுதல், நெசவு நெய்தல் முதலிய தொழில்களிலும் அக்காலத் தமிழர்கள் வல்லவர்களாக இருந்தனர். இசை, நடனம், நாடகம் ஆகியவற்றையே வாழ்க்கைத் தொழிலாகக் கொண்ட கலைஞர்கள் தமிழ் நாட்டில் வாழ்ந்து வந்தனர். இவர்கள் இத் தொழில்களைச் செய்து வாழும் தனி வகுப்பினராகவே திகழ்ந்தனர்.

**கூத்தர் :** கூத்தர் என்பவர் ஒரு பிரிவினர். கூத்தில் வல்லவர்கள் கூத்தர்கள். பல கோயில்களில் திருவிழாக் காலத்தில் இவர்கள் கூத்தாடுவர். பல கோயில்கள் இவர்கட்குக் காணியாட்சியாக இருந்து வந்தன. இன்றும் **'கூத்தாடி'** என்ற ஒரு வகுப்பினர் தமிழ் நாட்டில் இருந்து வருவது ஈண்டு நினைவுகூரத்தக்கது.

**பாணர் :** பாணர் என்பார் மற்றொரு பிரிவினர். பாண் என்பது, யாழ். பண்ணிலிருந்து பாண் பிறந்தது. பண் என்பது இசையைக் குறிக்கும். பண்ணாகிய இசையைத் தரும் கருவியைப் பாண் என்று வழங்கியிருக்கலாம் என ஊகிக்க இடம் உண்டு. பாண் வாசிப்பதையே தொழிலாகக் கொண்ட பாணர்கள் யாழின் மூலம் இசை விருந்தளிப்பதில் மிக்கத் திறமையுடையவர்கள். இவர்களில் பெண்கள் **'பாடினி'** என்று வழங்கப் பெறுவர். இவர்கள் வாய்ப்பாட்டில் வல்லவர்கள்.

**பொருநர் :** இன்னொரு பிரிவினர் பொருநர் என்போர். இவர்களில் போர்க்களம் பாடுவோர், ஏர்க்களம் பாடுவோர்,

பரணி பாடுவோர் எனப் பலவகையினர் உளர் என்று கூறுவர் நச்சினார்க்கினியர். பிறரை ஏற்றிப் புகழ்ந்து சிறப்பித்துப் பாடி வாழ்க்கை நடத்துவோர் 'பொருநர்' ஆவர். இவர்களைச் சேர்ந்த பெண்கள் **'விறலியர்'** என்று வழங்கப்பெற்றனர். விறல்-வெற்றி, திறமை. இப்பெண்கள் இசை, நடனம் முதலியவற்றில் திறமையுடையவராதலின் 'விறலியர்' என்று வழங்கப் பெற்றனர் போலும்!

கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உழறத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்
சென்றுபயன் எதிரச் சொன்ன பக்கமும். 79

என்ற நூற்பாப் பகுதியால் மேற்கூறிய கூத்தர், பாணர், பொருநர், விறலி என்ற பெயர்களையுடைய வகுப்பார் இசைக்கலை, நாடகக் கலை முதலியவற்றைத் தொழிலாகக் கொண்டு வாழ்ந்து வந்தவர்கள் என்று அறிகின்றோம்.

**சிற்பக்கலை :** பண்டைத் தமிழர்கள் சிற்பக் கலையிலும் சிறப்புற்றுத் திகழ்ந்தனர் என்பதற்கு ஒரு சில குறிப்புக்கள் கிடைக்கின்றன.

'முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்' 80
[அரணம்—பதில்]

என்பதனால் எல்லா வகையான பாதுகாப்பும் பொருந்திய கோட்டைச் சுவர் இருந்ததாக அறியக்கிடக்கின்றது. **'ஆர் எயில்'** என்பதனால் அரிய வேலைப்பாடுகளமைந்த மதில் இருந்ததாகத் தெரிகின்றது. மதிலைச் சுற்றி அகழ் இருந்தது. இதனை,

'அகத்தோன் வீழ்ந்த நொச்சியும் மற்றதன்
புறத்தோன் வீழ்ந்த புதுமை யானும்
நீர்ச்செரு வீழ்ந்த பாசியும்' 81

என்ற நூற்பாப் பகுதியினால் அறியலாம்.

நெய்தற் கலையிலும், ஓவியக் கலையிலும் தமிழர்கள் உயர்ந்திருந்தனர். போர்க் கருவிகள் செய்தலிலும் அவர்கள் திறமையுடையவர்களாக விளங்கினர்.

79. புறத். - நூற். 30 (இளம்.) 80. புறத்திணை - நூற். 8
81. புறத்திணை - நூற். 11.

## இறுவாய்

இதுகாறும் கூறியவற்றிலிருந்து பண்டைத் தமிழர்களின் புகழுக்கும் பெருமைக்கும் சான்ருக நின்று நிலவுவது தொல் காப்பியப் பொருளதிகாரம் ஆகும் என்பது தெற்றெனப் புலனுகும். உலகிடையே தோன்றி வளர்ந்த பண்பட்ட மொழிகளில் தமிழ் மொழியும் ஒன்று என்றும், அம்மொழி யைப் பேணி வளர்த்த தமிழர்கள் பண்பட்ட நாகரிகமுடைய வர்கள் என்றும் அறிகின்ருேம். மேலும், இந்நூலில் கூறப் பெறும் செய்திகள் தொன்றுதொட்டு வந்த தமிழர்களின் வாழ்க்கையிலிருந்து பெறப்பட்ட உலகியல் வழக்கங்கள் என்றும், இந்த உலகியல் செய்திகளே நாளடைவில் புலவர்க களால் செய்யுள் வழக்காகச் சிறப்பிக்கப்பெற்றன என்றும், இதனை ஆசிரியரே,

> 'உயர்ந்தோர் கிளவி வழக்கொடு புணர்தலின்
> வழக்குவழிப் படுதல் செய்யுட்குக் கடனே.'[82]

என்றும்,

> நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
> பாடல் சான்ற புலனெறி வழக்கம்.[83]

என்றும் கூறுதலால் இந்த இலக்கணம் வாழ்க்கையோடு பொருந்தியே உண்டாயிற்று என்று அறிகின்ருேம். பிற மொழிகளிலெல்லாம் வாழ்க்கையிலிருந்து இலக்கியங்கள் மலர்ந்தாலும் அந்த இலக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு இலக்கணம் ஒன்றும் தோன்ருதிருக்க, நந்தமிழ் மொழியில் இந்த இலக்கியங்கள் பன்னூறு யாண்டுகட்கு முன்னரே தோன்றினதால்தான் அவற்றை அடிப்படையாகக் கொண்டு 'வாழ்க்கை இலக்கணம்' தோன்றுவதற்கு அவை ஏதுவாக அமைந்தன. இத்தகைய வாழ்க்கைப் பெருநூல் தமிழகத்தில் பல்லாயிரம் யாண்டுகட்கு முன்னரே தோன்றி வேரூன்றி நிற்பதாயின், அது தமிழர்களின் பழம் பெருமை யையும் நாகரிக மேம்பாட்டையும் தெள்ளத் தெளிய விளக்கும் தொலைநோக்கி போல—காலக் கண்ணுடியாகத் திகழ்கின்றது என்று அறிகின்ருேம்.

---

82. பொருளி.-நூற். 22. 83. அகத்திணை.-நூற். 56.

# பயன்பட்ட நூல்கள்

## (அ) தமிழ் நூல்கள்


1. அகநானூறு.
2. இராகவய்யங்கார், மு. —தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி.
3. இளங்கோவடிகள் —சிலப்பதிகாரம்.
4. இளவழகனார் —பண்டைத்தமிழர் இன்பியல் வாழ்க்கை.
5. ,, —பண்டைத் தமிழர் பொருளியல் வாழ்க்கை.
6. ஐங்குறுநூறு.
7. ஐயனாரிதனார் —புறப்பொருள் வெண்பா மாலை.
8. கந்தசாமிக் கவிராயர், மு. ரா. —குமண சரித்திரம்.
9. கணிமேதாவியார் —திணைமாலை நூற்றைம்பது.
10. கம்பர் —கம்பராமாயணம்.
11. கரந்தைத் தமிழ்ச் சங்க வெள்ளி விழா மலர்.
12. கல்லாடம்.
13. கலித்தொகை.
14. குமரகுருபர் அடிகள் —மீனாட்சியம்மை குறம்.
15. குறுந்தொகை.
16. சமண முனிவர்கள் —நாலடியார்.
17. சயங்கொண்டார் —கலிங்கத்துப்பரணி
18. சீத்தலைச்சாத்தனார் —மணிமேகலை.
19. சுப்புரெட்டியார், ந. —கல்வி உளவியல்.
20. ,, —கவிதையனுபவம்.
21. ,, —தமிழ் பயிற்று முறை.
22. ,, —மணமக்களுக்கு.
23. ,, —வாழையடி வாழை.
24. சோமசுந்தர பாரதியார், ச. டாக்டர். —அகத்திணையியல், புறத்திணையியல், மெய்ப்பாட்டியல் உரை விளக்கம்.
25. தனிப்பாடல் திரட்டு.
26. திருத்தக்க தேவர் —சீவகசிந்தாமணி.
27. திருவள்ளுவர் —திருக்குறள்.
28. தேவாரம் அடங்கன் முறை.

29. தொல்காப்பியர் —தொல்காப்பியம் (பொருளதிகாரம்) (இளம்பூரணம்)
30. ,, ,, (நச்சினார்க்கினியம்)
31. ,, ,, (பேராசிரியம்)
32. நக்கீரர் —இறையனார் களவியலுரை.
33. நம்பி அகப்பொருள் விளக்கம்.
34. நற்றிணை.
35. நாலாயிரத் திவ்யப் பிரபந்தம்.
36. பத்துப்பாட்டு.
37. பரிபாடல்.
38. பாரதியார் —கவிதைகள்.
39. புறநானூறு.
40. புலவர் குழந்தை —தொல்காப்பியகாலத் தமிழர்
41. மறைமலையடிகள் —தமிழர் மதம்.
42. ,, —பழந்தமிழ்க் கொள்கையே சைவ சமயம்.
43. ,, —மாணிக்கவாசகர் காலம்.
44. மாணிக்கவாசகர் —திருக்கோவையார்.
45. ,, —திருவாசகம்.
46. மாறன் பொறையனார் —ஐந்திணை ஐம்பது.
47. முத்தொள்ளாயிரம்.
48. வரதராசனார், மு. டாக்டர். —இலக்கிய ஆராய்ச்சி.
49. ,, —இலக்கியத் திறன்.
50. ,, —திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்.
51 வில்லிபுத்தூராழ்வார் —பாரதம்.
52. வெள்ளை வாரணனார், க. –தமிழ் இலக்கிய வரலாறு–தொல்காப்பியம்.
53. வைத்தியநாத தேசிகர் —இலக்கண விளக்கம்.

(ஆ) ஆங்கில நூல்கள்

1. **Edmond W. Sinnott.** Matter, Mind and Man
2. **Kanagasabai, V** The Tamils — Eighteen Hundred Years Ago.
3. **Munn, Norman, L** Psychology
4. **Pillai, S. K** The Ancient Tamils — as depictad in Tholkappiam Porulathikaram : Part I.
5 **SrinivasaIyengar, P.T.** The History of the Tamils.

# பின்னிணைப்பு-2

## பொருட்குறிப்பு அகராதி

[எண், பக்க எண்]

### அ

